# தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்

## உரைக் கொத்து









தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 501

# தொல்காப்பியம்–எழுத்ததிகாரம் உரைக்கோத்து

## முதற்பகுதி

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்
**T. S. கங்காதரன்**
7, முதல் மாடி, அக்ரகாரம்,
பாகூர், புதுச்சேரி.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்,**
தஞ்சாவூர்.

2007 ] [ விலை : ரூ. 350-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் உரைக்கொத்து |
| பதிப்பாசிரியர் | : T. S. கங்காதரன் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 501 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : ஆகஸ்டு, 2007 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 788 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : இலக்கணம் |
| விலை | : ரூ. 350 |

# வெளியீட்டாளர் முகவுரை

## தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியர் உரையுடன் கூடிய ஆராய்ச்சிப்பதிப்பு

தொன்மையாலும், நிறைநூல்முறை நன்மையாலும் சிறந்தது தொல்காப்பியநூல். தமிழில் இறவாமல் 3000 ஆண்டுகளுக்குமேல் நின்று நிலவும் பழமை போலவே, குறைவிலா நிறைவு. அறிவுசால் செறிவு நிரம்பி வளம், வரம்பிகாமல் வரையறுத்து வடித்த முறை மொழி வளர்ச்சிக்கு என்றும் உதவும் கட்டமைப்பு ஆகியவற்றில் ஒப்புயர்வற்ற சிறப்பு வாய்ந்த (இலக்கண) நூல் தொல்காப்பியர் பெயரால் வழங்குகிறது. தமிழில் மட்டுமல்லாது உலகில் பல மொழிகளிலும் வழங்கும் புகழ்வாய்ந்த எல்லா இலக்கணங்களிலும் இல்லாத இயல் வளமும், எழிலும், பயனும், பண்பும் வாய்ந்தது இந்நூல். வேறெந்த மொழி நூலுக்கும் இல்லாத பழமையும், பெருமையும், அழகும், அருமையும் வாய்க்கப்பெற்ற இந்நூல் தமிழரின் தனிப்பெரும் செல்வமாகும்.

இந்நூற்கு இடைக்காலத்தில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், கல்லாடனார், தெய்வச்சிலையார் ஆகியோர் தத்தம் புலமை நலம் தோன்ற உரை வகுத்தளித்தனர். நம் காலத்தும் பாவலர் ஏறு பாலசுந்தரனார், வெள்ளைவாரணனார், ச. சோ. பாரதியார் முதலான சான்றோர் உரை வகுத்துள்ளர். தொல்காப்பியப் பதிப்பில் பல சான்றோர்கள் ஈடுபட்டுள்ளனர். 19ஆம் நூற்றாண்டு முதல் தொல்காப்பியப் பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. இப்பதிப்புப் பணியில் தஞ்சை சரசுவதி மகாலும் ஈடுபட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. தொல்காப்பியம், இலக்கண விளக்கம், பிரயோக விவேகம் முதலான நூல்களை இந்நிறுவனம் வெளியிட்டுள்ளது.

இவ்வரிய ஆய்வுப்பதிப்பின் ஆசிரியர் திருவாளர் கங்காதரன், தொல்காப்பியனாரின் காலம், சமயம், பிறப்பிடம் முதலான செய்திகளையும், தொல்காப்பிய முதலுரையாசிரியரான இளம்பூரணர் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் தொடர்ந்து நச்சினார்க்கினியரின் வரலாற்றினையும் தக்க அகப்புறச் சான்றுகளோடு விளக்கியுள்ளார். மொழி முதல் எழுத்துக்கள், மொழியிறுதியெழுத்துக்கள், மெய்மயக்கங்கள் ஆகியன பற்றிய தொல்காப்பிய விதிகள் ஆசிரியரே வகுத்துக் கூறுவன என்றும், வேற்றுமொழிக் கலப்பால் தமிழ் சிதைவுறாமைப் பொருட்டே இவ்விதிகளை ஆசிரியர் வகுத்தார் என்றும், நின்று நிலவும் உயர்தனிச் செம்மொழி இலக்கணங்களிடையே தொல்காப்பியம் மணிமகுடமாகத் திகழ்கிறது என்றும் இவர் கூறுவது எண்ணத்தக்கது; மகிழ்ந்து ஏற்கத்தக்கது.

இளம்பூரணர் உரை பல இடங்களில் மிகவும் சுருக்கமாக அமைந்துள்ளமையைச் சுட்டிக்காட்டும் பதிப்பாசிரியர், மாணாக்கர்க்கு உய்த்துணர்வு பெருகவேண்டும் என்ற இளம்பூரணர் விருப்பமே இதற்குக்காரணம் என்கிறார்.

நச்சினார்க்கினியர் வரலாறு கூறும் பகுதியில் பல அரிய செய்திகள் அடங்கியுள்ளன. தொல்காப்பியத்தில் மெய்ப்பாடு, உவமம், மரபு ஆகிய பகுதிகட்கு நச்சினார்க்கினியர் உரை கிடைத்திலது. பதிப்பாசிரியர், நச்சினார்க்கினியரின் இலக்கிய உரைப்பகுதிகளை நுனித்து ஆய்ந்து, மேற்கண்ட இயல்களுக்கும் அவர் உரை வகுத்திருக்க வேண்டும் என முடிவு செய்துள்ள திறம் பாராட்டுக்குரியது. நச்சினார்க்கினியர் வகுத்த இலக்கிய இலக்கண உரைகள் எழுந்த காலத்தை வரிசைப்படுத்திக் காட்டியுள்ளமையும் பாராட்டுக்குரியதேயாகும்.

நச்சினார்க்கினியர் தம் உரையினிடையே பல நுட்பமான செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார். இச்செய்திகள் மொழி ஆராய்ச்சி யாளர்க்கும், பண்பாட்டு ஆய்வாளர்க்கும் பெரிதும் பயன்படுவன. இத்தகு 18 செய்திகளைப் பட்டியலாகத் தந்துள்ளார்.

சிறப்புப்பாயிரம் முதல் உருபியல் ஈறாக உள்ள இயல்கட்குரிய உரையே இப்பதிப்பில் இடம்பெறுகிறது. இதில் காணும் பிழைகளை இவர் தொகுத்துத் தருவதோடு, திருத்தியமைக்க வேண்டிய வடிவினையும் தெளிவாகத் தந்துள்ளார்.

உரைகளை ஒப்பீடு செய்வார்க்கும், நூல்களை ஒப்பீடு செய்வார்க்கும், தமிழ்மொழியில் காலப்போக்கில் எழுந்த மாற்றங்களை அறிய விழைவார்க்கும், இலக்கணக் கோட்பாட்டு வளர்ச்சியினை மதிப்பீடு செய்வார்க்கும் இப்பதிப்புப் பெரும்பயன் நல்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) வகிக்கும் சைவத் தமிழ்ப்புலவர், திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினிஅச்சில் வெளிவர உழைத்த கணினிப் பணியாளர் அனைவருக்கும் எனது இனிய பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்.
9-8-2007.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

# தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்

# பதிப்புரை

தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தினைப் பண்டையுரையாசிரியர்கள்தம் உரையோடு, பிற்கால - இன்றைய - அறிஞர் பெருமக்கள் வரைந்த உரைக் குறிப்புக்களும் சேர, 'உரைக்கொத்து' என்னும் பெயராற் பதிப்பித்துதவுமாறு தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகத்தார் என்னைக் கேட்டுக்கொண்டதற்கு இசைய, இந்நூல், **தொல்காப்பியம் எழுத்ததிகார உரைக்கொத்து** என்னும் பெயரொடு பதிப்பிக்கப்படலாயிற்று.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் அறுவர் உரைகளொடு பதிப்பிக்கப் பெறுதலின், அதற்கு உரைக்கொத்து எனப்பெயரிடுதல் சாலும். இவ்வெழுத்ததிகாரம் இருவர் உரையொடு மாத்திரம் பதிப்பிக்கப் பெறுதலின் கொத்து என்றற்கு அமையாது; ஆயினும் பிற்காலத்து உரையாசிரியர் சிலர்தம் கருத்துக்களும் சிவண நடைபெறுதலின், இப்பனுவலும் எழுத்ததிகார உரைக்கொத்து என்ற பெயர் பெறுதலும் ஒருவாறு பொருந்தும்.

தொல்காப்பியம் முழுவதற்கும் முதற்கண் உரை வரைந்தவர் உரையாசிரியர் என்றே சிறப்புப் பெயரால் வழங்கப்படும் இளம்பூரணவடிகள். அடுத்து நச்சினார்க்கினியர் நூல்முழுதும் உரைகண்ட ஒப்புரவாளர். அவருரை இன்று பொருளதிகாரத்துள் மெய்ப்பாட்டியல் உவமவியல் மரபியல் என்ற மூன்றற்கும் கிடைத்திலது. இவ்விருவர் உரையுமே இவ்வெழுத்ததிகார உரைக் கொத்தில் முழுமையாக வரையப்பட்டுள்ளன.

தமிழ்த்துறையில் முனைவர் பட்டம் சென்னை மாகாணத்தில் முதல்வராகப் பெற்ற **பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார்** அவர்கள் மொழியியல் இலக்கணப்புலமை சான்றவர்; வடமொழிப் புலமையோடு ஆங்கிலப் புலமையும் நனிவாய்த்தவர். **வே. வேங்கடராசுலு ரெட்டியார்** அவர்கள் திராவிட மொழியியல் துறையில் எழுஞாயிறு போன்றவர்; நுண்ணாய்வுத் திறமிக்கவர். இவ்விருவரும் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்திற்கு முறையே குறிப்புரையும் ஆராய்ச்சியுரையும் வழங்கியுள்ளனர். இன்று நம்மிடை வாழ்ந்துவரும் **ச. பாலசுந்தரம்** அவர்கள் கரந்தைத் தமிழ்க் கல்லூரியில் முப்பதாண்டுகள் புலவர் வகுப்பிற்குத் தொல்காப்பியம் பயிற்றிவந்த நல்லாசான்; நுண்மாண் ஆய்வினர்; தொல்காப்பியம் மூன்று படலங்கட்கும் ஆராய்ச்சிக் காண்டிகையுரை எழுதிய இலக்கணப் புலமையாளர்; மொழியியல் அறிவு நலனும் சான்றவர். இம்முப்பெருந்தமிழறிஞர் களுடைய சூத்திர விளக்கக் குறிப்புக்கள் சில பண்டையுரைகளொடு மாறுபடவும் வேறுபடவும் நிகழுமிடங்கள் இவ்வுரைக்கொத்தில் இடம்பெறுகின்றன. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் மூதறிஞர் **க. வெள்ளைவாரணனார்** இயற்றிய 'தொல்காப்பியம் - நன்னூல்' என்னும் நூலினின்று சில குறிப்புக்களும், பேரறிஞர் முனைவர் **வ. சுப. மாணிக்கம்** அவர்கள் தொல்காப்பியம் பாயிரம் நூன்மரபு இப்பகுதி விளக்கங்களில் வழங்கிய சில கருத்துக்களும் குறிக்கப் பெற்றுள்ளன. இவ்வைவர்பெருமக்கள்தம் குறிப்புரைகளும் இவ்வுரைக்கொத்தின் முதற்பகுதிக் கண்ணேயே இடம் பெற்றுள்ளன. இரண்டாம் பகுதிக்கண் முதல் மூவர்தம் அரிய குறிப்புரைகளே அணிசெய்கின்றன.

**சிவஞானமுனிவர்** இயற்றிய முதற்சூத்திர விருத்திக் குறிப்புக்களும், இலக்கணக்கொத்து பிரயோகவிவேகம் என்னும் இவ்விரண்டு சொல்லிலக்கண நூல்களில் எழுத்துப் பற்றிய அருங்கருத்துக்களும் மிக அருகியே விளக்கவுரையாக நிகழ்கின்றன.

***உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்*** (சென்னை), மயிலம் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற திருவாளர் **ஆ. சிவலிங்கனாரைப்** பதிப்பாசிரியராகக் கொண்டு தொல்காப்பியம் முழுமைக்கும் **உரைக்கொத்து** இயல் தோறும் தனித்தனி நூலாக வெளியிட்டுள்ளது. ***அரிய பெரிய முயற்சி இவ்வெளியீடு.*** பிற்கால இலக்கண நூல்கள் எல்லாவற்றினின்றும் ஒப்புமைப் பகுதியாகச் சூத்திரங்கள் பெரும்பாலும் இடம்பெற்றுள்ளன.

எழுத்ததிகாரம் இளம்பூரணருரைப் பதிப்புக்களாக வெளிவந்தவை சிலவே. பல்கலைக்கழகப் புலவர் பாடத்திட்டத்திற்கு ஏற்ப, நச்சினார்க்கினியர் உரைப்பதிப்பு எழுத்ததிகாரத்திற்குப் பலவாக வெளிவந்தன. இளம்பூரணர் வரைந்த உரையது விளக்கமே நச்சினார்க்கினியத்தின் பெரும்பகுதியாக அமைந்துள்ளமையின், இளம்பூரண வழக்குச் சற்றே அருகலாயிற்று. ஆதலின் இளம்பூரண ஏட்டுச்சுவடிகளினும் நச்சினார்க்கினியச் சுவடிகளே பல்கலாயின். நாற்பான் ஐம்பான் ஆண்டுகட்கு ஒரு முறை ஏடு பெயர்த்தெழுதும் படியெடுத்தற் பணி தொடர்ந் தமையால், ஐந்து நூற்றாண்டுக் கால அளவில் நச்சினார்க்கினிய ஏட்டுச்சுவடிகள் பல பாடபேதங்களை யுடையவாயின. கல்லெழுத்துப் பொறிப்பார் போலன்றி ஏடு படியெடுக்கும் பணியாளர் தமிழறிவு பெற்றவரே யாயினும், பொருளுணர்ந்து படியெடுக்கு மளவிற்கு அனைவரும் புலமையுடையோர் அல்லர்; மாணாக்கர் நிலையில் இருந்து படியெடுத்த பணியாளரும் அவரிடையிருந்திருப்பர். ஏடு படியெடுக்கும் பணியாளராம் இன்னோர்தம் சோர்வினால் விடுபட்ட வரிகள், எழுத்து விளங்காமையின் ஊகத்தால் எழுதிய வரிகள், பொருளுணர்வின்மையால் வேறு சூத்திரச்செய்தியாகப் புகுந்த வரிகள், சூத்திரத்தின் பாயிரவுரையுள் பொருள் விளங்காதனவாய் ஒருவாறு முடிந்த வரிகள், பதவுரைக்கண் இடையே சொற்கள் விடுபட்ட வரிகள், உதாரணங்கள் காட்டியவற்றில் குறைபாடுடைய வரிகள் - முதலாகப்

பலதிறப் பிழைபாடுகளும் குறைபாடுகளும் படியெடுத்த ஏட்டில் புகுந்து விட்டமையால், உரைநலம் நலிவதற்கு இடனாயிற்று. இவ்வளவின பிழைகள் இளம்பூரணத்தில் நேர்ந்தில; சுவடி வேறுபாட்டால் நிகழ்ந்த உரைநலிவும் மிகக் குறைந்தே காணப்பட்டது.

சரசுவதி மகால் நூலகத்தில் நச்சினார்க்கினியர் உரைச்சுவடி எழுத்தும் சொல்லுமாகிய இரண்டதிகாரத் திற்கும் உள. அச்சுவடிகளை மின்னணுக் கருவி கொண்டு படியெடுத்துவைத்துள்ளனர். எழுத்ததிகாரச் சுவடியைப் பார்த்துப் பதிப்பித்த பெரும்பணி திருவையாற்று அரசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் இராம. கோவிந்தசாமி பிள்ளையவர்களுடையது. அவராற் பதிப்பிக்கப்பட்ட எழுத்ததிகார நச்சினார்க்கினியம் 1967ஆம் ஆண்டு நூலகத்தின் 119ஆம் வெளியீடு. பதிப்பாசிரியர், மிக முயன்று சுவடியிற் காணும் பிழைகளைத் தாம் ஓரளவு திருத்திய முயற்சியை இடையிடையே பிறைவளைவு அடைப்புக்குறியீடு வாயிலாகப் புலப்படுத்தி யுள்ளார். எழுத்துப் பிழைகளும் எடுத்துக்காட்டுக்கள் முறையே அமைக்கப்படாத பிழைகளும் எனப் பலதிறமும் சுவடிச்சொற்றொடர்களில் காணப்படுவதை இங்குச் சுட்டாமல் செல்லமுடியவில்லை. நன்மாணாக்கர் படியெடுத்த சுவடியாக இஃது இல்லாமை வெளிப்படை.

'நாவலர் பதிப்பு', 'கணேசய்யர் பதிப்பு' என்று சுட்டிச் சொல்லுமாறு, பெரும்பான்மையும் பிழை நீங்கிய பதிப்பாக இன்றுகாறும் எழுத்ததிகாரத்திற்கு நச்சினார்க்கினியப் பதிப்பு அண்மைக்காலத்தில் வெளி வந்திலது என்றே கூறல் வேண்டியுள்ளது.

பின்னர் வந்த பதிப்பு, முன்னைய பதிப்பைப் படியெடுத்த நிலையிலேயே காணப்படுகிறது; எழுத்தமைப்பு, பத்திப்பிரிப்பு முதலிய நலன்களால் மாணாக்கர் படிப்பதற்கு எளிமை தோன்றும் சிறப்பொன்றே

அதில் தோன்றுவதில் ஐயமில்லை. மேற்கோளை இடங் குறித்தல், நிறுத்தக்குறிகளைப் பொருள் விளங்கப் பயன்படுத்தல் போன்ற சில முறைப்பாடுகூட அதில் முற்றும் கடைப்பிடிக்கப்பட்டில. நூலின் மறுபதிப்பு முற்பதிப்பினும் எவ்வகையால் தக்குளது என்பது வினாக்குறியாகப் படிப்போர் மனத்தில் எழுந்தவண்ணம் உள்ளது. பழம்பிழைகளே புதுப்பதிப்பின்கண்ணும் இடம்பெற்றால், பதிப்பு நலன் என்னாம் ?

பொதுவாக, இவ்விலக்கண நூற்பதிப்பாசிரியன்மார் தாம் பதிப்பிக்கும் உரைப்பொருளை விளக்கிச் செல்வதில் நாட்டமிலராயினர்; பிறவுரையாசிரியர் தம் உரைகளை அடிக்குறிப்பாகச் சுட்டுவதையே காண்கின்றோமன்றி, பதிப்பிக்கும் உரையில் வரும் கருத்தைப் புலப்படுமாறு விளக்கிப்போதலைத் தம் கடமையாக அன்னோர் கருதிலர். ***அவர்கள் நெகிழ்த்துப்போன அவ்வுரைப் பகுதிகளை விளக்குதலை இப்பதிப்புத் தன் தலையாய நோக்கமாகக் கொண்டுள்ளது. பதிப்பிக்கும் உரைக்கு வேண்டுவனவாகிய விளக்கங்களைப் பிறர் கருத்துக்களோடு ஏற்புற வழங்குவதே இப்பதிப்பின் புதுமைச் செய்தி.*** உரையாசிரியர்தம் அரிய சொற்றொடர்கள் பொருள் விளக்கப்பட்டுள்ளன. உரையாளரது உரைநுட்பத்தை நுனித்துக் கண்டு மாணாக்கர்க்குக் கூடியவரை புலப்படுத்துவதே இப்பதிப்பின் குறிக்கோள்.

முதல் ஆறு இயல்களாகிய புறத்தோத்துக்கள் இவ்வுரைக்கொத்தின் முதற் பகுதியாகவும், ஏனைய மூன்று இயல்களாகிய அகத்தோத்துக்கள் இரண்டாம் பகுதியாகவும் வெளிவருகின்றன.

முதற்பகுதியில், தொல்காப்பியர் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் என்னும் இவர்கள் பற்றிய வரலாறும், எழுத்ததிகார நச்சினார்க்கினியத்தின் இயல்பும், நச்சினார்க்கினியப் பதிப்புக்களில் முதல் ஆறு இயல்கள்

தொடர்பாகக் காணப்படும் பிழைகளும் அவற்றின் திருத்தமும் முதற்கண் இடம்பெற்றுள. இச்செய்தி விளக்கத்தால் முதற்பகுதி பக்கம் பல்கிவிட்டமையால், சூத்திர அகராதி- மேற்கோளகராதி - உரைப்பொருளகராதி - என்றின்னவையெல்லாம் இரண்டாம் பகுதிக்கண்ணேயே இடம்பெறுவன ஆயின. ஆகவே, இவ்விரண்டு பகுதிகளையும் சேர வாங்குநர்க்கே விரிவான அகராதிக் குறிப்புக்களது பயன் கிட்டுவது. இரண்டாம் பகுதியின் தொடக்கப் பக்கங்கள், பின் மூன்று இயல்கள் தொடர்பாக முன்னைப் பதிப்புக்களில் காணப்படும் பிழைகளையும் உரிய திருத்தங்களையும் குறிப்பிட்டுச் செல்லுதல் காணலாம்.

சிறப்புப்பாயிரம் நூல்தொடக்கமாகத் தனியே அமைகிறது.

இளம்பூரணம், **பதிப்பாசிரியர் அடிகளாசிரியரது** பதிப்பினைப் பெரும்பாலும் சார்ந்து அமைந்துள்ளது. பாடவேறுபாடுகளில் அவர் தேர்ந்து கொண்டவற்றினும் சிறப்புடையவாக நான் கருதிய சிலவற்றை மேற்கொண்டுள்ளேன். அவரது தூய பதிப்பிலும் சில பிழைகள் புகுந்துள. அவர்தம் அரிய குறிப்புச் சிலவற்றைப் பயன் கொண்டுள்ளேன்.

1933 ஆம் ஆண்டில் வெளிவந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரது பதிப்பாகிய எழுத்ததிகார நச்சினார்க்கினியத்தையே நான் தமிழ்க்கல்லூரியில் பயிலும் காலத்தே பயன்படுத்தினேன். **நூற்கடல் தி. வே. கோபாலையர்** அவர்களிடம் பாடங்கேட்ட காலத்திலும், மாணாக்கர்க்குப் பின்னர்ப் பாடம் பயிற்றிய காலத்திலும் அந்நூலிலேயே பல பிழைத்திருத்தங்கள் செய்து வைத்திருந்தேன். மேற்கோள் பலவற்றிற்கும் இடங்குறித்து

வைத்தேன். அப்பதிப்பே, பிழை நீங்கிய நிலையில் நச்சினார்க்கினியத்தைப் படியெடுக்க எனக்கு உதவியது.

உரையிற்காணும் சொற்றொடர்க்கு வேண்டும் விளக்கம், கருத்து விளக்கம், வாக்கிய முடிபு பற்றிய விளக்கம், உதாரண விளக்கம், மலைவாகக் காணப்படுவதன்கண் அமைதி, ஒரோவழி உரைகாரர் உரையின்கண்ணும் காணப்படும் பிழை முதலான பல திறங்களை உரைக்குறிப்புக்களிற் காணலாம். பிறர் கூறும் மறுப்புரைக்கு ஏற்ற அமைதி, அன்னோர் கூற்றிற் காணப்படும் மலைவு முதலியனவும் உரைக்குறிப்புப் பகுதியில் இடம்பெறுவன.

**சாத்திரியார் ரெட்டியார் பாலசுந்தரம்** என்னும் இவ்வறிஞர் பெருமக்கள் உரையாசிரியன்மார்தம் உரைகளிற் குறைகாணும் இடங்கள் பலவும் சுட்டப்பட்டு, அவற்றுள் இக்குறை தீர ஏற்புழியெல்லாம் அமைதி கூறப்பட்டுள. அன்னோர் மறுத்துரை சில பொருந்துழியெல்லாம் போற்றியே உரைக்கப்பட்டுள்ளன. பாலசுந்தரம் அவர்கள் கூறிய மறுப்புரைகளிற் சிலவற்றின் பொருந்தாமை என் தமையனார் தி. வே. கோபாலையர் அவர்கள், அவர்தம் எழுத்ததிகார ஆராய்ச்சிக் காண்டிகையுரைக்கு வரைந்த ஆய்வுமுன்னுரையினின்று தேர்ந்து காட்டப் பட்டுள்ளது.

செய்திகள் கீழ்க்காணும் முறைப்படி அமைக்கப் பட்டுள. சூத்திரம் - இளம்பூரணர் உரை - வேண்டுமிடத்திற் குரிய உரை விளக்கக்குறிப்பு - சூத்திரம் - நச்சினார்க் கினியருரை - வேண்டுமிடத்திற்குரிய உரை விளக்கக் குறிப்பு- சாத்திரியார் முதலியோர் தம் அருங்குறிப்புக்கள், மறுப்புரைகள் - மறுப்புரைகளது பொருந்தாமை பொருந்துதல் பற்றிய உரைக்குறிப்புக்கள் - ஒத்த நூற்பாக்கள் - என இவ்வாறு அவை நிரல்பெறுவன.

வீரசோழியம் - நேமிநாதம் - நன்னூல் - இலக்கண விளக்கம் - தொன்னூல் விளக்கம் - முத்துவீரியம் - சுவாமிநாதம் - என்னும் நூல்களினின்று ஒத்த நூற்பாக்கள் முழுமையாகவோ அடியளவிலோ காட்டப்பட்டுள. இரண்டாம் பகுதிக்கண் தொன்னூல் விளக்கமும் சாமிநாதமும் நீக்கப்பட்டுள, அவற்றுள் புணரியற் செய்திகளது நிரம்பாமை கருதி. நேமிநாதத்தின் தொன்மையும் வெண்பாயாப்பின் தனித்தன்மையும் மனங்கொண்டு, அதன் புணரியற்செய்தி சுட்டப்பட்டுள்ளது.

சுட்டிப் பெயர்குறிக்கப்பட்ட உரைக்குறிப்புக்கள் நீங்கலான பிறவெல்லாம் பதிப்பாசிரியன் கூற்றுக்களாக அமைபவை. அறிஞர் பெருமக்கள் எழுப்பிய ஐயமும் தடையுமாகிய கருத்துக்களுக்கு உரிய விடையமைதி இருதலைப்பகர அடைப்புக்குள் [பெரும்பாலும்] இடம்பெறுவன. முதற்பகுதிக்கண் **புன்னாலைக்கட்டுவன் தமிழ் வித்துவான் சி. கணேசையர்** அவர்களது குறிப்புரை ஆங்காங்கே இடம்பெற்றுள்ளது. இரண்டாம் பகுதிக்கண் **அடிகளாசிரியர்** குறிப்புச்சில வழங்கப்பட்டுள்ளன.

பாடவேறுபாடுகளைப் பொறுத்தவரை, பொருள் வேறுபட்டு அரிய கருத்தினைப் புலப்படுத்துவனவாக எவையும் காணப்பட்டில. சூத்திரத்தில் உரையாசிரியன்மார் கொண்ட பாடபேதங்களே இடம்பெறுகின்றன. சில உரைத்தொடர்கள் இடைச்செருகலாக இருத்தல்கூடுமெனத் துணியப்படுகின்றன. வாக்கியஅமைப்புப் பிழை ஏடெழுதுவோரால் நேரிட்டவை, உரையாசிரியரின்மார் உரைகளில் ஒரோவழிக் காணப்படுவனவும் சுட்டப்பட்டுள.

பிறப்பியல் இறுதிச் சூத்திரத்தில் இளம்பூரணர் ஈற்றிரண்டடிகளையும் தனிச் சூத்திரமாகக் கொண்டு

உரைகூறிப் போந்தார். பிறப்பியல் இறுதிச் சூத்திரத்தின் எண் நச்சினார்க்கினியத்திற்கு 102, இளம்பூரணத்திற்கு 103. ஆதலின் இச்சூத்திரத்தினின்று இளம்பூரணச் சூத்திரவெண் ஒன்று கூடுதலாக எண்ணப்படும். இளம்பூரணத்திற்கு எழுத்ததிகாரச் சூத்திரங்கள் 484; நச்சினார்க்கினியத்திற்கு அவை 483.

சரசுவதி மகால் வெளியீடாக முன்னர் வந்த எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியப் பதிப்பினும், இவ்வுரைக் கொத்துப் பதிப்புப் பல்லாற்றானும் நலன் நிறைந்து விளங்கவேண்டும் என்பது எனதுவேணவா. பலதிறப் பதிப்புக் குறைபாடுகள் நீங்க இவ்விரு பகுதிகளும் வெளிவரலுறுகின்றன. தமிழறிஞருலகம் இவ்வெளியீட்டினை மகிழ்ந்து மதித்தேற்கும் எனும் பெருநம்பிக்கையேன்.

இறைவன்அருள் துணைநிற்க !

திருவையாறு ***சாமி. கங்காதரன்***

புதுச்சேரி,
19-7-2007.



# தொல்காப்பியனார்

முழுமையாக நமக்குக் கிடைக்கப்பெற்றுள்ள இயற்றமிழ் இலக்கணம் தொல்காப்பியம். எழுத்துச் சொற்பொருள் என முப்படலங்களை இஃதுடையது. படலந்தோறும் ஒன்பது இயல்கள் உள. வேதவியாதர் காலத்திற்கும் முற்பட்டது தொல்காப்பியம் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. ஆயின் அக்கருத்துப் பெரிதும் ஏலாத ஒன்று என்ப. இறையனார் களவியலின் முதற்சூத்திரவுரை அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இடைச்சங்கத்து வீற்றிருந்தாராகக் குறிக்கிறது. இடைச்சங்கம் வீற்றிருந்தது பாண்டியரது கபாடபுரத்தில் என்பதும் அவ்வுரைச் செய்தியே. கபாடபுரம் வான்மீகியார் அருளிய இராமாயணத்தில் இடம்பெற்றுள்ளது. அந்நகர் கடல்கோளால் அழிந்த பின்னர்ப் பாண்டியர்தம் தலைநகர் தென்மதுரை ஆயிற்று என்றும், ஆண்டுக் கடைச்சங்கம் தோன்றித் தமிழாராய்ந்தது என்றும் அவ்வுரை மேலும் கூறிச்செல்லும்.

தொல்காப்பியத்தை இயற்றிய ஆசிரியர், தொன்றுதொட்டுவரும் பழமைத்தாகிய காப்பியக்குடியில் பிறந்தவர் ஆதலின், அக்குடிப்பெயரால் தொல்காப்பியர் என்றே நம் காலத்தும் (பிற்காலத்துப் பெரியபுராண ஆசிரியர் சேக்கிழார் எனக் குடிப்பெயரால் வழங்கப்பட்டவாறுபோல) வழங்கப்படுகிறார். 'காப்பியத் தொல்குடி கவின்பெற வளர்ந்து' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது *(30:83)*. காலப்போக்கில் அவரது இயற்பெயர் மறக்கப்படலாயிற்று. நச்சினார்க்கினியர் தம் காலத்து வழங்கிவந்த கதை நிகழ்ச்சியைச் சுட்டுமுகத்தான் திரணதூமாக்கினியார் என்ற இயற்பெயர் தொல்காப்பியனாருக்கு வழங்கியதாகக் கூறிப்போந்தார். பன்னூல் அறிந்த செந்நெறிச் செல்வராம் நச்சினார்க்கினியர் குறிப்பிட்ட கதை நிகழ்ச்சி அவர் தாமே

படைத்து மொழிந்ததன்று என்பது அரசஞ்சண்முகனாரது கூற்று. அப்பெயர் வழக்கினை நிறுவச் சான்று பிற இன்மையின் அவ்வாராய்ச்சி இங்கு வேண்டா. காப்பியக்குடிக்கண் தோன்றியவராகச் சிலர்பெருமக்களை ஈண்டுக் குறிப்பிடலாம். பதிற்றுப்பத்துள் நான்காம் பத்தினைப் பாடியவர் காப்பியாற்றுக் காப்பியனார். இடைச்சங்கப் புலவராகக் களவியல் உரையில் வெள்ளூர்க்காப்பியனார் சுட்டப்பெறுகிறார். நற்றிணை 246ஆம் பாடலாசிரியர் காப்பியஞ்சேந்தனார். பிற்காத்துப் புலவர் ஒருவர் பல்காப்பியனார் என்னும் பெயரினர். முதல் இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டு ஒன்று காப்பியன் ஆதித்தன் கண்டத்தடிகள் என்னும் பெயருடையவரைக் குறிக்கிறது. திருப்பாதிரிப்புலியூர் கலம்பக ஆசிரியர் பெயர் தொல்காப்பியத் தேவர் என்பது. காப்பியாறு என்ற பெயரிய ஊர் இருந்தமை 'காப்பியாற்றுக் காப்பியனார்' என்னும் புலவர் பெயரால் அறியலாம்.

தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்தில் வடக்கண் வேங்கடமும் தெற்கண் குமரியும் தமிழகத்து அகப்பாட்டு எல்லையாகக் கூறப்பட்டுள. குமரி என்பது இக்காலக் குமரிமுனை அன்று. அது கடல்கோளுக்கு முற்பட்டிருந்த குமரியாற்றினைக் குறித்தது என்ப. குமரிமலையை அது குறிக்கும் என்பது சண்முகனார் குறிப்பு. பஃறுளியாறு நெடியோன் என்னும் பாண்டியனொடு தொடர்புறுத்திப் புறநானூற்றுப் பாடல் ஒன்றில்(9) பேசப்படுகிறது. கடல்தெய்வமாம் வருணனுக்கு முந்நீர்விழாவாக வழிபாடு எடுத்த அம்மன்னனுக்கு உரியதாக அவ்யாறு கூறப்பட்டது. கரிகாலன் கரையமைத்துக் காவிரியைத் தன்காலத்து நெறிப்படுத்தியமை போல, நெடியோன் இவ்யாற்றையும் விளைபுலன்களுக்குப் பயனுதவுமாறு வேண்டுவன செய்தான் போலும். இப்பஃறுளியாற்றுடன் இது தோன்றிய குமரிமலையையும் கொடுங்கடல் கொண்டுவிடவே, தன் ஆட்சிப் பரப்புக் குறைந்துபோயினமையின் பாண்டியன் வடக்கண் படையெடுத்து இழந்த மலைக்கும் ஆற்றுக்கும்

ஈடாக இமயத்தையும் கங்கையையும் கைக்கொண்டான் என்று இளங்கோவடிகள் பாடுகிறார் (சிலப். 11:18-22). முல்லைக்கலிப் பாடலொன்றும் (4) இச்செய்தியை இசைக்கிறது.

இந்நெடியோன் என்னும் பாண்டியனே அவ்வாறு தன் நிலப்பரப்பைப் பெருக்கிக் கொண்டமையால் நிலந்தரு திருவின் நெடியோன் எனப்பட்டான் என்று கருதுவர் அறிஞர் சிலர். தொல்காப்பியம் அரங்கேறிய அவைக்களம் நிலந்தரு திருவின் பாண்டியனது என்று பாயிரம் பகர்கிறது. இப்பெயர் பாண்டியற்குச் சிறப்புப் பெயரே எனவும், அவனது இயற்பெயர் மாகீர்த்தி எனவும் உரையாசிரியர் கருதுவர். கடல்கோள் நிகழ்ந்த காலமும், இழந்த நிலப்பரப்பைப் பாண்டியர் படையெடுத்து ஈடு செய்துகொண்ட காலமும் சில நூற்றாண்டுகள் இடைப்பட்ட செய்தியாதல் வேண்டும். முன்னோர் சிறப்பினைப் பின்னோர்க்கு ஏற்றி மொழிதல் அரசர்கள்தம் மெய்க்கீர்த்திகளில் காண்கிறோம். ஆதலின் 'நிலம் தரு திருவின் பாண்டியன்' என்ற அச்சிறப்புப்பெயர் பாண்டியகுலத்தார்க்கே உரியதாகக் கொள்ளப்பட்டது எனலாம். பஃறுளியாறும் குமரிமலையும் கடல்கொண்ட பின்னர், குமரியாறே தென் எல்லையாக இருந்த காலத்து, இடைச்சங்கம் வீற்றிருந்தாரிடை அகத்தியரும் அவருடைய மாணாக்கர் பன்னிருவரும் சிறப்பாகக் குறிக்கத் தக்காராகக் களவியல் உரையில் காண்கிறோம். அப்பன்னிருவரிடைத் தொல்காப்பியனாரை, அகத்தியர் ஆக்கிய முதனூலாம் அகத்தியத்தைப் பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்த வராகப் பன்னிரு படலப் பாயிரம் பாடுகிறது. புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிரம் தண்டமிழைப் பொதியமலை முனிவரனாம் அகத்தியன்பால் தாவின்று உணர்ந்த மிகு புகழோனாகத் தொல்காப்பியரைக் குறிப்பிடுவதும் காணலாம். தொல்காப்பியம் யாத்தருளிய தொல்காப்பிய னாரே பன்னிரு படலத்துள் வெட்சிப் படலத்தை இயற்றினார் என்ற முரண்பாட்டில் ஈண்டு நுழைதல் வேண்டா.

முத்தமிழினையும் நுவன்ற முதல்நூல் அகத்தியம் என்பதும், அவற்றுள் இயற்றமிழினை மாத்திரம் தேர்ந்து, முதனூலில் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் மயங்கிக் கிடந்தவாறுபோல அன்றி, அவற்றை மயங்காத வகையில் ஓர்ந்துகொண்டு, செந்தமிழ்ச் சான்றோர்தம் வழக்கையும் செய்யுளையும் அடியாகக் கொண்டு, எழுத்து சொல் பொருள் என்னும் முத்திற இலக்கணத்தையும் தொகுத்துத் தன் வழிநூலில் வழங்கினான் தொல்காப்பியன் என, தொல்காப்பியனார் தம் ஒருசாலை மணாக்கராகிய பனம்பாரனார் நூற்சிறப்புப் பாயிரத்தில் குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியனார் தம் வழிநூலை யாத்த காலத்தே ஆரியச்சொற்கள் பல தமிழ்நாட்டில் வந்து வழங்கலாயின. தமிழரிடை ஆரியக் கலப்பினால் பண்டை ஒழுக்க நெறிகளிலும் சில தாக்கம் புலப்படலாயின. அவ்வாறே தமிழ்ச்சொற்களும் ஆரியர்தம் இருவகை வழக்கிலும் இடம்கொண்டன ஆதல்வேண்டும். ஆசாரம், சிந்தனை, வழிபாடு போன்ற பழக்கவழக்கங்கள் இருதிறத் தாரிடையேயும் விரவலாயினமை சொல்லாமை பெறப்படும். தமிழ்மொழி இயல்பு பிறழாதவாறு ஆரியச்சொற்கள் வடசொல்லாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. பிறமொழிச் சொற்களைத் தமிழில் தழுவிக்கொள்கையில் மொழியியல்பு கெடாதவாறு ஏற்க வேண்டும் என்னும் விதி தொல்காப்பியத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளமை காணலாம். மொழி முதலிலும் இறுதியிலும் இன்ன எழுத்துக்களே இடம்பெறுவன, மொழியிடையிலும் இன்ன மெய்யெழுத்தினை அடுத்து இன்ன மெய்யெழுத்தே (நட்பெழுத்தாக நின்று) மயங்கவேண்டும் என்று வகுத்த முதனிலை, இறுதிநிலை, இடைநிலை மெய்ம்மயக்கம் என்னும் இம்முத்திறமும் தமிழ்மொழியைப் பிறமொழிக் கலப்பால் அழியாதவாறு அரண் செய்வன எனலாம்.

வழிநூல் வாய்பாடு தோன்ற, தமக்கு முற்பட்ட காலத்தே நிலவிய எழுத்துச்சொற்பொருள் இலக்கண

ஆசிரியர் பலர் உண்மையைத் தொல்காப்பியனார்-புலவர்-ஆசிரியர்-அறிந்திசினோர்-உணருமோர்-முதலான பெயர்களானும், என்ப-என்மனார்-என்றிசினோர்-முதலான வினைகளானும் புலப்படுத்துவதை நெடுகக் காணலாம்.

தமிழ்மக்களிடை நாற்பால் பாகுபடும், தேவர்கள் வழிபாடும், மந்திர ஆற்றலும் தொல்காப்பியனாரால் வழிவந்த மரபாக ஏற்கப்பட்டுள்ளன என அறிகிறோம். வேதங்களில் கூறப்பெறும் மாயோன், இந்திரன், வருணன் என்னும் இம்மூவரும் முல்லை, மருதம், நெய்தல் நிலக்கடவுளராகக் கூறப்படுகின்றனர். 'அந்தணர் மறை' பேசப்படுகிறது. 'மறையோர் தேஎத்து மன்றல் எட்டு' எனும் குறிப்பைக் காண்கிறோம். களவின் வழிவந்த கற்புக் கரணமொடு புணர்ந்தது என வலியுறுத்தப்படுதல் கண்கூடு.

தொல்காப்பியனார், வேதம், ப்ராதிசாக்கியம், தர்மசாத்திரம், யாஸ்க நிருத்தம், நாட்டியசாத்திரத்தின் முதனூல் ஆகிய ஆரியமொழி நூல்களில் பெரும் பயிற்சியுடையாராகத் திகழ்ந்தமை, முனைவர் பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியாரின் எழுத்ததிகாரக் குறிப்புரையது முகவுரைத் தொடர்கள் சிலவற்றால் புலப்படுகிறது. அவை வருமாறு :

"பிறப்பியலிலுள்ள சூத்திரங்கட்கும் தைத்திரிய சுக்ல யஜுர் வேதீய ப்ராதிசாக்கிய சூத்திரங்கட்கும் ஒற்றுமை இருத்தலானும், இறுதிச்சூத்திரம் ருக்வேத மந்திரத்தைக் குறித்தலானும், மொழி முதற்கண்ணும் இறுதிக்கண்ணும் வரும் எழுத்துக்களைப் பற்றி ஈண்டுக் கூறும் முறைக்கும் ப்ராதிசாக்கியங்களில் கூறும் முறைக்கும் ஒற்றுமை இருத்தலானும், சொல்லதிகாரத்து உரியியலின் முறைக்கும் யாஸ்க நிருத்தத்து முறைக்கும் ஒற்றுமை இருத்தலானும், பொருளதிகாரத்து மெய்ப்பாட்டியலிலுள்ள பல செய்தி களுக்கும் நாட்டிய சாத்திரத்திலுள்ள செய்திகளுக்கும் இடையே ஒற்றுமை இருத்தலானும், 'பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்' என்பதற்கும் தர்ம சூத்திரத்து வாக்கியத்திற்கும்

இடையே ஒற்றுமை இருத்தலானும் . . . . . . பயிற்சியுண்டு என அறியக்கிடக்கிறது.''

''பரந்துபட்ட பொருண்மையவாகிய மாபுராணம் பூதபுராணம் என்பன சில்வாழ்நாள் சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப்படாமையின், தொகுத்துச் செய்யப்பட்டு வழக்கு நூலாகிய தொல்காப்பியம் இடைச்சங்கம் முதலாக இன்றுகாறும் உளதாயிற்று'' என்பர் பேராசிரியர் (பொ. 652 உரை).

இறையனார் களவியலுரை, தொல்காப்பியத்தினை இடைச்சங்கத்- தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாகக் குறிக்கிறது. (நூல்-இலக்கணம்).

இளம்பூரண அடிகள் சிறுநூல், இடைநூல், பெருநூல் எனும் இவற்றுள் தொல்காப்பியம் பெருநூல் என்ப. நச்சினார்க்கினியர் இந்நூலைச் சூத்திரம், ஓத்து, படலம் என்னும் 'முன்று உறுப்பு அடக்கிய பிண்டம்' என்ப.

இப்பெருநூலின் பரப்பினைத் 'தொல்காப்பியக் கடலின் சொற்றீபம்' எனநுவலும் நேமிநாதம்.

ஆக்கியோன் பெயரால் தனக்குப் பெயர் அமைந்த இத்தொல்காப்பியம், நின்று நிலவும் உயர்தனிச் செம்மொழி இலக்கணங்களிடையே மணிமகுடமாகத் திகழும் சீர்மையுடையது எனலாம்.

இனி, தொல்காப்பியர் காலம் பற்றிய ஆராய்ச்சி முடிவிலதாயுள்ளது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டது என்பது ஒருமுடிவு. தமிழ்வரைப்பு வண்புகழ் மூவேந்தரது ஆட்சிக்குட்பட்டதாயே நிலவியிருந்த காலத்ததாகத் தொல்காப்பியம் குறித்தலின், பழங்குடி (குறள் 955)ப் பெருமன்னராம் அவர்களது ஆட்சி இடையறாது நிலவிய

அப்பொற்காலம் இன்றைய வரலாற்று ஆய்வுக்குப் புலப்படாது ஆதலின், நூலுள் பயிலும் சொல் வழக்குக்களால் அது துணியவேண்டியுள்ளது. கடைச்சங்க காலத்து இலக்கியத்துள்ளும் வழக்கு வீழ்ந்த அரிய சொற்களும் சொல்முடிபுகளும் புணர்மொழிகளும் சில தொல்காப்பியத்துள் இடம்பெற்றுள. அஃது ஒன்றுகொண்டு துணியின், களவியலுரை கண்டாங்கு, இடைச்சங்க காலமாக ஏற்கக்கூடும் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதாகாத ஒன்றே இதன் காலமாக ஏற்கத்தகும். கடல்கோள் நிகழ்ந்த காலத்தை வைத்து வரையறுத்தல் கூடாத முயற்சி.

தொல்காப்பியர் சமயம் பற்றிக் கூற ஈண்டு இயையும். ஆசிரியர் ஐம்பெரும் பூதங்களையும் உடன்பட்டு அவற்றின் பரிணாமமாகிய மயக்கமே உலகம் எனக் குறிப்பிடுதலின் (பொ. 644), இவர் ஆகாயம் நீங்கலான நான்கு பூதங்களையே உடன்படும் பௌத்தர் அல்லர். 'மூவா முதலா உலகம்' (சீவக. கட. வாழ்த்து) என்று உலக அழிவின்மையைச் சமணர் கூறுப. ஆயின், இவரோ 'நில்லா உலகம்' (பொ.78) என்றலின் சமணரும் ஆகார். உயிர்கள் (சீவான்மாக்கள்) பல என்றும், உயிர் அழிவில்லது என்றும், அது பல உடல்தோறும் புகும் பிறப்பினது என்றும் கூறும் வைதிகமதக் கொள்கையர் ஆசிரியர். 'காலம் உலகம்' (சொல். 58) என்னும் சூத்திரத்தில் தெய்வச்சிலையார் குறித்த விளக்கம் கொண்டு காணில், இவரை வைதிக முனிவர் எனல் தகும். பால்வரை தெய்வம், உயிர், உடம்பு, வினை என்பன அச்சூத்திரத்துள் நுனித்துணரத்தக்கவை. நால்வகை நிலத்துக்கும் தெய்வங்களைத் தனித்தனியே உடன்படுகிறார் இவர் (பொ. 18). பிரமசரியம் முதலிய நால்வகை நிலையையும் இவர் இசைந்துபோதலை பொ. 625, 146, 272, 173, 192,76 எண்ணுடைய சூத்திரங்களில் குறிப்பானும்

வெளிப்படை யானும் உணரலாம். 'மறைமொழி கிளந்த மந்திரம்' (பொ. 477) இவர்க்குப் பெரிதும் உடன்பாடேயாதல் காண்கிறோம். கூற்றுவனும் கொற்றவையும் ஆசிரியரால் சுட்டப்பெறுகின்றனர் (பொ. 79, 59). எல்லாத் தெய்வ வழிபாடுகளையும் இவர் ஏற்றுக்கொண்டமையும் காணலாம் (பொ. 450, 81, சொல். 4). காஞ்சித்திணையின் இலக்கணம் நுவலும் சூத்திரத்தால் (பொ. 78) இவர் வீடுபேற்றின் விழுப்பத்தைச் சுட்டிச் செல்வதும் கண்கூடு.

ஆகவே, தொல்காப்பியனாரை வேதநெறியொடு பட்ட பழமையோராக நினைவிற்கொள்ளுதல் அவரது நூற்செய்தியைப் பொருட்படலத்துள் பிறழ்வின்றி உணர்ந்துகொள்ளத் துணைசெய்யும்.



# இளம்பூரணர்

"உரையும் காண்டிகையும் இன்றிச் சூத்திரம் தானே சொற்படுபொருள் உரைத்தலும் உண்டு. அஃது அவற்றை ஒழிய ஆகா, இக்காலத்து என்றவாறாயிற்று" என்று பேராசிரியர் எழுதிய உரைகொண்டு (பொ. 653) நோக்குமிடத்து, தொல்காப்பியத்திற்கு வாய்மொழியாகவே உரைகூறி மாணாக்கர்க்குப் பயிற்றிய போதகாசிரியர் ஆங்காங்கே வாழ்ந்திருந்தமை தேற்றம். பல நூற்றாண்டுகட்கு முன்னர்த் தோன்றிய தொல்காப்பியம் கி. பி. 12ஆம் நூற்றாண்டுகாறும் போதகாசிரியர் பலரால் பாடம் சொல்லப்பட்டுவந்ததாகவும், மூலபாடம் மாணாக்கர்க்கு மனப்பாடமாக இருந்ததாகவும் அறியலாம். அவ்வப்போது மூலபாடம் ஏடெழுதுவோரால் பெயர்த்து எழுதப்பட்டு வந்தது. இவ்வேட்டுச் சுவடிகளே பாடம் சொல்லும் ஆசிரியன்மார் பலராலும் போற்றப்பட்டு- வந்தமையும் உணரலாம். வாய்மொழியாக ஆங்காங்கே மாணாக்கர் பலர்க்குப் பாடம் சொல்லிவந்த உரைக்குறிப்புக்களை நல்லாசிரியர் பலரது துணையால் நாடி, முதன்முதலாக எழுத்துவடிவில் தொல்காப்பியத்திற்கு உரையாக்கித் தந்த பெருமை இளம்பூரணஅடிகளுக்கே உரியதாகக் கருதுகிறோம். முதன்முதலாகத் தொல்காப்பிய உரையை எழுத்துவடிவில் வடித்துத் தந்த இப்பெருமகனார் பின்னோரால் இயற்பெயர் சுட்டப்பெறாது 'உரையாசிரியர்' என்ற சிறப்புப் பெயராலேயே வழங்கப்படலானார்.

தாமும் போதகாசிரியராய் இருந்து நல்லாசிரியர் பலரை நாடித் தேர்ந்து மனங்கொண்ட தொல்காப்பிய உரையை எழுத்துவடிவில் முதலாகப் புலப்படுத்திய இவருரை இவர்பெயரால் இளம்பூரணம் எனப்பட்டது. இதனைப் பின்பற்றியே நன்னூல் எழுந்தது. நன்னூற்கு உரை வரைந்த மயிலைநாதர் எச்சங்களைக் குறித்து விளங்கும் சூத்திரவுரையில் (359), 'இஃது ஒல்காப் பெருமைத்

தொல்காப் பியத்துள், உளங்கூர் கேள்வி இளம்பூ ரணர்எனும், ஏதமில் மாதவர் ஓதிய உரை' என இவரைப் புகழ்ந்துரைக்கிறார். 'ஒல்காப் பெருந்தவத் தொல்காப் பியமுனி, தன்பெய ராலுல கின்புறத் தருநூல், உளங்கூர் உரையாம் இளம்பூ ரணமும்' என்னும் அடிகள் இலக்கணக்கொத்துச் சிறப்புப்பாயிரத்துள் நிகழும் புகழுரை. இந்நூற்காலம் 17ஆம் நூற்றாண்டு.

தொல்காப்பிய முப்படலங்கட்கும் இளம்பூரணர் வரைந்த உரை காண்டிகை எனவும் விருத்திகாண்டிகை எனவும் பெயர் பெற்றிருத்தலைக் காண்கிறோம். நச்சினார்க்கினியர் உரை போல இதுவும் காண்டிகை என்றே பெயர்பெற்றிருத்தல் தகும். ஒரோவழி மறுதலைக் கடாஅ மாற்றம் உடைத்தாய்த் தன்கோள் நிறுவுதலின், காண்டிகையாகவே பெரும்பாலும் நிகழும் உரைப்பகுதி விருத்திகாண்டிகை என விசேடிக்கப்பட்டது போலும்.

இளம்பூரணர் உரை பற்றிய பாயிரமாக அவரைப் பற்றிய சில குறிப்புக்களை வழங்கும் பாடல் ஒன்றனை வரலாற்றுப் பேராசிரியர் சதாசிவ பண்டாரத்தார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் 'தண்டமிழ் அசைவளி உறுப்ப' எனத் தொடங்கும் அகவல். அதனுள் முதல் பதினோரடிகள் இளம்பூரணர் மயக்கமறச் சொற்பொருள் ஓர்ந்து தொல்காப்பிய முத்திறப்படலங்கட்கும் காண்டிகை யுரை வழங்கிய இரக்கவுணர்வினைப் புலப்படுத்துவன. எஞ்சிய எட்டடிகளும் அவருடைய வரலாற்றை உரைப்பன. "அவர் கீழ்க்கடலினை அடுத்த செல்லூர் மணக்குடி என்ற ஊரினர்; வெண்புரிநூல் மார்பின் அந்தணர்; தவவொழுக்கினர்; வேதம் ஓதியுணர்ந்த இளம்போதி பயந்த மகனார்; புனித வாழ்க்கையர்; பண்டே, கொங்குவேள் இயற்றிய பெருங்கதைக்கு நல்லுரை கண்டவர்; தேவர் குறட்கும் உரை வழங்கியவர்." திருக்குறட்கு உரைகண்ட மணக்குடவர் இவராக இருத்தல்கூடும் என்பர், சதாசிவ பண்டாரத்தார்.

நெய்தல் வளம் சான்ற செல்லூர் அகநானூறு 90ஆம் பாடலில் இடம் பெற்றுள்ளது. இந்நல்லூர் புலவர் பெருமக்கள் சிலர்க்கு வாழூராக இருந்துவந்தமை, செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார், செல்லூர்க் கோசிகன் கண்ணனார் என்னும் பெயர்வழக்கால் போதரும். இச்செல்லூரே செல்லி என அகநா. 214இல் வழங்கப் பட்டமையைத் தொல்காப்பிய எழுத்ததிகாரப் பதிப்பாசிரியர் **வித்துவான் திரு. அடிகள்ஆசிரியர்** குறிப்பிடுகிறார்.

இளம்பூரண அடிகள் மொழிப்பற்றொடு நாட்டுப் பற்றும் நாட்டை ஆளும் அரசுப்பற்றும் கொண்டவராதலை அறியும் குறிப்புக்கள் அவருரையில் காணப்படுவன உள. தஞ்சை மாவட்டத்தில் பாயும் வெண்ணாற்றினைப் பாபநாசத்தினைச் சார்ந்த முன்னியூர் அகத்தீசுவரர் கோயில் கல்வெட்டொன்று 'வெண்ணு' எனக் குறிக்கிறது. இளம்பூரணர் எழுத்து 307ஆம் சூத்திர உரையில் வெண்ணுக்கரை என்று உதாரணம் காட்டுகிறார். சொல். 253ஆம் சூத்திர உரையில் 'ஊரெனப்படுவது உறையூர்', 'நாடெனப்படுவது சோழனாடு' என்று எழுதும் பகுதியும், 274ஆம் சூத்திரவுரையில் 'மங்கலம் என்பதோர் ஊருண்டு போலும், மழநாட்டுள்' எனச் சோழமண்டலத்துள்ள நாட்டினையும் ஊரினையும் சுட்டும் பகுதியும், 74ஆம் சூத்திரவுரையுள் 'வடுகர் அரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர்' எனச் சோழஅரசரைப் போற்றும் பகுதியும், 17ஆம் சூத்திரவுரையுள் மரூஉ வழக்கிற்கு உதாரணமாகச் 'சோணாடு' எனக் குறிக்கும் பகுதியும், இவர் சோழ நாட்டில் வாழ்ந்தவராதலையும், சோழ மன்னனிடத்தும் தம் நாட்டிடத்தும் பெயர்களை எடுத்தோதி மகிழ்ந்து செல்லும் அளவு பற்றுடையராய் இருந்தமையையும் புலப்படுத்துவன.

இளம்பூரண அடிகளை வைதிக நெறிவாழ் அந்தணராகவே துணிதல் தகும். எழுத்து முதல் சூத்திரவுரையில் "னகாரம் வீடுபேற்றிற்கு உரிய ஆண்பாலை உணர்த்துதல் சிறப்பால் பின் வைக்கப்பட்டது" என்று

உரைத்தமை கொண்டு, ஆடவரே வீடுபேற்றுக்குரியவர் எனத் துணியும் வைதிகச் சமயத்தினர் இவர் எனல் பொருந்தும். அடிகள், மாதவர் என்ற சொற்கள் சமணரை மாத்திரம் குறிப்பன என்றல் ஏலாது. சைவம் முதலிய அகச்சமயப் பெரியோரும் அவ்வாறு குறிக்கப்பெறுவர். பட்டினத்தடிகள், அப்பூதியடிகள் முதலான பெயர் வழக்குக் காண்க. இறைவனையும் அடிகள் என்றல், 'ஐயாறுடைய அடிகள்' என்ற தேவாரத் தொடரால் அறியலாம்.

பொருட்படலத் தொடக்கத்தில் இளம்பூரணருரை பின்வருமாறு நிகழ்கிறது: "நிலம் எனவே நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீருக்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும், காற்றுக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்." இக்கூற்று, "ஆகாயம் கிரியை இல்லாதது" எனச் சாற்றும் சமணமதக் கருத்துக்கு முரண்படுதல் காண்க. ஏனைய நான்கு பூதமும் தன்னிடம் விரிதற்கு இடங்கொடுக்கும் ஆகாயம் எப்படிக் கிரியை இல்லது ஆகும் ?

களவொழுக்கத்தை அறம்பயவாத புறநெறி அன்று எனவும், அது வேத விதியாகிய தந்திரம் எனவும் உரைக்கும் இளம்பூரண அடிகளை 'அருமறை உணர்ந்த அந்தணர்' என்று கோடல் பொருந்துவதொன்றாகும். பொருளியல் முதல் சூத்திர உரையில் 'கார்விரி கொன்றை' என்ற அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலை எடுத்துக்காட்டி அதன் ஈற்றடி இரண்டற்கும் கருத்தாக "யாழ்கெழு மணிமிடற்று அந்தணனது சிவானுபூதியில் பேருலகம் தங்கிற்று" என்று எழுதிய இப்பெருமகனாரை வைதிகச் சைவ நெறியாள ராகவே கருதற்பாலம்.

வாய்மொழியாக நிகழ்த்திவந்த தொல்காப்பிய உரையை எழுத்துவடிவில் காட்டிய இளம்பூரண அடிகளை 'உரையாசிரியர்' என்றே இயற்பெயர் சுட்டாமல் வழங்கும் பெருமதிக்கற்பாடு தோன்றப் பிற்காலத்து உரையாசிரியன்மார் தம் உரையில் குறிப்பிட்டுள்ளமை

உணரல் வேண்டும். இளம்பூரணரும் உரையாசியரும் ஒருவர் அல்லர் என்று கோடல் ஏலாது. உரையாசிரியர் கூற்றாகச் சேனாவரையர் குறித்தன சில இந்நாளைய இளம்பூரண ருரையில் காணப்பட்டில. நச்சினார்க்கினியர் எழுத்து 10ஆம் சூத்திர உரையில், இளம்பூரணரும் 'விளங்காய் திரட்டினார் இல்லை . . . இல்' என்று சுட்டிப் போந்ததாகக் காட்டிய நாலடியார் மேற்கோள், இன்றைய இளம்பூரணத்தில் இடம்பெற்றிலது. மதுரைக் காஞ்சியில் நச்சினார்க்கினியர், "தமிழ்நாட்டை இராவணன் ஆளுதல் பாயிரச்சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க" என்று சுட்டிய உரைப்பகுதியும் இளம்பூரணருரையில் காணப்பட்டிலது. இவைகொண்டு இளம்பூரணரும் உரையாசிரியரும் வேறானவர் என்பர் ஒருசாரார். ஆயின், சேனாவரையரும் பிற உரையாசிரியன்மாரும் இளம்பூரணருரையாக உரைத்தன பலவும் இளம்பூரணத்தில் எஞ்சாது காணப்படுதல் கொண்டு இருவரும் ஒருவர் எனவே துணிதல் வேண்டும். அடியார்க்குநல்லார் 'உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள்' என்று தம் சிலப்பதிகார உரையுள் *(8 : 1, 2)* குறிப்பிடுதல் இக்கூற்றுக்கு அரண்செய்யும். பிரயோக விவேக நூலார் தம் 5, 8 ஆம் காரிகைச் சூத்திர உரையுள் இளம்பூரணர் உரைத்தவையாகச் சொன்ன குறிப்புக்கள் இளம்பூரணத்தில் இன்றும் காணப்படுகின்றன. இதனானும் இளம்பூரணர் உரையாசிரியரின் வேறல்லர் எனத் துணியலாம்.

இளம்பூரணரையும் நச்சினார்க்கினியரையும் தமிழ்நூல் ஒன்றே வல்லாராகச் சிவஞான முனிவர் குறிப்பிடுவார். இளம்பூரண அடிகள் வேண்டுமளவு வடமொழிப்பொருள் உணர்ந்தவராகவே காண்கிறோம். பாணினியார் வேற்றுமை ஏழெனக் கொண்டு விளியை எழுவாய் வேற்றுமையில் அடக்கினார் எனச் சுட்டிச் செல்வதையும், 'இன்னான்' (சொல். 73) என்பதற்கு 'ஏநாங்க விகார:' என்னும் வடமொழிப் பொருண்மையை உட்கொண்டு, கண்ணாற்கொத்தை-காலான் முடவன் - என உதாரணம் காட்டிப் போதலையும், இவரது வடமொழிப் புலமைக்குச்

சான்றாகக் கூறலாம். தேவையான இடத்தே தமது வடநூற்புலமையைப் பயன்கொண்டு, பெரும்பான்மையும் தமிழ்மரபே அதன் தனித்தன்மை தோன்றி நிலவ உரைகண்டவர் இளம்பூரண அடிகள் என்றே துணிதல் தகும்.

இளம்பூரணர் காலம் நன்னூலாசிரியராம் பவணந்திக்கு முற்பட்ட காலம். நன்னூலை இயற்றுவித்த சீயகங்கனுடைய கல்லெழுத்துக்கள் மூன்றாம் குலோத்துங்கனுடைய ஆட்சிக் காலத்தை (கி. பி. 1178-1218)ச்சார்ந்தனவாகக் காணப்படுதலின், அதுவே நன்னூலார்காலமாம் என்பது பண்டாரத்தாரது கூற்று. அறநெறிச்சாரப் பாடல் ஒன்று (94) இளம்பூரணர் காட்டும் மேற்கோளாக உள்ளமை (பொ. 151) காண்கிறோம். அப்பனுவல் இயற்றப்பட்ட காலம் 12ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி என்பர் பண்டாரத்தார். எனவே, இளம்பூரணர் வாழ்ந்த காலம் அதற்குப் பிற்பட்டதாதல் வேண்டும் என்று கருதுகிறார், எழுத். இளம்பூரணம் பதிப்பாசிரியர் ஆகிய **அடிகளாசிரியர்**. அடிகளது காலம் 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதி அல்லது இடைப்பகுதி எனக்கொள்வதில் ஏதமில்லை.

இளம்பூரணர் சூத்திரம்தோறும் முதற்கண் கருத்துக் கூறிப் பின்னர்ப் பொழிப்புரையும், வேண்டும் எடுத்துக்காட்டொடு விளக்கமும் கூறிச்செல்வார். இவருரை பெரும்பான்மையும் ஆற்றொழுக்கு நடைத்து. சில இடத்தே வினா எழீஇ விடைகூறும் பாங்கும் உண்டு. ஏற்ற உத்திவகை சுட்டி, 'விட்டு அகல்வு இன்றி' வேண்டும் விரிவொடு கூடி மேவாங்கு அமைந்த காண்டிகை உரைத்திறத்தை இவருரையில் கண்டு மகிழலாம். சில சூத்திரங்கட்கு நுதலிய கருத்து நுவலாமல் இவர் செல்வதும் உண்டு. சிலவிடங்களில் சூத்திரப்பொருளை அடுத்துச் சொல்முடிவு காட்டி, இலக்கணமும் சில அரிய சொற்களுக்குக் கூறுதலும் உண்டு. இன்றியமையாத சொற்கள் விசேடவுரையொடு திகழும். சில சூத்திரங்கள் உரையின்றிக் கருத்துரையொடு மாத்திரம் அமையும். சிலவற்றிற்கு

விரிவான உரையும் இடம்பெறும். நூற்பாக்கள் சிலவிடத்தே உரையியைபு நோக்கி இணைத்து உரைக்கப்படும். சிலவற்றில் மொழிமாற்றிக்கூறி முடிவிடம் கூறுமுகத்தான் பிறர் கருத்தையும் இவர் சுட்டுவார். சில சூத்திரங்களுக்குப் பொருள் ஒருபகுதிக்கு எழுதி ஏனைய பகுதிக்குச் சொல்லாற்றல் தோன்றப் பொருள் விரிப்பதும், சிலவற்றுக்கு உதாரணத்தின் வாயிலாக உரை விரிப்பதும் இவர்தம் உரைத்திறன். (இன்ன பலவற்றையும் எழுத்ததிகாரத்தினும் சொல்லதிகாரவுரையுள் பெருகக் காணலாம்.) சில உதாரணம் தம் கருத்துக்கு ஏலாவிடத்து அவற்றைப் பாடம் அறிந்து திருத்திக் கொள்ளுமாறு அறிவுறுத்திப் போதலும் இவர்பால் ஒரோவழிக் காணலாம். பிறர் கருத்துக்களை ஆங்காங்குச் சுட்டிச் செல்லுதலும் இவர் உரைத்திறன்.

இலக்கணப்பனுவற்கு எழுத்து வடிவில் முதலுரையினைக் கண்ட இப்பெருமகனாரது வண்மை யுள்ளமும் ஆற்றலும் வியத்தக்கவை. இவர் எடுத்துக் காட்டாக எழுத்ததிகாரத்தில் உரைத்த வாய்பாடுகளையே பின்னுரையாளர் பலரும் பொன்னே போல் போற்றி உரை வரைந்தமை காண்கிறோம். ஏனைப் படலங்களிலும் இளம்பூரணரே எடுத்துக்காட்டு வரைதற்குப் பெரும் பான்மையும் துணைநின்றுள்ளமையும் கண்கூடு. பிறவுரை காரர் எல்லாரும் இவர்பால் கொண்ட நன்மதிக்கற் பாட்டை இவ்வாய்மை புலப்படுத்தும்.

மாணாக்கர்க்கு உய்த்துணர்வு பெருகவேண்டிச் சிலவற்றை வெளிப்பட மொழியாது செல்லுதல் இளம்பூரணரது உரைப்போக்கில் காணலாம். 'மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்று' என்னும் கொள்கையர் நச்சினார்க்கினியர். இளம்பூரணத்தை விளக்குமுகத்தான் நச்சினார்க்கினியருரை முப்படலத்துக்கும் அமைந்தது. அதுபற்றி எழுத்துப்படல அளவில் விரிவாக ஒருதலைப்பில் காணலாம்.

# நச்சினார்க்கினியர்

இலக்கியம் இலக்கணம் என்னும் இருவகைப் பனுவல்களுக்கும் உரை கண்ட நுண்மாண் நுழைபுலத்தினர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு கலித்தொகை என்பவற்றிற்கும், சீவக சிந்தாமணிக் காப்பியத்திற்கும், பேராசிரியர் உரையில்லாத குறுந்தொகை இருபது பாடற்கும், தொல்காப்பிய இலக்கண முழுமைக்கும் இவர் உரை வரைந்திருப்பதாகப் பழம்பாடல் ஒன்று இசைக்கிறது.

பத்துப்பாட்டுக்கு இவர் வரைந்த உரை பதவுரையாக அமைந்துள்ளது. சீவகசிந்தாமணிக்கு இரண்டாமுறையாகச் சமண மதத்தார் ஏற்று மகிழுமாறு பல அரிய சமயக் கருத்துக்களை ஆய்ந்துகூறி இவர் கண்ட உரை, சொல்முடிபு காட்டி அருஞ்சொற்களை விளக்கித் திரண்ட பொருளைச் சுருங்க உரைப்பதாகத் திட்ப நுட்பம் சான்று நிலவுவது. கலித்தொகை உரை நயமான கொண்டுகூட்டுடன் தொல்காப்பிய இலக்கணநெறி பிறழாது வரைந்த பொழிப்புரையாக நிகழ்கிறது. தொல்காப்பியச் சூத்திரங்களுக்கு இவருரை பதவுரையாகத் திகழ்கிறது. எச்சொற்கும் பொருள்கூறாது நெகிழ்த்துச் செல்லுதல் இவர்பால் காணோம். இவரது இவ்விலக்கண உரை 'மேவாங்கு அமைந்த மெய்ந்நெறிக் காண்டிகை'யாம். தொல்காப்பியப் பொருட்படலத்து மெய்ப்பாடு உவமம் மரபு என்னும் மூன்று இயல்கட்கும் இவருரை காணப்பட்டிலது. அவ்வியல்கட்கும் இவருரை உண்மையை உறுதி செய்யவேண்டும் சான்றுகள் இவருடைய இலக்கிய வுரைகளில் காணப்படுகின்றன. முதலில் இவர் சீவக சிந்தாமணிக்கு உரை வரைந்தார் எனவும், பின்னரே தொல்காப்பியத்திற்குக் காண்டிகை உரைத்தார் எனவும், அதன்

பின்னரே சீவகசிந்தாமணிக்கு இரண்டாவதாக உரை வகுத்தார் எனவும் நாம் கருத அகச் சான்றுகள் இவருரையுள் உள. கலித்தொகைக்கு உரையெழுது முன்னரே தொல்காப்பிய முப்படலங்களுக்கும் இவர் உரை வரைந்துவிட்டமையும் கலித்தொகை உரையிடையே காணலாம்.

நச்சினார்க்கினியரது உரைத்தொண்டினைச் சுட்டும் சில தனிப்பாடல்கள் உள. நெடியதோர் அகவற்பா இவரது வரலாற்றைச் சுருங்கவுரைத்துத் தொல்காப்பிய உரை வகுத்த மாண்பினைப் போற்றுகிறது.

மதுரையில் அந்தணர் வருணத்தே பாரத்துவாச கோத்திரத்தில் தோன்றிய இப்பெருமகனார் சிவபிரான் திருநாமமாகிய 'நச்சினார்க்கினியன்' என்னும் தூய தமிழ் இயற்பெயர்கொண்டு கல்வி கேள்வித்துறை போய் விளங்கியவர்; வேதம் முறையே அத்தியயனம் செய்தமையால் 'வேதபோதன்' என்றும் போற்றப்பட்டு, சிறந்த தமிழ்ப் போதகாசிரியராய்த் திகழ்ந்தவர். வடநூற்பொருள் அறியும் போதிய அளவு புலமைபெற்ற இவரைத் தாய்மொழியாம் தமிழின்பால் கொண்ட ஆராத காதல், தமிழிலக்கிய இலக்கணங்களில் புலமை நிரம்பும் வகை பணிகொண்டது. தமது தமிழ்ப்புலமையைப் பயன் கொள்ளவேண்டிய இவர் போதகாசிரியராகவே தம் வாழ்க்கையை அமைத்துக்கொண்டார். 'மதுரை ஆசிரியர்' என்ற சிறப்புப்பெயர் போதகத் தொழிற்சிறப்பால் இவர்க்கு அமைவதாயிற்று. பிறவுரையாளர்க்கு அமைந்திராத பெருஞ்சிறப்பு இது. மாணாக்கர்க்குப் பாடம் பயிற்றுவதில் ஈடுபாடுமிக்க இவர் தம் கோத்திரப் பெயரை இயற்பெயரோடு இணைத்துக்கொள்வதில் மகிழ்ச்சி கொண்டார் எனக் காண்கிறோம். அந்தணரிடை அக்கால மரபு அதுபோலும். 'ஆத்திரையன் பேராசிரியன்' என்ற பெயர் வழக்குக் காண்க. இவர்தம் பரந்த புலமைகண்டு வியந்த இலக்கணக்கொத்துச் சிறப்புப்பாயிர ஆசிரியர் இவருரையை 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியம்' எனப் புகழ்கிறார்.

மாணாக்கர்க்குப் பாடம் சொல்லிவந்த போதகாசிரியர் ஆகிய நச்சினார்க்கினியர் மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்று எனவே உணர்ந்துகொண்டு, தமது உரை விளக்கத்தை அதற்கேற்பவே வகுத்தார். மாணாக்கர்க்குப் பாடம் சொல்லிய அவ்வார்வம் தமிழ்ப்பனுவல்களுள் அரியவற்றுக்கு உரை எழுத இவரைத் தூண்டிற்றாதல் வேண்டும். இவர் உரைகண்ட எல்லையற்ற நூல்பரப்பை நோக்குமிடத்து இவரது சாதனை வியத்தக்கதாக உள்ளது. இவர்தம் நினைவாற்றலும், பலதுறை நுண்தேர்ச்சியும், வடமொழிச் சாத்திர அறிவும், நினைத்தொறும் நினைத்தொறும் வியப்பில்லை கடக்கின்றன.

தொல்காப்பிய உரையாளராம் இளம்பூரணர் சேனாவரையர் என்னும் இருவர்க்கும் பிற்பட்ட 14ஆம் நூற்றாண்டுக் காலத்தவர் நச்சினார்க்கினியர். அடியார்க்கு நல்லார், பரிமேலழகர், புறநானூற்று உரைகாரர் முதலிய உரையாளர் பலரும் இவர்க்குக் காலத்தால் முற்பட்டவரே என்பர். எல்லார்தம் உரை நலன்களையும் நுகர்ந்து பாடம் சொல்லி மகிழ்ந்த பழுத்த தமிழ்ப்புலமை இவர் உரைகளுக்கு மெருகூட்டிற்று என்று கொள்வது மிகையாகாது.

இவர் வைதிகச் சைவ சமயத்தவர் என்பது, இவர்தம் தொல்காப்பிய உரையுள் திருச்சிற்றம்பலம் பெரும்பற்றப் புலியூர் என்னும் சிவத்தலங்களைச் சுட்டுதலானும் (மொழி மரபு 12), திருவாசகம், திருக்கோவையார், திருவுலாப்புறம் என்னும் சைவநூல்களினின்று தம்முரையுள் மேற்கோள் காட்டுதலானும், திருமுருகாற்றுப்படையுள் வரைந்த உரைப்பகுதிகளானும் அறியலாகும்.

நச்சினார்க்கினியரது வடமொழிப் புலமையொடு பலதுறைக்கலை ஞானமும் சிந்தாமணியுரையுள்ளும் தொல்காப்பிய உரையுள்ளும் கண்டு மகிழலாம். சோதிடக் கலையும் இசைக்கலையும் பிறவும் பற்றிய இவரது

நுண்ணறிவு இவர்தம் இலக்கியவுரைகளில் இடம் பெறுவன. வேதவேதாங்கத் தொடர்பான செய்திகளும் தொல்காப்பியவுரையுள் வந்தியைகின்றன.

நச்சினார்க்கினியரது வாணாள் முழுதும் பண்டைத் தமிழ்ப்பனுவல்கட்கு உரைநயம் கண்டெழுதுவதிலும் மாணாக்கர்க்குப் பாடம் பயிற்றுவதிலுமே வைகிற்று. நன்மாணாக்கரைக் கொண்டு தமது உரையை எழுதுவிக்கும் பணி இவர்க்குப் பெரிதும் வாய்த்திருக்கவேண்டும்.

சொற்களுக்கு நயம் கூறுவதிலும், நெடிய பாடல்களைச் சொல் முடிவு காட்டி உரை வகுப்பதிலும், விளங்காத பகுதிகளை விளக்குவதிலும், அரிய பல செய்திகளை எஞ்சாது இசைப்பதிலும், ஏனையோர் காட்டாது விட்ட மேற்கோள்களைக் காட்டுவதிலும், நூலாசிரியரது கருத்தை நுணுகி ஆராய்ந்து விசேடவுரை வகுப்பதிலும், நூலாசிரியர்க்குப் பெரும்புகழ் கூட்டவேண்டி அவரது உள்ளார்ந்த கருத்தினை வெளிப்படுத்துமுகத்தான் சொற்களைக் கொண்டுகூட்டி வியக்கும் உரை காண்பதிலும், ஏனை உரையாசிரியன்மாரினும் நச்சினார்க்கினியர் குன்றின் மேலிட்ட விளக்காகத் திகழ்தலைக் காண இயல்கிறது. இவரது உரைத்திறன், வடமொழிப் புலவராம் மல்லிநாத சூரியோடு இவரை ஒப்பிட்டுக் கூறும் வகை பாராட்டத்தக்கது என்பர் இருமொழிப்புலமை நலம் சான்ற வித்தகர்.

இளம்பூரணரது எழுத்ததிகார உரைக்குப் பெருமை சேர்க்கும் வண்ணம் நச்சினார்க்கினியர் உரை எவ்வாறு அதற்கு வேண்டும் விளக்கம் உரைப்பதாயுளது என்பதனைச் சிறிதே விரியக் காண்போம். தொல்காப்பியத்தின் சிறப்பியல்பு சிலவற்றோடு எழுத்ததிகாரத்தில் நச்சினார்க்கினியர் உரையது பல்வேறு திறங்களும் வருந்தலைப்பில் இடம்பெறும்.



# தொல்காப்பியமும் எழுத்ததிகார நச்சினார்க்கினியமும்

எழுத்து, சொல், பொருள் என்னும் முப்படலங்களையும் அவற்றுள் ஏறத்தாழ 1600 சூத்திரங்களையும் கொண்ட தொல்காப்பியம், தமிழில் இன்று நிலவும் பனுவல்களுள் மிகத் தொன்மையானது. இவ்விலக்கணம் ஒரு சுருக்கமான நூலே. 'புலந்தொகுத்தோனே' என்ற சிறப்புப்பாயிரம் இதனை வலியுறுத்தும். தொல்காப்பியத்தின் சிறப்பு, செய்திகளை அது முறைப்படுத்திக் கூறும் அழகில் அமைந்துள்ளது. 'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி' என்னும் சிறப்புப்பாயிர அடி இதனைப் புலப்படுத்தும். படலந்தோறும் ஒன்பது இயல்களைக் கொண்டது தொல்காப்பியம். தம் காலத்திலேயே விரிவான இலக்கண நூல்கள் இருந்தமையை ஆசிரியர்

**செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்**
**மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்**
**பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது**
**சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்** (சொல். 463)

என்று குறிப்பிடுவதால் அறிந்துகொள்ளலாம்.

சுருக்க நூலாகிய தொல்காப்பியத்தில் பல செய்திகள் குறிக்கப்பட்டில. அவற்றைப் போதகாசிரியர் மாணாக்கர்க்கு உணர்த்தும் வகையிலேயே அவை விடுக்கப்பட்டுள. எடுத்துக்காட்டாக, எழுத்து - சொல்-பொருள்- மெய்ப்பாடு-உவமம்-செய்யுள்-இவற்றின் இலக்கணம் வெளிப்படையாகச் சுட்டப்பெற்றில. ஆசிரியர் தாம் வழிநூல் இயற்றியுள்ளமை தோன்றத் தம் நூலுக்கு முன்னரே பல இலக்கணநூல் இருந்தமையும் அவற்றைப் பயிற்றிய போதகாசிரியர் பலர் இருந்தமையும் போதரத் தம் சூத்திரங்களில் நூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் 'என்ப' என்ற சொல்லையும், அறுபத்தைந்துக்கு மேற்பட்ட

இடங்களில் 'என்மனார் - என்மனார் புலவர்' - என்ற சொல்லையும் சொற்றொடரையும், பத்துக்கு மேற்பட்ட இடங்களில் 'வரையார்' என்ற சொல்லையும் ஆண்டுள்ளார். தமக்கு முன்னர் வாழ்ந்தவரும் தம் சமகாலத்தவரும் ஆகிய புலவர் பெருமக்களைக் குறிக்க அவர் எடுத்தாண்ட சொற்களும் சொற்றொடர்களும் அறிந்திசினோர்-உணர்ந்திசினோர் - உயர்மொழிப்புலவர் - குறி அறிந்தோர்-கற்றறிந்தோர் - சொல்லியற் புலவர் - சிறந்திசினோர்- தெரியுமோர் - தெளியுமோர் - தொன்மொழிப் புலவர்- தோன்றுமொழிப் புலவர் - நுண்ணிதின் உணர்ந்தோர்- நுணங்குமொழிப் புலவர் - நேரிதின் உணர்ந்தோர்-நல்லிசைப் புலவர் - நுனித்தகு புலவர் - நூல் நவில் புலவர்-பாங்குற உணர்ந்தோர் - புலன் உணர்ந்தோர் - யாப்பறி புலவர்- வாய்மொழிப் புலவர் - முதலாகப் பலவாகும்.

தொல்காப்பியத்தில் இருசீர் கொண்ட ஓரடி முதலாக ஐம்பத்தொன்பது அடி உயர்எல்லையாக நூற்பாக்கள் அமைந்துள. எழுத்துப்படல நூற்பாவின் உயர் எல்லை பதின்மூன்றடி; சொற்படல நூற்பாவின் உயர் எல்லை பதினோரடி; பொருட்படல நூற்பாவின் உயர் எல்லை ஐம்பத்தொன்பது அடி.

எழுத்துப்படலத்து இயல்கள் நுவலும் செய்திகளைச் சுருங்கக் கூறுவோம். நூன்மரபில், முதலும்சார்புமாம் முப்பத்துமூன்று தனியெழுத்துக்களும், அவற்றுள் நட்பெழுத்து பகையெழுத்து என்பனவும், மொழிமரபில் மொழியிடைப் படுத்து உணரப்படும் குற்றியலிகரம்-குற்றியலுகரம்-ஆய்தம்-என்பனவும், மொழிக்கு முதலாம் எழுத்துக்கள்-மொழிக்கு இறுதியில்வரும் எழுத்துக்கள் - என்பனவும், போலியெழுத்துக்களும் சொல்லப் பெறுகின்றன. பிறப்பியலில், பிறர் செவிக்குப்புலனாம் வகை வாயினின்று வெளிப்படும் எழுத்துக்களின் பிறப்பிடமும் முயற்சியும் பேசப்படுகின்றன. புணரியலில், மெய்உயிர் முதல் ஈறாம் இருசொற்களும், தம்மொடும்

பிறவொடும் அல்வழி வேற்றுமைப் பொருள்களில் புணருமிடத்து, நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் மூவகைத் திரிபு பெறுமாறும், இயல்பாகப் புணருமாறும், அவற்றிடையே சாரியை வருமாறும், அச்சாரியைகள் பெறும் பொதுவான திரிபுகளும், எழுத்துச் சாரியைகளும், நிலைமொழியிறுதி மெய் வருமொழி முதல் உயிரோடு இணைந்து உயிர்மெய் ஆமாறும், உடம்படுமெய் பற்றிய செய்திகளும் உரைக்கப்படுகின்றன. தொகைமரபில், பின்னர் அகத்தோத்துள் ஈறுதோறும் விரித்து முடிப்பனவற்றைத் தொகுத்துப் புணர்த்தலும், உயர்திணைப்பெயர் விரவுப்பெயர்ப் புணர்ச்சி-மூன்றாம் வேற்றுமை இரண்டாம் வேற்றுமை விதிவிலக்குச் செய்திகள்-அளவு நிறை எண்ணுப்பெயர்கள் பெறும் சாரியைகள்-சில இடைச்சொற்புணர்ச்சி-அளவிற்கும் நிறையிற்கும் மொழி முதல் ஆகும் ஒன்பது எழுத்துக்கள்-போல்வனவற்றை உணர்த்தலும் இடம்பெறுகின்றன. உருபியலின்கண், உயிரீற்றுச் சொற்களும் மெய்யீற்றுச் சொற்களும் வேற்றுமையுருபுகளை ஏற்குமிடத்துத் திரியுமாறும் சாரியை ஏற்குமாறும் இயம்பப்படுகின்றன. உயிர் மயங்கியல் புள்ளி மயங்கியல் குற்றியலுகரப் புணரியல் என்பன இறுதி மூன்றாம் அகத்தோத்துக்கள். அவற்றில் முறையே உயிரீறுகளும் மெய்யீறுகளும் குற்றியலுகரங்களும் அல்வழி வேற்றுமை என்னும் இருபொருளினும், வன்கணம்-மென்கணம்-இடைக்கணம்-உயிர்க்கணம் என்ற நாற்கணங்களொடும் புணருமாறு விரித்துரைக்கப் படுகின்றன.

தொல்காப்பியனார் காலத்தில் தமிழ்மொழி வல்லாரிடை வடமொழி வல்லாரும் வாழ்ந்துவந்தமையின், வடசொற்களை அச்சான்றோர் தமிழ்ச்சொற்களிடைக் கலந்து பேசவும் எழுதவும் வாய்ப்பிருந்தது. வடமொழிச் சொற்களைத் தமிழின் தனித்தன்மைக்கு இழுக்கு வாராதவகை திரித்தே கொள்ளவேண்டும் என்பதன்கண் தொல்காப்பியனார்

உறுதிப்பாடு கொண்டிருந்தமையால், நூன்மரபின் கண்ணேயே இன்ன மெய்க்கு இன்ன மெய் நட்பெழுத்து இன்னமெய் பகையெழுத்து என இடைநிலை மெய்ம் மயக்கத்தை விரிவாக விதித்துள்ளார். இம்மெய்ம் மயக்கம் பற்றிய நூற்பாக்களில் வழிநூல் வாய்பாடாகிய 'என்ப' 'என்மனார்' முதலிய சொற்களை அறவே விடுத்துத் தம் கருத்தாகவே விதித்துள்ளவாற்றை நோக்கின், மொழித் தூய்மையைக் காக்கவேண்டி மொழியமைப்பை உளங் கொண்டு இச்செய்திகளை இவரே வரையறுத்து மொழிந்துள்ளார் எனக் கருதலாம். அன்றியும், மகரத்தொடு மயங்காத னகர ஈற்றுத் தொடர்மொழிகள் ஒன்பது, உச்சகாரம் இரண்டே, ஞகரஒற்று ஈறு ஒன்றே, நகரஒற்று ஈறு இரண்டே, உப்பகாரம் ஒன்றே, வகரஒற்று நான்மொழிக்கே ஈறாதல் போன்ற வரையறைகளும் மொழித்தூய்மைபேண ஆசிரியர் வகுத்த வரன்முறைகளாம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் பெயரும் வினையும் தம்முள் புணரும் புணர்ச்சிகளையே பெரும்பாலும் கூறுவார்; இடைச்சொல் உரிச்சொற் புணர்ச்சிகளை அருகியே விதித்துள்ளார். அல்வழிப்புணர்ச்சி வகைகளை ஆசிரியர் குறித்திலர்.

வருமொழி முதலில் வல்லினம் வருவழியே பெரும்பாலும் திரிபுகள் நிகழும்; ஏனைய மெல்லினம் இடையினம் உயிர்கள் வருவழி பெரும்பாலும் திரிபுகள் இரா. ஆதலின் இவைமூன்றும் இயல்புகணம் எனப்படும். இவை பெரும்பான்மையும் இயல்பாகப் புணரும் என்பதை 'ஞநமயவ எனும்' *(144)* என்னும் ஒரே நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். திரிபுகள் நிகழின் பின்னர் அகத்தோத்துள் விதந்து கூறுவார்.

உயர்திணைப்பெயர்ப் புணர்ச்சியை 'உயிரீறாகிய' 'அவற்றுள், இகர இறுபெயர்' *(153, 154)* என்ற நூற்பாக்களிலும், விரவுப்பெயர்ப் புணர்ச்சியை 'அஃறிணை விரவுப்பெயர்' *(155)* என்ற நூற்பாவிலும் புள்ளிமயங்கியலில்

இயற்பெயர் பற்றிய நூற்பாக்களிலும் (347-352) எல்லாம் என்பது பற்றிய நூற்பாக்களிலும் (322-324), ஆசிரியர் விதந்தோதியே முடிப்பார்.

அளவுப்பெயர், நிறைப்பெயர், எண்ணுப்பெயர்ப் புணர்ச்சிகளை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பதனை, 'உயிரும் புள்ளியும் இறுதி யாகி' முதலான நூற்பாக்களில் (164-169, 194, 198, 199, 239, 240, 317-319, 338-394, 433-480) காணலாம்.

நாட்பெயர் திங்கட்பெயர்களை அவர் விதந்தோதியே முடிப்பதனை, 'நாள்முன் தோன்றும்' (247), 'திங்கள் முன்வரின்' (248), 'திங்களும் நாளும்' (286), 'நாட்பெயர்க்கிளவி' (331) என்ற நூற்பாக்களில் அறியலாம்.

கிளைப்பெயர்களையும் ஆசிரியர் விதந்தோதியே முடிப்பதனை, 'கிளைப்பெயர் எல்லாம் கொளத்திரிபு இலவே' (307), 'கிளைப்பெயர் எல்லாம்' (338), 'ஒற்றுநிலை திரியாது' (418) என்ற நூற்பாக்களில் தெளியலாம்.

ஆசிரியர் அல்வழிப்புணர்ச்சிக்கு எழுவாய்த்தொடர் ஒன்றனையே மனத்துக்கொண்டு விதி கூறுவார். ஏனைய அல்வழித்தொடர்களைக் குறிக்குமிடத்து அவற்றின் பெயரினை விதந்தோதியே முடிப்பார். 204-208, 209, 210, 212, 222-224 முதலான எண்ணிட்ட நூற்பாக்கள் காண்க.

பெயரொடு வேற்றுமையுருபு புணர்கையில் நிகழும் திரிபுகளைத் தனிப்பட உருபியலிலும், உருபு தொக உருபின் பொருள்பட வரும் பொருட்- புணர்ச்சியை இறுதி மூன்று இயல்களிலும் குறிப்பிடும் ஆசிரியர், மேற்குறிப்பிட்ட உயர்திணைப்பெயர்-விரவுப்பெயர்-எண்நிறை அளவுப்பெயர்- நாட்பெயர்- திங்கட்பெயர்-கிளைப் பெயர்- என்னும் இவை அல்லாத அஃறிணைப் பெயர்களுக்கே அவ்விதிகளைக் கொள்ளவேண்டும் என்பதனைக் குறிப்பாகத் தெரிவித்துள்ளார்.

கற்சிறார்களுக்குப் பொருள்கொள்வதில் மயக்கம் ஏற்படாவகை பலபொருள் ஒருசொற்களை 'ஆண்மரக் கிளவி' (304)என்றாற்போலக் கிளந்தோதியே முடிப்பார் ஆசிரியர்; மாணாக்கர்தம் நினைவாற்றலை மிகுக்கவேண்டியும், சூத்திரங்களிடையே துளக்கலாகாத் துணைமை நிலவ வேண்டியும், பல செய்திகளை எளிமையாகக் கூறுதலை விடுத்துச்சுற்றிவளைத்து மாட்டேறாகக்கூறுவார்.

'இல்ல மரப்பெயர்' (313) ஈறுகெட்டு மெல்லெழுத்துப் பெறுதலை 282, 278, 262, 243ஆம் நூற்பாக்களொடு முறையே மாட்டெறிந்து புலப்படுத்துவார்.

'இருளென் கிளவி' (402) அத்துச்சாரியையும் இன்சாரியையும் பெறுதலை 377, 287, 242, 241ஆம் நூற்பாக்களொடு முறையே மாட்டெறிந்து விளக்குவார்.

'ஆகார இறுதி அகர இயற்றே' - 221
'ஈகார இறுதி ஆகார இயற்றே' - 249
'உகர இறுதி அகர இயற்றே' - 254
'ஊகார இறுதி ஆகார இயற்றே' - 264
'ஏகார இறுதி ஊகார இயற்றே' - 274
'ஓகார இறுதி ஏகார இயற்றே' - 289
'வேற்றுமைக் கண்ணும்
அதனோரற்றே' - 216, 225, 257, 266, 276

முதலிய நூற்பாக்களையும் காண்க.

இங்ஙனம் மாட்டேற்றை இப்படலத்தின்கண் பெரிதும் பயன்படுத்தல் தொல்காப்பியத்தின் தனிச்சிறப்பும் அழகுமாம். உருபுபுணர்ச்சிக்குக் கூறப்பட்டன பொருட் புணர்ச்சிக்கும் பொருந்தும் இடங்கள் எல்லாம் 'உருபியல் நிலையும்' என்றே மாட்டெறியப்பட்டுள. அவை 250, 281, 294, 320, 322, 324, 378, 388, 419, 422 முதலிய எண்ணிட்ட நூற்பாக்கள்.

கி.மு. ஐந்தாம் நூற்றாண்டளவில் தோன்றிய தொல்காப்பியம் சுருக்க நூலாயினும் பாணினீயத்தைப்

போலச் சொற்சுருக்கம் நாடாமல் தெளிவுகருதி எதனையும் சற்று விளக்கமாகவே கூறுவதால், அது தோன்றி ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆண்டுகள் கழித்தும் எழுத்து வடிவில் அதற்கு உரை வரையப்பட்டிலது. இடையே கி. பி. எட்டாம், பத்தாம் நூற்றாண்டில் தோன்றியவை எனப்படும் இறையனார் அகப்பொருள்-யாப்பருங்கலம்-யாப்பருங்கலக் காரிகை- என்ற நூல்கள் உரைகளால் பொலிவுபெற்றன. இத்தகைய உரை முழு இலக்கணமாகிய தொல் காப்பியத்திற்கு அமையவேண்டும் என்று கருதி உரையாசிரியர் என்று போற்றப்படும் இளம்பூரண அடிகள் இந்நூல் முழுமைக்கும் உரை வரைந்தார். இக்காலம் பதினோராம் நூற்றாண்டு என்பர் ஒருசாரார்; பதின்மூன்றாம் நூற்றாண்டு என்பாரும் உளர். இளம்பூரணருரையே பின்னர்ப் பல ஆண்டுகள் சான்றோரிடையே போற்றப்பட்டுவந்தது. போதகாசிரியர் பலரும் அவ்வுரையையே மாணாக்கர்க்குப் பயிற்றிவந்தனர். மதுரையாசிரியர் நச்சினார்க்கினியரும் தாம் தொடக்கத்தில் பயின்றதும் தம் மாணாக்கர்க்குப் பயிற்றியதும் இளம்பூரணர் வரைந்த தொல்காப்பிய எழுத்துப்படல உரையே என்பதில் ஐயமில்லை.

இளம்பூரணர் இன்றியமையாத செய்திகளை எடுத்துரைப்பினும், மாணாக்கர்க்கு உய்த்துணர்வு பெருகல் வேண்டிச் சிலவற்றைக் குறிப்பான் அறிவித்தல் அவர்க்கு இயல்பு என்பதைச் சேனாவரையரும் குறிப்பிட்டுள்ளார். போதகாசிரியராய்த் திகழ்ந்த நச்சினார்க் கினியர் மாணாக்கர் இயல்பினை நன்கு அறிந்தவர்; தம் தொல்காப்பியச் சொல்லதிகார உரையில், "பின்னுள்ளோர் கூறினார் என்பது பற்றியும், மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்று என்பது பற்றியும், யாமும் அவ்வெழுத்துக்களைப் பிரித்துக் காட்டுதும்" (203) என்று குறிப்பிடுகிறார்; மாணாக்கர்க்குச் சொல்லுக்குச் சொல் பொருள் கூறினாலன்றி அன்னோர் தெளிவாக உணரார் என்பதனைத் தமது பட்டறிவால் கண்டவர் ஆதலின், மாணாக்கர்க்குத் தெளிவாகப் பயிற்றும் போதகாசிரியர் நிலையில் இருந்து, அவர்கள் ஐயுறும்

இடங்களைத் தம் மனத்துக்கொண்டு தொல்காப்பிய எழுத்ததிகாரத்துக்குப் பதவுரையாகவே உரை வரைந்துள்ளார். நூற்பாக்கள் சிலவற்றில் சொற்களை இடம்மாற்றிப் பொருள்செய்து அதன்கண் நயம்கண்ட இவர் பதவுரையாக எழுதி விளக்கம் வரைந்த உரையே இன்று நமக்குத் தொல்காப்பியச் சொற்றொடர்களின் பொருளை அறிதற்குப் பெரிதும் உதவுகிறது.

சில நுட்பமான இடங்கள் தவிரப் பிறாண்டெல்லாம் இளம்பூரணர் உரைத்தவற்றையே தாமும் கொண்டு உரைவரையும் நச்சினார்க்கினியர் சில இடங்களில் மாத்திரம் மிகுதியான எடுத்துக்காட்டுத் தந்துளார்.

தொல்காப்பியனார் தம் காலத்தில் வழங்கிய சொற்களுக்கே புணர்ச்சிவிதி கூறினார்; தாம்கொண்ட கோட்பாட்டிற்கு அல்வழியில் எழுவாய்த்தொடரையே பெரும்பாலும் குறித்துச் செல்வதால் அல்வழியில் ஏனைய பிரிவுகளுக்கு எல்லாம் முழுமையாகப் புணர்ச்சிவிதி கூறினாரல்லர். இதனைப் புள்ளிமயங்கியல் புறனடை நூற்பாவில் (405) சுட்டிச்செல்லுமாற்றால் அறியலாம்.

நூற்பாவில் சில சொற்களை மிகையாகக் கொண்டு அவ்விதப்புக் கிளவியால் நூற்பாவில் கூறப்படாத பல செய்திகளையும் நூற்பாவுரையுள் கூறிச்செல்லும் மரபினைப் பின்பற்றி உரையாசிரியர் நூற்பாவான் நுவலப்படாத பல சொற்களுக்கும் புணர்ச்சிவிதி கூறினார். நச்சினார்க்கினியர் அவற்றொடு வேறு சில முடிவுகளையும் சேர்த்தார். பெரும்பாலான சொற்களுக்குத் தொல்காப்பியத்தில் புணர்ச்சிவிதி உண்டு என்பதனைக் காட்டலே இவர்களது நோக்கம். பிற்கால இலக்கியங்களிலுள்ள வேறுபாடு களுக்கும் தொல்காப்பியத்தில் இடம்நாடி அமைத்த இவர்கள் செயலைக் குறைகூறுவதும் உண்டு.

தமக்கு முற்பட்ட சான்றோர் வழங்கிய கற்பனைகளை உண்மைச் செய்தியாகக் கொள்ளும் மரபு தமிழ்ச்

சான்றோரிடம் இருந்துவந்தமை வெளிப்படை. இறையனார் அகப்பொருள் சிவபெருமான் அருளிய நூல் முதலான பல செய்திகளும் அவர்களுக்கு வரலாறாகவே தோன்றியமை காண்கிறோம். நச்சினார்க்கினியரும் இம்மரபிற்கு விலக்கானவர் அல்லர். பாண்டியன் மாகீர்த்தி இருபத்து நாலாயிரம் ஆண்டு வீற்றிருந்தான் என்றும், யமதங்கியார் தம் புதல்வராம் திரணதூமாக்கினியாரே தொல்காப்பியர் என்றும், அகத்தியனார் தொல்காப்பியனாராகிய திரணதூமாக்கினியாரைச் சபிக்கத் திரணதூமாக்கினியாரும் அகத்தியனாரைச் சபித்தார் என்றும், வியாசர் வேதங்களைப் பகுப்பதன் முன்னர் அவை தைத்திரியம்- பௌடிகம்- தலவகாரம்- சாமவேதம்-என்னும் பெயரினவாய் வழங்கின என்றும், தொல்காப்பியனார் வேதவியாசருக்கு முற்பட்டவர் என்றும், தொல்காப்பியம் ஆதியூழியின் அந்தத்தே செய்யப்பட்டது என்றும் வந்த மரபுவழிச் செய்திகளை நச்சினார்க்கினியர் தம் உரையில் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் கூறுவதால் தொல்காப்பியத்திற்கு ஏற்றம் மேலும் மிகும் என்னும் கருத்தினர் இவர் எனலாம்.

எழுத்தினை எட்டுவகையானும் எட்டிறந்த பலவகையானும் ஆசிரியர் உணர்த்தினார் என அவ்வகை களை இளம்பூரணர் குறிப்பிட்டுள்ளார். போதகாசிரியராகிய நச்சினார்க்கினியர் தம் மாணாக்கர்க்கு அவ்வகைகளை எடுத்துக்காட்டுக்கொண்டு விளக்கி யிருப்பார். அவ்விளக்கங் களையே தமது எழுத்ததிகார உரையிலும் குறிப்பிட்டு, எட்டுவகையும் எட்டிறந்த பலவகையும் ஆகிய அவற்றை நன்குணர வழிவகுத்துள்ளார்.

"இவ்வெழுத்து எனப்பட்ட ஓசையை அரு என்பர் அறியாதார். அதனை யாம் உரு என்றே கோடும். அது செறிப்பச் சேறலானும், செறிப்ப வருதலானும். இடையெறியப்படுதலானும், செவிக்கண் சென்று உறுதலானும், இன்ப துன்பத்தை ஆக்குதலானும், உருவும் உருவும் கூடிப் பிறத்தலானும், தலையும் மிடறும் நெஞ்சும்

என்னும் மூன்றிடத்தும் நிலைபெற்றுப் பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உறப் பிறக்கும் என்றமையானும், வன்மை மென்மை இடைமை என்று ஓதினமையானும், உருவே ஆம்" - என்ற விளக்கம் இனிது.

"தொல்காப்பியம் என்னும் நூற்கு மரபாம் துணைக்கு வேண்டுவன- வற்றைத் தொகுத்துணர்த்துதலின், இவ்வோத்து நூன்மரபு என்னும் பெயர்த்தாயிற்று" என்று கூறிய நச்சினார்க்கினியர் அதற்கு விளக்கமாக, "எழுத்துக்களின் பெயரும் முறையும் இவ்வதிகாரத்துக்கும் செய்யுளியற்கும் ஒப்பக் கூறியது. ஈண்டுக் கூறிய முப்பத்துமூன்றனைப் பதினைந்து ஆக்கி ஆண்டுத் தொகை கோடலின் தொகை வேறாம். அளவு, செய்யுளியற்கும் இவ்வதிகாரத்துக்கும் ஒத்த அளவும் ஒவ்வா அளவும் உளவாகக் கூறியது" என்றாற்போல் நூன்மரபினைச் செய்யுளியலோடு இணைத்துக் காண்டலின், அதற்கு உதவும் வகையில் சில நூற்பாக்களுக்குப் புதுமையாக உரைகாணும் தேவை இவருக்கு நேர்ந்துவிட்டது. அதனால் 'ஓரெழுத் தொருமொழி' என்ற நூற்பா உரையில் மெய்யெழுத்துக்களை விடுத்துச் சொற்களின் எழுத்துக் களைக் கணக்கிடலும், அவ்வாறு கணக்கிட்ட மைக்கு ஏற்ற விளக்கம் கூறலும் ஆகிய இடர்ப்பாடுகள் தோன்றின.

மாணாக்கர் ஐயுறக்கூடும் என்ற இடங்களில் எல்லாம் தெளிவாகச் செய்திகளைக் கூறுவது இவர் இயல்பு. சில எடுத்துக்காட்டு வருமாறு : (எண் சூத்திர எண்ணைக் குறிக்கும்.)

75. உசு - உளு. முசு - குரங்கின் ஒரு சாதி.

151. ஈறு என்று ஓதியமையின், முன்னிலை வினைச் சொல்லே கொள்க. இவை முன்நின்றான் தொழில் உணர்த்துவனவும், அவனைத் தொழிற்படுத்துவனவும் என இருவகைய. இ-ஐ-ஆய்- முதலியன தொழிலை உணர்த்துவன. நட-வாழ்-முதலிய உயிரீறும் புள்ளியீறும் தொழிற்படுத்துவன.

154. எட்டிப்பூ : இவ்வுயர்திணைப்பெயர் வேற்றுமைக் கண் மிக்கு முடிந்தது. எட்டி-காவிதி-என்பன தேயவழக்கு ஆகிய சிறப்புப்பெயர். எட்டி மரமன்று. அஃது 'எட்டி குமரன் இருந்தோன் தன்னை' (மணிமே. 4:58) என்பதனான் உணர்க.

166. உரிக்குறை - உரி நெல்லும் குறை நெல்லும்.

167. கலத்துக்குறை - கலமும் குறையும்.

169. பனையின் குறை - பனையளவும் குறைந்ததும்;

காவின் குறை - கா என்னும் நிறையும் குறைந்ததும்.

210. செய்ம்மன : செய்யும் என்னும் பெயரெச்சப் பொருட்டு. செய்யும் என்பதன் பொருட்டாகிய 'மன' என் இறுதிச்சொல் அக்காலம் வழங்கியது ஆகலின் ஆசிரியர் அதனையும் வேறாக ஓதினார்.

211. வாழிய : வாழிய யான்-நீ-அஃவன் அவள் அவர் அது அவை- என இது மூன்றிடத்தும் சேறலின் முன்னிலையில் அடங்காத குறிப்பு வியங்கோள்.

216. இருவிளக்கொற்றன் : இருவிள என்பது ஓலை, வேணாட்டகத்து ஓரூர், கருவூரினகத்து ஒரு சேரியும் என்ப. இருவிளவிற்கொற்றன் என விரியும்.

223. இறாஅவழுதுணங்காய் : இஃது உம்மைத்தொகை.

அராஅக்குட்டி : பண்புத்தொகையும், வேற்றுமைத் தொகையும் ஆம்.

உவாஅப் பட்டினி என்பது வேற்றுமைத்தொகை.

224. உண்கா : யான் உண்பேனோ என்னும் பொருட்டு.

236. இனிக்கொண்டான், அணிக்கொண்டான், இக்கொற்றன் : இவ்விடைச் சொல் மூன்றும், இப்பொழுது கொண்டான், அணிய இடத்தே கொண்டான், இவ்விடத்துக் கொற்றன்-என உருபின் பொருள்பட வந்த வேற்றுமை யாகலின் வேறோதி முடித்தார்.

239. தூணிப் பதக்கு : உம்மைத்தொகை. 'வேற்றுமை இயற்று' எனவே, இது வேற்றுமைப் புணர்ச்சி அன்று என்பது.

272. ஏஎ - எனக்கு ஒரு கருமம் பணி; ஓஒ - இங்ஙனம் செய்கின்றதனை ஒழி - என இவை முன்னிலை ஏவற்பொருளவாய் வந்தன.

276. வேக்குடம் - வேதலையுடைய குடம் என விரியும்.

288. வேட்கை+அவா=வேணவா.

வேட்கையாவது, பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம்; அவாவாவது, அப்பொருள்களைப் பெறவேண்டும் என்று மேன்மேல் நிகழும் ஆசை. எனவே, வேட்கையால் உண்டாகின்ற அவா-என மூன்றனுருபு விரிந்தது. இதனை வேட்கையும் அவாவும் என அல்வழி என்பாரும் உளர்.

316. இலம்படு புலவர் - இல்லாமை உண்டாகின்ற புலவர். இலத்தால் பற்றப்பட்ட புலவர் என வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாகக் கோடல் பொருந்தாது; இஃது அல்வழி அதிகாரம் ஆகலானும், படு என்ற சொல்லேயன்றிப் பற்று என்ற சொல் புணராமையானும் என்க.

328. ஈம் - சுடுகாடு. கம்-தொழில்.

335. குயின் என்பது மேகம். அஃது அஃறிணைப் பெயர். குயின் வினையும் ஆம்.

345. மின் என்பது மின்னுதல் தொழிலும், மின் என்பதொரு பொருளும் உணர்த்தும்.

346. கன்னம் : மகர ஈற்றுப் பொருட்பெயர்.

351. பேன், கோன் என்பன முற்கால வழக்கு.

354. அழக்குடம் என்பது பிணக்குடத்தை.

359. மகன் தாய்க்கலாம் - மகன் தாயொடு கலாய்த்த என விரியும். 'வினை' ஈண்டுப்பகை மேற்று.

363. பீர் ஒரு கொடி. பீர் 'மரம்' என்பார், பீரங்கோடு என்பர்.

364. சார்க்காழ் - சாரினது வித்து என்பதே பொருள். காழ் என்பது வயிரம் எனின் கிளந்தோதுவர் என உணர்க.

382. உரையிற்கோடலான், தெம்முனை என வகரஒற்று மகர ஒற்றாகத் திரிதல் கொள்க.

384. தாழ்க்கோல் - தாழைத் திறக்கும் கோல் என விரியும்.

387. பாழ்க்கிணறு : இது பாழுட் கிணறு என விரியும், பாழ்த்த கிணறு என வினைத்தொகை முடியாமையின்.

400. 'உதள்' ஒரு மரத்தையும் ஆண்ஆட்டினையும் உணர்த்தும்.

401. வாள்கடிது : வாள்-கொல்லுதல்.

418. பார்ப்பனக்குழவி - பார்ப்பானுடைய குழவி, பார்ப்பினுட் குழவி என விரிக்க. பார்ப்பானாகிய குழவி என்பது அல்வழியாதலின் 425ஆம் சூத்திரத்தான் முடியும்.

427. யாங்குக் கொண்டான் - எவ்விடத்துக் கொண்டான் என்னும் பொருட்டு.

*428*. யாங்கு கொண்டான் : இஃது எப்படி என்னும் வினாப்பொருளை உணர்த்திற்று.

*431*. தெற்கே வடக்கு : இஃது உம்மைத்தொகை.

*443*. 'ஏழ்' குற்றுகரஈறு அன்மை உருபியலுள் காண்க. *(194)*

*449*. 'ஏழ்' குற்றுகரஈறு அன்மையின் மாட்டேறு எலாதாயிற்று.

*480*. ஏழ்மா - என முடிதல் வழக்கு இன்று; எழுமா என முடிக்க.

*481*. வானவரி வில்லும் திங்களும் போலும் - வானவரிவில்லிடைத் திங்கள் போலும்; கல்கெழு கானவர் - கல்லைக் கெழீயின கானவர்; மாநிதிக் கிழவனும் போன்ம் - மாநிதிக் கிழவனைப் போலும்.

*293*. கோ+இல்=கோயில். கோ என்பது உயர்திணைப்பெயர் அன்றோ எனின், கோ வந்தது என அஃறிணையாய் முடிதலின் அஃறிணைப்பாற்பட்டது என்க.

*337*. எயின் என்ற உயர்திணைக் கிளைப்பெயர் 'எயின் வந்தது' என அஃறிணைக்கும் வருதலின், தொகைமரபினுள் முடியாதாயிற்று, ஆண்டு உயர்திணைக்கே கூறுதலின்.

*367*. இச்சூத்திரம் வேற்றுமையிறுதிக்கண் அல்வழி எடுத்துக்கோடற்கண் சிங்கநோக்காக வைக்கப்பட்டது.

*397*. இதுவும் சிங்கநோக்கு ஆதலின் அல்வழி வேற்றுமை இரண்டற்கும் கொள்க.

*415*. 'மாறுகொளக் கூறல்' எனத் தழீஇக்கொண்ட சிதைவு இச்சூத்திரம்.

450. இது வேண்டாதது கூறி வேண்டியது முடிக்கின்றது, ஞநமயவ (144) முதலிய சூத்திரத்துள் கூறியவற்றைக் கூறுதலின். இவ்வேண்டாதது கூறலான், எட்டு+அகல்= எண்ணகல் எனக் குற்றுகர ஈறாய்க் கேடும் திரிபும் பெற்று உயிர் வருமொழியான தொடர்மொழிக்கண் ஒற்று இரட்டுதல் கொள்க.

469. ஆறு+ஆயிரம் : அறு+ஆயிரம்=அறாயிரம். முன்னர் 'நெடுமுதல் குறுகும்' (440) என்ற வழி, அறு என நின்ற முற்றுகரத்துக்கே ஈண்டுக் கேடு கூறினார் என்றுணர்க; என்னை? குற்றுகரமாயின் ஏறி முடிதலின். இது குற்றுகரம் திரிந்து முற்றுகரமாய் நிற்றலின் ஈண்டு முடிபு கூறினார்.

479. 'அதனிலை உயிர்க்கும் யாவரு காலை
முதனிலை ஒகரம் ஓஆ கும்மே'

'அதனிலை உயிரும் யாவும் வருகாலை
முதனிலைக்கு ஒகரம் ஓஆ கும்மே'

என உருபைப் பிரித்துக் கூட்டுக.

241. பனி என வரூஉம் கால வேற்றுமை - பனி என்று சொல்ல வருகின்ற நோய் அன்றிக் காலத்தை உணரநின்ற வேற்றுமைமுடிபுடைய பெயர்.

242. வளிஎன வரூஉம் பூதக்கிளவி - வளி என்று சொல்லவருகின்ற இடக்கர் அல்லாத ஐம்பெரும்பூதங்களில் ஒன்றை உணரநின்ற சொல்.

243. உதிமரக்கிளவி - உதித்தல் என்னும் தொழிலன்றி உதி என்ற மரத்தினை உணரநின்ற சொல்.

244. ஒடுமரக் கிளவி : மரம் என்றார், 'ஒடு' என்ற நோயை நீக்குதற்கு.

268. பூ என் ஒருபெயர் : பூ என்பது பொலிவு என்னும் வினைக்குறிப்பை உணர்த்தாது நிற்றற்கு 'ஒருபெயர்' என்றார்.

278. சேஎன் மரப்பெயர் : பெற்றம் அன்றிச் சே என்னும் மரத்தினை உணரநின்ற பெயர்.

282. விசை மரக்கிளவி - விசைத்தல் தொழில் அன்றி விசை என்னும் மரத்தினை உணரநின்ற பெயர்.

304. ஆண்மரக் கிளவி - ஆண்பாலை உணர்த்தாது ஆண் என்னும் மரத்தினை உணரநின்ற சொல்.

305. விண்ஏன வருஉம் காயப் பெயர் : விண் என்னும் குறிப்பினை நீக்குதற்குக் 'காயம்' என்றார்.

308. எண் என் உணவுப் பெயர் - வரையறையை உணர்த்தாது எண் என்று சொல்லப்படும் உணவினை உணர்த்தும் பெயர்.

313. இல்ல மரப்பெயர் - புக்குறையும் இல்லன்றி, இல்லம் என்னும் மரத்தினை உணரநின்ற பெயர்.

336. எகின்மர மாயின் - எகின் என்பது புள்ளன்றி மரமாயின்.

372. இல்என் கிளவி இன்மை செப்பின் - இல் என்னும் சொல் இருப்பிடமாகிய இல்லை உணர்த்தாது, ஒரு பொருளினது இல்லாமையை உணர்த்துமிடத்து.

381. ஏனவை புணரின் இயல்பென மொழிய - சுட்டுமுதல் வகரஈற்றோடு இடைக்கணமும் உயிர்க்கணமும் வந்து புணருமாயின், அவ்வகரம் திரியாது இயல்பாகப் புணரும்.

-அவ்யாழ், இவ்யாழ், உவ்யாழ், அவ்வட்டு . . . . . அவ்வ(அ)டை அவ்வா(ஆ)டை. ஈண்டுக் கூறியது நிலைமொழிக்கு என்றும், 'நின்ற சொல் முன் இயல்பா கும்மே' (144) என ஆண்டுக் கூறியது வருமொழிக்கு என்றும் உணர்க.

430. உண்டுஎன் கிளவி உண்மை செப்பின் - உண்டு என்னும் சொல் வினைக்குறிப்பை உணர்த்தாது, ஒரு பொருள் தோன்றுங்கால் தோன்றி அது கெடுந்துணையும் உண்டாய் நிற்கின்ற பண்பை உணர்த்தி நிற்குமாயின்.

உள்பொருள் : இது பொருள் சுட்டாது உண்மைத் தன்மைப் பண்பை ஈண்டு உணர்த்திற்று.

இதுகாறும் மாணாக்கர்க்குத் தெளிவு கருதி நச்சினார்க்கினியர் எழுத்துப் படலத்தில் விளக்கிக் கூறிய செய்திகளை நோக்கினோம். இனி, அவர் இளம்பூரணர் கருத்தை விடுத்துத் தாமே புதிதாக உரை வரைந்துள்ள நூற்பாக்களைக் காண்போம் (எண் நூற்பா எண்ணைக் குறிக்கும்).

22. 'அம்மூவாறும்' - மெய்ம்முன் மெய், மெய்ம்முன் உயிர், மெய்ம்முன் உயிர்மெய், உயிர்மெய்முன் உயிர்மெய், உயிர்மெய்முன் தனிமெய், உயிர்முன் உயிர்மெய், உயிர்முன் தனிமெய் - என்ற பலவகை மயக்கங்களையும் இந்நூற்பாவில் காணமுயல்கிறார் நச்சினார்க்கினியர்.

33. 'அளபிறந்து உயிர்த்தலும்' - இசைநூற்செய்தியை இயற்றமிழ்ச் செய்யுளுக்கும் கொண்டுள்ளார்.

40. 'உருவினும் இசையினும்' - குறிப்பு மொழியும் எல்லா மொழியும் எனப் பிரித்து,

'எஃஃஃகிலங்கிய கையராய் இன்னுயிர்
வெஃஃஃகு வார்க்கில்லை வீடு'

முதலிய இலக்கியங்களுக்கு இலக்கணம் காண்கிறார்.

47. 'தம்மியல் கிளப்பின்' - வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என உயிர்மெய்க்கும் பெயரிட்டு ஆளுதற்கு இலக்கணம் காண்கிறார்.

50. 'குறுமையும் நெடுமையும்' -''உயிரும் உயிர்மெய்யும் அளபெடுக்குங்கால், நெடிலும் ஒத்த குறிலும் இணைய, அவை தனித்தனி ஒலிக்காது குறிலது ஒலி நெடிலோடு இணைய நெடிலே நீண்டொலிக்கும்'' என்று மாணாக்கரின் ஐயத்தை நீக்குகிறார்.

51. 'மொழிப்படுத்து இசைப்பினும்' - ''ஒற்றும் குற்றுகரமும் எழுத்துப் படலத்தில் எழுத்துக்களொடு கூட்டி எண்ணப்பட்டு நிற்கும்; ஆனால் செய்யுளியலில் எண்ணப்படாது நிற்கும்; எனினும் அவை எழுத்தாம் தன்மை திரியா'' என்று ஐயம் அகற்றுகிறார்.

101. 'சார்ந்துவரின் அல்லது' - ஆய்தம் ஒத்த காட்சியின் பிறக்கும் - ஆய்தம் தனக்குப் பொருந்திய நெஞ்சுவளியால் பிறக்கும். காட்சி என்றது, நெஞ்சினை.

105. 'குற்றியலுகரமும்' - குற்றியலுகரம் புள்ளியீறுபோல உயிரேற இடம் கொடுக்கும். இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல், புள்ளி பெறாமையின். 'முப்பாற் புள்ளியும்' என்பதனை ஆய்தத்தின் வரிவடிவாகக் கொண்டமையின், குற்றியலிகரம் குற்றியலுகரம் என்பன புள்ளிபெறா என்பதனைக் கொள்ளவேண்டி நேர்ந்தது.

111. 'மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்' ''மருமொழியும்- இருவகையாகி மருவிய சொற்களும்; இன்தொகுதி மயங்கியல் மொழியும் - செவிக்கு இனிதாகச் சொற்றிரளிடத்து நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியுமாய் ஒட்டி நின்றாற்போல நின்று பொருள் உணர்த்தாது பின் பிரிந்து சென்று ஒட்டிப் பொருளுணர்த்த மயங்குதல் இயன்ற சொற்களும்'' என்று உரைகூறி,

'இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பின்
பரல்அவல் அடைய இரலை தெறிப்ப' (அகநா. 4)
'கருங்கால் ஓமைக் காண்பின் பெருஞ்சினை'
(அகநா.3)

'தெய்வ மால்வரைத் திருமுனி அருளால்' (சிலப். 3:1) போன்ற இலக்கியங்களை அமைக்கின்றார்.

131. 'இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு
இன்னென் சாரியை இன்மை வேண்டும்' -

இன்மையும் வேண்டும் என்னும் உம்மை தொக்கு நின்றதாக்கி,

'கற்பினின் வழாஅ நற்பல உதவி' (அகநா. 86)
'அகடுசேர்பு பொருந்தி அளவினின் திரியாது' (மலைபடு.33)
முதலியவற்றை அமைக்கின்றார்.

156. 'புள்ளி யிறுதியும் . . . .வேண்டும்' - அகத்தோத்தினுள் வல்லெழுத்து மிகும் என்று கூறப்பட்ட உயிரீறு புள்ளியீறுகள், புலிகோட்பட்டான்-புலிக்கோட் பட்டான், நாய்கோட்பட்டான்- நாய்க்கோட்பட்டான் என மூன்றன்தொகைக்கண் உறழ்ந்துமுடியும் என்ற செய்தியைத் தெளிவாக விளக்குதற்கு, 'வேண்டும் வல்லெழுத்து மிகுதி போற்றல்' என மொழிமாற்றிப் பொருள் செய்துள்ளார்.

157. 'சாரியை உள்வழித் தன்உருபு நிலையலும்' என்ற விதிக்கு மாறாக இலக்கிய இலக்கணங்களுள் வருவனவற்றை 'மெய்பெற' என்ற இலேசினாற் கொண்டு,

'மறங்கடிந்த அருங்கற்பின்
சிலசொல்லின் பல்கூந்தல்நின்
நிலைக்கொத்த துணைத்துணைவியர்' (புறநா. 166)
'ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே' (சொல். 1)
'சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே' (எழுத்து.1)

என்ற எடுத்துக்காட்டுக்களைத் தருகிறார்.

'உயர்திணைப் பெயர்க்கு ஒழியாது வருதலும்' - 'ஒழியாது' என்ற மிகையான் ஒழிந்து வருதலும் உண்டெனக் கொண்டு,

'ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்' (சொல். 2)
'உருவக் குதிரை மழவர் ஓட்டிய' (அகநா. 1)
'அவற்கண்டு எம்முள் . . . . . ஒடுங்கி' (அகநா. 48)

என்ற எடுத்துக்காட்டுக்களைத் தருகிறார்.

**222.** 'செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்' உம்மையால் பெயரெச்சமறையாகிய சொல்லும் என்று கொண்டு, ஆகாரஈற்றுப் பெயரெச்ச மறைச் சொற்களுக்கும் புணர்ச்சிவிதி காண்கிறார்.

**227.** 'இராஎன் கிளவிக்கு அகரம் இல்லை' இராஅக்காக்கை எனப் பெயரெச்ச எதிர்மறை அகரம் மிகும். இராக்காக்கை - இராவிடத்துக் காக்கை என்ற பொருளில் அகரம் மிகாது என்பதனை விளக்குகிறார்.

**231.** 'மாமரக் கிளவியும் ஆவும் மாவும்' -
'கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்'
(குறுந். 8)
'மாஅந் தளிர்கொண்ட போழ்தினான்'
(கலித். 143)

முதலிய இலக்கியங்களைக் கருத்தில் கொண்டு, ஆவும் மாவும் அகரம் அவண் நிலையா, னகரம் ஒற்றும்; அவை வல்லெழுத்து அவண் நிலையா' எனக் கண்ணழித்து, மாமரக்கிளவி அகரம் பெறுமாற்றைத் தெரிவித்துள்ளார்.

**407.** 'ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடர் ஆகா' - இரண்டு ஒற்று இடைக்கண் தொடர்ந்து நிற்கும் சொற்கு இடையின ஒற்று முதல் நின்றால் மேல் இடையினம் தொடர்ந்து நில்லாது; வல்லினம் அன்றி மெல்லினமே தொடர்ந்து நிற்கும். ஆதலின் அவற்றைக் கொண்டே பெயரிடுக. எடுத்துக்காட்டு : ஆர்க்கு, மொய்ம்பு.

**408.** 'அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா இறுதியும் உகரம் நிலையும்' -

உகரம் தன் அரை மாத்திரையாய் நிலைபெற்று நிற்கும் என்றுகூறி, இருமொழிப் புணர்ச்சிக்கண் ஒருமாத்திரை கொள்ளும் என்று குறிப்பிடும் 'நிறையும்' என்ற பாடத்தை மறுக்கிறார்.

**நச்சினார்க்கினியர் குறிப்பிடும் நுட்பமான சில செய்திகள்**

*(எண் : சூத்திர எண்)*

*34.* உரையசைக் கிளவி - தான்கூறும் பொருளைக் கோடற்கு ஒருவனை எதிர்முகம் ஆக்கும் சொல். கேண்மியா எனவரும். இதன்கண், கேள் என்பது உரையசைச்சொல்.

*68.* 'முற்றிய லுகரமொடு' - காது கட்டு கத்து முருக்கு தெருட்டு - என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாகப் பொருள் வேறுபடும்.

*74.* 'உஊ காரம் நவவொடு நவிலா' - நை நொ நோ உவ வே - என்பன வியங்கோள்.

*113.* 'ஐஒடு குஇன் அதுகண்' - சொல்லுள் எழுவாயையும் விளியையும் கூட்டி வேற்றுமை எட்டு என்பரால் எனின், ஐ முதலிய வேற்றுமை ஆறும் தொக்கும் விரிந்தும் பெரும்பான்மையும் புலப்பட்டு நின்று பெயர்ப்பொருளைச் செயப்படுபொருள் முதலியவாக வேறுபாடுசெய்து புணர்ச்சி எய்துவிக்கும் என்றற்கு ஈண்டு ஆறு என்றார். (ஆண்டு) எழுவாயும் விளியும் செயப்படுபொருள் முதலியவற்றினின்று தம்மை வேறுபடுத்துப் பொருள் மாத்திரம் உணர்த்திநின்றும் எதிர்முகமாக்கி நின்றும் இங்ஙனம் சிறுபான்மையாய்ப் புலப்பட நில்லா வேறுபாடுடையவேனும், அவையும் ஒருவாற்றான் வேற்றுமையாயின என்றற்கு 'எட்டு' என்றார் என உணர்க.

*115.* 'ஆறன் உருபின் அகரக் கிளவி' - தமது எமது போல்வன. இது நிலைமொழிக்கு ஓர் அகரம் பெறும் என

விதியாது உருபு அகரம் ஏறிமுடியும் என விதித்தால் வரும் குற்றம் உண்டோ எனின்,

'நினவ கூறுவல் எனவ கேண்மதி' (புறநா. 35)

என்றாற்போல ஆறாவதற்குரிய அகரஉருபின் முன்னரும் ஓர் அகரஎழுத்துப்பேறு நிலைமொழிக்கண் வருதல் உண்மையின், உருபு அகரம் ஏறிமுடியும் என்பதன்கண் குற்றம் உண்டு.

155. 'அஃறிணை விரவுப்பெயர்' - உயர்திணையோடு அஃறிணை விரவியது விரவுப்பெயர் என்று விரவுப்பெயரின் உண்மைத்தன்மைத் தோற்றம் கூறியுள்ளார். 'அஃறிணை விரவுப்பெயர்' என்று மூன்றிடத்துக் கூறிய ஆசிரியர் ஓரிடத்தும் உயர்திணை விரவுப்பெயர் என்று சுட்டாமையை உளங்கொளல் வேண்டும். சாத்தன் சாத்தி முடவன் முடத்தி - என வரும் விரவுப்பெயர்கள் உயர்திணைக்கு உரியவாக ஓதிய ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்தி நின்ற ஈற்றெழுத்துக்களே அஃறிணை ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்தின எனல் வேண்டும்; என்னை? அஃறிணைக்கு ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் உணர்த்தும் ஈறன்றி, ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்தும் ஈறுகள் உளவாக ஆசிரியர் ஓதாமையின். அங்ஙனம் உயர்திணை இருபாலும் உணர்த்தும் ஈறுகள் நின்றே அஃறிணை ஆண்பாலையும் பெண்பாலையும் உணர்த்துதலின், அஃறிணை உயர்திணையொடு சென்றுவிரவிற்று என்று அவற்றின் உண்மைத்தன்மைத் தோற்றம் கூறுவான் ஈண்டுக் கூறினார்.

224. 'ஏவல் குறித்த உரையசை மியா' - முன்னிலை ஏவல்வினையைக் கருதி வரும் எதிர்முகம் ஆக்கும் சொல்லினைச் சார்ந்துவந்த மியா என்னும் ஆகாரஈற்று இடைச்சொல். கேண்மியா கொற்றா என வரும்.

226. 'ஆன்முன் வரூஉம் . . .தோன்றி' - தோன்றி னகரத்துக்குக் கேடு தோன்றி.

269. 'ஊ என் ஒருபெயர்' - ஊ என்பது தசையை உணர்த்தி நின்ற வழக்கு ஆசிரியர் நூல்செய்த காலத்து வழக்கு. அன்றித் தேயவழக்கேனும் உணர்க.

285. 'கொடிமுன் வரினே' - பனைக்கொடி : இதற்கு இரண்டாவதும் மூன்றாவதும் விரிக்க.

299. 'வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்' - பொருநக்கடுமை : பொருந் என்பது சாதிப்பெயரும் பொருநுதல் என்னும் வினைப்பெயருமாம்.

311. 'அகர ஆகாரம் வரூஉங் காலை' - கோணாகோணம் கோணத்துள் கோணம்; கோணாவட்டம் - கோணத்துள் வட்டம். இவற்றிற்கு உள் என்னும் உருபு விரிக்க.

315. 'அகமென் கிளவிக்கு' - அகம்+கை=அங்கை - அதிகாரத்தானும் பொருள் நோக்கத்தானும் வேற்றுமைத்தொகை அன்மை அறிக.

329. 'வேற்றுமை யாயின்' -

ஈம்+கடுமை=ஈமுக்கடுமை - குணவேற்றுமைப் புணர்ச்சி.

ஈம்+குடம்=ஈமக்குடம் - பொருட்புணர்ச்சி

333. 'மன்னும் சின்னும்' - ஊன் என்னும் சுட்டு ஊன்கொண்டான் என இயல்பாய் முடியும்.

355. 'முன்என் கிளவி' - முன் என்பதற்கு ஒற்று இரட்டுதல் இலக்கணமேனும், அதுவன்றித் தனக்கு இனமாயதொரு றகர ஒற்றுப் பெறுதலின் வேறுமுடிபாயிற்று.

422. 'யாதென் இறுதியும்' - அஃது+அன்+கோடு-ஆய்தம் கெடாமுன் அன்னின் அகரத்தைக் குற்றுகரத்தின்மேல் ஏற்றுக, ஆய்தம் கெட்டால் அது முற்றுகரமாய் நிற்றலின்.

482. 'உயிரும் புள்ளியும் இறுதி யாகி' - கடல் ஒல்லை ஒலித்தது, கடல் ஒல் ஒலித்தது - இவை உயிரீறாயும் புள்ளி யீறாயும் நிற்றலின் ஒன்றன்கண் அடக்கலாகாமையின், இவற்றை 'நெறிப்பட வாரா' என்றார். இத்தன்மை குறைந்த சொற்கள் பிரித்துப் புணர்க்கப்படா.

கரும்பார்ப்பான், கரும்பார்ப்பனி, கரும்பார்ப்பார், கருங்குதிரை, கருங்குதிரைகள் - என்பனவற்றுள், கரியனாகிய பார்ப்பான், கரியளாகிய பார்ப்பனி, கரியராகிய பார்ப்பார், கரியதாகிய குதிரை, கரியனவாகிய குதிரைகள் - என ஐம்பாலினையும் உணர்த்தும் பண்புகொள் பெயர் ஈறு தொக்கவாறு காண்க. இங்ஙனம் ஐம்பாலும் தொகுத்தற்குரிய முதனிலை ஆதலின் பிரித்துப் புணர்த்தலாகாமை கூறினார்.

ஆடரங்கு செய்குன்று - முதலாகிய பெயரெச்சம் தொக்க வினைத் தொகைகளை விரிக்குங்கால், ஆடின அரங்கு எனச் செய்த என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த அகர ஈறு இறப்பு உணர்த்தியும், ஆடாநின்ற அரங்கு - ஆடும் அரங்கு - என்னும் செய்யும் என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த உம் ஈறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்தியும், அவற்றானாய புடைபெயர்ச்சியைத் தோற்றுவித்து இரண்டு பெயரெச்சமும் ஒருசொற்கண் ஒருங்கு தொக்கு நிற்றலின், அதனை ஒரு பெயரெச்சத்தின்கண் அடக்கிப் புணர்க்கலாகாமையின் புணர்க்கலாகாது என்றார்.

இவ்வாறு, முன்னரே இளம்பூரணர் எழுத்துப் படலத்துக்கு வரைந்த உரை இருப்பவும், நச்சினார்க்கினியர் மாணாக்கர்பால் உய்த்துணர்வினை எதிர்பார்த்தல் இயலாது என்று தம் பட்டறிவினால், உரையாசிரியர் உய்த்துணர வைத்த பல செய்திகளையும் மாணாக்கர்க்கு ஐயுறவு நிகழாதவகை விளக்கியும், பல இலக்கியங்களுக்குத் தொல்காப்பிய நூற்பாக்களிலேயே இலக்கணம் கண்டும், நூற்பாக்களிலுள்ள மிகைச்சொல் முதலிய இலேசுகளான் தம் காலத்தில் வழங்கிய பல தொடர்களுக்குப் புணர்ச்சி விதி

குறிப்பிட்டும், நூற்பாக்களில் மாட்டேறுகளை நிகழ்த்திப் பல புதிய செய்திகளைக் கண்டும், தேவைப்பட்ட இடங்களில் எல்லாம் விரிவான விளக்கங்கள் வரைந்தும், தாமும் மாணாக்கர் முழுப்பயன் அடைதல் வேண்டும் என்ற அருள் உள்ளத்தால் எழுத்ததிகாரத்திற்கு உரை வரைந்துள்ளார்.

மெய்ம்மயக்கத்தை ஒருமொழிக்கண்ணேயே கோடல், சொற்களில் உள்ள எழுத்துக்களை எண்ணுங்கால் ஒற்றுக்களை நீக்கியே எண்ணுதல், கேள் முதலின உரையசைச் சொல் என்று கோடல், நூன்மரபு முதலியவற்றின் செய்திகளொடு செய்யுளியற் செய்திகளை ஒப்பிடுதல், போலி எழுத்துக்களைக் கொள்ளற்க - என்றல்போல்வன இவருடைய மதம் என்றே கருதற்பாலம். இவர் பல புராணச் செய்திகளை எடுத்தியம்பிய திறம் அக்கால மக்கள் மனப்பான்மை பற்றி அமைந்ததாம்.

*வாழ்க நச்சினார்க்கினியர்தம் வளர்புகழ் !*



# நச்சினார்க்கினியர் உரையுள் அச்சுப்பிழை நீக்கம் முதலியன

எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரை கடந்த 150 ஆண்டுகளாகப் பலரால் அச்சில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பதிப்பாசிரியர்கள் முறையாக நன்மாணாக்கருக்குப் பாடம் சொல்லும் வாய்ப்பினைப் பெற்றிருந்தாராயின், ஏடு எழுது வோரால் நிகழ்ந்திருக்கக்கூடிய பல பிழைகளை நீக்கிப் பதிப்பித்திருக்கலாம்; ஏடுகளில் காணப்படும் செய்திகளைத் தாமே மாற்றக்கூடாது என்ற உயரிய எண்ணத்தால் ஒருகால் பிழையெனத் தெரிந்தவற்றையும் மாற்றாமல் பதிப்பித் திருக்கலாம்; திருத்தங்களை அடிக்குறிப்பில் காட்டி யிருக்கலாம். பிற்காலப் பதிப்புக்களில் காணப்படும் அடிக்குறிப்புக்கள் எல்லாம் நச்சினார்க்கினியர் உரை பற்றிப் பதிப்பாசிரியர்கள்கொண்டுள்ளகருத்துக்களின்விளக்கமாகவே பெரும்பான்மையும் உள்ளன. நச்சினார்க்கினியர் உரை நயத்தினை விளக்கப் பயன்படுத்தப்பட்ட அடிக்குறிப்புக்கள் மிகச்சிலவே உள.

நச்சினார்க்கினியர் தொல்காப்பிய எழுத்ததிகாரத்துக்கு எழுதியுள்ள உரையில் சுவடிகளில் பொறித்தவர்களால் நிகழ்ந்திருக்கக்கூடிய பிழைகளாக நாம் கருதுவனவாய்த் திருத்தப்படவேண்டிய செய்திகளை எல்லாம் ஈண்டுத் தொகுத்துக் காண்போம்.

### *1. சிறப்புப் பாயிரம்*

முதல் எடுத்துக்காட்டு நூற்பா '***அனையன் நல்லோன்***' என்பது.

அடுத்த எடுத்துக்காட்டு '***அனையன் அல்லோன்***' என்பது.

சந்தி சேர்த்து எழுதினால் அனையன்+நல்லோன் என்பதும், அனையன்+அல்லோன் என்பதும் **அனைய னல்லோன்** என்றே புணரும் ஆதலின் பொருள் தெளிவு கருதி, அனையன் நல்லோன் எனவும் அனையன் அல்லோன் எனவும் பிரித்துப் பதிப்பித்தலே ஏற்றது.

'அனையன் **நல்லோன்** கேட்குவன் ஆயின்
வினையின் உழப்பொடு பயன்தலைப் **படாஅன்**'

தான் பாடம் பயிறலிடத்துக் கொண்ட முயற்சியால் நற்பயன் அடைவான் என்ற பொருள்தரும் இந்நூற்பாவின் இரண்டாம் அடி இறுதிச்சீராகிய 'படாஅன்' என்பது எதிர்மறைப் பொருளையே தருவதால், அதனை விடுத்துப் '**படுவான்**' என்ற உடன்பாட்டுச் சொல்லைக் கோடலே ஏற்றது.

***2.***

'தென் புலத்தார்க்கு வேண்டுவன செய்வார் தெற்கும் மேற்கும் **நோக்கியும்** கருமங்கள் செய்வார் ஆதலின் தென்திசையைப் பிற்கூறினார்.'

'நோக்கியும்' என்ற சொல்லில் உள்ள உம்மை யாதொரு பொருளும் தாராது வாளா இருத்தலின், அவ்வும்மையை நீக்கி, தெற்கும் மேற்கும் **நோக்கி** - என்றே கோடல் ஏற்றது.

***3.***

'முற்கு வீளை இலதை முதலியன **பொருள் உணர்த்தினவேனும்** எழுத்தாகாமையானும்'

முற்கு முதலியன எல்லா இடத்தும் பொருள் உணர்த்துவன அல்ல. அவை ஒரோவழியே பொருள் உணர்த்துதல் கூடும். ஆதலின் முற்கு வீளை இலதை முதலியன **ஒரோவழிப் பொருள் உணர்த்தினவேனும்** - என்று இருத்தலே ஏற்புடையது. முற்கு, வீளை முதலியன எழுத்தினான் ஆக்கப்படாமையின் சொல்ஆகா. (சொல். 1. நச்.)

**4.**

தொல்காப்பியனார் வருமொழி முதலில் உயிரெழுத்து வந்தால் நிலைமொழியாக நிற்கும் ஒரு என்பது ஓர் எனத் திரிந்து புணரும் செய்தியை,

'அதனிலை உயிர்க்கும் யாவரு காலை
முதனிலை ஒகரம் ஓவா கும்மே
ரகரத்து உகரம் துவரக் கெடுமே' (எழு. 479)

என்று கூறினார் ஆதலின், தொல்காப்பியத்துக்கு வரையப்பட்ட உரைகளிலாயினும் இம்மரபு நெகிழ்க்கப் படாமல் பின்பற்றப்பட வேண்டும். அவ்வுரை வரைந்த பெருமக்கள் இந்நூற்பாவைத் தம்மனத்துக் கொண்டே உரை எழுதியிருப்பர். ஆதலின் இப்பொழுது அச்சிடப்பட்ட தொல்காப்பிய உரைகளில், வருமொழி உயிர்மெய்யில் தொடங்கிய இடத்தும் நிலைமொழி ஒரு என்பதனை ஓர் எனத் திரித்துப் புணர்க்கும் தவறு யாண்டும் நீக்கப்படல் வேண்டும்.

***இயங்குவதோர் தன்மை*** என்பது ***இயங்குவதொரு தன்மை*** என்றே இருத்தல்வேண்டும். பிறவும் இவ்வாறே திருத்திக்கொள்ளப்படும்.

**5.**

இனிப் பொருள் என்றது யாதனை எனின், சொற்றொடர் கருவியாக உணரப்படும் ***அறம் பொருள் இன்பமும் அவற்றது நிலையும் நிலையாமையும் ஆகிய*** அறுவகைப் பொருளுமாம். அவை பொருளதிகாரத்துட் கூறுதும்.

***அறம் பொருள் இன்பம், அவற்றது நிலை, நிலையாமை***-இவற்றை ஐந்தாகவாவது ஒன்பதாகவாவது எண்ணல்வேண்டும். இவற்றை ஆறாக எண்ணுவதற்கு ***அறம் பொருள் இன்பம் என்பவற்றது நிலையும், நிலையாமையும் ஆகிய*** அறுவகைப் பொருளுமாம் - என்றிருத்தலே ஏற்றது.

***அவை*** பொருளதிகாரத்துட் கூறுதும் என்ற தொடர், ***அதனை*** அல்லது ***அவற்றைப்*** பொருளதிகாரத்துட் கூறுதும்-என்றிருப்பின் சிறப்பாக இருக்கும். ***அவை*** பொருளதிகாரத்துட் கூறப்படும்-என்றிருப்பினும் நன்று.

***6.***

*அரசர் பதினெண்மரையும்* ***பதினெண்கோடி வேளிர்*** *உள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டுபோந்து-*

பொருளதிகாரம் 32ஆம் நூற்பா உரைப் பாயிரத்தில், நச்சினார்க்கினியர், "மலையமாதவன் நிலம் கடந்த நெடுமுடி அண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் ***குடிப்பிறந்த*** வேளிர்க்கும் வேந்தன்தொழில் உரித்து என்கின்றது" என்று குறிப்பிட்டது கொண்டும், புறநானூறு 210ஆம் பாடலின் ஐயர் அவர்கள் வரைந்துள்ள அடிக்குறிப்பினைக்கொண்டும், 'பதினெண்கோடி வேளிர்' என்ற தொடரைப் '***பதினெண்குடி வேளிர்***' என்று திருத்திக்கொள்ளவேண்டும்.

***7.***

*முற்கூறிய நூல்கள் போல* ***எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் மயங்கக் கூறாது வேறோர் அதிகாரமாகக்*** *கூறினார் என்றற்கு 'எழுத்துமுறை காட்டி' என்றார்.*

முற்கூறிய நூல்கள்போல ***எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் பொருளிலக்கணமும்*** மயங்கக் கூறாது ***வெவ்வேறு*** அதிகாரமாகக் கூறினார் என்றற்கு 'எழுத்துமுறை காட்டி' என்றார்-என்றிருத்தல்வேண்டும். காரணம் வெளிப்படை.

***8.***

*அகத்தியனாரைச் சபித்த* ***பெருந்தன்மையும்......***

இது பொருள்பொருத்த முறுவதாகத் தோன்றவில்லை. இஃது *அகத்தியனாரைச் சபித்த* ***பெருந்தவத்தன்மையும்-***

எனப் பெருமை தவத்திற்கு அடைமொழியாக வருதலே ஏற்றது.

*9.*

‘***அரில் தபத் தெரிந்து***’ எனவே கேட்டோரும், ‘***தன்பெயர் தோற்றி***’ எனவே ஆக்கியோன் பெயரும், நூற்பெயரும் பெறப்பட்டன.

மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்று என்பதனை உட்கொண்டு எதனையும் தெளிவாகக் குறிப்பிடும் ஆசிரியர் நச்சினார்க்கினியர், ‘***அதங்கோட்டாசாற்கு அரில்தபத் தெரிந்து***’ எனவே கேட்டோரும், ‘***தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி***’ எனவே ஆக்கியோன் பெயரும் நூற்பெயரும் பெறப்பட்டன-என்றே விளக்கம் வரைந்திருப்பார் ஆதலின், அவ்வாறு திருத்திக்கோடலே ஏற்றது.

*10.*

இவ்வாறன்றிப் பிறவாறு கண்ணழிவு கூறுவாரும் உளரால் எனின்-என்ற பெரிய வாக்கியத்தில் உள்ள ***நன்மக்கள் வழங்கும் செய்யுளும்*** என்பதனை ***நன்மக்கள் வழங்கும் வழக்கும் செய்யுளும்*** எனவும், கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டும் வழங்கும் தமிழ்மொழியினைக் ***கூறுவாரை நன்மக்கள்*** என்றார் என்று பொருள்தருதலானும் என்பதனைக் ***கூறுவாரையும் நன்மக்கள்*** . . . தருதலானும் எனவும், அங்ஙனம் ***கொடுந்தமிழ்கொண்டு*** இலக்கணம் செய்யக் கருதிய ஆசிரியர் என்பதனைக் ***கொடுந்தமிழும் கொண்டு*** . . . . ஆசிரியர் எனவும், ஓரிடத்து ‘வழக்கும்’ என்ற சொல்லையும், ஈரிடங்களில் கூறுவாரையும் கொடுந்தமிழும்-என உம்மையையும் இணைத்துத் திருத்தம் கொள்வதன் இன்றியமையாமையை ஓர்க.

இவ்வாசிரியர் செய்யுளியலிலும் மரபியலிலும் அந்நூல் செய்யும் இலக்கணமும் அதற்கு உரையும்

காண்டிகையும் கூறும் இலக்கணமும் ***கூறிய அதனையே*** ஈண்டுக் கூறினார் என்று உணர்க.

பின்னர்க் கூறப்பட்டதனை எடுத்து முன்னர் அதனையே என்று சுட்டுதல் பொருந்துவதன்று. ஆதலின், முதல்வன் நூல் செய்த முறைமையைப் பின்பற்றி, இவ்வாசிரியர் . . . . . ***கூறியதனையே*** ஈண்டும் கூறினார்-என்று, கூறியதனை என ஒருசொல்லாகக் கோடலே ஏற்றது. கூறிய அதனையே என்று பிரித்துப் பதிப்பித்தது பிழை.



## நூல்மரபு

***சூத்திரம் 1.*** எழுத்து ***இனைத்து*** என்றலும் . . . .

'எழுத்து ***இனைய*** என்றலும்' என்பதே ஏற்றது. அந்த வாக்கியத்தில் தொடர்ந்து எழுத்து என்பதனைப் பலவின்பாற்சொல்லாகக் கொண்டு, பெயரின முறையின என்றாற்போலப் பன்மை வினைகளொடு புணர்த்தலின், 'இனைய என்றலும்' - என்று திருத்துக.

அடுத்த பத்தியிலும் 'எழுத்து ***இனைத்து*** என்றலை' என்பதனை 'எழுத்து ***இனைய*** என்றலை' - என்று திருத்துக.

***எழுத்துக்களது*** குறைவும் கூட்டமும். . . ***திரிவதன் திரிபு அது*** என்றலும் . . . . . இன்னோரன்ன பலவுமாம்.

அதுஉருபு ஏற்ற பெயர் குறைவு கூட்டம் முதலிய பலவற்றோடு முடிதலின், ஒருமை உருபாகிய அது என்பதனைத் தொகுத்து இன்சாரியை புணர்த்து ***எழுத்துக்களின்*** குறைவும், கூட்டமும் . . . . எனவும்,

***திரிந்ததன் திரிபு அது*** என்றலே நச்சினார்க்கினியர் கருதும் தொடர்ஆதல், 458ஆம் நூற்பா உரையுள் "'அறு' என்னாது 'ஆறு' என்றார், திரிந்ததன் திரிபு அது என்னும் நயத்தால்" என்று குறிப்பிடுவதனால் உறுதி செய்யப்படும் ஆதலின், திரிவதன் திரிபு அது என்பதனைத் திரிந்ததன் திரிபு அது எனவும் திருத்துக.

நிலை - 'பன்னீருயிரும்' (59) 'உயிர்மெய் அல்லன' (60) 'உயிர்ஔ' (69) 'ஞண நமன' (78) ***என்பன. இவற்றான்*** மொழிக்கு முதலாம் எழுத்தும் ஈறாம் எழுத்தும் பெற்றாம்.

நிலை . . . . . என்பன- இந்த வாக்கியம் பொருள்தொடர்பற்று இருக்கிறது. இவற்றான் என்ற சுட்டு நன்கு சுட்ட இயலவில்லை ஆதலின், என்பனவற்றான் என்ற

சொற்றொடரே 'பன்னீருயிரும் ...... பெற்றாம்' என்ற ஒரே வாக்கியத்தில் செய்தியைத் தெளிவுற விளக்குதலின், என்பன எனவும் இவற்றான் எனவும் பிரித்தமை பிழை. '***என்பனவற்றான்***' என்ற ஒரே சொல்லாகக் கோடலே ஏற்றது.

*பிறிது என்றல், 'மகர இறுதி' (310) '**னகாரஈறு**' (332) என்பனவற்றான் பெற்றாம்,*

'***னகார இறுதி***' *(332)* என்பதே நூற்பாவின் தொடக்கம்.

*நிலையாது என்றல், நிலைமொழியது **ஈற்றுக் கணின்றும்** வருமொழியது **முதற்கணின்றும்** புணர்ச்சி தம்முள் இலவாதல்.*

அஃதாவது ஓரெழுத்து நிலைமொழியின் இறுதியில் இருந்தபோதிலும், ஓரெழுத்து வருமொழி முதலெழுத்தாக வந்தபோதிலும், இவை இரண்டும் அடுத்த அடுத்த எழுத்தாக இருந்தபோதிலும், எழுத்துப்புணர்ச்சியைப் பெற்றபோதிலும், பொருட்புணர்ச்சிக்கு உதவாது இருத்தல் என்பது. இந்த விளக்கம் புலப்படுவதற்கு இத்தொடர், நிலையாது என்றல் - நிலைமொழியது ***ஈற்றுக்கண் நின்றும்*** வருமொழியது ***முதற்கண் நின்றும் பொருட்புணர்ச்சி*** தம்முள் இலவாதல் - என்றிருத்தல் வேண்டும்.

*நிலையிற்றும் நிலையாதும் என்றல், 'குறியதன் முன்னர்' (226) என்பதனான் கூறிய அகரம் 'இராவென் கிளவிக்கு **அகரம் இல்லை**' (227) என்பதனால் பெற்றாம்.*

அகரம் எழுவாயாக முன்னர் வந்தமையின், இராவென் கிளவிக்கு ***இல்லை*** என்பதனால் பெற்றாம் - என்றிருத்தலே தெளிவு தருவதாம்.

*'எழுத்தெனப் **படுப**' எனத் தூக்கற்று நிற்கும் சொற்சீரடிக்கு .... இன்னோசைத்தாய் நிற்றலின் .......*

'எழுத்தெனப் ***படுவ***' எனத் தூக்கற்று நிற்கும் சொற்சீரடிக்கு - என்றிருத்தல் வேண்டும்.

ஐகார ஔகாரங்களுக்கு இனமாகிய குற்றெழுத்து ***இன்றேனும்*** . . . . .

குற்றெழுத்து **இலவேனும்** என்பதே பால்வழுவறப் பொருத்தமாம்.

இன்ன எழுத்திற்கு இன்ன வடிவெனப் பிறர்க்கு ***உணர்த்துதற்கு*** அரிது.

பிறர்க்கு ***உணர்த்துதல்*** அரிது - என்பதே திருந்திய பாடம்.

வெள்ளிடைக் கூறின் ***எல்லாத் திசையும் நீர்த்தரங்கமும் போல.***

நீர்அலைகள் எல்லாத்திசையிலும் பரவிக் காணப்படுவது போல, ஒலி அலைகள் எங்கும் கேட்கப்படும் ஆதலின், ***எல்லாத் திசையும் நீர்த்தரங்கம்போல***- என உம்மை இல்லாது கூறல்வேண்டும்.

***சூத்திரம் 2.*** எழுத்தியல் தழாஅ ஓசைகள் போலக் ***கொள்ளினும் கொள்ளற்க*** என்றற்கு 'எழுத்தேயாம்' என்றார்.

கொள்ளினும் கொள்ளற்க என்பது முதலிலே கொண்டாலும் பிறகு கொள்ளாதீர் என்பது. இது பொருள் பொருத்தமாகத் தோன்றவில்லை. எழுத்தியல் தழா ஓசைகள் போலத் ***தோன்றினும் அங்ஙனம் கொள்ளற்க*** என்றற்கு எழுத்தேயாம் என்றார் - என்றே இருத்தல்வேண்டும்.

***சூத்திரம் 3.*** சிலவற்றிற்கு ***அளவும்*** குறியும் உணர்த்துதல் நுதலிற்று.

அளவு - அளத்தல்; அளபு - மாத்திரை. ஆகலின் ***அளபும்*** குறியும்-என்பதே திருத்தமாம்.

அளவிற்பட்டு அமைந்தனவாம் குற்றெழுத்திற் குறுகி மெய் அரை மாத்திரை பெற்றதேனும் குற்றெழுத்து எனப் பெயர் பெறாதாயிற்று. *ஒரு மாத்திரை பெற்ற மெய் தனக்கு இனமாக இன்மையின், குற்றெழுத்து என்பது பண்புத்தொகை. தமக்கு இனமாயவற்றின்கண் அல்லது குறுமை நெடுமை கொள்ளப்படாமையின்.*

*தமக்கு இனமாயவற்றின்கண் அல்லது குறுமையும் நெடுமையும் கொள்ளப்படாமையின், ஒரு மாத்திரை அளவிற்பட்டு அமைந்தனவாம் . . . . . . பெறாதாயிற்று, ஒரு மாத்திரை . . . . . இன்மையின்.* குற்றெழுத்து என்பது பண்புத்தொகை - என்பதே நிறுத்தக்குறித் திருத்தம்.

'அவற்றுள்,
அ இ உ,
எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரளபு இசைக்கும் குற்றெழுத்தென்ப' -

என்பதே நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். முன்னடி இரண்டும் சொற்சீரடிகள்.

***சூத்திரம் 6.*** *இது மாத்திரை நீட்டுமாறு கூறுகின்றது - என்ற பாயிரம் விடுபட்டுள்ளது.*

குற்றியலிகரம் குற்றியலுகரங்கள் போல எழுத்தாம் தன்மை எய்தி ***அலகுபெறாது*** நிற்குமாறும் அச்சூத்திரத்தான் உணர்க.

அலகுபெறாது நிற்பது அளபெடையினுள்ள குற்றெழுத்தே ஆதலின், ***குறில் அலகுபெறாது*** நிற்குமாறும் . . . உணர்க - என்றே பாடம் இருத்தல்வேண்டும்.

'தூஉத் தீம்புகை ***தொல்விசும்பு' ' போர்த்ததுகொல்'***

'தூஉத் தீம்புகை ***தொல்விசும்பு போர்த்ததுகொல்'*** என்பதே பாடம்.

இவை அன்ன *அன்று* என உணர்க.

இவை அன்ன *அல்ல* என உணர்க - என்பதே திருத்தம்.

***சூத்திரம் 7.*** இக்கண்ணிமையினது பாகம் மெய்க்கும் சார்பின் தோற்றத்திற்கும், *இதன் பாகம் மகரக்குறுக்கத்திற்கும்* கொள்க.

*இதன் பாகம் ஒருசார்க் குற்றுகரத்திற்கும் மகரக்குறுக்கத்திற்கும்* கொள்க. - என்பதே நச்சினார்க்கினியர் திருவுள்ளமாகும். 409ஆம் நூற்பா வையும் 37ஆம் நூற்பா உரையையும் நோக்குக.

***சூத்திரம் 8.*** மெய் பதினெட்டனையும் இயக்கித் தான் அருவாய் *வடிவின்றி* நிற்றலின் உயிராயிற்று.

ஒலிவடிவில் உயிர் புலப்படுகிறது. வரிவடிவில்தான் உயிர் வடிவம் வெளிப்படையாகப் புலப்படவில்லை. ஆகவே, தான் அருவாய் *வரிவடிவின்றி* நிற்றலின் - என்பதே பாடமாகும்.

இறைவன் *ஒன்றேயாய்* நிற்கும் தன்மையும்...

இறைவன் *ஒருவனேயாய்* நிற்கும் தன்மையும் - என்பதே திருத்தமாம்.

'அகர முதல' *என்றவழியும்* மூவினங்களில் ஏறினவழியும் . . . . .

'அகர முத னகர' *என்றவழி* மூவினங்களில் ஏறினவழியும் - என்பதே திருந்திய பாடம்

***சூத்திரம் 9.*** முன்னர் னகர இறுவாய் என்புழி முப்பது எழுத்திற்கும் ஈறாம் என்றார், ஈண்டுப் *பதினெட்டெழுத்திற்கும்* ஈறாம் என்றார் ஆதலின் கூறியது கூறிற்றன்று.

ஈண்டுப் பதினெட்டெழுத்திற்கும் என்ற **உம்மை தேவை இன்று.**

***சூத்திரம் 10.*** இஃது உயிர்மெய்க்கு ***அளவு*** கூறுகின்றது.

அளபு என்பதே மாத்திரை ஆதலின் உயிர்மெய்க்கு ***அளபு*** கூறுகின்றது எனவும், பதவுரையில் ***அளபும்*** குறியும் எண்ணும் திரிந்து நில்லா எனவும் பாடம் கொள்க. இவ்வுரையில் அளவு என்று வருவனவற்றை அளபு என்றே திருத்திக்கொள்க.

***சூத்திரம் 11.*** மெய்யினது மாத்திரையினை ஒரோஒன்று *அரைமாத்திரை உடைய* என்று கூறுவர் புலவர்.

மெய்யினது மாத்திரையினை ஒரோஒன்று *அரைமாத்திரை* என்று கூறுவர் புலவர் - என்பதே திருத்தமாகும்.

***சூத்திரம் 12.*** சார்பின் தோற்றத்து மூன்றற்கும் ***அளவு*** கூறுகின்றது.

***அளபு*** கூறுகின்றது - என்பதே ஏற்றது.

***சூத்திரம் 13.*** 'அரை***அளவு*** குறுகல்' - 'அரை ***அளபு*** குறுகல்' என்பதே ஏற்றது.

*இது பிறன்கோட் கூறல் என்னும் உத்தி.*

இசைத்தமிழை உட்கொண்டு பேராசிரியர் 'பிறன்கோட் கூறல்' என்று கூறியது நச்சினார்க்கினியர் உரைக்கு ஏலாது. ஆதலின் 'இது பிறன்கோட் கூறல்' என்னும் உத்தி-என்பது பேராசிரியர் உரை பயின்றவரது ***இடைச்செருகல்.***

***சூத்திரம் 18.*** முன்நின்ற சூத்திரத்தான், மெய் முன்னர் நிற்ப உயிர் பின் வந்து ஏறும் என்றார்; *அம்முறையே* ஓசையும் பிறக்கும் என்றார்.

முன்நின்ற . . . ஏறும் என்றார்; ***இதனான் அம்முறையே*** . . . . . . என்றார் என்று கொள்க.

***சூத்திரம் 19.*** ஒழிந்த மெல்லெழுத்தையும் இடையெழுத்தையும் ***நோக்கித்*** தாம் வல்லென்று இசைத்தலானும் . . . . .

ஒழிந்த . . . ***நோக்கத்*** தாம் வல்லென்று இசைத்தலானும்- என்பதே ஏற்றது. இந்நுட்பத்தை நுனித்து உணர்க.

***சூத்திரம் 28.*** 'மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்.'

'***அவற்றுள்,*** மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்.'

ஒரு தொகுப்பிலிருந்து ஒன்றனைப் பிரித்துக் கூறுமிடத்து, 'அவற்றுள்' என்ற கூன் ஆசிரியரால் பயன்படுத்தப்படுகிறது. சூ. 24, 26 நோக்குக.

***சூத்திரம் 29.*** 'முதலா ***கெழுத்து*** ஙகரமொடு தோன்றும்'.

'முதலா ***கெழுத்தும்*** ஙகரமொடு தோன்றும்' - உரையை நோக்கி உம்மையை(ச் சந்தியுள் கெடினும்) விரித்து எழுதுக.

செய்யாறு, ***போர்யானை,*** வீழ்யானை . . . . . .

போர்யானை என்ற வேற்றுமைத்தொகை இருசொல் இணைந்தது. ஏனைய செய்யாறு, வீழ்யானை என்பன போல, ***பேர்யானை*** என வினைத்தொகையாகக் கொள்க.

வேய்ங்ஙனம், வேர்ங்ஙனம், ***வேழ்ங்ஙனம்*** - என மொழிக்கு முதலாகாத ஙகரம் இடைவந்த சொற்கள் அக்காலத்து வழங்கின என்று உணர்க, ஆசிரியர் ஓதுதலின்,

வேழ்ங்ஙனம் என்பதற்குப் பொருள் இன்று. அது ***வீழ்ங்ஙனம்*** என்றே இருத்தல்வேண்டும். வீழ்யானை என்ற எடுத்துக்காட்டையும் நோக்குக. இவைபோலப் பிற சொற்களும் இருக்குமாதலின், வேய்ங்ஙனம், வேர்ங்ஙனம், வீழ்ங்ஙனம் என்பன போல மொழிக்கு . . . . ஓதுதலின்-என்று கோடலே ஏற்புடைத்து.

***சூத்திரம் 32.*** 'ஆஏ ஓஅம் மூன்றும் வினா.'

'ஆஏ ஓஅம் மூன்றும் ***வினாஅ***' - என அளபெடுத்து நூற்பா அடியின் நான்காம் சீர் ஈரசைச் சீராக இருத்தல் வேண்டும். தொல்காப்பியத்தில் எந்த நூற்பாவின் எந்த அடியும் ஓரசைச் சீராக அமைக்கப்படவில்லை.

'கலிநிலை வகையும் வஞ்சியும் *பெறாஅ*' பொ. 422

'கூறிய மருங்கின் கொள்வழிக் *கொளாஅல்*' பொ. 307 முதலியன நோக்குக.

***சூத்திரம் 33.*** எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையை இறந்து ஒலிக்குமாறு கண்டு *அஃது* இறந்து ஒலிக்கும் இடம் கூறினார்.

***அவை*** இறந்து ஒலிக்கும் இடம் கூறினார் - என்பதே ஏற்புடையது.

'பிடியூட்டிப் *பின்னுண்ணுங்* களிறெனவும் உரைத்தனரே' என்புழி, ஙகர ஒற்று அளபிறந்தவாறு காண்க.

பிடியூட்டிப் *பின்னுண்ணுங்ங்* களிறெனவும் உரைத்தனரே (கலி. 11) என்புழி, ஙகர ஒற்று . . . . காண்க - என்றிருத்தல்வேண்டும்.



## மொழி மரபு

***சூத்திரம் 34.*** *குற்றியலிகரத்திற்கு* இடனும் பற்றுக்கோடும் கூறுகின்றது.

*ஒருமொழிக் குற்றியலிகரத்திற்கு* . . . . கூறுகின்றது - எனக்கொள்க.

***சூத்திரம் 35.*** 'புணரியல் *நிலையிடைக் குறுகலும்* உரித்தே' என்ற பதவுரையின் பதத்தைப் 'புணரியல் *நிலையிடையும் குறுகல்* உரித்தே' என்று கொள்க.

பதவுரை எழுதும்போது மொழிமாற்றிப் பின் அதனை விளக்கவுரையில் குறிப்பிடுதல் நச்சினார்க்கினியர் இயல்பு. இந்நூற்பா விளக்கத்தில், 'குறுகலும்' என்னும் இடத்து உம்மையை 'நிலையிடையும்' என மாறிக் கூட்டுக - என்று கூறியதனையும் நோக்குக. சூ. 66, 75, 77, 102, 479 முதலியவற்றின் உரைவிளக்கத்தை நோக்குக.

***சூத்திரம் 36.*** பெருமுரசு, திருமுரசு என்பன இருமொழிக்கண் வந்த *முற்றுகரம்.*

பண்புத்தொகையும் வினைத்தொகையும் 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' ஆதலின், அவற்றை ஒரு சொல்லாகவே கோடல் வேண்டும் என்று 24ஆம் நூற்பா உரையுள் குறிப்பிட்ட உரையாசிரியர் இங்குப் பண்புத் தொகையை இருமொழி என்றார். முரசு என்பது வடசொல்லாயின், அதனை, அடுத்துக் கூறிய இங்கு-ஏது-தாது-என்பனவற்றொடு கூறியிருப்பார். அங்ஙனம் கூறாமையின், முரசு நச்சினார்க்கினியர் கருத்தால் தமிழ்ச் சொல்லே. அவர் உள்ளப்படி நோக்கின், 'பெருமுரசு, திருமுரசு என்பனவும் *ஒருமொழிக்கண் வந்த குற்றுகரம்* என்றே இருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது.

***சூத்திரம் 37.*** குற்றியலுகரம் புணர்மொழிக்கண். . . . *குறுகி* வரும் என்கிறது.

குறுகி வருவன குற்றியலுகரங்களுள் சிலவே ஆதலின், ***குறுகியும்*** வரும் என்கின்றது - என்றே கொள்க.

இடனும் பற்றுக்கோடும் யாண்டுப் **பெறுவதெனின்**...

இடனும் பற்றுக்கோடும் யாண்டுப் ***பெறுவ எனின்*** - என்பதே பொருத்தமானது.

**சுக்குக்கோடு** - வருமொழியில் நெடில்முதல் வரின் நிலைமொழிஇறுதிக் குற்றியலுகரத்தின் ஒலி குறையவில்லை ஆதலின், வருமொழி குறில்முதல் ஆதலே ஏற்றது. ஆதலின், ***சுக்குக்கொடு*** என்பதே பொருத்தம்.

***சூத்திரம் 38.*** 'வல்லாறன் மிசைத்தே' ***என்றதனானும்,*** ஈண்டுப் 'புள்ளி' ***என்றதனானும்,*** ஆய்தத் தொடர்மொழி (406) என்று மேற்கூறுதலானும் ....

முக்கால நிகழ்ச்சிகளை எதிர்காலத்தால் கூறுதல் 'எழுத்தெனப் படுப' (1) என்றாற்போல ஆசிரியருக்கு இயல்பு ஆதலின், ஆசிரியர் கருத்தை உரைக்கும் நச்சினார்க்கினியர் உரையில் '***என்றதனானும்***' என்பன இரண்டும் ***என்பதனானும்*** என்றிருத்தலே ஏற்றது. 'என்றதனான்' என்பதனை வழுவமைதியாகக் கொள்க.

கஃறீது - முஃடீது - என்பனவற்றை மெய்பிறிதாகிய புணர்ச்சி என்றதனானும், ஈண்டுப் 'புள்ளி' என்றதனானும் ஆய்தமும் மெய் ஆயிற்று.

கஃறீது .... ***என்பனவற்றையும்*** .... ***என்பதனானும்,*** ஈண்டு .... ***என்பதனானும்*** ஆய்தமும் மெய் ஆயிற்று - எனக்கொள்க. மெய் பிறிதாகிய புணர்ச்சி பலவற்றுள் கஃறீது - முஃடீது - என்பன சில ஆதலின், என்பனவற்றை***யும்*** - என்ற உம்மை தேவை. என்பனவற்றையும் - என்றதனானும் - என எதிர்வும் இறப்பும் மயங்குதல் பொருந்தாமையின், ***என்பதனானும்*** என்ற சொல்லே யாண்டும் ஏற்றது. பிறாண்டும் பிறழ வந்தன வழுவமைதியாகக் கோடலுமாம்.

***சூத்திரம் 39.*** ஈண்டும் இடன் *குற்றெழுத்து* மேல்வரும் *வல்லெழுத்து.*

ஈண்டும் இடன் *குற்றெழுத்தும்* மேல்வரும் *வல்லெழுத்தும்* - என்றலே ஏற்றது. குற்றெழுத்து ஆய்தத்துக்கு முன்னர் உள்ளது; வல்லெழுத்து ஆய்தத்துக்குப் பின்னர் உள்ளது. ஆதலின் இரண்டனையும் உம்மையால் இணைத்தலே ஏற்றது.

***சூத்திரம் 40.*** '*கண்ண் டண்ணெனக்* கண்டும் கேட்டும்'

'*கண்ண் தண்ண்ணெனக்* கண்டும் கேட்டும்' என்பதே பாடம்.

***சூத்திரம் 43.*** ஔகாரம் உயிர்மெய்க்கண் அல்லது ***வராது.***

ஔகாரம் . . . . . . ***வாராது*** - என்பதே நேரிது.

***சூத்திரம் 44.*** உயிர்க்கண்ணும் ஏனை ***அகரமும் எகரமும்*** அக்கொற்றன் - எப்பொருள் - எனத் . . . . . . . 'நிறைபில' என்றார்.

உயிர்க்கண்ணும் *ஒகரம் ஒழிந்த* ஏனை *நான்கு குற்றுயிரும்* ***அக்கொற்றன்- இக்கொற்றன்-உக்கொற்றன்-*** *எப்பொருள்*-எனத் *தனித்து* . . . . . 'நிறைபில' என்றார்-என்றலே ஏற்றது.

***சூத்திரம் 45.*** **இது** முன்னர் . . . இச்சூத்திரத்தால் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றார்.

இச்சூத்திரத்தால் எனப் பின்னர் வருதலின், இது என்பது வெற்றெனத் தொடுத்தல் ஆதலின் நீக்கத்தக்கது.

***சூத்திரம் 46.*** *மூவகையால்* காட்சிப்பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும் . . . . .

*கையால்* காட்சிப்பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும்- என்பதே ஏற்றது.

*பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிது ஆகலானும் . . .*

*பிறர்க்கு* இவ்வாறு என்று உணர்த்துதல் அரிது ஆகலானும் - என்றே இருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 47.*** பதினெட்டுமெய்யும் **தன்மை** கூறுமிடத்து . . . . . .

பதினெட்டுமெய்யும் **தம்மைக்** கூறுமிடத்து என்றிருத்தலே ஏற்றது.

***சூத்திரம் 50.*** '*குரங்குளைப்* பொலிந்த கொய்சுவற் புரவி'

'*குரங்குளைப்* பொலிந்த கொய்சுவற் புரவி என்பதை உரை நோக்கி உணர்க.

***சூத்திரம் 53.*** *ஒற்றும் குற்றுகரமும்* ஈண்டு எழுத்துக்களொடு கூட்டி எண்ணப்பட்டு . . . .

*ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும்* ஈண்டு . . . . . எண்ணப் பட்டு- என்பதே பொருத்தம் என்பதனை இந்நூற்பாவின் விளக்கவுரை நோக்கி அறியலாம்.

***சூத்திரம் 57.*** '*அடைப்பையாய்* கோல்தா' எனவும், 'புனையிளங் *கொங்கையாய்* வரும்' எனவும் . . . . . .

இங்ஙனம் கொள்ளின், ஐகாரக் குறுக்கத்திற்கு இடமே இல்லை. '*அடைப்பையையாய்* கோல் தா' எனவும், 'புனையிளங் *கொங்கையையாய்* வரும்' எனவும்- எனக் கொண்டால்தான் ஐகாரக்குறுக்கத்தைக் குறிப்பிடும் இடம் உண்டாம். ஆதலின் இவையே பாடமாதற்கு ஏற்றன. (ஆண்டு ஐகாரம் அசை என்க.)

ஒளகாரம் 'கௌவை நீர் வேலி . . . . . கூற்று' எனத் தொடை நோக்கிக் குறுகினவாறும் காண்க.

*'கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை*
*வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோன் -*
*அவ்வேலே*
*அம்பிற் பிறழும் அவன்நெடுங்கண் ஆயிழைக்*
*கொம்பிற்கும் ஆயிற்றே கூற்று.'*

எனத் தொடைநோக்கிக் குறுகினவாறும் காண்க - என்று முழுப்பாடலோடு இருத்தல் வேண்டும். (கௌவை - கவ்வை)

***சூத்திரம் 60.*** இஃது ***உயிர்மெய்*** மொழிக்கு முதலாம் என்கின்றது.

இஃது ***உயிர்மெய்யே*** . . . .என்கின்றது - என்பதே நேரிது. விளக்கம் நோக்குக.

***சூத்திரம் 67.*** இஃது எழுத்துக்களை மொழிக்கு முதலாமாறு *கூறி முறையே* குற்றியலுகரம் மொழிக்கு முதலாமாறு கூறுகின்றது.

இஃது . . . . . ***கூறிய முறையே*** . . . . . கூறுகின்றது - என்பதே ஏற்றது.

இதனானே முறைப்பெயர் இடமும், நகரம் பற்றுக்கோடும் ***ஆயிற்று***.

இதனானே . . . . . ***ஆயின***- என்பதே பொருந்தும்.

***சூத்திரம் 68.*** 'இயல்' என்றதனான், இடமும் பற்றுக்கோடும் இரண்டற்கும் வேறுபாடு ***இன்று*** என்று கொள்க.

'இயல்' என்றதனான் . . . . . வேறுபாடு ***இல*** என்று கொள்க - என்பதே மிகவும் ஏற்கும்.

***சூத்திரம் 69.*** நெட்டெழுத்து ஏழும் *முதல் மொழியாம்* என்னும் துணையே முன் உணர்த்துதலின் ஈண்டு **அவை** ஈறாம் என்றும் உணர்த்தினார். நெட்டெழுத்து ஏழும் **மொழியாம்** .. . . . . ஈண்டு **அவையே** . . . . . . . உணர்த்தினார் - என்பதே பொருந்தும்.

***சூத்திரம் 75.*** இது சகார உகாரம் பல சொற்கு ஈறாய் வாராது *இருசொற்கு* ஈறாம் . . . . . . .

இது . . . . .*இருசொற்கே* ஈறாம் . . . . . . . எனக் கொள்க.

விளக்கவுரை நோக்குக.

***சூத்திரம் 76.*** இஃது ஒரு சொல் வரையறையும், அஃது ஓசை வேற்றுமையால் இருபொருள் தரும் ***எனவும்*** கூறுகின்றது.

உம்மையால் ஒரு பெயரொடு ஒரு பெயரே இணைக்கப்படல் வேண்டும் ஆதலின், இருபொருள் தரும் ***என்பதும்*** கூறுகின்றது - என்பதே நேரிது.

மறம்தப, துப்பா என எச்சமாயும் . . . . .

தபு என்பதன் எச்சத்தைக் குறித்தலின் மறம் தப, *தபா* - என்று கூறுவதே ஏற்றது.

***சூத்திரம் 77.*** மொழிக்கு ***ஈறாகாது*** என்ற உயிர் மெய்களும் . . . . .

மொழிக்கு ***ஈறாகா*** என்ற உயிர்மெய்களும் - என்பதே ஏற்றது.

***சூத்திரம் 82. மயங்காது*** என்று வரையறைப்பட்ட ணகர ஈற்றுத் தொடர்மொழி ஒன்பது . . . . .

***மயங்கா*** என்று . . . . ஒன்பது - என்பதே பொருந்துவது.

## பிறப்பியல்

***சூத்திரம் 83.*** புலப்பட வழங்குதலை உடைய

உடைய என்பதன் ஈற்றில் *அரைப்புள்ளி* இடுக.

***சூத்திரம் 88.*** ஒவ்வொரு *தானங்களுள்* பிறப்பனவற்றை .....

ஒவ்வொரு *தானத்துள்* பிறப்பனவற்றை - என்பதே ஏற்றது.

***சூத்திரம் 89.*** உரையுள், ககார ஙகாரம் ***முதல்நா அண்ணம்***

ககார ஙகாரம் ***முதல்நா முதல்அண்ணம்*** - என்பதே ஏற்றது. முதலை இண்டற்கும் கூட்டுக - என்ற விளக்கத்தை நோக்குக.

***சூத்திரம் 90.*** உரையுள், சகாரம் ஞகாரம் ***இடைநா அண்ணம்***

***இடைநா இடைஅண்ணம்*** - என்பதே ஏற்றது. விளக்கம் நோக்குக.

***சூத்திரம் 91.*** உரையுள், டகாரம் ணகாரம் ***நுனிநா அண்ணம்***

***நுனிநா நுனிஅண்ணம்*** - என்பதே ஏற்றது. விளக்கம் நோக்குக.

***சூத்திரம் 93.*** முன்னர் உறுப்புற்று அமைய என்றுகூறி, ஈண்டு 'மெய்யுற ஒற்ற' என்றார்.

முன்னர் 'உறுப்புற்று அமைய' (83) எனக் கூறி, ஈண்டு 'மெய்யுற ஒற்ற' என்றார் - என மேற்கோட் குறியும் நூற்பா எண்ணும் குறிப்பிடுதலே ஏற்றது.

***சூத்திரம் 94.*** அண்ணம் ஒற்ற - அண்ணத்தைத் ***தடவ***

அண்ணத்தை ***அழுந்தத் தடவ*** - என்றிருத்தலே ஏற்றது.

***சூத்திரம் 96.*** அண்ணம் ஒற்ற லகாரமாய் - அண்ணத்தை அந்நாத் ***தீண்ட*** லகாரமாயும்

அண்ணத்தை அந்நா ***அழுந்தத் தீண்ட*** லகாரமாயும் - என்றே இருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 101.*** ஆய்தம் ***தமக்குப்*** பொருந்தின நெஞ்சுவளியால் பிறக்கும்.

ஆய்தம் ***தனக்குப்....*** பிறக்கும் - என்பதே ஏற்றது.

***சூத்திரம் 102.*** 'மெய்தெரி வளியிசை ***அளவு*** நுவன் றிசினே'

'***அளபு*** நுவன் றிசினே' என்பதே ஏற்ற பாடம். **50ஆம்** நூற்பா விளக்கவுரை நோக்குக.

பதவுரையிலும் விளக்கவுரையிலும் 'மாத்திரை ***கூட்டிக்*** கோடலும்' என்று உள்ள தொடர், 'மாத்திரை ***கூறிக்*** கோடலும்' என்றிருப்பதே ஏற்றது என்பதனைப் பதவுரை நோக்கித் தெளிக.

'வேதத்***திற்கு*** உளது' என்று இவ்வாசிரியர் கூறி அம்மதம் பற்றி ***அவர் கொள்வதோர்*** பயன் இன்று.

'வேதத்***து*** உளது' என்று இவ்வாசிரியர் கூறி .... ***இவர் கொள்வதொரு*** பயன் இன்று - என்பதே பொருத்தமாம் என்பதனைப் பதவுரை நோக்கித் தெளிக.



## புணரியல்

**சூத்திரம் 103.** புணரியல் *என்று* இவ்வோத்திற்குப் பெயராயிற்று.

புணரியல் *என்பது* . . . . . பெயராயிற்று - என்பதே மிக ஏற்றது.

எழுத்து முப்பத்து மூன்றுமே, அங்ஙனம் ஈறும் முதலுமாய் *நிற்பது* என்று . . . எழுத்து . . . முதலுமாய் *நிற்ப* என்று - எனக் கொள்க.

**சூத்திரம் 104.** மெய்மொழிக்கு ஈறாயவை எல்லாம் புள்ளிபெற்று நிற்கும் என்றவாறு.

*மெய், மொழிக்கு* ஈறாயவை . . . . நிற்கும் - என்றே அமைதல் வேண்டும்.

*மரம் எனப் புள்ளி பெற்று* நின்றது.

*மரம் என மெய்யீறு* . . . . நின்றது - என்பதே தெளிவான கருத்து.

**சூத்திரம் 105.** இது முன்னர்ப் *புள்ளியீற்றுமுன் உயிர்தனித்து இயலாது* என்று மெய்க்கு எய்துவிக்கின்ற கருவியை . . . . .

இது, முன்னர்ப் ' புள்ளி. . . . . இயலாது' ***(138)*** என்று . . . . . . . கருவியை - என்று காற்புள்ளி, மேற்கோட்குறி, நூற்பாஎண் - என்பனவற்றோடு அமைதல் வேண்டும்.

**சூத்திரம் 106.** உம்மையான் இடைநின்ற உயிர்மெய்யும் *உயிரீற்றின்* இயல்பை உடைத்து . . . . . .

உம்மையான் . . . . . . உயிர்மெய்யும் *உயிரின்* இயல்பை உடைத்து - என்பதே ஏற்றது. ஈற்றினும் இடையினும் நின்றன

உயிருள் அடங்கும் எனவே, முதல் நின்றன மெய்யுள் அடங்கும் என்றார் - என்ற விளக்கம் நோக்குக.

**சூத்திரம் 107.** *ஒன்றினோடு* ஒன்று கூடும் நிலைமையாகிய கருத்தின்கண்...

'எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்' (198) என்பது தொல்காப்பிய மரபு ஆதலின், *ஒன்றனோடு* ஒன்று - என்பதே சிறந்தது.

நான்குவகையானும் கூடுங்கால் *இருமொழி அல்லது* புணர்ச்சியின்று.

நான்கு . . . . ***இருமொழிக்கண் அல்லது*** புணர்ச்சியின்று - என்பதே தெளிவு தருவதாம்.

**சூத்திரம் 108.** *வந்தான் போயினான்* என முறையே காண்க.

இது தொழிலொடு தொழிலைப் புணர்த்தற்கு எடுத்துக்காட்டு. வந்தான் என்பது வினையாலணையும் பெயரன்று, முற்றெச்சமே என்பதனைத் தெளிவாகக் குறிப்பிடுதற்குப் போயினான் என்ற வினைமுற்றின் பின்னர், 'அவைதாம், தத்தம் கிளவி அடுக்குந வரினும், எத்திறத் தானும் பெயர்முடி பினவே' (சொல்.429) என்ற விதிக்கு ஏற்ப, எழுவாய் வருதல் வேண்டும். வேண்டவே, இந்த எடுத்துக்காட்டு *வந்தான் போயினான் சாத்தன்* எனவே இருத்தல் வேண்டும்.

**சூத்திரம் 109. *அவைதாம்***

சென்ற நூற்பாவுள் மொழிபுணர் இயல்பு நான்கனுள் மூன்றனைப் பகுத்து எடுத்து விளக்குதலின் '***அவற்றுள்***' என்றிருத்தலே ஏற்றது. இதனை 'அவற்றுள்' என்று தொடங்கும் சூ. 3, 24, 26, 49 முதலியவற்றான் அறிக.

***சூத்திரம் 111.*** செவிக்கு *இனிதாக* .... மயங்குதல் இயன்ற சொற்களும் ...

செவிக்கு *இனியவாக* ... சொற்களும் - என்றிருத்தலே ஏற்றது.

'புள்ளியீற்று .... *இயலா*' எழு.183

'புள்ளியீற்று ... *இயலாது*' எழு.138 - என்றலே ஏற்புடைத்து.

***சூத்திரம் 112.*** புணர்ச்சி *இருவகைய.*

புணர்ச்சி *இரு வகைத்து* - என்றலே ஏற்றது.

இதற்குப் *பனைகுறைந்தது* என்பது பொருளாம்.

இதற்குப் *பனையும் குறைந்ததும்* என்பது பொருளாம் - என்றே இருத்தல் வேண்டும்.

இதற்குக் *கலம் குறைந்தது* என்பது பொருளாம்.

இதற்குக் *கலமும் குறைந்ததும்* என்பது பொருளாம் - என்றே இருத்தல் வேண்டும். 166 ஆம் நூற்பாவுரையை நோக்குக.

***சூத்திரம் 118.*** ஆடூஉவின் கை .... பொருள்நிலைக்கு *உதவி வந்தன.*

ஆடூஉவின் கை ..... *உதவாது* வந்தன. இவற்றான் பொருள்நிலை வேறுபாடு ஏதும் இன்று.

***சூத்திரம் 120.*** *இ:து ஒப்பக்கூறல் என்னும் உத்தி.*

*ஆகாரஈறு என்னாது...மா இலேசினான் கொள்ளப்பட்டது.*

இவை இரண்டு வாக்கியங்களும் இடைச்செருகல் என்பதை உரைவிளக்கம் நோக்கி உறுதிசெய்க. ஒப்பக்கூறல் என்பது பேராசிரியர் உரையை நோக்கி இடைச் செருகப்பட்டது. முன்னர்ப் பிறன்கோட்கூறல் (சூ.13) என்று இடைச்செருகிய- தனையும் நோக்குக. பொ.665 பேரா.உரை.

**சூத்திரம் 122.** இன்னும் இவற்றை அவை இவை உவை என நிறுத்தி...

இன்னும் என்ற சொல் தேவையின்றி இடைச் செருகப்பட்டது.

**சூத்திரம் 128.** தமிழக்கூத்து என்பதுவும் அக்கு ஈறு கெட்டவாறு காண்க.

தமிழக்கூத்து என்பதுவும் அக்கு ஈறும் ஈற்றயலும் கெட்டவாறு காண்க - என்றிருத்தல் வேண்டும். 'அக்கின் இறுதிமெய் மிசையொடும்' கெட்டமை காண்க.

**சூத்திரம் 129.** எல்லார்நங்கையும்

எல்லாம் என்பதே சொல் ஆதலின், எல்லாம்+நங்கையும் எல்லாநங்கையும் என்றே இருத்தல் வேண்டும். எல்லார் என்னும் படர்க்கைப்பெயர் நம் என்ற தன்மைச்சாரியையொடு சேராது.

**சூத்திரம் 130.** அம் ஈறு ஒருசார் இயல்பு கணத்து முன்னர்க் கெடும் என்கிறது - என ஒருசார் என்பதனை இணைக்க. இயல்பு கணங்களுள் உயிர்க் கணத்தை விலக்கியமையின் ஒருசார் என்ற சொல் இடையே தேவைப்படுதல் காண்க. இதனை விளக்கவுரையானும் உறுதிசெய்க.

புளியவிலை என உயிர் வரும்வழி ஈறு கெடுதலும்...

புளியவிலை என உயிர் வரும்வழி அம்மின் ஈறு கெடுதலும் - என்றிருத்தலே தெளிவாம்.

*புளியவிலை* என்றது 'ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு' (132) அன்று.

உரைவிளக்கத்தில் முதல்வரியைப் பார்க்க. இது பிழை என்பது வெளிப்படை.

புளியிலை என்பது ஒட்டுதற்குரிய ஒழுகிய வழக்கன்று என்பதுமாம் - என்றிருத்தல் வேண்டும்.

*அம்மு முழுவதும் கெட்டுவருதலின் உயிரை எடுத்தோதாராயினார்.*

இது முன்வரிகளின் கருத்தொடு முரணுகிறது. ஆதலின் இஃது ***அம்மு முழுவதும் கெட்டு வருதலும் உடைமையின்,*** உயிரை எடுத்தோதாராயினார் - என்றே இருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 131.*** *தழுவின்*

ஊகார ஈற்றுக்கு எடுத்துக்காட்டு ஆதலின் *தழூவின்* - என்றே இருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 132.*** 'நிலாஎன் கிளவி அத்தொடு சிவணும்' *(228)* என விதித்த அத்து *நிலாக்கதிர், நிலாமுற்றம்* என்றவழிப் பெறாதாயிற்று. அஃது ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு அன்மையின்.

228 ஆம் நூற்பா உரையை நோக்கி, *நிலாஅக்கதிர், நிலாஅமுற்றம்* என அகரம் கொடுக்க (அத்துப்) பெறாதாயிற்று, அஃது ஒட்டுதற்குரிய வழக்கு அன்மையின். இவ்வாறு காற்புள்ளியும் முற்றுப்புள்ளியும் இடுக.

உடைமையும் இன்மையும் ஒடுவயின் *ஒத்தது.*

*ஒத்தன* என்பதே திருந்திய பாடம்.

***சூத்திரம் 133.*** மகரஈற்றிற்கு அத்தும் வகரஈற்றிற்கு வற்றும் வரும் என்பது *அச்சூத்திரங்களான்* பெற்றாம்.

இவை முறையே 185, 183 என்ற நூற்பாக்களைக் கொண்டு அமைவ ஆகலின் அச்சூத்திரங்களான் என்பது அவ்வச் சூத்திரங்களான் என்றே இருந்திருக்க வேண்டும்.

**சூத்திரம் 134.** இது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துகின்றது.

நூற்பாவில் தொகைபற்றிய குறிப்பு இன்மையின் 'தொகையும்' இடைச் செருகல் என நீக்கப்படல் வேண்டும்.

காரமும் கரமும் எடுத்துச் சொல்லியவழி . . .

காரமும் கரமும் அடுத்துச் சொல்லியவழி - என்றலே பொருத்தமாம்.

காரம் வடவெழுத்திற்கும் உரியது ஆகலானும் - எனத் திருத்துக.

**சூத்திரம் 135.** கரமும் கானும் நெட்டெழுத்துக்கு வருதல் இன்று.

வருதல் இல - என்பதே சிறந்த முடிபாகும்.

**சூத்திரம் 136.** இ:கான் ஒ:கான் என்பன பெருவழக்கு அன்று.

இ:கான் உ:கான் எ:கான் ஒ:கான் எனபன பெருவழக்கு அல்ல - என்றிருத்தலே ஏற்புடைத்து.

**சூத்திரம் 142.** பொன் எனவும்...செம்பு எனவும் குறிப்பான் உணரப்பட்டது.

பொன் எனவும்...செம்பு எனவும் குறிப்பான் உணரப்பட்டன என்பதே தெளிவான முடிவு.

## தொகைமரபு

**சூத்திரம் 143.** ஒரோ *ஓர் சூத்திரங்களான்* தொகுத்து முடிபுகூறினமையின். . .

*ஒரோஒரு சூத்திரத்தான்* - என்பதே ஏற்றது.

மரங்குறிது சிறிது தீது *பெரிது* - என அல்வழிக்கண் திரியுமாறு 'அல்வழி எல்லாம்' **(314)** என்பதனான் பெறுதுமேனும் . . . .

314ஆம் நூற்பாவுரையுள் மரம் பெரிது என்புழித் திரிபின்று என்பது ஆணைகூறல் என்னும் உத்தி - என்று நச்சினார்க்கினியர் கூறுதலின், மரங்குறிது சிறிது தீது பெரிது என்பனவற்றில், *பெரிது என்பது நீக்கப்படல் வேண்டும்.*

**சூத்திரம் 144.** அல்வழிக்கண் கெடுதல் *'அல்வழி எல்லாம்'* **(314)** *என்றதனான்* கொள்க.

அல்வழிக்கண் கெடுதல் *'அல்வழி எல்லாம்'* (314) *என்பதனுள்* ' எல்லாம்' என்றதனாற் கொள்க என்பதே பொருந்தும், 'அல்வழி எல்லாம் மெல்லெழுத் தாகும்' என்பது நூற்பா ஆகலின்.

உயிர்க்கணமாயின் ஒற்று இரட்டியும் உடம்படுமெய் பெற்றும் உயிர் ஏறியும் முடியும் கருவித்திரிபுகள் திரிபெனப்படா இவ்வியல்பின்*கண்* என்று உணர்க.

உயிர்க்கணமாயின் ....திரிபெனப்படா; இவ்வியல்பின் *கண்ண* என்று உணர்க-என்றே இருத்தல் வேண்டும். அப்பொழுதே பொருட்டெளிவு உண்டாம்.

**சூத்திரம் 145.** சிலவற்றிற்கு *அம்முடிபு விலக்கிப் பிறிதுவிதி எய்துவித்தது.*

விளக்கத்தில், உம்மை எதிர்மறை; எனவே உறழாமை வலியுடைத் தாயிற்று என்று நச்சினார்க்கினியர்

குறிப்பிடுவதனால், இந்நூற்பாவின் பாயிரம் சிலவற்றிற்கு *அம்முடிபுமேல் பிறிதுவிதி எய்துவித்தது* - என்றிருத்தலே பொருத்தம்.

***சூத்திரம் 151.*** நட **வா** முதலியன உயிர்ஈறும் புள்ளியீறும் தொழிற்படுத்துவன.

நட வாழ் முதலியன ..... தொழிற்படுத்துவன - என்றே இருத்தல் வேண்டும். புள்ளியீற்றுக்கு உதாரணம் வாழ் என்பது.

***சூத்திரம் 153.*** *வண்ணாரப் பெண்டிர்* - *இது மிக்கு முடிந்தது.*

வண்ணாரம் என்பது சொல் ஆதலின், இ:து *ஈறுகெட்டு மிக்கு முடிந்தது* - என்றே இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

உயர்திணைவினைச்சொல் இயல்பாயும் திரிந்தும் முடிவன எல்லாம் கொள்க. உண்டீர், சான்றீர், பார்ப்பீர் என ***முன்னிலைக்கண்ணும்*** ....

முன்னிலை விரவுவினை ஒருகால் உயர்திணையையும் ஒருகால் அஃறிணையையும் உணர்த்தும் இயல்பிற்று. சான்றீர் பார்ப்பீர் என்பன உயர்திணைப் பெயர்கள் ஆகலான், அவை கொண்டுமுடியும் முன்னிலை வினை உயர்திணை ஆகிறது. ஆகவே, உண்டீர் சான்றீர், உண்டீர் பார்ப்பீர் என ***உயர்திணையாகும் முன்னிலைக்கண்ணும்*** என்றிருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 155.*** ஈற்றெழுத்துக்களே *அஃறிணை ஆண்பாலும் பெண்பாலும்* ***உணர்த்திற்று*** எனல் வேண்டும்.

ஈற்றெழுத்துக்களே.... ***உணர்த்தின*** எனல் வேண்டும் - என்பதே நேரிது.

கிளந்த இறுதி *அஃறிணை* விரவுப்பெயர். *(எழு. 150)*

கிளந்த...விரவுப்பெயர் *(சொல். 152 ந.)* என்றிருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 157.*** நங்கையைக் கொணர்ந்தான் என்றவழி, இரண்டன் உருபு *தொகாதே நிற்றலும்......*

நங்கையைக் .... இரண்டன் உருபு *தொகாதே வல்லொற்று மிக்கு நிற்றலும்* - என்பதே ஏற்றது.

'*அவர்க்கண்டு* எம்முள்' ......

'*அவற்கண்டு* எம்முள்' *(அகநா.48)* என்றே இருத்தல் வேண்டும்.

'எற்கண்டு பெயருங் காலை யாழநின்

கற்கெழு சிறுகுடி'

'நப்புணர் வில்லா நயனில்லோர் நட்பு'

'எற்கண்டு ....சிறுகுடி' *அகநா.318*

'நப்புணர்வு ... நட்பு' *நற்.165* எனப் பாட்டடி இடம் சுட்டப்பெறல் சிறப்புடைத்து.

வில்கோள் விற்கோள் *என வரும்.*

வில்கோள் விற்கோள் *என உறழ்ந்து* வரும் - என்பதே நேரிது.

வினையொடு முடிவுழித் *திரிதல்* கொள்க.

வினையொடு முடிவுழிப் *பெரும்பான்மை திரியாமை* கொள்க - என்று அடுத்து வரும் எடுத்துக்காட்டுக்களை நோக்க இருத்தல் வேண்டும் என்பது தெளிவு.

***சூத்திரம் 159.*** சொல் இயல் மருங்கின் - இகர ஐகாரங்களுக்கு முன்னர்க் கூறிய மூவகை இலக்கணங்களுள் *இயல்பை நீக்கி......*

*இலக்கணங்களுள் இயல்பை நீக்கிச் சொல்லுமிடத்து* - என்று பதவுரை இருத்தல் வேண்டும்.

**சூத்திரம் 160.** ஒற்று இரட்டுவன *ஞகார நகார ழகாரம் ஒழிந்தன.*

ஒற்று இரட்டுவன *ஞகார நகார ரகார ழகாரம் ஒழிந்தன* - என்றிருக்க வேண்டும்.

*ரகாரம் குற்றொற்றாக யாண்டும் வாராது. 'ரகார ழகாரம் குற்றொற் றாகா' (49) என்பது நோக்குக.*

இனி, 'அறிய' என்றதனான், தேன்றீது நாண்டீது என்றாற் போல்வன *கெடாமை நிற்றலும் கெடுதலும்* தகர நகரங்கள் வந்துழி என்பதூஉம் கொள்க.

இனி, 'அறிய' என்றதனான், தேன்றீது . . . . . *கெடாமை நிற்றலும்,* தேனன்மை நாணன்மை என்றாற் போல்வன **கெடுதலும்**...கொள்க - என்றே இருத்தல் வேண்டும். கெடாமைக்கு எடுத்துக்காட்டுத் தந்தவர், கெடுதலுக்கும் எடுத்துக்காட்டுத் தந்திருப்பார் என்பது உணரப்படும்.

**சூத்திரம் 163.** இது முதலாக அல்வழி கூறுகின்றார்.

*இச்சூத்திரம்* முதலாக என்றிருப்பின் தெளிவாம். 22ஆம் நூற்பாவின் விளக்கத்தை நோக்குக.

**சூத்திரம் 166.** உரிக்குறை *கலக்குறை*

'அத்திடை வரூஉம் கலமென் அளவே' (168) என அடுத்து வருதலின், நச்சினார்க்கினியர் கலக்குறை என்ற எடுத்துக்காட்டுத் தந்திருக்கமாட்டார்; *அகற்குறை* என்றாற்போன்ற எடுத்துக்காட்டே தந்திருப்பார்.

*உரிய* நெல்லும் குறைநெல்லும்

*உரிநெல்லும்* குறைநெல்லும் - என்பதே ஏற்றது. சூ.240 விரிவுரையை நோக்குக.

இவை வேற்றுமை *அன்றாயின.*

இவை வேற்றுமை *அல்ல ஆயின* - என்பதே ஏற்றது.

***சூத்திரம் 167.*** 'குற்றிய லுகரக்கு இன்னே சாரியை'

விளக்கவுரையில் ' இதற்கு அத்து விதித்து முடிக்க' என்று கூறலின் '*குற்றிய லுகரத்து* இன்னே சாரியை' என்பதே நச்சினார்க்கினியர் கொண்ட பாடம்.

'*குற்றிய லுகரத்து* இன்னே சாரியை' என்பதும் பாடம்.

'*குற்றிய லுகரக்கு* இன்னே சாரியை' என்பதும் பாடம் - என்றிருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 168.*** சாரியை முற்கூறிய அதனானே, முன் *இன்சாரியை பெற்றவழி* வல்லெழுத்து வீழ்க்க.

சாரியை . . . . ***இன்சாரியை கலம் பெற்றவழி*** வல்லெழுத்து வீழ்க்க என்றே தெளிவு கருதி எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 170.*** அளவிற்கும் நிறைக்கும் மொழிக்கு முதலாம் எழுத்து ***இனைத்து*** என்கின்றது.

அளவிற்கும் . . . . . . எழுத்து ***இனைய*** என்கின்றது - என்றலே ஏற்றது, எழுத்துக்கள் ஒன்பது ஆகலின்.

***சூத்திரம் 171.*** கொல்லுகொற்றா - கொல்லுக்கொற்றா . . . . . . . முன்னிலைக் கிளவி உகரம் ***பெற்றும் உறழ்ந்தும்*** முடிந்தன.

இத்தொடரில், உறழ்ந்தும் என்பது பெற்றும் பெறாதும் என்ற பொருள் தருதலின் முன்னிலைக் கிளவி உகரம் பெற்று ***உறழ்ந்து*** முடிந்தன - என்பதே ஏற்றது.

**சூத்திரம் 172.** பலர் அறி சொல்முன் - பலரை அறியும் *அவர் என்னும் சொல்லின் முன்னர்;* ஏனை ஒன்று அறிசொல்முன் - ஒழிந்த ஒன்றனை அறியும் *அது என்னும் சொல்லின் முன்னர்.*

சொல்.164 ந. 165 ந. என்ற நூற்பாக்களை நோக்க, *அவர் முதலிய சொல்லின் முன்னர் - அது முதலிய சொல்லின் முன்னர்* - என்றிருத்தலே ஏற்றது.

இன்னும் இதனானே யாரவர் *யாவதது* - என இவ்விரு சொல்லும் நிலைமொழியாய் வருதலும் கொள்க.

நூற்பாவுள் யார் யாது என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு கூறுதலின் யாரவர் என்பது போல, *யாதது* என ' யாது' நிலைமொழியாய் வருதலே கூறப்பட்டிருத்தல் வேண்டும்.



## உருபியல்

***சூத்திரம் 173.*** அக்கூற்று *ஆறினையும்*

அக்கூற்று ***ஆறனையும்*** - என்றே இருத்தல் வேண்டும். முன்னர் சூ.107 க்கு எழுதிய குறிப்புக் காண்க.

***சூத்திரம் 174.*** பல்லவற்றை பலவற்றை **சில்லவற்றை** சிலவற்றை . . . .

'பல்ல பலசில என்னும் பெயரும்' (சொல்.170 ந.) என்ற நூற்பாவை நோக்க, சில்ல என்ற சொல்லை ஆசிரியர் குறிப்பிடாமையின் *சில்லவற்றை சில்லவற்றொடு* என்ற எடுத்துக்காட்டுக்கள் நீக்கப்படல் வேண்டும்.

***சூத்திரம் 178.*** 'ஆயியல் திரியாது என்மனார் புலவர்' -

பதவுரை அச்சிடும்போது 'என்மனார் புலவர்' என்பது விடுபட்டுள்ளது.

***சூத்திரம் 179.*** *நின்* என்பது வேறொரு பெயரோ எனக் கருதுதலை விலக்குதற்கு 'ஒருபெயர்' என்றார்.

*நின்* என்பது *நீ* என்பதன் வேறொரு பெயரோ . . . . . என்றார் - என்றிருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 180.*** *'ஒன்றாக நின்ற கோவினை அடர்க்க வந்த'*

*'ஒன்றாது நின்ற கோவினை அடர்க்க வந்து'* (சீவக.316) என்பதே பாடமாதல் அறிக.

***சூத்திரம் 184.*** பெயர்க்கே அன்றி உரிச்சொல் *வகரத்திற்*கு முடிபு கூறுதலின்.

பெயர்க்கே அன்றிப் *படுத்தல் ஓசையான் பெயராகிய உரிச்சொல் வகரத்திற்கும்* முடிபு கூறுதலின் - என்றிருத்தல் வேண்டும். இஃது உரிச்சொல் ஆயினும் படுத்தல்ஓசையான் பெயராயிற்று - என்று இந்நூற்பா உரையின் இறுதியில் உள்ள விளக்கத்தை நோக்குக.

***சூத்திரம் 186.*** *மார் அசை.*

***ஆர் அசை.*** *'அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்'* *(சொல்.273 நச்.)* என்பதனை நோக்குக.

***சூத்திரம் 187.*** வல்லெழுத்து முதலிய என்பதனான்...

'வல்லெழுத்து முதலிய' *(114)* என்பதனான் - என்றிருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 188.*** 'மெய்' என்றதனான் பிறவயின் மெய்யும் கெடுக்க. தங்கண் நங்கண் .......

'மெய்' என்றதனான் *'கண்' வரின்* பிறவயின் மெய்யும் கெடுக்க.

அடுத்து வரும் தொடரை நோக்கிக் ***'கண் வரின்'*** என்ற தொடர் ஈண்டு இடையே இருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 190.*** எல்லாநம்மையும் ...... என உகரம் பெற்றும், எல்லாநம்மொடும் ..... என உகரம் கெட்டும் மகரம் நிற்கும். இவற்றிற்கு *எல்லாரையும் எல்லாரொடும் என்பது* பொருளாக ஒட்டுக.

எல்லா ...... மகரம் நிற்கும். இவற்றிற்கு *நம் எல்லாரையும் - நம் எல்லாரொடும் - முதலாயின* பொருளாக ஒட்டுக - என்பதே பொருள். இவை உளப்பாட்டுத் தன்மைப் பெயர்களாம். எல்லாரையும் முதலியன படர்க்கை. அவை நம்முச் சாரியை ஏலா.

***சூத்திரம் 192.*** *'நெடியதன் முன்னர்'* எனபதனுள் . . . . .

*160* என நூற்பா எண் இணைக்க.

***சூத்திரம் 193.*** *எவற்றை எவற்றொடு என முடிக்க. எல்லா உருபினொடும் ஒட்டுக.*

*எவற்றை எவற்றொடு என முடித்ததனை எல்லா உருபினொடும் ஒட்டுக* - என்றே இருத்தல் வேண்டும்.

***சூத்திரம் 202.*** ஈற்றுப் பொருள் முடிபு உள்வழிப் பொருட்புணர்ச்சிக்கும் கொள்க.

ஈற்றுப் பொதுமுடிபு உள்வழி...கொள்க - என்பதே பொருத்தமாம்.

உருபுபுணர்ச்சி, பொருட்புணர்ச்சி இரண்டற்கும் முடிபு பொதுவாக உள்ளவழி, உருபிற்குக் கூறியன பொருட்புணர்ச்சிக்கும் ஒக்கும் என்பது கருத்தாகக் கொள்க.

புறத்து ஓத்துக்கள் ஆறும் முற்றும்.

இனி அகத்து ஓத்துக்கள் மூன்றனையும் நோக்குவோம். (அடுத்த பகுதியும் காண்க.)



**தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்**

# இளம்பூரணம்

# சிறப்புப் பாயிரம்

வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலம்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலம்தரு திருவின் பாண்டியன் அவையத்து
அறம்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியன்எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே

*என்பது என் நுதலிற்றோ எனின், சிறப்புப் பாயிரம் உணர்த்துதல் நுதலிற்று. எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க என்பது மரபு; என்னை?*

[1] 'ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே'

*என்ப ஆகலின்.*

[2] *பாயிரம் என்பது புறவுரை. அது நூற்குப் புறவுரையேல், அது கேட்டு என்னை பயன் எனின், கற்று வல்ல கணவற்குக் கற்புடையாள் போல இன்றியமையாச்*

சிறப்பிற்றாயும், திரு அமைந்த மாநகரத்திற்கு உரு அமைந்த வாயில்மாடம் போல அலங்காரமாதல் சிறப்பிற்றாயும் வருதலானும், [3] பாயிரம் கேளாதே நூல் கேட்குமே எனில், குறிச்சி புக்க மான் போல மாணாக்கன் இடர்ப்படும் ஆகலானும், பாயிரம் கேட்டல் பயனுடைத்தாயிற்று.

அப்பாயிரம் பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. எல்லா நூல்முகத்தும் பொதுவாக உரைக்கப்படுதலின் பொது எனப்பட்டது. ஈவோன் தன்மை முதலிய நூலுள் சொல்லும் பொருள்அல்லாத புறப்பொருளைக் கூறும் பொதுப்பாயிரம் போலாது, நூலகத்து எல்லாம் பயத்தல்மாத்திரையே அன்றி, அந்நூலிற் சொல்லப்படுகின்ற பொருள் முதலியன உணர்த்தி, [4]அணியிழை மகளிர்க்கு அவ்வணியின் சிறந்த ஆடை போல, நூற்குச் சிறத்தலான்சிறப்பு எனப்பட்டது.

அவற்றுள், பொது நால்வகைத்து.

**[5]'ஈவோன் தன்மை ஈதல் இயற்கை**
**கொள்வோன் தன்மை கோடல் மரபென**
**ஈரிரண்டு என்ப பொதுவின் தொகையே.'**

இதனான் அறிக.

ஈவோர், கற்கப்படுவோரும் கற்கப்படாதோரும் என இருவகையர். கற்கப்படுவோர் நான்கு திறத்தான் உவமம் கூறப்படுவர்:

**'மலைநிலம் பூவே துலாக்கோல்என் றின்னர்**
**உலைவில் உணர்வுடை யோர்.'**

இதனான் அறிக.

இனி, கற்கப்படாதார்க்குக் கூறும் உவமமும் நால்வகைத்து:

**'கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு**
**பருத்திக் குண்டிகை இவைஎன மொழிப.'**

இதனான் அறிக.

ஈதல் இயற்கை,

[6] 'ஈதல் இயல்பே இயல்புறக் கிளப்பின்
பொழிப்பே அகலம் நுட்பம் எச்சம்எனப்
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியின் புகழ்ந்த நாளின்
தெளிந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்
கொள்வோன்உணர்வகை அறிந்து அவன் கொள்வரக்
கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்.'

இதனான் அறிக.

கொள்வோர், கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படா தோரும் என இருவகையர். கற்பிக்கப்படுவோர் அறுவகையர். அவர்தாம்,

[7] 'தன்மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளனோடு இவரென மொழிப.'

இதனான் அறிக.

இவர் தன்மை,

[8] 'அன்னம் கிளியே நன்னிறம் நெய்யரி
யானை ஆனேறு என்றிவை போலக்
கூறிக் கொள்ப குணமாண் டோரே.'

இதனான் அறிக.

இனி, கற்பிக்கப்படாதோர் எண்வகையர்:

[9]மடிமானி பொச்சாப்பன் காமுகன் கள்வன்
அடுநோய்ப் பிணியாளன் ஆறாச் சினத்தன்
தடுமாறு நெஞ்சத் தவன்உள்ளிட்டு எண்மர்
நெடுநூலைக் கற்கலா தார்.'

இதனான் அறிக.

*இவர் தன்மை,*

[10]'குரங்கெறி விளங்காய் எருமை யாடே
தோணி என்றாங்கு இவைஎன மொழிப.'

*இதனான் அறிக.*

*கோடல் மரபு,*

[11]'கொள்வோன் முறைமை கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலா னாகி அன்பொடு புணர்ந்தாங்கு
ஆசற உணர்ந்தோன் வாஎன வந்தாங்கு
இருஎன இருந்துஏடு அவிழ்என அவிழ்த்துச்
சொல்எனச் சொல்லிப் போஎனப் போகி
நெஞ்சுகள னாகச் செவிவா யாகக்
கேட்டவை கேட்டவை வல்ல னாகிப்
போற்றிக் கோடல் அவனது தொழிலே.'

[12]'எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம்
அறத்தின் திரியாப் படர்ச்சிவழி பாடே.'

[13]'செவ்வன் தெரிகிற்பான் மெய்நோக்கிக்
காண்கிற்பான்
பல்லுரையும் கேட்பான் மிகப்பெரிதும் காதலான்
தெய்வத்தைப் போல மதிப்பான் திரிபில்லான்
இவ்வாறு மாண்பும் உடையார்க்கு உரைப்பவே
செவ்விதின் நூலைத் தெரிந்து.'

[14]'வழக்கின் இலக்கணம் இழுக்கின்று அறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்துஅவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை
கடனாக் கொளினே மடம்நனி இகக்கும்.'

[15]'அனையன் அல்லோன் கொள்குவ னாயின்
வினையின் உழப்பொடு பயன்தலைப் படாஅன்.'

இவற்றான் அறிக.

இவ்வாறு கோடல்மரபுடைய மாணாக்கன் நூல்முற்ற அறிந்தான் ஆமாறு:

[16]'ஆசான் உரைத்தவை அமைவரக் கொளினும்
காற்கூறு அல்லது பற்றலன் ஆகும்.'

[17]'அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்
செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத்து ஆகும்.'

இவற்றான் அறிக.

சிறப்புப் பதினொரு வகைத்து:

[18]'ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோடு ஆயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்து இயல்பே.'

[19]'காலம் களனே காரணம் என்றிம்
மூவகை ஏற்றி மொழிநரும் உளரே.'

இவற்றான் அறிக.

இனி, அச்சிறப்பு இலக்கணம் செப்புமாறு:

[20]'பாயிரத்து இலக்கணம் பகருங் காலை
நூல்நுதல் பொருளைத் தன்னகத்து அடக்கி
ஆசிரியத் தானும் வெண்பா வானும்
மருவிய வகையான் நுவறல் வேண்டும்.'

இதனான் அறிக.

நூல்செய்தான் பாயிரம் செய்வான்அல்லன்;

[21]**'தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்**
**தான்தற் புகழ்தல் தகுதி அன்றே'**

என்ப ஆகலின்.

பாயிரம் செய்வார், தன்ஆசிரியனும் தன்னோடு ஒருங்கு கற்ற மாணாக்கனும் தன்மாணாக்கனும் என மூவகையர். அவருள் இந்நூற்குப் பாயிரம் செய்தார், தன்னோடு ஒருங்கு கற்ற பனம்பாரனார்.

**'வடவேங்கடம்....படிமையோனே'** என்பது:

வடக்கின்கண் உளதாகிய வேங்கடமும் தெற்கின்கண் உளதாகிய குமரியும் ஆகிய அவற்றை எல்லையாகவுடைய[22] நிலத்து வழங்கும் தமிழ்மொழியினைக் கூறும் நன்மக்களின் வழக்கும் செய்யுளும் ஆகிய இரு காரணத்தானும் எழுத்திலக்கணத்தினையும் சொல்லிலக்கணத்தினையும் பொருளிலக்கணத்தினையும் ஆராய்ந்து, அவ்வாராய்ச்சியிற் குறைபாடுடையவற்றிற்குச் செந்தமிழினது இயல்பு பொருந்தின செந்தமிழ் நிலத்து வழக்கொடு, முதல்நூல்களில் சொன்னவற்றினைக் கண்டு, அவ்விலக்கணங்களை முறைப்பட ஆராய்ந்து அவ்விலக்கணங்களைத் தொகுத்துக் கூறினான்;

யாண்டு எனின், நூற்குச் சொல்லப்படும் குற்றங்கள் அற்ற தன் நூலுள்ளே; யார் அவையத்து எனின், மாற்றாரது நிலத்தினைத் தன்கீழ் வாழ்வார்க்குக் கொண்டுகொடுக்கும் போர்த்திருவினையுடைய[23] பாண்டியன் மாகீர்த்தியது அவையின்கண்ணே;

அவ்வவையுள் யார்க்கு அரில் தபத் தெரிந்து எனின், அறமே சொல்லும் நாவினையுடைய நான்குவேதத்தினையும் முற்ற அறிந்த அதங்கோடு என்கின்ற ஊரின் ஆசானுக்குக் கடாஅறத் தெரிந்து கூறி;

அவ்வெழுத்தும் சொல்லும் செய்கின்றுழி, முன்னை நூல் போல எழுத்திலக்கணம் சொல்லுட் சென்று மயங்காத முறைமையானே, எழுத்திலக்கணத்தினை வேறு தெரிவித்து, அவ்வாறு செய்கின்றுழி, மிக்க நீரையுடைய கடலாகிய எல்லையையுடைய உலகின்கண்ணே, இந்திரனாற் செய்யப்பட்ட ஐந்திர- வியாகரணத்தினை நிறைய அறிந்த பழைய காப்பியக்குடியினுள்ளான் எனத் தன்பெயரைத் தோற்றுவித்து இவ்வாறு தொகுத்தான்;

அவன் யார் எனின், தவத்தான் வரும் பலபுகழ்களை உலகிலே நிறுத்தின தவ ஒழுக்கத்தினையுடையான் என்றவாறு.

வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி, முறைப்பட எண்ணி, பாண்டியன் அவையத்து அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து, எழுத்து முறை மயங்கா மரபின் காட்டி, தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி, பனுவலுள் புலம் தொகுத்தோன் படிமையோன் - எனக் கூட்டுக.

'வடவேங்கடம் தென்குமரி' எனவே, எல்லை பெறப்பட்டது. 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்' எனவே, நூல் நுதலியதூஉம் பயனும்[24] பெறப்பட்டன. 'முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி' எனவே, வழியும் யாப்பும் காரணமும் [25] பெறப்பட்டன. 'பாண்டியன் அவையத்து' எனவே, காலமும் களனும் பெறப்பட்டன. 'அதங்கோட்டாசாற்கு அரில்தபத் தெரிந்து' எனவே, கேட்போர்[26] பெறப்பட்டது. 'தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி' எனவே, ஆக்கியோன் பெயரும் நூற்பெயரும் பெறப்பட்டன.

மங்கலத்திசை ஆகலின் வடக்கு முற்கூறப்பட்டது. கடல் கொள்வதன் முன்பு பிறநாடும் உண்மையின் தெற்கும் எல்லை கூறப்பட்டது. கிழக்கும் மேற்கும் பிறநாடு இன்மையின் கூறப்படா ஆயின. பிற இரண்டு எல்லை கூறாது

இம்மலையும் யாறும் கூறியது, அவை தீர்த்தம்[27] ஆதலானும், கேடில ஆதலானும், எல்லாரானும் அறியப் படுதலானும் என்பது. இவை அகப்பாட்டு எல்லை. [28]

'ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்து' என்பது, அவ்வெல்லை தமிழ் கூறும் நல்லாசிரியரது [29] என்றவாறு. நல்லாசிரியர் அகத்தியனார் முதலாயினோர். உலகம் என்பது ஆசிரியரை. 'அவ்' என்றது, ஆகுபெயரான் அவற்றை எல்லையாகவுடைய நிலத்தினை. 'இடை' என்பது ஏழன்உருபு. 'முறைப்பட எண்ணி' என்றது, அம்முந் ல்களில் ஒன்றற்குரிய இலக்கணத்தினை ஒன்றன் இலக்கணத்தோடு ஆராய்ந்தாற்போல ஆராயாது, முறைப்பட ஆராய்ந்து என்றவாறு. மற்று நூல்செய்யும் இலக்கணம் எல்லாம் இந்நூலுட்படச் செய்தான்[30] என்பது இம் 'முறைப்பட எண்ணி' என்றதனான் கொள்க. அவை ஆமாறு :

[31]'ஒத்தே சூத்திரம் எனஇரு வகைய.'

[32]'நேர்இன மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்துஎன மொழிப உயர்மொழிப் புலவர்.'

[33]'நுட்பம் ஒட்பம் திட்பம் சொல்லிற்
சுருக்கம் கருத்துப் பகுதியொடு தொகைஇ
வருத்தம்இல் பொருட்பயன் நிகழ்ச்சி சூத்திரம்.'

[34]'பொதுவினும் சிறப்பினும் போற்றுங் காலைப்
பெறுதல் பெற்றவை காத்தல் காப்பொடு
பிறிதுபெற நிகழ்த்தல் அதன்கருத்து ஆகும்.'

[35]' அதுவே,
பிண்டம் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடை என்றின்ன விகற்பமோடு
ஒன்றிய குறியே ஒன்றும் என்ப.'

[36]'யாற்றது ஒழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்து வீழ்வுஎன்று
ஆவகை நான்கே கிடக்கை முறையே.'

[37]'பொழிப்பே அகலம் நுட்பம் எச்சம்எனப்
பழிப்பில் சூத்திரம் பன்னல் நான்கே..

[38]'அவற்றுள்,
பாடம் கண்ணழிவு உதாரணம் என்றிவை
நாடின் திரிபுஇல ஆகுதல் பொழிப்பே.'

[39]'தன்னூல் மருங்கினும் பிறநூல் மருங்கினும்
துன்னிய கடாவின் புறம்தோன்று விகற்பம்
பன்னிய அகலம் என்மனார் புலவர்.'

[40]'ஏதுவின் ஆங்கவை துடைத்தல் நுட்பம்.'

[41]'துடைத்துக்கொள் பொருளை எச்சம் என்ப.'

*இவற்றானும் பிறவற்றானும் அறிக.*

இனி, நூல்செய்தற்கு உரியானும் நூல் செய்யுமாறும் சொல்லுதும்:

[42]'அப்புலம் அரில்தப அறிந்து முதல்நூல்
பக்கம் போற்றும் பயனறிந்து உலகத்
திட்ப முடைய தெளிவர வுடையோன்
அப்புலம் படைத்தற்கு அமையும் என்ப.'

[43]'சூத்திரம் உரைஎன்று ஆயிரு திறனும்
பாற்படத் தோற்றல் படைத்தல் என்ப
நூற்பயன் உணர்ந்த நுண்ணி யோரே.'
*இவற்றான் அறிக.*

போக்கு அறுதல் - நூற்குக் கூறும் குற்றங்கள் அற்று நன்மை உளவாதல். அவை

[44]'ஈர்ஐங் குற்றமும் இன்றி நேரிதின்
எண்வகைப் புணர்ப்பினது என்மனார் புலவர்.'

இதனான் அறிக.

எழுத்தும் சொல்லும் பொருளும் என வைத்துப் பின்னும் 'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி' என்றது, பிற நூல் போலச் சொல்லுள் எழுத்தினை மயக்கிக் கூறாது, வேறு சேரக் கூறினான் என்பது.

**சிறப்புப் பாயிரம் முற்றும்.**



## இளம்பூரணம் உரைக்குறிப்பு

## *சிறப்புப் பாயிரம்*

*1.* பலதிறச் செய்திகளைச் சொல்லுதலான் பல்வேறு முகங்கொடு நூல் விரிவுடைத்து ஆயினும் தனக்குப் பாயிரம் சொல்லப்படாதது நூல் எனப்படாது.

2. நூற்குப் புறமாவன கூறலான் பாயிரம் புறவுரையாம். பொதுவும் சிறப்பும் ஆகிய இருவகைப்பாயிரத்திற்கும் உருவமைந்த வாயில்மாடம் உவமம். சிறப்புப்பாயிரத்திற்கு கற்புடையாள் உவமம். வாயில்மாடம் நகர்க்குள் செல்லுதற்கு வழியாதலோடு அணிசெய்தல் உடையது. பாயிரம் நூலுள் செல்லுதற்கு வழியாதலொடு நூற்கு அணிசெய்தல் உடையது. கற்புடையான் கணவன் கற்பித்தவழி நிற்றலுடையாள். சிறப்புப்பாயிரம் நூலின் குறிப்பின்வண்ணம் தான் ஒழுகும்; பொதுப்பாயிரம் பிரிந்து நிற்பினும் தான் பிரியாது (இன்றியமையாச் சிறப்பிற்றாய்) நூலொடு கூடி நிற்கும். (சண்முகனார் பாயிரவிருத்தி)

*3.* மான் தனது வாழிடமாகிய காடுவிட்டு மக்கள் வாழ் குறிச்சி புகின் அவர்களால் தடையுண்ணும். பாயிரம் கேளாதே நூல் கேட்பான்புக்க மாணாக்கனும் பலதிற ஐயவுணர்வுகளான் இடர்ப்படும்.

*4.* குலமகட்கு ஆடை, அணியினும் இன்றியமை யாதது. நூற்குப் பொதுப் பாயிரத்தினும் சிறப்புப்பாயிரம் இன்றியமையாதது. குலமகள் நாண் துறவாமை யுடையாள். நூல் சிறப்புப்பாயிரமாகிய தன் மாண்பு துறவாமையுடைத்து. (சண்முகனார்)

*5.* ஈவோன் தன்மை என்பது ஆசிரியனது தன்மை என்றவாறு. அஃதாவது, ஈதல்தொழில் நடைபெறவேண்டின், இரப்போன் வேண்டும் பொருளை உடையனாம் தன்மையும்-

அதனை ஈதற்கு ஏதுவாகிய இரக்கம் முதலிய குணம் உடையனாம் தன்மையும் - ஈவோனுக்கு இன்றியமையாது இருத்தல் வேண்டும் ஆதலின் ஆசிரியன் அவற்றை உடையனாதல்.

ஈதல் இயற்கை என்பது ஆசிரியன் மாணாக்கற்குப் பாடம் உரைக்கும் முறைமை என்றவாறு. அஃதாவது, பசியான் இரப்போர்க்கு அவரது பசியளவு அறிந்து முகமலர்ந்து இன்சொல்கூறி உணவு அளிப்பது போல, மாணாக்கர்க்கு அவன் அளிக்கும் முறைமை.

கொள்வோன் தன்மை என்பது மாணாக்கனது தன்மை என்றவாறு. அஃதாவது,பசித்து உணவு வேண்டி இரப்போன் அதனையுடையார்மாட்டு இரத்தலும்,அவர்க்குக் கருணை வர நடத்தலும் உடையனாயினாற் போல, மாணாக்கன் கற்றார்மாட்டு இரத்தலும் அவரை வழிபடும் நிலைக்கண் வெறுப்பின்மையும் உடையனாதல்.

கோடல்மரபு என்பது மாணாக்கன் பாடம் கேட்கும் முறைமை என்றவாறு. அஃதாவது, பசித்து உணவுவேண்டி இரந்தானுக்கு அதனை அளிப்பின் அவன் அதனை ஆர்வத்தோடு ஏற்றுச் சிதறாமல் அருந்திப் பசிதீர்ந்தாற் போல, ஆசிரியன் அளித்த நூற்பொருளை மாணாக்கன் கொள்ளும் முறைமை. (சண்முகனார் பா.வி.)

கற்கப்படுவோர் - கற்கப்படத்தக்க நல்லாசிரியர்

6. ஆசிரியன் மாணாக்கற்குப் பாடம் சொல்லும் இயல்பினை முறையாகக் கூறின், பொழிப்பு - அகலம் - நுட்பம் - எச்சம் - எனப்படும் பழிப்பிலவாகிய பல உரைத்திறங்களைத் தான் பயின்ற நாவினனாய், மங்கலமானது என்று புகழப்படும் மாதத்தே பொருந்திய திதியொடு கூடிய போற்றத்தகும் நக்கத்திரத்தின்கண், மாணாக்கற்குக் கல்விச்செல்வம் நன்கு வாய்க்கவேண்டும் எனத் தன் வழிபடு தெய்வத்தை வாழ்த்தி, நூற்பொருளை

உணர்த்தவல்ல ஐயம்திரிபு அற்ற தெளிந்த அறிவினனாய், கொள்வோன் கொள்வகை அறிந்து அவனது உளம் கொள்ளும் பரிசாகப் பாடம் சொல்லுதலாம் மரபு என்றனர் புலவர்.

7. கற்பிக்கப்படும் நன்மாணாக்கர் ஆவார் தன்மகனும், தன் ஆசிரியனுடைய மகனும், நாட்டை ஆளும் மன்னனுடைய மகனும், நிறையப் பொருளுதவி செய்வோனும், தன்னை வழிபடுதற்கண் குறைவு காட்டா தோனும். தான் சொல்லும் பாடத்தை மனத்தில் நெகிழ்ச்சியின்றி நிறுத்திக்கொள்வோனும் - என இவ்வறு திறத்தர் ஆவர்.

8. இந்நன்மாணாக்கர் இயல்பிற்கு அன்னமும் கிளியும் நன்னிறமும் நெய்யரியும் யானையும் ஆனேறும் உவமமாம் என்ப.

9. இனி, கற்பிக்கப்படாத கடைமாணாக்கர்ஆவார் எண்வகையர்: சோம்புதலுடையோன், மாண்பிறந்த மானமுடையோன், மறவி மிக வுடையோன், மகளிர்பால் காமம் கொள்வோன், பிறருடைமையைக் களவு செய்வோன், கொடுநோய் வயப்பட்டோன், தணியாத கோபமுடையோன், தெளிந்த வுணர்வு இன்றி ஐயங்கொள்ளும் இயல்பினோன் - என இவர்.

10. இவர்கள் தன்மைக்கு உவமம் ஆவன: குரங்கினைக் கல்லான் எறிந்து அதனான் விளங்காய் தன்னை நோக்கி வீசப்பெறுவோன், எருமை, ஆடு, தோணி என்பன நான்கும் ஆம்.

*மலை முதலிய நான்கும், கழற்குடம் முதலிய நான்கும், அன்னம் முதலிய ஆறும், குரங்கு எறிவிளங்காய் முதலிய நான்கும் பற்றிய உவமை விளக்கங்களை நச்சினார்க்கினியர் உரைவிளக்கக் குறிப்பின்கண் காண்க.*

11. மாணாக்கன் பாடம் கேட்கும் முறைமையைச் சொல்லுமிடத்து. உரிய நேரத்தே பாடம்கேட்கும் இடம்நாடிச் சென்று. ஆசானை வழிபடுதற்கண் வெறுப்புக் காட்டாமல், இரவின்கண்ணும் பகலின்கண்ணும் முறையே ஆசானுக்கு வழிகாட்டுமுகத்தான் முன்னரும் பணிவுடைமை தோன்றப் பின்னரும் நடந்துபோய். ஒருபோதும் அவனைவிட்டு அகலாமல் அன்போடே உடனுறைந்து, அவன் 'வருக' என அழைத்துழி வந்துநின்று, 'அமர்க' என்ற பின்னரே உரிய இடத்து அமர்ந்து, 'ஏட்டினை அவிழ்க்க' எனப் பணித்த பின்னர் அவிழ்த்து, 'பாடம் மனனம் செய்ததனைச் சொல்லுக' எனவும் 'ஐயமுற்றவற்றை வினவுக' எனவும் பணித்துழி அவற்றைச் சொல்லி, 'இனிச்செல்க' என்ற பின்னரே எழுந்து சென்று, ஆசான் உரைக்கும் பாடப்பொருளாம் உணவைச் செவியே வாயாக உட்கொண்டு மனமே வயிறாக அதனை அதனான் நிறைத்து, பலகாலும் அவன்பால் கேட்டவற்றை விடாது நெஞ்சத்தே நிறுத்த வல்லனாய் இவ்வாறாகப் பாடப்பொருளை அரிதாகப் பெற்று மறவாமல் பாதுகாத்துக் கொள்ளுதலே மாணாக்கனது பாடம்கேட்கும் தொழில் முறைமையாம்.

12. எவ்வகையான் ஒழுகின் ஆசிரியன் மகிழ்வனோ, அவ்வகையான் அறத்தினின்றும் வழுவாது ஒழுகுமதே ஆசிரியனை மாணாக்கன் வழிபடும் முறைமையாம்.

13. ஐயம்திரிபறப் பாடப்பொருளை உணரவல்லனாய், உண்மையை நாடியே பாடப்பொருளை ஆராயவல்லனாய், ஆசான் உரைக்கும் பலதிறப்பட்ட செய்திகளைப் பேணிக் கேட்பவனாய், அவன்பால் பெரிதும் மதிப்புக்கொண்ட அன்புடையனாய், அவனைத் தன் வழிபடும் தெய்வம் போல மதித்து ஒழுகுபவனாய், யாண்டும் திரிபுணர்ச்சியின்றி, இன்னவகையான் சொல்லிய மாட்சிமைகள் ஆறனையும் உடையனாகிய நன்மாணாக்கனுக்கு நல்லாசிரியர் நன்றாக நூற்பொருளை ஆய்ந்து பாடம் சொல்லுவர். '*உடையாற்கு*' என்ற பாடமே சிறக்கும்.

*14.* உலகவழக்கும் செய்யுள்வழக்குமாகிய இரண்டன் இயல்பினையும் புரைபடாது உணர்ந்துகோடல், செய்யுள்களை மனப்பாடமாக நினைவிற்கோடல், பாடம் கேட்டவற்றை நினைவிற்கொண்டு வருதல், ஐயமுற்றவழி ஆசானை நண்ணி அவ்வையுறவு நீங்குமாற்றான் மீண்டுமொரு முறை அவன்பாற் கேட்டல், தன்னைப் போன்ற நன்மாணாக்கரொடு மருவுதல், பாடத்தொடர்பாக அவர்கள்பால் வினவுதல், அவர்களும் தன்பால் அவ்வாறு வினவியவற்றிற்கு விடை பகர்தல் - என்று இன்ன தொழில்களைத் தன் கடமையாகக் கொள்ளினே மாணாக்கனது அறியாமை மிகவும் நீங்கிப்போம்.

*15.* அத்தகைய வினைத்திறன்களைக் கடமையாகக் கொண்டொழுகாதவன் தான் ஆசானிடம் பாடம்கேட்டலை மேற்கொள்வனாயின், அத்தொழில் முயற்சியான் வரும் வருத்தம் எய்துவதே யன்றிக் கல்விப்பயனைத் தான் ஒருகாலும் எய்தமாட்டான்.

*16.* ஆசான் பாடம் சொல்லியவற்றை எத்துணை மனமொன்றுறக் கேட்பானாயினும், நன்மாணாக்கன் அவன் சொல்லிய திறத்தில் காற்கூறேயல்லது அதற்கு மிகையாக மனம்கொள்ளான் ஆவன்.

*17.* பின்னை முழுமையாக மனம்கொள்ளும் ஆற்றல் கைவரப் பெறுமாறு எங்ஙன்எனின், தன்னையொத்த, பாடம்கேட்கும் நன்மாணாக்கரொடு வினவியும் விடுத்தும் பழகும்வகையான் (எஞ்சியுள்ள முக்கால் கூற்றில்) ஒரு காற்கூறும், (ஆசான் இசைவு பெற்று, அவன்பால் பாடம் கேளாத) மாணாக்கர் சிலர்க்கு முறைப்படத் தான் பாடம் சொல்லவே அரைக்கூறும் என்று இவ்வகையான் குற்றமற்ற முழுப்புலமை பாடம்சொல்லும் திறத்தில் பெருமைப்பட வந்தமையும்.

*18.* நூல் செய்த ஆசிரியன் பெயர், இந்நூல் இன்ன நூலின் வழித்தாகச் செய்யப்பட்டது என்னும் வழி, நூல்

நடக்கும் நிலஎல்லை, நூலது பெயர், தொகுத்தும் விரித்தும் தொகைவிரிசெய்தும் மொழிபெயர்த்தும் யாக்கப்படும் நூல்யாப்பினுள் இன்னது என்பது, நூல் நுதலிய பொருள், நூலைக் கேட்டு அதன்கண் குற்றமின்மை ஆராய்வோர், இந்நூலைக் கற்க இன்னது பயக்கும் என்னும் பயன் - என்னும் இவ்வெட்டுப் பொருளையும் பொருந்தப் புலப்படுத்துதல் சிறப்புப் பாயிரத்தின் இயல்பாம்.

19. நூல் செய்யப்பட்ட காலமும், அரங்கேற்றப்பட்ட அவைக்களமும். செய்யப்பட்ட காரணமும் என்னும் இம்மூன்று திறனையும் பாயிரத்து இயல்பாகக் கூட்டி யுரைப்பாரும் உளர்.

20. சிறப்புப் பாயிரத்தின் இலக்கணம் சொல்லுமிடத்து, அது நூல் நுதலிய பொருளைத் தான் இன்னது என்று சுட்டியுரைத்தலையுடைத்தாய், தன்னுடைய செய்யுள் ஆசிரியத்தானாதல் வெண்பாவானாதல் இயன்று வருதலைப் பொருந்துவதாய் அமைவது என்று கூறுக.

21. நூலாசிரியன் பிறர்உணர்விற்குப் புலப்படா நுண்மைகளைத் தன் நூலகத்தே புலப்படுத்திப் பலதுறைப்பட அதனை முடித்திருப்பினும், தன்னைத் தான் புகழ்ந்து கூறிக்கோடல் தக்கதன்று. ஆதலின் நூற்குச் சிறப்புப் பாயிரம் பிறரே இயற்றுதல் தகுதியாம்.

22. 'வடக்கும் தெற்கும் குணக்கும் குடக்கும்
வேங்கடம் குமரி தீம்புனல் பௌவம்என்று
இந்நான்கு எல்லை அகவயின் கிடந்த
நூலதின் நுண்மை வாலிதின் விரிப்பின்'

எனக் கூறி, 'வடவேங்கடம் தென்குமரி' எனப் பனம்பாரனார் கூறியவாற்றானே, எல்லை கொண்டார் காக்கைபாடினியார். (அவர் தொல்காப்பியனார் காலத்தவர்.) ஒழிந்த காக்கை பாடினியத்து,

'வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்திசை உள்ளிட்டு எஞ்சிய மூன்றும்'

எனத் தென்திசையும் கடல் எல்லையாகக் கூறப்பட்டது. ஆகலான் அவர் குமரியாறுள்ள காலத்தார் அல்லர் என்பதூஉம், குறும்பனைநாடு அவர்க்கு நீக்கல் வேண்டும் என்பதூஉம் பெற்றாம். (இக்காக்கை பாடினியார் தொல்காப்பியர்க்குப் பிற்காலத்தவர்) செய். 1 பேரா.

23. 'நிலம்தரு திருவின் நெடியோன்' : தலையாலங் கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், 'நிலம்தந்த பேருதவிப், பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல்' எனவும் 'நிலம்தரு திருவின் நெடியோன் போல' எனவும் மதுரைக்காஞ்சியில் அவன்மருகனாக விளிக்கப்பட்டு, அவன் போலச் சுற்றமொடு பொலிய வாழ்தல் வேண்டுமென மாங்குடி மருதனாரால் வாழ்த்தப்படுகிறான். 'நிலம்தரு திருவின் நெடியோய்' என இளஞ்சேரல் இரும்பொறையும் பெருகுன்றூர்கிழாரால் விளிக்கப்படுதல் காண்க. (பதிற்.82) இப்பெயர் போராற்றல் மிக்க வேந்தர்க்கு அடைமொழியாய் வழங்கப்பட்டமை அறியப்படும். தொல்காப்பியனார் காலத்துப் பாண்டியமன்னனுக்கு அப்பெயர் அவ்வாறே வழங்கப்பட்டது போலும். மாகீர்த்தி என்பது அவனது இயற்பெயர் என்பது இளம்பூரணர் உரையால் போதரும். நச்சினார்க்கினியரும் அவ்வாறே உரைத்தார்.

24. 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின், எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' என அடுத்த அடியையும் கூட்டுக. நச்சினார்க்கினியருரையும் அது. நூல் நுதலியவை எழுத்து முதல் மூன்றும்; பயன் அவற்றை அறிதல்.

25. 'முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப், புலம்தொகுத் தோனே போக்கறு பனுவல்' என அடுத்த அடியையும் கூட்டுக. 'முந்துநூல் கண்டு' எனவே இந்நூல் வந்த வழி பெறப்பட்டது; 'முறைப்பட எண்ணி' எனவே, காரணம் பெறப்பட்டது; 'புலம் தொகுத்தோன்' எனவே

தொகுத்துரைத்தல் ஆகிய நூல்யாப்புப் பெறப்பட்டது. விரிந்த நூற்பொருண்மையைத் தொகுத்துரைத்தலும் ஒரு காரணம் எனக் காரணத்துள் அடங்குவதாக யாப்பினைக் கோடலும் ஆம்.

26. 'அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து' எனவே, நூலைக்கேட்டு அதன்கண் குற்றமின்மை ஆராய்ந்தவர் அதங்கோட்டாசார் என்பது பெறப்பட்டது.

27. தீர்த்தம் - தூய்மை. நிலம்கடந்த நெடுமுடி அண்ணல் நின்ற மலையாகவும், படிதற்குரிய நீர்த்துறையாகவும் அவையிரண்டும் தூய்மை யுடையன.

28. இம்மலையையும் இவ்யாற்றினையும் அகப் படுத்திய வடக்கண் தெற்கண் எல்லைகள் அகப்பாட்டு எல்லையாம்.

29. தமிழ்கூறும் நல்லாசிரியர்தம் உறைவிடம் அவ் வெல்லை அகப்பட்டது என்றவாறு.

30. இந்நூலுள் செய்யுளியல் மரபியல்களுள் கிடக்குமாறு செய்தோன் என்பது.

31. படலத்துள் இடம்பெறுவன ஓத்துக்களும் அவற்றுள் சூத்திரங்களும் என இவ்விரு வகையினவாம்.

32. ஒரு சாதியாயுள்ள மணிகளை முறையே அணிகலத்துள் பதித்தாற்போல, ஒருசாதியாயுள்ள பொருள்களை ஒருவழிப்படக்கூறுவது ஓத்து எனும் உறுப்பாம் என்று கூறுவர் உயர்மொழிப்புலவர்.

33. பருப்பொருட்டாகிய பாயிரம் போலன்றி நுண் பொருட்டாகிய பொருள்கேட்டார்க்கு வெற்றெனத் தோன்றாது உள்ளீடுடைத்தாய், தன் உட்பொருள் இன்றியமையாதிருத்தல் ஆகிய திட்பம்கொண்டு, சொற்சுருக்கத்தோடு, ஒருபொருளே நுதலி வரும் கருத்துப்பகுதியுடன் கூடி, பயில்வோர் முயற்சி மிகுதியின்றிப் பொருட்பயனை அறியுமாறு நிகழ்வது சூத்திரம்.

34. பொதுவும் சிறப்புமாக விதிகளைப் பேணிச் சூத்திரம் இயலுமிடத்து, எய்தாதது எய்துவித்தல் - எய்தியது இகந்துபடாமை காத்தல் - அவ்வாறு காத்துப் பிறிதுவிதி வகுத்தல் - என்னும் இம்முத்திறத்துள் ஒன்றனைப் புலப்படக் கூறுதல் சூத்திரத்தின் முன்னுரைக்கப்படும் கருத்தாம்.

35. சூத்திரம், பிண்டம் எனவும் - தொகை எனவும் - வகை எனவும் - குறி எனவும் - செய்கை எனவும் - இவற்றை அலைவறக் கொண்டு இவற்றின் புறத்து அடையாய் வரும் புறனடை எனவும் - இவ்வேறுபாட்டொடு பொருந்திய பெயரினதாய் முறையே பிண்டசூத்திரம் தொகைச்சூத்திரம் முதலாக வழங்கப்படும் என்பர் புலவர்.

36. சூத்திரத்தின் கிடக்கை முறை, யாற்றொழுக்கு - தேரைப்பாய்த்து - சிங்கநோக்கு - பருந்தின் வீழ்வு - என நான்காம்.

37. பழித்தல் இல்லாத சூத்திரம், பொழிப்பு அகலம் நுட்பம் எச்சம் என்றின்ன பெயரவாய நால்வகை உரைகளான் பன்னப்பெறும்.

38. மூலபாடம் கூறியும், அதற்குப் பதப்பொருள் உரைத்தும், அதனை உதாரணத்தான் விளக்கியும் பொருள் திரிபின்றிச் செய்வது பொழிப்புரையாம்.

39. தன்னூலிடத்தும் பிறநூலிடத்து முள்ள பொருள் வேறுபாடுகளைச் சுட்டி வினாஎழுப்பி, அதனால் புறத்தே புலப்படுமாறு அவ்வேறுபாடுகளைத் தெரித்துக்காட்டுவது அகலவுரையாம் என்பர் புலவர்.

40. அவ்வாறு கடாஎழுப்பிப் புலப்படுத்த வேறு பாட்டுப் பொருளின்கண் பொருந்தாத கூற்றினைக் காரணம் காட்டி மறுத்து நீக்கிவிடுவது நுட்பவுரையாம்.

41. அவ்வாறு மறுத்துரைத்து இதுவே பொருந்துவது என்று தேர்ந்து கொள்ளப்பட்ட பொருள் எச்சம் எனப்படும்.

42. தான் செய்யக் கருதிய இலக்கணத்தது பகுதியை ஐயம்திரிபு அற, உயர்ந்தோர் கூறும் வழக்கும் செய்யுளும் ஆகிய இருதிறங்களையும் துளக்கமறத் தெளிந்து (அழிவழக்கும் இழிவழக்கும் ஆகிய அவற்றைக் களைந்து), முதல்நூல் நுவலும் செய்தியைத் தான் தொகுத்தல் விரித்தல் முதலாகிய பயனை நாடிச் செய்யவல்லோனே அவ்விலக்கணப்பனுவல் படைத்தற்குத் தக்கோன் ஆவன் என்பர் புலவர்.

43. இலக்கணப்பனுவல் பயன்படுமாற்றை உணர்ந்த நுண்ணறிவு படைத்த அறிஞர், அதற்குச் சூத்திரங்களும் உரையும், முன்னோர் வகுத்த நெறியின் வழுவாது முறையே முதனூல்வழியே திட்பம் நுட்பம் சால இயற்றுதலும், (சூத்திரத்து உட்பொருளே அன்றி) ஆண்டு இன்றியமையாதன பலவும் தந்து உரைத்தலும் என்னும் இம்முறையின என்பர்.

44. இவ்விலக்கணநூல் பத்துவகைக் குற்றமும் இன்றி அவற்றுக்கு மறுதலையான வனப்பொடு பொருந்தி அதிகாரம்தோறும் எட்டுவகையான் நுவலும் பொருட் பேற்றினை யுடையது என்பர் புலவர். (எழுத்துச் சொற் படலங்கள் எட்டுவகையான் நுவலுமாற்றை உரையாசிரி யரும் நச்சினார்க்கினியரும் குறிப்பிடுவர். பொருட்படலம் அவ்வாறு நுவல்வது நச்சினார்க்கினியத்தில் மாத்திரம் காணப்படுகிறது. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் இவ்வெட்டுவகைப் பொருட்படல நுவற்சியைக் குறிப்பிடுகிறார்.)



**தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்**

# நச்சினார்க்கினியம்

# சிறப்புப் பாயிரம்

*வடவேங்கடம் தென்குமரி . . . . . பல்புகழ் நிறுத்த படிமையோனே என்பது பாயிரம்.*

எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க என்பது இலக்கணம்; என்னை?

**'ஆயிர முகத்தான்...அன்றே'**
என்றார் ஆகலான்.

பாயிரம் என்றது புறவுரையை. நூல்கேட்கின்றான் புறவுரை கேட்கின், கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு போல[1], அந்நூல் இனிது விளங்குதலின் புறவுரை கேட்டல் வேண்டும்; என்னை?

**'பருப்பொருட்டு ஆகிய பாயிரம் கேட்டார்க்கு**
**நுண்பொருட்டு ஆகிய நூல்இனிது விளங்கும்'**
என்றார் ஆகலின்.

அப்பாயிரம்தான், தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும் அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் இன்றியமையாச் சிறப்பிற்றாய் இருத்தலின், அது கேளாக்கால், குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சி புக்க மான் போலவும் மாணாக்கன் இடர்ப்படும் என்க.[2]

அப்பாயிரம் பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. அவற்றுள் பொதுப் பாயிரம் எல்லா நூன்முகத்தும் உரைக்கப்படும். அதுதான் நான்குவகைத்து.

**'ஈவோன் தன்மை . . . . தொகையே'**
என்னும் இதனான் அறிக.

ஈவோர், கற்கப்படுவோரும் கற்கப்படாதோரும் என இருவகையர். அவருள் கற்கப்படுவோர் நான்கு திறத்தர்.

'மலைநிலம்...உணர்வுடை யோர்.'

இதனுள்,

'மலையே,
[3]அளக்க லாகாப் பெருமையும் அருமையும்
மருங்க(க)லம் உடைமையும் ஏறற்கு அருமையும்
பொருந்தக் கூறுப பொச்சாப்பு இன்றி'

[4]'நிலத்தின் இயல்பே நினைக்குங் காலைப்
பொறையுடை மையொடு செய்பாங்கு அமைந்தபின்
விளைதல் வண்மையும் போய்ச்சார்ந் தோரை
இடுதலும் எடுத்தலும் இன்னண மாக
இயையக் கூறுப இயல்புணர்ந் தோரே'

[5]'பூவினது இயல்பே பொருந்தக் கூறின்
மங்கலம் ஆதலும் நாற்றம் உடைமையும்
காலத்தின் மலர்தலும் வண்டிற்கு ஞெகிழ்தலும்
கண்டோர் உவத்தலும் விழையப் படுதலும்
உவமத்து இயல்பின் உணரக் காட்டுப'

[6]'துலாக்கோல் இயல்பே தூக்குங் காலை
மிகினும் குறையினும் நில்லாது ஆகலும்
ஐயம் தீர்த்தலும் நடுவு நிலைமையோடு
எய்தக் கூறுப இயல்புணர்ந் தோரே'

என நான்கும் கண்டுகொள்க.

இனி, கற்கப்படாதோரும் நான்கு திறத்தர்.

'கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு
குண்டிகைப் பருத்தியோடு இவையென மொழிப.'

இதனுள், கழற்பெய்குடமாவது, கொள்வோன் உணர்வு சிறிதாயினும் தான் கற்றதெல்லாம் ஒருங்குரைத்தல். [7]மடற்பனை என்பது, பிறரால் கிட்டுதற்கு அரிதாகி

இனியவாகிய பயன்களைக் கொண்டிருத்தல். முடத்தெங்கு என்பது, ஒருவர் நீர்வார்க்கப் பிறர்க்குப் பயன்படுவது போல, ஒருவர் வழிபடப் பிறர்க்கு உரைத்தல். குண்டிகைப் பருத்தி என்பது, சொரியினும் வீழாது சிறிதுசிறிதாக வாங்கக் கொடுக்குமது போல, கொள்வோன் உணர்வு பெரியதாயினும் சிறிதுசிறிதாகக் கூறுதல்.

இனி, **'ஈதல் இயல்பே . . . . நாவினன்**
**புகழ்ந்த மதியின் பொருந்தும் ஓரையின்**
**திகழ்ந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்**
**கொள்வோன் உணர்வகை . . . கூறினர் புலவர்.'**
இதனால் அறிக.

இனி, கொள்வோரும், கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படாதோரும் என இருவகையர். அவருள் கற்பிக்கப்படுவோர் அறுவகையர்.

அவர்தாம், **'தன்மகன்...இவரென மொழிப.'**

இவர்தன்மை, [8] **'அன்னம் கிளியே...குணமாண் டோரே'**

இதனான் அறிக.

இனி, கற்பிக்கப்படாதோர் எண்வகையர்.

**'மடிமானி பொச்சாப்பன்....**
**நெடுநூலைக் கற்கலா தார்'**

என இவர்.

இவர் தன்மை [9] **'குரங்குஎறி விளங்காய் . . . . இவைஎன மொழிப.'** இதனான் அறிக.

*இவருள் களம் கடியப்பட்டார் :*

[10]'மொழிவது உணராதார் முன்இருந்து காய்வார்
*படிறு பலஉரைப்பார் பல்கால் நகுவார்*
*திரிதரு நெஞ்சத்தார் தீயவை ஓர்ப்பார்*
*கடியப்பட் டார்அவையின் கண்.'*

இனிக் கோடல்மரபு :

‘கோடல் மரபு கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலா னாகி அன்பொடு கெழீஇக்
குணத்தொடு பழகிக் குறிப்பின் வழிநின்று
ஆசற உணர்ந்தோன் வாஎன வந்தாங்கு
இருஎன இருந்துஏடு அவிழ்என அவிழ்த்துச்
சொல்எனச் சொல்லிச் செல்எனச் சென்று
பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகிச்
சித்திரப் பாவையின் அத்தக அடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை வல்ல னாகிப்
போற்றிக் கோடல் அதனது பண்பே.’

‘எத்திறம் ஆசான் உவக்கும் அத்திறம்
அறத்தின் திரியாப் படர்ச்சிவழி பாடே.’

‘செவ்வன் தெரிகிற்பான்...தெரிந்து.’

‘வழக்கின் இலக்கணம்....மடம்நனி இகக்கும்.’

[11]‘அனையன் நல்லோன் கேட்குவ னாயின்
வினையின் உழப்பொடு பயன்தலைப் படுவான்.’

[12] ‘அனையன் அல்லோன் அம்மரபு இல்லோன்
கேட்குவ னாயின் கொள்வோன் அல்லன்.’

*இவற்றான் உணர்க.*

*இம்மாணாக்கன் முற்ற உணர்ந்தான் ஆமாறு:*

‘ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்
பெருக நூலின் பிழைபாடு இலனே.’
‘முக்கால் கேட்பின் முறைஅறிந்து உரைக்கும்.

'ஆசான் உரைத்தவை அமைவர . . . . . ஆகும்.'
அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருபால்
செவ்விதின் உரைப்ப அவ்விரு பாலும்
மையறு புலமை மாண்புநனி உடைத்தே.'

[13] 'பிறர்க்குஉரை யிடத்தே நூற்கலப்பு ஆகும்
திறப்பட உணரும் தெளிவி னோர்க்கே.'

*இவற்றான் அறிக.*

**பொதுப்பாயிரம் முற்றிற்று.**

இனி, ***சிறப்புப்பாயிரமாவது*** தன்னான் உரைக்கப்படும் நூற்கு இன்றியமையாதது. அது பதினொருவகையாம்:

**' ஆக்கியோன் பெயரே . . . . பாயிரத்து இயல்பே.'**
**'காலம் களனே . . . . மொழிநரும் உளரே.'**
இப்பதினொன்றும் இப்பாயிரத்துள்ளே பெறப்பட்டன.

இனி. **சிறப்புப்பாயிரத்து இலக்கணம் செப்புமாறு:**

**' பாயிரத்து இலக்கணம் . . . . . நுவறல்வேண்டும்.'**
*இதனான் அறிக.*

*நூல்செய்தான் பாயிரம் செய்தானாயின் தன்னைப் புகழ்ந்தானாம்,*

**'தோன்றா தோற்றித்...தகுதி அன்றே'**
*என்ப ஆகலின்.*

*பாயிரம் செய்வார், தன் ஆசிரியரும், தன்னோடு ஒருங்கு கற்ற ஒருசாலை மாணாக்கரும், தன் மாணாக்கரும் என இவர். இவருள் இந்நூற்குப் பாயிரம் செய்தார் தனக்கு ஒரு சாலை மாணாக்கராகிய* **பனம்பாரனார்.**

**'வடவேங்கடம்......படிமையோனே.'**

**இதன் பொருள்:** வடவேங்கடம் தென்குமரி ஆயிடை- வடக்கின்கண் வேங்கடமும் தெற்கின்கண் குமரியும் ஆகிய அவ்விரண்டு எல்லைக்குள் இருந்து; தமிழ் கூறும் நல்உலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் - தமிழைச் சொல்லும் நல்லாசிரியரின் வழக்கும் செய்யுளும் ஆகிய அவ்விரண்டையும் அடியாகக் கொள்ளுகையாலே; செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்து நூல் கண்டு- அவர் கூறும் செந்தமிழ் இயல்பாகப் பொருந்திய செந்தமிழ் நாட்டிற்கு இயைந்த வழக்கோடே முன்னை இலக்கணங்கள் இயைந்தபடியை முற்றக் கண்டு; முறைப்பட எண்ணி-அவ்விலக்கணங்கள் எல்லாம் சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினோர்க்கு அறியலாகாமையின், ''யான் இத்துணை வரையறுத்து உணர்த்துவல்'' என்று, அந்நூல்களில் கிடந்தவாறின்றி, அதிகாரமுறையான் முறைப்படச்செய்தலை எண்ணி; எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி - அவ் விலக்கணங்களுள் எழுத்தினையும் சொல்லினையும் பொருளினையும் ஆராய்ந்து; போக்கு அறு பனுவல்- பத்துவகைக் குற்றமும் தீர்ந்து முப்பத்திரண்டுவகை உத்தியொடு புணர்ந்த இந்நூலுள்ளே; மயங்கா மரபின் எழுத்து முறைகாட்டிப் புலம் தொகுத்தோன்-அம்மூவகை இலக்கணமும் மயங்காமுறைமையால் செய்கின்றமையின், எழுத்திலக்கணத்தை முன்னர்க் காட்டிப் பின்னர் ஏனை இலக்கணங்களையும் தொகுத்துக் கூறினான்; நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து - மாற்றாரது நிலத்தினைக் கொள்ளும் போர்த் திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தி அவையின்கண்ணே; அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு அரில் தபத் தெரிந்து - அறமே கூறும் நாவினையுடைய, நான்கு வேதத்தினையும் முற்ற அறிந்த, அதங்கோடு என்கிற ஊரின் ஆசிரியனுக்குக் குற்றமற ஆராய்ந்து கூறி; மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி - கடல் சூழ்ந்த உலகின்கண்ணே, ஐந்திரவியாகரணத்தை நிறைய அறிந்த பழைய காப்பியக் குடியின் உள்ளோன் எனத் தன்பெயரை மாயாமல் நிறுத்தி; பல்புகழ் நிறுத்த படிமையோன் - பலபுகழ்களையும் இவ்வுலகின்கண்ணே மாயாமல் நிறுத்திய தவவேடத்தை உடையோன் என்றவாறு.

இருந்து தமிழைச் சொல்லும் என்க; கொள்ளுகையாலே பொருந்திய நாடு என்க; கண்டு எண்ணி ஆராய்ந்து தன் நூலுள்ளே தொகுத்தான், அவன் யார்எனின் அவையின் கண்ணே கூறி உலகின்கண்ணே தன் பெயரை நிறுத்திப் புகழை நிறுத்திய படிமையோன் என்க.

இப்பாயிரமும் செய்யுள்ஆதலின், இங்ஙனம் மாட்டுறுப்பு நிகழக் கூறினார். இதற்கு இங்ஙனம் கண்ணழித்தல் உரையாசிரியர் கருத்து என்பது அவருரையான் உணர்க.

இனி, மங்கலமரபின் காரியம் செய்வார் வடக்கும் கிழக்கும் நோக்கியும் சிந்தித்தும் நற்கருமங்கள் செய்வார் ஆதலின், மங்கலமாகிய வடதிசையை முற்கூறினார், இந்நூல் நின்று நிலவுதல் வேண்டி. தென்புலத்தார்க்கு வேண்டுவன செய்வார் தெற்கும் மேற்கும் நோக்கிக் கருமங்கள் செய்வார் ஆதலின் தென்திசையைப் பிற்கூறினார். நிலம்கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகம் தவம் செய்து வீடுபெற்ற மலையாதலானும், எல்லாரானும் அறியப் படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக் கூறினார். குமரியும் தீர்த்தமாகலின் எல்லையாகக் கூறினார். இவ்விரண்டனையும் காலையே ஓதுவார்க்கு நல்வினை உண்டாம் என்று கருதி இவற்றையே கூறினார். இவையிரண்டும் அகப்பாட்டு எல்லையாயின; என்னை? குமரியாற்றின் தெற்கு நாற்பத்தொன்பது நாடும் கடல்கொண்டதாகலின். கிழக்கும் மேற்கும் கடல் எல்லையாக முடிதலின், வேறு எல்லை கூறாராயினார். வேங்கடமும் குமரியும் யாண்டைய என்றால், வடவேங்கடம் தென்குமரி என வேண்டுதலின், அதனை விளங்கக் கூறினார்.

உலகம் என்றது பலபொருள் ஒரு சொல்லாகலின் ஈண்டு உயர்ந்தோரை உணர்த்திற்று, உலகம் அவரையே கண்ணாக உடைமையின்; என்னை?

'வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட்டு ஆக லான'

என மரபியலுள்(92) கூறுதலின். அவ்வுயர்ந்தோராவார், அகத்தியனாரும் மார்க்கண்டேயனாரும் தலைச்சங்கத்தாரும் முதலாயினோர். உலகத்து - உலகத்தினுடைய என விரிக்க.

வழக்காவது சிலசொல் பிறந்த அக்காலத்து, இஃது அறத்தை உணர்திற்று, இது பொருளை உணர்த்திற்று, இஃது இன்பத்தை உணர்த்திற்று, இது வீட்டை உணர்த்திற்று என்று உணர்விப்பது.

செய்யுளாவது 'பாட்டுரை நூலே' (செய்.78) என்னும் செய்யுளியல் சூத்திரத்தான் கூறிய எழு நிலமும், அறம் முதலிய மூன்று பொருளும் பயப்ப நிகழ்வது. 'முதலின்' என்றது, முதலுகையாலே என்றவாறு.

எழுத்து என்றது யாதனை எனின், கட்புலனாகா உருவும் கட்புலனாகிய வடிவும் உடைத்தாக, வேறுவேறு வகுத்துக்கொண்டு தன்னையே உணர்த்தியும் சொற்கு இயைந்தும் நிற்கும் ஓசையாம். கடலொலி சங்கொலி முதலிய ஓசைகள் பொருள் உணர்த்தாமையானும், முற்கு வீளை இலதை முதலியன ஒரோவழிப் பொருள் உணர்த்தினவேனும் எழுத்து ஆகாமையானும், அவை ஈண்டுக் கொள்ளாராயினார். ஈண்டு உரு என்றது, மனன் உணர்வாய் நிற்கும் கருத்துப் பொருளை. அது செறிப்பச் சேறலானும், செறிப்ப வருதலானும், இடை எறியப்படுதலானும்[14], இன்ப துன்பத்தை ஆக்கலானும், உருவும் உருவும் கூடிப் பிறத்தலானும், உந்தி முதலாகத் தோன்றி எண்வகை நிலத்தும் பிறந்து கட்புலனாம் தன்மையின்றிச் செவிக்கண் சென்றுறும் ஊறுடைமையானும், விசும்பிற் பிறந்து இயங்குவதொரு தன்மையுடைமையானும், காற்றின் குணம் ஆவதோர் உருவாம். வன்மை மென்மை இடைமை கோடலானும் உருவே ஆயிற்று. இதனைக் காற்றின் குணமே என்றல் இவ்வாசிரியர் கருத்து. இதனை விசும்பின் குணம் என்பாரும் உளர். இவ்வுரு 'உரு உருவாகி' (எழு.17) எனவும், 'உட்பெறு

புள்ளி உருவா கும்மே' (14) எனவும் காட்சிப்பொருட்கும் சிறுபான்மை வரும். வடிவாவது கட்புலனாகியே நிற்கும். அது வட்டம் சதுரம் முதலிய முப்பத்திரண்டனுள் ஒன்றை உணர்த்தும். மனத்தான் உணரும் நுண்ணுணர்வு இல்லோரும் உணர்தற்கு எழுத்துக்கட்கு வெவ்வேறு வடிவம்காட்டி எழுதப்பட்டு நடத்தலின், கட்புலனாகிய வரிவடிவும் உடையவாயின. இதற்கு விதி 'உட்பெறு புள்ளி உருவா கும்மே' (14) என்னும் சூத்திரம் முதலியனவாம். இவற்றான் பெரும்பான்மை மெய்க்கே வடிவு கூறினார்; 'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' (16) என உயிர்க்கும் சிறுபான்மை வடிவு கூறினார்.

இனி, தன்னை உணர்த்தும் ஓசையாவது தன் பிறப்பையும் மாத்திரை யையுமே அறிவித்துத் தன்னைப் பெற நிகழும் ஓசை. சொற்கு இயையும் ஓசையாவது ஓரெழுத்தொருமொழி முதலியவாய் வரும் ஓசை.

இனி, சொல் என்றது யாதனை எனின், எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப்பொருள்தன்மையையும் ஒருவன் உணர்தற்கு நிமித்தமாம் ஓசையை. இவ்வுரைக்குப் பொருள் சொல்லதிகாரத்துள் கூறுதும். ஈண்டு, 'ட ற ல ள' (23) என்னும் சூத்திரம் முதலியவற்றான் மொழியாக மயங்குகின்றனவும் அவ் வாக்கத்தின்கண்[15] அடங்கும் என்று உணர்க. எழுத்துச் சொற்கு அவயவம் ஆதலின், அதனை முற்கூறி அவயவி ஆகிய சொல்லைப் பிற்கூறினார்.

இனி, பொருள் என்றது யாதனை எனின், சொற்றொடர் கருவியாக உணரப்படும் அறம் பொருள் இன்பம் என்பவற்றது நிலையும் நிலையாமையும் ஆகிய அறுவகைப்பொருளும் ஆம். அதனைப் பொருளதிகாரத்துள் கூறுதும்.

வீடு கூறாரோ எனின், அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறுதலன்றி, வீட்டின் தன்மை இலக்கணத்தால் கூறார் என்றுணர்க. அஃது,

[16] 'அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப' *(செய்.106)*

என்பதனான் உணர்க. இக்கருத்தானே வள்ளுவனாரும் முப்பாலாகக் கூறி, மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறினார்.

செந்தமிழ் - செவ்வியதமிழ். முந்துநூல் - அகத்தியமும் மாபுராணமும் பூதபுராணமும் இசைநுணுக்கமும். அவற்றுட் கூறிய இலக்கணங்களாவன, எழுத்துச்சொற்பொருள் யாப்பும் சந்தமும் வழக்கியலும் அரசியலும் அமைச்சியலும் பார்ப்பன இயலும் சோதிடமும் காந்தருவமும்[17] கூத்தும் பிறவுமாம். புலம் என்றது, இலக்கணங்களை. பனுவல் என்றது, அவ் விலக்கணங்கள் எல்லாம் அகப்படச் செய்கின்றதொரு குறியை. அவை இதனுள் கூறுகின்ற உரைச் சூத்திரங்களானும் மரபியலானும் உணர்க.

பாண்டியன் மாகீர்த்தி இருபத்துநாலாயிரம் யாண்டு வீற்றிருந்தான் ஆதலின், அவனும் அவன் அவையி னுள்ளோரும் அறிவு மிக்கிருத்தலின், அவர்கள் கேட்டிருப்ப, அதங்கோட்டாசிரியர் கூறிய கடாவிற்கு எல்லாம் குற்றம் தீர விடைகூறுதலின், 'அரில் தப' என்றார்.

அகத்தியர் அதங்கோட்டாசிரியரை நோக்கி ''நீ தொல்காப்பியன் செய்த நூலைக் கேளற்க'' என்று கூறுதலானும், தொல்காப்பியனாரும் பல்காலும் சென்று ''யான் செய்த நூலை நீர் கேட்டல்வேண்டும்'' என்று கூறுதலானும், இவ்விருவரும் வெகுளாமல் 'இந்நூற்குக் குற்றம் கூறிவிடுவல்' எனக் கருதி, அவர் கூறிய கடாவிற்கு எல்லாம் விடை கூறுதலின் 'அரில்தபத் தெரிந்து' என்றார்.

அவர் 'கேளன்மின்' என்றற்குக் காரணம் என்னை யெனின், தேவரெல்லாரும் கூடி ''யாம் சேர இருத்தலின் மேருத் தாழ்ந்து தென்திசை உயர்ந்தது; இதற்கு அகத்தியனாரே ஆண்டு இருத்தற்கு உரியர்'' என்று அவரை வேண்டிக்

கொள்ள, அவரும் தென்திசைக்கண் போதுகின்றவர், கங்கையாருழைச் சென்று காவிரியாரை வாங்கிக்கொண்டு, பின்னர் யமதக்கினியாருழைச் சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு, புலத்திய னாருழைச் சென்று அவருடன் பிறந்த குமாரியார் உலோபா முத்திரையாரை அவர் கொடுப்ப நீர்ஏற்று இரீஇ, பெயர்ந்து துவராபதிப் போந்து, நிலம் கடந்த நெடுமுடிஅண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிர் உள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டுபோந்து, காடுகெடுத்து நாடாக்கிப் பொதியின்கண் இருந்து, இராவணனைக் கந்தருவத்தால் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கி, திரணதூமாக்கினியாராகிய தொல்காப்பியனாரை நோக்கி "நீ சென்று குமரியாரைக் கொண்டு வருக" எனக்கூற, அவரும் "எம்பெரு மாட்டியை எங்ஙனம் கொண்டு வருவல்?" என்றார்க்கு, "முன்னாகப் பின்னாக நாற்கோல் நீளம் அகலநின்று கொண்டுவருக" என, அவரும் அங்ஙனம் கொண்டு வருவழி, வையைநீர் கடுகிக் குமரியாரை ஈர்த்துக்கொண்டுபோக, தொல்காப்பியனார் கட்டளை இறந்து சென்று ஒரு வெதிர்ங்கோலை முறித்து நீட்ட, அவரும் அது பற்றி ஏறினார். அது குற்றமென்று அகத்தியனார் குமரியாரையும் தொல்காப்பியனாரையும் "சுவர்க்கம் புகாப்பிர்" என்று சபித்தார். "யாங்கள் ஒருகுற்றமும் செய்யாதிருக்க எங்களைச் சபித்தமையான், எம்பெருமானும் சுவர்க்கம் புகாப்பிர்" என அவர் அகத்தியனாரைச் சபித்தார். அதனான் அவர் வெகுண்டார் ஆதலின், "அவன் செய்த நூலைக் கேளற்க" என்றார் என்க.

நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் 'நான்மறை' என்றார். அவை தைத்திரியமும் பௌடிகமும் தலவகாரமும் சாமவேதமும் ஆம். இனி, இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமும் என்பாருமுளர். அதுபொருந்தாது; இவர் இந்நூல் செய்த பின்னர், வேதவியாதர் சின்னாள் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்குகூறாக இவற்றைச் செய்தார் ஆதலின்.

முற்கூறிய நூல்கள் போல எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் பொருளிலக்கணமும் மயங்கக் கூறாது வெவ்வேறு அதிகாரமாகக் கூறினார் என்றற்கு 'எழுத்து முறைகாட்டி' என்றார்.

.வரைப்பின்கண்ணே தோற்றி நிறுத்த' என்க.
இந்திரனால் செய்யப்பட்டது ஐந்திரம் என்றாயிற்று.

பல்புகழாவன: ஐந்திரம் நிறைதலும், அகத்தியத்தின் பின் இந்நூல் வழங்கச் செய்தலும், அகத்தியனாரைச் சபித்த பெருந்தவத்தன்மையும்,[18] ஐந்தீநாப்பண் நிற்றலும் நீர்நிற்றலும் பிறவுமாகிய தவத்தான் மிகுதலும், பிறவும் ஆம். படிமை - தவவேடம்.

'வடவேங்கடம் தென்குமரி' என்பது கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்த சொற்சீரடி. 'ஆயிடை' என்பது வழியசை புணர்ந்த சொற்சீரடி. 'தமிழ்கூறும் நல்லுலகத்து' என்பது முட்டடியின்றிக் குறைவுசீர்த்தாய சொற்சீரடி. இங்ஙனம் சொற்சீரடியை முற்கூறினார், சூத்திரயாப்பிற்கு இன்னோசை பிறத்தற்கு; என்னை? 'பாஅ வண்ணம், சொற்சீர்த்து ஆகி நூற்பாப் பயிலும்' (செய்.215) என்றலின். ஏனை அடிகள் எல்லாம் செந்தூக்கு.

'வடவேங்கடம் தென்குமரி' எனவே எல்லையும், 'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிப் புலம் தொகுத்தோன்' எனவே நுதலிய பொருளும் பயனும் யாப்பும், 'முந்துநூல் கண்டு' எனவே வழியும், 'முறைப்பட எண்ணி' எனவே காரணமும், 'பாண்டியன் அவையத்து' எனவே காலமும் களனும், 'அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து' எனவே கேட்டோரும், 'தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி' எனவே ஆக்கியோன் பெயரும் நூற்பெயரும் பெறப்பட்டன.

தொல்காப்பியம் என்பது மூன்று உறுப்பு அடங்கிய பிண்டம் . பொருள் கூறவே அப்பொருளைப் பொதிந்த

யாப்பிலக்கணமும் அடங்கிற்று, 'நூறுகாணம் கொணர்ந் தான்' என்றால் அவை பொதிந்த கூறையும் அவையென அடங்குமாறு போல.

இனி, இவ்வாறன்றிப் பிறவாறு கண்ணழிவு கூறுவாரும் உளரால் எனின், வேங்கடமும் குமரியும் எல்லையாகவுடைய நிலத்திடத்து வழங்கும் தமிழ்மொழியினைக் கூறும் நன்மக்கள் வழங்கும் வழக்கும் செய்யுளும் என்றால், செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்த கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டினும் வழங்கும் தமிழ்மொழியினைக் கூறுவாரையும் நன்மக்கள் என்றார் என்று பொருள் தருதலானும், அவர் கூறும் வழக்கும் செய்யுளும் கொண்டு எழுத்தும் சொல்லும் பொருளும் ஆராய்தல் பொருந்தாமையானும், அவர் கூறும் வழக்கும் செய்யுளும் ஆகிய இருகாரணத்தானும் எழுத்தும் சொல்லும் பொருளும் ஆராய்ந்தார் எனின், அகத்தியர்க்கு மாறாகத் தாமும் முதனூல் செய்தார் என்னும் பொருள் தருதலானும், அங்ஙனம் கொடுந்தமிழும் கொண்டு இலக்கணம் செய்யக் கருதிய ஆசிரியர் குறைபாடுடையவற்றிற்குச் செந்தமிழ்வழக்கையும் முந்துநூலையும் ஆராய்ந்து முறைப்பட எண்ணினார் எனப் பொருள்தருதலானும் அது பொருளன்மை உணர்க.

இன்னும் 'முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி' என்றதனானே, முதல்வன் வழிநூல் செய்யுமாற்றிற்கு இலக்கணம் கூறிற்றிலனேனும், அவன் நூல்செய்த முறைமைதானே பின்பு வழிநூல் செய்வார்க்கு இலக்கணமாம் என்பது கருதி, இவ்வாசிரியர் செய்யுளியலிலும் மரபியலிலும் அந்நூல் செய்யும் இலக்கணமும் அதற்கு உரையும் காண்டிகையும் கூறும் இலக்கணமும் கூறியதனையே ஈண்டும் கூறினார் [19]என்றுணர்க. அவை அவ்வோத்துக்களான் உணர்க.

'யாற்றது ஒழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்தின் வீழ்வென்று
ஆவகை நான்கே கிடக்கை முறையே.'

'பொழிப்பே அகலம் நுட்பம் எச்சம்எனப்
பழிப்பில் சூத்திரம் பன்னல் நான்கே.'

'அவற்றுள்,
பாடம் கண்ணழிவு உதாரணம் என்றிவை
நாடித் திரிபில ஆகுதல் பொழிப்பே.'

'தன்நூல் மருங்கினும் பிறநூல் மருங்கினும்
துன்னிய கடாவின் புறம்தோன்றும் விகற்பம்
பன்னிய அகலம் என்மனார் புலவர்.'

'ஏதுவின் ஆங்கவை துடைத்தல் நுட்பம்.'

'துடைத்துக் கொள்பொருள் எச்சம் ஆகும்.'

'அப்புலம் அரில்தப அறிந்து முதனூல்
பக்கம் போற்றும் பயன்தெரிந்து உலகம்
திட்ப முடைய தெளிவர வுடையோன்
அப்புலம் படைத்தற்கு அமையும் என்ப.'

'சூத்திரம் உரைஎன்று ஆயிரு திறத்தினும்
பாற்படத் தோற்றல் படைத்தல் என்ப
நூற்பயன் உணர்ந்த நுண்ணி யோரே.'

இவற்றை விரித்துரைக்க.

*சிறப்புப் பாயிரம் முற்றிற்று.*



# நச்சினார்க்கினியர் உரைக்குறிப்பு

**(சிறப்புப் பாயிரம்)**

1. கொழு என்றது, ஊசித்தொளையின் மேலுள்ள கோலினை. துன்னூசி என்றது தைத்தல்தொழில் செய்யும் நூல் கோத்த தொளையையுடைய ஊசியின் காதினை. கொழுவுதலால் கோல் 'கொழு' எனப்பட்டது. *(அரசஞ்சண்முகனார் பாயிரவிருத்தி)*

2. தலையமைந்த யானை - அசனிவேகம், நளகிரி போன்ற அரசுவா. வினை அமைந்த பாகன் - சீவகன், உதயணன் போன்றோன். ஒரு குருவியை அது பறந்து செல்லும் திசைக்கண் நீண்டுயர்ந்த மலை தோன்றின், அஃது அதன்செலவைத் தடுக்கும். ஒரு மான் தான் உறையும் காட்டைவிட்டு ஒரு குறிச்சிக்கண் புகின், ஆண்டு வாழ்வோரால் தடுத்து நிறுத்தப்படும். அதுபோல, பாயிரம் கேளாது மாணாக்கன் நூலுட் புகின் பல ஐயங்களான் இடர்ப்படுவான்.

3. மலை அளக்கப்படமுடியாத உருவத்தின் பெருமையும், அரும்பொருள்களைத் தன்னகத்துக் கொண்டுடைமையும், பக்கம் பரப்புடைமையும், தன்னை ஏறிக் கடத்தற்கு அருமையும் பெற்றதாதல் போல, நல்லாசிரியனும் பிறரால் அளக்கப்படாத கல்விப் பெருமையும், அரிய நூற்பொருள் நுண்மையைத் தன்பால் உடைமையும், பக்கத்துள்ளாரால் அறியப்பட்ட கல்விப் புகழுடைமையும், பிறரால் வாதுபோர் செய்து கடத்தற்கு அருமையும் கொண்டானாதல் வேண்டும்.

4. நிலம் அகழ்வாரைத் தாங்கும் பொறையும், உழுதல் எருவிடல் போன்ற செயற்பகுதிகள் உடைமையும், விளைந்து பயனுதவும் பண்பும், உழுவோர்க்குத் தன் பயன் ஈதல் அவர்களை வாழ்வித்தல் எனும் நலனும் பெற்றுள்ளமை போல, நல்லாசிரியனும் மாணாக்கனது

குற்றத்தைப் பொறுத்தல் - அவன் தன்னை வழிபடும் பாங்கு அமைந்த பின்னர் அவனுக்கு ஏற்பத் தான் கல்விச்செல்வம் சான்று வழங்குதல் தன்மை - நாடிவந்த அவனை உரிய நெறிக்கண் செலுத்தி அறிவான் உயர்த்துதல் - எனும் இம்மாண்புகளை உடையானாதல் வேண்டும்.

5. பூ மங்கலப்பொருளாகி நற்காரியங்கட்கு ஏற்புடைமையும், நறுமணம் கமழ்தலும், உரிய காலத்தே மலர்ச்சி காட்டுதலும், வண்டு தன்பால் தேனுண நெகிழ்ந்து கொடுத்தலும், கண்டோரால் காமுறப்படுதலும், விரும்பி அணியப்படுதலும்-கொண்டுண்டுள்ளமை போல, நல்லாசிரியனும் எல்லா நற் காரியங்கட்கும் முதல்வனாக வழிபடத்தகும் பான்மையும், புகழ்மணம் கமழ்தலும், அதனால் பலரான் அறியப்பட்டிருத்தலும், பாடம்சொல்லும் உரிய நேரத்தே முகமலர்ச்சிகொண்டு, மாணாக்கன் கல்வியறிவினைத் தன்பால் பெறவேண்டும் செவ்வி யெளிமை தோற்றி, கண்டோரெல்லாரானும் தான் காமுறப் படுதலும், அவரான் விழைந்து போற்றப்படுதலும் - உடையனாதல் வேண்டும்.

6. துலாக்கோல் தன்பால் வைத்த பண்டம் தூக்கிய எடைக்கு மிகுந்தாலும் அன்றிக் குறைந்தாலும் தான் சமனாக நில்லாமையும், வைத்த பண்டத்தின் நிறையை ஐயம் தீர உணர்த்தலும், தான் எப்போதும் நடுவுநிலை கொண்டிருத்தலும் - ஆகிய இப்பண்புகள் உடைமை போல, நல்லாசிரியனும் மாணாக்கனால் வினவப்பட்ட பொருளிடத்தே குற்றம் மிகுதியாகவோ குறைவாகவோ தோன்றின் அம்மிகுதி குறைவுகளை உணர்ந்த அளவில் நில்லாது உரிய முறையில் உணர்த்திவிடுதலும் (பாடம் சொல்லும் நூலின்கண்ணும் அவை தோன்றின் அவ்வாறே உணர்த்திவிடுதலும்), அவனால் வினவப்பட்ட ஐயத்தினை நீக்குதலும், விருப்புவெறுப்பின்றி நடுவுநிலையொடு பயிற்றுதலும் - எனும் மாண்பினன் ஆதல் வேண்டும்.

துலாக்கோல் என்பது நூறுபலத்து அளவு தன் நாவின்கண் உள்ள வரையான் உணர்த்தும் சிறப்புடைய நிறுத்தற்கருவியை. துலாம் என்பது நூறுபலம்; அஃது ஆகுபெயரான் அதனை உணர்த்தும் வரையினை உணர்த்திற்று. (சண்முகனார் பா.வி.)

7. மடற்பனை என்பது மடலின்கண் காய்த்தலையுடைய பெண்பனையைக் குறியாது, காய்த்தல் இன்மையின் வேறாகக் காணப்படும் ஆண் பனையைக் குறித்தது - என்பர் சண்முகனார்.

8. இம்மாணாக்கர் தன்மை அன்னமும் கிளியும் நன்னிறமும் நெய்யரியும் யானையும் ஆனேறும் போல்வது. பாலும் நீரும் கலந்து வைக்கப்படின், நீரினின்று பாலைப் பிரித்து நுகரும் இயல்பிற்று அன்னம். சொல்லியவாறே சொல்லுவது கிளியினது இயல்பு. நெய்யரியாகிய பன்னாடையினது இயல்பு நல்ல சாரமிக்கவற்றை உள்ளே இறங்கச்செய்து சாரமற்ற பிறவற்றைத் தன்புறத்தே தங்கச்செய்தல். எந்நிறமும் தன்னிடத்தே வந்து படிதற்கு ஏற்புடைத்தாதல் நன்னிறத்து இயல்பு. தன் இனத்தொடு கூடிநின்று அதற்கு இடையூறு வாராது பாதுகாப்பது யானையினது இயல்பு.

ஆனேறு காட்டில் மேயுமிடத்தே எங்கேனும் ஒரு புத்தொலி தோன்றுமாயின், அதன் நன்மைதீமைகளை ஓர்ந்து அறியும் அறிவினது; அன்றி, மேய்க்கும் கோவலரது நெடுவிளியாகிய அழைப்புக்குரலை ஓர்ந்து ஆனினத்தொடு வந்து ஈண்டும் தன்மைத்து என்றலும் ஆம். (அகநா.253)

இவை போலவே நன்மாணாக்கனும், ஆசிரியன் சொல்லுவனவற்றுள் இராசத தாமத குணங்களால் நேர்ந்த வேண்டாதவற்றை நீக்கி அவன் அறிவுறுத்த வேண்டுவன மாத்திரமே ஏற்றலும், ஆசிரியன் பாடம்சொன்ன அம்முறையே பின்பற்றிப் பிறர்க்குப் பாடம் சொல்லுதலும், அவன் உரைத்தவற்றுள் பாடத்திற்கு இயைபில்லாத

அசாரப்பகுதியை நீக்கிச் சாரமாகிய இயைபுடையவற்றை மாத்திரம் மனங்கோடலும், தன் ஒருசாலைமாணாக்கர்தம் இடர் களைந்து அவர்தமை பேணிக் கொள்ளுதலும், சூழ்நிலைக்கேற்ப ஆசானுடைய எவ்வறிவுரையையும் ஏற்றுஅத்தக நிற்றலுடைமையும், சூழலில் தோன்றும் நிலைகளை ஓர்ந்து தன்னையும் தன்னொடு பயில்வோரையும் போற்றிக்கோடலும், ஆசானுடைய அழைப்பொலி கேட்டு விரைந்து செயற்படலும் என்றின்ன குணம்செயல்களை யுடையானாவன்.

9. குரங்கினைக் கல்லான் எறிந்து தான் கருதிய விளங்காயாகிய பயனைத் தன்னை நோக்கி அஃது எறியக் கைக்கொள்பவன் போல, கடைமாணாக்கனும் ஆசிரியனை வழிபட்டுக் கொள்ளும் முறையானன்றி, அவன்பால் சில கடாக்களை வினவித் தான் கருதிய பயனைக் கொள்வா னாவன்.

குளத்துத் தெளிந்த நீரைத் தான் அதன்கண் குறுக்கிட்டு வீழ்ந்து கலக்கி அருந்தும் எருமைபோல, கடைமாணாக்கனும் ஆசிரியனது தூய சிந்தையை நோவச் செய்து அவன் வேண்டாவெறுப்பொடு பாடம்சொல்ல அப்பயன் கொண்டொழிவானாவன்.

ஓரிடத்தே நிறையத் தனக்குத் தழைகளாம் இரை கிடப்பினும் அங்கேயே அவற்றை ஆர உண்ணாது பலவிடத்தும் சென்று சிறிதுசிறிது ஆர்ந்து நிரம்பா வயிற்றொடு திருதரும் யாடே போல, நல்லாசிரியன் ஒருவன்பாலே தான் அறிவு நிரம்புதற்கேற்ற கலைபயில் வாய்ப்பு இருப்பினும் அம்முழுப்பயனை ஆண்டே பெறாமல், பலர்ஆசிரியர்மாட்டும் சிறிதே சிறிதே பாடம்கேட்டுக் கல்வி நிரம்பாது உழல்பவன் ஆவன் கடை மாணாக்கன்.

தோணி நீரிடையன்றி நிலத்தில் இயங்காதவாறு போல, தான் கற்ற நூலின்கண் அன்றிப் பிறவற்றில் தன் அறிவு செல்லா

இயல்பினன் இடைமாணாக்கன் (ஆசிரியன் பாடம்சொன்ன நூற்கண் அன்றி, பிறவற்றையும் தானே பயின்று கொள்ளும் தகுதியின்மையன் ஆதலின், பிற நூற்கண் அவன்அறிவு செல்லா தாயிற்று.)

'குரங்கெறி விளங்கா யெருமை' என்னும் தொடரைச் சண்முகனார் '*குரங்கு எரி விலங்கு ஆய்எருமை*' என்று பாடம் ஓதி வேறுபொருள் காண்பர்.

*10.* பாடம் கேட்கும் களத்தினின்று விலகி நிற்பவர் கடைமாணாக்கர் ஆவார்: ஆசான் சொல்லும் பொருளைத் தமது உணர்வின்மையான் கருத்தின்றிக் கேட்பவர், முன்னர் அமர்ந்துகொண்டு பாடம்கேட்டற்கண் வெறுப்பு முகம் காட்டுபவர் (காய்தல் - முனிதல்), பொய்ம்மொழிகளை அடிக்கடிப் புகல்பவர், பலகாலும் பொருளின்றி நகைத்தல் புரிபவர், நிலைகொள்ளாது அலையும் மனத்தவர், தீயவற்றையே செவிகொடுத்துக் கேட்டலில் நாட்டமுடையவர் - என்றின்னர்.

*11.* கோடல்மரபு வழிபாடு முதலியவற்றில் திரிபில்லாத நன்மாணாக்கன் ஆவான் ஆசிரியன்மாட்டுப் பாடம் கேட்பானாயின், அவ்வருந்தொழிலான் வரும் வருத்தத்திற்கு ஏற்ப உரிய கல்விப்பயனை அடைந்தேதீர்வன்.

*12.* அம்மரபு வழிபாடு முதலியவற்றில் தன் முறைமையில்லானாகிய நன்மாணாக்கன் அல்லாதான், ஆசான்மாட்டுப் பாடம் கேட்பானாயினும், அதனை மனத்திற்கொள்ளும் பேறிழந்தோன் ஆவன்.

*13.* ஆசான் உரைத்தவற்றை மனம்கொள்ளத் தெளிந்து உணரவல்ல நன்மாணாக்கர், ஏனை ஒருசாலைமாணாக்கர் தம்மைக் கேட்ட பாடத்தின்கண் ஐயுற்று வினாவுழி, அவ்ஐயம் தீரச் செவ்விதின் தாம் உரைக்குங்கால், பலநூல்களினின்று ஆசான் எடுத்துரைத்த மேற்கோளை நினைவுகூர்ந்து சொல்லவேண்டுதலின் அவை தம் உரையிடையே கலந்து, தம் பாட அறிவிற்கு உரம் கூட்டும்.

*14.* சொற்கு உறுப்பாம் எழுத்தோசை குழல் போன்ற ஒன்றனுள் புகுத்த அதனுள்ளே செல்லுதலானும், அவ்வாறு சென்றது குழலின் மறுபுறத்துளை வழியே மீண்டு வருதலானும், கண்ணாடியறைக்கண் உள்ளே பேசிய ஓசை கண்ணாடிச் சுவரால் தடுக்கப்படுதலானும் (சேறல் மீடல் தடையுண்ணல் என்னும் இத்தொழில்வகையான் என்றவாறு) என்க.

*15.* ஆக்கம் என்றது, எழுத்தினான் ஆக்கப்படும் மொழியாக்கம்.

*16.* செய்யுளிடத்து, அறம் பொருள் இன்பம் என்னும் முப்பொருளும் அவற்றது நிலையின்மையும் ஆகிய அப்பொருட்கெல்லாம், ஆசிரியம் - வஞ்சி - வெண்பா - கலி- என்னும் நாற்பாக்களும் உரிய என்றவாறு.

*17.* காந்தருவமாவது இசை.

*18.* அவர் (நச்சினார்க்கினியர்) பன்னூல் பயின்ற செந்நெறிச் செல்வர் ஆதலின் தாமே ஒன்றைப் படைத்திட்டுப் பொய்கூறார் ஆகலானும், தொல்காப்பியனாரும் அகத்தியனாரும் நகுடற்குப்பின் தென்திசைப் போந்தபின் சுவர்க்கம் போய் மீண்டார் என எந்நூலகத்தும் இன்மையானும், நமக்கு மேற்கோள் கிட்டாமைகொண்டு அவர் உரைத்தன கொள்ளாம் எனல் அமையாது . . . . . தொல்காப்பியனார் அகத்தியனாரைச் சபித்தமையும், அவரது தவவன்மையையும் . . . . . நடுவுநிலையையும் புலப்படுத்தும் புகழ்ச்செய்தியே அன்றி இழிவு ஆகாது. (சண்முகனார் பா.வி.)

*19.* ஈண்டும் கூறினார் பாயிரம் செய்த ஆசிரியர் பனம்பாரனார் என்க.



# சிவஞானமுனிவரது உரை

## (சிறப்புப் பாயிரம்)

வடவேங்கடம் தென்குமரி ஆயிடை - வடக்கண் வேங்கடமும் தெற்கண் குமரியும் எல்லையாக உடைய அவ்விடம் ஆகிய;

தமிழ்கூறும் நல்லுலகத்து - தமிழ்மொழியைக் கூறும் நல்ல உலகத்தின்கண் வழங்கும்;

வழக்கும் செய்யுளும் ஆய் இரு முதலின் - வழக்கினையும் செய்யுளையும் ஆராய்ந்த பெரிய காரணத்தானே;

எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி - அவற்றின்கண்ண ஆகிய எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் பொருளிலக்கணமும் ஆராய்ந்து;

செந்தமிழ் இயற்கை சிவணிய - செந்தமிழின் உண்மையைப் பொருந்தி உணரும் பொருட்டு;

நிலத்தொடு முந்துநூல் கண்டு - அச்செந்தமிழ் நிலத்து மொழியொடு முற்பட்டுத் தோன்றும் நூலினை நோக்கி;

முறைப்பட எண்ணிப் புலம் தொகுத்தோன் - அந்நூலில் கிடந்த இலக்கணம் பிற்காலத்தார் உணரும் முறைமைப்படக் கருதி நூலைத் தொகுத்துச் செய்தான்;

போக்கு அறு பனுவல் - அங்ஙனம் செய்த குற்றமற்ற நூலினை;

நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து - மாற்றாரது நிலத்தைத் தனக்கு நல்கும் போர்த்திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தி அவைக்களத்தின்;

அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து - அறமே கூறும் நாவின்அகத்து

நான்மறையும் முற்றப் பயின்ற அதங்கோடு என்னும் ஊரின் ஆசிரியனுக்குக் குற்றமறத் தெரிவித்து;

மல்குநீர் வரைப்பின் - கடல் சூழ்ந்த நிலவுலகத்தில்;

ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன்பெயர்தோற்றி - ஐந்திரவியாகரணம் நிறைய உணர்ந்த தொல்காப்பியன் எனத் தன் பெயரைத் தோற்றுவித்தலான்;

பல்புகழ் நிறுத்த படிமையோன் - பல புகழையும் இவ்வுலகத்தில் நிலைபெறுத்தின தவஒழுக்கத்தினை உடையான் என்றவாறு.



## அரசஞ்சண்முகனார் சிறப்புப் பாயிரத்தைக் கண்ணழித்தவாறு:

வடவேங்கடம் தென்குமரி அவ்இடை - வடக்கின்கண் வேங்கடமலையும் தெற்கின்கண் குமரிமலையும் ஆகிய அவ்விரண்டனையும் எல்லையாகவுடைய நிலத்து வழங்குகின்ற;

தமிழ்கூறும் நல்லுலகத்து - தமிழ்மொழியைக் கூறும் நல்லாசிரியரது;

வழக்கும் செய்யுளும் அ இரு முதலின் - வழக்கும் செய்யுளும் ஆகிய அவ்விரண்டு இடத்துள்ள;

எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி - எழுத்தையும் சொல்லையும் பொருளையும் ஆராய்ந்து;

செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு - செந்தமிழ் இலக்கணம் முற்றும் நிரம்பிய தலைச்சங்கத்து வீற்றிருந்த புலவரொடு பயின்று;

முந்துநூல் கண்டு - அகத்தியம் முதலாய முந்துநூல்களை ஐயமும் மருட்கையும் அற அவர்பால் கற்றுணர்ந்து;

முறைப்பட எண்ணி - கற்றுணர்ந்தன முந்துநூலின்கண் முறையின்றி விரவிக் கிடத்தலான் அவை முறையொடு பொருந்திநிற்குமாறு கருதி;

புலம் தொகுத்தோன் - முந்துநூலின்கண் உள்ள அவ்விலக்கணங்களைத் தன் நூலுள்ளே தொகுத்துக் கூறினான்; (அவன் யாவனோ என்னின்)

போக்கு அறு பனுவல் - குற்றமற்ற நூலாராய்ச்சியினை யுடைய;

நிலம்தரு திருவின் பாண்டியன் அவையத்து - மாற்றாரது நிலத்தைத் தன்னை அடுத்தார்க்கு நல்கும் திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தி என்பானது அவையின்கண்ணே;

அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு-அறமே கூறும் நாவின்அகத்து நான்மறையும் முற்றப்பயின்ற அதங்கோடு என்னும் ஊரின் ஆசிரியனுக்கு;

அரில் தபத் தெரிந்து - நூற்குச் சொல்லப்பட்ட குற்றங்கள் அற விளங்கி;

மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி - ஒன்றனுள் பிறிதொன்று கலவாத மரபினையுடைய தனது நூல்முறையைக் காட்டி;

மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தன்பெயர் தொல்காப்பியன் எனத் தோற்றி - அந்நூல் பெயரானே, கடல் சூழ்ந்த நிலவுலகத்தின்கண் ஐந்திரவியாகரணம் நிறைய உணர்ந்த தன்பெயரைத் தொல்காப்பியன் என்று தோன்றச் செய்து;

பல் புகழ் நிறுத்த படிமையோன் - பல்புகழையும் மாயாமை நிறுத்திய தவஒழுக்கத்தை உடையோன் என்றவாறு.

**இனிப் பொழிப்புத் திரட்டல் வருமாறு:**

குற்றமற விளங்கிய மயங்காத மரபினையுடைய தனது இயற்றமிழ் நூலகத்துத் தான் தொகுத்த முறையினைப் பாண்டியன் அவையத்து அதங்கோட்டு ஆசாற்குக் காட்டி, அவர் குற்றமின்மை ஆராய்ந்து நன்றெனக் கொண்டமை யானே, அந்நூலின்கண் ஐந்திரம் நிறைந்த தன்பெயர் தொல்காப்பியன் என்று தோன்றச் செய்து பல்புகழ் நிறுத்த படிமையோன், அந்நூலை எவ்வாற்றான் கூறினானோ எனின், வடவேங்கடமும் தென்குமரியும் ஆகிய அவற்றை எல்லையாகவுடைய நிலத்து வழங்கும் தமிழ்மொழியைக் கூறும் நல்லாசிரியரது வழக்கும் செய்யுளும் என்று சொல்லப்பட்ட முதலாகிய அவ்விரண்டு இடத்துள்ள

எழுத்தையும் சொல்லையும் பொருளையும் நாடிச் செந்தமிழ் இலக்கணம் நிரம்பிய நிலத்தாரொடு பயின்று, முந்து நூலைக்கண்டு, அந்நூலின்கண் அவை முறையின்றிக் கிடத்தலான் அவை முறையொடு பொருந்தக் கருதி, அம்முந்துநூல் இலக்கணங்களையே தொகுத்துக் கூறினான் - எனத் திரட்டிக் கூறுதல்.

அங்ஙனம் கூறினும், தொல்காப்பியன் என்னும் படிமை யோன் நாடி, சிவணிய நிலத்தொடு கண்டு எண்ணித் தொகுத்துக் காட்டித் தன்பெயர் தோற்றிப் பல்புகழ் நிறுத்தான்- என்பதே கருத்தாகக் கொள்க.

### பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் உரை

வடக்கின்கண் வேங்கடத்தையும் தெற்கின்கண் குமரியையும் உடைய அவ்விடமாகிய தமிழ் வழங்கும் நல்லுலகத்தினுடைய உலகவழக்கு செய்யுள் வழக்கு இவற்றை ஆராய்ந்த பெரிய காரணத்தான், எழுத்து சொல் பொருள் இவற்றைப் பற்றி, செந்தமிழின் இயல்பொடு பொருந்துமாறு, அந்நிலத்துள்ள முந்துநூல்களைப் படித்து முறைப்பட ஆராய்ந்து இலக்கணம் செய்தான்,

அக்குற்றமற்ற நூலினை, மாற்றார்நிலங்களைக் கொள்வதும் அவற்றைப் பிறர்க்கு அளிப்பதும் ஆகிய மாட்சிமையுடைய பாண்டியனது அவையின்கண், அறமே கூறுகின்ற நாவினால் நாலு வேதங்களையும் முற்ற அறிந்த அதங்கோட்டு ஆசானுக்குக் குற்றமறத் தெரிவித்து, மயக்கம்இல் மரபோடு கூடிய இலக்கணத்தை முறையாகப் படித்துக்காட்டி, கடல்சூழ் நிலத்தின்கண் ஐந்திரவியாகரணம் நன்கு உணர்ந்த தொல்காப்பியன் எனத் தனது பெயரைத் தோற்றுவித்துப் பலபுகழினை ஈண்டு நிறுத்திய தவமுடையோன் என்றவாறு.

## தொல்காப்பியம் - சிறப்புப்பாயிரம்

# ரெட்டியார் அவர்களது குறிப்புரை

## எழுத்ததிகார ஆராய்ச்சி

## பிற்சேர்பு - I

இப்பாயிரத்தில், 'செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு' என்பதற்கு, செவ்விது ஆக்கப்பட்ட தமிழ்மொழியின் இயல்பு பொருந்திய செந்தமிழ்நாட்டுப் புலவருடன் கூடிப் பழைய இலக்கணங் களை ஓதிஅறிந்து - என்னும் பொருள் சிறக்கும். இனி, 'செந்தமிழ் இயற்கை சிவணிய நிலம்' என்றது தமிழ்ச்சங்கத்தை எனினும் அமையும்.

வேங்கடம் - வேங்கட மலை. இது திருமாலின் மலை ஆதல் ஆழ்வார்கள் காலத்திற்கு முற்பட்டவர் ஆகிய இளங்கோவடிகள் வாக்கினால் அறியலாகும்.

குமரி - குமரிமலை. எல்லை கூறுவார், சலியாது ஒருநிலையதாய் இருக்கும் மலையைக் கூறுதல் அமைதியே அன்றி, பெருகும் புனலால் ஒவ்வொரு காலத்தில் தன் நிலை மாறுபடுகின்ற யாற்றைக் கூறுதல் அத்துணை அமைதியாதல் இன்று. அன்றியும், வடக்கண் மலையைக் கூறியவர், தெற்கண்ணும் மலை இருக்குங்கால் அதனை விடுத்து யாற்றைக் கூறுவாரோ என்பது உளங்கொளத்தக்கது.

எழுத்து முதலியவற்றின் இலக்கணங்களை ஆராய்தற்கு வழக்கு செய்யுள் என்னும் இரண்டும் காரணமாய் இருத்தலின் 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின், எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' என்றார். ஆயிரு- அவ்விரண்டு. வழக்காவது நன்மக்கள் வழங்கும் உலக வழக்கு.

நிலந்தரு திருவின் பாண்டியனது பெயர் நெடியோன் என்பது என்று கொள்ளுதல் தகும். (மதுரைக். 59-61, 761-81)

இவ்வாசிரியர் பெயர் 'காப்பியன்' என்பது என்றும், காப்பியன் என்னும் பெயருடையார் பலர் தோன்றி விளங்கிய காலத்து இவரைத் 'தொல்காப்பினார்' என்று அடைகொடுத்து வழங்கலாயினர் என்றும் கருதுதல் தகும். தொல்கபிலர் என்று வழங்கும் பெயர் இதற்குத் துணைநிற்கும். 'தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி' என்றதூஉம் காண்க.

'முந்துநூல் கண்டு' எனவே, வழி பெறப்பட்டது. 'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி எனவே, எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என எல்லை (அளவு) பெறப்பட்டது.

நூற்பெயர் இப்பாயிரத்தான் அறியப்படுவதின்று.

'புலம் தொகுத்தோன்' என்றதனான் யாப்புப் பெறப்பட்டது, யாப்பாவது தொகுத்தல் முதலிய நால்வகை யாப்பினுள் ஒன்றே என்பது போதரும் ஆகலின் (மர.97).

அவ் + இடை = ஆயிடை என்றாயிற்று. அவ் என்னும் சுட்டு ஆ எனத் திரிந்தது. இதனை இளம்பூரணர் "ஆயிடை என்பது அவ் என்னும் வகர ஈறு வேறுபட முடித்தது" என்றதனானும் (எழுத்.483 உரை), " அப்பெயரெச்சத்திற்கு, ஆயிடை என்புழி அவ் என்னும் வகரஈற்றுப் பன்மைச் சுட்டுப்பெயரை முடிபு ஆக்குக" என்று பதிற்றுப்பத்தின் (பாடல் 43) உரையாசிரியர் எழுதியுள்ளமை யானும் அறியத்தகும்.



## ச. பாலசுந்தரம் உரை

வடவேங்கடம் தென்குமரி ஆயிடை - வடக்கின்கண் வேங்கடமும் தெற்கின்கண் குமரியும் ஆகிய அவ்விரண்டு எல்லைகட்கும் இடைப்பட்டதாகிய;

தமிழ் கூறும் நல்லுலகத்து - தமிழ்மொழியை வழங்கும் மக்கள் வாழும் நலம் சான்ற உலகிடத்து விளங்கும்;

வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் - பேச்சு வழக்கும் செய்யுள் வழக்கும் ஆகிய அவ்விரண்டன் அடிப்படையில்;

எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி-ஒலியானாம் எழுத்துக்களின் அமைப்பியல் மரபினையும், அவற்றானாம் சொல்லாக்க மரபுகளையும், அவை கருவியாக உணரப்படும் பொருள்இயல்பு முறைகளையும் (நடுவுநிலையோடு) நோக்கி ஆராய்ந்து; (தானும் ஓர் இயற்றமிழ் இலக்கணப் பனுவலைச் சுருக்கமாகச் செய்து தரல் வேண்டி)

செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்து நூல் கண்டு- செந்தமிழ் இயல்பு பொருந்திய செய்யுள் இலக்கியங்களொடு முந்திய யாப்பின்வழி வந்த இலக்கண நூல்களையும் கற்றுத் தெளிந்து;

முறைப்பட எண்ணி - (நோக்கிப் பயின்று ஆராய்ந்த வற்றையும் கற்றுத் தெளிந்தவற்றையும்) முறையாகக் கருதிச் செய்யத் துணிந்து;

புலம் தொகுத்தோனே போக்கு அறு பனுவல் - கூறியது கூறல் முதலாய குற்றங்கள் அற்ற பனுவலாக அவ்விலக்கணங் களைத் தொகுத்தளித்தான்; (அவன் யாவன் எனின்)

நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து - ஆற்றாரது நிலத்தினைக் கைக்கொண்டு, தன்கீழ் (ஆற்றுவாராய்) வாழ்வார்க்குத் தந்து அளிக்கும் வெற்றித் திருவினையுடைய பாண்டியனது நூலோர்அவையின்கண்;

அறம் கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு- நடுவனாக அமர்ந்து ஒருபால் கோடாமல் அறமே கூறும் நாநயமுடைய, நான்காகிய மறைநூல் பொருளறிவு முதிர்ந்த, அதங்கோடு என்னும் ஊரினன் ஆகிய ஆசிரியனுக்கு;

அரில்தபத் தெரிந்து - (தான் செய்த நூலைக்) குறைவறத் தெரிவித்து;

மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி - (உயிர்மெய்யை உயிராகக் கோடல், அளபெடைகளை எழுத்தாக எண்ணுதல் முதலாகப் பிறர் கூறும்) மயக்கங்கள் இல்லாத தமிழ் மரபோடு அமைந்த எழுத்திலக்கணங்களை முறைப்பட எடுத்துக்காட்டி;

மல்குநீர் வரைப்பின் - கடல் சூழ்ந்த இவ்வுலகின்கண்;

ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன்பெயர் தோற்றி- ஐந்திரநூலினை முற்றக் கற்றுணர்ந்த (தன் இயற்பெயர் மறையத்) தொல்காப்பியன் என்னும் காரணப்பெயரைத் (தன் நூலாலே) தோற்றுவித்து;

பல்புகழ் நிறுத்த படிமையோன் - பலபுகழையும் மறையாமல் நிலைநிறுத்திய தவஒழுக்கத்தால் ஒளிரும் திருவடிவினை யுடையோன் என்றவாறு.



## க. வெள்ளைவாரணனார் உரை

வடக்கின்கண் உளதாகிய வேங்கடமலைத்தொடரும் தெற்கின்கண் உளதாகிய குமரியாறும் ஆகிய அவற்றை எல்லையாகவுடைய இடமாகிய தமிழ்மொழியினைக் கூறும் நன்மக்கள் வாழும் தமிழ்நிலத்து வழங்கும் உலக வழக்கும் செய்யுள்வழக்கும் ஆகிய அவ்விருகாரணத்தானும் எழுத்திலக்கணத்தினையும் சொல்லிலக்கணத்தினையும் பொருளிலக்கணத் தினையும் ஆராய்ந்து, செந்தமிழ் மொழியின் இயல்போடு பொருந்திய முன்னைத் தமிழகத்தில் தோன்றி வழங்கும் முந்து நூல்களில் சொன்ன இவ்விலக்கணங்களைக் கண்டு, அவற்றை முறைப்பட ஆராய்ந்து, அவ்விலக்கணங்களைத் தொகுத்து ஒரு நூலாகச் செய்தான்; அங்ஙனம் செய்த குற்றமற்ற நூலினை நிலந்தரு திருவின் பாண்டியன் அவையின்கண்ணே, அறமே கூறும் நாவினால் நான்கு மறைகளையும் முற்றப் பயின்ற அதங்கோட்டாசான் என்னும் ஆசிரியனுக்குக் குற்றமறத் தெரிவித்து, முன்னை நூல்களிற் போல (இயலும் இசையும் நாடகமும் ஆகிய மூன்று தமிழும்) ஒன்றோடொன்று கலந்து மயங்காதபடி இயற்றமிழை வேறு பிரித்து முறைப்பட அறிவித்து, கடல் சூழ்ந்த நிலஎல்லையிலே ஐந்திர வியாகரணத்தை முற்ற உணர்ந்த தொல்காப்பியன் எனத் தன் பெயரைத் தோற்றுவித்தலால் பல புகழையும் இவ்வுலகத்தில் நிலைபெறுத்தின தவ ஒழுக்கத்தினை உடையோன் என்றவாறு.



# வ. சுப. மாணிக்கம் உரை

***சிறப்புப் பாயிரம் - அகலவுரை***

வடக்கே திருவேங்கடமலையின் வடபகுதி, தெற்கே குமரிமலையின் தென் பகுதி, கிழக்கும் மேற்கும் கடல்கள், இந்நான்கும் எல்லையாக, இவற்றுக்கு உட்பட்ட பெருநாடே தமிழ்மொழி பேசும் நன்மக்கள் வாழும் நிலம் ஆகும். இத்தமிழக மக்களின் வாழ்க்கைவழக்கம் செய்யுள்முறை இரண்டினையும் அடிப்படையாகக் கொண்டு எழுத்து சொல் பொருள் என்ற மூன்று கூறுகளையும் ஆராய்ந்தான்; பன்னிரு தமிழ்நிலப் பகுதி வழக்கங்களையும் முற்பட்ட இலக்கண நூல்களையும் கற்றுத் தெளிந்தான்; இவற்றையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்துப் 'போக்கறு பனுவல்' என்ற பெயரில் இலக்கணவிதிகளை ஒருசேரக் கூட்டி எழுதினான்; வஞ்சிப்போர் செய்து மாற்றார் நாட்டுப் பகுதிகளைச் சேர்க்கும் வெற்றித் திருவுடைய பாண்டியனது அரசவைக்கண், செந்நாவும் நாற்பொருள் கூறும் தமிழ்மறைப் புலமையும் உடைய பெரும்புலவர் அதங்கோட்டாசான் தலைமை தாங்க, அவரும் அவைப்புலவோரும் பாண்டியனும் எழுப்பிய சிக்கல்கள் எல்லாம் தீரும்படி ஆராய்ந்து தெளிவான நெறியிலே தான் நூல் எழுதிய முறைகளை மேற்கோளோடு எடுத்துக் காட்டினான்; அவன் யார் என்னின், கடல் சூழ்ந்த இவ்வுலகில் ஐந்திணை இலக்கணம் கூறும் ஆற்றல் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன் பெயரைச் சிறப்பாக அறியச்செய்து பலதுறையிலும் புகழை நிலைநிறுத்திய சான்றோன்.

## வ. சுப. மாணிக்கம் குறிப்புரைகள்

# பாயிரம்

***'ஐந்திரம் நிறைந்த'***

ஐந்திணை இலக்கணம் சொல்லும் ஆற்றல் நிறைந்த என்பது பொருள். இப்பொருள் இடர்ப்பாடுடையது . . . . . ஒருவரைப் பாராட்டுங்கால் செய்ததைச் சுட்டிப் பாராட்டவேண்டுமேயன்றிச் செய்ததை விட்டுவிடுதல் பொருந்தாது. செய்ததைச் சுட்டியபின் பொருந்திய பிறவற்றையும் இணைத்துக் கொள்ளலாம். திருவள்ளுவர் கற்ற நூல்கள் எவ்வளவோ இருக்கும்; எனினும் பாராட்டுத் திருக்குறள் படைப்புக்கே . . . . . கடல்சூழ் உலகில் ஐந்திரம் என்னும் வடமொழி வியாகரணத்தைக் கண்டு அறிந்த தொல்காப்பியன் எனத் தன்பெயரை வெளிப்படுத்தினான் என்று பொருள்கொண்டால், இந்த வேற்றுநூலறிவு அவருக்கு உலகப்புகழுக்குப் போதிய காரணம் ஆகுமா? அவர்நூலுள் இதுபற்றிய ஒருகுறிப்பாவது உண்டா? . . . . . . .

இப்பாயிரத்தில் வரும் எண்ணிக்கை தொடர்பான ஓர்அமைப்பைச் சுட்டிக் காட்ட விரும்புவன். ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து பன்மை என்ற எண்ணிக்கை நாட்டம் பனம்பாரனார்க்கு இருந்தமை தெளிவாகிறது. ஒன்று தமிழ் கூறு நல்லுலகம்; இரண்டு வழக்கும் செய்யுளும்; மூன்று எழுத்தும் சொல்லும் பொருளும்; நான்கு நான்மறை; ஐந்து ஐந்திரம்; பன்மை பல்புகழ் நிறுத்தல். இவ்வோட்டத்தைக் காணுங்கால், நான் மறைக்குப் பின்வரும் ஐந்திரம் ஐந்து என்னும் எண் குறிப்பினதாக இருத்தல் வேண்டும். ஒருசாரார் உரைகூறுவது போல, எழுத்து - சொல் - பொருள் - யாப்பு - அணி - என்று

ஐந்திணைக் கொள்ளலாம் எனினும், எழுத்தும் சொல்லும் பொருளும் என்னும் முப்பாகுபாடே அன்று இருந்த வழக்கு ஆதலானும், மெய்ப்பாடு விடுபட்டுப் போதலானும், அவ்வுரை பிற்காலச் சாயலது.

திருக்குறள் உரைகளை எல்லாம் கற்ற பெருக்கம் ஒருவனுக்கு இருந்தாலும் பரிமேலழகர் உரையை நன்கு கற்றவன் என்று வீறுபடப் பாராட்டுவது உண்டன்றோ? அதுபோல் எழுத்து-சொல்-பொருள்-என்ற முப்புலஅறிவு இருந்தாலும், தொல்காப்பியர் தம் ஐந்திணையிலக்கண வன்மையைப் பொருளதிகாரத்து விரிவுபட வெளிப் படுத்தியுள்ளார். ஆதலின் 'ஐந்திறம் நிறைந்த' என்ற பெயர் வீறு பெற்றார் என்க.



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.

# எழுத்ததிகாரம் - இளம்பூரணம்

## நூன் மரபு

*1. முதலெழுத்து முப்பது*

**எழுத்தெனப் படுப**
**அகரமுதல் னகர இறுவாய்**
**முப்பஃது என்ப**
**சார்ந்துவரல் மரபின் மூன்று அலங்கடையே.**

*என்பது சூத்திரம்.*

*இவ்வதிகாரம் என்நுதலி எடுத்துக் கொள்ளப் பட்டதோ எனின், அதிகாரம் நுதலியதூஉம் அதிகாரத்தினது பெயர் உரைப்பவே அடங்கும். அதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், எழுத்ததிகாரம் என்னும் பெயர்த்து. எழுத்து உணர்த்தினமை காரணத்தின் பெற்ற பெயரென உணர்க.*

*எழுத்து எனைத்துவகையான் உணர்த்தினானோ எனின், எட்டு வகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினான் என்பது.*

*அவற்றுள் எட்டுவகையாவன: எழுத்து இனைய என்றலும், இன்ன பெயர என்றலும், இன்ன முறைய என்றலும், இன்ன அளவின என்றலும், இன்ன பிறப்பின என்றலும், இன்ன புணர்ச்சிய என்றலும், இன்ன வடிவின என்றலும், இன்ன தன்மைய என்றலும் என இவை.*[1]

*அவற்றுள், தன்மையும் வடிவும் ஆசிரியன் தான் உணருமெனினும், நமக்கு உணர்த்தல் அருமையின், ஒழிந்த ஆறுமே இதனான் உணர்த்தினான் என உணர்க.*

*இனி, எட்டிறந்த பலவகையாவன: உண்மைத் தன்மையும், குறைவும், கூட்டமும், பிரிவும், மயக்கமும்,*

மொழியாக்கமும், நிலையும், இனமும், ஒன்று பலவாதலும், திரிந்ததன் திரிபு அது என்றலும், பிறிது என்றலும், அதுவும் பிறிதும் என்றலும், நிலையிற்று என்றலும், நிலையாது என்றலும், நிலையிற்று நிலையாது என்றலும், இன்னோரன்னவும் என இவை. இவையெல்லாம் ஆமாறு மேல் வந்தவழிக் கண்டுகொள்க.[2]

இவ்வதிகாரத்து இலக்கணம் கருவியும் செய்கையும் என இருவகைத்து. அவற்றுள் கருவி, புறப்புறக் கருவியும் புறக்கருவியும் அகப்புறக்கருவியும் அகக்கருவியும் என நான்கு வகைப்படும்.

செய்கை, புறப்புறச் செய்கையும் புறச்செய்கையும் அகப்புறச் செய்கையும் அகச்செய்கையும் என நான்கு வகைப்படும்.

நூல்மரபும் பிறப்பியலும் புறப்புறக் கருவி. மொழிமரபு புறக்கருவி. புணரியல் அகப்புறக் கருவி. 'எகர ஒகரம் பெயர்க்கு ஈறாகா, முன்னிலை மொழிய என்மனார் புலவர்' (273) என்றாற் போல்வன அகக்கருவி.[3]

'எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே, உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்' (141) என்றாற் போல்வன புறப்புறச் செய்கை, 'லனஎன வரூஉம் புள்ளி முன்னர்த், தந எனவரின் றன ஆ கும்மே' (150) என்றாற் போல்வன புறச்செய்கை. 'உகரமொடு புணரும் புள்ளி இறுதி, யகரமும் உயிரும் வருவழி இயற்கை' (161) என்றாற் போல்வன அகப்புறச்செய்கை. தொகைமரபு முதலிய ஓத்தினுள் இன்ன ஈறு இன்னவாறு முடியும் எனச் செய்கை கூறுவன எல்லாம் அகச் செய்கை.[4]

இவ்வோத்து என் நுதலிற்றோ எனின், அதுவும் இதன்பெயர் உரைப்பவே அடங்கும். இவ்வதிகாரத்தான்

சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை ஓராற்றான் தொகுத்து உணர்த்துதலின் 'நூல்மரபு' என்னும் பெயர்த்து. இதனுள் கூறுகின்ற இலக்கணம் மொழியிடை எழுத்திற்கு அன்றித் தனிநின்ற எழுத்திற்கு என உணர்க.

இவற்றுள் இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், எழுத்துக்களின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

***இதன் பொருள் :*** எழுத்து என்று சிறப்பித்துச் சொல்லப்படுவன அகரமாகிய முதலை உடையனவாகிய, னகரமாகிய இறுவாயை உடையன வாகிய முப்பஃது என்று சொல்லுவர் ஆசிரியர், சார்ந்து வருதலாகிய இலக்கணத்தினையுடைய மூன்றும் அல்லாதவிடத்து; மூன்றுமானவிடத்து முப்பத்துமூன்று என்று சொல்லுப என்றவாறு.

***வருமாறு:*** அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ; க ங ச ஞ ட ண த ந ப ம ய ர ல வ ழ ள ற ன - என வரும்.

'எனப்படுப' என்ற சிறப்பான், அளபெடையும் உயிர்மெய்யும் வரிவடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன.

அ ஆ - என்பன பெயர்; முறை அம்முறை; தொகை முப்பது.

அவற்றுள், அகரம்தானும் இயங்கித் தனிமெய்களையும் இயக்குதல் சிறப்பான் முன்வைக்கப்பட்டது. னகாரம் வீடுபேற்றிற்கு ஏற்ற ஆண்பாலை உணர்த்துதல் சிறப்பான் பின் வைக்கப்பட்டது.

தொகை, தொகையுள் தொகையும் தொகையுள் வகையும் தொகையுள் விரியும், வகையுள் தொகையும் வகையுள் வகையும் வகையுள் விரியும், விரியுள் தொகையும் விரியுள் வகையும் விரியுள் விரியும் என ஒன்பது வகைப்படும்.

எழுத்து என்பது தொகையுள் தொகை; முப்பஃது என்பது அதன் வகை; முப்பத்து மூன்று என்பது அதன் விரி. முப்பது என்பது வகையுள் தொகை: முப்பத்து மூன்று என்பது அதன் வகை; அளபெடை தலைப்பெய்து நாற்பது என்பது அதன் விரி. முப்பத்து மூன்று விரியுள் தொகை; நாற்பது என்பது அதன் வகை: உயிர்மெய் தலைப்பெய்து இரு நூற்றைம்பத்தாறு என்பது அதன் விரி.

செய்யுள்இன்பம் நோக்கி 'எழுத்தெனப் படுப' என வகரம் நீக்கிப் பகரம் இடப்பட்டது.

'அகரமுதல் னகரஇறுவாய்'[5] என்பன இரு பெயரொட்டு ஆகுபெயரான் முப்பதன்மேல் நின்றன. (1)

## இளம்பூரணம் உரைக்குறிப்பு

### நூன் மரபு

**சூ. 1. 1, 2.** எட்டுவகை, எட்டிறந்த பலவகை: இவற்றின் விளக்கங்களை நச்சினார்க்கினியர் உரையிற் காண்க. மாணாக்கர்க்கு உய்த்துணர்வு இன்றெனெ, இளம்பூரண அடிகள் பெயர் மாத்திரம் சுட்டிப்போந்தவற்றை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டொடு விளக்குவார்.

3. கருவியாவது, செய்கை நிகழ்தற்கு முன் நிலை மொழியிலும் வருமொழியிலும் மேற்கொள்ளும் சில அமைவுகள். செய்கையாவது நிலை மொழியது ஈற்றெழுத்தும் வருமொழியது முதலெழுத்தும் புணரும் முறைமை.

எழுத்துக்கள்தாம் மொழிநிலை எய்திச் செய்கை பெறுகின்றன ஆகலின், அவற்றின் இலக்கணங்கள் செய்கைக்குப் புறப்புறக்கருவி ஆகின்றன. நிலைமொழி

வருமொழியாக நின்று செய்கை பெறுவன மொழிகளே ஆகலின், அவற்றின் இலக்கணங்கள் செய்கைக்குப் புறக்கருவியாம். அவ்வாறு இருமொழியும் புணர்கையில் நிலைமொழியீறும் வருமொழிமுதலும் எய்துகின்ற மூன்று திரிபுகளையும், திரிபு எய்தாமல் நிற்கும் இயல்புநிலையையும், நிலைமொழியீறு பெறும் சாரியைகள் இன்ன என்பதையும், அச்சாரியையது திரிபு முதலியவற்றையும் கூறும் புணரியல் பகுதி அகப்புறக்கருவி எனப்படும். நிலைமொழியீற்றில் நிற்றற்குரிய எழுத்துப் பற்றிய விதிகளைக் கூறுவது அகக் கருவியாம். இந்நான்கனுள், முதல் இரண்டும் பரம்பரையாற் கருவியாதலும் ஏனை இரண்டும் நேரே கருவியாதலும் உணரப்படும். கருவியாவது ஒன்றே செய்கை நோக்கி இவ்வாறு நான்காயினமை காண்க.

*4.* இனி, நிலைமொழியீறு ஒன்றும் பற்றி நிகழ்வது அகச்செய்கையாம். அவ்வீற்றினைப் பற்றி நிகழாது அவ்வீறு பற்றிவரும் சாரியையோ எழுத்தோ பற்றி நிகழ்வது அந்நிலைமொழியீற்றுக்குப் புறமாகலின் அகப்புறச் செய்கையாம். இனி நிலைமொழியைப் பற்றிய மேலையிரண்டு திறமும் இன்றி, வருமொழி பற்றி நிகழ்வது மேலனவற்றுக்குப் புறமாகலின் புறச்செய்கையாம். நிலைமொழியீறு வருமொழிமுதல் என இரண்டனையும் பற்றாமல் இடையே தோன்றும் உடம்படுமெய் போன்ற ஓரெழுத்து வருதல் பற்றி விதிப்பது புறப்புறச்செய்கையாம்.

*5.அகரமாகிய முதலையுடையன, னகரமாகிய இறுதியை* யுடையன என்று விரிதலின் இருபெயரொட்டு ஆகுபெயராய் முப்பது எழுத்துக்களைக் குறித்து வருதல் காண்க. அகரமும் னகரமும் தழுவிக்கொள்ளப்படுதலின் அன்மொழித்தொகை என்றல் பொருந்தாது.

## நச்சினார்க்கினியம்

### 1. நூன் மரபு

*1. முதலெழுத்து முப்பது*

**எழுத்தெனப் படுப**
**அகரமுதல்**
**னகர இறுவாய் முப்பஃது என்ப**
**சார்ந்துவரல் மரபின் மூன்றுஅலங் கடையே**

என்பது சூத்திரம்.

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், எழுத்திலக்கணம் உணர்த்தினமை காரணத்தான் எழுத்ததிகாரம் என்னும் பெயர்த்து. எழுத்தை உணர்த்திய அதிகாரம் என விரிக்க. அதிகாரம் - முறைமை.

எழுத்து உணர்த்துமிடத்து எனைத்துவகையான் உணர்த்தினாரோ எனின், எட்டுவகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினார் என்க.

எட்டுவகைய என்பார் கூறுமாறு : எழுத்து இனைய என்றலும், இன்ன பெயரின என்றலும், இன்ன முறையின என்றலும், இன்ன அளவின என்றலும், இன்ன பிறப்பின என்றலும், இன்ன புணர்ச்சியின என்றலும், இன்ன வடிவின என்றலும், இன்ன தன்மையின என்றலும் ஆம். இவற்றுள் தன்மையும் வடிவும் நமக்கு உணர்த்தலாகாமையின் ஆசிரியர் ஈண்டு உரைத்திலர். ஏனைய இதனுள் பெறுதும்.

எழுத்து இனைய என்றலைத் தொகைவகைவிரியான் உணர்க. முப்பத்து மூன்று என்பது தொகை. உயிர் பன்னிரண்டும், உடம்பு பதினெட்டும் சார்பின் தோற்றம் மூன்றும் அதன் வகை. அளபெடை ஏழும், உயிர்மெய் இருநூற்றொருபத்தாறும் அவற்றொடும் கூட்டி இருநூற்றைம்பத்தாறு எனல் விரி.

இனி எழுத்துக்களின் பெயரும் முறையும் தொகையும் இச்சூத்திரத்தான் பெற்றாம். வகை 'ஔகார இறுவாய்' (8) என்பதனானும் 'னகார இறுவாய்' (9) என்பனானும், 'அவைதாம், குற்றியலிகரம்' (2) என்பதனானும் பெற்றாம். விரி 'குன்றிசை மொழிவயின்' (41) என்பதனானும், 'புள்ளி இல்லா' (17) என்பதனானும் பெற்றாம்.

அளபு 'அவற்றுள், அ இ உ (3) என்பதனானும், 'ஆ ஈ ஊ' (4) என்பதனானும், 'மெய்யின் அளவே' (11) என்பதனானும், 'அவ்வியல் நிலையும்' (12) என்பதனானும் பெற்றாம்.

பிறப்பு, பிறப்பியலுள் பெற்றாம்.

புணர்ச்சி 'உயிர்இறு சொல்முன்' (107) என்பதனானும், 'அவற்றுள், 'நிறுத்த சொல்லின்' (108) என்பதனானும், பிறவாற்றானும் பெற்றாம்.

இனி, எட்டிறந்த பல்வகைய என்பார் கூறுமாறு: எழுத்துக்களின் குறையும், கூட்டமும், பிரிவும், மயக்கமும், மொழியாக்கமும், நிலையும், இனமும், ஒன்று பலஆதலும், திரிந்ததன் திரிபு அது என்றலும், பிறிது என்றலும், அதுவும் பிறிதும் என்றலும், நிலையிற்று என்றலும், நிலையாது என்றலும், நிலையிற்றும் நிலையாதும் என்றலும், இன்னோரன்ன பலவும் ஆம்.

குறைவு 'அரையளபு குறுகல்' (13), 'ஓரளபு ஆகும்' (57) என்பனவற்றான் பெற்றாம்.

கூட்டம் 'மெய்யோடு இயையினும்' (10) 'புள்ளியில்லா' (17) என்பனவற்றான் பெற்றாம்.

பிரிவு , 'மெய்உயிர் நீங்கின் தன்னுரு ஆகும்' (139) என்பதனான் பெற்றாம்.

மயக்கம் 'ட ற ல ள' (23) என்பது முதலாக 'மெய்ந்நிலை சுட்டின்' (30) என்பது ஈறாகக் கிடந்தனவற்றான் பெற்றாம்.

மொழியாக்கம் 'ஓரெழுத் தொருமொழி' (45) என்பதனான் பெற்றாம், அவ்வெழுத்துக்களை மொழி ஆக்கலின்.

நிலை: 'பன்னீ ருயிரும்' (59), 'உயிர்மெய் அல்லன' (60), 'உயிர்ஔ' (69), 'ஞணநமன' (78) என்பனவற்றான் மொழிக்கு முதலாம் எழுத்தும் ஈறாம் எழுத்தும் பெற்றாம்.

இனம் 'வல்லெழுத்து என்ப' (19), 'மெல்லெழுத்து என்ப' (20), இடையெழுத்து என்ப' (21), 'ஔகார இறுவாய்' (8), ' னகார இறுவாய்' (9) என்பனவற்றான் பெற்றாம். இவற்றானே எழுத்துக்கள் உருவாதலும் பெற்றாம். இவ்வுருவாகிய ஓசைக்கு ஆசிரியர் வடிவுகூறாமை உணர்க. இனி, வரிவடிவு கூறுங்கால் மெய்க்கே பெரும்பான்மையும் வடிவு கூறுமாறு உணர்க.

[1]ஒன்று பலவாதல்'எழுத்தோ ரன்ன' (141) என்பதனான் பெற்றாம்.

[2]திரிந்ததன் திரிபு அது என்றல் 'தகரம் வருவழி' (369) என்பதனானும் பிறாண்டும் பெற்றாம்.

[3]பிறிது என்றல் 'மகர இறுதி' (310), ' ணகார இறுதி' (332) என்பனவற்றான் பெற்றாம்.

[4]அதுவும் பிறிதும் என்றல் 'ஆறன் உருபின் அகரக் கிளவி' (115) என்பதனான் பெற்றாம்.

[5]நிலையிற்று என்றல் 'நிறுத்த சொல்லின் ஈறாகு' (108) என்பதனான் பெற்றாம்.

[6]நிலையாது என்றல் நிலைமொழியது ஈற்றுக்கண் நின்றும் வருமொழியது முதற்கண் நின்றும் பொருட்புணர்ச்சி தம்முள் இலவாதல். அது 'மருவின் தொகுதி' (111) என்பதனான் பெற்றாம்.

[7]நிலையிற்றும் நிலையாதும் என்றல் 'குறியதன் முன்னரும்' (226) என்பதனான் கூறிய அகரம் 'இராஎன் கிளவிக்கு இல்லை' (227) என்பதனான் பெற்றாம்.

இக்கூறிய இலக்கணங்கள் கருவியும் செய்கையும் என இருவகைய.

[8]அவற்றுள் கருவி, புறப்புறக்கருவியும் புறக்கருவியும் அகப்புறக்கருவியும் அகக்கருவியும் என நால்வகைத்து. நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக்கருவி. மொழிமரபு புறக்கருவி. புணரியல் அகப்புறக் கருவி. 'எகர ஒகரம் பெயர்க்கு ஈறாகா' (272) என்றாற் போல்வன அகக்கருவி.

[9]இனிச் செய்கையும் புறப்புறச் செய்கையும் புறச்செய்கையும் அகப்புறச்செய்கையும் அகச்செய்கையும் என நால்வகைத்து. 'எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே' (140) என்றாற் போல்வன புறப்புறச்செய்கை. 'லனஎன வரூஉம் புள்ளி முன்னர்' (149) என்றாற் போல்வன புறச்செய்கை 'உகரமொடு புணரும் புள்ளி இறுதி' (163) என்றாற் போல்வன அகப்புறச்செய்கை. தொகைமரபு முதலிய ஓத்தினுள் இன்ன ஈறு இன்னவாறு முடியும் எனச் செய்கை கூறுவன எல்லாம் அகச்செய்கை. இவ்விகற்பம் எல்லாம் தொகையாக உணர்க.

இவ்வோத்து என்நுதலிற்றோ எனின், அதுவும் அதன்பெயர் உரைப்பவே அடங்கும்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், இத்தொல்காப்பியம் என்னும் நூற்கு மரபாம் துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தினமையின் நூன்மரபு என்னும் பெயர்த்தாயிற்று.

நூல் என்றது, நூல் போறலின் ஒப்பின் ஆயதோர் ஆகுபெயராம். அவ்வொப்பாயவாறு என்னையெனின், குற்றம் களைந்து [10]எஃகின பல்நுனைப் பஞ்சிகளை எல்லாம்

கைவன் மகடூஉத் தூய்மையும் நுண்மையும் உடையவாக ஓர் இழைப்படுத்தினாற் போல, 'வினையின் நீங்கி விளங்கிய அறிவ'னாலே (மர.94) வழுக்களைந்து எஃகிய இலக்கணங்களை எல்லாம் முதலும் முடிவும் மாறுகோள் இலவாகவும், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டியும், உரையும் காண்டிகையும் உள்நின்று அகலவும், ஈரைங் குற்றமும் இன்றி ஈரைந்து அழகும் பெற முப்பத்திரண்டு தந்திர உத்தியொடு புணரவும்,

'ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப்பு அடங்கிய பிண்டத் தானும்'
(பொ. 480 பே.)

ஒருநெறிப்படப் புணர்க்கப்படூஉம் தன்மையுடையமையான் என்க. மரபு, இலக்கணம், முறைமை, தன்மை என்பன ஒரு பொருட்கிளவி.

ஆயின், நூல் என்றது ஈண்டு மூன்று அதிகாரத்தினையும் அன்றே? இவ்வோத்து மூன்று அதிகாரத்திற்கும் இலக்கணம் ஆயவாறு என்னையெனின். எழுத்துக்களின் பெயரும் முறையும் இவ்வதிகாரத்திற்கும் செய்யுளியற்கும் ஒப்பக் கூறியது. ஈண்டுக் கூறிய முப்பத்துமூன்றனைப் பதினைந்தாக்கி ஆண்டுத் தொகைகோடலின் தொகை வேறாம். அளவு, செய்யுளியற்கும் இவ்வதிகாரத்திற்கும் ஒத்த அளவும் ஒவ்வா அளவும் உளவாகக் கூறியது. குறிற்கும் நெடிற்கும் கூறிய மாத்திரை இரண்டிடத்திற்கும் ஒத்த அளவு; ஆண்டுக் கூறும் செய்யுட்கு அளபுகோடற்கு ஈண்டைக்குப் பயன்தாராத அளபெடை கூறியது ஒவ்வா அளவு. அஃது 'அளபிறந்து உயிர்த்தலும்' (33) என்னும் சூத்திரத்தோடு ஆண்டு மாட்டெறியுமாற்றான் உணர்க. இன்னும் குறிலும் நெடிலும் மூவகை இனமும் ஆய்தமும் வண்ணத்திற்கும் இவ்வதிகாரத்திற்கும் ஒப்பக் கூறியன. குறைவும் இரண்டற்கும் ஒக்கும். கூட்டமும் பிரிவும் மயக்கமும் இவ்வதிகாரத்திற்கே

உரியனவாகக் கூறியன. 'அம்மூவாறும்' (22) என்னும் சூத்திரம் முதலியவற்றான் எழுத்துக்கள் கூடிச் சொல்லாமாறு கூறுகின்றமையின், சொல்லதிகாரத்திற்கும் இலக்கணம் ஈண்டுக் கூறினாராயிற்று. இங்ஙனம் மூன்று அதிகாரத்திற்கும் இலக்கணம் கூறுதலின், இவ்வோத்து நூலினது இலக்கணம் கூறியதாயிற்று. நூல் என்றது, தொல்காப்பியம் என்னும் பிண்டத்தை. இவ்வோத்து இலக்கணங்கள்தாம் எழுத்துக்களின் பெயரும் முறையும் தொகையும் அளவும் குறைவும் கூட்டமும் இனமும் மயக்கமும் ஆம். ஏனைய இவ்வதிகாரத்துள் ஏனை ஓத்துக்களுள் உணர்த்துப.

அற்றேல் அஃதாக, இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், எழுத்துக்களின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

***இதன் பொருள் :*** எழுத்து எனப்படுப - எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன; அகர முதல் னகர இறுவாய் முப்பஃது என்ப - அகரம் முதல் னகரம் ஈறாகக் கிடந்த முப்பது என்று சொல்லுவர்; சார்ந்துவரல் மரபின் மூன்று அலங்கடை - சார்ந்துவருதலைத் தமக்கு இலக்கணமாக உடைய மூன்றும் அல்லாதஇடத்து எ - று.

எனவே, அம்மூன்றும் கூடியவழி முப்பத்துமூன்று என்ப. அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் - என வரும். 'எனப்படுப' என்று சிறப்பித்து உணர்த்துதலான் அளபெடையும் உயிர்மெய்யும் இத்துணைச் சிறப்பில; ஓசை உணர்வார்க்குக் கருவியாகிய வரிவடிவும் சிறப்பிலா எழுத்தாகக் கொள்ளப்படும்.

அகரம் முதலாதல் ஆரியத்திற்கும் ஒக்குமேனும் ஈண்டுத் தமிழ் எழுத்தே கூறுகின்றார் என்பது உணர்தற்கு 'னகர இறுவாய்' என்றார்.

படுப - படுவ. படுப என்பது படுத்தல் ஓசையான் தொழிற்பெயராகக்[11] கூறப்படும். பகரமும் வகரமும் ஈண்டு

நிற்றற்குத் தம்முள் ஒத்த உரிமையவேனும், 'எழுத்தெனப் படுவ' எனத் தூக்கற்று நிற்கும் சொற்சீரடிக்குப் 'படுப' என்பது இன்னோசைத்தாய் நிற்றலின் ஈண்டுப் 'படுப' என்றே பாடம் ஓதுக. இஃது அன் பெறாத அகரஈற்றுப் பலவறி சொல்.

அகரம் னகரம் எனவே, பெயரும் கூறினார்.

எழுத்துக்கட்கு எல்லாம் அகரம் முதலாதற்குக் காரணம் 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' (46) என்பதனான் கூறுப. வீடுபேற்றிற்கு உரிய ஆண்மகனை உணர்த்தும் சிறப்பான் னகரம் பின் வைத்தார். இனி, எழுத்துக்கட்குக் கிடக்கைமுறை ஆயினவாறு கூறுதும்.

குற்றெழுத்துக்களை முன்னாகக் கூறி, அவற்றிற்கு இனம்ஒத்த நெட்டெழுத்துக்களை அவற்றின் பின்னாகக் கூறினார், ஒருமாத்திரை கூறியே இரண்டு மாத்திரை கூறவேண்டுதலின். அன்றி இரண்டை முற்கூறினாலோ எனின், ஆகாது; ஒன்று நின்று அதனொடு பின்வரும் ஒன்று கூடியே இரண்டாவதுஅன்றி இரண்டு என்பதொன்று இன்றாதலின். இதனான் ஒன்றுதான் பலகூடியே எண் விரிந்தது என்றுணர்க.

இனி, அகரத்தின் பின்னர் இகரம் எண்ணும் பிறப்பும் பொருளும் ஒத்தலின் வைத்தார். இகரத்தின் பின்னர் உகரம் வைத்தார், பிறப்பு ஒவ்வாதேனும் 'அ இ உ அம் மூன்றும் சுட்டு' (31) எனச் சுட்டுப்பொருட்டாய் நிற்கின்ற இனம் கருதி. அவை ஐம்பாற்கண்ணும் பெரும்பான்மை வருமாறு உணர்க. எகரம் அதன்பின் வைத்தார், அகரஇகரங்களொடு பிறப்புஒப்புமை பற்றி. ஐகாரஔகாரங்கட்கு இனமாகிய குற்றெழுத்து இலவேனும், பிறப்புஒப்புமை பற்றி ஏகாரஓகாரங்களின் பின்னர் ஐகார ஔகாரம் வைத்தார். ஒகரம் 'நொ' என மெய்யொடு கூடிநின்றல்லது தானாக ஓரெழுத்தொருமொழி ஆகாத சிறப்பின்மை நோக்கி ஐகாரத்தின் பின் வைத்தார். அ இ உ எ - என்னும் நான்கும் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எக்கொற்றன் - என

மெய்யொடு கூடாமல் தாம் இடைச்சொல்லாய் நின்றாயினும் மேல்வரும் பெயர்களொடு கூடிச் சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் உணர்த்தும். எகரம் மெய்யொடு கூடியே தன்பொருள் உணர்த்துவது அல்லது தானாகப் பொருள் உணர்த்தாது என்றுணர்க. இன்னும், அ ஆ - உ ஊ - எ ஏ - ஒ ஓ ஔ - என்பன தம்முள் வடிவு ஒக்கும். இ ஈ ஐ-தம்முள் வடிவு ஒவ்வா. இன்னும் இவை அளபெடுக்குங்கால் நெட்டெழுத்தொடு குற்றெழுத்திற்கு ஓசை இயையுமாற்றானும் உணர்க. இனி, சுட்டுஇடைச்சொல் நீண்டு ஆகார ஈகார ஊகாரங்கள் ஆதலானும் பொருள் ஒக்கும். புணர்ச்சி ஒப்புமை உயிர்மயங்கியலுள் பெறுதும். இம்முறை வழுவாமல் மேல் ஆளுமாறு உணர்க.

இனி, ககாரஙகாரமும் சகாரஞகாரமும் டகாரண காரமும் தகாரநகாரமும் பகாரமகாரமும் தம்முள் பிறப்பும் செய்கையும் ஒத்தலின், வல்லொற்றிடையே மெல்லொற்றுக் கலந்து வைத்தார். முதல்நாவும் முதல் அண்ணமும் -இடைநாவும் இடைஅண்ணமும்- நுனிநாவும் நுனிஅண்ணமும் - இதழ் இயைதலும் - ஆகிப் பிறக்கின்ற இடத்தின் முறைமை நோக்கி, அவ்வெழுத்துக் களைக் க ச ட த ப - ங ஞ ண ந ம - என இம்முறையே வைத்தார். பிறப்பு ஒப்புமையானும், னகாரம் றகாரமாய்த் திரிதலானும் றகாரமும் னகாரமும் சேர வைத்தார். இவை தமிழ்எழுத்து என்பது அறிவித்தற்குப் பின்னர் வைத்தார். இனி, இடையெழுத்துக்களில் யகாரம் முன்வைத்தார், அதுவும் உயிர்கள் போல மிடற்றுப் பிறந்த வளி அண்ணம் கண்ணுற்று அடையப் பிறத்தலின். ரகாரம் அதனொடு பிறப்பு ஒவ்வாதேனும் செய்கை ஒத்தலின் அதன்பின் வைத்தார். லகாரமும் வகாரமும் தம்மில் பிறப்பும் செய்கையும் ஒவ்வாவேனும், கல்வலிது சொல்வலிது - என்றாற் போலத் தம்மின் சேர்ந்துவரும் சொற்கள் பெரும்பான்மை என்பது பற்றி லகாரமும் வகாரமும் சேரவைத்தார். ழகாரமும் ளகாரமும் ஒன்றானும்

இயைபிலவேனும் 'இடையெழுத்து என்ப யரல வழள' (21) என்றால் சந்த இன்பத்திற்கு இயைபுடைமை கருதிச் சேரவைத்தார்போலும்.

அகரம், உயிரகரமும் உயிர்மெய் அகரமும் என இரண்டு. இஃது ஏனை உயிர்கட்கும் ஒக்கும். எனவே, ஓருயிர் பதினெட்டு ஆயிற்று.

இவ்வெழுத்து எனப்பட்ட ஓசையை அரு என்பார் அறியாதார். அதனை உரு என்றே கோடும். அது செறிப்பச் சேறலானும், செறிப்ப வருதலானும், இடை எறியப் படுதலானும், செவிக்கண் சென்று உறுதலானும், இன்பதுன்பத்தை ஆக்குதலானும், உருவும் உருவும் கூடிப் பிறத்தலானும், தலையும் மிடறும் நெஞ்சும் என்னும் மூன்றுஇடத்தும் நிலைபெற்றுப் பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உறப் பிறக்கும் என்றமையானும் உருவேயாம். அருவேயாயின் இவ்விடத்திற் கூறியன இன்மை உணர்க. அல்லதூஉம், வன்மை மென்மை இடைமை என்று ஓதினமையானும் உணர்க. **'உடம்பொடு புணர்த்தல்'** (அ) என்னும் இலக்கணத்தான் இவ்வோசை உருவாதல் நிலைபெற்றது என்று உணர்க. அதற்குக் காரணமும் முன்னர்க் கூறினாம்.

இவ்வெழுத்துக்களின் உருவிற்கு வடிவு கூறாராயினார், அது முப்பத்திரண்டு வடிவினுள் இன்ன எழுத்திற்கு இன்ன வடிவெனப் பிறர்க்கு உணர்த்துதல் அரிது என்பது கருதி. இவ்வடிவு ஆராயுமிடத்துப் பெற்றவடிவே தமக்கு வடிவாம்; குழலகத்திற் கூறின் குழல்வடிவும், குடத்தகத்திற் கூறின் குடவடிவும், வெள்ளிடையிற் கூறின் எல்லாத்திசையும், நீர்த்தரங்கம் போல.

'எல்லா மெய்யும் உருவுரு ஆகி' (17) எனவும், 'உட்பெறு புள்ளி உருவா கும்மே' (14) எனவும், 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (15) எனவும், சிறுபான்மை வடிவும் கூறுவர். அது வட்டம் சதுரம் முதலிய

முப்பத்திரண்டனுள் ஒன்றை உணர்த்தும். மனத்தான் உணரும் நுண்ணுணர்வு இல்லோரும் உணர்தற்கு எழுத்துக்கட்கு வேறுவேறு வடிவம் காட்டி எழுதப்பட்டு நடத்தலின் கட்புலனாகிய வரிவடிவும் உடையவாயின. பெரும்பான்மை மெய்க்கே வடிவு கூறினார், உயிர்க்கு வடிவு இன்மையின். 'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' (16) எனச் சிறுபான்மை உயிர்க்கும் வடிவு கூறினார். (1)

## நச்சினார்க்கினியம் உரைக்குறிப்புக்கள்

### 1. நூன் மரபு

இவற்றுள் 1, 2 முதலாக எண்ணிட்டன கணேசய்யர் உரைக் குறிப்பினையும், அ ஆ முதலாக இடப்பட்டன பதிப்பாசிரியர் [ப. ஆ.] உரைக் குறிப்பினையும் உணர்த்துவன.

***சூத்திரம் 1***

1. ஒன்று பலவாதல் - ஓரெழுத்தாய் நின்றன பிரிந்து பலவாதல். அஃதாவது 'குன்றேறாமா' என்புழி, றா என்னும் ஓர் எழுத்தே 'குன்றேறு ஆமா' என்று பிரிக்குமிடத்தே 'று ஆ' எனப் பலவாதல்.

2. திரிந்ததன் திரிபு அது என்றல் - நிலைமொழி வருமொழிகளில் யாங்காயினும் ஓர்எழுத்திற்குத் திரிபு கூறி, அம்மொழிகளுள் ஒன்றற்கு மீளவும் திரிபு கூறுங்கால், அத்திரிபெழுத்து மொழியை எடுத்துக்கூறாமல் 'திரியப் பட்ட எழுத்துமொழி திரிந்தஎழுத்து மொழியாம்' என்னும் நயம் பற்றி அத்திரிந்த எழுத்துமொழியையே எடுத்துப் புணர்ச்சி கூறல்.

உ-ம் : புள்ளிமயங்கியலில், லகரஈற்று மொழிகட்குத் திரிபு கூறுங்கால் 'அல்வழி யெல்லாம் உறழ்என மொழிப' (368) எனக் கூறி லகரம் றகரமாகும் எனக் கூறிய ஆசிரியர் மீளவும் அவற்றிற்குத் திரிபு கூறுங்கால் 'தகரம் வருவழி

ஆய்தம் நிலையலும்' (369) என்னும் சூத்திரத்தால் லகரம் ஆய்தமாகத் திரியும் என்று திரிந்தமொழியீற்றையே (லகரத்தையே) எடுத்துக்கூறல். லகரம் றகரமாய்த் திரிந்த ஈற்றை ஆய்தமாகத் திரியும் எனக் கூறாது, திரிந்த லகரஈற்றையே ஆய்தமாகத்திரியும் என்றார். திரிந்தது : லகரஈறு; திரிந்ததன் திரிபு : றகரம்; அது : லகரம். 'நீயென் ஒருபெயர் உருபியல் நிலையும்' (253) என்புழியும் இந்நயம் விளங்குதல் காண்க.

3. திரிந்ததன் திரிபு பிறிது என்றல் - ஓரீறு பிறிதோர் ஈறாகத் திரிந்து அப்பிறிதுஈறாகவே நின்று புணரும் எனல்.

உ-ம் : மரம் என்பதனோடு அடி என்னும் வருமொழி புணருங்கால் மகரம் கெட்டு நிலைமொழி விதிஅகரஈறாகிய பிறிதுஈறாகவே நின்று புணர்தல். மரம்+அடி=மரவடி (310). இவ்வாறே னகரஈறும் றகரமாகத் திரிந்து பிறிதுஈறாகவே நின்று புணர்தல். பொன்+குடம் = பொற்குடம் (332).

4. திரிந்ததன் திரிபு அதுவும் பிறிதும் என்றல் - ஓர்ஈறு வேறோர் எழுத்துப் பெற்றுப் பிறிதுஈறாகப் புணரும் எனக் கூறி, அத்திரிபு ஈற்றிற்காயினும் அத்திரிபீற்றொடு புணரும் வருமொழிக்காயினும் மீளவும் ஒன்று விதிக்கவேண்டி, அத்திரிபீற்றை எடுத்துப் புணர்க்குங்கால், அத்திரிபுஈறு திரிந்த இயல்பீற்றோடும். கூடிநிற்றலின், அவ்வியல்புஈறும் (அதுவும்) விதிஈறும் (பிறிதும்) ஆகியே நின்று புணரும் என்றல்.

உ-ம் : ஆறன் உருபொடும் நான்கன்உருபொடும் புணருங்கால் நெடுமுதல் குறுகிநின்ற தம்-நம்-எம்-தன்-நின்-என் - என்னும் மொழிகளின் ஈற்றிலுள்ள மெய்கள் ஓர் அகரம் பெற்றுப் புணரும் என, 'ஆறன் உருபினும் நான்கன் உருபினும்' (161) என்னும் சூத்திரத்தான் விதித்த ஆசிரியர், மீள அவ்அகரம் பெற்ற தம முதலிய மொழிகளோடு அதுஉருபை வைத்துப் புணர்க்குங்கால், அம்மொழிகளை மகரம் முதலிய புள்ளியீறும் (அதுவும்) அகரஈறும் (பிறிதும்)

ஆகிய இரண்டு ஈறுமாகியே, 'ஆறன் உருபின் அகரக்கிளவி, ஈறாகு அகரமுனைக் கெடுதல் வேண்டும்' (115) என்னும் சூத்திரத்துள் 'ஈறாகு அகரம்' என வைத்துப் புணர்த்தல் காண்க. 'தம' முதலிய என்னாது 'தாம் முதலிய புள்ளியீற்று அகரம்' என்று புள்ளியீறு கூறினமையான் 'அதுவும்', அவற்றின் ஈறாகிய அகரம் என்றதனான் 'பிறிதும்' தோன்றக் கூறிய நயம் காண்க.

5. நிலையிற்று என்றல் - நிலைமொழியும் வரு மொழியும் பொருட் பொருத்தமுறப் புணரும் தழுவு தொடர்ப்புணர்ச்சி விதிகளை 'நிலையிற்று' எனக்கொண்டார், ஆண்டுக் கூறும் செய்கை என்றும் நிலையுடைத்து ஆகலின்.

உ-ம் : பொன்+குடம் =பொற்குடம்.

6. நிலையாது என்றல்: என்றது, நிலை மொழி வரு மொழிகள் பொருட் பொருத்தமுறப் புணராத தழாஅத் தொடர்ப்புணர்ச்சி விதிகளை, பதம் பிரித்து அந்நுவயம் செய்யுங்கால் அப்புணர்ப்பு நிலையாமையுடைத்து ஆகலின்.

உ-ம் : முன்றில் - இல்முன் எனற்பாலது நிலைமாறி இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ மொழியாக முன்+ற்+இல்= முன்றில் எனப் புணர்ந்து நின்றமை காண்க.

7. நிலையிற்றும் நிலையாதும் என்றல் - ஓரிடத்தில் பெற்ற புணர்ச்சிநிலை அதுபோன்ற பிறிதோரிடத்தில் நிலைபெறாது என்றல். 'குறியதன் முன்னரும்' (226) என்னும் விதியால் குறியதன் முன்னர்நின்ற ஆகாரஈறு பலாஅக்கோடு எனப்பெற்ற அகரம், அதுபோன்ற 'இரா என் கிளவி' பெறாது என விலக்குதல் போல்வது.

8. கருவி - செய்கைக்குரிய கருவி. இக்கருவி, செய்கைக்கு நேரே கருவியாவதும், பரம்பரையின் கருவி யாவதும் என இருவகைத்து. அகக்கருவியும் அகப்புறக் கருவியும் நேரே கருவி ஆவன. ஏனைய பரம்பரையான் கருவி

ஆவன. நூன்மரபு பிறப்பியல்களிற் கூறும் இலக்கணங்களும் சொற்குக் கருவியாகும் முகத்தான் செய்கைக்குக் கருவி ஆதலின் பரம்பரையான் கருவி ஆயின.

அகக்கருவியாவது, செய்கைப்படுதற்குரிய நிலைமொழி யீற்று எழுத்துப்பற்றி வரும் விதிகளைக் கூறுவது. அஃது 'எகர ஒகரம் பெயர்க்கு ஈறு ஆகா' (272) என்றாற் போல்வது. இது செய்கைக்குரிய ஈற்றெழுத்துப் பற்றிய விதி ஆதலின் அகக்கருவி ஆயிற்று. செய்கைக்கு அண்ணிய கருவி ஆதலின், முதனிலை இறுதி நிலைகளும் அகக்கருவி ஆகும்.

அகப்புறக் கருவியாவது, புணர்ச்சி இலக்கணமும், புணர்ச்சிக்குரிய திரிபுகள் இவை என்பதும், இயல்பும், புணர்ச்சி வகையும், நிலைமொழிகள் செய்கைவிதியில் பெறும் சாரியைகள் வருமொழியொடு புணருங்கால் அடையும் திரிபுகளும் ஆகி இருமொழிகளும் செய்கைப் படுதற்கு ஏற்றவாய் வரும் விதிகளைக் கூறுவது. அது புணரியல் ஆம்.

புறக்கருவியாவது, செய்கைக்குரிய நிலைமொழி வருமொழிகளாய் நிற்கும் மொழிகளின் மரபு கூறுவது. அது மொழிமரபு ஆம்.

புறப்புறக் கருவியாவது, மொழிகள் ஆதற்குரிய எழுத்துக்களின் இலக்கணமும் பிறப்பும் கூறுவது. அது நூன்மரபும் பிறப்பியலும் ஆம்.

9. செய்கை நான்கனுள், அகச்செய்கையாவது நிலைமொழி ஈறு இன்ன இன்னவாறு முடியுமெனக் கூறுவது. அது பொன்+குடம்= பொற்குடம் என்றாற் போல்வது. இஃது ஈற்றெழுத்துப் படும் செய்கைவிதி யாதலின் அகம் ஆயிற்று. தொகைமரபு முதலிய ஓத்தினுள் இன்னஈறு இன்னவாறு முடியும் எனச் செய்கை கூறுவன எல்லாம் அகச்செய்கையாம்.

அகப்புறச் செய்கையாவது நிலைமொழிஈறு பெறும் முடிபுஅன்றி, நிலைமொழிஈறு பெற்றுவரும் எழுத்து முதலியவற்றின் முடிபு கூறுவது. அது புள்ளியீற்றுள் உகரம் பெறும் என விதித்த புள்ளியீறுகள் பின் அவ்உகரம் பெறா என விலக்குதல் போல்வன. இஃது ஈற்றெழுத்தின் வியன்றி, ஈற்றெழுத்துப் பெற்று வரும் எழுத்தைப் பற்றி விதிஆதலின் அகப்புறம் ஆயிற்று.

புறச்செய்கையாவது, வருமொழிச்செய்கை கூறுவது, இது நிலைமொழிச் செய்கையன்றி வருமொழிச் செய்கை ஆதலின் புறச்செய்கை ஆயிற்று. அது பொன்+தீது= பொன்றீது என்றாற்போல வருவது.

புறப்புறச் செய்கையாவது, நிலைமொழிஈறும் வருமொழிமுதலும் செய்கை பெறாது நிற்ப, அவ் விரண்டையும் பொருத்துதற்கு இடையில் உடம்படுமெய் போன்ற ஒரெழுத்து வருவது போல்வது, அது தீ + அழகிது> தீ+ ய் + அழகிது = தீயழகிது என்றாற் போல்வது.

*10. எஃகுதல் - பஞ்சினை நொய்தாக்குதல்.*

*11. தொழிற்பெயர் என்றது வினையாலணையும் பெயரினை.*

*(அ) ஆசிரியன் ஓரிலக்கணத்தை வெளிப்படச் சூத்திரத்தான் விதியாது அதனைத் தான் விதிக்கும் ஏதேனும் ஒரு சூத்திரத்துள் பயன்படுத்தி அதனான் அதனைத் தான் இசைந்துபோந்தமையைக் குறிப்பாற் புலப்படுத்துவது உடம்பொடு புணர்த்தலாம். உயிர்மெய் மெய்யோடு உயிர் கூடுதலாற் பிறப்பதைக் கூறுதலானும், பிறப்பியலுள் எழுத்துக்களின் பிறப்பிடமும் முயற்சியும் கூறுதலானும், சில எழுத்துக்கட்கு வரிவடிவு குறிப்பிடுதலானும், எழுத்து அரு எனப்படாது உருவேயாம் என்பதனை ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறியவாறாம்.*



## சிவஞானமுனிவர் உரைத்த

### முதற்சூத்திர விருத்தி

எழுத்ததிகாரம் என்பது எழுத்தினது அதிகாரத்தை யுடையது என அன்மொழித்தொகையாய் அப்படலத்திற்குக் காரணக்குறி ஆயிற்று.

அதிகாரம் அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்துழி இருந்து தன் நிலமுழுவதும் தன் ஆணையின் நடப்பச் செய்வது போல, ஒருசொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஓத்துக்களும் தன் பொருளே நுதலிவரச் செய்வது. ஒன்று, சென்று நடாத்தும் தண்டத்தலைவர் போல ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களொடும் சென்று இயைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு முறையே வடநூலார் யதோத்தேசபக்கம் எனவும், காரியகாலபக்கம் எனவும் கூறுப...அவற்றுள், ஈண்டு அதிகாரம் என்றது முன்னையது. அதனையுடையது எனவே, எழுத்தை நுதலிவரும் பலஓத்தினது தொகுதி எழுத்ததிகாரம் என்றவாறு ஆயிற்று.

### நூன் மரபு

அஃதாவது நூலினது மரபு பற்றிப் பெயர் கூறுதல். எனவே, இதுவும் இவ்வோத்துள் கூறும் சூத்திரங்களுக்கு எல்லாம் அதிகாரம் என்பது பெறப்பட்டது. மலை-கடல்-யாறு-குளம்-என்றல் தொடக்கத்து உலகமரபு பற்றிய பெயர் போலாது, ஈண்டுக் கூறப்படும் எழுத்து-குறில்-நெடில்-உயிர்-மெய்-என்றல் தொடக்கத்துப் பெயர்கள் நூலின்கண் ஆளுதற்பொருட்டு முதனூல் ஆசிரியனால் செய்துகொள்ளப்பட்டமையின், இவை நூன்மரபு பற்றிய பெயர் ஆயின என அறிக. ஏனை ஓத்துக்களின் விதிக்கப்படும் பெயர்களும் நூன்மரபு பற்றி வரும் பெயராதல் உய்த்துணர்ந்து கோடற்கு இது முன் வைக்கப்பட்டது.

இப்பெற்றி அறியாத உரையாசிரியர் முதலியோர் இவ்வதிகாரத்தால் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை ஓராற்றால் தொகுத்து உணர்த்துதலின் நூன்மரபு என்னும் பெயராயிற்று என்பாரும், இவ்வோத்துக்கண் கூறப்படும் விதிகள் மூன்றதிகாரத்திற்கும் பொது ஆகலின் நூன்மரபு என்னும் பெயராயிற்று என்பாரும் ஆயினார். இவ்வதி காரத்துள் கூறும் எழுத்திலக்கணத்தைத் தொகுத் துணர்த்தலான் பெற்ற பெயராயின் அதிகாரமரபு எனப்படுவதன்றி நூன்மரபு எனப்படாமையானும், இவ்வோத்துள் கூறப்பட்டன செய்கை ஒத்திற்கும் பொருளதிகாரத்துள் செய்யுளியல் ஒன்றற்குமே கருவி ஆவதன்றி, மூன்று அதிகாரத்திற்கும் பொது ஆகாமையானும், அவை போலியுரை என்க.

**சூத்திரம் 1.**

'எழுத்தெனப் படுப, அகரமுதல், னகர இறுவாய்....

உரையாசிரியரும் நச்சினார்க்கினியாரும் இச்சூத்திரம் பெயரும் முறையும் தொகையும் உணர்த்திற்று என்றும், அ ஆ முதலியனவே பெயர் என்றும், அம்முறையே முறை என்றும், முப்பஃது எனத் தொகை விதிக்கப்பட்டது என்றும் உரைத்தாரால் எனின், அற்றன்று. அஃது ஆசிரியர் கருத்தாயின், அ ஆ இ ஈ என முழுதும் எடுத்தோதி முறைக்கு ஏதுவும் கூறுவர். அவ்வாறு கூறாது 'அகரமுதல் னகர இறுவாய்' என அனுவதித்தே மொழிந்தமையானும், எழுத்து என்பது ஒருபொருள் அதற்கு அ ஆ முதலியன பெயர் என்றல் பொருந்தாமையானும், அ ஆ முதலிய அ ஆ முதலிய வற்றிற்குப் பெயராதல் கூறவேண்டாமையானும், வேண்டும் எனில் சொற்களும் பொருளை உணர்த்தாது அவைதம்மையே உணர்த்தும்வழி அவற்றிற்கு அவை பெயராதல் கூறாமை குன்றக்கூறலாம் ஆதலானும், முறையும் தொகையும் செய்கை முதலியவற்றிற்குக் கருவி அன்மையின் அவற்றை விதித்தலான் பயனின்மையானும் அவருரை போலியுரை என்க.

இச்சூத்திரத்தின் ஒழிபாகிய 'அவைதாம், குற்றிய லிகரம்' என்னும் சூத்திரத்துள் 'எழுத்தோரன்ன' என எழுத்தாதல் விதிக்கின்றமையானும், ஈண்டும் 'அகர முதல், னகர இறுவாய் முப்பஃது' என அனுவதித்து அவற்றிற்கு எழுத்து என்னும் பெயரே விதிக்கப்பட்டது எனக் கொள்க. அகரம் முதலிய பொருட்கு ஈண்டு 'எழுத்து' என்னும் பொதுப்பெயர்கூறி, 'அவற்றுள், அ இ உ' ஆ ஈ ஊ ஏ' 'ஔகார இறுவாய்' 'னகார இறுவாய்' 'வல்லெழுத்து என்ப' 'மெல்லெழுத்து என்ப' 'இடையெழுத்து என்ப' என்னும் சூத்திரங்களான் சிறப்புப்பெயர் கூறுமாறு அறிக....

இத்துணையும் கூறியவாற்றானே, அகர முதலியவற்றிற்கு எழுத்து என்னும் குறியிடுதற்கு எழுந்தது இச்சூத்திரம் என்றுணர்ந்துகொள்க. 'எழுத்து' என்றுஒழியாது 'எனப்படுப என்ப' என்றார், இது முதனூல் ஆசிரியனால் விதிக்கப்பட்டுத் தொன்றுதொட்டு வரும் குறி என்பது அறிவித்தற்கு.

**சூ. 1.** ஒருமொழியைச் சார்ந்துவரும் இயல்பன்றித் தனித்து இயங்கும் இயல்பு தமக்கு இல என்றலின், அவைதம்மையே எடுத்தோதிக் காட்டல் ஆகாமையின், வரும் சூத்திரத்தான் அவற்றிற்கு வேறுவேறு பெயரிட்டு 'அவைதாம், குற்றிய லிகரம் குற்றிய லுகரம், ஆய்தம்' என்றும், அம் மூன்றும் புள்ளிபெறுதல் பற்றிப் பொதுப்பெயராக 'முப்பாற் புள்ளியும்' என்றும், அவை தனித்து எழுதப்படா ஆயினும் மொழியொடு சார்த்தி எழுதப்படுதலின் எழுத்து என்னும் குறியீட்டிற்கு உரிய என்பார் 'எழுத்தோ ரன்ன' என்றும் ஓதினார்.

கேண்மியா வரகு என்பவற்றின் இகரமும் உகரமும், போலும் என்புழி அரைமாத்திரையாய் நின்ற மகரம் 'போன்ம்' என லகரம் னகரமாய்த் திரிந்து ஈரொற்று உடன்நின்ற காரணத்தால் பின்னர்க் கால்மாத்திரையாய் நின்றாற்போல, முன்னர் ஒரு மாத்திரையாய் நின்று பின்னர்

ஒருகாரணம் பற்றி அரைமாத்திரை ஆகாது, மகரமும் வல்லெழுத்தும் ஆகிய மெய்யெழுத்தினைச் சார்ந்து என்றும் அரைமாத்திரையாயே நிற்கும் ஒரு தன்மைய ஆயினும், அப்பெற்றி உணராது ''இவை அரை மாத்திரை பெறுதல் மகரக்குறுக்கம் போலச் செயற்கையாற் போலும்'' என்று உலகம் மலையாமைப்பொருட்டு, இவை இங்ஙனம் ஆதல் இயல்பு என்பார் குற்றிகரம் குற்றுகரம் என்று ஒழியாது, குற்றியலிகரம் குற்றியலுகரம் என்று குறியிட்டார். இக்குறியீடும் உணராதார் ஒருமாத்திரையாய் நின்ற குற்றெழுத்துக்களே இடமும் பற்றுக்கோடும் சார்ந்த காரணத்தால் அரைமாத்திரையாய்க் குற்றியலிகரம் குற்றியலுகரம் என நின்றன எனக் கூறித் தமது அறியாமையைப் புலப்படுப்பர்.

('போன்ம்' என்புழி நின்ற மகரம் குறுகுதற்குக் காரணமுண்மை போல, குற்றியலிகரம் குற்றியலுகரங்கள் குறுகிநிற்றற்குக் காரணம் இடனும் பற்றுக்கோடும் ஆகிய சார்பு அன்று, அவை முறையே மகரமும் வல்லெழுத்தும் ஆகிய மெய்யெழுத்தினைச் சார்ந்து அரைமாத்திரையாக ஒலித்தல் அவற்றின் இயல்பே என்பது 'குற்றியல்' என்பதனாற் போந்தது - என்பர் முனிவர். இயல்இகரம், இயல்உகரம் - என இவற்றை வினைத்தொகையாகவும் கொள்ளல் கூடுதலின் ஓசைகுறுகி இயல்வன இவை எனப் போதலின், அவ்வாறு இவ்வுயிர்கள் குறுகுதற்கு இடனும் பற்றுக்கோடும் ஆகிய சார்பே காரணமென உரை யாசிரியன்மார் குறித்தார் என்று அமைதி காணலாமன்றே?)

ஆசிரியர் 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்னும் சூத்திரத்தான் குற்றியலுகரமும் புள்ளிபெற்று நிற்கும் என முற்றுகரத்தோடு இதனிடை வரிவடிவினும் வேற்றுமை தோன்றக் கூறி உம்மையான் குற்றியலிகரமும் புள்ளி பெற்று நிற்கும் என்று ஓதினமையானும், 'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்' எனவும், 'குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே' நிற்றல் வேண்டும் எனவும் கூறியதன்றி இவைபற்றி

மாத்திரை குறுகும் என்னாமையானும், 'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே' 'ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்' என்புழியும், 'யகரம் வருவழி இகரம் குறுகும்' என்புழியும்....குறுகுதல் அணுகுதல் எனவே பொருள்படும் ஆகலானும், அவ்வாறன்றிக் குறைதலே போருளாயினும் குற்றுயிர் - குற்றெழுத்து - என்றாற் போலத் தம்மின் மிக்கு இசைக்கும் எழுத்துக்களை நோக்கி குறுகும் என்றார் எனவேபடும் ஆகலானும், அங்ஙனம் கொள்ளாக்கால் 'எல்லா இறுதியும் உகரம் நிறையும்' என்புழிப் புணர்ச்சிக்கண் முற்றுகரமாய் நிற்கும் எனப் பொருள்பட்டு இச்சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியும் ஆகலானும், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் போல வேறுஎழுத்தே ஆவனஅன்றி, ஒரு மாத்திரையாய் நின்ற இகரஉகரங்களே மகரக்குறுக்கம் முதலியன போல ஒருகாரணம் பற்றி அரைமாத்திரையாய் நின்றன அல்ல என்பது தெற்றென உணர்க.

(ஆசிரியர் ஆறுதொடர்மொழிகளையும் குற்றியலுகரம் தோன்றும் இடமாகவும் 'வல்லாறு ஊர்ந்து' வருமென வல்லினமெய்யை அதன் பற்றுக்- கோடாகவும் ஓதினார்; குற்றியலிகரமும் மகரம் ஊர்ந்து 'யா' மிசைத்தோன்றுமென 'மியா' என்னும் இடத்தையும் சுட்டினார். இச்சார்பு களினின்று பிறழ்ந்து வருவன முற்றியலுகர இகரங்கள் என்பது பெற்றாம். எனவே, இவ்வொரு மாத்திரை பெறும் உயிர்கள் குறுகுதற்குச் சார்பு கூறப்பட்டனவாகக் கோடலில் இழுக்கு என்னை?

'நிலையும்' என்னும் பாடம் நச்சினார்க்கினியம். உகரம் அரைமாத்திரையேயாய் நிற்கும் என்பது பொருள். இப்பாடத்திற்கு, மாறுகொளக் கூறல் என்னும் மலைவு வாராமை உணரப்படும்.)

இடமும் பற்றுக்கோடும் குற்றியலிகர குற்றிய லுகரங்கள் நிற்றற்குச் சார்பாவனவே அன்றிக் குறுகி

இசைத்தற்குக் காரணம் ஆகா எனக் கொள்க. ...... இக்குற்றியலிகர குற்றியலுகர உண்மை அறியாத உரையாசிரியர், 'இடைப்படின் குறுகும் இடனுமா ருண்டே' என்பதற்கு 'இடைப்படினும் குறுகும்' என உம்மையை மாற்றி, இறந்தது தழீஇயிற்று ஆக்குவர். அஃது ஆசிரியர் கருத்தொடு முரணும் என்பது இச்கூறியவாற்றான் அறிக.

காட்டு கூட்டு என 'ஆய்' குறைந்து நின்ற ஏவல் வினைச்சொற்களின் வரும் உகரத்தை வினைக்கண் வரும் முற்றுகரம் என்பாரும் உளர். ஆசிரியர் 'குற்றிய லுகரத்து இறுதியும் உளப்பட' எனவே எடுத்து ஓதினமையானும், புணர்ச்சிக்கண் முற்றுகரத்துக்கு உரிய செய்கை பெறாமையானும் அஃது உரையன்று என்க.

[சார்பெழுத்துக்கள் மூன்றும் தனிமொழிக்கண்ணும் புணர்மொழிக் கண்ணும் வருமாறு முறையே கூறுகின்றார் ஆசிரியர் ஆதலின், குற்றியலுகரம் தனிமொழிக்கண் அன்றி புணர்மொழிக்கண்ணும் குறுகி ஒலிக்கும் என்னும் கருத்தினை விளக்கவேண்டி, உம்மையை மாற்றிக் கூட்டி இறந்தது தழீஇய எச்சவும்மை என்றார். 'இடனுமாருண்டே' எனக்கொண்டு குற்றுகரம் புணர்மொழிக்கண் குறுகுதல் சிறுவரவிற்றாக உரையாசிரியர் கொண்டிலர். குற்றியலிகரம் புணர்மொழிக்கண் குறுகியொலித்தலைப் 'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே' என்று ஆசிரியர் ஓதியாங்கு, இங்கும் 'இடைப்படினும் குறுகும்' எனக் கொண்டார்.

ஆசிரியர் 'குற்றிய லுகரத்து இறுதியும் உளப்பட, முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே' என்றார். நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்தில் 'முற்ற' என்பதனான், சொல்லப்பட்ட மூவகையீறுகளும் நிலைமொழியாய் உகரம் பெற்று உறழ்ந்து முடியும் என்றார். பெயர்ச்சொல்லின் ஈறாய் நிற்கும் குற்றுகரம் உகரச்சாரியை பெற்றவழி, உயிர் ஏறிமுடிதலின், ஏவலொருமையாகிய முற்றுகரமாம். காட்டு

கொற்றா - காட்டுக்கொற்றா, கூட்டுகொற்றா கூட்டுக் கொற்றா என உறழ்ந்துமுடிதல் முற்றுகரத்துக்கு உரிய செய்கையன்றே? ரெட்டியார் அவர்களது ஆராய்ச்சியுரை (சூ.152) காண்க.]

**நெடுங்கணக்கினுள் அகரமுதல் னகரஇறுவாய்க் கிடக்கைமுறை ஆமாறு.**

ழகர றகர னகரங்கள் மூன்றும் தமிழ் எழுத்து என்பது அறிவித்தற்கு இறுதிக்கண் வைக்கப்பட்டன. அவற்றுள்ளும் ழகரம் இடையெழுத்து ஆகலின் அதுபற்றி இடை யெழுத்தொடு சார்த்தி அவற்று இறுதிக்கண் வைக்கப்பட்டது. வடமொழியின் லகாரம் ளகாரமாகவும் உச்சரிக்கப் படுவதன்றித் தனியே ஓர் எழுத்து அன்மையின், அச்சிறப்பின்மை பற்றி இடையெழுத்தாகிய ளகாரம் ழகாரத்திற்கும் பின்வைக்கப்பட்டது. யரலவக்கள் நான்கும் முறையே அடியண்ணமும் இடையண்ணமும் அண்பல் முதலும் இதழும் என்னும் இவற்றின் முயற்சியால் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

இனி, கஙக்களும் சஞக்களும் டணக்களும் தநக்களும் பமக்களும் அடிநாஅண்ணம்-இடைநாஅண்ணம்-நுனிநா அண்ணம் - அண்பல்லடி - இதழ் - என்னும் இவற்றின் முயற்சியான் பிறத்தலான், அப்பிறப்பிடத்தின் முறையே முறையாக வைக்கப்பட்டன. வலியாரை முன்வைத்து மெலி யாரைப் பின்வைத்தல் மரபு ஆகலான், வல்லெழுத்துக்கள் முன்னும் அவ்வவற்றிற்கு இனம் ஒத்த மெல்லெழுத்துக்கள அவ்வவற்றின் பின்னுமாக வைக்கப்பட்டன. இவ்விரண்டும் நோக்கியல்லது இடைநிகரனவாய் ஒலித்தல் அறியப்படா மையின், அதுபற்றி இடையெழுத்துக்கள் அவ்விரு கூற்றிற்கும் பின்வைக்கப்பட்டன.

அகரம் முதலிய பன்னீருயிரும் தனித்து இயங்கும் ஆற்றலுடைமை யானும், ககர முதலிய பதினெட்டுமெய்யும் அகரத்தொடு கூடியல்லது இயங்கும் ஆற்றல் இன்மை யானும், உயிர் முன்னும் மெய் பின்னுமாக வைக்கப்பட்டன.

இனி, உயிர்களுள் அ இ உ என்பன முறையே அங்காந்து கூறும் முயற்சியானும், அவ்அங்காப்போடு அண்பல்லடி நாவிளிம்புறக் கூறும் முயற்சியானும், அவ்அங்காப்போடு இதழ்குவித்துக் கூறும் முயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன. ஆகார ஈகார ஊகாரங்கள் அகரம் முதலியவற்றிற்கு இனம் ஆதலின், அவற்றைச் சார வைக்கப்பட்டன. நெட்டெழுத்தாவது நீரும் நீரும் சேர்ந்தாற்போலக் குற்றெழுத்து இரண்டு ஒத்துநின்று நீண்டிசைப்பதொன்று ஆகலின், அஃது உணர்ந்துகோடற்குக் குற்றெழுத்துக்களின் பின்னர் நெட்டெழுத்துக்கள் வைக்கப்பட்டன.

இந்நெட்டெழுத்துக்கள் மொழிக்காரணமாய் வேறு பொருள் தந்து நிற்றலின், அதுபற்றி வேறு எடுத்தெண்ணி உயிர் பன்னிரண்டு எழுத்து எனப்பட்டன. அளபெடை அந்நெட்டெழுத்தொடு குற்றெழுத்து ஒத்துநின்று நீண்டிசைப்ப தொன்று ஆயினும், மொழிக் காரணமாய் வேறுபொருள் தாராது இசைநிறைத்தல் மாத்திரைப் பயத்ததாய் நிற்றலின், வேறு எழுத்தென வைத்து எண்ணப்படாதாயிற்று என்பது நுண்ணுணர்வான் ஓர்ந்து உணர்க.

இனி, எகரமானது அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்திசைத்து நரமடங்கல் போல் நிற்பதொன்று ஆகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக்கூறும் தம்முள் ஒத்திசைத்து அவ்வாறு நிற்பதொன்று ஆகலானும், அவை அவற்றின் பின்னர் முறையே வைக்கப்பட்டன. ஏகார ஓகாரங்கள் இனம் ஆகலின், அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன. அகரமும் யகரமும் இகரமும் தம்முள் ஒத்திசைத்து நிற்பதொன்று ஆகலின், எகர ஏகாரங்களின் பின்னர் ஐகாரமும், அகரமும் வகரமும் உகரமும் தம்முள் ஒத்திசைத்து நிற்பதொன்று ஆகலின் ஒகரஓகாரங்களின் பின்னர் ஔகாரமும் வைக்கப்பட்டன. இவ்வாறாதல் பற்றி ஏ ஓ ஐ ஔ என்னும் நான்கினையும் வடநூலார் சத்தியக்கரம் என்பர்.

கையடனார் 'நரமடங்கல் போல்' என்று உவமையும் கூறினார்.... எகரம் முதலியவற்றுள் அகரக்கூறு குறைவும் இகர உகரக் கூறுகள் மிகுதியுமாம் எனவும் உணர்க. இதுவும் மாபாடியத்திற் கண்டது....எகர ஒகரங்கள் ஒருவாற்றான் சிறப்பெழுத்து ஆயினும், பாகதமொழியிற் பயின்று வருதலானும், சாமவேதமுடையாருள்ஒருசாரார் இசைபற்றிக் குழூஉக்குறி போலக் கொண்டோதுப ஆகலானும், இறுதிக்கண் வையாது முறைபற்றி ஏகார ஓகாரங்களின்முன் வைக்கப்பட்டன. ஈண்டுக் கூறியவாற்றானே அகரம் எல்லா உயிர்எழுத்துக்களினும் கலந்துநிற்குமாறு அறிக.

இத்துணையும் முறை ஆமாறு காட்டப்பட்டது.

(நெட்டெழுத்தாவது நீரும் நீரும் சேர்ந்தாற்போலக் குற்றெழுத்து இரண்டு ஒத்துநின்று நீண்டிசைப்பது என்றார் முனிவர். அளபெடையொலியை நெடிலும் குறிலுமாகஇரண்டெழுத்தாகப் பிரித்துச் சீர்கோடல் அமையுமாறு போல, நெடிலை இரண்டு குற்றெழுத்தாகக் கோடல் அமையாது; இரண்டுகுற்றுயிர் கூடி நெட்டுயிராக நீண்டொலிக்குமாறும் இல்லை. குறில் நெடிலாக நீண்டொலிப்பதும், நெடில் குறிலாகக் குறுகியொலிப்பதும் இல்லை என்பர் மொழிநூல் அறிஞர்.)

### சாத்திரியார் உரை

### எழுத்ததிகாரம் குறிப்புரை

***நூன்மரபு:*** இந்நூலின்கண் வழங்கப்படும் இன்றியமையா மரபு பற்றிய குறிகளாகிய - எழுத்து - குற்றெழுத்து - நெட்டெழுத்து - உயிர் - மெய் - வல்லெழுத்து - மெல்லெழுத்து- இடையெழுத்து - என்பவற்றை விதிக்கும் இவ்வியலுக்கு நூன்மரபு என்று பெயரிட்டார்.

**சூ. 1.** எழுத்தெனப் படுப
...............மூன்றலங் கடையே.

**(இதன் பொருள்)** சார்ந்துவரும் தன்மையைக் கொண்ட மூன்று அல்லாத இடத்து, அகரத்தை முதலாகவும் னகரத்தை இறுதியாகவும் உடைய முப்பதும் எழுத்து என்று கூறப்படும் என்பர் (புலவர்).

## வே. வேங்கடராஜுலு ரெட்டியார் உரை

### (எழுத்ததிகார ஆராய்ச்சி)

### 1. நூன் மரபு

இவ்வதிகாரத்தின் முதற்கண் இவ்வியலில் பெரும் பாலும் தனியெழுத்துக்களின் மரபினை உணர்த்துதலின், இவ்வியல் நூன்மரபு என்னும் பெயர் பெற்றது. ''இதனுள் கூறுகின்ற இலக்கணம் மொழியிடை எழுத்திற்கு அன்றித் தனிநின்ற எழுத்திற்கு என உணர்க'' என்று இளம் பூரணஅடிகளும் கூறுதலின், இவ்வியலில் கூறிய இலக்கணம் தனிஎழுத்துக்களைக் குறித்தனவே ஆகும் என்றல் வலியுறும் .....எழுத்துக்களின் இயல்பே இவ்வியல்முழுதும் கூறப்பட்டதனான், இஃது எழுத்துமரபு என்றவாறு ஆயிற்று என்றல் அமைவுடைத்து. மொழியின் இயல்பு உணர்த்திய இயல் மொழிமரபு எனப்பட்டவாறு போல, இவ்வியலுக்கு எழுத்துமரபு எனப் பெயரிடாது, நூன்மரபு எனப் பெயரிட்டது என்னையெனின், நூல் என்றது ஈண்டு எழுத்தினையே குறித்துளது என்று கோடல் அமைவுடையதாகும்.

சூ. 1. எழுத்தெனப் படுப
அகரமுதல்
னகர இறுவாய்....மூன்றலங் கடையே.

உரையாளர் இருவரும் ''இச்சூத்திரம் எழுத்துக்களின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று'' என்றனர். ''எழுத்து என்பது ஒருபொருள், அதற்கு அ ஆ - முதலியன பெயர் என்றல் பொருந்தாமையானும், அ ஆ - முதலிய அ ஆ - முதலியவற்றிற்கும் பெயராதல் கூறவேண்டாமையானும்'' என்று சிவஞானமுனிவர்

மறுத்துக்கூறியமை அமைதியாகத் தோன்றலின், இச்சூத்திரம் எழுத்துக்களது பெயர் கூறுகின்றது என்றல் பொருந்துவது அன்று. மற்று, ஒரு சூத்திரம் ஒருபொருளையன்றிப் பலபொருளை நுதலும் என்றல் நூல்முறைமைக்கு ஒத்ததன்று என்பதும் ஈண்டு அறியத்தக்கது.

இந்நூலுள் எழுத்துக்கள் என்று கொள்ளப்படுபவை இத்துணைய என்று அறிவித்தல் வேண்டுதலின், ஆசிரியர் இச்சூத்திரத்தான் விதித்தது தொகையே ஆகும்.

## ச. பாலசுந்தரம் எழுதிய எழுத்ததிகாரம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை

### 1. நூன்மரபு

இசைப்பதும் ஒலிப்பதும் ஆகிய ஒலிஎழுத்துக்களின் மரபுகளை உணர்த்தும் பகுதி என்பது நூன்மரபு என்பதன் பொருள்.

சூ.1. **எழுத்தெனப் படுவ**
**அகரமுதல் னகரஇறுவாய்**
.........
**சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.**

(இ-ள்.) தனித்துவரல் மரபினையுடைய எழுத்து எனச் சிறப்பித்துச் சொல்லப்பெறுவன, சார்ந்து வரல் மரபினையுடைய மூன்றும் அல்லாமல், அகரமாகிய எழுத்து முதலாக னகரமாகிய எழுத்து ஈறாக உள்ள முப்பஃது என்று கூறுவர் ஆசிரியர்.

அகர னகரங்கள் அகப்பாட்டு எல்லையாக நின்றன. 'படுவ' என்னும் பாடமே இந்நூல்நெறிக்கு ஒத்தது.... இச்சூத்திரத்தான் தமிழ்எழுத்துக்கள் முப்பத்துமூன்று என்னும் தொகையும், தனித்துவரல் மரபின-சார்ந்துவரல் மரபின-என்னும் வகையும், முதல் இறுவாய் என்றதனால் முறையும், எழுத்து என்றதனான் தொகுதிப்பெயரும் பெறப்பட்டன.

## க. வெள்ளைவாரணனார் குறிப்புரை

ஆசிரியர் இப்படலத்துள் விதிக்கப்படுவனவற்றைக் கருவியும் செய்கையும் என இருவகையாக்கி, அவற்றுள் கருவியை நூன்மரபு முதலிய நான்கு இயலானும், செய்கையைத் தொகைமரபு முதலிய ஐந்து இயலானும் உணர்த்தினார் என்ப.

**சூ. 1.** சார்ந்து வருதலைத் தமக்கு இலக்கண மாகவுடைய மூன்றும் சொல்லிடை நோக்க எழுத்தாம் ஆயினும் தனியே நிற்கும் ஆற்றல் பெற்றன அல்ல ஆதலின், தம் இயல் குன்றாவாறு தனியே நிற்றல் காரணமாக எழுத்து எனச் சிறப்பித்துச் சொல்லப்படும் முப்பதனோடும் சேர்த்துரைக்கப்பெறா ஆயின.

## வ.சுப. மாணிக்கம் குறிப்புரை

### நூன் மரபு

முன்னுரையை நூன்முகம் என்று வழங்குவது போல, நூலின் தொடக்க இயல் என்று காட்டுவதற்கு எழுத்துமரபு எனற்பாலது நூன்மரபு என்று பெயர்வைக்கப்பட்டது. நூல் - இலக்கண நூல்; ஈண்டு ,'போக்கறு பனுவல்' ஆன தொல்காப்பியத்தைக் குறிக்கும். இவ்வியலில் எழுத்திலக் கணத்துக்கு உரிய எழுத்து - உயிர் - குறில் - நெடில் - மெய் - வல்லினம் - மெல்லினம் - இடையினம் - முதலான பல குறியீடுகள் கூறப்படும். சுருக்கம், விளக்கம், எடுத்தாட்சி- இவை குறியீட்டின் பயன்.

ஒலி - எண்ணிக்கை - வகை - அளவு - வடிவு - மயக்கம் - என்ற எழுத்தின் அறு கூறுகள் நூன்மரபில் மொழியப் பட்டன. மேலும் இந்நூன்மரபு தனி யெழுத்துக்குத் தனித்த நிலையில் அதன் தன்மைகளை நுவலும். வரிவடிவு பற்றிய செய்தி நூன்மரபு அளவில் நின்றுவிடும்.

சூ. /. பொருண்மையாற்றலுடைய ஒலியே எழுத்து எனப்படும். இத்தனிச்சிறப்பினைச்சுட்டுதற்கே 'எழுத்தெனப் படுப' என்று நடைசெய்தார் ஆசிரியர்.

**இளம்பூரணம்**

## 2. சார்பெழுத்து மூன்றாவன

**அவைதாம்**

**குற்றிய லிகரம் குற்றிய லுகரம்**
**ஆய்தம் என்ற**
**முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.**

(இச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின்) மேல் சார்ந்து வரும் எனப்பட்ட மூன்றற்கும் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேல் சார்ந்து வரும் எனப்பட்டவைதாம், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றாகிய புள்ளியும் என இவை. இவை மேல் சொல்லப்பட்ட முப்பதுஎழுத்தோடு ஒருதன்மைய என்றவாறு.

அப்பெயர் பெயர்; அம்முறை முறை. 'எழுத்தோரன்ன' என வேண்டா கூறிய அதனான், முன் 'எனப்படுப' (1) என்ற சிறப்பு அம்மூன்றற்கும் கொள்ளக்கிடந்தமையின், அது விலக்குதல் பெறுதும் என்பது.

குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன.

சந்தனக்கோல் குறுகினவிடத்தும் பிரப்பங்கோல் ஆகாதது போல இகர உகரம் குறுகினவிடத்தும் அவை பெயர் கூறற்பாலனவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் நோக்கி வேறு எழுத்து என்றுவேண்டினான் எனக் கொள்க. (2)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**ஆ.2.** 1. இகர உகர உயிர்களாகவே பெயர் கூறப்படு வனவற்றை என்றவாறு.

2. புணர்ச்சிவேற்றுமை ஒருமொழிக் குற்றிய லிகரத்தின் கண்ணும் ஒருமொழிக் குற்றியலுகரத்தின் கண்ணும் இன்று. ஆடு + யாது = ஆடியாது என்னும் புணர்மொழிக்கண் குற்றியலிகரத் தோற்றம் காணப்படும். ஆடி + யாது = ஆடியாது என்றும் புணர்மொழிக்கண் நிலைமொழி ஆடி திங்களைக் குறிக்கிறது; ஆண்டு இகரம் ஒரு மாத்திரை பெறும் முற்றியல் இகரம் என்க.

சுக்கு: வன்தொடர்க் குற்றியலுகரம். சுக்குக் கொடு, கொக்குக் கடிது என்னும் புணர்மொழிக்கண் குற்றியலுகரம் தன் அரைமாத்திரையின் குறையும். காது என்னும் ஈரெழுத்தொருமொழிக் குற்றுகரம் பெயர்ப்பொருளாகிய செவியைக் குறிக்குமிடத்து அரை மாத்திரை பெறும்; அழி என்னும் வினையைக் குறிக்குமிடத்து முற்றுகரமாய் ஒரு மாத்திரை பெறும்.

''தாது ஏது என்றல் தொடக்கத்து ஆரியமொழிகளும், எட்டு கொட்டு என்றல் தொடக்கத்துப் பொதுமொழிகளும், குன்றியாது - நாடியாது - எட்டி யாண்டுளது- என்றல் தொடக்கத்துப் புணர்மொழி வேறுபாடுகளும் அறிதற் பொருட்டுக் குற்றிகரக் குற்றுகரங்கட்குமேற் புள்ளி கொடுப்பாரும் உளர்'' (நன்.97 மயிலை.)

'' சந்தனக்கோல் குறுகினால் பிரப்பங்கோல் ஆகாது சந்தனக்கோலே ஆமாறு போல, உயிரின் குறுக்கமும் உயிரேயாமேனும், புணர்ச்சி வேற்றுமையானும் பொருள் வேற்றுமையானும், சீரும் தளையும் சிதையுமிடத்து அலகு பெறாமையானும், குற்றிகரக் குற்றுகரங்கள் சார்பெழுத்து என உயிரின் வேறாயின'' (இ.வி.எழு.16 உரை).

**நச்சினார்க்கினியம்**

*2. சார்பெழுத்து மூன்றாவன*

**அவைதாம்,**
**குற்றிய லிகரம் குற்றிய லுகரம்**
**ஆய்தம் என்ற**
**முப்பால் புள்ளியும் எழுத்தோ ரன்ன.**

*இது மேல் சார்ந்துவரும் என்ற மூன்றற்கும் பெயரும் முறையும் உணர் . . . ற்று.*

இ-ள்:அவைதாம்-மேல் சார்ந்துவரும் எனப்பட்டவை தாம்; குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பால்புள்ளியும் - குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்று சொல்லப்பட்ட மூன்றுகூற்றதாகிய புள்ளி வடிவும் ஆம்; எழுத்து ஓரன்ன - அவையும் முற்கூறிய முப்பது எழுத்தோடு ஒரு தன்மையவாய் வழங்கும் எ - று.

முற்கூறிய இரண்டும் உம்மை தொக்கு நின்றன. (1) இகர உகரம் குறுகிநின்றன. விகாரவகையால் புணர்ச்சி வேறுபடுதலின், இவற்றை இங்ஙனம் குறியிட்டு ஆளுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. சந்தனக்கோல் குறுகினால் பிரப்பங்கோல் ஆகாது. அதுபோல உயிரது குறுக்கமும் உயிரேயாம். இவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள்வேற்றுமையும் பற்றி வேறோர் எழுத்தாக வேண்டினார்.

இவற்றுள், குற்றியலுகரம் நேர்புஅசையும் நிரைபுஅசையுமாகச் சீர்களைப் பல ஆக்குமாறு செய்யுளியலுள் உணர்க. (2)

ஆய்தம் என்ற ஓசைதான், அடுப்புக்கூட்டுப் போல மூன்றுபுள்ளி வடிவிற்று என்பது உணர்த்தற்கு 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என்றார். (3) அதனை இக்காலத்தார் நடுவுவாங்கியிட்டு எழுதுப. இதற்கு வடிவுகூறினார், ஏனை

ஒற்றுக்கள் போல உயிர்ஏறாது ஓசைவிகாரமாய் நிற்பதொன்று ஆகலின். எழுத்தியல் தழா ஓசை போலத் தோன்றினும் அங்ஙனம் கொள்ளற்க என்றற்கு எழுத்தேயாம் என்றார். (4) இதனைப் புள்ளிவடிவிற்று எனவே, ஏனை எழுத்துக்கள் எல்லாம் வரிவடிவின ஆதல் பெற்றாம்.

முன்நின்ற சூத்திரத்தான் 'சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே எழுத்தெனப்படுப முப்பஃது என்ப, எனவே, சார்ந்துவரல் மரபின் மூன்றுமே சிறந்தன, ஏனைய முப்பதும் அவ்வாறு சிறந்தில எனவும் பொருள்தந்து நிற்றலின், அதனை விலக்கிச் சிறந்த முப்பது எழுத்தோடு இவையும் ஒப்ப வழங்கும் என்றற்கு 'எழுத்தோரன்ன' என்றார்.

இப்பெயர்களே பெயர்; இம்முறையே முறை; தொகையும் மூன்றே. இம்மூன்று பெயரும் பண்புத் தொகை.

'அவைதாம்', 'ஆய்தம் என்ற' என்பன சொற்சீரடி. (2)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 2***

*1.* குற்றியலுகரம் உயிரேற இடங்கொடுத்து நிற்றலும், முற்றியலுகரம் உயிரேற இடங்கொடாமையுமே அவ்விரண்டற்கும் இடையே வேறுபாடு என்பது நச்சினார்க்கினியர் கருத்து. காது, முருக்குப் போன்ற ஏவலொருமை முற்றுக்கள் ஈற்றுஉகரம் இதழ் குவித்துக் கூறப்படும். அவ்உகரம் ஒருமாத்திரை இசைத்தலின் முற்றுகரமாம். அச்சொற்கள் முறையே கொல், அழி முதலாகப் பொருள்படுவன. அவை செவி, முருக்கமரம் எனப் பெயராகப் பொருள்படுவழி ஈற்றுஉகரம் இதழ்குவியாது கூறப்படுதலின், அரைமாத்திரையே இசைக்கும் குற்றுகரமாம்.

காசி+யாது=காசியாது (காசி என்பது வடநாட்டுத்தலம்); காசு+யாது=காசியாது. இவ்விரண்டனுள் முன்னையது ஒரு மாத்திரைபெறும் முற்றியலிகரம்; ஏனையது அரைமாத்திரையே இசைக்கும் குற்றியலிகரம்.

2. காது : 'நேர்பு' அசை; வரகு : 'நிரைபு' அசை.

3. ஆய்தத்தை முப்பாற்புள்ளியாக ∴ என்றிவ்வாறு எழுதாமல், நடுவு வாங்கி (உள்ளே சுழியாக வளைத்து) ஃ என்றிவ்வாறு தம் காலத்தே மக்கள் எழுதுவாராக நச்சினார்க்கினியர் குறித்தார். (இதற்குக் கல்வெட்டுச் சான்று காட்டிப் பிறவாறும் உரைப்ப.) ['நடுவேயுள்ள புள்ளியை நீக்கி' - என்றலே பொருந்தும்.]

4. 'வாராததனான் வந்தது முடித்தல்' என்னும் உத்தி உரையுள், இம்மூன்று எழுத்துக்களும் புள்ளிபெறும் என்று இச்சூத்திரத்தை எடுத்துக்காட்டிக் கூறுவர் பேராசிரியர். அதனைத் தழுவிச் சிவஞானமுனிவரும் தமது சூத்திரவிருத்தியுரையில் குறிப்பிடுவர். குற்றியலிகரமும் குற்றியலுகரமும் அக்காலத்துப் புள்ளிபெற்று வழங்கியமை, 'குற்றிய லிகரமும் குற்றிய லுகரமும். மற்றவை தாமே புள்ளி பெறுமே' என்னும் சங்கயாப்புச் சூத்திரத்தானும் அறியப்படும். (யா. வி. பக். 26)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.2.** அவைதாம்,

..................எழுத்தோ ரன்ன.

(இ-ள்) முற்சூத்திரத்துள் கூறப்பட்ட எழுத்தோடு ஒருதன்மைப்பட்டுச் சார்ந்துவருகின்றனவாய அவை குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் ஆகிய முக்கூற்றனவாகிய புள்ளியெழுத்துக்களாம்.

'குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம்' என்ற தொடர் முழுமையும் 'முப்பாற்புள்ளியும்' என்றதற்கு அடையாகக் கொண்ட சிவஞானமுனிவரை இவர் பின்பற்றினார்.

இம்மூன்றும் தாம் சார்ந்துவரும் எழுத்துக்களோடு ஒருதன்மைப்பட்டு அவை பிறந்த இடங்களில் தாம் பிறத்தலின் 'எழுத்து ஓரன்ன' என்றார்.

வே. வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

*சூ. 2.* அவைதாம்,
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
.....எழுத்து ஓ ரன்ன.

'முப்பாற் புள்ளி' என்றதனைக் குற்றியலிகரம் முதலிய மூன்றற்கும் பொதுப்பெயராகக் கொள்ளுதல் அமைதி. என்னையெனின், ஒருதிறப்பட்ட மூன்று எழுத்துக்களைக் கூறுமிடத்து, அவற்றிற்கு எல்லாம் ஒத்த தன்மையினைக் கூறுதல் முறையாதலே அன்றி, அவற்றுள் ஓரெழுத்திற்கு மட்டும் சிறப்பியல் கூறி ஒருங்கு வைத்தல் அத்துணை முறையாதல் இன்று.

*சூ.2* நச்சினார்க்கினியர், "அதனை இக்காலத்தார் நடுவுவாங்கியிட்டு எழுதுப" என்று எழுதியிருத்தலின், அவர்காலத்தில் ஆய்தம் இரண்டுபுள்ளி வடிவினதாக எழுதிவந்தமை அறியப்படும். அதுவே பழைய வடிவம் ஆகும். ஆயின் அவர் கூற்றால் மூன்றுபுள்ளியிட்டு எழுதுதலே பழைய வடிவம் என்று அறியப்படுமால் எனின், 'முப்பாற் புள்ளியும்' என்றதனை ஆய்தத்தின் வரிவடிவு கூறியதாக அவர் கருதினார் ஆகலின், ஆய்தஎழுத்து அடுப்புக்கூட்டுப்போல மூன்றுபுள்ளி வடிவிற்று என்றும், நடுவு வாங்கியிட்டு எழுதுப என்றும் எழுதுவாராயினார்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

*சூ.2.* அவைதாம்,
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
.......எழுத்தோ ரன்ன,

(இ-ள்.) சார்ந்துவரல் மரபினையுடைய அவைதாம், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்ற முப்பால்

ஒலிப்பியல் புடையதும் ஆகிய மூன்றும் மேற்கூறப்பெற்ற முப்பது எழுத்தொடு ஒருபுடையாக ஒத்த தன்மையன என்று கூறுவர் ஆசிரியர்.

'புள்ளி' என்பது ஒலிக்கும் இயல்பினைச் சுட்டிவரும் வரிவடிவ அடையாளம். ..........'ஓரன்ன' என்றமையான், ஒருபுடை ஒப்புமையே கொள்க. அவையாவன: மொழிக்கு உறுப்பாதலும், மாத்திரை பெறுதலும், அசைக்கு உறுப்பாதலும் ஆம். ......ஆய்தம் உயிர் ஏறலின்றி யாண்டும் ஒலிப்பொடு வரும் பண்பினது என்பது விளங்க ஒலிக்குறிப்பினதாகிய புள்ளியை விதந்து 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்' என்று கூறினார். ....ஆய்தம் யாண்டும் ஒலிப்பொடு நிற்றலான், இதனை உயிர் ஊர்வதில்லை; அரைமாத்திரை ஆதலின் அது மெய்யினை ஊர்வதில்லை. இங்ஙனம் உயிருக்கும் ஒற்றிற்கும் இடைப்பட்டு நிற்றலின், உயிர் போலவும் ஒற்றுப் போலவும் முறையே அலகுபெற்றும் பெறாதும் வரும் என அறிக.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

***சூ.2.*** அவை தனித்து ஒலிக்கப்பெறா ஆயினும் மொழியொடு சார்த்தி இசைக்கப்படுதலின் எழுத்து என்றற்கு ஒருவகையான் உரிய என்பார் 'எழுத்தோரன்ன' என்றார்.

நச்சினார்க்கினியர் உரையின்கண், ஆய்தம் மூன்றுபுள்ளி வடிவிற்று என்பதும், அவர்காலத்திலுள்ளார் சிலர் அதனை நடுவே வளைந்த கோடிட்டு வழங்கினார்கள் என்பதும், ஆய்தம் ஏனை ஒற்றுக்கள் போல உயிர்ஏறாது நிற்பதொன்று என்பதும் புலப்படுதல் காணலாம்.

நடுவு வாங்கியிட்டு எழுதுப என்பதற்கு ஏற்ப, 8ஆம் நூற்றாண்டில் பல்லவமன்னன் காலத்ததாக அமைந்த காசாக்குடிப் பட்டயத்துள் 'வெஃகா' என்று சொல்லின் ஆய்தம் 'வெ U கா' என்று மேலும் கீழும் புள்ளியும் இடையில் வளைந்த கோடும் உடையதாக வரையப் பட்டிருப்பது ஆராயத்தக்கது.

ஆய்தம் மூன்றுபுள்ளி வடிவிற்று என்பது உரையாசிரியர் நச்சினார்க் கினியர் உரைகளான் ஆசிரியர் தொல்காப்பிய னார்க்கு உடன்பாடு என்பது பெறப்பட்டது. பின்னரும் ஆசிரியர் ஆய்தப்புள்ளி என இதன் பெயருரைத்தலும் ஆய்தம் புள்ளிவடிவிற்று என்பதை வலியுறுத்தும். மூன்றுபுள்ளி வடிவிற்றாய் எழுதப்பட்டு வந்த ஆய்தம் U என இடைக்காலத்தாரால் இடையே வளைத்தெழுதப் பட்டிருந்தமை நச்சினார்க்கினியர் உரை யானும் நன்கு விளங்கும். ஒருசிலரால் ஆய்தம் இடையே வளைத்தெழுதப் பட்டாலும், பெரும்பாலோர் மூன்றுபுள்ளி வடிவினதாகவே எழுதிவருகின்றமை எல்லார்க்கும் உடன்பாடாகும்.

ஆய்தம் என்னும் சொல் ஆய்தல் என்ற உரிச்சொல்லடியாகப் பிறந்து நுணுகிய ஓசையுடைய எழுத்து என்ற பொருளில் வழங்கியிருத்தல் கூடும் என உய்த்துணரலாம்.

**வ. சுப. மாணிக்கம் உரைக்குறிப்பு**

*சூ.2.* 'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' என்பது செய்யுளியல். இதனால் குற்றியலிகரம் ஒற்றாகிய புள்ளி பெறும் என்பது போதரும். 'மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்' 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்ற புணரியல் நூற்பாக்களால் குற்றியலுகரம் புள்ளி பெறும் என்பது வெளிப்படை. ' ஆய்தப்புள்ளி ' என்றே மொழி மரபிலும் புள்ளிமயங்கியலிலும் குற்றியலுகரப் புணரிய லிலும் கூறுவதால் அது புள்ளிபெறும் என்பது தெளிவு. புள்ளிஎய்தும் தன்மையாலும் இவை ஓரினம் என்பதனை வெளிப்படுத்தவே 'முப்பாற்புள்ளி' என்றார் ஆசிரியர்.

குற்றியலிகரம், குற்றியலுகரம் தத்தம் முதல்வடிவனைச் சார்ந்தன. ஆய்தத்திற்கு அன்ன சார்பின்மையால் ஒரு நடுப்புள்ளியே அதன் வடிவன் ஆயிற்று. எ.கு, அ.றிணை, வெ.கு-என வரும். ஆய்தம்

ஒருபுள்ளிதான் உடையது எனவும், அது நடுவில் நிற்பது எனவும், 'குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி, உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே' என்ற மொழிமரபு நூற்பாவால் தெளியவேண்டும். ஆய்தப்புள்ளி என்பதனால் புள்ளியுருவே அதனுரு என்பதும், 'புள்ளி மிசைய' என்னாமல் 'மிசைத்து' என்ற ஒருமைப்பயனிலையால் அப்புள்ளி ஒன்றுதான் என்பதும், 'முன்னர்.........மிசைத்தே' என்பதனால் நிற்குமிடம் இடைஅல்லது நடுவு என்பதும், தெற்றென விளங்கும்.

**இளம்பூரணம்**

### *3. குற்றெழுத்து*

**அவற்றுள்**
**அ இ உ**
**எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்**
**ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து என்ப.**

*(இச்...எனின்)* மேல் கூறப்பட்டனவற்றில் சிலவற்றிற்கு அளவும் குறியும் உணர்....ற்று.

*(இ-ள்.)* மேல் கூறப்பட்ட எழுத்தினுள், அ இ உ எ ஒ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஐந்தும் ஒரோவொன்று ஓர் அளபாக ஒலிக்கும். அவை தாம் குற்றெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர் எ - று.

இவன் காரணம் பற்றியன்றிக் குறியிடான் ஆகலின், இது தன் குறுமையான் இக்குறி பெற்றது. இக்குறியை ஆண்டவாறு மேல் வந்தவழிக் கண்டுகொள்க. *(3)*

**நச்சினார்க்கினியம்**

### *3. குற்றெழுத்து*

**அவற்றுள்,**
**அ இ உ**
**எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்**
**ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து என்ப.**

இது முற்கூறியவற்றுள் சிலவற்றிற்கு அளபும் குறியும் உணர் . . . ற்று.

இ-ள்: அவற்றுள் - முற்கூறிய முப்பது எழுத்தினுள்; அ இ உ எ ஒ என்னும் அப்பால் ஐந்தும் - அகர இகர உகர எகர ஒகரம் என்று கூறப்படும் அப்பகுதிகள் ஐந்தும்; ஓர் அளபு இசைக்கும் குற்றெழுத்து என்ப - ஒரோவொன்று ஓர்அளபாக ஒலிக்கும் குற்றெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் புலவர் எ-று. இக்காரணப்பெயர் மேல் ஆளுமாறு ஆண்டு உணர்க.

*(1)* தமக்கு இனமாயவற்றின்கண்அல்லது குறுமை நெடுமை கொள்ளப் படாமையின், ஒருமாத்திரை அளவிற் பட்டு அமைந்தனவாம் குற்றெழுத்தின் குறுகி மெய் அரைமாத்திரை பெற்றதேனும் குற்றெழுத்து எனப் பெயர்பெறாதாயிற்று, ஒருமாத்திரை பெற்ற மெய் தனக்கு இனமாக இன்மையின். குற்றெழுத்து என்பது பண்புத் தொகை.

இனி இசைப்பதும் இசையும் வேறாக உணரற்க. அது பொருள்தன்மை. *(2)*

'அவற்றுள்' ,'அ இ உ' என்பன சொற்சீரடி. *(3)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 3

1. நெட்டெழுத்திற்குக் குற்றெழுத்து இனமாயினாற் போல, குற்றெழுத்திற்கு மெய் இனமாயிற்று அன்று. ஒருமாத்திரை பெற்ற மெய்கள் தமக்கு இனமாய் இருப்பின் அரைமாத்திரை பெற்ற மெய் குற்றெழுத்து எனப்படலாம். அஃது இன்மையின் மெய் குற்றெழுத்து எனப்படாது.

2. இசைப்பது : எழுத்து; இசை : ஒலி. அந்த இசை அவ்வெழுத்தாகிய பொருளின் குணம் என்றவாறு.

சாத்திரியார் உரைக்குறிப்பு

சூ.3. அவற்றுள்,
அ இ உ
............குற்றெழுத் தென்ப.

குறுமை நெடுமை இரண்டும் அங்காமுயற்சியுடைய ஒலிகளாகிய உயிர்களுக்கே சிறப்பாக நிகழ்வன; மெய்யெழுத்திற்கு அவை இல்லை.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ.3. அவற்றுள்,
அ இ உ
.............
ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து என்ப.

உயிர்எழுத்துக்கட்கு இசையளவு ஒன்றே சிறப்பிலக்கணம் ஆகலின் இசைத்தலை உடன் கூறினார்.

### 4. நெட்டெழுத்து

ஆ ஈ ஊ
ஏ ஐ
ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்ப.

இதுவும் அது.

(இ-ள்.) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஏழும் ஒரோவொன்று இரண்டு மாத்திரையாக ஒலிக்கும். அவைதாம் நெட்டெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர் எ - று.

ஐகார ஔகாரங்கள் தமக்கு இனமில்லை எனினும், மாத்திரை ஒப்புமையான் நெட்டெழுத்து எனப்பட்டன. (4)

நச்சினார்க்கினியம்

**4. நெட்டெழுத்து**

ஆ ஈ ஊ
ஏ ஐ
ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்ப.

இதுவும் அது.

இ-ள்: ஆ ஈ . . . . . ஏழும் - ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ - என்று சொல்லப்படும் அக்கூற்று ஏழும்; ஈர்அளபு...என்ப - ஒரோவொன்று இரண்டு மாத்திரையாக ஒலிக்கும் நெட்டெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

எனவே, அளபும் காரணக்குறியும் இங்ஙனம் உணர்த்தி மேல் ஆளுப. ஐகாரஔகாரங்கள், குறிய எழுத்தின் நெடிய ஆதற்குக் குற்றெழுத்தாகிய இனம் தமக்கு இலவேனும், மாத்திரை ஒப்புமையான் நெட்டெழுத்து என்றார். (4)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.4.** ஆ ஈ ஊ ஏ ஐ
ஓ ஔ .....நெட்டெழுத் தென்ப

ஐ, ஔ - இவற்றிற்கு இனக்குற்றெழுத்து இல்லை. மொழியின்கண் அவை ஓரளவு இசைக்கும் இடனுமுண்டு என ஆசிரியர் பின்னர்க் கூறினும் (57) அவற்றை அப்போது குற்றெழுத்தாகக் கொண்டிலர்; இகர உகரங்களே அவற்றிற்குக் குற்றெழுத்தாம்.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.4.** அ அ இரண்டு சேர்ந்து ஆ என்ற நெடில் ஆவதில்லை. இ இ இரண்டு சேர்ந்து ஈ என்ற நெடில் ஆவதில்லை. அ என்பதும் தனிப்பிறப்பு, ஆ என்பதும்

தனிப்பிறப்பு. ஈ என்பதும் தனிப்பிறப்பு. ஐ, ஔ முதலான பிறவும் அன்ன. இதனால்தான் குற்றெழுத்து நீண்டு நெட்டெழுத்து ஆகும் என்னாமல் 'ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து' என்றார்.

**இளம்பூரணம்**

## 5. மூவளபு ஓரெழுத்திற்கு இன்மை

**மூவளபு இசைத்தல் ஓர்எழுத்து இன்றே.**

(இச்...எனின்) உயிரளபெடை எழுத்திற்கு மாத்திரை கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) மூன்று மாத்திரையாக ஒலித்தல் இயல்பாகிய ஓரெழுத்திற்கு இல்லை; விகாரமாகிய இரண்டு கூடிய அதற்குண்டு எ - று. (5)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.5.** இந்நூற்பாவைப் பேராசிரியர் மறுதலை சிதைத்துத் தன் துணிபுரைத்தல் என்னும் உத்தியின்பாற் படுத்துவர். ''ஒரு பொருளினை ஒருவன் வேறுபடக் கொள்வதோர் உணர்வு தோன்றின், அவ்வேறுபாட்டினை மாற்றித் தான் துணிந்தவாறு அவற்கும் அறிவுறுத்தல்.

உ.ம்: 'மூவளபு இசைத்தல் ஓரெழுத்து இன்றே' எனவும்

'நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்' எனவும்

'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத்து இம்பர் ஒத்தகுற் றெழுத்தே'
எனவும்

மூன்று மாத்திரையான் ஓரெழுத்து உண்டு என்பாரை விலக்கி, வழக்கியலான் இல்லை என்று தன் துணிபு உரைத்தவாறு.'' (பொரு.665 பேரா.)

**நச்சினார்க்கினியம்**

## 5. மூவளபு ஓரெழுத்திற்கு இன்மை

மூவளபு இசைத்தல் ஓரெழுத்து இன்றே.

இஃது ஐயம் அகற்றியது; ஓரெழுத்து மூஅளபாயும் இசைக்கும் கொல்லோ என்று ஐயப்படுதலின்.

இ-ள்: ஓர்எழுத்து மூஅளவு இசைத்தல் இன்று- ஓரெழுத்தே நின்று மூன்று மாத்திரையாக இசைத்தலின்று எ-று.

எனவே, பலஎழுத்துக் கூடியஇடத்து மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் இசைக்கும் என்றவாறு.

எனவே, பெரும்பான்மை மூன்று மாத்திரையே பெறும் என்றார் புலவர். பலஎழுத்து எனவே, நான்கு மாத்திரையும் பெறுதல் பெற்றாம். (5)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.5.** மூவளபு இசைத்தல் ஓரெழுத் தின்றே.

*(இ-ள்.)* மூன்று மாத்திரை ஒலித்தல் ஓர்எழுத்திற்கு இல்லை.

தமிழ்மொழியில் மூன்று மாத்திரை ஒலிக்கும் எழுத்து இன்மையால், ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஐஇ ஓஒ ஔஉ - என்ற குறிகளால் குறிக்கப்படும் ஒலியெழுத்தினை ஓரெழுத்தாகக் கொள்ளலாகாது. தொல்காப்பியனார் ஆஅ ஈஇ ஊஉ - என்புழி அ இ உ - என்னும் இவற்றையே அளபெடை என்னும் குறியாகக் கொண்டு, அவற்றைத் தனி ஒலியெழுத்தாக வேண்டினார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 5.** மூஅளபு இசைத்தல் ஓர்எழுத்து இன்றே.

சூ.5. அடு: குற்றெழுத்துத் தொடங்கியது; ஆடு: நெட்டெழுத்துத் தொடங்கியது. ஆ என்ற நெடிலுக்குமேல் பொருள் தரும் மூவளபுடைய உயிர்நெடில் தமிழில் இல்லை. மாத்திரை கூடுதலாக ஒலிப்பதை இந்நூற்பாத் தடுக்கவில்லை; அங்ஙனம் ஒலிக்கலாம் என்பதனையும் விதிக்கிறது; ஆனால் அக்கூடுதலான ஒலிகட்குப் பொருளில்லை எனவும், பொருளில்லை எனவே எழுத்தாகா எனவும் தெளிவு செய்கிறது. ஆஅடு,ஆஅஅடு என்று மூன்று மாத்திரை யாகவும் நான்கு மாத்திரையாகவும் கூடுதலாக நீட்டினாலும், ஆடு என்ற பொருள் வேறுபடுதலும் இல்லை, கூடுதலு மில்லை என்பது மொழியியல்.

அளபெடையைச் சொல்லுவதிலும் எழுதுவதிலும் இன்று நடைமுறைப் பிழை மலிந்துவருகிறது. நூற் பாவின்படி, கூடுதல்ஒலியைக் கூட்டி நீட்டிச் சொல்ல வேண்டுமேயன்றிப் பிரித்துத் தனித்துச் சொல்லவும் கூடாது, எழுதவும் கூடாது.

### இளம்பூரணம்

#### 6. உயிரளபெடை

> நீட்டம் வேண்டின் அவ்வளபு உடைய
> கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்.

*(இச்...எனின்)* உயிரளபெடை ஆமாறு உணர்...ற்று.

*(இ-ள்)* நீண்ட மாத்திரையை யுடைய அளபெடை யெழுத்துப் பெறவேண்டின், மேற்கூறிய ஓரளபும் ஈரளபும் உடைய குறிலையும்நெடிலையும் பிளவுபடாமல்கூட்டி எழூஉக என்று சொல்லுவர் புலவர் எ-று. *(6)*

### நச்சினார்க்கினியம்

#### 6. உயிரளபெடை

> நீட்டம் வேண்டின் அவ்வளபு உடைய
> கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்.

இது மாத்திரை நீட்டுமாறு கூறுகின்றது.

இ-ள்: நீட்டம் வேண்டின்-வழக்கிடத்தும் செய்யு ளிடத்தும் ஓசையும் பொருளும் பெறுதல் காரணமாக, இரண்டு மாத்திரை பெற்ற எழுத்து அம்மாத்திரையின் மிக்கு ஒலித்தலை விரும்புவராயின்; அவ் அளவு . . . . . . . புலவர் - தாம் கருதிய மாத்திரையைத் தருதற்கு உரிய எழுத்துக்களைக் கூட்டி அம்மாத்திரைகளை எழுப்புக என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

கூட்டி எழுப்புமாறு 'குன்றிசை மொழி' (41), 'ஐ ஔ என்னும்' (42) என்பனவற்றான் எழுவகைத்து எனக் கூறுப.

வருமாறு: ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஐஇ ஓஒ ஔஉ என வரும். இவை மூன்று மாத்திரை பெற்றன. (1) இவைதாம், 'நெட்டெழுத்தேழே ஓரெழுத் தொருமொழி' (43) என்ற அந்நெட்டெழுத்துக்களே அளபெடுத்தலின் சொல்லாதல் எய்தின. (2) இனி 'அளபெடை அசைநிலை ஆதலும் உரித்தே' (செய்.17) என்னும் செய்யுளியல் சூத்திரத்தான் எழுத்தாம் தன்மையும் எய்திற்று.

இதுதான், (3) இயற்கையளபெடையும் செய்யுட்குப் புலவர் செய்து கொண்ட செயற்கையளபெடையுமாய்ச் சொல்தன்மை எய்திநின்று அலகு பெறுமாறும், குற்றியலிகர குற்றியலுகரங்கள் போல எழுத்தாம் தன்மை எய்திக் குறில் அலகு பெறாது நிற்குமாறும் அச்சூத்திரத்தான் உணர்க. எனவே, எழுத்தாம் தன்மையும் உடைமையின், அளபெடையொடு கூடி எழுத்து நாற்பது என்றலும் பொருந்திற்று. ஒற்றளபெடை செய்யுட்கே வருதலின் ஈண்டுக் கூறாராயினார்.

'அவ்வளபுடைய' எனப் பன்மையாகக் கூறியஅதனான் இவரும் நான்கு மாத்திரையும் கொண்டார்; என்னை? இவ்வாசிரியரை 'முந்துநூல் கண்டு' என்றார் ஆகலின். மாபுராணத்து,

'செய்யுட்கண் ஓசை சிதையுங்கால் ஈரளபும்
ஐயப்பாடு இன்றி அணையுமாம் - மைதீர்ஒற்று
இன்றியும் செய்யுள் கெடின்ஒற்றை உண்டாக்கு
குன்றுமேல் ஒற்றளபும் கொள்'

என்ற சூத்திரத்தான் அவர் கொண்ட நான்கு மாத்திரையும் இவ்வாசிரியர்க்கு நேர்தல் வேண்டுதலின். அது 'செறாஅஅய் வாழிய நெஞ்சு' (குறள்.1200), 'தூஉஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்' (மலைபடு. இறுதிப் பாடல்), 'இலாஅஅர்க் கில்லை தமர்' (நாலடி.383), 'விராஅஅய்ச் செய்யாமை நன்று' (ஷ246),'மரீஇஇப் பின்னைப் பிரிவு' ( ஷ 220) எனச் சான்றோர்செய்யுட்கு எல்லாம் நான்கு மாத்திரை பெற்று நின்றன. அன்றி, மூன்று மாத்திரை பெற்றனவேல், ஆசிரியத்தளை தட்டுச் செப்பல் ஓசை கெடுமாயிற்று. இங்ஙனம் அளபெடாது நின்று ஆசிரியத்தளை தட்டு நிற்பன கலிக்கு உறுப்பாகிய கொச்சக வெண்பாக்கள். இவை அன்ன அல்ல எனறுணர்க.

(4) கோட்டுநூறும் மஞ்சளும் கூடியவழிப் பிறந்த செவ்வண்ணம் போல நெடிலும் குறிலும் கூடிய கூட்டத்துப் பிறந்த பின்னர்ப் பிளவுபடா ஓசையை அளபெடை என்று ஆசிரியர் வேண்டினார். இவை கூட்டிச்சொல்லியகாலத்து அல்லது புலப்படா, எள்ளாட்டியவழி அல்லது எண்ணெய் புலப்படாவாறு போல என்றுணர்க. இனி, அளபெடை அல்லாத ஓசைகள்எல்லாம் இசையோசை ஆதலின் அவற்றை 'அளபிறந்து உயிர்த்தலும்' (33) என்னும் சூத்திரத்தாற் கூறுப. (6)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 6**

1. ஆஅ என்புழி, ஆ என்னும் ஓரெழுத்தொருமொழி யாகிய நெட்டெழுத்தே அளபெடுத்தலின் அவ்வளபெடை எழுத்தும் அந்நெட்டெழுத்தொடு சேர்ந்து மொழியாம் என்றவாறு.

சொல்லாம்தன்மை எய்தி நிற்றலாவது, தானும் அம்மொழிக்கு உறுப்பெழுத்துப் போல நின்று அசையாக அலகு பெறுதல்.

2. எழுத்தாம் தன்மை எய்தி நிற்றலாவது, அங்ஙனம் சொற்கு உறுப்புப் போல நின்ற அளபெடைஎழுத்துத் தனக்கு முன்னுள்ள நெட்டெழுத்தே அலகு பெறத் தான் அலகுபெறாது அளபெடையெழுத்து என்று கொள்ளப்பட்டு நிற்றல். எனவே, அஃது அளபெடை எழுத்தென்று நீக்கப்படுவதன்றி அசைக்குரிய எழுத்தாக வைத்து எண்ணப்படாது - என்பது கருத்து.

அளபெடை அசைநிலை ஆகலாவது, அளபெடையெழுத்துத் தானும் ஓர் அசையாகிச் சீர்நிலை அடையாது, தனக்கு முன்னுள்ள நெட்டெழுத்தொடு சேர்ந்து ஓர் அசையாகவே கொள்ளப்பட்டு நிற்றல்.

3. வழக்கிற்கும் செய்யுட்கும் பொதுவாகலின் இயற்கைஅளபெடை எனப்பட்டன. அவை குரீஇ, தொழீஇ என்பன போல்வன.

4. கோட்டு நூறு - சங்கு நூறாகிய சுண்ணாம்பு.

சிவஞான முனிவர் உரைக்குறிப்பு

*சூ.6.* இந்நெட்டெழுத்துக்கள் மொழிக்காரணமாய் வேறுபொருள் தந்து நிற்றலின், அது பற்றி வேறெடுத்து எண்ணி உயிர் பன்னீர்எழுத்து எனப்பட்டன. அளபெடை அந்நெட்டெழுத்தொடு குற்றெழுத்து ஒத்துநின்று நீண்டு இசைப்பதொன்று ஆயினும், மொழிக்காரணமாய் வேறுபொருள் தாராது இசைநிறைத்தல் மாத்திரைப் பயத்ததாய் நிற்றலின், வேறு எழுத்தென வைத்து எண்ணப்படாதாயிற்று என்பது நுண்ணுணர்வான் ஓர்ந்துகொள்க. 'குன்றிசை மொழிவயின் நின்றுஇசை

நிறைக்கும், நெட்டெழுத்து இம்பர் ஒத்த குற்றெழுத்தே' என்றதூஉம் இக்கருத்தே பற்றி என்க....அற்றேல், ஓரெழுத்தினையே இரண்டுமாத்திரையும் ஒருமாத்திரையு மாகப் பிரித்து அசைத்துச் சீர்செய்தல் பொருந்தாது எனின், அற்றன்று; 'எழுத்துவகையான்' என்னாது. 'மாத்திரை வகையான் தளைதம கெடாநிலை, யாப்புஅழி யாமையென்று அளபெடை வேண்டும்' (செய்.) என்றமையின், எழுத்திற்கு மாத்திரைகோடலும் அசைத்தலும் சீர்செய்தலும் தளையறுத்தலும் ஓசை பற்றிஅல்லது எழுத்துப்பற்றி அல்ல என்க.

["ஓரெழுத்தினையே இரண்டு மாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசைத்துச் சீர்செய்தல் பொருந்தாது எனின், அற்றன்று; 'எழுத்துவகையான்' என்னாது 'மாத்திரை வகையான் தளைதம கெடாநிலை, யாப்புஅழி யாமை என்று அளபெடை வேண்டும்' என்றமையின், எழுத்திற்கு மாத்திரை கோடலும் அசைத்தலும் சீர்செய்தலும் தளை அறுத்தலும் ஓசைபற்றிஅல்லது எழுத்துப்பற்றி அல்ல என்க'' என்று சிவஞானமுனிவர் கூறியிருத்தலின், ஓரெழுத்தையே ஒருநெடிலாகவும் ஒருகுறிலாகவும் அமைத்துச் சீர் கோடல் பொருந்தும் எனின், பிளவுபடாது இயைந்து நின்ற ஓசை ஒன்றனை இரண்டாகப் பிரித்தல் எவ்வாறு இயலும் என்க. பிளவுபடாது நின்ற மூவளபு ஒலி ஒன்றனையே இரண்டு எழுத்தாகப் பிரித்துச்சீர்கோடல் அமையும் எனின், மேற்கூறிய 'கடாஅக் களிற்றின்மேல்' என்பதிலுள்ள ஈரளபுஒலியாகிய 'டா' என்னும் ஒலிஒன்றனையே இரண்டாகப் பிரித்து இரண்டு குறிலாக் கொண்டு 'கடா' (கட+அ) என்பதனைப் புளிமா என்னும் ஈரசைச் சீராகக் கோடல் கூடுமே! அளபெடுத்தல் வேண்டாஅன்றே? அவ்வாறு கோடல் இன்மையின் 'கடாஅ' என்று அளபெடுத்தவழி, நெடிலும் குறிலுமாகவே கொண்டு சீர்கோடல் முறை. இவற்றால், அளபெடையாவது - நீரும் நீரும் சேர்ந்தாற்போல்வதும் கோட்டு நூறும் மஞ்சளும்

கூடியவழிப் பிறந்த செவ்வண்ணம் போல்வதும் அன்று என்பதும், விரலும் விரலும் சேர்ந்தாற் போல்வது என்பதும் அறியப்படும். பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் ''ஆஅழி' என்பது மூவெழுத்துப் பாதிரி என்று எழுதியிருத்தலின், அலகிடுங்கால், அளபெடையை நெடிலும் குறிலுமாகக் கொண்டே தொகை கூறியிருப்பது நன்கு அறியப்படும்.] எ. ஆ. பக். 45, 46

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 6.** நீட்டம் வேண்டின்....என்மனார் புலவர்.

'அவ்வளபுடைய' என்றாரேனும், அவ்வளபுடைய இனக்குற்றெழுத்துக் களையே கொள்ளவேண்டும் என்பது 41ஆம் சூத்திரத்தான் விளங்கும்.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.6.** நீட்டம் வேண்டின்....என்மனார் புலவர்.

வடமொழியில் ஓர்எழுத்து மூன்றுமாத்திரையும் பெறும் ஆகலின், அவ்வாறு இம்மொழியில் இல்லை என்று கூறவேண்டுவதாயிற்று. ஒருமாத்திரை அளவு ஒலிக்கும் எழுத்து 'ஹரஸ்வம்' என்றும், இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கும் எழுத்துத் 'தீர்க்கம்' என்றும், மூன்றுமாத்திரை அளவு ஒலிக்கும் எழுத்து 'ப்லுதம்' என்றும் வடமொழியில் வழங்கும்.

தமிழில் ஓர்எழுத்து இரண்டு மாத்திரை அளவிற்குமேல் ஒலித்தல் இல்லை. மூன்றுமாத்திரை ஒலித்தல் வேண்டு மாயின், இரண்டுமாத்திரை ஒலிக்கும் நெட்டெழுத்தின்பின் ஒருமாத்திரை ஒலிக்கும் குற்றெழுத்து ஒன்றினைக் கூட்டி ஒலிக்கவேண்டும்; இரண்டு குற்றெழுத்துக்களைக் கூட்டி நான்குமாத்திரையளவு ஒலித்தலும் உண்டு.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.6.** **நீட்டம் வேண்டின்.....என்மனார் புலவர்.**

*(இ-ள்.)* விளிக்கவும், பா என்னும் ஓசை நிகழவும், அசை நிறைக்கவும், பிறவாறு எழுப்பவும், எழுத்துக்களின் ஓசையை நீட்டுதலை விரும்பின், அவ்வளவிற்கு அவ்வளபுடைய எழுத்துஇசையைப் பிளவுபடாமல் கூட்டி எழுப்புக. கூட்டப்பெற்ற அவ்வளவினையுடைய எழுத்துக்கள் வரிவடிவின்கண்ணும் அடையாளமாக எழுதிக் கொள்ளப்பெறும். 'எழூஉதல்' என்பது வியங்கோளாக நின்றது.

**இளம்பூரணம்**

**7. *மாத்திரையாவது***

**கண்ணிமை நொடிஎன அவ்வே மாத்திரை**
**நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.**

*(இச்...எனின்)* அம்மாத்திரை இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* கண்ணிமையும் நொடியுமாகிய அவை மாத்திரைக்கு அளபு. இது நுண்ணிதாக நூலிலக்கணத்தை உணர்ந்த ஆசிரியர் கண்ட நெறி எ-று.

இமை என்றது, இமைத்தல் தொழிலை. நொடி என்றது, நொடியிற் பிறந்த ஓசையை. தன் குறிப்பின்றி நிகழ்தலின் இமை முற்கூறப்பட்டது.

நிறுத்துஅளத்தல், பெய்து அளத்தல், நீட்டி அளத்தல், தெறித்து அளத்தல், தேங்க முகந்து அளத்தல், சார்த்தி அளத்தல், எண்ணி அளத்தல் என எழுவகைய என்னும் அளவினுள்[1] இது சார்த்தி அளத்தல்.

'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு' என்றதனான், நாலுழக்குக் கொண்டது நாழி என்றாற் போல, அவ்வளவைக்கு அளவை பெறாமை[2] கொள்க. (7)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.7.** 1. எழுவகை அளவின் விளக்கம் நச். உரை விளக்கத்துள் காண்க.

2. நாழியளவைக்கு அது நாலுழக்குக் கொண்டது என்று அளவை கூறுமாறு போல, கண்ணிமையும் கைந்நொடியும் 'இத்தனை கொண்டது இது' என அளவை கூறப்படாது என்றவாறு.

இந்நூற்பாவைப் பேராசிரியர் முடிந்தது காட்டல் என்னும் உத்தியின் இனமாகக் கொண்டார். ''முடிந்தது காட்டலாவது, சொல்லுகின்ற பொருட்கு வேண்டுவன எல்லாம் சொல்லாது 'தொல்லாசிரியர் கூறினார்' என்று சொல்லுதல். (அதற்கு இனமாவது அவர்கூற்றை நேரே கூறாது அவர் துணிபு இது என்றல்)''

**நச்சினார்க்கினியம்**

***7. மாத்திரையாவது***

**கண்ணிமை நொடிஎன அவ்வே மாத்திரை**
**நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.**

இது மாத்திரைக்கு அளவு கூறுகின்றது.

இ-ள்: கண்ணிமை .... மாத்திரை - கண்ணிமை எனவும் நொடி எனவும் அவ்விரண்டே எழுத்தின் மாத்திரைக்கு அளவு; நுண்ணிதின் ..... கண்டவாறு - நுண்ணிதாக நூல்இலக்கணத்தை உணர்ந்த ஆசிரியர் கண்ட நெறி எ-று.

'என' எண்ணின் பிரிந்து இரண்டிடத்தும் கூடிற்று. கண்ணிமை நொடி என்னும் பல பொருளொரு சொற்கள் ஈண்டுத் தொழில்மேலும் ஓசைமேலும் முறையே நின்றன. ஆசிரியர் எல்லாரும் எழுத்திற்கு இவையே அளவாகக் கூறலின் இவரும் கூறினார். இயற்கை மகன் (அ) தன் குறிப்பின் அன்றி இரண்டு இமையும் ஒருகால் கூடி நீங்கின

காலக்கழிவும், அ எனப்பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக்காலக்கழிவும் ஒக்கும். இக்கண்ணிமையினது பாகம் மெய்க்கும் சார்பின் தோற்றத்திற்கும், இதன் பாகம் ஒருசார்க் குற்றுகரத்திற்கும் மகரக்குறுக்கத்திற்கும் கொள்க. இக்கண்ணிமை இரட்டித்து வருதல் நெடிற்கும், அது மூன்றும் நான்குமாய் வருதல் அளபெடைக்கும் கொள்க. அதுபோலவே நொடித்தல் தொழிலில் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். ஏனையவற்றிற்கும் கூறியவாறே கொள்க.

இனி, இவ்வளவைதான், (1) நிறுத்துஅளத்தல் பெய்து அளத்தல் சார்த்தி அளத்தல் நீட்டிஅளத்தல் தெறித்துஅளத்தல் தேங்கமுகந்துஅளத்தல் எண்ணிஅளத்தல் என எழுவகைத்து. அவற்றுள் இது சார்த்தியளத்தலாம்.

கண்ணிமைக்கும் நொடிக்கும் அளவு ஆராயின் வரம்பின்றி ஓடும் என்று கருதி 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே' என்று (2) *முடிந்தது காட்டல்* என்னும் உத்தி கூறினார். இஃது (3) **ஆணை கூறுதலும்** ஆம். ஆகவே, எழுத்திற்கே அளவுகூறி மாத்திரைக்கு அளவு கூறிற்றிலர். நொடியின் கண்ணிமை சிறப்புடைத்து, உள்ளத்தான் நினைத்து நிகழாமையின். (7)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 7*

1. நிறுத்து அளத்தல் - துலாம் முதலிய நிறைகளால் நிறுத்து அளத்தல். பெய்து அளத்தல்- கலம் முதலியவற்றுள் எண்ணெய் முதலியவற்றைப் பெய்து அளத்தல். சார்த்தி அளத்தல் - ஒன்றன் அளவொடு மற்றொன்றன் அளவை ஒப்பிட்டு நோக்கி அளத்தல். தெறித்து அளத்தல் - மத்தளம் வீணை முதலியவற்றைப் புடைத்தலும் மீட்டுதலும் முதலியவற்றால் ஒலியை உண்டாக்கி அதனைச் செவி

கருவியாக அளந்துகோடல். வீணை நரம்பினைத் தெறித்தல் என்க. தேங்க முகந்து அளத்தல் - அரிசி முதலியவற்றை நாழி முதலியவற்றால் நிரம்ப முகந்து கட்டி அளத்தல்.

2. முடிந்தது காட்டலாவது, சொல்லுகின்ற பொருட்கு வேண்டுவன எல்லாம் சொல்லாது தொல்லாசிரியர் கூறினார் என்று சொல்லுதல்.

3. ஆணை கூறுதலாவது ஆசிரியன் ஓதுதலான் இஃது அமையும் என்பது.

(அ) இயற்கைமகனாவான் கண்ணிமைத்தற்கண்ணும் கைந்நொடித்தற் கண்ணும் நோய்க் குறைபாடு இல்லாதவன்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 7. கண்ணிமை நொடியென....கண்ட வாறே.**

இயற்கையும் செயற்கையும் ஆதல்பற்றி இரண்டு மேற்கோள்கூறினார். மற்று, முன்னையது காலஅளவையும், பின்னது ஓசையளவையும் குறிக்கும் என்பர் ஒருசாரார்.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 7. கண்ணிமை நொடிஎன....கண்ட வாறே.**

மேல், 'ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து' 'ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து' என்று கூறிய அதனான், ஈண்டு அவ்வளபின் இலக்கணம் கூறுகின்றார். நச்சினார்க்கினியர் கூறிய சூத்திரத்தின் கருத்துரையில் ''இஃது எழுத்தின் மாத்திரைக்கு அளவு கூறுகின்றது'' என்றிருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 7. கண்ணிமை நொடியென....கண்ட வாறே.**

இயற்கையும் செயற்கையும் ஆதல்பற்றி இரண்டு மேற்கோள்கூறினார். மற்று, முன்னையது காலஅளவையும், பின்னது ஓசையளவையும் குறிக்கும் என்பர் ஒருசாரார்.

**இளம்பூரணம்**

### *8. உயிரெழுத்து*

**ஔகார இறுவாய்ப்**
**பன்னீர் எழுத்தும் உயிரென மொழிப.**

*(இச்...எனின்)* மேல் கூறிய குறிலையும் நெடிலையும் தொகுத்து வேறொரு குறியிடுதல் நுதலிற்று.

*(இ - ள்)* ஔகாரம் ஆகிய இறுதியையுடைய பன்னிரண்டு எழுத்தினையும் உயிர் என்னும் குறியினையுடைய என்று சொல்லுவர் எ - று. *(8)*

**நச்சினார்க்கினியம்**

### *8. உயிரெழுத்து*

**ஔகார இறுவாய்ப்**
**பன்னீர் எழுத்தும் உயிர்என மொழிப.**

இது குறிலையும் நெடிலையும் தொகுத்து வேறொரு குறியீடு கூறுகின்றது.

*இ-ள்:* ஔ . . . . . எழுத்தும் - அகரம் முதலாக ஔகாரம் ஈறாகக் கிடந்த பன்னிரண்டு எழுத்தும்; உயிர் என மொழிப - உயிர் என்னும் குறியினை உடைய என்று கூறுவர் புலவர் எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கியதொரு குறி. மெய் பதினெட்டனையும் இயக்கித் தான் அருவாய் வரிவடிவின்றி நிற்றலின் உயிராயிற்று. இவை மெய்க்கு உயிராய்நின்று மெய்களை இயக்குமேல், உயிர்என வேறொர் எழுத்து இன்றாம்பிற எனின், மெய்யில் நிற்கும் உயிரும் தனியே நிற்கும் உயிரும் வேறென உணர்க; என்னை? 'அகர முதல' (குறள் 1) என்புழி, அகரம் தனிஉயிருமாய்க் ககரஒற்று முதலியவற்றிற்கு உயிருமாய் வேறு நிற்றலின். அவ்வகரம் தனியே நிற்றலானும், பலமெய்க்கண் நின்று

அவ்வம்மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறுபட்டது ஆகலின், ஒன்றேயாயும் பலவேயாயும் நிற்பதொரு தன்மையை உடைத்தென்று கோடும்; இறைவன் ஒருவனேயாய் நிற்கும் தன்மையும் பல்லுயிர்க்கும் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும் போல. அஃது 'அ' என்றவழியும், 'ஊர' என விளியேற்ற வழியும், 'அகரமுதல் னகர' என்றவழி(அ) மூவினங்களில் ஏறினவழியும் ஓசை வேறுபட்டவாற்றான் உணர்க. இங்ஙனம் இசைத்துழியும் மாத்திரை ஒன்றேயாம். இஃது ஏனை உயிர்கட்கும் ஒக்கும்.

'ஔகார இறுவாய்' என்பது பண்புத்தொகை. உம்மை முற்றும்மை. 'அகரமுதல்' என முன் கூறிப்போந்தமையின், ஈண்டு ஈறே கூறினார். (8)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 8*

இச்சூத்திரமும் அடுத்த சூத்திரமும் நெடுங்கணக்கை அனுவதித்துக் கூறியனவாகும்.

(அ) 'அகரமுதல் னகர': அகரவுயிர் முறையே வல்லினம் இடையினம் மெல்லினம் இவற்றில் ஏறிநின்றவாறு.

சாத்திரியார் உரைக்குறிப்பு

*சூ.8.* **ஔகார இறுவாய்ப்**
**...........உயிரென மொழிப.**

(இ-ள்.) அகரத்தை முதலாகவும் ஔகாரத்தை இறுதியாகவும் உடைய பன்னிரண்டு எழுத்தும் உயிர் எனக் கூறுவர் (புலவர்).

மெய்யில் நிற்கும் உயிரும் தனியேநிற்கும் உயிரும் தம்முள் வேறாம் என்னும் நச்சினார்க்கினியர் கருத்துள், உயிர் என்பது சீவனைக் குறிக்கும்; பிராணனை அன்று. ''இறைவன் ஒன்றேயாய் நிற்கும் தன்மையும் பல்லுயிர்க்கும் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும் போல'' என்புழி, 'அவற்றின் அளவாய்' என்ற தொடரால் அவர் சைனர் கொள்கையைக் குறிப்பிட்டனர் என்பது அறியத்தகும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.8.** ஔகார இறுவாய்....உயிரென மொழிப.

பன்னீர்எழுத்தும் - எழுத்துப் பன்னிரண்டும். 'பன்னிரு கையும் பாற்பட இயற்றி' என்புழிப் போல முற்றும்மை மாறிநின்றது.....உயிர் (உய்=இர்) உயிர்த்தலையுடையது.

வ.சுப. மாணிக்கனார் உரை

**சூ.8.** மெய் என்பதன்பெயர்க்காரணம்: உள்ளிருந்து வரும் காற்று நா- அண்ணம் - பல் - இதழ் - மூக்கு - முதலான உறுப்புக்களின் தசைப்பகுதியோடு தசைப்பகுதி தொட ஒலி பிறத்தலின் மெய் எனப்படும். அதனால்தான் ஒற்று என்ற குறியும் மெய்க்கு உண்டு.

**இளம்பூரணம்**

## 9. மெய்யெழுத்து

**னகார இறுவாய்ப்**
**பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப.**

(இச்....எனின்) மேல் கூறிய உயிரல்லா எழுத்திற்கு ஒரு குறியிடுதல் நுதலிற்று.

(இ - ள்) னகரம் ஆகிய இறுதியையுடைய பதினெட்டு எழுத்தினையும் மெய் என்னும் குறியினையுடைய என்று சொல்லுவர் எ -று. (9)

**நச்சினார்க்கினியம்**

## 9. மெய்யெழுத்து

**னகார இறுவாய்ப்**
**பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப.**

*இஃது உயிர்அல்லனவற்றைத் தொகுத்து ஒரு குறியீடு கூறுகின்றது.*

*இ-ள்: னகார . . . . . எழுத்தும் - ககாரம் முதல் னகாரம் ஈறாய்க் கிடந்த பதினெட்டு எழுத்தும்; மெய்யென மொழிப-மெய் என்னும் குறியினையுடைய என்று கூறுவர் புலவர் எ-று.*

*இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி; என்னை? பன்னீர் உயிர்க்கும் தான் இடம்கொடுத்து அவற்றான் இயங்கும் தன்மை பெற்ற உடம்பாய் நிற்றலின்.*

*னகார இறுவாய் என்பது பண்புத்தொகை. உம்மை முற்றும்மை. முன்னர் 'னகார இறுவாய்' என்புழி முப்பது எழுத்திற்கும் ஈறாம் என்றார். ஈண்டுப் பதினெட்டு எழுத்திற்கு ஈறாம் என்றார் ஆதலின், கூறியது கூறிற்று அன்று.* *(9)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 9.** னகார இறுவாய்ப்....மெய்யென மொழிப.

*கூறியது கூறல் என்றது ஒரு கருத்துப் பற்றியே அன்றி ஒரு சொல்லைப் பற்றி அன்று. ஆகலின் நச்சினார்க் கினியத்தில் காணப்படும் ''முன்னர் 'னகார இறுவாய்' என்புழி முப்பது எழுத்திற்கும் ஈறாம் என்றார்; ஈண்டுப் பதினெட்டு எழுத்திற்கும் ஈறாம் என்றார் ஆதலின் கூறியது கூறிற்று அன்று'' என்னும் சொற்றொடர் நச்சினார்க்கினியம் படித்த மாணவரால் ஏட்டில் இடைச் செருகப்பட்டிருத்தல் கூடும்.*

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 9. னகார இறுவாய்....மெய்யென மொழிப.

இவை உயிர்போலத் தனித்து இசைக்கும் இயல்பு இல்லாதனவாய் உயிர் மேவுதற்கு உரியவாய் உள்ளமையின், மெய் என்னும் பெயர் பெற்றன. மெய் எழுத்துக்கள், உயிரைச் சார்ந்து ஒலித்தலும் உயிரை மேவி இசைத்தலும் வடிவு திரிதலும் மயங்குதலும் ஆகிய பலதன்மைகளை உடையன.

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

சூ. 9. அகரமுதல் ஒளகாரம் ஈறாம் பன்னிரண்டு எழுத்துக்களும் உலகத்து உடலை இயக்கும் உயிர்போல ஏனைய பதினெட்டு எழுத்துக்களையும் இயக்கித் தாம் அவையின்றியும் இயங்கும் ஆற்றலுடைமை கண்டு, அவை பன்னிரண்டனையும் உவம ஆகுபெயரான் உயிர் எனக் குறியிட்டும், உயிரின்றி இயங்கா உலகத்து ஏனை உடல்கள் போல, இவையின்றி இயங்காக் ககரமுதல் னகரஇறுவாய்ப் பதினெட்டு எழுத்துக்களையும் அவ்ஆகுபெயரான் மெய்யெனக் குறியிட்டும் வழங்கிய பண்டைத் தமிழிலக்கண நூலாசிரியரின் ஒலிநூலறிவு இவ்வுலகத்து எம்மொழியினும் காணப்படாத தனிச்சிறப்புடையதெனப் பேராசிரியர் பலர் கூறுப.

இளம்பூரணம்

## 10. உயிர்மெய்க்கு அளபு

மெய்யோடு இயையினும் உயிரியல் திரியா.

(இச்...எனின்) உயிர்மெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

(இ - ள்) உயிர்மெய்யாவன மெய்களோடு உயிர் இயையப் பிறந்த நிலைமைய ஆயினும், அவ்வுயிர்மெய்கள் அவ்வியைபின்கண்ணே வேறோர் எழுத்தாய் நின்றமையின், அம்மெய்யோடு இயைபின்றி நின்ற உயிர்களது இயல்பின் திரியா எ-று.

உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க் கூட்டத்தினை 'மெய்யோடு இயையினும்' என உயிர்மேல் வைத்துக் கூறியது, அவ்வுயிரின் மாத்திரையே இதற்கு மாத்திரையாகக் கூறுகின்றமை நோக்கிப் போலும்.

'இயல்' என்றது பெரும்பான்மை மாத்திரையினை: சிறுபான்மை குறியும் எண்ணும் [1] கொள்க. க எனவும், கா எனவும் அவ்வாறு நின்றமை அறிக. (10)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

சூ. 10. 1. குறி : ஒலிவடிவும் வரிவடிவுமாகிய அடையாளம்;
எண்: இரண்டாகாது ஒன்று எனஇருத்தல்.

### நச்சினார்க்கினியம்

### 10. உயிர்மெய்க்கு அளபு

**மெய்யோடு இயையினும் உயிர்இயல் திரியா.**

**இஃது உயிர்மெய்க்கு அளபு கூறுகின்றது.**

இ-ள்: உயிர்மெய்யோடு இயையினும்- பன்னீருயிரும் பதினெட்டு மெய்யோடும் கூடி நின்றன ஆயினும்; இயல் திரியா - தம் அளபும் குறியும் எண்ணும் திரிந்து நில்லா எ-று.

இது 'புள்ளி இல்லா' (17) என்பதனை நோக்கி நிற்றலின், எதிரது போற்றல் (அ) ஆம். உயிரும் மெய்யும் அதிகாரப்படுதலின் ஈண்டு வைத்தார். 'அ' என்புழி நின்ற அளபும் குறியும் ஒன்று என்னும் எண்ணும் 'க' என நின்றஇடத்தும் ஒக்கும். 'ஆ' என்புழி நின்ற அளபும் குறியும் ஒன்று என்னும் எண்ணும் 'கா' என நின்றஇடத்தும் ஒக்கும் என்பது இதன் கருத்து. பிறவும் அன்ன. ஆயின் ஒன்றரை மாத்திரையும் இரண்டரை மாத்திரையும் உடையன ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் ஆயவாறு

என்னையெனின், நீர் தனித்து அளந்துழியும் நாழியாய், அரைநாழி உப்பின் கலந்துழியும் கூடி ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதொரு பொருட்பெற்றி என்று கூறுவதல்லது, காரணம் கூறலாகாமை உணர்க. 'ஆசிரியன் ஆணை' என்பாரும் உளர்.

(1)'விளங்காய் திரட்டினார் இல்லை களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்' (நாலடி 103)

என்பதே காட்டினார் உரையாசிரியரும். (10)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 10**

1. விளங்காய்க்குத் திரட்சியும் களங்கனிக்குக் கருநிறமும் இயற்கையாதல் போல, உயிர்மெய்க்குறில் ஒருமாத்திரையும் உயிர்மெய்நெடில் இரண்டு மாத்திரையும் பெறுதல் இயற்கையென்று கொள்வதல்லது அதற்குக் காரணம் கூறலாகாது என்றவாறு.

(அ) எதிரது போற்றலாவது, வருகின்ற சூத்திரப் பொருண்மைக்கேற்ப வேறொரு பொருள் முற்கூறுதல். (பொ. 665 பேரா.)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 10.** மெய்யோடு இயையினும் உயிரியல் திரியாது.

(இ-ள்.) உயிர்கள் மெய்யோடு கூட ஒலிப்பினும் தம் தன்மையினின்று மாறா; அஃதாவது அவற்றின் மாத்திரை முதலியன மாறாதிருக்கும்.

இச்சூத்திரத்தான், உயிரால் தொடரப்பட்ட மெய் களுக்கு மாத்திரை இல்லை என்பது அறியக் கிடந்தது. இதன்கண் 'இயல்' என்ற சொல் மாத்திரையையே குறிக்கும் என்பது இதற்கும் முன்சூத்திரத்திற்கும் இடையுள்ள இயைபால் அறியப்படும் என்று இவர் குறிப்பிட்டு உரையாசிரியர் இருவரையும் மறுக்கிறார்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 10.** மெய்யொடு இயையினும் உயிரியல் திரியா.

*(இ-ள்.) பன்னீருயிரும் மெய்யெழுத்தொடு இணைந்து உயிர்மெய்யாய் இசைப்பினும் தாம் தம்இயல்பினின்று திரியா.*

மெய்யொடு இயைதலாவது, வாயுறுப்புக்களான் வடிவுற்றுநிற்கும் மெய்கள் இசைப்பதற்குத் துணையாதல். உயிர்இயல் என்றது, மாத்திரையையும் குறில் நெடில் என்னும் பெயரையும் அளபெழும் தன்மையையும் ஆம்.

தனித்து இயங்கும் உயிரும், மெய்யினை இசைக்கும் உயிரும் வேறுவேறு என்பர் நச்சினார்க்கினியர். அவர்தம் நுண்ணறிவு பாராட்டற்குரியது எனினும், அஃது இலக்கணமரபு அன்றாம்.

இதனான், தனித்து இயங்குமிடத்து ஓரியல்பும் மெய்யொடு இயையுமிடத்து ஓரியல்புமாக உயிரின்தன்மை வேறுபடும் என்பதனை உய்த்துணர வைத்தார்.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

**சூ. 10.** *ஒருநாழி நீரிலே அரைநாழி உப்பைக் கலந்தால் அஃது ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதொரு பொருட்பெற்றியை உயிர்மெய் அளவிற்கு உவமை கூறிப்போந்த நச்சினார்க்கினியர் உரையின்கண், நாழிநீரில் கலக்கப்பட்ட அரைநாழிஉப்பு நீரொடு கலந்து ஒன்றரை நாழியாய் மிகாது ஒருநாழியளவுட்படுமாயினும், அவ் அரைநாழியுப்பின் பருமை ஒருநாழிநீரில் கலந்து, முன் அவ்வளவு நிறை இல்லாத நீர் முன்னினும் நிறையினால் பெருகுதல் போல, மெய்யின் மாத்திரை உயிரளவிற்பட்டு அடங்கினும், அக்கூட்டத்துப் பொருட்பெற்றியால் மெய்யினது ஓசையும் எண்ணும் அதனோடு ஒன்றுபட்டு அழியாது நிற்கும் என்பது கொள்ளக் கிடக்கிறது.*

**இளம்பூரணம்**

***11. மெய்க்கு அளபு***

**மெய்யின் அளபே அரையென மொழிப.**

*(இச்..எனின்)* மெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

*(இ - ள்)* மெய்யது மாத்திரையினை ஒரோவொன்று அரைமாத்திரை உடையதென்று சொல்லுவர் எ -று.

*(உ-ம்) :* காக்கை, கோங்கு, வெய்து - எனக் கண்டுகொள்க.

ஈண்டு வேற்றுமைநயமின்றி ஒற்றுமை நயம்[1] கருதப்பட்டது. *(11)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 11.*** 1. உயிரெழுத்துக்களுள் ஓரளபு இசைக்கும் குற்றெழுத்து, ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து என்று வேற்றுமையுண்மை போல, மெய்யெழுத்துள் அவ்வேறுபாடின்றி மூவினமும் ஒத்த மாத்திரைய ஆகலின், அதனை ஒற்றுமைநயம் என்றார். இது தனிமெய்யாதலின், உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் என ஒருவகையான் வேற்றுமை நயம் காணுமாறு போலாதிருத்தலின், மாத்திரை கூறுதற்கண் ஒற்றுமை நயம் கருதினார் என்றலுமாம்.

**நச்சினார்க்கினியம்**

***11. மெய்க்கு அளபு***

**மெய்யின் அளபே அரையென மொழிப.**
**இது தனிமெய்க்கு அளபு கூறுகின்றது.**

இ-ள்: மெய்யின்...மொழிப-மெய்யினது மாத்திரையினை ஒரோவொன்று அரைமாத்திரை என்று கூறுவர் புலவர் எ-று.

அவ்வரைமாத்திரையும் தனித்துக் கூறிக் காட்டலாகாது, நாச் சிறிது புடைபெயரும் தன்மையாய் நிற்றலின். இனி இதனைச் சிலமொழிமேல் பெய்து காக்கை கோங்கு கவ்வை -எனக் காட்டுப. மெய் என்பது அஃறிணை இயற்பெயர் ஆதலின், மெய் என்னும் ஒற்றுமை பற்றி 'அரை' என்றார். (அ) *(11)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 11***

*(அ)* உயிரெழுத்துக்களைக் குற்றெழுத்து எனவும் நெட்டெழுத்து எனவும் பாகுபடுத்திக் குறில் ஐந்தனையும் நெடில் ஏழினையும் தனித்தனி எடுத்தோதி ஒவ்வொன்றும் முறையே ஒன்றும் இரண்டும் மாத்திரை பெறுமென விதித்தார். மெய்யெழுத்துக்களிடை மாத்திரைவகையால் அன்ன பாகுபாடு இன்மையின் ஒவ்வொன்றும் அரை மாத்திரைபெறும் என்று மெய்யாகிய சாதியொருமை பற்றிக் கூறினார். அஃறிணை இயற்பெயர் - பால்பகா அஃறிணைப்பெயர்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***சூ. 11.*** மெய்யின் அளபே அரையென மொழிப.

*(இ-ள்.)* உயிரொடு இயையாமல், உயிரைச் சார்ந்தும் உயிர்மெய்யினைச் சார்ந்தும் ஒலிக்குமிடத்து மெய்யெழுத்து ஒவ்வொன்றற்கும் மாத்திரைஅளவு அரையெனக் கூறுவர் புலவர்.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

***சூ. 11.*** ஆன் ஈன் என்பன போல, ஏன் என்பதுவும் இடம் பற்றிய அடிச் சொல். இஃது எஞ்சியதைக் குறிக்கும். ஏனை ஏனைய ஏனது எனவை ஏனோர் - என்றெல்லாம் வருதல் காண்க.

**இளம்பூரணம்**

### 12. சார்பெழுத்திற்கு அளபு

**அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே.**

(இச்....எனின்) சார்பின் தோற்றத்து மூன்றற்கும் அளபு கூறுதல் நுதலிற்று.

மேற்கூறிய அரைமாத்திரையாகிய அவ்வியல்பின்-கண்ணே நிற்கும், ஒரோவொன்று, ஒழிந்த சார்பின் தோற்றத்து மூன்றும் எ-று.

(உ-ம்): கேண்மியா நாகு, எஃகு - எனக் கண்டு கொள்க. (12)

**நச்சினார்க்கினியம்**

### 2. சார்பெழுத்திற்கு அளபு

**அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே.**

இது சார்பின் தோற்றத்து மூன்றற்கும் அளபு கூறுகின்றது.

இ-ள்: ஏனை மூன்று - சார்பின் தோற்றத்து மூன்றும்; அவ்வியல் நிலையும் - முற்கூறிய அரைமாத்திரையாகிய இயல்பின்கண்ணே நிற்கும் எ-று. (12)

கேண்மியா, நாகு, எஃகு - எனவரும்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 12.** **அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே.**

இதனான், சார்பெழுத்துக்கட்கு 'ஏனையெழுத்து' என்பதும் ஒருபெயர் ஆயிற்று. இவை புள்ளி பெற்று ஒலிக்கும் என்க.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ. 12.** அரையளபு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை
உட்பெறு புள்ளி உருவா கும்மே.

இவ்வாறு 12, 13ஆம் நூற்பாக்களை ஒன்றாகக் கொள்வர், இவ்வுரையாளர்.

'தெரியுங்காலை' என்பதனை 'உட்பெறு....ஆகும்மே' என்பதனோடும் இயைத்து முடிக்கலாம். ஆராயுமிடத்துப் புள்ளிநிற்கும் இடவேற்றுமையானும் மகரக்குறுக்கம் தெளிவாகும் என்பது கருத்து.

## இளம்பூரணம்

### 13. மகரம் குறுகுதல்

**அரையளபு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை.**

*(இச்...எனின்)* மெய்களுள் ஒன்றற்கு மாத்திரைச் சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* அரையளபு ஆகிய எல்லையின் குறுகிக் கால் மாத்திரையாதலை மகரமெய் உடைத்து. அஃது யாண்டோ எனின், வேறோர் எழுத்தினது ஒலியின்கண். அதுதான் சிறுபான்மையாகி வரும். ஆராயும், காலத்து எ-று.

*(உ-ம்.):* போன்ம், வரும் வண்ணக்கன் - என வரும். கால்மாத்திரை என்பது உரையிற்கோடல்[1] *(13)*

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ. 13.** 1. சூத்திரத்துள் சொல்லப்படாதனவாய், ஆயின் ஆசிரியன் கருத்தாக ஏற்பனவற்றை உரையாசிரியன் தான் உரைக்கும் உரையிற் கொள்ளுதல். விதப்புக்கிளவி முதலியவற்றான் கொள்ள வாய்ப்பில்லாத நூற்கருத்துக்கள் உரையிற்கோடலான் குறிக்கப்படும்.

இதனை மாறனலங்கார உரையாசிரியர் காரிரத்தினக் கவிராயர் 'மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்னும் உத்திக்கண் கொள்வர். (மா.அ.25 உரை)

" 'அரையளபு குறுகல் மகரம் உடைத்தே' எனத் தொல்காப்பியத்துள் இன்ன இடத்துக் குறுகும் என யாப்புறுத்துக் கூறிற்றிலரேனும், உரையிற்கோடல் என்னும் உத்திபற்றி வகரத்தின்பின் மகரம் குறுகும் என்று (இளம்பூரண அடிகள்) விருத்தியுள் விளங்கக் கூறினார். அது போலக் கொள்க" என்பர் யாப்பருங்கல விருத்தி ஆசிரியர் (யா.க.15) [இளம்பூரணரது காண்டிகையுரை 'விருத்தி காண்டிகை' என்னும் பெயர் பெறுவதை இவ்விடத்துச் சுட்டுகிறார் பதிப்பாசிரியர் அடிகளாசிரியர்.]

**நச்சினார்க்கினியம்**

### *13. மகரம் குறுகுதல்*

**அரைஅளபு குறுகல் மகரம் உடைத்தே**
**இசையிடன் அருகும் தெரியுங் காலை.**

இது மெய்களுள் ஒன்றற்கு எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இ - ள் : இசை இடன் மகரம் அரைஅளபு குறுகல் உடைத்து - வேறோர் எழுத்தினது ஓசையின்கண் மகரஒற்றுத் தன் அரைமாத்திரையின் குறுகிக் கால்மாத்திரை பெறுதலை உடைத்து; தெரியுங்காலை அருகும் - ஆராயுங்காலத்துத் தான் சிறுபான்மையாய் வரும் எ-று.

உ-ம்: போன்ம், வரும் வண்ணக்கன்-என ஒருமொழிக் கண்ணும் இருமொழிக் கண்ணும் கொள்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 13.** **அரையளபு குறுகல்....தெரியுங் காலை.**

(இ-ள்.) மகரம் தன்இயற்கை மாத்திரையின் அரையளவாகக் குறுகுதலை யுடைத்து. அது வேறு ஒலியிடத்துச் சிறுபான்மை வரும்.

(உ-ம்.) போன்ம்.

ஆசிரியர் மகரக்குறுக்கத்தைச் சார்பெழுத்தாகக் கொள்ளாமைக்குக் காரணம் அது மற்றொன்றைச் சார்ந்து அதன் பிறப்பிடத்தில் பிறவாமையே ஆகும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 13. அரைஅளபு குறுகல்....தெரியுங் காலை.**

பேராசிரியர் இச்சூத்திரத்தைப் 'பிறன்கோட் கூறல்' என்னும் உத்திக்கு உதாரணமாகக் காட்டினார். (மர.110 உரை) ஆசிரியர் 'அளபிறந்து உயிர்த்தலும்' என்னும் சூத்திரத்தில் 'இசையொடு சிவணிய, நரம்பின் மறைய என்மனார் புலவர்' என்று கிளந்து கூறியாங்கு, ஈண்டு ''இக்குறுக்கம் இசைநூலின்கண்ணது' என்று கிளந்து கூறாமையானும், மகரக்குறுக்கம் இயற்றமிழின்கண் படுவதோர் இலக்கணம் ஆதலானும், இச்சூத்திரம் பிறன்கோட்கூறல் ஆதல் இன்று.

'இசைநூலின்கண்' என்று பொருள் கூறாது வேறோர் எழுத்தினது ஓசையின்கண் மகரஒற்றுத் தன் அரைமாத்திரையின் குறுகும் என்று உரை கூறிய நச்சினார்க்கினியர், இச்சூத்திரம் பிறன்கோட்கூறல் என்னும் உத்தி என்றது பொருந்துவது அன்று.

[ 'பிறன்கோட் கூறல் ' என்ற பேராசிரியர் குறிப்பு நச்சினார்க்கினியத்துள் இடைச்செருகலாகப் புகுந்த பிழைபாடு. 'வேறோர் எழுத்தினது ஓசையின்கண் ' என்று உரையெழுதிய நச்சினார்க்கினியர், இசைநூற் கருத்தாகப் பேராசிரியர் உரைத்தமையே பிறன்கோட் கூறல் எனத் துணிதலன்றித் தம்முரையை அவ்வுத்தி வகைப் பாற்பட்டதாக

வரைவாரோ? 'எல்லா எழுத்தும்' (102) என்னும் சூத்திரவுரையுள் பிறன்கோட்கூறல் பற்றிய அவர் தெளிவினைக் காணலாம்.]

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 13. அரையளபு குறுகல்....தெரியுங் காலை.

(இ-ள்.) பதினெண் மெய்களுள், இதழ்இயைந்து மூக்குவளியால் பிறக்கும் மகரப்புள்ளிஎழுத்துத் தனக்குரிய அரைமாத்திரையினின்று குறுகி ஒலித்தலும் உடையதாகும். அதனை ஆராயமிடத்து அங்ஙனம் ஒலிக்குமிடம் சிறுபான்மை ஆகும்.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

சூ. 13. 'மெய்யின்....நிலையல்'

இயற்கையான தனிமெய்க்கும் அகரம் ஊர்ந்த உயிர்மெய்க்கும் வேற்றுமை தெரிவிப்பது தனிமெய் புள்ளி பெறுகையாம். ஆகவே, புள்ளிப்பேற்றின் பயன், ஒத்த வடிவினில் வேற்றுமைத் தெளிவு செய்வது. முன் சொன்ன உட்பெறு புள்ளியும் பின்னே சொல்லப்படும் எகரஒகரப் புள்ளியும் இப்பயனே கொண்டவை.

மாத்திரைச் சுருக்கத்துக்குப் புள்ளியிடல் என்ற கோட்பாடு பெரிதும் பொருந்தாது. அவ்வாறாயின், நெட்டெழுத்தை நோக்கக் குற்றெழுத்து எல்லாம் புள்ளிபெறல் வேண்டும். அளபெடையை நோக்க நெட்டெழுத்துப் புள்ளிபெறல் வேண்டும். எகரமும் ஒகரமும் புள்ளிபெறுகை மாத்திரைக் குறுக்கத்தால் அன்று. அவை ஓரளபு இசைக்கும் இயற்கைக் குற்றெழுத்துக்கள். ஈரளபு இசைக்கும் ஏகார ஓகாரத்தோடு வடிவன் வேற்றுமை தெரிக்கவே, எகரமும் ஒகரமும் புள்ளி பெறலாயின.

## இளம்பூரணம்

### 14. மகரத்திற்கு வரிவடிவு

உட்பெறு புள்ளி உருவா கும்மே.

(இச்...எனின்) பகரத்தொடு மகரத்திடை வரிவடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ-ள்.) புறத்தே பெறும் புள்ளியோடு உள்ளாற் பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம். அஃதின்மை பகரத்திற்கு வடிவாம் எ-று.

(வருமாறு): ப், ப் - எனக் கண்டுகொள்க. (14)

## நச்சினார்க்கினியம்

### 14. மகரத்திற்கு வரிவடிவு

உட்பெறு புள்ளி உருவா கும்மே.

இது பகரத்தொடு மகரத்திடை வரிவடிவுவேற்றுமை செய்கின்றது. மகரம் அதிகாரப்பட்டு நிற்றலின் ஈண்டுக் கூறினார்.

இ -ள்: உட்பெறுபுள்ளி - புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளால் பெறும் புள்ளி; உரு ஆகும் - மகரத்திற்கு வடிவாம் எ-று.

எனவே, புறத்துப் பெறும் புள்ளியாவது மேற்சூத்திரத்தான்(13) மெய்கட்குக் கூறும் புள்ளி.(அ) ஈண்டு உரு என்றது காட்சிப்பொருளை உணர்த்தி நின்றது.

உ-ம். கப்பி கப்பி (கம்பி) எனவரும்.

(1) இஃது எதிரது போற்றல். (14)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 14**

1. எதிரது போற்றல் : இதனை 10ஆம் நூற்பா உரைக்குறிப்பிற் காண்க.

இச்சூத்திரம் மகரக்குறுக்கம் புள்ளிபெறுதலை விதிக்க வந்ததாகக் கொள்வாருமுளர்.

நச்சினார்க்கினியர் கருத்திற்கேற்ப, பகரம் புறத்துப்பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் புள்ளியும் கூடி நிற்க அது மகரத்தின் வரிவடிவாம்; உட்பெறுபுள்ளியை வளைத்தெழுதவே (சூ. 17 உரை) பகர வரிவடிவினின்று வேறுபாடு தோன்ற 'ம' என்ற வரிவடிவு தோன்றும் என்றார். 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (15) ஆதலின் மகர மெய் புள்ளியிட்டு எழுதப்பெறும். புள்ளிபெறா வரிவடிவம் அகரத்தோடு கூடிய உயிர்மெய்யாம்.

(அ) பெறும் மாத்திரை பாதியாகக் குறைவதனைக் காட்டப் புள்ளி மேலிடப்பெறும். அகரவுயிர் ஏறிய உயிர்மெய்க்குறில் பெறும் ஒருமாத்திரையிற் பாதி அவ்வுயிர் ஏறப்பட்ட மெய் என்பதனை அதன்மேல் இடும் புள்ளி குறியாகும்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 14.** உட்பெறு புள்ளி உருவா கும்மே.

(இ-ள்.) அம்மகரக் குறுக்கத்தின் வடிவம் உள்ளே பெற்ற புள்ளியை உடையதாகும். [போன்ம்]

மகரக்குறுக்கத்தின் வடிவம் மகரத்துள் புள்ளி பெற்று நிற்கும் என வீரசோழிய உரைகாரர் கூறியுள்ளமையை இவர் சுட்டுகிறார்.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 14.** உட்பெறு புள்ளி உருஆ கும்மே.

எழுத்துக்கள் புள்ளியிடப்பெறின், அவை தம் அளபில் செம்பாதி குறைவன ஆகும். ம் - மகரமெய், ம் - மகரமெய்க் குறுக்கம்; எ - இரண்டு மாத்திரை, எ - ஒருமாத்திரை, க - ஒருமாத்திரை, க் - அரைமாத்திரை, (ந)கு-ஒருமாத்திரை, (நா)க்கு -அரைமாத்திரை.

இவற்றால், அரைமாத்திரை ஒலிக்கும் மகரமெய் குறுகியதனை அறிவிக்கப் பின்னும் ஒருபுள்ளி பெறுதல் முறையே ஆதல் அறியப்படும்.

.....வீரசோழியத்தில் 'முன்வரின் கால் வவ்வரின்' (சந்திப்.19) என்பதற்கு உரையாசிரியர், "வருமொழிமுதல் வகரம் வந்து புணர்ந்தால், அந்த மகரமானது குறுகிக் கால் மாத்திரையாய் உட்புள்ளி பெறும்" என்று உரை கூறியிருப்பதனாலும், இச்சூத்திரம் மகரக் குறுக்கத்தின் வரிவடிவுகூறுகின்றது என்று கொள்ளுதலே அமைதியாகும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 14.** உட்பெறு புள்ளி உருவா கும்மே.

(இ-ள்.) அரையளபு குறுகும் மகரம் இதழ்இயைந்து பிறவாமல் இதழ் சிறிது உள்வாங்க ஒடுங்கிப்பெறும் ஒலியளவிற்கு ஏற்ப உருவாகி நிற்கும்.

'ஒப்பக் கூறல்' என்னும் உத்தியான், முழுமகரத்திற்கும் இதற்கும் வரிவடிவின்கண் வேற்றுமை தோன்ற அவ்வெழுத்து அகத்தே புள்ளி (கீற்று) அடையாளம் செய்துகொள்ளப்பெறும். இதன் இக்கால வரிவடிவம் 'ம் '. இடைக்கால வடிவமும் ஆசிரியர்காலத்து வரிவடிவமும் காணுமாறு இல்லை.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

**சூ. 14.** இச்சூத்திரஅடி தனியே ஒரு சூத்திரமாக இருத்தல் இயலாது. என்னையெனின், இதனுள் கூறப்படும் விதி இன்னதற்கு என்பது பெறப்படாத நிலையில் இதனை ஒரு சூத்திரமாக ஆசிரியர் வையார்.....எனவே இத்தொடர் மேலைச்சூத்திரத்தினையே சேர்ந்ததாதல் வேண்டும். ஆகலின் இது மகரத்தொடு மகரக்குறுக்கத்திற்கு வரிவடிவு வேற்றுமை செய்கின்றது என்பதே பொருத்த முடைத்து.

மெய்களுள் ஒன்றாகிய மகரத்தின் குறுகிய நிலையை அறிந்துகொள்வதற்கெனவே அக்காலத்தார், எல்லா மெய்களும் பெறுதற்கு உரியதாய தலைப்புள்ளியொடு குறுகிய மகரத்தின் உள்ளேயும் ஒரு புள்ளியையிட்டு வரிவடிவில் அதனைக் குறித்துப்போந்தார்கள் என்பது இச்சூத்திரத்தால் குறிக்கப்பட்டது.

மகரக்குறுக்கம் இயல்பாகிய புள்ளியோடு உள்ளே ஒரு புள்ளியையும் பெறும் என்பதனை வீரசோழியம் சந்திபடலம் *19*ஆம் காரிகையுள் '' 'முன்வயின் கால் வவ்வரின்' -வருமொழி முதலில் வகரம் வந்துபுணர்ந்தால் அந்த மகரமானது குறுகிக் கால்மாத்திரையாய் உட்புள்ளி பெறும்'' எனப் பெருந்தேவனார் உரை கூறிப்போதலானும் அறியலாம்.

**இளம்பூரணம்**

## *15.* மெய்க்கு வரிவடிவு

**மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.**

(இச்...எனின்) உயிர்மெய்யொடு தனிமெய்யிடை வரிவடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ-ள்) தனிமெய்யினது இயல்பு புள்ளியொடு நிற்றல். உயிர்மெய்யினது இயல்பு புள்ளியின்றி நிற்றல் எ-று.

வருமாறு: க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் - எனக் கண்டுகொள்க. *(15)*

நச்சினார்க்கினியம்

## 15. மெய்க்கு வரிவடிவு

**மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.**

*இது தனிமெய்க்கும் உயிர்மெய்க்கும் ஒப்புமைமேல் வேற்றுமை செய்தல் கூறுகின்றது; என்னை? உயிர்மெய்யான ககரஙகரங்கட்கும், தனிமெய்யான ககரஙகரங்கட்கும் வடிவு ஒன்றாக எழுதியவற்றை ஒற்றாக்குதற்குப் பின்பு புள்ளிபெறுக என்றலின்.*

*இ-ள் : மெய்யின் . . . . . நிலையல் - பதினெட்டுமெய்களின் தன்மையாவது புள்ளிபெற்று நிற்றலாம் எ-று.*

*எனவே, உயிர்மெய்கட்குப் புள்ளி இன்றாயிற்று. க் ங் ற் ன் - எனவரும். இவற்றைப் புள்ளியிட்டுக் காட்டவே, புள்ளி பெறுவதற்கு முன்னர் அகரம் உடன்நின்றதொரு மெய்வடிவே பெற்று நின்றனவற்றைப் பின்னர் அப்புள்ளியிட்டுத் தனிமெய் ஆக்கினார் என்பதூஉம் பெறுதும். இதனான் ககரம் ஙகரம் முதலியன புள்ளிபெறுவதற்கு முன்னர் இயல்பாக அகரம் பெற்றே நிற்கும் என்பதூஉம், புள்ளி பெறுங்காலத்து அவ்வகரம் நீங்கும் என்பதூஉம், பின்னர் அப்புள்ளி நீங்கி உயிர் ஏறுமிடத்துத் தன்கண் அகரம் நீங்கியேபோக வருகின்றதோர் உயிர் யாதானும் ஒன்று ஏறிநிற்கும் என்பதூஉம் பெற்றாம். 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' (46) என்னும் சூத்திரத்தானும் இதுவே இதற்குக் கருத்தாதல் உணர்க. (15)*

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 15. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.**

*(இ-ள்.) மெய்களின் தன்மை புள்ளிபெற்று நிற்றல் வேண்டும்.*

வடிவத்தின்கண் புள்ளிபெறும் இயல்பை நோக்கி மெய் என்றுகூறுமிடத்துப் ‘ புள்ளி ’ என ஆசிரியர் வழங்கினர் (சூ. 151, 165...).

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 15. மெய்யின் இயற்கை புள்ளியொடும் நிலையல்.**

(இ-ள்.) பிறப்பியலுள் கூறப்பெறும் முறைமையான் உருவாகி வடிவுபெறும் மெய்யெழுத்துக்களின் தன்மை யாவது அவை ஒலிப்புடையன வாயும் நிற்கும்.

உம்மையான், புள்ளியொடு நில்லாமல் உயிரொடு இயைந்து உயிர் மெய்யாயும் நிற்கும் என்று கொள்க. உயிர்மெய் - உயிர்க்கும் மெய். ......மெய் ஒலிப்பின்றி உருவாதலும், உயிர்ப்பு உந்த அரைமாத்திரை அளவு ஒலித்தலும், உயிர் இயைய இசைத்தலும் ஆகிய மூன்று நிலைமைகளை உடையது.

**இளம்பூரணம்**

***16. எகர ஒகர வரிவடிவு***

**எகர ஒகரத்து இயற்கையும் அற்றே.**

(இச்...எனின்) எகர ஒகரங்கட்கு ஏகார ஓகாரங்களொடு வரிவடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ - ள்) எகர ஒகரங்களது இயல்பும் அவ்வாறு புள்ளிபெறும் இயல்பிற்று. ஏகார ஓகாரங்களது இயல்பு அப்புள்ளிபெறா இயல்பிற்று.

வருமாறு: எ, எ; ஒ, ஒ - எனக் கண்டுகொள்க. (16)

**நச்சினார்க்கினியம்**

***16. எகர ஒகர வரிவடிவு***

**எகர ஒகரத்து இயற்கையும் அற்றே.**

**இதுவும் புள்ளிபெறுக என்கின்றது.**

இ - ள் : எகர . . . . . அற்று - எகரஒகரங்களினது நிலையும் மெய்போலப் புள்ளிபெறும் இயல்பிற்று எ-று.

எனவே, ஏகார ஓகாரங்கட்குப் புள்ளி இன்றாயிற்று.

எ ஒ - என வரும். இஃது உயிர்மெய்க்கும் ஒக்கும்.

மகரம் ஆராய்ச்சிக்குட்பட்டது கண்டு, மகரத்திற்கு வடிவுவேற்றுமை செய்து, அதிகாரத்தான் மெய்யின் தன்மை கூறி, அதன்பின் மாட்டேற்றலின் எகரஒகரத்தையும் கூறினார். *(16)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 16. எகர ஒகரத்து இயற்கையும் அற்றே.**

''இஃது உயிர்மெய்க்கும் ஒக்கும்'' என்னும் நச்சினார்க்கினியரது உரையில் இஃது என்பது ''ஏகார ஓகாரங்கட்கு புள்ளியின்று ஆயிற்று'' என்று சுட்டும் புள்ளி பெறாமையை.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 16. எகர ஒகரத்து இயற்கையும் அற்றே.**

தமிழ்மொழிக்கு இலக்கணம் வகுத்த தொல்லாசிரியர், எகர ஒகரங்கள் வடமொழியில் இல்லையாகலின் அவற்றிற்கு ஆண்டு வரிவடிவு இன்மையின், தமிழில் அவற்றிற்கு வழங்கிய தனிவடிவினைக் கொள்ளாமல், ஏகார ஓகாரங்களின் வடிவிற்குப் புள்ளியிட்டு வழங்கினர் ஆவர் எனத் தோன்றுகிறது.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 16. இகர உகரத்து இயற்கையும் அற்றே.**

'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' என்பது உரையாசிரியன்மார் கொண்ட பிழையான பாடம். 'இகர உகரத்து' என்பதே இந்நூல்நெறிக்கு இயைந்த பாடம்.

(இ-ள்.) சார்பெழுத்து மூன்றனுள் 'முப்பாற் புள்ளி' என ஓதப்பெற்ற ஆய்தம் தவிர்ந்த ஏனைய குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆகியவற்றின் இயல்பும் மெய்யெழுத்திற்குக் கூறிய அவ்வாறேயாம்.

'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே'(12) என்பது அதிகாரப்பட்டு வருதலின், இகர உகரம் என வாளா கூறினார்.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

**சூ.16.** இவ்வாறு புள்ளியிடுதல் எகரஒகரங்களுக்கே அன்றி மெய்யூர்ந்த எகர ஒகரங்களுக்கும் உண்டு என்பது, தந்திவர்மன் ஆட்சியில் (கி.பி.800-840) 4ஆம் ஆட்சி யாண்டில் திருவெள்ளறைக் கிணறு ஒன்றில் வெட்டப்பட்ட சாசனத்து 'நான்காவதெ்டுத்து' 'பெ்ருங்கிணறு' 'செ்ய்து' என்ற சொற்களில் மெய்யூர்ந்த எகரங்கள் புள்ளியிட்டு எழுதப்பெற்றிருத்தலால் அறியப்படும்.

**இளம்பூரணம்**

### 17. உயிர்மெய்த் தோற்றம்

**புள்ளி இல்லா எல்லா மெய்யும்**
**உருஉரு வாகி அகரமோடு உயிர்த்தலும்**
**ஏனை உயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும்**
**ஆயீர் இயல உயிர்த்தல் ஆறே.**

(இச்....எனின்) உயிரும் மெய்யும் கூடுமாறு உணர்...ற்று.

(இ-ள்.) எல்லா மெய்களும் புள்ளி இல்லையாம்படியாகத் தத்தம் முன்னை வடிவே பின்னும் வடிவாகி அகரத்தொடு கூடி ஒலித்தலும், ஒழிந்த உயிர்களொடு வடிவு வேறுபட்டு ஒலித்தலும் ஆகிய அவ்விரண்டு இயல்பினையுடைய, அவை ஒலிக்கும் முறைமை எ-று.

தன்னினம் முடித்தல்[1] என்பதனான், அளபெடை உயிரொடும் சார்பின் தோற்றத்து உயிரொடும் கூடும் உயிர்மெய்யும் கொள்க[2].

உருவுருவாகி உயிர்த்தல் க, ங - எனக் கண்டுகொள்க. உருவு திரிந்து உயிர்த்தல் கா, ஙா, சா, ஞா, கி, ஙி, சி, ஞி - எனக் கண்டுகொள்க.

ஈண்டு உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க் கூட்டத்தினை 'எல்லாமெய்யும்' என்று மெய்மேல் வைத்துக் கூறியது, அது முன்கூறிக் கூறப்படுதல் நோக்கிப்போலும். உயிர்மெய் என்பதனை ஒற்றுமை கொள்வழி உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகவும், வேற்றுமை கொள்வழி உம்மைத்தொகையாகவும்[3] கொள்க. இல்லாத என்பது 'இல்லா' என நின்றது.

'உருவு திரிந்து உயிர்த்தல்' [4] மேலும் கீழும் விலங்கு பெறுவன விலங்குபெற்று உயிர்த்தலும், கோடு பெறுவன கோடுபெற்று உயிர்த்தலும், புள்ளியும் கோடும் உடன் பெறுவன உடன்பெற்று உயிர்த்தலும் எனக் கொள்க. *(17)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 17.*** 1. சூத்திரத்துள் சொல்லியதற்கு இனமாய் அவ்விதி பெறுவனவற்றையும் உரையிற் கூட்டிச்சொல்லுதல் இவ்வுத்தி.

2. 'நற்றாள் தொழாஅர் எனின்' (குறள் 2) என்புழி, 'தொழாஅர்' என்னும் சீருள் ழகரஆகாரமாகிய உயிர்நெடில் அளபெடுத்தது. ஒருமொழிக் குற்றியலிகரம் மகரத்தொடு கூடிய உயிர்மெய்யாயும், புணர்மொழிக் குற்றியலிகரம் வல்லொற்றொடு கூடிய உயிர்மெய்யாயும், குற்றியலுகரம் வல்லாறன்மிசைத்தான உயிர்மெய்யாயும் நிகழ்தல் காண்க.

3. உயிரும் மெய்யும் கூடிப் பிறந்த ஓரெழுத்து என்பது ஒற்றுமைநயம். மெய்முன்னரும் உயிர் பின்னருமாக

இருதிறத்து ஒலியொடும் இவ்வெழுத்து இசைக்கப்படுவது வேற்றுமைநயம்.

4. உருவு திரிதல் வரிவடிவிற்கு எனவும் உயிர்த்தல் (ஒலித்தல்) ஒலிவடிவிற்கு எனவும் இளம்பூரணர் கருதினார். நச்சினார்க்கினியரும் அதனையே வழிமொழிந்தார். திரிதலும் உயிர்த்தலும் தன்வினையாகலின், செய்தென் எச்சம் முடிபு கோடற்கண் இழுக்கின்மை அறியப்படும்.

**நச்சினார்க்கினியம்**

## 17. உயிர்மெய்த் தோற்றம்

**புள்ளி இல்லா எல்லா மெய்யும்**
**உருஉரு ஆகி அகரமோடு உயிர்த்தலும்**
**ஏனை உயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும்**
**ஆயீர் இயல உயிர்த்தல் ஆறே.**

இது மெய்யும் உயிரும் கூடிப் புணருமாறும், ஆண்டு அவை திரியாதும் திரிந்தும் நிற்குமாறும் கூறுகின்றது.

இ-ள் : புள்ளி . . . . மெய்யும் - உயிரைப் பெறுதற்குப் புள்ளியைப் போக்கின எல்லா மெய்களும்; உரு . . . அகரமோடு உயிர்த்தலும் - புள்ளி பெறுகின்ற காலத்து இயல்பாகிய அகரம் நீங்கிய வடிவே தமக்கு வடிவாகி நின்று பின்னர் ஏறிய அகரத்தோடு கூடி ஒலித்தலும்; ஏனை. . .. உயிர்த்தலும் - ஒழிந்த பதினோருயிரோடும் கூடி அவ்வடிவு திரிந்து ஒலித்தலும்; ஆயீர் . . . . . ஆறு - என அவ்விரண்டு இயல்பினையுடைய அவை ஒலிக்கும் முறைமை எ-று.

'புள்ளியில்லாமெய்' எனவே, முன் பெற்றுநின்ற புள்ளியை உயிர் ஏற்றுதற்குப் போக்கினமை பெறுதும். 'உரு உருவாகி' எனவே, புள்ளி பெறுதற்காக இயல்பாக அகரம் நீங்கிய வடிவே பின்னர் அகரம் பெறுதற்கு வடிவாம் என்பது கூறினார்.

க ங ய - என வரும்.

உருவு திரிந்து உயிர்த்தலாவது, மேலும் கீழும் விலங்குபெற்றும் - கோடு பெற்றும் - புள்ளி பெற்றும் - புள்ளியும் கோடும் உடன்பெற்றும் - உயிர்த்தல் ஆம்: கி கீ - முதலியன மேல்விலங்கு பெற்றன. கு கூ - முதலியன கீழ்விலங்கு பெற்றன. கெ கே - முதலியன கோடு பெற்றன. கா ஙா - முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை (க. ங.) இக்காலத்தார் காலாக எழுதினார். மகரம் உட்பெறு புள்ளியை (ப்) வளைத்தெழுதினார்.(அ) கொ கோ ஙொ ஙோ - முதலியன புள்ளியும் கோடும் உடன்பெற்றன. இங்ஙனம் திரிந்து ஒலிப்பவே, உயிர்மெய் பன்னிரு பதினெட்டு இருநூற்றுஒருபத்தாறு ஆயிற்று. ஆகவே, உயிர்மெய்க்கு வடிவும் ஒருவாற்றான் கூறினார் ஆயிற்று. இதனானே, மெய் தனக்கு இயல்பாகிய அகரத்தை நீங்கி நிற்பதொரு தன்மையும் பிறிதோர் உயிரை ஏற்கும் தன்மையும் உடையது என்பதூஉம், உயிர் மெய்க்கண் புலப்படாது இயல்பாகிய அகரமாய் நிற்கும் தன்மையும் - மெய் புள்ளிபெற்று அழிந்தவழி அதற்குத் தக்க உயிராய்ப் புலப்பட்டு வரும் தன்மையும் - உடையது என்பதூஉம் பெற்றாம். உயிர்மெய் என்பது உம்மைத் தொகை.(ஆ) (17)

நச்சினார்க்கினியம் உரை

## சூத்திரம் 17

அ. (பகரம் உள்ளால் பெறும் புள்ளி ப் எனநிற்கும். உட்பெறு புள்ளியை வளைத்து உள்ளே எழுதவே மகரத்தின் வரிவடிவாம். மகரமெய் புறத்தே புள்ளி பெறவே ம் என்று எழுதப்பெறும்; அவ்வாறே பகரமெய்யும் ப் என்று எழுதப்பெறும். வளைத்து எழுதப்படாத மகரமெய்யினது வரிவடிவம் ப் என்பது.

(ஆ) யாண்டும் உயிர்மெய், மெய் முதலாக உயிர் ஈறாகவே விதி சொல்லப்படுதலின், அவ்வாறு ஒலித்தலாகிய வேற்றுமைநயம் பற்றி உம்மைத் தொகையாம்.

ஒற்றுமைநயம் பற்றி அதனை ஓரெழுத்தாகக் கொள்ளின், உம்மைத் தொகை அன்மொழியாம்.

சிவஞான முனிவர் உரைக்குறிப்பு

**சூ. 17.** இப்பெற்றி உணராத உரையாசிரியர் நச்சினார்க்கினியார் 'புள்ளி ஈற்றுமுன்', 'மெய்உயிர் நீங்கின்' என்பவற்றை ஒலியெழுத்தின் கண்படும் செய்கை என மயங்கிக் 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்பதனை இதனொடு மாட்டெறிந்ததூஉம் அன்றி, 'உருஉரு ஆகி அகரமோடு உயிர்த்தலும்' என்புழி 'உயிர்த்தல்' என்பதற்கு ஒலித்தல் எனப் பொருள் கூறினார். உருஉரு ஆகி உயிர்த்தலும்-உருவு திரிந்து உயிர்த்தலும்-புள்ளி உண்டா தலும் இலவாதலும்-வரிவடிவிற்கே அன்றி ஒலிவடி விற்கு இன்மையின், அவை போலியுரை என்க.

*(இளம்பூரணம் உரைக்குறிப்பு சூ.17 (4) காண்க.)*

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 17.** புள்ளி இல்லா.....உயிர்த்தல் ஆறே.

(இ-ள்.) புள்ளியை உடையவாயிராத மெய்கள் எல்லாம், புள்ளி நீங்கிய தம் உருவமே உருவமாகி அகரத்தோடு ஒலிக்கப்படுதலும், உருவு மாற்றப்பட்டு ஏனை உயிரோடு ஒலிக்கப்படுதலும் ஆகிய அவ்விரு தன்மையன ஒலிக்கப்படும் முறைமைகள்.

'மெய்' என்றது சொல்வகையான் எழுவாயாய் இருப்பினும், பொருள் வகையான், 'புள்ளிஇல் மெய்' 'உருவு திரிந்த மெய்' என்பனவே எழுவாய் ஆகும்.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 17.** புள்ளி இல்லா.....உயிர்த்தல் ஆறே.

இச்சூத்திரத்தில் 'உயிர்த்தல்' என்பதற்கு வெளிப்படுதல் என்பது பொருளாகும்....'உருவுதிரிந்து உயிர்த்தல்' என்னுமிடத்து, உருவு திரிதல் வரிவடிவிற்கே பொருந்துவது ஆதலின், உயிர்த்தல் என்பதற்கு ஒலித்தல் என்று உரையாளர்கள் கூறிய பொருள் பொருந்துவது அன்று.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 17.** **புள்ளி இல்லா....உயிர்த்தல் ஆறே.**

உயிரொடு கூடி இசைக்குங்கால் புள்ளி இயலவாகும் என்னும் விதி மாட்டேற்றான் குற்றியலுகரத்திற்கும் எய்தும்.....இதனானும் உயிர்மெய்யெழுத்து ஓரெழுத்தாதல் புலப்படும்; ஓரெழுத்தாயினும் புணர்ச்சியின்கண் ஒற்றொலியும் உயிரிசையுமாகக் கொள்ளப்படும், புணர்ச்சி என்பது எழுத்தொலிமயக்கம் ஆதலின் என்க.

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

**சூ. 17.** ஆசிரியர் உயிர்மெய் என்பதனை வேற்றுமை நயம் கருதியே கூறுகின்றார் ஆதலின், உம்மைத் தொகையெனக் கொண்டார் நச்சினார்க்கினியர்.

**இளம்பூரணம்**

## *18. உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் நிற்குமாறு*

**மெய்யின் வழிய[1] உயிர்தோன்றும் நிலையே.**

*(இச்...எனின்)* உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் நிற்குமாறு உணர்...ற்று.

*(இ-ள்)* உயிர்கள் மெய்களின் பின்னவாம், அவ்வுயிர்கள் தோன்றும் நிலைமைக்கண் எ - று.

'தோன்றுநிலை' என்றதனான், உயிர்மெய்களைப் பிரிக்குமிடத்தும் கூட்டுமிடத்தும் அவ்வாறே முன்னும் பின்னும் ஆதல் கொள்க.

மெய்யும் உயிரும் முன்னும் பின்னும் பெற நிற்கும் என்றமையால், அக்கூட்டம் பாலும் நீரும் போல உடன்

கலந்ததன்றி, விரல்நுனிகள் தலைப் பெய்தாற்போல அவை வேறுநின்று கலந்தனஅல்ல என்பது பெறுதும். ஈண்டு வேற்றுமைநயம்[2] கருதப்பட்டது. (18)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 18.** 1. இளம்பூரணர் உயிர்களை எழுவாயாகக் கொண்டு 'வழிய' என்று பாடம் கொண்டார். நச்சினார்க்கினியர் 'நிலை' என்பதனை எழுவாயாகக் கொண்டு 'வழியது' என்னும் ஒருமைவாய்பாட்டினைப் பாடம் கொண்டார்.

2. உயிர்மெய்யினை மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒலிக்கும் நிலைமைக்கண் வேற்றுமைநயம் கருதப்பட்டவாறு. இந்நயத்தை விளக்கும் வாக்கியம் ஏற்ப அமைந்திலது. (பாலும் நீரும் உடன்கலத்தல் ஒற்றுமைநயம்; விரல் நுனிகள் தலைப்பெய்தல் வேற்றுமைநயம்.)

**நச்சினார்க்கினியம்**

***18. உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் நிற்குமாறு***

**மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே.**

இது மெய்யும் உயிரும் கூடியவழி அவற்றின் ஓசை நிற்கும் முறைமை கூறுகின்றது.

இ-ள்: மெய்யின் வழியது - மெய்யினது ஓசை தோன்றிய பின்னதாம்; உயிர் தோன்று நிலை - உயிரினது ஓசை தோன்றும் நிலை எ-று.

முன்நின்ற சூத்திரத்தான், மெய் முன்னர் நிற்ப, உயிர் பின்வந்து ஏறும் என்றார்; இதனான் அம்முறையே ஓசை பிறக்கும் என்றார். (1) இதனானே, மாத்திரை கொள்ளுங்கால் உப்பும் நீரும் போல ஒன்றேயாய் நிற்றலும், வேறுபடுத்துக் காணுங்கால் விரலும் விரலும் சேரநின்றாற்போல வேறாய்

நிற்றலும் பெற்றாம். நீர் உப்பின் குணமே ஆயவாறு போல, உயிரும் மெய்யின் குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்திநிற்றல் கொள்க. (அ)

உ-ம் : க ங ய - எனக் கூட்டமும் பிரிவும் மூவகை ஓசையும் காண்க. (ஆ) (18)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 18

1. உயிர்மெய் மாத்திரை கொள்ளுங்கால் (ஒற்றுமை நயத்தான்) உம்மைத்தொகை அன்மொழி. மெய்முன்னரும் உயிர் பின்னருமாக ஒலித்துநிற்கும் வேற்றுமைநயத்தான் உம்மைத்தொகை.

உயிர்மெய்யின்கண், உயிர் மெய்யின்குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்திநிற்றல் என்ற தம் கொள்கையை நச்சினார்க்கினியர் மொழிமரபு 14ஆம் சூத்திரத்தானும் வற்புறுத்துதல் காண்க.மெய் உயிரின்குணம் ஆகிய குறுமை நெடுமைகளைத் தான் பெறுதலின்று என்றமை காண்க. (43 உரை) [ப. ஆ.]

(அ) 47ஆம் சூத்திரத்தும் இக்கருத்தினை நச்சினார்க்கினியர் உணர்த்துவார்.

(ஆ) கூட்டம் : மெய்யோடு உயிர் இயைதல்; பிரிவு : உயிர்மெய்யினின்று அகரவுயிர் நீங்குதல்; ஓசை : வன்மை, மென்மை, இடைமை.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 18.** மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே.

(இ-ள்.) உயிர் தோன்றும் இடம் மெய்யின் பின்னரே ஆகும்.

(உ-ம்.) க்+அ

இளம்பூரணர் காட்டிய 'பாலும் நீரும் போல' என்ற எடுத்துக்காட்டினும் நச்சினார்க்கினியர் காட்டிய 'உப்பும் நீரும் போல' என்ற எடுத்துக்காட்டுச் சிறப்பானது என்பது இவர் கருத்து.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 18. மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே.**

(இ-ள்.) உயிர்மெய்எழுத்துள் உயிரெழுத்துத் தோன்றும் நிலை, உறுப்புற்று அமைந்த உருவாகி நிற்கும் அவ்வம்மெய்களின் இடத்ததாகும். உயிர் என்றது, சாதி ஒருமை.

அஃதாவது உயிர்ப்பதற்கு முற்படும் மெய்யானது வாய்உறுப்புக்களுள் எவ்விடத்து உருவாகி நிற்கின்றதோ, அவ்விடத்தினின்று அம்மெய்யின்வழி இவ்வுயிர்கள் தோன்றும் என்பதாம்.

**இளம்பூரணம்**

***19. வல்லெழுத்து***

**வல்லெழுத்து என்ப கசட தபற.**

(இச்...எனின்) தனிமெய்களுள் சிலவற்றிற்கு வேறொரு குறியிடுதல் நுதலிற்று.

(இ-ள்) வல்லெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், க ச ட த ப ற - என்னும் தனிமெய்களை எ று.

வல்லென்று இசைத்தலானும், வல்லென்ற தலை-வளியான் பிறத்தலானும் 'வல்லெழுத்து' எனப்பட்டது.

மொழிக்கு முதலாம் எழுத்து நான்கு உள ஆகலானும், அவற்றால் வழக்குப் பயிற்சி பெரிதாகலானும் முன் கூறப்பட்டது. (19)

**நச்சினார்க்கினியம்**

## 19. வல்லெழுத்து

**வல்லெழுத்து என்ப கசட தபற.**

*இது தனிமெய்களுள் சிலவற்றிற்கு வேறொரு குறியீடு கூறுகின்றது.*

*இ-ள்: க ச ட த ப ற - க ச ட த ப ற - என்னும் தனிமெய்களை; வல்லெழுத்து என்ப - வல்லெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.*

*இஃது ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. ஒழிந்த மெல்லெழுத்தையும் இடையெழுத்தையும் நோக்க வல்லென்று இசைத்தலானும், வல்லெனத் தலைவளியான் பிறத்தலானும் வல்லெழுத்து ஆயிற்று. (19)*

**இளம்பூரணம்**

## 20. மெல்லெழுத்து

**மெல்லெழுத்து என்ப ஙஞண நமன.**

*இதுவும் அது.*

*(இ-ள்) மெல்லெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், ங ஞ ண ந ம ன - என்னும் தனிமெய்களை எ-று.*

*மெல்லென்று இசைத்தலானும், மெல்லென்று மூக்குவளியால் பிறத்தலானும் 'மெல்லெழுத்து' எனப்பட்டது.*

*மொழிக்கு முதலாம் எழுத்து மூன்று உள ஆகலானும், அவற்றின் வழக்குப் பயிற்சியானும், முதலாம் எழுத்துச் சிறுபான்மை வழக்கினவாய் இரண்டாகிய இடையினத்தின் முன் வைக்கப்பட்டது.*

*வன்மை மென்மை கூறலின், எழுத்து அரு அன்றி உருவாதல் பெறப்பட்டது. உயிர்க்கும் குறுமை நெடுமை கூறலின், உரு என்பது பெறுதும். (20)*

**நச்சினார்க்கினியம்**

## *20. மெல்லெழுத்து*

**மெல்லெழுத்து என்ப ஙஞண நமன.**

இதுவும் அது.

*இ-ள்: ங ஞ ண ந ம ன - ங ஞ ண ந ம ன - என்னும் தனிமெய்களை; மெல்லெழுத்து என்ப - மெல்லெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.*

*இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. மெல்லென்று இசைத்தலானும், மெல்லென்று முக்கின் வளியான் பிறத்தலானும் மெல்லெழுத்து ஆயிற்று. (20)*

**இளம்பூரணம்**

## *21. இடையெழுத்து*

**இடையெழுத்து என்ப யரல வழள.**

இதுவும் அது.

*(இ - ள்) இடையெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், ய ர ல வ ழ ள - என்னும் தனிமெய்களை எ - று.*

*இடைநிகர்த்தாகி ஒலித்தலானும் இடைநிகர்த்தாய மிடற்று வளியால் பிறத்தலானும் இடையெழுத்து எனப்பட்டது.[1] (21)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.21.*** 1. வன்மை மென்மை இடைமைகட்கு இயல்புகூறுவார் போல நேமிநாத உரையாசிரியர் (சூ. 2) எழுதுவார்: "வல்லினம் கல்மேல் விரலிட்டாற் போலவும், மெல்லினம் மணல்மேல் விரலிட்டாற் போலவும், இடையினம் மண்மேல் விரலிட்டாற் போலவும் எனக் கொள்க."

நச்சினார்க்கினியம்

## 21. இடையெழுத்து

**இடையெழுத்து என்ப யரல வழள.**

இதுவும் அது.

இ-ள் : ய ர ல வ ழ ள - ய ர ல வ ழ ள - என்னும் தனிமெய்களை; இடையெழுத்து என்ப - இடையெழுத்து என்னும் குறியினையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. இடைநிகர்த்தாய் ஒலித்தலானும், இடை நிகர்த்தாய மிடற்றுவளியான் பிறத்தலானும் இடையெழுத்து ஆயிற்று.

வல்லினத்துக் க ச த ப - என்னும் நான்கும், மெல்லினத்து ஞ ந ம - என்னும் மூன்றும், இடையினத்து ய வ - என்னும் இரண்டும் மொழிக்கு முதலாதல் நோக்கி இம்முறையே வைத்தார். இப்பெயரானே எழுத்து என்னும் ஓசைகள் உருவாயின. உயிர்க்கும் குறுமை நெடுமை கூறலின் அவையும் உருவாயின. இது சார்பின் தோற்றத்திற்கும் ஒக்கும். (21)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.21.** **இடையெழுத்து என்ப யரல வழள.**

முழுதும் வாய் திறக்க உண்டாம் உயிருக்கும், வாய் முழுதும் மூட உண்டாம் வல்லினமெல்லின மெய்கட்கும் இடையாய் நிற்றலின், ய்ர்ல்வ்ழ்ள் - என்னும் ஆறுமெய் களும் இடையெழுத்து எனப் பெயர் பெற்றன.

இளம்பூரணம்

## 22. மெய்ம்மயக்கம்: இருவகை

**அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்**
**மெய்ம்மயங்கு உடன்நிலை தெரியுங் காலை.**

(இச்...எனின்) தனி மெய்ம்மயக்கத்திற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்....ற்று.

(இ-ள்) மேற் சொல்லப்பட்ட அம்மூவாறு பதினெட்டு மெய்யும் தம்மை மொழிப்படுத்தி வழங்குதல் உளதாமிடத்து, மெய்ம்மயக்கம் என்றும், உடனிலைமயக்கம் என்றும் இருவகைய, அவை மயங்கும் முறைமை ஆராயும் காலத்து எ- று.

உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூன்றனையும் உறழ்ச்சி வகையான் உறழ ஒன்பது உளவாமன்றே? அவற்றுள், தனிமெய்யொடு தனிமெய்ம்மயக்கம் கூறியது என்னெனின், மற்றவற்றிற்கு வரையறை இன்மையின் வரையறையுடைய தனிமெய்ம்மயக்கமே கூறியொழிந்தான் என உணர்க. 'மெய்' என்றதனான், தனிமெய்யோடு உயிர்மெய்ம்மயக்கம் அன்றித் தனிமெய்யொடு தனி மெய்ம்மயக்கம் ஆதல் கொள்க.[1] (22)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.22.*** 1. மெய்யொடு மெய் இயைதலை வடநூலார் சையோகம் என்பர் எனக் குறிப்பர் பிரயோகவிவேக நூலுடையாரும் சிவஞானமுனிவரும். ''ஆசிரியர் தொல் காப்பியனார் மெய்யொடு மெய் இயைதற்கே மயக்கம் என்னும் குறியீடு கூறினார். இக்கருத்தே பற்றி நன்னூலாரும் 'இவ்விருபால் மயக்கும் மொழியிடை மேவும்' எனச் சூத்திரப்பொருளை முடித்து, உயிரும் மெய்யும் மயங்கும் மயக்கத்திற்கு வரையறையின்மையான் அவை இக்குறியீடு பெறா என்பார் 'உயிர்மெய் மயக்கு அளவின்றே' என ஒழிந்தார்'' என்றார் சிவஞானமுனிவர், இலக்கணவிளக்கச் சூறாவளிக்கண் (எழு.31).

**நச்சினார்க்கினியம்**

## 22. மெய்ம்மயக்கம் இருவகை

**அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்**
**மெய்ம்மயங்கு உடனிலை தெரியுங் காலை.**

*இது தனிமெய் பிற மெய்யொடும் தன் மெய்யொடும் மயங்கும் மயக்கமும், உயிர்மெய் உயிர்மெய்யொடும் தனிமெய்யொடும் மயங்கும் மயக்கமும் கூறுகின்றது.*

*இ-ள்: அம் மூவாறும் - அங்ஙனம் மூன்று கூறாகப் பகுத்த பதினெட்டு மெய்யும்; வழங்கு இயல் மருங்கின் - வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் எழுத்துக்களைக் கூட்டி மொழிப்படுத்து வழங்குதல் உளதாமிடத்து; மெய் மயங்கும் நிலை - தனிமெய் தன்முன்னர் நின்ற பிற மெய்யோடும் தன் மெய்யோடும் மயங்கும் நிலையும்; உடன் மயங்கும் நிலை - அப்பதினெட்டும் உயிருடனே நின்று தம்முன்னர் நின்ற உயிர்மெய்யோடும் தனிமெய்யோடும் மயங்கும் நிலையும் என இரண்டாம்; தெரியுங்காலை - அவை மயங்கும் மொழியாம் தன்மை ஆராயும் காலத்து எ-று.*

*எனவே, தனித்து நின்ற எழுத்துடன் முன்நின்ற எழுத்துக்கள் தாம் கூடுமாறு கூறினார் ஆயிற்று. கட்க என்றால், இடைநின்ற தனிமெய், முன்னர் நின்ற தன்னின் வேறாய ககர ஒற்றொடு மயங்கிற்று. காக்கை என்றால், இடைநின்ற ககரஒற்று, முன்னர் நின்ற தன் ஒற்றொடு மயங்கிற்று. (1) கரு என்னும் ஈரெழுத்தொரு மொழியும், கருது என்னும் மூவெழுத்தொரு மொழியும் உயிர்மெய் நின்று தம்முன்னர் நின்ற உயிர்மெய்யொடு மயங்கின. துணங்கை என உயிர்மெய் நின்று தன் முன்னர் நின்ற தனிமெய்யொடு மயங்கிற்று. கல், வில் - என உயிர்மெய் நின்று தனி மெய்யொடு மயங்கிற்று. (அ)*

*'தெரியுங்காலை' என்றதனான், உயிர்முன்னர் உயிர்மெய்ம்மயக்கமும், உயிர் முன்னர்த் தனிமெய்ம்*

மயக்கமும் கொள்க. அவை ஆளை, ஆம்பல் - என்றாற் போல்வன.

மெய்ம்மயக்கங்களுள் தனிமெய் முன்னர்ப் பிறமெய் நின்று மயங்குதல் பல ஆதலின் பலசூத்திரத்தான் கூறித் தன்முன்னர்த் தான் வந்து மங்குதலை ஒரு சூத்திரத்தான் கூறுப. அவை மயங்குங்கால், வல்லினத்தில் டகரமும் றகரமும், மெல்லினம் ஆறும், இடையினம் ஆறும், பிறமெய்யொடும் மயங்கும் என்றும், வல்லினத்தில் க ச த ப- க்கள் தம்மெய்யோடு அன்றிப் பிறமெய்யொடு மயங்கா என்றும் உய்த்துணரக் கூறுமாறுணர்க.

'மூவாறும்' என்னும் உம்மை முற்றும்மை.

இச்சூத்திரம் முதலாக 'மெய்ந்நிலை சுட்டின்' *(30)* ஈறாக, மேற்கூறும் மொழிமரபிற்குப் பொருந்திய கருவி கூறுகின்றது என்றுணர்க, எழுத்துக்கள் தம்மில் கூடிப் புணருமாறு கூறுகின்றது ஆதலின். *(22)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 22*

*1.* உடனிலை மெய்ம்மயக்கத்திற்கு நச்சினார்க்கினியர் கூறிய பொருட்கேற்ப, உயிர்மெய் உயிர்மெய்யொடு மயங்குமிடத்துக் 'கரு' என ஈரெழுத்தொரு மொழிக்கண் மயங்கும். ஆண்டுக் ககரத்திலுள்ள அகரமும் ருகரத்திலுள்ள ரகரமும் மயங்குதலன்றிக் ககரமும் ருகரமும் ஆகிய உயிர்மெய்கள் மயங்குதல் இன்றாம். ஆகவே உரையாசிரியர் உடனிலை மெய்ம்மயக்கம் என்பதற்குத் தன்னொடு தான் மயங்குதல் என்றும், மெய்ம்மயக்கம் என்பதற்கு வேற்றுநிலை மெய்ம்மயக்கம் என்றும் பொருள் கொண்டமையே பொருந்துவதாம்.

*(அ)* ஈண்டு, உயிர்மெய் ஒற்றுமைநயத்தான் ஓரெழுத்தாகக் கொள்ளப்படும். இளம்பூரணர் உறழ்ச்சி வகையாற் கொண்ட மயக்க நிலைகளைச் சூத்திரப் பொருளின்

கண்ணேயே அடக்கிக்காட்டல்வேண்டி நச்சினார்க்கினியர் மெய்ம்மயங்குநிலை எனவும் உடன்மயங்குநிலை எனவும் என யோகவிபாகமாகப் பிரித்துக்கூட்டி இருவகையாகப் பொருள்கொண்டார்.

நூன்மரபின்கண், உயிர் மெய் என்னும் அடிப்படையெழுத்துக்களும் அவற்றினது கலப்பாகிய உயிர்மெய்யெழுத்துக்களும் கூறப்பட்டுள்ளன. அடுத்து மயக்கம் கூறப்படுகிறது. இவ்வெழுத்துக்கள் ஒன்றோடொன்று இணைந்து வருதலே மயக்கம். இவ்வெழுத்துக்கள் ஒன்றோடொன்று மயங்குதலினாலேயே சொற்களின் தோற்றம் உரைக்கப்படுகிறது. உயிர்மெய் தனித்துக் கூறப்படுதல், 356, 463 என்ற சூத்திரங்களிற் காணலாம். ஒன்பது மயக்கத்துள் மெய்ம்மயக்கம் தவிர ஒழிந்தன ஆசிரியராற் கூறப்படவில்லை என்று பேராசிரியர் ‘தன்கோள் கூறல்’ என்ற உத்திவகையின் இனம்பற்றிக் கூறுமிடத்துக் குறிப்பிடுகிறார். ஒன்பது வகைப்படும் மயக்கமாவன உயிரோடு உயிரும் மெய்யும் உயிர்மெய்யும் கூடுமயக்கமும், மெய்யொடு மெய்யும் உயிரும் உயிர்மெய்யும் கூடுமயக்கமும், உயிர்மெய்யோடு உயிர்மெய்யும் உயிரும் மெய்யும் கூடுமயக்கமும் என இவை. 10, 17, 18ஆம் நூற்பாக்களில் உயிர்மெய்பற்றி ஓதி 19-21ஆம் நூற்பாக்களில் மெய்யின்வகை பற்றி ஓதி, 22ஆம் நூற்பாவில் மயக்கம் பற்றி ஓதுதலின், நச்சினார்க்கினியர் மெய்ம்மயக்கத்தோடு உயிர்மெய்ம் மயக்கத்தையும் அந்நூற்பாவில் குறிப்பிட வேண்டும் என்று கருதுகிறார். மொழிமரபில் சார்பெழுத்துக்களைக் கூறவேண்டும் இடத்திலேயே இருமொழிகளைப் பற்றிக் குறிப்பிடும் தேவை ஏற்பட்டுள்ளது. புணரியல் முதலிய ஆறு இயல்களும் இருமொழிகளைப் பற்றியே பேசுகின்றன. நூன்மரபில் இருமொழிகளைப் பற்றிப் பேசவேண்டும் தேவையின்று. இன்ன எழுத்துக்கு இன்ன எழுத்து நட்பெழுத்து, பகையெழுத்து என்பனவே குறிப்பிடப்படவேண்டுவன என்னும் கருத்தான் மெய்ம்மயக்கத்தை நச்சினார்க்கினியர்

ஒருமொழிக்கண்ணேயே கொண்டார்; இருமொழிக்கண் கொள்ளப்படும் நட்பு பகை என்பன பின் ஆறுஇயல்களில் கூறப்படுதலின், அவற்றை ஈண்டுக் குறிப்பிடல்வேண்டா எனக் கருதினார். மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள் ஈற்றில் வரும் எழுத்துக்கள் என்பனவற்றை ஒருமொழியிற் கொள்வதுபோலவே, இடையில் வருமெழுத்துக்களையும் ஒருமொழிக்குச் சிறப்பாகவுள்ள உயிர் மெய் இவற்றை விளக்கியோதும் நூன்மரபிலேயே, "தமிழ்ச் சொற்களில் இடையே இணைந்துவரும் எழுத்துக்கள் இவையே, இவ்விதியைமீறி இடையே எழுத்துக்கள் இணைந்துவரின் அவை தமிழ்ச்சொற்கள் அல்ல" என்று குறிப்பிடுவதே ஆசிரியர் கருத்து எனக்கொண்டு நச்சினார்க்கினியர் மெய்ம்மயக்கத்தை ஒருமொழிக்கண்ணேயே கொண்டுள்ளார் என்று துணிதல் வேண்டும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.22. அம்மூ வாறும்....தெரியுங்காலை.**

(இ-ள்.) அப்பதினெட்டும் (மொழிகளுள்) வழங்கப் படுமிடத்து ஆராயப்படின், அவை பிறமெய்யோடு கூடும் நிலைமையும் தம்மோடு கூடும் நிலைமையும் உடைய.

மெய்ம்மயங்குநிலை, உடனிலை - என்பன முறையே மெய்ம்மயக்கம், உடனிலைமயக்கம் என்ற சொற்களான் பின்னர் வழங்கப்பட்டன. நச்சினார்க்கினியருரையை அவர் பெயர் குறிக்காமல் படியெடுத்தாற்போல எழுதிச் செல்லும் இலக்கணவிளக்க நூலார், அவர் இச்சூத்திரத்திற்கு வரைந்த உரையைக் கொண்டிலர் - என்ற செய்தியை இவர் குறிப்பிடு கின்றார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.22. அம்மூ வாறும்...தெரியுங் காலை.**

ஆசிரியர், மேல் மூன்று சூத்திரங்களான் கூறிய மூவகை எழுத்துக்களையே 'அம்மூவாறும்' என்று சுட்டி, 'அம்மூ வாறும் வழங்கியல் மருங்கில், மெய்ம்மயங்கு உடனிலை

தெரியுங் காலை' என்றார் ஆகலின், மெய்யெழுத்து ஒன்றனோடு ஒன்று மயங்குதலையே ஆராயப் புகுந்தார் ஆகலானும், இடைநின்ற உயிர்மெய்யெழுத்தினை மெய்யாகவும் உயிராகவும் இரண்டாகப் பிரித்து விதிகூறுதலே யன்றி அவ்வுயிர்மெய் எழுத்தினை ஓர் எழுத்தாகக் கருதி விதி கூறுதல் இன்மையானும், அதற்கு உயிர்மெய்த்தொடர்க் குற்றுகரம் என்னாது உயிர்த்தொடர்க்குற்றுகரம் என்றதே சான்று ஆகலானும், நச்சினார்க்கினியர் தாமும் ''வரகு - இதனை மேல் உயிர்த்தொடர்மொழி என்ப'' (புணரி- 4 உரை) என்று கூறினார் ஆகலானும், 'மெய்ம்மயங்கு உடனிலை' என்பது அவர் கூறிய இருவகைப் பொருளைப் பயத்தல் இன்மையானும், அவர்கூறிய பொருள்பொருந்துதல் இன்று.

இம்மயக்கம் ஒருமொழிக்கண் கொள்ள வேண்டுவதோர் இலக்கண மாயின், தனிமொழியினைப் பற்றிக் கூறும் மொழிமரபில் கூறுவார்; மொழியின் முதலில் நிற்கும் எழுத்துக்கள், மொழியின் இறுதியில் நிற்கும் எழுத்துக்கள் இவற்றைக் கூறும் இடத்தன்றே மொழியின் இடையில் நிற்கும் மெய்ம்மயக்கத்தைக் கூறுதல் வேண்டும்? ஆண்டுக் கூறாது ஈண்டுக் கூறியஅதனான், இம்மெய்ம் மயக்கம் ஒருமொழிக்கண் கொள்ள வேண்டுவதன்று என்பதே ஆசிரியர் கருத்து ஆகும்.இவ்வியல் எழுத்துக்களின் இயல்பினைக் கூறுவது ஆகலின், ஈண்டுக் கூறியது இன்ன மெய்யெழுத்தினோடு இன்ன மெய்யெழுத்து மயங்கும் என்று அவற்றின் இயல்பினைக் கூறிய அத்துணையே ஆகும். இதனை 'இடைநிலை மயக்கம்' என்று கூறுவது தக்கதன்று; மெய்மயக்கம்' என்றலே தகும்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.22.** **அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்**
**மெய்ம்மயங்கு உடனிலை தெரியுங் காலை.**

(இ-ள்.) வளியிசையானும் பிறப்பு முறையானும் மூவகையனவாக மேல் ஓதப்பெற்ற பதினெட்டுமெய்களும்

மொழிக்கு உறுப்பாக வழக்குப் பெற்று இயலுமிடத்தே, ஒன்றொடு ஒன்று தொடர்ந்து நிற்றலான் மெய்யொலி மயங்குதலை ஆராயுமிடத்து.......

இச்சூத்திரம் மேல்வரும் சூத்திரங்களுக்கு அவாய்நிலையாய் இயைந்து பொருள் விளக்கும் அதிகாரச் சூத்திரம் ஆகும்.

........இவ்வெழுத்துக்கள் மொழிக்கண் வருமிடத்து மயங்குவன ஆயினும், இதன் நோக்கம் மொழியாக்கம் பற்றிக் கூறுவது ஆகாது. இது நூல் (எழுத்து)மரபு ஆகலின் அவற்றின் ஒலித்திரிபுகளைக் கூறுதலே என அறிக.... இம்மயக்கத்தைத் தனிமொழிக்கண் காண்பதா, புணர் மொழிக்கண் காண்பதா என்னும் ஆய்வுக்கு இடமே இல்லை என்பதும், இதன்பின் இது வரும் என்னும் அளவே கூறுதலின் யாண்டும் காணலாம் என்பதும் புலனாகும்.

**வெள்ளைவாரணனார் உரை**

***சூ.22.*** 'மெய்ம்மயக்குடனிலை' என்ற இளம்பூரணர் பாடத்தை விடுத்து நச்சினார்க்கினியர் 'மெய்ம்மயங்கு உடனிலை' எனப் பாடம்கொண்டு, மெய்ம்மயங்கும் நிலை, உடன்மயங்கும் நிலை என ஈரிடத்தும் மயங்குநிலை என்றசொற்களைக் கூட்டிப் பொருள்கூறினார்........... இவர்க்கு முன்னவராய இளம்பூரணர் கொண்ட ''மெயம்மயக்குடனிலை' என்ற பாடமே தொன்மை கருதி ஏற்றுக்கொள்ளப்படுவது ஆகலானும், உயிர்மெய்யானது உயிர்மெய்யொடும் தனிமெய்யொடும் மயங்கும் மயக்கத்திற்கு வரையறை இன்மையின் அதற்கு விதி கூறப்படுவதன்று ஆகலானும், அவர் கூறியவாறு 'மெய்ம்மயங்குநிலை' என்பதனுள் மெய் பிறமெய்யொடும் தன்மெய்யொடும் கலந்து நிற்கும்நிலை விளங்காமை யானும், உயிர்மெய்யை உயிரும் மெய்யும் என ஈரெழுத்தாகப் பிரித்து விதிகூறுவார் ஈண்டு ஓரெழுத்தாகக் கொண்டு உரையார் ஆகலானும், 'உடனிலை' என்பதற்கு

உயிருடன் நிற்றல் எனக் கோடற்குரிய சொல் இன்மையானும் இளம்பூரணர் பாடமே ஆசிரியர் கருத்தாதல் பெறப்படும்.

### இளம்பூரணம்

## 23. தனிமெய் பிறமெய்யுடன் மயங்குமாறு

**ட ற ல ள என்னும் புள்ளி முன்னர்க்**
**க ச ப என்னும் மூவெழுத்து உரிய.**

*(இச்...எனின்)* மெய்ம்மயக்கம் ஆமாறு உணர்...ற்று.

*(இ-ள்)* ட ற ல ள என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர்க் க ச ப என்று சொல்லப்படும் மூன்றெழுத்தும் மயங்குதற்கு உரிய எ - று.

*(உ-ம்):* கட்க கற்க செல்க கொள்க - எனவும், கட்சிறார் கற்சிறார்[1] செல்சிறார் கொள்சிறார் எனவும் வரும்.

மேல் 'தெரியுங்காலை' (22) என்றதனான், இம்மெய்ம்மயக்கம் கூறுகின்ற சூத்திரம் எல்லாம் பலபடியான் மயக்கம் கொள்ளச் சொல்நோக்குடைய எனினும், வழக்கினொடு பொருந்த ஒன்றனோடு ஒன்றன்றி மயங்காது என்பது கொள்க.[2]

இம்மயக்கம் ஒருமொழிக்கும் புணர்மொழிக்கும் பொதுவாகலின், மேற்கூறும் புணர்மொழிச் செய்கை எல்லாம்[3] தலையாய அறிவினோரை நோக்க ஒருவாற்றான் கூறியவாறு ஆயிற்று. (23)

#### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.23.** 1. கட்சிறார் - கள்ளைக் குடிக்கும் சிறார். கற்சிறார் - கல்வியைப் பயிலும் இளமாணாக்கர். இரண்டும் வேற்றுமைத்தொகையாகிய இருமொழிப் புணர்ச்சி. "வடநூலார் சையோகம் ஒருமொழிக்கும் புணர்மொழிக்கும் கொள்வர். அதுபற்றிச் சூத்திரம் செய்தபடி இளம்பூரணரும் நன்னூலாரும் அவ்வாறு கொள்வர். இக்கருத்து அறியாத

நச்சினார்க்கினியர் இருமொழியிற் கொள்ளாது (ஒருமொழிக் கண்ணேயே கொண்டு) உதாரணம் இறந்த என்ப.'' (பி.வி. சந்திப். 5 உரை)

2. எடுத்துக்காட்டாக, இந்நான்கு புள்ளிமுன்னர்க் க ச ப என்னும் மூவெழுத்துக்களும் மயங்குமெனில், ஒவ்வொரு மெய்யின் முன்னரும் இம்மூன்று மெய்களும் சேர வந்து மயங்கும் எனறு கொள்ளற்க; இம்மூன்றனுள் ஏதேனும் ஒன்று (உயிரொடு கூடி உயிர்மெய்யாய்) வந்து மயங்கும் என்றே கொள்க, 'க ச ப' என்னும் மூன்றும் செவ்வெண்தொகையாக நிற்றலான் - என்று பொருள் செய்க.

3. இம்மயக்கம் பெரும்பான்மையும் எல்லாரும் வழங்கும் வழக்கு மொழிக்கண் இடம் பெறுவது. இதன்கண் தனிமொழி புணர்மொழி என்னும் வேறுபாடு இன்று. ஆயின், புணரியல் முதலாயவற்றில் இடம்பெறும் புணர்ச்சிவிதிகள் இருமொழியாம் புணர்மொழிகட்கே உரிய; அவை மொழித் துறைப் புலமையுடையவரான் வழங்கப்பெறுவன. ஆதலின், மயக்கமும் புணர்ச்சியும் வேறெனவே படும் என்பது.

**நச்சினார்க்கினியம்**

## 23. *தனிமெய் பிறமெய்யுடன் மயங்குமாறு*

> ட ற ல ள என்னும் புள்ளி முன்னர்க்
> க ச ப என்னும் மூவெழுத்து உரிய.

இது தனிமெய் பிறமெய்யொடு மயங்கும் மயக்கம் உணர்த்துகின்றது.

இ - ள்: ட ற ல ள . . . முன்னர் - மொழியிடை நின்ற ட ற ல ள என்று கூறப்படும் நான்கு புள்ளிகளின் முன்னர், க ச ப . . . உரிய - க ச ப என்று கூறப்படும் மூன்று எழுத்தும் வந்து மயங்குதற்குரிய எ-று.

உ-ம் : கட்க கட்சி கட்ப எனவும், கற்க முயற்சி கற்ப எனவும், செல்க வல்சி செல்ப எனவும் கொள்க. நீள்சினை கொள்ப எனவும் தனிமெய் பிறமெய்யொடு மயங்கியவாறு காண்க. கட்சிறார் கற்கிறார் - என்பன (அ) இருமொழிப் புணர்ச்சி ஆகலின் ஈண்டைக்கு ஆகா. (23)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 23***

(அ) இரண்டும் வேற்றுமைத் தொகையாதலின் இருமொழிப் புணர்ச்சி என்றார். இளம்பூரணம் உரைக்குறிப்புக் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.23 - 30.*** இவ்வெட்டுச் சூத்திரங்களானும் இருவகை மயக்கங்களையும் விளக்குகிறார். இவற்றுள் உரையாசிரியரிடைப் பொருள் உரைப்பதன்கண் வேறுபாடு இல்லை.

நச்சினார்க்கினியர் இம்மயக்கம் ஒருமொழிக்கண்ணது என்றும், உரையாசிரியர் ஒருமொழியும் இருமொழியும் ஆகிய இவற்றின் கண்ணது என்றும் கூறுப. இவர் இளம்பூரணர் உரையைப் பின்பற்றுகிறார்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***சூ.23.*** டறலள என்னும்....மூவெழுத்து உரிய.

மெய், புள்ளி, உயிர்மெய் என்பவை மெய்களின் நிலைகளே ஆதலின், ஈண்டு வந்தியையும் மெய் உயிர்மெய் என்று அறிக. மயக்கஇலக்கணம் முழுதிற்கும் இதனைக் கடைப்பிடிக்க.

**இளம்பூரணம்**

*24.* அவற்றுள்
**ளஃகான் முன்னர் யவவும் தோன்றும்.**
இதுவும் அது.

(இ - ள்) மேற்கூறிய ட ற ல ள என்னும் நான்கனுள்ளும், லகார ளகாரங்களின் முன்னர்க் க ச பக்கங்களே அன்றி, யகர வகரங்களும் தோன்றி மயங்கும் எ-று.

(உ-ம்): கொல்யானை, வெள்யானை; கோல்வளை, வெள்வளை - என வரும். *(24)*

**நச்சினார்க்கினியம்**

*24.* அவற்றுள்,
**ளஃகான் முன்னர் யவவும் தோன்றும்.**
இதுவும் அது.

இ-ள் : அவற்றுள்-முற்கூறிய நான்கனுள்; ளஃகான் முன்னர் - லகார ளகாரம் ஆகிய புள்ளிகளின் முன்னர்; ய வவும் தோன்றும் - க ச ப க்களேயன்றி, யகரவகரங்களும் வந்து மயங்கும் எ-று.

உ-ம்: கொல்யானை, செல்வம்; வெள்யாறு, கள்வன் - என வரும்.

இவற்றுள் கொல்யானை என வினைத்தொகையும் வெள்யாறு எனப் பண்புத்தொகையும் நிலைமொழி வருமொழி செய்வதற்கு இயையாமையின், 'மருவின் பாத்திய' (482) என்று கூறுவார் ஆதலின், இவ்வாசிரியர் இவற்றை ஒருமொழியாகக் கொள்வர் என்றுணர்க. இக்கருத்தானே, மேலும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் ஒருமொழியாகக்கொண்டு உதாரணம் காட்டுதும். அன்றி, இவ்வாசிரியர் நூல் செய்கின்ற காலத்து வினைத்தொகைக் கண்ணும் பண்புத்தொகைக்கண்ணும் அன்றி, ஒருமொழிக்கண்ணே மயங்குவனவும் உளவாதலின் அவற்றைக் கண்டு இலக்கணம் கூறினார்; அவை பின்னர்

இறந்தன என்று ஒழித்து, உதாரணம் இல்லவற்றிற்கு உதாரணம் காட்டாமல் போதலே நன்று என்று கூறலும் ஒன்று. (24)

### இளம்பூரணம்

**25.** **ஙஞண நமன எனும்புள்ளி முன்னர்த்**
**தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே.**

இதுவும் அது.

(இ - ள்) ங ஞ ண ந ம ன - என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர் நெடுங்கணக்கினுள் தத்தமக்கு மேல்நிற்கும் எழுத்தாகிய க ச ட த ப ற - க் கள் பொருந்தின, மயங்கி நிற்றற்கண்.[1] எ-று.

(உ - ம்): தெங்கு, மஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று- என வரும். (25)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

சூ.25.1.ஞானியார்மடத்துச் சுவடியில் காணப்படுவ தாகப் பதிப்பாசிரியர் அடிகளாசிரியர் குறிப்பிடும் உரை சிறப்புடைய தன்று. 'முன்னர்' என்பதனை 'இடமுன்' னாகவே கொண்டு உரையாசிரியர் எழுதும் உரையின் அது வேறுபடுகிறது. (க ச ட த ப ற - என்னும் ஆறு எழுத்தின் முன்னர் ங ஞ ண ந ம ன - என்னும் ஆறு எழுத்தும் மயங்குதற்குரிய என்பது அவ்வுரை.)

### நச்சினார்க்கினியம்

**25.** **ஙஞண நமன எனும்புள்ளி முன்னர்த்**
**தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே.**

இதுவும் அது.

இ - ள்: ங ஞ ண . . . . . முன்னர் - ங ஞ ண ந ம ன - என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர்; தத்தம் மிசைகள் - தமக்கு இனமாய் முன்நின்ற க ச ட த ப ற -க் கள்; ஒத்தன நிலை - பின் நிற்றற்குப் பொருந்தின, மயங்கி நிற்றற்கண் எ-று.

உ-ம்: கங்கன் கஞ்சன் கண்டன் கந்தன் கம்பன் மன்றன் - என வரும். தெங்கு பிஞ்சு வண்டு பந்து கம்பு கன்று எனக் குற்றுகரமும் காட்டுப. (25)

**இளம்பூரணம்**

*26.* **அவற்றுள்**

**ணனஃகான்[1] முன்னர்க்**
**கசஞப மயவவ் ஏழும் உரிய.**

இதுவும் அது.

(இ - ள்) மேற்கூறப்பட்ட மெல்லெழுத்து ஆறனுள் ணகாரனகாரங்களின் முன்னர் டறக்களே அன்றி, க ச ஞ ப ம ய வ - என்று சொல்லப்படும் ஏழும் மயங்குதற்கு உரிய எ - று.

(உ - ம்): வெண்கலம், புன்கண், வெண்சாந்து, புன்செய், வெண்ஞாண், பொன்ஞாண், வெண்பலி, பொன் பெரிது, வெண்மாலை, பொன்மாலை, மண் யாது, பொன்யாது, மண் வலிது, பொன் வலிது - என வரும். (26)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.26.** 1. ''வடநூலார் இரண்டெழுத்திற்கு ஒரு காரப் பிரத்தியயம் கொடுத்துத் 'தலகாரம்' என்றாற் போல, 'ணனஃகான் முன்னர்' 'லளஃகான் முன்னர்' என்பர் தொல்காப்பியனார்.'' (பி.வி. திங்புப்.16 உரை)

**நச்சினார்க்கினியம்**

*26.* **அவற்றுள்,**
**ணனஃகான் முன்னர்க்**
**க ச ஞ ப ம ய வவ் வேழும் உரிய.**
இதுவும் அது.

இ-ள்: அவற்றுள் - மேற்கூறிய மெல்லொற்று ஆறனுள்; ணனஃகான் முன்னர் - ணகாரனகாரங்களின் முன்னர்; க ச . . . உரிய - ட ற க்களே யன்றிக் க ச ஞ ப ம ய வ - என்னும் ஏழ் எழுத்தும் வந்து மயங்குதற்குரிய எ-று.

உ-ம்: எண்கு வெண்சாந்து வெண்ஞாண் பண்பு வெண்மை மண்யாறு எண்வட்டு-எனவும், புன்கு புன்செய் மென்ஞாண் அன்பு வன்மை இன்யாழ் புன்வரகு- எனவும் வரும். எண்வட்டு: வினைத்தொகை, எண்கு, புன்கு: பெயர். (26)

**இளம்பூரணம்**

**27.** **ஞநமவ என்னும் புள்ளி முன்னர்**
**யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே.**

இதுவுமது.

(இ-ள்.) ஞ ந ம வ - என்று சொல்லப்படும் புள்ளியின் முன்னர் யகரம் மயங்கி நிற்றல் பொருண்மை பெற்றது எ -று.

(உ-ம்): உரிஞ் யாது, பொருந் யாது, திரும்யாது, நொவ் யாது - என வரும். (27)

**நச்சினார்க்கினியம்**

**27.** **ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்**
**யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே.**

இதுவும் அது.

இ-ள் : ஞ ந ம வ . . . . . முன்னர் - ஞ ந ம வ என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர்; யஃகான்...பெற்றன்று- யஃகான் நிற்றல் பொருண்மை பெற்றது எ-று.

இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின் அக்காலத்து ஒருமொழியாக வழங்கிய சொற்கள் உள என்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன.

(1) இனி, உரையாசிரியர் உரிஞ்யாது பொருந்யாது திரும்யாது தெவ்யாது - என இருமொழிக்கண் வருவன உதாரணமாகக் காட்டினாரால் எனின், ஆசிரியர் ஒருமொழிஆமாறு ஈண்டுக்கூறி, இருமொழி புணர்த்தற்குப் புணரியல் என்று வேறோர் இயலும் கூறி, அதன்கண்

மெய்யிறு சொல்முன் மெய்வரு வழியும் (107) என்று கூறினார். கூறியவழிப் பின்னும் 'உகரமொடு புணரும் புள்ளி இறுதி' (163) என்றும், பிறாண்டும் ஈறுகள்தோறும் எடுத்தோதிப் புணர்ப்பர். ஆதலின் ஈண்டு இருமொழிப் புணர்ச்சி காட்டின் கூறியதுகூறல் என்னும் குற்றம் ஆம் ஆதலின் அவை காட்டுதல் பொருந்தாமை உணர்க. (27)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 27**

1. இருமொழிக்கண் உதாரணம் காட்டியமை பொருந்தாதென நச்சினார்க்கினியர் உரையாசிரியரை மறுக்கும் கூற்றுப் பொருந்தாது. என்னையெனின், மயக்கம் வேறு, புணர்ச்சி வேறு. அவ்வாறு வேறுபடுமாற்றை, மயக்கமுள்ளனவும் இயல்பாதல் அன்றித் திரிந்து புணர்தலானும், மயக்கமில்லாதன மயக்கமுள்ளனவாகத் திரிந்து புணர்தலானும் அறியலாம்.

உ-ம் : பொன்குடம் : பொற்குடம் என, ககரத்தொடு மயங்குதலுடைய னகரம் புணர்ச்சியில் திரிந்தது. கல்தீது : கற்றீது என, தம்முள் மயக்கமில்லாத லகர தகரங்கள் புணர்ச்சியில் திரிந்தன.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.27.** ஞநமவ என்னும்.....மெய்பெற் றன்றே.

இம்மயக்கம் தனிமொழிக்கண் நிகழா ஆதலின் அது கருதி ஐயுறற்க என்பார், 'மெய்பெற்றன்றே' என்றார். இதனானும் மயக்கஇலக்கணம் தனிமொழி தொடர்மொழி என்னும் நியதியின்றி வரும் என்பது புலப்படும்.

இளம்பூரணம்

**28.** அவற்றுள்
மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்.
இதுவும் அது.

(இ - ள்) மகரமாகிய புள்ளிமுன்னர் பகரயகரங்களே அன்றி, வகரமும் தோன்றி மயங்கும் எ - று.

(உ - ம்): நிலம் வலிது. (28)

**நச்சினார்க்கினியம்**

*28.* **அவற்றுள்,**
**மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்.**
**இதுவும் அது.**

இ-ள் : அவற்றுள்-மேற்கூறியவற்றுள்; மஃகான் புள்ளிமுன் - மகரமாகிய புள்ளிமுன்னர்; வவ்வும் தோன்றும்-பகர யகரமே அன்றி, வகரமும் வந்து மயங்கும் எ- று.

இதற்கு உதாரணம் இக்காலத்து இறந்தன. அன்றி, வரும் வண்ணக்கன் என்றாற்போல்வன காட்டின், 'வகார மிசையும் மகாரம் குறுகும்' (330) என்ற விதி வேண்டாவாம். (28)

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*சூ.28.* **அவற்றுள்,**
**மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்.**

மேற்சூத்திரத்தில் கூறப்பட்டவற்றுள் சிலவற்றிற்கு ஆதல் ஒன்றற்குஆதல் சிறப்புவிதி கூறும் இடங்களில், 'அவற்றுள்' என்று தனிச்சொல்லை நிறுத்துதல் இவ்வாசிரியர்க்கு இயல்பு. அதனை இந்நூலுள் யாண்டும் காணலாம். ஈண்டும் 'அவற்றுள்' என்று ஒருசொல் இருத்தல் வேண்டும்.

**இளம்பூரணம்**

*29.* **யரழ என்னும் புள்ளி முன்னர்**
**முதலாகு எழுத்தும் ஙகரமொடு[1] தோன்றும்.**

**இதுவும் அது.**

(இ - ள்) ய ர ழ - என்ற சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர், மொழிக்கு முதலாம் எனப்பட்ட ஒன்பது மெய்யும் முதலாகா ஙகரமொடு தோன்றி மயங்கும் எ - று.

(உ - ம்): வேய் கடிது, வேர் கடிது, வீழ் கடிது - சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், வேய்ஙனம் வேர்ஙனம் வீழ்ஙனம் எனவும் ஒட்டுக. 'வேய் யாது' என்புழி உடனிலை ஆதலின், யகரம் ஒழித்து ஒட்டுக. (29)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

*சூ.29.* 1. ''ஙனம் என்னும் பலபொருள் ஒரு சொல் தனித்து வருதலின்றி யரழக்களின்வழிச் சார்ந்து வருமாகலின், அக்கருத்தானே ஆசிரியர் தொல் காப்பியனார் 'முதலாகு எழுத்தும் ஙகரமொடு தோன்றும்' என்றார்.'' (இ.வி. சூறா.எழு.29)

**நச்சினார்க்கினியம்**

**29.** **ய ர ழ என்னும் புள்ளி முன்னர்**
**முதலாகு எழுத்தும் ஙகரமொடு தோன்றும்.**
**இதுவும் அது.**

இ - ள்: ய ர ழ . . . . . முன்னர் - ய ர ழ என்று கூறப்படும் மூன்று புள்ளிகளின் முன்னர்; முதலாகு எழுத்தும் - மொழிக்கு முதலாம் என மேற்கூறும் ஒன்பது எழுத்துக்களும், உம்மையான் மொழிமுதல் ஆகாத பிற எழுத்துக்களும்; ஙக ர மொடு தோன்றும் - ங காரமும் வந்து மயங்கும் எ-று.

உ - ம் : ஆய்க ஆர்க ஆழ்க; ஆய்தல் ஆர்தல் ஆழ்தல்; ஆய்நர் ஆர்நர் ஆழ்நர்; ஆய்பவை ஆர்பவை ஆழ்பவை; வாய்மை நேர்மை கீழ்மை; எய்சிலை வார்சிலை வாழ்சேரி; தெய்வம் சேர்வது வாழ்வது; பாய்ஞெகிழி நேர்ஞெகிழி வாழ்ஞெண்டு; செய்யாறு பேர்யானை வீழ்யானை - என மொழிக்கு முதலாம் ஒன்பதும் வந்து மயங்கின. செய்யாறு என யகரத்தின் முன்னர் யகரம் வந்தது தன்முன்னர்த் தான் வந்ததாம்.

இனி, உம்மையாற் கொண்ட மொழிக்கு முதலாகாதவற்றின் கண்ணும் சில காட்டுதும்: ஓய்வு சோர்வு வாழ்வு; ஓய்வோர் சோர்வோர் வாழ்வோர்; ஆய்ஞர் சேர்ஞர் ஆழ்ஞர் - என வரும். பிற எழுத்துக்களொடு வருவன உளவேனும் வழக்கும் செய்யுளும் நோக்கிக் கூறிக்கொள்க.

இனி, வேய்ங்ஙனம் வேர்ங்ஙனம் வீழ்ங்ஙனம் - என்பன போல, மொழிக்கு முதலாகாத ஙகரம் இடைவந்த சொற்கள் அக்காலத்து வழங்கின என்றுணர்க, ஆசிரியர் ஓதுதலின். இதனை 'ஙகரமொடு தோன்றும்' எனப் பிரித்து ஓதினார், அக்காலத்தும் அரிதாக வழங்கலின்.

இனி, வேய்கடிது வேர்கடிது வீழ்கடிது - சிறிது - தீது - பெரிது - ஞான்றது - நீண்டது - மாண்டது - யாது - வலிது என்பன காட்டின், அவை இருமொழியாக நிலைமொழிவருமொழி செய்து மேற்புணர்க்கின்றன, ஈண்டைக்கு ஆகா என மறுக்க. *(29)*

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.29.** யரழ என்னும்.....ஙகரமொடு தோன்றும்.

ஈண்டு யரழக்களுக்கு முன் ஙகரம் வருதற்கு, வேய்ஙனம் வேர்ஙனம் - வீழ்ஙனம் - என்பனவற்றை உதாரணமாகக் காட்டினார் இளம்பூரணர். ஙகரம் மொழிமுதலில் வருவதன்று ஆகலின், ஙனம் என்பதற்குத் தன்மை என்று பொருள் கூறுதல் அமையாதன்றே? 'யரழ முன்னர் மொழிமுதல் மெய்வரும்' என்னும் நன்னூல் சூத்திரத்திற்குச் சங்கரநமச்சிவாயர் காட்டிய வேய்ங்குழல் - ஆர்ங்கோடு - பாழ்ங்கிணறு - என்பன ஈண்டைக்கு உதாரணம் ஆதல் அமையும்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.29.** யரழ என்னும் புள்ளி முன்னர்
முதலாகு எழுத்து ஙகரமொடு தோன்றும்.

(இ-ள்.) யரழ என்னும் புள்ளிஎழுத்துக்களின் முன்னர் மொழிக்கண் முதலாகி வரும் என்னும் கதநபம சவயஞ - என்னும் ஒன்பது உயிர்மெய்யெழுத்தும், மொழிமுதல் ஆகாமல் புணர்ச்சிஇயல்பான் மிக்கு வரும் ஙகரஒற்றும் தனித்தனியே வந்து அவற்றின் ஓசையொடு மயங்கும்.

இப்பத்தனுள் ஙகரம் ஒற்றெழுத்தாக அன்றி உயிர்மெய்யாக வாராமையின் அதனைப் பிரித்துக் கூறினார். ஒடு என்பது எண்ணிடைச் சொல். முதலாகு எழுத்தொடு - ஙகரமொடு - எனத் தனித்தனி கூட்டுக. .......அங்ஙனம் ஆங்ஙனம் என்பவை இடைச்சொல் அடியாகப் பிறந்த தனிச்சொற்கள் ஆகும். அவை நிலைமொழி வருமொழியாக அமைந்து புணர்ந்த புணர்மொழிகள் அல்ல.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ.29. 'ஆ ஏ ஓ அம் மூன்றும் வினாஅ'.**

சுட்டுப்பொருளும் வினாப்பொருளும் தரும் இசை நூன்மரபில் இடம் பெறலாமா என்பது வினா. நூன்மரபு, 33 எழுத்துள் வருவனவற்றிற்கு ஓர் இனம் நோக்கிக் குறியீடுகள் கூறும் இயல் ஆதனால், சுட்டும் வினாவும் இவ்வியலில் சேர்க்கப்பட்டன. இவை சுட்டுக்குறிப்பும் வினாக்குறிப்பும் உடைய ஆதலின் மொழியாம் தன்மையில் ஐயம் இல்லை எனினும் ஈண்டு நோக்கம் குறியீடே. அதனால்தான் சுட்டு எனவும் வினா எனவும் குறியீடுகளைப் பயனிலையாக அமைத்தார் ஆசிரியர். குறியீடு கூறுவது பின்னர் எடுத்தாளும் சுருக்கத்திற்கு அன்றே? ஐந்தினைக் குறில் எனவும், ஏழினை நெடில் எனவும், பன்னிரண்டினை உயிர் எனவும், பதினெட்டினை மெய் எனவும், இவ்வாறே வன்மை மென்மை இடைமை எனவும், ஒருபடித்தான எழுத்துக்களுக்கு ஒருகுறியீடு படுத்தியதைக் காண்கிறோம். அம்மரபுப்படி அ இ உ மூன்று உயிர்க்குறிலும் ஓரியல்புடைய சுட்டுக்குறியாம். ஆ ஏ ஓ மூன்றும் ஓரியல்புடைய வினாக்குறியாம். இதனால் நாம் அறியக் கிடப்பது என்ன?

ஒருவழிப்பட்ட எழுத்துத் தொகுதிக்குக் குறியீடு ஒன்று வடிப்பதே நூன்மரபின் கருத்து என்பதாம். ஆதலின் முழுச் சொல்நிலையில் வரும் அது-அவ்-அவை-அவன்- யா-யாது-யாவன்-எவன்- முதலியவற்றுக்கு நூன்மரபில் இடமில்லை.

சொல்நோக்கில் சுட்டும் வினாவும் இடைச்சொற்கள் என்க. ஏகாரமும் ஓகாரமும் பிறபொருட்குறிப்புக்கும் வருதலின், இடையியலில் நூற்பாக்கள் யாத்தார். ஆ வினா என்ற ஒரு பொருட்குறிப்பே உடைமையின், இந்நூற்பாவே போதியதாயிற்று. சுட்டுக்கும் இஃது ஒக்கும்.

குறில்கள் சுட்டாதலும், நெடில்கள் வினாஆதலும் இயற்கைநயம் உடையன.

**இளம்பூரணம்**

### *30. உடனிலை மயக்கம்*

**மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்**
**தம்முன் தாம்வரூஉம் ரழஅலங் கடையே.**

*(இச்...எனின்)* நிறுத்த முறையானே உடனிலை மயக்கம் ஆமாறு உணர்...ற்று.

*(இ - ள்)* பொருள்நிலைமைக் கருத்தின்கண் எல்லா மெய்யெழுத்தும் தம்முன்னே தாம் வந்து மயங்கும், ரகார ழகாரங்கள் அல்லாதவிடத்து எ - று.

*(உ-ம்):* காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்ஞை, பட்டை, மண்ணை, தத்தை, வெந்நெய், அப்பை, அம்மி, வெய்யர், எல்லி, எவ்வி, கொள்ளி, கொற்றி, கன்னி- என வரும்.

'மெய்ந்நிலை சுட்டின்' என்றதனான், 'தம்முன் தாம்வரூஉம்' என்றது, மெய்ம்முன்னர் மெய் என்னும் மாத்திரை அன்றி உடனிலைமெய்ம் மேலதாம் என்பது கொள்க.[1]

'எல்லாம்' என்றது, மேல் 'யரழ' (29) என்னும் அதிகாரம் மாற்றி நின்றது. *(30)*

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.29.** 1. ''ஙனம் என்னும் பலபொருள் ஒருசொல் தனித்து வருதலின்றி யரழக்களின்வழிச் சார்ந்து வருமாகலின், அக்கருத்தானே ஆசிரியர் தொல் காப்பியனார் 'முதலாகு எழுத்தும் ஙகரமொடு தோன்றும்' என்றார்.'' (இ.வி. சூறா.எழு.29)

நச்சினார்க்கினியம்

**30. தனிமெய் தன்ஒற்றொடு மயங்குதல்**

**மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்**
**தம்முன் தாம்வரூஉம் ரழஅலங் கடையே.**

இது நிறுத்த முறையானே தனிமெய் தன்ஒற்றொடு மயங்குமாறு கூறுகின்றது.

இ-ள்: மெய்ந்நிலை சுட்டின் - பொருள்நிலைமையைக் கருதின்; எல்லா எழுத்தும் - பதினெட்டு மெய்யும்; தம் முன் தாம் வரூஉம் - தம் முன்னே தாம் வந்து மயங்கும்; ரழ அலங்கடை - ரகார ழகாரங்கள் அல்லாத இடத்து எ-று.

உ - ம் : காக்கை எங்ஙனம் பச்சை மஞ்ஞை பட்டை மண்ணை தத்தை வெந்நெய் அப்பு அம்மை வெய்யர் எல்லி எவ்வி கள்ளி கொற்றி கன்னி என வரும்.

'மெய்ந்நிலை சுட்டின்' என்றதனான், தனிமெய் முன்னர் உயிர்மெய் வரும் என்று கொள்க. 'எல்லாம்' என்றது ரகார ழகாரங்கள் ஒழிந்தவற்றைத் தழுவிற்று. (30)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.23 - 30.** இவ்வெட்டுச் சூத்திரங்களானும் இருவகை மயக்கங்களையும் விளக்குகிறார். இவற்றுள் உரையாசிரியரிடைப் பொருள் உரைப்பதன்கண் வேறுபாடு இல்லை.

நச்சினார்க்கினியர் இம்மயக்கம் ஒருமொழிக்கண்ணது என்றும், உரையாசிரியர் ஒருமொழியும் இருமொழியும் ஆகிய இவற்றின் கண்ணது என்றும் கூறுப. இவர் இளம்பூரணர் உரையைப் பின்பற்றுகிறார்.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

*நூ.30.* மெய்ந்நிலை சுட்டின் ....ரழ - அலங் கடையே.

ஙகரம் உடன்நிற்றற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் எ+ஙனம் என்பதனை உதாரணம் காட்டினார். அஃது ஒருசொல் அன்மையானும், ஙகரம் மொழி முதற்கண் வருவதன்று ஆகலின் எ+ஙனம் என்று பிரித்து இருசொல்லாகக் கோடல் அமையாமையானும், இரு சொல்லாயின் ஙகரம் மொழிமுதல் வந்ததாகும் ஆகலானும், அது பொருந்தாது......நன்னூலார் ஙகரம் மொழிமுதல் வருதலை உடன்பட்டார் ஆதலின், நன்னூல்உரையாசிரியர் 'அங்ஙனம்' என்ற உதாரணம் காட்டியது அமையும்.

ஆயின், ஙகரம் தன்முன் தான் மயங்குவதற்கு உதாரணம்ஆவது யாதோ எனின், 'பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும்' என்றும் 'அரங்ங்கம்' என்றும் வரும் அளபெடைச் சொற்கள் அமையும் என்க... மெய்கள் தம்முன் தாம் மயங்குதலைக் கொள்ளாக்கால், 'கண்ண் கருவிளை' 'பொன்ன் பொறிசுணங்கு' என்னும் அளபெடைக்கண் அவை மயங்கி நிற்றற்கு விதியின்றாம் அன்றே?

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

*நூ.30.* மெய்ந்நிலை சுட்டின்....ரழஅலங் கடையே.

ரழக்கள் வளைநா அண்ணஇடையில் பிறக்கும் வருடொலிகள் ஆதலின் அவை ஊன்றுதல் இன்று; அதனான் அவை தம்முன் தாம் வாரா ஆயின.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ.30. 'அளபிறந்து உயிர்த்தலும்......'**

மொழியின்றி இயல் இல்லை; அதுபோல, மொழியும் இயலின்றி இல்லை. இயலுக்கும் இசைக்கும் தளமாவது மொழி. எனினும் இயலுக்குரிய எழுத்தொலிதானோ இசைக்கலைக்கும் என்பது வினா. இவ்வினாவுக்கு விளக்கம் தருவது இந்நூற்பா. இசையில் வரும் சொல்லும் பொருளுடையதன்றோ? பொருண்மை அளவில் இயல்ஒலியன்களின் தன்மை உண்டு. "செய்யுளிடத்து எழுத்துக்கள் பெறும் மாத்திரையளவு உரைக்கும் இலக்கணம் இயல்தமிழுக்கும் இசைத்தமிழுக்கும் பொதுவாம்" என்பர் யாழ்நூல் எனப்படும் தமிழ்வாழ்நூல் கண்ட அடிகள் விபுலானந்தர்.

இசைவரலாற்று முறைபால் நாம் உணரக்கிடப்பது என்ன? தமிழின் உயிரொலிகளே நிறங்களின் ஆளத்தியாய் இசைப்பண்ணிற்குரிய சுரங்களாக இருந்தன என்பதும், ச ரி க ம ப த நி என்ற பெயர்களின் முதலெழுத்துக்கள் பின்னர்ச் சுரங்களாகக் கொள்ளப்பட்டன என்பதும் தெளிவாம்.

**இளம்பூரணம்**

**31. சுட்டு**

**அஇ உஅம் மூன்றும் சுட்டு.**

(இச்...எனின்) குற்றெழுத்து எனப்பட்டவற்றுள் சிலவற்றிற்கு வேறொரு குறியிடுதல் நுதலிற்று.

(இ - ள்.) அ இ உ - என்று சொல்லப்பட்ட அம்மூன்றும் சுட்டு எ - று.

வருமாறு: அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன் - என வரும். (31)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.31.*** பேராசிரியர் இந்நூற்பாவை ஒருதலை மொழிதல் என்னும் உத்திக்கு எடுத்துக்காட்டாகக் கொண்டார். ''ஒருதலை மொழிதலாவது, ஓர் அதிகாரத்தான் சொல்லற் பாலதனை வேறுஅதிகாரத்துச் சொல்லி, அவ்விலக்கணமே ஆண்டும் கொள்ள வைத்தல். 'அ இ உ எனும் மூன்றும் சுட்டு' எனவும், 'ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை' எனவும் இவை எழுத்ததிகாரத்துக் கூறியவாற்றானே சொல்லதி காரத்துள்ளும் அவ்விலக்கணம் கொள்ள வைத்தமையின் அப்பெயர்த்தாயிற்று. '' (பொ. 665 உரை)

**நச்சினார்க்கினியம்**

## *31. சுட்டு*

**அஇ உஅம் மூன்றும் சுட்டு.**

இது குற்றெழுத்து என்றவற்றுள் சிலவற்றிற்கு வேறொரு குறியீடு கூறுகின்றது.

இ - ள் : அ இ . . . . . சுட்டு - அ இ உ என்று கூறிய அம்மூன்றும் சுட்டு என்னும் குறியினையுடைய எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கியதொரு குறி, சுட்டி அறியப்படும் பொருளை உணர்த்தலின். தன்னினம் முடித்தல் என்பதனான், எகரம் வினாப்பொருள் உணர்த்தலும் கொள்க. *(அ)*

வருமாறு: அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எப்பொருள் என வரும். இவை பெயரைச் சார்ந்து தத்தம் குறிப்பின் பொருள்செய்த இடைச்சொல். இச்சூத்திரம் *ஒருதலைமொழிதல்* என்னும் உத்தி. *(1)* இதுவும் மேலைச் சூத்திரமும் *(32)* எழுத்தாம் தன்மை அன்றி மொழி நிலைமைப்பட்டு வேறொரு குறிபெற்று நிற்றலின் மொழிமரபினைச் சேர வைத்தார். *(ஆ)* *(31)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 31**

1. ஒருதலைமொழிதல் என்னும் உத்தியாவது ஓரதிகாரத்திற் சொல்லற்பாலதனை வேறோர் அதிகாரத்தில் சொல்லிவைத்து, அவ்விலக்கணம் ஆண்டும் பெறப்பட வைத்தல்; சொல்லதிகாரத்திற் சொல்லற்பாலதாம் சுட்டினை எழுத்தில் சொல்லிவைத்து அதனையே சொல்லிலும் பெறவைத்தமை இவ்வுத்தியாம் என்பது.

(அ) இவ்வுத்தி விளக்கம் இளம்பூரணம் சூ. 13 உரைக்குறிப்பிற் காண்க.

(ஆ) சுட்டும் வினாவும் எழுத்து எனப்படுமாறின்றிச் சுட்டிடைச் சொல் வினா விடைச்சொல் எனவேபடும் என்பது.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.31.** அ இ உஅம் மூன்றும் சுட்டு.

(இ-ள்.) அ இ உ என்ற மூன்றும் சுட்டு ஆகும் (அவன் இவன் உவன்).

அக்கொற்றன், அவன் கொற்றன் - என்பவற்றில் அகரம் இடைச்சொல் அன்று, சுட்டுப்பெயரின் பகுதியே. சுட்டு எங்கும் இடைச்சொல்லாம் என்பது பொருந்தாது என்பது இவர் கொள்கை.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.31.** அ இ உஅம் மூன்றும் சுட்டு.

அ முதலிய இம்மூன்றனையும் சுட்டெழுத்து என்ற கோடுமோ, சொல் என்று கோடுமோ எனின், சொல் என்ற

கோடலே அமைவுடைத்து என்க.....ஆசிரியர் 'குற்றெழுத்து என்ப' 'நெட்டெழுத்து என்ப' என்று குறில்நெடில்கட்கு எழுத்து என்று பெயர் கூறியாங்கு, சுட்டெழுத்து என்ற பெயர் இடாதது உட்கொளற்பாலது. ....இனி, அஇஉ-க்கள் தம்மை உணர்த்தாது சுட்டுப் பொருளை உணர்த்துதலின் அவற்றைச் சொல் என்று கோடலே பெரிதும் அமைவுடைத்து.

அஇஉ என்னும் எழுத்துக்கள் மொழிநிலைமைப் பட்டவழியே இக்குறிபெறும் எனவும், அது கருதியே உயிரெழுத்துக்களைக் குறில் நெடில் என்று பகுத்துப் பெயரிட்டவழி இச்சூத்திரத்தைக் கூறிற்றிலர் எனவும், மொழிமரபினைச் சார வைத்ததனான் இவை மொழி எனப்படும் எனவும், கொள்ளுதலே அமைவுடையது ஆகும். அன்றியும், ஆசிரியர் 'குற்றெழுத்து என்ப,' 'நெட்டெழுத்து என்ப' என்று குறில்நெடில்கட்கு எழுத்து என்று பெயர் கூறியாங்கு, சுட்டெழுத்து என்று பெயரிடாதது உட்கொளற்பாலது.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ.31. அஇ உஅம் மூன்றும் சுட்டு.

(இ-ள்.) அஇஉ - என்னும் அம்மூன்று உயிர்எழுத்துக்களும் சுட்டுதற்குரிய ஆதலின், சுட்டு என்னும் பெயரான் வழங்கப்படும்.

எகரம் 'எவன்' என்னும் வினாவினைக்குறிப்புச் சொற்கு உறுப்பாகவும், எஞ்சாப் பொருள்தரும் இடைச் சொல்லாகவும், சிறுபான்மை வினாப்பெயரின் உறுப்பாகவும் வருதலன்றித் தனித்து வாராமையின் அதனைக் குறியீடு செய்யார் ஆயினார். எப்பொருள் என்பது எஞ்சாமைப் பொருட்டு. எதோளி என்பது எங்கு என்னும் இடப்பொருட்டு.

**இளம்பூரணம்**

### *32. வினா*

**ஆஏ ஓஅம் மூன்றும் வினாஅ.**

*(இச்...எனின்)* மேற்கூறிய நெட்டெழுத்திடைச் சிலவற்றிற்கு வேறொரு குறியிடுதல் நுதலிற்று.

*(இ - ள்)* ஆ ஏ ஓ - என்று சொல்லப்பட்ட அம்மூன்றும் வினா என்னும் குறிய எ -று.

*(உ - ம்):* உண்கா, உண்கே, உண்கோ - என வரும்.

**தன்னினம் முடித்தல்** என்பதனான், எகரமும் யகரஆகாரமும் வினாப்பெயர்[1] பெறுமெனக் கொள்க.

இக்குறிகளையும் முன் குறில் என்றும் நெடில் என்றும் கூறியவழியே கூறுக எனின், இவை சொல்நிலைமையின் பெறும் குறியாகலின் ஆண்டு வையாது, மொழிமரபினைச் சார வைத்தான் என்க.[2] இக்குறி மொழிநிலைக்கேல் எழுத்தின்மேல் வைத்துக் கூறியது என்னையெனின், இவ்வதிகாரத்துப் பெயர் வினை அல்லனவற்றிற்குக் கருவி செய்யாமையின்[3] என்க. *(32)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*சூ.32.* 1. **வினா என்னும் குறி.**

2. மொழிகள் ஆதற்குரிய எழுத்துக்களின் இலக்கணம் பிறப்புக்களைச் சொல்லுவது புறப்புறக் கருவி. அ இ உ என்னும் சுட்டு மூன்றும், ஆ ஏ ஓ என்னும் வினா மூன்றும் பொருளுணர்த்துதலின் சுட்டிடைச் சொல் எனவும் வினா இடைச்சொல் எனவும் பெயர் பெறுமன்றி அவை சுட்டெழுத்து வினாவெழுத்து எனப்பெறா. இவை சொல்லாம் நிலைக்கண் பெற்ற குறியீடு ஆகலின், மொழிமரபினைச் சார இவ்வியல் இறுதிக்கண் இடம் பெற்றன.

புணர்ச்சிக்கு வேண்டும் கருவிகள் பெரும் பான்மையும் பெயரையும் வினையையும் பற்றியே கூறப்பட்டன. 109ஆம் சூத்திரத்துள் 'பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்' முதலான நான்கடிகளையும் நோக்குக. ஏனை இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினைகளின் மருங்காகத் தோன்றுதலின் அவை நிலைவருமொழிகளொடு சார்த்திப் புணர்க்கப்படும். அவை நிலைமொழியாகவோ வருமொழியாகவோ நிகழ்தல் மிக அருகியே என்க. ஆதலின் அவை பற்றிய கருவி கூறப்பட்டில. எழுத். 206, 211, 213, 225, 237, 273, 274, 276, 291 என்னும் எண்ணிட்ட நூற்பாக்களில், சுட்டு - அன்ன - அம்ம - அம்மா - ஆங்க - மியா - தன்தொழில் உரைக்கும் வினாவாகிய ஆகாரம் - இனி - அணி - ஏகார - ஓகாரங்கள் - என்னும் இடைச்சொற்கள் நிலைமொழியாகவும் நிலைமொழி ஈற்றின்கண் இயைந்தும் நிற்க, வருமொழியொடு புணர்தல் விதிக்கப்பட்டுள. 317ஆம் நூற்பாவில் 'இலம்பாடு' என்னும் உரிச்சொல் நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படுதல் காண்கிறோம்.

பெயர்க்கும் வினைக்கும் கருவிசெய்தலன்றி ஆசிரியன் பிறவற்றிற்குக் கருவிசெய்யான் என்னும் இளம்பூரணர் கருத்துத் தமக்கு இசைவின்மையின் நச்சினார்க்கினியர் இவ்வுரைக்கு விளக்கம் கூறிற்றிலர் போலும்.

**நச்சினார்க்கினியம்**

### 32. வினா

**ஆஏ ஓஅம் மூன்றும் வினாஅ.**

இது நெட்டெழுத்து என்றவற்றுள் சிலவற்றிற்கு வேறொரு குறியீடு கூறுகின்றது.

இ-ள் : ஆ ஏ . . . . வினா அ - ஆ ஏ ஓ என்று கூறப்பட்ட அம்மூன்றும் வினா என்னும் குறியினையுடைய எ-று.

இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி, வினாப்பொருள் உணர்த்தலின்.

உ-ம்: உண்கா உண்கே உண்கோ - என வரும். இவற்றுள் ஆகாரம் இக்காலத்து வினாவாய் வருதல் அரிது. நீயே நீயோ என்பன இக்காலத்து வரும். இவற்றுள் ஏ ஓ என்பன இடைச்சொல்லோத்தினுள்ளும் கூறினார், ஏகார ஓகாரங்கள் தரும் பொருள்தொகை பற்றி. இது(1)*மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்* என்னும் உத்திக்கு இனமாம், யகரஆகாரமும் வினாவாய் வருதலின். *(32)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

## *சூத்திரம் 32*

*1.*எடுத்தோதிய பொருண்மைக்கு ஏற்ற வகையான் அதற்குச் சொல்லாதது ஒன்றனைக் கொள்ளவைத்தல் இவ்வுத்தியாம். வினா ஆ ஏ ஓ அம்மூன்றும் என்பது ஈண்டு எடுத்தோதிய பொருள். அவற்றோடு எடுத்தோதாத வினா 'யா' என்பது. அதனையும் இம்மூன்றோடு கொள்க என்பது இவ்வுத்திக்கு இனம். ஆ ஏ ஓ இம்மூன்றும் உயிராக, யாவினா உயிர்மெய்யாதலின் இதனையும் கொள்க என்றது இவ்வுத்திக்கு இனமாம் என்றார், ஆசிரியர் உயிரும் மெய்யும் ஆகிய முதலெழுத்திற்கே இவ்வியலுள் குறியீடு செய்கின்றார் ஆதலின்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*சூ.32.* ஆஏ ஓஅம் மூன்றும் வினாஅ.

*(இ-ள்.)* ஆ ஏ ஓ - அம் மூன்றும் வினா ஆகும்.

*(உ-ம்.)* அவனா வந்தான்? அவனே வந்தான்? அவனோ வந்தான்?

இவ்வினா எழுத்துக்கள் பெயர் வினை இவற்றின் ஈற்றிலே வரும் என்று கொள்க.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

சூ.32. ஆஎ ஓ-அம் மூன்றும் வினாஅ.

இம்மூன்று எழுத்துக்களும் வினாப்பொருளில் வருதலின் வினா இடைச் சொல் எனப்படும். இவை சொற்களின் ஈற்றில் நின்று அப்பொருளை உணர்த்தும்.

இச்சூத்திரத்தில், 'வினா' என்னும் சொல்லின்கண் ஆகாரம் அளபெடுத்து நிற்றல் வேண்டும்.

சூ.32. யா என்னும் வினாவினையும் நன்னூலார் கூறினது போல, இவ்வாசிரியர் ஈண்டு இச்சூத்திரத்தில் ஒருங்கு கூறாதது என்னையெனின், அஃது இவ்வாசிரியர் 'எழுத்து' என்று கொண்ட முப்பத்துமூன்றனுள்ளும் ஒன்று அன்மையானும், முதலெழுத்தின்கண் படுவதொரு குறியீடே கூறிவருகின்றார் ஆதலானும் 'யா' வினாவினை ஈண்டுக் கூறிற்றிலர். அன்றியும் அது பெயர்ச்சொல் ஆதல் அறியத்தக்கது. அதனைச் சொல்லதிகாரத்து அஃறிணைப் பெயர்களைக் கூறுமிடத்துக் கூறியிருப்பதூஉம் (பெயரியல் 13), இவ்வதிகாரத்தில் 'யா என் வினாவும் ஆயியல் திரியாது' (உருபி.3) என்று, யா என்னும் பெயர் உருபேற்குமிடத்து வற்றுச்சாரியை பெறும் என்று விதித்திருப்பதூஉம் காண்க. எகரம் வினாவாய்அன்றி,

'எப்பொருள் ஆயினும் அல்லது இல்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்' (சொல். 35)

'எந்நில மருங்கின் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்' (பொருள்.19)

என்பன போலத் தொடர்புடைப் பொருள் (சம்பந்தார்த்தம்) குறித்து வருவது ஆகலின் அது கூறப்படாதாயிற்று, இவ் எகரத்தின் உண்மைத் தன்மையை ஆராயின், அது புணர்நிலைக்கண் யாவிற்கு நேர்ந்த திரிபே ஆதல் அறியப்படும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.32.** ஆஏ ஓ-அம் மூன்றும் வினாஅ.

*(இ-ள்.)* ஆ ஏ ஓ - என்னும் அம்மூன்று எழுத்துக்களும் வினா என வழங்கப்பெறும். (இதுவும் ஆட்சிப்பொருட்டாய இலக்கணக் குறியீடே ஆம்.)

இனி, யா என்னும் உயிர்மெய்எழுத்துப் பன்மை வினாப்பெயராயும், யாவன் யாவள் யாவர் யாது யாவை - என்னும் வினாப்பெயர்ச்சொற்களின் உறுப்பாயும் வருதலன்றித் தனித்து வினாஇடைச்சொல்லாக வாராது என்க.

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

**சூ.32.** சொல்லாம் நிலைமையில் நின்று யாவன் யாவள் யாவர் - என உயர்திணைக்கண்ணும் யாது யா யாவை - என அஃறிணைக்கண்ணும் பெயராகவும், உயர்திணைக்கண் யார் எனவும் அஃறிணைக்கண் எவன் எனவும் வினாவினைக்குறிப்பாகவும் வருவனவற்றை முறையே சொல்லதிகாரத்துப் பெயரியல் வினையியல் இவற்றில் கூறிப் போந்தார் ஆசிரியர். எவ்வயின் எதோளி - என எகர முதலாக வயின் என்பதும் இகரவிகுதியும் ஒட்டி ஒருசொல் நீர்மைப்பட்டு இடப்பொருள் உணர்த்தி இங்ஙனம் வினாவாய் நிற்கும் இடைச்சொற்களை வினா எனத் தழுவினார் (எழுத்.159, 334). இவை சொல்நிலைமைப்பட்டு வினாப்பொருள் உணர்த்தி நிற்றலின், எழுத்தாம் நிலைமையில் நின்று ஈண்டுப் புணர்ச்சிக்கண்படும் ஈற்றுவினாவாகிய ஆ ஏ ஓ - என்பவற்றுடன் இயைத்துரைக்கப்படா ஆயின.

இளம்பூரணம்

## 33. எழுத்திசை நீடல் இசைநூற்கண்ணும் உண்மை

**அளபுஇறந்து உயிர்த்தலும் ஒற்றுஇசை நீடலும்**
**உளஎன மொழிப இசையொடு சிவணிய**
**நரம்பின் மறைய என்மனார் புலவர்.**

(இச்....எனின்) எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையின் நீண்டு நிற்கும் இடம் இதுவென்பது உணர்..ற்று.

(இ - ள்) உயிரெழுத்துக்கள் எல்லாம் தமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒலித்தலையும், ஒற்றெழுத்துக்கள் தம்ஒலி முற்கூறிய அளவின் நீடலையும், இந்நூலுள் கூறும் விளியின்கண்ணே அன்றி, குரல் முதலிய ஏழிசையொடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசைநூற்கண்ணும் உள என்று சொல்லுவர் அவ்விசைநூல் ஆசிரியர் என்று சொல்லுவர் புலவர் எ -று.

'ஒற்றிசை நீடலும்' என்றது, 'அளபு இறந்தது உயிர்த்தல்' என்றது அதிகாரத்தான் நின்ற உயிர்மேல் சேறலின் என்பது. 'உள' என்றது, அந்நீட்சி ஒருதலை அன்று என்பது விளக்கிற்று.

இசைநூலாசிரியரும் முதனூல் ஆசிரியர்தாமே எனினும், 'மொழிப' என வேறொருவர் போலக் கூறியது, அதுவும் வேறொருவரால் வேறொரு நூலாகச் செய்யப்படும் நிலைமை நோக்கிப்போலும்.

'மறையும்' என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது. அகரம் செய்யுள் விகாரம்.[1] (33)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.33.** 1. மறையும்-இசைநூற்கண்ணும். சூத்திரத்துள் உம்மை விகாரத்தான் தொக, மறை என நின்றது. அகரம் மிக்க விகாரமாய்த் தோன்ற, மறை +அ இடையே யகர உடம்படுமெய் பெற்று 'மறைய' என நிகழ்ந்தது.

### நச்சினார்க்கினியம்

**33. எழுத்திசைநீடல் யாழ்நூலிடத்தும் நாற்செய்யுளிடத்தும் உண்டாதல்**

**அளபுஇறந்து உயிர்த்தலும் ஒற்றுஇசை நீடலும்**
**உளஎன மொழிப இசையொடு சிவணிய**
**நரம்பின் மறைய என்மனார் புலவர்.**

இது *பிறன்கோள் கூறல்* என்னும் உத்திபற்றி இசைநூற்கு வருவதோர் இலக்கணம் ஆமாறு கூறி, அவ்விலக்கணம் இந்நூற்கும் கொள்கின்றது.

*இ-ள்: அளபு ... நீடலும் நரம்பின் ... புலவர் - முற்கூறிய* உயிரும் உயிர்மெய்யும் மாத்திரையை இறந்து ஒலித்தலும், ஒற்றெழுத்துக்கள் அரை மாத்திரையின் நீண்டுஒலித்தலும் யாழ்நூலிடத்தன என்று கூறுவர் புலவர்; *இசையொடு சிவணிய உளஎன மொழிப* - அங்ஙனம் அளபுஇறந்தும் நீண்டும் இசைத்தல் ஓசையொடு பொருந்திய நால்வகைச் செய்யுள்களுக்கும் உள என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையை இறந்து ஒலிக்குமாறு கண்டு, அவை இறந்து ஒலிக்கும் இடம் கூறினார், எழுத்தும் சொல்லும் பொருளும் கிடக்கும் இடம் செய்யுளிடம் ஆதலின். அது மிக்கொலித்தலைச் செய்யுளின்கண் *'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ'* *(செய்.1)* என, இருபத்தாறு உறுப்பிற்கும் சிறப்புறுப்பாக முற்கூறி, பின்னர்

'மாத்திரை அளவும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர்' *(செய்.2)*

என இச்சூத்திரத்தொடு மாட்டெறிந்து, பின்னும்

'எழுத்தளவு எஞ்சினும் சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப' *(செய்.3)*

என்றும் கூறினார். இஃது எதிரது போற்றல் (அ) என்னும் உத்தியும் கூறிற்று.

உ-ம்: 'வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேஎளினி' (கலி.11) என்புழி, ழகரஆகாரமும் ககரஏகாரமும் மாத்திரை இறந்து ஒலித்தவாறு உணர்க. 'பிடியூட்டிப்

பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே' ( ஷை) என்புழி, நகரஒற்று அளபுஇறந்தவாறு காண்க. ஒழிந்த மூவகைச் செய்யுட்கும் இவ்வாறே தத்தமக்குரிய பா என்னும் உறுப்பினை நடாத்தி அளபு மிகுமாறு காண்க.

சிவணிய என்பது தொழிற்பெயர்.(ஆ) 'இசையொடு சிவணிய' எனவே, செய்யுளாதல் பெற்றாம். நரம்பு என்றது ஆகுபெயராய் யாழினை உணர்த்திற்று. மறை என்றது நூலை. 'மொழிப' என்றும் 'என்மனார் புலவர்' என்றும் இருகால் கூறிய அதனால், இங்ஙனம் பொருள் கூறலே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று; 'மேற்கிளந்தன்ன' என்னும் மாட்டேற்றிற்கு இவ்வோத்தினுள் வேறொரு சூத்திரம் இன்மையின். இவ்விலக்கணம் கூறாக்கால், செய்யுட்குப் பா என்னும் உறுப்பு நிகழாது அவை உரைச்செய்யுள் போல நிற்றலின், இவ்விலக்கணம் கூறவே வேண்டும் என்று உணர்க.

'சூத்திரத் துப்பொருள் அன்றியும் யாப்புற
இன்றி யமையாது இயைபவை எல்லாம்
ஒன்ற உரைப்பது உரையெனப் படுமே' (மர.103)

என்னும் மரபியல் சூத்திரத்தானே இவ்வாறே சூத்திரங்களை நலிந்து பொருள் உரைப்பன எல்லாம் கொள்க. (33)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 33**

(அ) சூ. 10 உரைக்குறிப்பிற் காண்க.

(ஆ) சிவணிய : பலவின்பால் வினையாலணையும் பெயராக, (ஓசையொடு) பொருந்திய நால்வகைச் செய்யுளையும் குறித்தது.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.33.** அளபிறந்து உயிர்த்தலும்....என்மனார் புலவர்.

(இ-ள்.) உயிர் தம் அளவை மிக்கு ஒலித்தலும், மெய் இசை நீண்டு ஒலித்தலும், இசையொடு பொருந்தின யாழிசையைப் பற்றிக் கூறும் நூல்களின் கண்ணவாக உள என்று சொல்லுவர் எனக் கூறுவர் புலவர்.

நச்சினார்க்கினியர் இருதொடராக்கிச் சூத்திரத்திற்கு உரை கூறியமை வாக்கியபேதம் என்ற குற்றத்திற்கு இடம்செய்யும் என்று இவர் மறுத்துரைக்கின்றார்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.33.** அளபுஇறந்து உயிர்த்தலும்....என்மனார் புலவர்.

உயிர்எழுத்துக்களும் மெய்எழுத்துக்களும் தமக்குரிய அளபு கடந்து இசைநூலினிடத்து ஒலிக்கும் என்பர் இசைநூலார் என்று கூறுவர் புலவர் என்பது இச்சூத்திரத்தின் பொருள். 'மொழிப' என்னும் பயனிலைக்கு இசை நூலார் என்னும் வினைமுதல் தோன்றாது நின்றது. 'உயிர்த்தலும் நீடலும் நரம்பின் மறைய உளஎன மொழிப (இசைநூலார்) என்மனார் புலவர்' என்று இயைக்க. உரையாசிரியர் இவ்வாறே இயைத்துப் பொருள் கூறியிருப்பது காண்க. .......இனி, 'பிறன்கோட் கூறல்' என்னும் உத்திக்கு உதாரணமாக, ,''அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்' எனவும்....அவ்வந்நூலுள் கொள்ளுமாற்றான் அமையும் என்றவாறு ஆயின'' என்ற பேராசிரியர் கூறியிருத்தலானும், இச்சூத்திரம் இசைநூலார் கொள்கையைக் கூறியதே ஆதல் விளங்கும்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.33.** அளபிறந்து இசைத்தலும் ஒற்றிசை நீடலும்
உளஎன மொழிவ......என்மனார் புலவர்.

(இ-ள்.)பண்ணத்தியாயும் தேவபாணியாயும் பண் அமைந்த பரிபாட லாயும் வரும் இயற்றமிழ்ச் செய்யுளுள், உயிர்எழுத்துக்கள் நான்கு மாத்திரையினும் கடந்து இசைத்தலும், ஒற்றெழுத்துக்கள் அளபெடையைக் கடந்து

இசைத்தலும் உள-என்று மொழிவனவற்றை, ஏழிசையொடு பொருந்திய நரம்பினையுடைய யாழ்நூலிடத்தனவாம் என்று கூறுவர் இயற்றமிழ் ஆசிரியர்.

அதனான், மாத்திரை அளவுதற்பொருட்டும் இன்னோசையின் பொருட்டும் இயற்றமிழ்ச் செய்யுளுள் எழுத்துக்கள் நீண்டு இசைப்பின் இவ்விலக்கணத்தான் அமைத்துக்கொள்க என்றவாறு.

இதனைப் பிறன்கோட் கூறலாகக் கருதின், ஈண்டுக் கூறியதற்கு யாதோர் இயைபுமின்றி ஆசிரியர் பொருளில கூறியதாக முடியும் என்க.



# ஒத்த நூற்பாக்கள்

***(தானெடுத்து மொழிதலாக மேற்கொண்ட தொல்காப்பியச் சூத்திரங்களும் இவற்றுள் அடங்கும்)***

## I நூன் மரபு

### *நூற்பா - 1*

வீ. சோ. *1* அறிந்த எழுத்து அம்முன் பன்னிரண்டு
ஆவிகள் ஆன; தம்முன்
அறிந்த பிறந்த பதினெட்டு மெய்.

நேமி. *1* ஆவி அகரமுதல் ஆறிரண்டாம்; .....
மேவும் ககரமுதல் மெய்களாம் - மூவாறும்.

நன். 59 உயிரும் உடம்புமாம் முப்பதும் முதலே.

63 அம்முதல் ஈராறு ஆவி; கம்முதல்
மெய் மூவாறு என விளம்பினர் புலவர்.

இ. வி. 4 உயிரும் உடம்பும்என முதல்இரு வகைத்து;
அவற்று
உயிர் ஈராறு மெய் மூவாறு என்ப;
அம் முப்பானும் அதனது விரியே.

தொ. வி. 5 முதலெழுத்து உயிர் ஈராறு; உடல் மூவாறே.

மு.வீ.
எழுத்து. 5 உடல்உயிர் எனமுதல் ஓரிரு வகைத்தே.

சுவாமி.
எழுத்தாக்க
மரபு *3* அகராதி ஈராறும் உயிர்; ககராதிகள்
மூவாறும் உடல்;
இம்முப்பானும் முதலெழுத்தாம்.

பேர. *5* எழுத்து முதல் சார்பு இருவகை என்ப.

## நூற்பா - 2

| | | |
|---|---|---|
| நன். | 60 | ஆய்தம்,அஃகிய இ உ ....சார்பெழுத் தாகும். |
| இ.வி. | 5 | குற்றிய லிகரம் குற்றிய லுகரம் ஆய்தமொடு சார்பின் பால என்மனார். |
| தொ.வி. | 5 | சார்பெழுத்து......தனி ஆய்தத்தோடு அஃகிய இ உ ..... என்ப. |
| மு.வீ. | 22 | சார்பு (உயிர்மெய்) தனிநிலை (இருபாற்றே). |
| சுவாமி. | 3 | ஆய்தம் இகல் குறளின் இ உ......சார்பெழுத்து. |

## நூற்பா - 3

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 2 | ஐந்து குறில். |
| நேமி. | 2 | ஆன்ற உயிர் ஈராறும் ஐங்குறில். |
| நன். | 64 | அவற்றுள், அஇ உஎ ஒக்குறில் ஐந்தே. |
| இ.வி. | 6 | அ இ உ எ ஒக்குறில். |
| தொ.வி. | 8 | குறில் அஇ உஎ ஒவ் ஐந்தே. |
| மு.வீ. | 8 | அ இ உ எ ஒக்குறில் ஆகும். |
| அவி. | 3 | அ இ உ எ ஒ இவை குறிய. |
| பேர. | 12 | அ இ உ எ ஒ-க்குறில் ஆகும். |

## நூற்பா - 4

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 2 | ஈராறில் . . . . . . நெடில் ஏழ். |
| நேமி. | 2 | ஆன்ற உயிர் ஈராறும் . . . . . ஏழ் நெடிலாம். |
| நன். | 65 | ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். |

| | | |
|---|---|---|
| இ.வி. | 6 | ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். |
| தொ.வி. | 8 | நெடில், ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ ஏழே. |
| மு.வீ. | 10 | ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில். |
| அவி. | 3 | மற்றை, ஏழ் நெட்டெழுத்தா நேரப் படுமே. |
| பேர. | 14 | ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில் ஆகும். |

## நூற்பா - 7

| | | |
|---|---|---|
| நன். | 100 | இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை. |
| இ.வி. | 24 | கண்ணிமை நொடியென நுண்ணியோர் உரைப்ப. |
| மு.வீ. | 96 | இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை. |
| அவி. | 12 | கண்ணிமை கைந்நொடி எனவே. |
| பேர. | 113 | கண்ணிமை கைந்நொடி அளவே மாத்திரை. |

## நூற்பா - 8

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 1 | அறிந்த எழுத்து அம்முன் பன்னிரண்டு ஆவிகளான. |
| நேமி. | 1 | ஆவி அகரமுதல் ஆறிரண்டாம். |
| நன். | 63 | அம்முதல் ஈராறு ஆவி. |
| இ.வி. | 6 | அகர முதல ஈராறும் உயிர். |
| தொ.வி. | 8 | அம்முதல் ஈராறும் உயிர். |
| மு.வீ. | 6 | அகரமுதல் உயிர் ஆறிரண்டு ஆகும். |
| சுவாமி. | 3 | அகராதி ஈராறும் உயிர். |
| பேர. | 9 | அகரமுதல் ஔகார அந்தமாம் உயிரே. |

## நூற்பா - 9

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 1 | கம்முன், பிறந்த பதினெட்டும் மெய். |
| நேமி. | 1 | ககரமுதல் மெய்களாம் மூவாறும். |
| நன். | 63 | கம்முதல், மெய்ம் மூவாறென விளம்பினர் புலவர். |
| இ.வி. | 7 | ககர முதல் மூவாறு மெய். |
| தொ.வி. | 8 | கம்முதல் மூவாறு உடல். |
| மு.வீ. | 12 | ககரமுதல் மூவாறும் காத்திரம் ஆகும். |
| சுவாமி. | 3 | ககராதிகள் மூவாறும் உடல். |
| பேர. | 26 | ககரமுதல் மூவாறும் (காட்டும் ஆய்தமும்) மெய். |

## நூற்பா - 10

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 5 | ஓங்கு உயிர்மெய், மற்றெழுத்து அன்று உயிர் மாத்திரையே பெறும். |
| நேமி. | 5 | உயிர்மெய் பெறும் உயிரே. |
| நன். | 89 | உயிரளவாய் |
| பேர. | 111 | மெய்யொடு மேவினும் உயிர்வேறு படாஅ. |

## நூற்பா - 11 - 13

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 5 | காலாம், குறுகும்ம; ........மெய் ஆய்தம் இ உக் குறுக்கம் அரை. |
| நேமி. | 5 | ஒற்றெழுத்து ஆய்தம் இ உ அரை. |
| நன். | 99 | அரை ஒற்று இ உக் குறுக்கம் ஆய்தம். |
| இ.வி. | 24 | ஆய்தம் ஒற்று இ உக் குறுமை அரை. |
| தொ.வி. | 19 | உ இக்குறள் ஒற்று ஆய்தம் அரையே. |
| மு.வீ. | 101 | அஃகிய இ உ ஆய்தம் மெய் அரையே. |

| | | |
|---|---|---|
| சுவாமி. | 8 | ஆய்தம் மெய் குற்றுகரம் குற்றிகரம் அரை; ம (ஆய்த)க் குறுக்கமும் கால். |
| அவி. | 3 | பதினெண் மெய்யும் அதுவே, மவ்வோடு ஆய்தமும் அளபு அரை. |

## நூற்பா - 15, 16

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 3 | எகர ஒகரம் மெய்யில் புள்ளி மேவும். |
| நேமி. | 3 | எஒ மெய் புள்ளிபெறும் என்ப. |
| நன். | 98 | ஆண்டு எய்தும் எகர ஒகரம் மெய் புள்ளி. |
| இ.வி. | 23 | எய்தும் எகர ஒகரம் மெய் புள்ளி. |
| தொ.வி. | 12 | மெய்க்கு இடு புள்ளி. |
| மு.வீ. | 40 | மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல். |
| | 41 | எகர ஒகரத்து இயற்கையும் அற்றே. |
| சுவாமி. | 8 | எகர ஒகரம் மெய் புள்ளியுமாம். |
| பேர. | 53 | எகர ஒகரம் மெய் எய்தும் புள்ளியே. |

## நூற்பா - 17, 18

| | | |
|---|---|---|
| நேமி. | 3 | ஓங்குயிர்கள் ஒற்றின்மேல் ஏறி உயிர்மெய்யாம். |
| நன். | 88 | புள்ளிவிட்டு அவ்வொடு முன் உரு ஆகியும்<br>ஏனை உயிரோடு உருவு திரிந்தும்<br>உயிரளவாய் அதன் வடிவொழித்து இருவயின்<br>பெயரொடும் ஒற்றுமுன்னாய் வரும் உயிர்மெய். |
| இ.வி. | 18 | புள்ளி இல்லா எல்லா மெய்யும்<br>அவ்வொடு முன் உரு ஆகியும், ஏனை |

உயிரொடு திரிந்தும், ஏறிய உயிரின்
அளவாய், அதன் உரு அடக்கி முந்து
உயிர்த்தல்
உயிர்மெய் என்மனார் உணர்ந்திசி னோரே.

தொ.வி. 11 உயிரே மெய்அணைந்து உயிர்மெய்
ஆகும்.

மு. வீ. 24 உயிரே மெய்ஊர்ந்து உயிர்மெய்
ஆகும்.

சுவாமி. 7 ஆயும் ஒற்றுஎல்லாமும் அப்பால்
முன் உருவாம்; உயிர்வேறு
ஆகில் மேல்கீழ் விலங்கு தீர்க்கம்
கொண்டு இரட்டாய்க்
காயம் வெவ்வேறு ஆகும்; உயிர்
அளவு அளவாம்; உயிர்பின்
காட்டும், உடல்முன் காட்டும்; இவை
உயிர்மெய்யே.

பேர. 40 உயிரே மெய்ஊர்ந்து உயிர்மெய்
ஆகும்.

109 ஒற்றுமுன் உயிர்பின் உறும் உயிர்மெய்யே.

## நூற்பா - 19, 20, 21

வீ.சோ. 1 (பதினெட்டு) மெய்.....இடையாம்
முறிந்தன யம்முதல் ஆறும்; ங ஞ ண
ந ம ன என்று
செறிந்தன மெல்லினம்; செப்பாத
வல்லினம்.

நேமி. 2 ஏன்றமெய் மூவாறும் எண்ணுங்கால் -
ஊன்றிய
வன்மையே மென்மை
இடைமையாம்.

நன். 68 வல்லினம் கசட தபற என ஆறே.

| | | |
|---|---|---|
| | 69 | மெல்லினம் ஙஞண நமன என ஆறே. |
| | 70 | இடையினம் யரல வழள என ஆறே. |
| இ.வி. | 7 | கசட தபற வல்லெழுத்து;<br>மெல்லெழுத்து<br>ஙஞண நமன; இடையெழுத்து |
| உணரின் | | |
| | | யரல வழள என்மனார் புலவர். |
| தொ.வி. | 9 | வலி கசட தபற, மெலி ஙஞண நமன,<br>இடை யரல வழள - என மூவினமே. |
| மு.வீ. | 14 | அவற்றுள், வல்லெழுத்து என்மனார்<br>கசட தபற. |
| | 16 | மெல்லெழுத்து என்மனார் ஙஞண |
| நமன. | | |
| | 18 | இடையெழுத்து என்மனார் யரல<br>வழள. |
| பேர. | 30 | வல்லெழுத்து ஆவன கசட தபற. |
| | 32 | மெல்லெழுத்து ஆவன ஙஞண நமன. |
| | 34 | இடையெழுத்து ஆவன யரல வழள. |

**நூற்பா - 22 - 30**

| | | |
|---|---|---|
| வீ.சோ. | 4 | . . . . . . . மெய்கள்<br>சாயா மயக்கம் தம் முன்னர்ப்<br>பிறவொடு தாமும் வந்து<br>வீயாத ஈரொற்று மூவொற்று<br>உடனிலை வேண்டுவரே. |
| நன். | 110 | கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்<br>மெய்மயக்கு; உடனிலை ரழ ஒழித்து<br>ஈரெட்டு<br>ஆகும்; இவ் இருபால் மயக்கும்<br>மொழியிடை<br>மேவும்; உயிர்மெய் மயக்கு<br>அளவின்றே. |

111 ஙம்முன் கவ்வாம்; வம்முன் யவ்வே.

112 ஞநமுன் தம்இனம் யகரமோடு
ஆகும்.

113 டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

114 ணனமுன் இனம் கச ஞபமயவ - வ்
வரும்.

115 மம்முன் பயவ மயங்கும் என்ப.

116 யரழ முன்னர் மொழிமுதல் மெய்
வரும்.

117 லள முன் கசப வய - ஒன்றும்மே.

118 ரழ அல்லன தம்முன் தாம்
உடன்நிலையும்.

120 லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்திர ஒற்றாம் செய்யு ளுள்ளே.

இ.வி. 31 கசதப ஒழிந்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக்கு; உடனிலை
ரழ-ஒழித்து ஈரெட்டு
ஆகும்; உயிர்மெய் மயக்கு
அளவின்று: அவை
தேருங்காலை மொழியிடைச்
சிவணும்.

32 ஙம்முன் கவ்வும், வம்முன் யவ்வும்,
ஞநமுன் இனமும் யகரமும், டறமுன்
கசபவும், ணனமுன் இனமும் கசஞப
மய்வ-வும், மம்முன் பயவ-வும்,
யரழமுன்
மொழிமுதல் மெய்யும், லள முன்
கசப
வய-வும் நின்று மயங்கும் என்ப.

33 யரழ ஒற்றின் முன் கசதப ஙஞநம
ஈரொற்றாம்; ரழ-த் தனிக்குறில்
அணையா.

34 லள மெய் திரிந்த னணவொடு மகாரம்
ஈரொற்று ஆகும் செய்யு ளுள்ளே.

மு.வீ. 65 வேற்றுநிலை கசதப அல்லன
மெய்பதி-
னான்கும் என்மனார் நற்றமிழ்
வல்லோர்.

67 ஙகாரை முன்னர்க் ககாரம் மயங்கும்.

68 வரும் சய ஞகாரமுன் மருவி என்ப.

69 கசப டகரமுன் கலந்து மயங்கும்.

70 ணனமுன் இனம் கச ஞபமயவ-வ்வரும்.

71 யகரமும் தகரமும் நகரமுன் ஆகும்.

72 மம்முன் பயவ மயங்கும் என்ப.

73 யரழ முன்னர் மொழிமுதல் மெய்வரும்.

74 லளமுனர்க் கசப வய வரும் என்ப.

75 வகாரை முன்னர் யகாரை மயங்கும்.

76 கசப றகாரைமுன் கலக்கும் என்ப.

77 ரகார ழகாரம் குற்றொற்று ஒற்றா.

78 ரழ அல்லன உடனிலை என மொழிப.

79 உயிர்மெய் மயக்கிற்கு ஓரளவு இன்றே.

80 லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்து ஈரொற்றாம் செய்யு ளுள்ளே.

சுவாமி. 9 . . . . . . . . . . . . . . கசதப நீத்து
ஈரெழுமெய் மயக்கமாம்; ரழ நீத்து
இந்திரண்டெட்டு உடனிலையாம்;
உயிர்மெய் அவ்வ மயக்காம்;

யரழ முன் கசதப ஙஞநம ஈரொற்று
இயல்பே.

10 இயலும் ஙம்முன் கவ்வும், வம்முன் யவ்வும்,
ஞநமுன்
இனமும் யவ்வும், யரழ-வின்முன்
முதல்மெய்யும் மம்முன்
பயவ-வும் ஆம், டற முன்னே கசப-வும்
ஆம், லளமுன்
பகசவய-ஆம், னணமுன்
இனமொடும் கபசஞ
மயவ-வும் ஆம், மெய்ம்மயக்கத்து
இடைநிலை ஆம்.

பேர. 90 ஙகர முன்னர்க் ககர உயிர்மெய் வரும்.

91 ஞகர முன்னர்க் சகர உயிர்மெய் வரும்.

92 டகர முன்னர்க் கசப உயிர்மெய் வரும்.

93 ணகர முன் கசட ஞபமய வ-வ்வாம்.

94 நகர முன்னம் தய உயிர்மெய் வரும்.

95 மம்முன் பயவ உயிர்மெய் வருமே.

96 யரமுன் மொழிமுதல் உயிர்மெய் வருமே.

97 லகர முன்னர்க் கசப வய வரும்.

99 ழகர முன்னர் மொழிமுதல் உயிர்மெய் ஆம்.

100 ளகர முன்னர்க் கசபவய வரும்.

101 றகர முன்னர்க் கசப உயிர்மெய் வரும்.

102 னம்முன் கறசஞ பமயவ-வ் வாம்.

104 ரழ அல்லன புணரின் தன்மெய்ம்
மயக்கமாம்.

### நூற்பா - 31

வீ.சோ. 3 அஇஉச் சுட்டாம்.

நன். 66 அ இ உம் முதல் தனிவரின் சுட்டே.

இ.வி. 6 அஇஉ-இவை மொழி முதல் வரின் சுட்டு.

மு.வீ. 26 அ இ உச் சுட்டாம் என மொழிப.

பேர. 16 அ இ உ-ம் மூன்றும் சுட்டின் சுட்டே.

### நூற்பா - 32

வீ.சோ. 4 ஏ யாஎ-ச் சொல்முன் வினா.

நன். 67 எ யா முதலும், ஆ ஓ ஈற்றும்,
ஏ இருவழியும், வினா ஆகும்மே.

இ.வி. 6 ....................எயா
முதலும் ஆ ஓ இறுதியும், ஏ இரு
வழியும், வினா என வழங்கும் என்ப.

மு.வீ. 27 எ யா வினா என்று இசைக்கப் படுமே.

பேர. 20 ஆ ஏ ஓ ஈற்றும் ஏ முதலும் வினா.

21 யா என் வினாவே.......
விகுதி பெறுங்கால் ஐம்பாலினும்
வினாவாம்.

### நூற்பா - 33

நன். 101 ஆவியும் ஒற்றும் அளவிறந்து
இசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற்று
ஆதியின்.

| | | |
|---|---|---|
| இ.வி. | 25 | ஆவியும்............ஆதியின். |
| மு.வீ. | 105 | விற்கை புலம்பு இசை விளியினும் மிகுமே. |
| சுவாமி. | 8 | மற்ற இசை விளி<br>பண்டமாற்று............<br>நாவலும் புலம்பும்<br>குறிப்பிசையும் வரைவில<br>வந்திடுமே. |
| பேர. | 125 | விளி இசை புலம்பல் விற்கையில் மிகுமே. |



# மொழி மரபு

## இளம்பூரணம்

### 34. ஒருமொழிக் குற்றியலிகரம்

**குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்**
**யாஎன் சினைமிசை[1] உரையசைக் கிளவிக்கு**
**ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே**

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், மொழிகளுக்கு எழுத்தான் வரும் மரபு உணர்த்தினமையின் மொழிமரபு எனப்பட்டது. இதனுள் கூறுகின்றது, தனிநின்ற எழுத்திற்கு அன்றி மொழியிடை எழுத்திற்கு என உணர்க.

இதனுள் இத்தலைச் சூத்திரம் என்நுதலிற்றோ எனின், சார்பின் தோற்றத்து எழுத்துக்களில் குற்றியலிகரத்துள் ஒருமொழிக் குற்றியலிகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும் ஆமாறு உணர்... ...ற்று.

(இ-ள்.) ஒருமொழிக் குற்றியலிகரம் உரையசைச் சொல்லாகிய மியா என் முதற்குச் சினையாகிய, அச்சொல்தன்னிடத்து வருகின்ற யா என் சினைமிசை மகர ஒற்றினை ஊர்ந்து நிற்றலை வேண்டும் ஆசிரியன் எ-று.

(உ-ம்.) கேண்மியா, சென்மியா-எனவரும். மியா என்னும் சொல் இடம்: மகரம் பற்றுக்கோடு; யா என் சினையும், மிசை மகரம் போலக் குறுகுதற்கு ஒரு சார்பு.[2] (1)

#### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.34.** 1. தொல்காப்பியனார் சொல்லின் உறுப்பினைச் 'சினை' என்று வழங்கும் இடம் சில வருமாறு : இச்சூத்திரத்தில் 'மியா' என்னும் சொல்லின்கண் உள்ள 'யா' என்னும் நெட்டெழுத்தினை 'யா என் சினைமிசை' என்றும், 'சுட்டுச்சினை நீடிய' (எழுத். 428) என்னும் சூத்திரத்தில் அங்கு

முதலிய சொல்லின்கண் உள்ள அகரம் முதலிய சுட்டிடைச்சொற்களைச் 'சினை' என்றும், 'நூறென் கிளவி' (472) என்னும் சூத்திரத்தில் குற்றியலுகரத்திற்குப் பற்றுக் கோடாகிய வல்லினப் புள்ளியைச் 'சினை' என்றும், 'குறியதன் இறுதிச் சினைகெட' (235) என்னும் சூத்திரத்தில் ஆகார நெட்டெழுத்தின் ஒருமாத்திரைக் கூற்றினைச் 'சினை' என்றும் சுட்டியிருத்தல் காண்க.

2. இகரம் குறுகுதற்கு மகரம் பற்றுக்கோடாயினாற் போல, 'யா' வும் சார்பாக நின்று துணைசெய்யும் என்றவாறு.

**நச்சினார்க்கினியம்**

## 34. ஒருமொழிக் குற்றியலிகரம்

**குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்**
**யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு**
**ஆவயின் வரூஉம் அகரம் ஊர்ந்தே**

என்பது சூத்திரம்.

மேல் எழுத்து உணர்த்திய பின்னர், அவை தம்முள் தொடருமாறும் உணர்த்தி, அவ்வெழுத்தான் ஆம் மொழியது மரபு உணர்த்துகின்றமையின், இவ்வோத்து மொழிமரபு எனக் காரணப் பெயர்த்து ஆயிற்று. இச்சூத்திரம் முன்னர்ச் சார்ந்துவரும் என்ற மூன்றனுள் ஒருமொழிக் குற்றிய லிகரத்திற்கு இடனும் பற்றுக்கோடும் கூறுகின்றது.

இ-ள் : உரையசைக் கிளவிக்கு வரூஉம் - தான் கூறும் பொருளைக் கோடற்கு ஒருவனை எதிர்முகம் ஆக்கும் சொல்லிற்குப் (அ) பொருந்த வரும்; ஆவயின் - அம்மியா என்னும் இடைச்சொல்லைச் சொல்லுமிடத்து; யா என் சினைமிசை மகரம் ஊர்ந்து - யா என்னும் உறுப்பின் மேலதாய் முதலாய் நின்ற மகர ஒற்றினை ஏறி; குற்றியலிகரம் நிற்றல் வேண்டும் - குற்றியலிகரம் நிற்றலை விரும்பும் ஆசிரியன் எ-று.

உ-ம் : கேண்மியா, சென்மியா - என வரும். (1) கேள் என்றது உரையசைக்கிளவி; அதனைச் சார்ந்து தனக்கு இயல் பின்றி நின்றது மியா என்னும் இடைச்சொல். இவ்விடைச் சொல் முதலும், அதனின் பிரியும் 'யா' அதற்கு உறுப்பும் ஆம் என்று கருதி 'யா என் சினைமிசை' என்றார். மியா : இடன், மகரம் பற்றுக்கோடு, 'யா' வும் இகரம் அரைமாத்திரை ஆதற்குச் சார்பு. இவ்விடைச்சொல் தனித்து நிற்றல் ஆற்றாமையின் 'கேள்' என்பதனொடு சார்ந்து ஒருசொல்லாயே நின்றுழி, இடைநின்ற இகரம் ஒருமொழியிடத்துக் குற்றியலிகரமாய் வருதலானும், ஆண்டு உணர்த்தற்குச் சிறப்பு இன்மையானும் ஈண்டுப் போத்தந்து கூறினார். (ஆ) 'ஊர்ந்து' எனவே, குற்றியலிகரமும் உயிர் என்பது பெற்றாம், உயிர்க்கு அல்லது ஏறுதல் இன்மையின். *(1)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 34***

*1.* உரையசைக்கிளவி என்பதற்குத் தான் கூறும் பொருளைக்கோடற்கு ஒருவனை எதிர்முகம் ஆக்கும் சொல் என்றும், அது 'கேள்' என்றும் நச்சினார்க்கினியர் கூறுகின்றார். அசைத்தல் - எதிர்முகமாக்கல் எனின், சென்மியா என்புழி உரையசைக்கிளவியாகச் 'செல்' வருமாறு இல்லை. ஆதலின் உரையாசிரியர் உரையசைக்கிளவி என்பதற்கு உரையசைச் சொல்லாகிய மியா என்று பொருள் கொண்டமையே பொருந்தும். நன்னூலாரும் இவ்வாறே கொள்வர். 'ஆங்க உரையசை' என்னும் சொல்லதிகாரச் சூத்திரத்தே உரை என்பதற்குக் கட்டுரை என்றே நச்சினார்க்கினியர் பொருள் கொள்கின்றார். கட்டுரையாவது வாக்கியம்.

(அ) தான் கூறும் பொருளைக் கோடற்கு ஒருவனை எதிர்முகம் ஆக்கும் சொல்லாவது ஏவலொருமைவினை என்க. அவ்வாறு ஏவலொருமையாக நிகழ்பவை கேள், செல் என்பன. இவ்வாறு கோடலே நச்சினார்க்கினியர் கருத்து.

(ஆ) 'யகரம் வருவழி' என்னும் குற்றியலுகரப் புணரியல் சூத்திரம் (410) புணர்மொழிக்கண் தோன்றும் குற்றியலிகரத்தை விதிக்கிறது. இவ்வியலுள் இருமொழிக் குற்றியலிகரம் உணர்த்துதற்கு வாய்ப்பு இல்லை. புணர்மொழியிடத்தே, நிலைமொழியீற்றுக் குற்றுகரம் தோன்றாதேயிருக்க ஆண்டுத்தோன்றும் இகரம் குற்றியலிகரமாய் அரைமாத்திரை ஒலிக்க, வல்லினமெய் பற்றுக்கோடும் யகரம் வருவழி இடனும் ஆதலின், இவ்வியலே புணர்மொழிக் குற்றிகரத்தை விதிக்க வாய்ப்பாயிற்று. ஒருமொழிக்கண் நிகழும் குற்றிகரம் தனிமொழியிடைப்படும் எழுத்துப்பற்றிக் கூறும் மொழிமரபிடைக் கூறப்படுதலே ஏற்புடைத்தாம். அதற்கு இடனும் பற்றுக்கோடும் ஒருமொழிக்கண்ண ஆதல் காண்க. ஆகலின் ஒரு மொழிக் குற்றியலிகரத்தை ஆசிரியர் குற்றியலுகரப் புணரியலில் விதியாது, இவ்விரண்டாம் இயற்கண்ணேயே காலமுன்னாக மிகவும் இடைப்படக் கூறினார் என்பது.

## சிவஞானமுனிவர் உரைக்குறிப்பு

***சூ.34-39 முதலியன*** - குற்றியலிகரம் முதலிய வற்றிற்குச் சார்பு 'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்' என்றல் தொடக்கத்து வரும் சூத்திரங்களான் உணர்க. இவை மொழிக்கண்படுத்துக்காட்ட வேண்டுதலின், ஈண்டு வையாது மொழிமரபில் வைத்தார். அற்றேல் மயக்கச் சூத்திரங்களும் ஆண்டு வைக்க எனின், அற்றன்று. 'பன்னீ ருயிரும் மொழிமுதல் ஆகும்' 'உயிர்ஔ எஞ்சிய இறுதி ஆகும்' என்பன போல, இடையே வரும் என்னாது' இவ்வெழுத்திற்கு இவ்வெழுத்து நட்பு அல்லது பகை' என்னும் துணையானே கருவிசெய்தலின், இவை ஈண்டே வைக்கப்பட்டன. இஃது அறியாதார் தமக்கு வேண்டியவாறே உரைப்ப. ஆசிரியர் நட்பெழுத்துப் பகையெழுத்து ஆமாறு ஈண்டுக் கூறி , இனம் ஆமாறு பிறப்பியலான் கூறுவர். அற்றேல், பிறப்பியலை நூன்மரபிற் கூறுக எனின், பிறவி கூறி இனம் அடைக்க

வேண்டுதலானும், விரிவுடைமையானும், வேறோர் ஓத்தாகக் கூறினார் என்பது.

அற்றேல், பிறப்பியலை நூன்மரபைச் சார வைக்க எனின், அற்றன்று; மொழிமரபில் கூறும் விதியெல்லாம் நூன்மரபின் ஒழிபு ஆதலான், அஃது அதன்பின்னர் வைத்துப் பிறப்பியல் அவற்றின்பின் வைக்கப்பட்டது.

மொழிமரபில் கூறும் விதிகள் நூன்மரபின் ஒழிபு ஆமாறு: 'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்' என்பது முதல் 'உருவினும் இசையினும்' என்னும் சூத்திரம்காறும் 'அவைதாம், குற்றிய லிகரம் குற்றிய லுகரம்' என்பதன் ஒழிபு.'குன்றிசை', 'ஐ ஔ' இரண்டும் 'நீட்டம் வேண்டின்' என்பதன் ஒழிபு. 'நெட்டெழுத்து ஏழே' என்பது 'அவற்றுள், அ இ உ எ' 'ஆ ஈ ஊ ஏ' என்பவற்றின் ஒழிபு. மொழியாக்கம் அதிகாரப்பட்டமையின் 'ஓரெழுத்தொரு மொழி' என்பதும் உடன்கூறினார். 'மெய்யின் இயக்கம்' என்பது 'னகார இறுவாய்' என்பதன் ஒழிபு. 'தம்மியல் கிளப்பின்' என்பது முதல் 'மகரத் தொடர்மொழி' என்னும் சூத்திரம்காறும் மயக்கச்சூத்திர ஒழிபு- எனக்காண்க. இதனை விரிப்பின் பெருகும்; உய்த்துணர்ந்து அமைத்துக்கொள்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

ஆசிரியர் நூன்மரபின்கண் குற்றியலிகரம் முதலிய மூன்றனையும் 'சார்ந்து 'வரல் மரபின' என்றார். அவற்றின் இலக்கணத்தையும் அவை வரும் இடத்தையும் கூறாது, எழுத்துக்களின் பிறப்பிடம் பற்றிக் கூறுதல் பொருந்தாது. அவை மொழியின்கண்ணே வருமன்றித் தனித்து வாரா. ஆதலின் மொழிகளின் வகையை உணர்த்தல் இன்றியமையாததாம் ஆகவே,அம்மொழிகள் எழுத்துக்களான் ஆக்கப்பட்டமையின், மொழிமரபின்கண் மொழிகளின் தொடக்கத்திலும் இறுதியிலும் வரும் எழுத்துக்களைப் பற்றியும் கூறுகிறார். மரபுபற்றிச்சொற்கள்

வழங்கப்படுகின்றமையின் அவற்றைப் பற்றிக் கூறும் இயலுக்கு மொழிமரபு எனப் பெயரிட்டார் ஆசிரியர்.

**சூ.34.** **குற்றிய லிகரம்.....மகரம் ஊர்ந்தே.**

*(இ-ள்.)* மியா என்ற உரையசைக்கிளவியினிடத்து வருகின்ற மகரத்தை ஊர்ந்தும் யா - என்ற உறுப்பின் முன்னரும் குற்றியலிகரம் இருத்தல் வேண்டும்.

*(உ-ம்.)* கேண்மியா.

உரையசைக்கிளவி *(205)* உரைப்பொருட்கிளவி *(211)* அசைநிலைக்கிளவி (சொல்.267) அசைச்சொல் (சொல்.274) என்ற சூத்திரத் தொடர்களை நோக்கின், 'மியா' என்றது உசையசைக்கிளவியே அன்றிக் 'கேள்' என்பது உரையசைக் கிளவி ஆகாது என்று நச்சினார்க்கினியரை இவர் மறுக்கிறார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.34.** **குற்றிய லிகரம்....மகரம் ஊர்ந்தே.**

'உரையசைக் கிளவி' என்றது, மியா என்னும் சொல்லினை. உரையாசிரியரும் இவ்வாறே கூறியுள்ளார். நச்சினார்க்கினியர் ''கேள் என்றது உரையசைக் கிளவி என்றாரால் எனின், ஆசிரியர் முன்னர் 'உரையசை மியாவும்' (224) என்றும், 'மியா.....முன்னிலை அசைச்சொல்' (சொல்.274 சே.) என்றும் கூறுகின்றார் ஆதலின் அது பொருந்தாது என்க. நன்னூலாரும் 'அசைச்சொல் மியாவின்' (எழுத்.38) என்றே கூறியுள்ளார்.

இனி, கேண்மியா என்பதன் உண்மைநிலையை ஆராயுமிடத்து, 'கேண்ம்' என்னும் சொல்லொடு யா என்னும் அசைச்சொல் சேர, (யாவின் காரணத்தால்) இகரம் தோன்றப்பெற்றுக் கேண்மியா என்றாகியுள்ளது எனத் தெரிகிறது.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

மொழிமரபு என்னும் தொகைமொழி, மொழியின் மரபுகளைக் கூறும் இயல் என விரியும் அன்மொழித்தொகை. நூன்மரபில் கூறிய எழுத்துக்கள் மொழியாகும் முறைமையும், அவை மொழிக்கண் நிற்கும் நிலையும், மொழிப்பொருள் மாறாமல் எழுத்து மாறிவரும் போலிமரபும் பற்றிக் கூறுதலின், இவ்வியல் மொழிமரபு எனப்பட்டது.

**சூ.34.** குற்றிய லிகரம்....மகரம் ஊர்ந்தே.

'நிற்றல் வேண்டும்' என்பது ஒருசொல் நீர்மைத்தாய் வந்த வழிநூல் வாய்பாடு. 'மியா' என வரும். மகரம் பற்றுக்கோடு; யகரம் சார்பு.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

சொல்நிலையில் எழுத்துக்கள் படும் இலக்கணம் கூறுதலின் இவ்வியல் மொழிமரபு எனப்பட்டது. இஃது எழுத்ததிகாரம் ஆதலின் மொழிமரபு என்பதற்குச் சொல்லில் வரும் எழுத்துக்களின் மரபுநிலை எனப் பொருள்கொள்க.

**சூ.31.** 'குற்றியலிகரம் நிற்றல் வேண்டும்....'

சொற்கு உறுப்பாக வரும் ஒலிகளைச் சினை என்பது ஒரு குறியீடு. 'குறியதன் இறுதிச் சினை' என உயிர்மயங்கியலிலும், 'ஈறுசினை ஒழிய' என ஈரிடத்துக் குற்றியலுகரப் புணரியலிலும் இக்குறியாட்சி வரும்.

**சூ.32.** 'புணரியல் நிலையிடைக்.....'

'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே' என்ற உம்மைக்குக் குறுகாமலும் வரும் என்பது பொருளன்று; ஒருமொழியிலே அன்றிப் புணர்மொழியிலும் குறுகும் என்ற எச்சவும்மையாகும். 'இடனுமா ருண்டே' என வரும் நூற்பா நடைக்கும் இதுவே பொருள்.

*சூ.34.* 'இடைப்படின் குறுகும்.....'

இது மொழிமரபு ஆதலின் ஒருமொழியளவுக்கே இலக்கணம் கூறப்படும். புணர்மொழிக்கு, உரிய இயல்களில் கூறுவதே கடப்பாடு. அஃது ஒன்பதாம் இயலான குற்றியலுகரப் புணரியல் ஆகும். 'அல்லது கிளப்பினும்' என்னும் நூற்பா அது.

'இடனுமா ருண்டே' என்னும் உம்மை அருகி வருவதைக் குறிக்கவில்லை. குற்றியலுகரம் ஒருமொழியில் இருப்பது போலப் புணர்மொழியிலும் உண்டு என்பதே பொருள். இஃது எச்சவும்மை.

**இளம்பூரணம்**

## *35. புணர்மொழிக் குற்றியலிகரம்*

**புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே**
**உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.**

*(இச்... ...எனின்)* குற்றியலிகரம் புணர்மொழியுள்ளும் வரும் என்பது உணர்......ற்று.

*(இ-ள்.)* இருமொழி தம்மில் புணர்தல் இயன்ற நிலைமைக்கண்ணும் அவ்விகரம் குறுகுதல் உரித்து. ஆண்டை இடத்தினையும் பற்றுக்கோட்டினையும் கூறப்புகின், அது வேண்டுவது இல்லை; முன்னர்க் குற்றியலுகரப் புணரியலுள் அவ்விடனும் பற்றுக்கோடும் தோன்றும் எ-று.

'புணரியல் நிலையிடையும்' என மொழிமாற்றி உரைக்க. முன்னர்த் தோன்றுமாறு, 'யகரம் வருவழி இகரம் குறுகும், உகரக் கிளவி துவரத்தோன்றாது' *(411)* என்பதனுள் அறிக. யகரம் இடம்; அவ்வுகரம் சார்ந்த வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

*(உ-ம்.)* நாகியாது, வரகியாது, தெள்கியாது, எஃகியாது, கொக்கியாது, குரங்கியாது-என வரும். *(2)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.35.*** பேராசிரியர் இந்நூற்பாவினை 'மொழிவாம் என்றல்' என்னும் உத்திப்பாற்படுப்பர். அவர் உரை வருமாறு: ''மொழிவாம் என்றல் - ஒருபயன் நோக்கி 'முற்கூறுதும்' என்றல். அஃது 'உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்' என வரும். இங்ஙனம் கூறியதனான் பயன், குற்றுகர ஈற்றுக்கண் அன்றிப் புணர்மொழிக் குற்றிகரம் இன்று என்பதும், இனிப் புணர்மொழிக் குற்றிகரம் பெருவரவிற்று என்பதும் அறிவித்தலாயிற்று.'' (பொ.665 உரை)

**நச்சினார்க்கினியம்**

## *35. புணர்மொழிக் குற்றியலிகரம்*

**புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே**
**உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.**

இது குற்றியலிகரம் புணர்மொழி அகத்தும் வரும் என்கின்றது.

இ - ள்: புணரியல் . . . உரித்து - அக்குற்றியலிகரம் ஒருமொழிக்கண் அன்றிப் புணரியலுள் இருமொழி தம்மில் புணர்தல் இயன்ற நிலைக்கண்ணும் குறுகுதல் உரித்து (புணரியல் நிலையிடையும் குறுகல் உரித்து); உணரக் . . . . தோன்றும் - அதற்கு இடனும் பற்றுக்கோடும் உணரக் கூறத் தொடங்கின், அவை குற்றியலுகரப்புணரியலுள்ளே கூறப்படும் எ-று.

'குறுகலும்' என்னுமிடத்து உம்மையை 'நிலையிடையும்' என மாறிக் கூட்டுக. 'யகரம் வரும்வழி' (410) என்னும் சூத்திரத்து, யகரம் : இடன்; உகரம் சார்ந்த வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

உ-ம் : நாகியாது வரகியாது தெள்கியாது எஃகியாது கொக்கியாது குரங்கியாது - என வரும். இது *மொழிவாம்* (அ) என்னும் உத்தி. (2)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 35** (அ) இவ்வுத்தியை இளம்பூரண உரைக் குறிப்பில் விளக்கம் காண்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.35.** புணரியல் நிலையிடைக்.....முன்னர்த் தோன்றும்.

(இ-ள்.) அக்குற்றியலிகரம் புணர்ச்சி நிகழுமிடத்துக் குறுகலும் உரித்து; அஃதாவது கால்மாத்திரை பெறும். அதனை அறியுமாறு கூறப்புகின், குற்றியலுகரப் புணரியலின்கண் தோன்றும். உம்மையான், குறுகா திருத்தலும் உரித்து.

(உ-ம்.) நாகு+யாது= நாகியாது.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.35.** புணரியல் நிலையிடைக் ....முன்னர்த் தோன்றும்.

புணர்மொழிக்கண் வரும் குற்றியலிகரம் கால்மாத்திரை அளவினது என்பது நச்சினார்க்கினியர் கருத்து என்று 'எழுத்ததிகாரக் குறிப்பு' க் கூறுகின்றது. 'யகரம் வரும்வழி' (410) என்னும் சூத்திரஉரையில் இது 'குற்றியலிகரம் புணர்மொழியகத்து வருமாறு கூறுகின்றது' என்ற கருத்துக் கூறி, 'இகரம் குறுகும்' என்பதற்கு 'ஆண்டு ஓர் இகரம் வந்து அரைமாத்திரை பெற்றுநிற்கும்' என்றே நச்சினார்க்கினியர் உரை கூறினார் ஆகலான், புணர்மொழி யகத்துக் குற்றியலிகரம் அரைமாத்திரை பெறும் என்னும் கொள்கையரே அவர் என்பது வெளிப்படை.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.35.** புணரியல் நிலையிடைக்.....முன்னர்த் தோன்றும்.

(இ-ள்.) மேற்கூறிய குற்றியலிகரம் சொற்கள் புணர்ந்தியலும் நிலைமையின்கண் தனக்குரிய அரைமாத்திரையினும் குறுகி ஒலித்தற்கும் உரியதாகும். அங்ஙனம் அது குறுகி ஒலிக்கும் இடத்தினை உணரக் கூறின் அவ்விலக்கணம் குற்றியலுகரப் புணரியலுள் விளக்கம் ஆகும்.

எடுத்துக்காட்டு: (ஆடு+யாது=) ஆடியாது; (கவடு+யாது=) கவடியாது; (தொண்டு+யாது=) தொண்டியாது என வரும். உம்மையான், தெள்கியாது, நாகியாது எனக் குறுகாதும் வரும்.

முன்னவை குறுகும் என்பதற்கும் பின்னவை குறுகா என்பதற்கும் காரணம், ஆடி (திங்கள்) கவடி (வெள்வரகு) தொண்டி (ஊர்) என்னும் பெயர்கள் யாது என்னும் சொல்லொடு புணருங்கால், ஆடி+யாது=ஆடியாது - கவடி+யாது = கவடியாது - தொண்டி+யாது= தொண்டியாது என வரும். அதனான், ஆடு யாது (ஆடியாது) - ஆடி யாது (ஆடியாது) என வரும் இரண்டற்கும் வேற்றுமை தெரியக் குற்றியலுகரத்தின் திரிபாகிய (ஆடு - ஆடி) ஆடி என்பதன் மாத்திரையை அரைமாத்திரையினும் குறுக்கி ஒலிக்க வேண்டும் ஆயிற்று என்க. திங்கட்பெயராய் வரும் ஆடி என்னும் இயல்புஈற்றினை ஒருமாத்திரையளவிற்கு இசைத்தல் வேண்டும் என்க. முன்னதைக் குறுக்காமல் ஒலிப்பின் நிலைமொழி ஆடு என்பதா, ஆடி என்பதா, என்னும் ஐயம் நிகழும் என்க.

இனி, தெள்கியாது நாகியாது என்பவை குறுகாமைக்குக் காரணம், தெள்கி - நாகி - என்னும் இயற்பெயர்கள் இல்லாமையான், நிலைமொழி தெள்கு நாகு என ஐயமின்றி உணரப்படும் ஆதலான் அரைமாத்திரையின் குறுகாது ஒலிக்கும். இக்குறுக்கத்தை உணர்த்தும் சூத்திரம் குற்றியலுகரப்புணரியலுள் வரும் (5). இங்ஙனம் புணர்மொழியிடை வரும் குற்றியலிகரம் இயல்புஈறு அன்றிக்

குற்றியலுகரத்தின் திரிபாக வருதலின் ஈண்டுக் கூறாமல் குற்றியலுகரப் புணரியலுள் கூறினார் என்க.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.35.** 'குறியதன் முன்னர்....'

'உயிரொடு புணர்ந்த வல்லாறு' என்பதனால், ஆய்தத்திற்குப் பின்பு எந்த ஒற்றெழுத்தும் வாராது என்பதும், வல்லெழுத்து வரினும் அவை உயிரொடு சேர்ந்த உயிர்மெய்யாகவே வரும் என்பதும் பெறப்படும். 'உயிரொடு' எனப் பொதுப்படக் கூறியமையால், வெ.கா (வெஃகா), அ.தை (அஃதை), ப.றி (பஃறி) என எந்த உயிரும் தொடரலாம் என்பதும் பெறப்படும்.

இன்னொரு விளக்கம்: புள்ளிக்குறிகள் நிற்கும் இடங்களில் வேறுபாடுண்டு. 'ஆய்தப்புள்ளி' என்ற எழுவாய்க்கு 'மிசைத்து' என்ற ஒன்றன்பால் முற்றே இருத்தலின் புள்ளி ஒன்றே என்பதும், குறியதன் முன்னரும் வல்லாறன் மிசைத்தும் என்பதனால் சொல்லின் நடுவே அடுத்து நிற்கும் என்பதும் போதரும். காண்க: எ.கு, க.சு, அ.து என வரும்.

## இளம்பூரணம்

### 36. ஒருமொழிக் குற்றியலுகரம்

**நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்**
**குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே.**

(இச்.....எனின்) ஒருமொழிக் குற்றியலுகரத்திற்கு இடனும் பற்றுக்கோடும் உணர்.......ற்று.

(இ-ள்.) நெட்டெழுத்தினது பின்னரும் தொடர் மொழியினது இறுதியினும் குற்றியலுகரம் வல்லெழுத்து ஆறனையும் ஊர்ந்து நிற்றல் வேண்டும் ஆசிரியன் எ-று.

**தந்து புணர்ந்து உரைத்தல்** என்னும் தந்திர உத்தியான் முன்நின்ற *'நிற்றல் வேண்டும்' (1)* என்பது ஈண்டும் புணர்த்தப்பட்டது.[1]

*(உ-ம்.)* நாகு, வரகு-என வரும். நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈறும் இடம்; வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

இவ்வாறு இடமும் பற்றுக்கோடும் கூறவே, மொழிக்கு ஈறாதலும் கூறியவாறு ஆயிற்று[2] *(3)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.36.*** *1.* தந்து புணர்ந்து உரைத்தல் - உள்பொருள் அல்லதனை உளபோலத் தந்து கூட உணர்த்தல் என்பது பேராசிரியர் வழங்கும் பொருள். 'அதிகார முறைமை' எனப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட இச்சூத்திரப் பொருண்மையைத் 'தந்து புணர்ந்து உரைத்தல்' என்னும் உத்திப்பாற்படுத்தினார் இளம்பூரணர். முன்னர்ச் சூத்திரத்துத் தொடரினைக் கொணர்ந்து கூட்டிப் பின்னைச் சூத்திரத்துப் பொருளை விளங்க உரைத்தல் என்பது இவர் கண்ட பொருள்.

2. இவ்வாறு குற்றியலுகரத்திற்கு இடனும் பற்றுக் கோடும் கூறி அது மொழிக்கு ஈறாதலேயுடைத்து என்பதனைப் புலப்படுத்துதல் 'உய்த்துக் கொண்டுணர்தல்' என்னும் உத்தியின்பாற்படுவதாகப் பேராசிரியர் குறிப்பிட்டார். ''உய்த்துக் கொண்டுணர்தல் - ஒருவழி ஒருபொருள் சொல்லியக்கால், அதன்கண்ணே மற்றொரு பொருளினையும் கொணர்ந்துகொண்டு அறியுமாறு தோன்றச் செய்தல். அது, 'நெட்டெழுத்து இம்பரும்...வல்லாறூர்ந்தே' என இடனும் பற்றுக்கோடும் கூறி, அதனான் ஈறு ஆக்கம் கோடல் போல்வது.'' (பொ.665 உரை)

**நச்சினார்க்கினியம்**

## *36. ஒருமொழிக் குற்றியலுகரம்*

**நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்**
**குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே.**

*இஃது ஒருமொழிக் குற்றியலுகரத்திற்கு இடனும் பற்றுக்கோடும் உணர்த்துகின்றது.*

*இ-ள் : குற்றியல் . . . ஊர்ந்து - குற்றியலுகரம் வல்லெழுத்துக்கள் ஆறனையும் ஊர்ந்து; நெட்டெழுத்து . . . ஈற்றும் - நெட்டெழுத்தின் பின்னும் ஐவகைத் தொடர்மொழியின் இறுதியினும் நிற்றல்வேண்டும் ஆசிரியன் எ-று.*

*நெட்டெழுத்தினது பின், தொடர்மொழியினது ஈறு - என (1) நிலத்தது அகலம்போல ஒன்றியல் கிழமைப்பட்டு நின்றது, அம்மொழியின் தீர்ந்து குற்றியலுகரம் நில்லாமையின். வல்லாறு : பண்புத்தொகை. முற்றும்மை தொக்கு நின்றது. அதிகாரமுறைமை என்னும் உத்தியான் 'நிற்றல் வேண்டும்' (34) என்பது வருவிக்க.*

*உ-ம் : நாகு வரகு தெள்கு எஃகு கொக்கு குரங்கு - என வரும். இவ்வாறும் இடம்; வல்லெழுத்துப் பற்றுக்கோடு. எனவே மொழிக்கு ஈறாகலும் பெற்றாம். (அ) பெருமுரசு, திருமுரசு - என்பன ஒருமொழிக்கண் வந்த குற்றுகரம். (ஆ) பரசு, இங்கு, ஏது - என்னும் முற்றுகரங்கள் வடமொழிச்சிதைவு. தருக்கு, அணுக்கு - என்பன வினைக்கண் வந்த முற்றுகரம். குற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிர் ஏறி முடிய அரைமாத்திரையாய் நிற்றலும், முற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிர் ஏறி முடியாமையும் தம்முள் வேற்றுமை. (3)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 36*

1. நிலத்தது அகலம் என்புழி, அவ்வகலம் ஆகிய கிழமைப்பொருள் நிலத்தினின்று பிரிக்கப்படாது ஒன்றிநின்ற தன்மை போல, நெட்டெழுத்தினது பின்னும் தொடர்மொழியது ஈற்றும் நின்ற குற்றுகரம் அந்நெட்டெழுத்தும் தொடர்மொழியுமாகிய அவற்றினின்று பிரிக்கப்படாது ஒன்றியல் தன்மைப்பட நின்றனவாம்.

2. அதிகாரமுறைமையாவது அதிகாரப்பட்டு வரும் முறைமையால் கொள்வது. ஈண்டுச் சார்பெழுத்தின் இலக்கணமே அதிகாரப்பட்டு வந்தமையின், சார்பெழுத்தாகிய குற்றியலிகரத்திற்குக் கூறிய 'நிற்றல் வேண்டும்' என்னும் தொடரை இச்சூத்திரத்தின்கண்ணும் வருவித்துக் கொண்டமை இவ்வுத்தியாம்.

(அ) பெருமுரசு திருமுரசு - என்பன இருமொழிக்கண் வந்த குற்றுகரம் என்பது மகாலிங்கையர் பதிப்பிற்கண்டது.

(ஆ) பரசு - மழுப்படை; இங்கு - பெருங்காயம்; ஏது - காரணம். இவை இரண்டனுருபு ஏற்கையில் உடம்படுமெய் பெற்று பரசுவை - இங்குவை - ஏதுவை - என நிகழ்தலின் அவற்றின் ஈறு குற்றுகரம் அன்று; முற்றுகரமாம். குற்றுகரமாயின் உயிரேறிப் பரசை - இங்கை - ஏதை - என முடியற்பால.

சாத்திரியார் உரைக்குறிப்பு

*சூ.36.* நெட்டெழுத் திம்பரும்...வல்லாறு ஊர்ந்தே.

(இ-ள்.) குற்றியலுகரம் வல்லெழுத்து ஆறினையும் ஊர்ந்து நெட்டெழுத்தின் பின்னரும் தொடர்மொழியின் ஈற்றின்கண்ணும் நிற்றலை வேண்டும்.

(உ-ம்.) நாகு, வரகு.......

ஆசிரியரது கொள்கையில், பரசு- இங்கு - ஏது - முதலிய (வடமொழிச் சிதைவுச்) சொற்கள் செய்யுள் ஈட்டச் சொற்களில் ஒன்றாகிய வடசொல் ஆதலின் (சொல்.401, 402) அவையும் தமிழிலக்கணத்து அடங்கின ஆகலின், அவற்றின் ஈற்றிலுள்ள உகரம் முற்றுகரம் என்பது எவ்வாறு பொருந்தும் என, இவர் நச்சினார்க்கினியரை மறுக்கிறார்.

**இளம்பூரணம்**

***37. புணர்மொழிக் குற்றியலுகரம்***

**இடைப்படின் குறுகும் இடனுமார் உண்டே**
**கடப்பாடு அறிந்த புணரிய லான.**

*(இச்.......எனின்)* குற்றியலுகரம் புணர்மொழியுள்ளும் வரும் என்பது உணர்......ற்று.

*(இ-ள்.)* அவ்வுகரம் புணர்மொழி இடைப்படினும் குறுகும் இடம் உண்டு. அதன் இடமும் பற்றுக்கோடும் யாண்டோ பெறுவ எனின், அதன் புணர்ச்சி- முறைமை அறியும் குற்றியலுகரப் புணரியலின்கண்ணே எ-று.

'இடைப்படினும் குறுகும்' என மொழிமாற்றி உரைக்க. அக் குற்றியலுகரப் புணரியலுள் 'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித், தொல்லை இயற்கை நிலையிலும் உரித்தே' *(410)* என்பதனுள், வல்லொற்றுத் தொடர்மொழியும் வல்லெழுத்து வருவழியும் இடம்; அவ்வல்லொற்றுத் தொடர்மொழி ஈற்று வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

*(உ-ம்.)* செக்குக்கணை, சுக்குக்கொடு-என வரும். 'இடம்' என்றதனால் இக்குறுக்கம் சிறுபான்மை என்பது உணர்க. *(40)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.37.*** இந்நூற்பாவும் 'புணரியல் நிலையிடை' என்னும் நூற்பாப் போல 'மொழிவாம் என்றல்' என்ற உத்தியின் பாற்படுவது. *(பொ.665 பேரா.)*

**நச்சினார்க்கினியம்**

## 37. புணர்மொழிக் குற்றியலுகரம்

**இடைப்படின் குறுகும் இடனுமார் உண்டே**
**கடப்பாடு அறிந்த புணரிய லான.**

இது குற்றியலுகரம் புணர்மொழிக்கண் தன் அரைமாத்திரையின் குறுகியும் வரும் என்கின்றது.

இ-ள் : இடைப்படின் . . . . உண்டு - அவ்வுகரம் ஒருமொழியுள் அன்றிப் புணர்மொழி இடைப்படின் தன் அரைமாத்திரையினும் குறுகும் இடனும் உண்டு; கடப்பாடு அறிந்த புணரியலான - அதற்கு இடனும் பற்றுக்கோடும் யாண்டுப் பெறுவ எனின், அதன் புணர்ச்சி முறைமை அறியும் குற்றியலுகரப் புணரியலுள் எ-று.

'வல்லொற்றுத் தொடர்மொழி' *(409)* என்பதனுள், வல்லெழுத்துத் தொடர்மொழியும் வல்லெழுத்து வரும் வழியும் இடன்; ஈற்று வல்லெழுத்துப் பற்றுக்கோடு.

உ-ம் : செக்குக்கணை, சுக்குக்கொடு - என வரும். இவை அரைமாத்திரையின் குறுகியவாறு ஏனையவற்றொடு படுத்து உணர்க. 'இடனும்' எனவே, இது சிறுபான்மை ஆயிற்று. *(4)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.37.** **இடைப்படின் குறுகும்.....புணரிய லான.**

*(இ-ள்.)* அக்குற்றியலுகரம் மொழிகளின் இடையில் வரின் குறுகும் இடனும் உண்டெனக் குற்றியலுகரப்புணர்ச்சி விதிகளை அறிவிக்கும் குற்றியலுகரப் புணரியலின் கண் உணர்த்தப்பட்டது.

*(உ-ம்.)* செக்குக்கணை

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

சூ.37. இடைப்படின் குறுகும்....புணரிய லான

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் "அவ் வுகரம் ஒருமொழியுள் அன்றிப் புணர்மொழி இடைப்படின் தன் அரைமாத்திரையினும் குறுகும் இடனும் உண்டு" என்று பொருள்கூறி, 'வல்லொற்றுத் தொடர்மொழி' என்னும் சூத்திரத்தால் அரைமாத்திரையின் குறுகுதலை விதித்தார் ஆசிரியர் என்றார். ஆசிரியர் சார்பெழுத்துக்களை உணர்த்தத் தொடங்கி, முறையே இவ்வியலின் முதல்சூத்திரத்தால் தனிமொழியில் உள்ள குற்றியலிகரத்தைக் கூறி, இரண்டாம் சூத்திரத்தால் புணர்மொழியகத்துத் தோன்றும் குற்றியலிகரத்தை உணர்த்தினார். அவ்வாறே தனிமொழியில் உள்ள ஆய்தஎழுத்தை முதல் சூத்திரத்தால் (மொழி.5) உணர்த்தி, புணர்மொழியத்துத் தோன்றும் ஆய்தஎழுத்தினை இரண்டாம் சூத்திரத்தால் (6) முன்னர் உணர்த்துகின்றார். ஆதலின், அம்முறைப்படியே குற்றியலுகரத்தையும் கூறுவார், முதற் சூத்திரத்தால் (3) தனிமொழியில் உள்ள குற்றியலுகரத்தை உணர்த்தி, இரண்டாம் சூத்திரத்தால் (4) புணர்மொழியகத்துத் தோன்றும் குற்றுகரத்தை உணர்த்துவதே நியமம் ஆகும். ஆதலின் நச்சினார்க்கினியர் உரை பொருந்துவதன்று.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ.37. இடைப்படின் குறுகும்....புணரிய லான.

(இ-ள்.) மேற்கூறிய குற்றியலுகரம் நெறிமுறை அறிதற்குரிய புணர்ச்சி இயல்பினான் இருமொழிகளுக்கு இடையே நிற்பின் தனது அரைமாத்திரை அளவினும் குறுகி ஒலிக்கும் பக்கமும் உண்டெனக் கூறுவர் புலவர்.

வல்லொற்றுத்தொடர்மொழிக் குற்றியலுகரமே குறுகும் என்பது குற்றியலுகரப் புணரியலுள் பெறப்படும்.

(எ-டு.) கொக்குக்குறிது - கச்சுச்சுருக்கம் - பத்துத் துடி - செப்புப் புதிது - என வரும்.

இனி, நாகுகால் - பரிசுப்பொருள் - எஃகு சிறிது - உல்குபொருள் - அன்புச் சொல் - என ஏனையிடத்தும், கொக்குப்பெரிது - கச்சுக்குறிது - என வருமொழி வல்லெழுத்துப் பிறிதாகி வருமிடத்தும் குறுகாது என்க.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

**சூ.37.** இளம்பூரணர் ஒருமொழிக்கண்ணும் தம் அரைமாத்திரை இயல்பினவாய் வரும் குற்றுகரங்களை அரைமாத்திரையின் மிக்கு ஒலிப்பன என்று கோடலும், வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருமிடத்து அரைமாத்திரையின் சிறிது குறைந்து ஒலிப்பனவற்றை அரைமாத்திரை இயல்பாக ஒலிக்கும் என்று கோடலும் வழக்கிற்கும் விதிக்கும் பொருந்தாவாம். ஆசிரியர் 'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே' என்றதனால் குற்றியலுகரத்திற்கு அரைமாத்திரை இயல்பெனக் கூறினார். வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழிஅல்லது அரைமாத்திரை பெறாது மிக்கு ஒலிப்பனவாயின் ஆசிரியர் அரைமாத்திரை பெறும் என விதிப்பதற்கு இன்றியமையாமை எதுவும் இல்லை. அதனால் ஆசிரியர்கருத்துப்படி ஆறு ஈற்றுக் குற்றியலுகரமும் தன் அரைமாத்திரையின் மிகாது இசைக்கும் என்பதே பொருத்தமுடைத்து. இச்சூத்திரத்தில் இடைப்படின் குறுகும் இடத்தைச் சிறுவரவிற்றெனச் சுட்டினமையானும், ஒருமொழியிடத்தே அரைமாத்திரை பெற்று நிற்பன வல்லெழுத்து முதன்மொழி வருவழிக் குறுகும் எனக் குற்றியலுகரப் புணரியலுள் கூறினமையான் அவ்வரை மாத்திரையின் குறுகும் என்பதே அச்சூத்திரக் கருத்து ஆகலானும் நச்சினார்க்கினியர் உரைத்த உரையே பொருந்தும் என்க.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ.37. 'உருவினும் இசையினும்.....'**

உருவினும் இசையினும் வரும் ஆய்தஓசை மொழிக்குறிப்பு ஆதலான் எழுத்துக்குறிக்கு வாராது என்பது போதரும். இவ்வாய்தநீட்சி அளபெடை எனல் ஆகாது; 'கண்ண் டண்ண்ணெனக் கண்டும் கேட்டும்' என்னும் மலைபடுகடாத்து அடிக்கண் ஒற்றளபெடை போல ஆய்தம் இரண்டு பெறுதற்கும் இல்லை. ஆய்தம் தானே சார்பாக இருக்கும்போது இன்னொன்றுக்குச் சார்பாக உதவும் என்பது பொருத்தம் அன்று

**இளம்பூரணம்**

## 38. ஒருமொழி ஆய்தம்

**குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி**
**உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.**

*(இச்......எனின்)* ஒருமொழி ஆய்தம் வருமாறு உணர்...ற்று.

*(இ-ள்.)* ஆய்தம் ஆகிய புள்ளி குற்றெழுத்தின் முன்னர் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்து ஆறன்மேலது எ-று.

*(உ-ம்.)* எஃகு, கஃசு - என வரும்.

குறியதன் முன்னரும் வல்லெழுத்து மிசையும் இடம். இஃது உயிர் அன்மையின் இதற்குப் பற்றுக்கோடு என்பது இல்லை.

கஃறீது என்பதனை மெய்பிறிதாகிய புணர்ச்சி என்னும் ஆதலின், 'புள்ளி' என்றதனான் ஆய்தத்தை மெய்ப்பால் படுத்துக் கொள்க. ஈண்டுப் பெரும்பான்மையும் 'உயிர்' என்றது, மேல் 'ஆய்தத் தொடர்மொழி' என்று ஓதலின் குற்றியலுகரத்தினை. வெஃகாமை முதலிய பிறஉயிர் வரவு சிறுபான்மை எனக் கொள்க. (5)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.38.** இந்நூற்பா 'ஒருதலையன்மை' என்னும் உத்தியின்பாற்படுவதாகக் கொண்டார் பேராசிரியர். ஒருதலையன்மையாவது நிச்சயம் அல்லாத நிலை. அது 'குறியதன் முன்னர் . . . மிசைத்தே' என்றக்கால், யாண்டும் ஒருதலையாக வாராது வருஞான்று வருவது ஆண்டு என்று கொள்ளவைத்தல்'' (பொ.665 உரை). குறியதன் முன்னர் வரும் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்து ஆறன்மேலெல்லாம் ஆய்தம் வருதல் நிச்சயம் அன்று என்றவாறு.

**நச்சினார்க்கினியம்**

## *38. ஒருமொழி ஆய்தம்*

**குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி**
**உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.**

இது நிறுத்தமுறையானே, ஆய்தம் ஒருமொழியுள் வருமாறு கூறுகின்றது.

இ-ள் : ஆய்தப்புள்ளி - ஆய்தம் ஆகிய ஒற்று; குறியதன் முன்னர் உயிரொடு . . . . . . மிசைத்து - குற்றெழுத்தின் முன்னதாய் உயிரொடு கூடிய வல்லெழுத்து ஆறன்மேலிடத்ததாய் வரும் எ-று.

(1) 'வல்லாறன் மிசைத்து' என்பதனானும், ஈண்டுப் 'புள்ளி' என்பதனானும், 'ஆய்தத்தொடர்மொழி' (406) என மேல் கூறுதலானும், உயிர் என்றது ஈண்டுப் பெரும்பான்மையும் குற்றுகரமே ஆம். சிறுபான்மை ஏனை உயிர்களையும் கொள்க.

உ-ம் : எஃகு கஃசு கஃடு கஃது கஃபு கஃறு அஃது இஃது உஃது - எனவரும். கஃறீது முஃடீது - என்பனவற்றையும் மெய்பிறிதாகிய புணர்ச்சி என்பதனானும், ஈண்டுப் 'புள்ளி' என்பதனானும் ஆய்தமும் மெய் ஆயிற்று. அஃகாமை

வெஃகாமை அஃகி வெஃகி அஃகம் - எனப் பிற உயிர்களோடும் வந்தது. கஃசியாது எனத் திரிந்ததுவும் குற்றியலுகரத்தொடு புணர்ந்ததாம். *(5)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

### *சூத்திரம் 38*

*1.* முன்னர்க் குற்றியலுகர இலக்கணம் கூறுமிடத்து உகரம் 'வல்லாறு ஊர்ந்து' வரும் என்றாற்போல, ஈண்டும் 'வல்லாறன் மிசைத்து' என்று கூறியதனானும், ஈண்டு வல்லாறன் மிசைத்தாய் வரும் புள்ளி என்று ஆய்தத்தொடரைக் கருதுமாறு கூறியதனானும், உகரம் ஊர்ந்த வல்லாறன் மிசைத்தாய் வரும் ஆய்தத்தையே ஆய்தத் தொடர்மொழி என மேல் *(406)* கூறுதலானும் உயிர் என்றது பெரும்பான்மையும் குற்றுகரத்தையே உணர்த்தும் என்றார். இச்சூத்திரத்துள் ஆய்தத்தைப் புள்ளியென்று மெய்யுள் அடக்கினமையான், குற்றியலுகரத்தை உயிருள் அடக்கி உயிரென்று கூறினார் என்று கருத்துக் கோடலும் பொருந்தும்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.*38.*** **குறியதன் முன்னர்....வல்லாறன் மிசைத்தே.**

*(இ-ள்.)* ஆய்தம் என்ற புள்ளியெழுத்து, குற்றெழுத்தின் பின்னரும் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துக்கள் ஆறின் முன்னரும் வரும்.

*(உ-ம்.)* எஃகு கஃசு அஃது

ஆய்தத்தை ஒலிக்கும்போது வாய் சிறிது திறந்தும் சிறிது மூடியும் இருத்தலின், அதனை இடையெழுத்துப் போன்ற மெய்யெனக் கூறல் தகும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.*38.*** **குறியதன் முன்னர்.....வல்லாறன் மிசைத்தே.**

குற்றெழுத்தும் உயிர்மெய் வல்லெழுத்தும் சார்பு. ஆய்தம், உயிரும் ஒற்றுமாகிய இருதன்மையும் உடையது ஆகலின் பற்றுக்கோடு வேண்டிலது. அச்சார்புகளே பற்றுக்கோடாயும் நிற்கும் என்க.

*(எ-டு.) எஃஃகம் கஃஃசு முஃஃடீது அஃஃதை கஃஃபு பஃஃறி மஃஃகான் வெஃஃகாமை - எனத் தனிமொழிக்கண்ணும், அஃஃறிணை அஃஃகடிய எஃஃகியாது கஃஃசியாது - எனப் புணர்* மொழிக்கண்ணும் வரும்.

**வ.சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

***சூ.38.*** **'குன்றிசை மொழிவயின்....'**

இசை குறைவது செய்யுளில் என்றோ, இசை நிறைப்பது அளபெடை என்றோ, எக்குறிப்பும் நூற்பாவில் இல்லை. எனவே, இந்நூற்பா வழக்கிற்கும் செய்யுட்கும் பொது எனக் கொள்ளவேண்டும். வழக்கில் ஆடூஉ மகடூஉ என வருதலும், என்பதூஉம் என உரைநடையில் வருதலும் காண்க. சேய்மை விளியில் எல்லாம் இசைநிறைவு வரும். செய்யுளிலும்கூட இன்னிசையளபெடை என்பது யாப்பு நோக்கியதன்று எனவும், வழக்கிற் போல இன்னோசைநிறைவுக்கு வருவது எனவும் கொள்ளவேண்டும்.

இரண்டு மாத்திரை நெட்டெழுத்தே பொருண்மையுடைய ஒலியன்; அதற்குமேலே வரும் ஒலிநீட்டம் ஒலியன் அன்று. நெட்டெழுத்துப் போல அளபெடை எழுத்து என ஒன்றில்லை. அதனால் ஒலியனுக்கு மேற்பட்ட அளபினைத் தனியாக அலகுக் கணிப்பு செய்திருக்கவேண்டும். பத்துக்கு மேற்பட எண்ணும்போது ஒருசொல்லால் சொல்லாமல் பதினொன்று-பன்னிரண்டு - எனச் சொல்லும் முறையை ஒப்புநோக்குக.

எழுத்துவழக்கில் சிலசொற்கள் தனிவடிவு பெறுவதை 'நான்' என்ற ஆங்கிலச்சொல்லிலும் [I], கடவுளைக் குறிக்கும்போது அவன் என்ற ஆங்கிலச் சுட்டுச்சொல்லிலும் [He] காண்க.

**இளம்பூரணம்**

*39. புணர்மொழி ஆய்தம்*

**ஈறு இயல் மருங்கினும் இசைமை தோன்றும்.**

*(இச்......எனின்) அவ்வாய்தம் புணர்மொழியுள்ளும் வரும் என்பது உணர்.....ற்று.*

*(இ-ள்.) நிலைமொழிஈறு வருமொழிமுதலொடு புணர்ந்து நடக்கும் இடத்தினும் ஆய்தஒலி தோன்றும் எ-று.*

*(உ-ம்.) கஃறீது, முஃடீது-என வரும். ஈண்டும் இடங்கள் அவை.* *(6)*

**நச்சினார்க்கினியம்**

*39. புணர்மொழி ஆய்தம்*

**ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்.**

இஃது இவ்வாய்தம் புணர்மொழிஅகத்தும் வருமாறு கூறுகின்றது.

இ-ள் : ஈறு இயல் மருங்கினும் - நிலைமொழிஈறு வருமொழிமுதலொடு புணர்ந்து நடக்குமிடத்தும்; இசைமை தோன்றும் - அதன் அரைமாத்திரையே இசைக்கும் தன்மை தோன்றும் எ - று.

உ-ம். கஃறீது, முஃடீது - எனவரும். இவ்வீறு இயலுமாறு புள்ளிமயங்கிலுள் (369, 399) பெறுதும். ஈண்டும், இடன் குற்றெழுத்தும் மேல்வரும் வல்லெழுத்தும். (6)

சாத்திரியார் உரைக்குறிப்பு

*சூ.39.* ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்.

*(இ-ள்.)* நிலைமொழி ஈறு வருமொழி முதலோடு பொருந்தி நடக்கும் இடத்தும் ஆய்தப்புள்ளியின் ஒலி தோன்றும்.

*(உ-ம்.)* கஃறீது முஃடீது

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

*சூ.39.* ஈறுஇயல் மருங்கினும் இசைமை தோன்றும்.

புணர்மொழியில் வரும் ஆய்தஎழுத்தினை ஆய்தக்குறுக்கம் என்று நன்னூலார் கூறினார். அது பொருந்துவது அன்று. யாப்பருங்கலவிருத்திகாரர், இலக்கண விளக்க நூலாசிரியர் ஆகியவர்களும் ஆய்தக்குறுக்கம் கொண்டிலர்; சிவஞானமுனிவரும் ஆய்தக்குறுக்கம் வேண்டினார் அல்லர்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

*சூ.39.* ஈரியல் மருங்கினும் இசைமை தோன்றும்.

('ஈறியல் மருங்கினும்' என்பது உரையாசிரியன்மார் பாடம்.)

*(இ-ள்.)* முப்பாற் புள்ளியாகிய அவ்ஆய்தஎழுத்தினது இசைமை, உயிரினது மருங்காகவும் ஒற்றினது மருங்காகவும் தோன்றி வரும்.

இசைமை - எழுத்தாக இசைக்கும் தன்மை. ஈர்இயல் - உயிர்இயல்பும் ஒற்றுஇயல்பும். உயிரியல்பாவது, இசைத்துச் செய்யுளின்கண் அலகுபெற்று வருதல். ஒற்றியல்பாவது, ஒலித்து அலகுபெறாது அசைக்கு உறுப்பாகி வருதல்.

[தொடர்மொழிக் குற்றியலிகரம் தொடர்மொழிக் குற்றியலுகரம் போலத் தொடர்மொழிக்கண்ணும் ஆய்தம் வருமாறு உரையாசிரியன்மார்களால் நூல்நெறியை ஒட்டிக்கொள்ளப்பட்டது. ஆய்தம் அலகுபெறுதலும் பெறாமையும் ஈர்இயல் மருங்கினான் கொள்ளப்பெறுதல் நலித்துரையே அன்றோ?]

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ. 39. 'ஐ ஔ என்னும்.....'**

முன்நூற்பாவிலும் இந்நூற்பாவிலும் கூறியபடி சொற்களே இசை நிறைவுக்கு உரியன; நெட்டெழுத்துக்கள் அல்ல. எனினும், அந்த நிறைவை ஈரளபுடைய நெடில்கள் மேலும் நீண்டு நிறைக்கும் எனவும், அந்த ஓசைச் செய்தியைக் காட்டும் அறிகுறியாகக் குறில்வடிவங்கள் நிற்கும் எனவும் தெளிக.

**இளம்பூரணம்**

### 40. ஆய்தம் இன்றியமையாத சொற்கள்

**உருவினும் இசையினும் அருகித் தோன்றும்**
**மொழிக்குறிப்பு எல்லாம் எழுத்தின் இயலா**
**ஆய்தம் அஃகாக் காலை யான.**

(இச்......எனின்) இதுவும் அவ்வொருமொழி ஆய்தத்திற்கு ஓர் இலக்கணம் உணர்.....ற்று.

(இ-ள்.) ஒரு பொருளினது நிறத்தின்கண்ணும் ஓசையின்கண்ணும் சிறுபான்மை ஆய்தம் தோன்றும் குறிப்புமொழிகள் எல்லாம் ஆய்தஎழுத்தான் இட்டு எழுதப்பட்டு நடவா; அஃது எக்காலத்துமோ எனின், அன்று,

அவ்வாய்தம்தான் அரைமாத்திரை அளவாய்ச் சுருங்கி நில்லாது அவ்வுருவதும் இசையதும் மிகுதி உணர்த்துதற்கு நீண்டகாலத்து அந்நீட்சிக்கு[1] எ-று.

(உ-ம்.) கஃறு என்றது உருவு; சுஃறு என்றது இசை. (7)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.40.*** 1. நிறத்தினது மிகுதியும் ஓசையினது மிகுதியும் உணர்த்துதற்கு ஆய்தம் அரைமாத்திரையினும் நீண்டவிடத்து, அந்நீட்சியைக் காட்டக் கஃறு சுஃறு என்னும் குறிப்புமொழிகள் எல்லாம் இன்னுமோர் ஆய்தம் இடையே எழுதப்பட்டு நடவா - என்பது பொருள். கறு என்னும் நிறம் கஃறு எனவும் 'சுறு' என்னும் ஓசை சுஃறு எனவும் ஓராய்தம் இடையே எழுதப்பட்டு நடத்தலே சாலும்; மேலும் ஒன்று வேண்டா என்பது கருத்து.

**நச்சினார்க்கினியம்**

## *40. ஆய்தம் சுருங்காத இடத்தான சொற்கள்*

**உருவினும் இசையினும் அருகித் தோன்றும்**
**மொழிக்குறிப்பு எல்லாம் எழுத்தின் இயலா**
**ஆய்தம் அஃகாக் காலை யான.**

இஃது ***எதிரது போற்றல்*** என்னும் உத்தியால் செய்யுளியலை நோக்கி ஆய்தத்திற்கு எய்தியதோர் இலக்கணம் உணர்த்துகின்றது.

இ-ள் : உருவினும் . . . . . தோன்றும் குறிப்புமொழியும்- நிறத்தின்கண்ணும் ஓசையின்கண்ணும் சிறுபான்மை ஆய்தம் தோன்றும் பொருள் குறித்தலையுடைய சொல்லும்; எல்லா மொழியும்-அவை ஒழிந்த எல்லாமொழிகளும்; (1) எழுத்தின் இயலா-ஒற்றெழுத்துக்கள் போல அரைமாத்திரையின் கண்ணும் சிறுபான்மை மிக்கு நடந்து; ஆய்தம் அஃகாக் காலையான - ஆய்தம் சுருங்காத இடத்து ஆன சொற்களாம் எ-று.

எனவே, ஈண்டு ஆராய்ச்சி இன்றேனும், செய்யுளியலில் கூறும் 'ஒற்றுஅள பெடுப்பினும் அற்றென மொழிப' (செய். 18) என்னும் சூத்திரத்துக் 'கண்ண் தண்ண்ணெனக் கண்டும் கேட்டும்' என்புழிக் 'கண்ண்' என்பது சீர்நிலை எய்தினாற்போல, 'கஃஃ றென்னும் கல்லதர் அத்தம்' என நிறத்தின்கண்ணும், 'சுஃஃ றென்னும் தண்தோட்டுப் பெண்ணை' என இசையின்கண்ணும் வந்த ஆய்தம் ஒருமாத்திரை பெற்றுச் சீர்நிலை எய்துங்கால், ஆண்டுப் பெறுகின்ற ஒருமாத்திரைக்கு ஈண்டு எதிரதுபோற்றி விதி கூறினார், ஆய்தம் அதிகாரப்பட்டமை கண்டு. (அ) 'எஃஃ கிலங்கிய கையராய் இன்னுயிர், வெஃஃகு வார்க்கில்லை வீடு' என ஏனையிடத்தும் வந்தன. ஒற்றுஅளபெடுக்குமாறு இவ்வதிகாரத்துக் கூறிற்றிலர், அஃது உயிரளபெடைபோலச் சீர்நிலை எய்துதலும் அசையாம் தன்மையும் (ஆ) உடையதாய்ச் செய்யுட்கே வருதலின். இதனானே ஒற்றளபெடையும் ஒருமாத்திரை பெறும் என்பது பெற்றாம்.

'எழுத்தின்' என்ற இன் உவமப்பொருள். இயலா என்றது செய்யா என்னும் வினையெச்சம்.

இவ்வாறன்றி, இக்குறிப்புச் சொற்கள் ஆய்தம் இரண்டு இட்டு எழுதப்படா என்று பொருள்கூறின், செய்யுளிய லொடு மாறுபட்டு மாறுகொளக் கூறல் என்னும் குற்றம் தங்கும் என்றுணர்க. (இ) *(7)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 40

1. 'எழுத்தின் இயலா' என்பதற்குத் தனியெழுத்தான் நடவா என்று பொருள்கூறி, இரண்டெழுத்தான் நடக்கும் என்று பொருள் கூறுதலும் பொருந்தும் போலும்.

*(அ)* ஒற்றளபெடையுள் ஆய்த அளபெடையையும் அடக்கிக்கோடல் ஆய்தம் தனியசையாகச் சீர்நிலை எய்துதற்கு

உபகாரப்படுதலின், செய்யுளியலுள் கூறப்படும் அம்மாட்டேற்றுக்கு இவ்வியலுள் இடம் அமைத்தார் நச்சினார்க்கினியர், ஆய்தம் ஒருமொழிக்கண்ணும் புணர்மொழிக்கண்ணும் வரும் என்னும் சூத்திரங்களோடு இயைய இதனையும் தொடர்புறுத்தி என்க. செய்யுளியற் சூத்திரப் பொருண்மைக்கு ஏற்ப இவ்வியலுள் முற்படக் கூறியமையின், 'எதிரது போற்றல்' ஆயிற்று.

*(ஆ) சூ. 6 (1) (2)* உரைக்குறிப்புக் காண்க.

*(இ)* ஈரசைச்சீர் அமையாது ஓரசையாகவே நிற்றலின் பாட்டடி அமையாது என்பது.

செய்யுளியலிற் கூறும் ஒற்று அளபெடுத்தற்கு வேண்டும் மாட்டேறு ஈண்டு இக்குறிப்புமொழிக்கண் பெறப்படவைக்கும் இன்றியமையாமை நோக்கி நச்சினார்க்கினியர் இவ்வாறு உரைசெய்தார். பிறவிடத்தும் வரும் ஆய்தஅளபெடையையும் தழுவவேண்டிக் குறிப்பு மொழியும் - எல்லா மொழியும் - என யோகவி பாகமாக உரைத்தார், வேற்றுமைப் பொருள்வயின் ஆகுந, உருபுஆகுந- என்று சேனாவரையர் உரைத்தாற் போல என்க. *(சொல். 252)*. [ப. ஆ.]

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.40.*** **உருவினும் இசையினும்....காலை யான.**

*(இ-ள்.)* ஆய்தம் தான் அரைமாத்திரையாய்ச் சுருங்கி நில்லாத இடத்து, ஏனைப் புள்ளியெழுத்துக்களின் தன்மையுற்று, உருவம்-இசை-மொழியாற் குறிக்கப்படும் பொருள் - எல்லாவற்றின் கண்ணும் சிறுபான்மையாய்த் தோன்றும்.

*(உ-ம்.)* கஃஃஃறு *(உருவு)*, சுஃஃஃறு *(இசை)*, வெஃஃஃகு *(குறிப்பு)*

நச்சினார்க்கினியர் கூறும் பொருள் பொருத்தமாயினும், அவர் கூறும் அந்நுவயம் நேரிதாக இல்லை என்பது இவர்கருத்து. மாணாக்கர்க்குப் பொருள் தெளிவாகப் புலப்படவேண்டும் என்பதே நச்சினார்க்கினியர் கருத்து.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.40. உருவினும் இசையினும்....காலை யான.**

இச்சூத்திரம் ''ஒருமொழி ஆய்தத்திற்கு ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று'' எனக் கொண்டு, ''ஒருபொருளினது உருவத்தின்கண்ணும் ஓசையின் கண்ணும் சிறுபான்மையாய்த் தோன்றும் குறிப்புமொழிகள் எல்லாம் ஆய்தஎழுத்தான் இட்டு எழுதப்பட்டு நடவா; அஃது எக்காலத்துமோ எனின், அன்று; அவ்வாய்தம் தன் அரைமாத்திரை அளவாகச் சுருங்கி நில்லாது, அவ்வுருவதும் இசையதும் மிகுதி உணர்த்தற்கு நீண்ட காலத்து அந்நீட்சிக்கு எ-று'' என்று இளம்பூரண அடிகள் பொருள் கூறினார். அஃதாவது, கஃறு என உருவைக் குறித்தமொழியிலும், சுஃறு என இசையைக் குறித்த மொழியிலும், ஆய்தம் நீளுமிடத்து ஆய்தம் இட்டு எழுதலாகாது என்பதாம்.

ஆய்தத்தின் நீட்சியைக் குறிப்பிடுதல் எவ்வாறு என்பது இளம்பூரணர் உரையுள் புலப்பட்டிலது ஆதலின், அவர் கூறிய உரை பொருந்துமாறு ஆதல் இன்று.

உருவும் இசையும் பற்றிவரும் குறிப்புமொழி களிலும் பிறமொழிகளிலும் ஆய்தம் சிறுபான்மை அரை மாத்திரையினும் மிக்கு நடக்கும் என்று நச்சினார்க்கினியர் உரைத்த பொருளும் பொருந்தாது. (சூத்திரத்தின் சொற்பொருள் உணர்த்துமாறு பொருந்தாமை கூறி அவ்வுரையை இவர் மறுக்கின்றார்.)

இனி, இச்சூத்திரத்திற்கு ''உருவின்கண்ணும் இசையின் கண்ணும் சிறுபான்மையவாய்த் தோன்றுகின்ற மொழிக்

குறிப்புக்கள் எல்லாம் பிற எழுத்தான் இயலா, ஆய்தம் அஃகாத காலத்து'' என்பது பொருளாகும்.

கஃறு: நிறக்குறிப்புமொழி; சுஃறு: இசைக்குறிப்பு மொழி.

''உருவினையும் இசையினையும் உணர்த்தும் குறிப்புமொழிகள், ஆய்தம் அஃகாவிடத்து (ப்பிற) எழுத்துக்களான் நடவா'' என்றதனான், இக்குறிப்பு மொழிகட்கு ஆய்தம் இன்றியமையாதது ஆகும் என, அதன் ஆவசிகத்தைக் கூறியவாறு ஆயிற்று. அதனால் இச்சூத்திரம் வேண்டுவதாயிற்று. சார்பெழுத்து மூன்றனுள் குற்றியலிகரம் குற்றியலுகரங்களை இரண்டிரண்டு சூத்திரங்களால் கூறிய ஆசிரியர், அவ்வாறே இருவகை ஆய்தத்தையும் இரண்டு சூத்திரங்களால் கூறி, இம்மூன்றாம் சூத்திரத்தால் ஆய்தஎழுத்து இன்றியமையாத சொற்களைக் கூறினார், அவற்றைக் கூறுதற்கு வேறுஇடம் இன்மையானும், ஈண்டுக் கூறுதல் இயைபுடைத்து ஆதலானும் என்பது.

இச்சூத்திரத்தின் கருத்துச் செவ்விதின் துணியப் படுமாறு இல்லை.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.40.** **உருவினும் இசையினும்....காலை யான.**

*(இ-ள்.)* ஏனை எழுத்துக்களைப் போல நடவாத *(தனித்தன்மையுடைய)* ஆய்தம், தனக்குரிய அரைமாத்திரையளவில் ஒடுங்கி நில்லாமல் சிறிது மிக்கு ஒலிக்குங்கால், நிறம் பற்றியும் ஓசை பற்றியும் வரும் சொல்லகத்துச் சிறுபான்மையாகத் தோன்றி வரும். அவையெல்லாம் குறிப்புமொழிகளாம் எனக் கூறுவர் புலவர்.

*(எ-டு.) 'கஃறென்னும் கல்லதர் அத்தம்'* என்பது *'கற்ற்'* என்னும் நிறக்குறிப்பு. *'சுஃறென்னும் தண்டோட்டுப் பெண்ணை'* என்பது *'சுற்ற்'* என்னும் ஓசைக்குறிப்பு. இதனைச் *'கஃஃறென்னும்' 'சுஃஃறென்னும்'* என்றும் எழுதிக் காட்டுப.

குறிப்புமொழிகளில் வரும் ஆய்தம் அரை மாத்திரையில் அடங்காது ஒருமாத்திரையும் ஆகாது இடைப்பட்டுச் சிறிது மிக்கு இசைத்தலின் 'உருவினும் இசையினும் அருகித் தோன்றும் ஆய்தம் மிகும்' என்னாது 'அஃகாக்காலை' என்றார். அம்மிகுதியைக் குறிக்க வேறு வரிவடிவ அடையாளம் இன்மையின், கஃஃறு என இரண்டிட்டு எழுதிக்காட்டினும் இழுக்கு ஆகாதென்க. இவை அளபெடை அல்ல என உணர்தல் வேண்டும். என்னை? 'எஃஃ கிலங்கிய கையராய் இன்னுயிர், வெஃஃகு வார்க்கில்லை வீடு, என்புழிப் போல, ஆய்தஅளபெடை பெயர்வினையிடத்தே வருதலன்றிக் குறிப்புமொழிக்கண் வாராது என்க.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

***சூ.40.*** ஒருபொருளினது நிறத்தின்கண்ணும் இசையின்கண்ணும் மாத்திரை பெருகித் தோன்றும் குறிப்புமொழிகள் எல்லாம் அந்நீட்சியைக் குறித்தற்கெனத் தனியே எழுத்தால் எழுதப்பட்டு நடவா; ஆய்தம் சுருங்காத இடத்தான சொற்களாம்.

எனவே, ஆய்தம் சுருங்கின் இம்மொழிக்குறிப்புப் புலப்படாது என்பது கருத்து.

*(உ-ம்.)* *'கஃறென்னும் கல்லதர் அத்தம்'*
*'சுஃறென்னும் தண்தோட்டுப் பெண்ணை'*

என முறையே நிறத்தினும் இசையினும் ஆய்தம் நீண்டொலித்ததாயினும் அந்நீட்சிக்கு மற்றுமோர் எழுத்து வேண்டப்படாமை அறிக.

இச்சூத்திரத்தில் வந்த 'அருகி' என்ற சொல்லுக்குப் பெருகி எனவே தக்கயாகப்பரணி உரையாசிரியர் பொருள் கூறியுள்ளார். (தாழிசை 37)

**இளம்பூரணம்**

### *41. அளபெடைக்கண் ஓசை நிறையுமாறு*

**குன்றுஇசை மொழிவயின் நின்றுஇசை நிறைக்கும்**
**நெட்டெழுத்து இம்பர் ஒத்தகுற் றெழுத்தே.**

(இச்.....எனின்) 'நீட்டம் வேண்டின்' (6) என்பதற்கு ஒரு புறனடை உணர்.....ற்று.

(இ-ள்.) அளபெடை ஓசையாகச் சொல்லாதொழியின் குன்றுவதான ஓசையையுடைய அவ்வளபெடை எழுத்தான் ஆய மொழிக்கண் நின்று அவ்வோசையை நிறைக்குமவை யாவையெனின், நெட்டெழுத்துக்களின் பின்னான அவற்றிற்குப் பிறப்பானும் புணர்ச்சியானும் ஓசையானும் இனம்ஒத்த குற்றெழுத்துக்கள் எ-று.

(உ-ம்.) ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ என வரும்.

ஈண்டு மொழி என்றது, அவ்வளபெடை எழுத்து[1] ஒருபொருள் உணர்த்தி ஓரெழுத்தொரு மொழியாய் நிற்கும் நிலைமையினை.

இவையும் மொழிமேல் காணப்படுதலின் சார்பின் தோற்றத்து எழுத்து எனப்படுமால் எனின், பெரும் பான்மையும் அம்மொழிதானே அவ்வெழுத்தாய் வருதலானும், அம்மொழி நிலைமை ஒழிய வேறெழுத் தாகவும் சொல்லப்படுதலானும் அவ்வாறு ஆகாது என்பது.

'எருதுகால் உறாஅது' (புறநா. 327) என்றாற்போல்வன சிறுபான்மை. அம்மொழிதானே எழுத்தாய்[2] வாராது எனக் கொள்க.

(8)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.41.** 1. ஓரெழுத்தொரு மொழியாக நிற்கும் நெட்டெழுத்தினை ஈண்டு அளபெடை எழுத்து என்று சுட்டுகிறார். நெடிலொடு குறிலையும் கூட்டியே அளபெடையாகக் கோடல் இளம்பூரணர் கொள்கை; நச்சினார்க்கினியரும் இக்கொள்கையரே. மூன்று மாத்திரையாக அவ்விரண்டெழுத்தும் கூடியொலிக்கும் பிளவுபடாத ஓசையே அவ்விருவர்க்கும் அளபெடையாம்.

2. ஓரெழுத்தொருமொழியாம் நெட்டெழுத்தே பெரும் பான்மையும் அளபெடுத்து மொழியாய் நிற்கிறது. சிறுபான்மை அந்நெட்டெழுத்து மொழியாய் நிற்கும் நிலையன்றி எழுத்தாகவும் நிகழ்கிறது. இவ்விரண்டு திறனும் அளபெடைக்கு உண்மையின், அது மொழிக்கண்ணேயே வைத்துக் காணப்படும் சார்பெழுத்து ஆகாது என்றவாறு.

ஆகாரம் தனிமொழியாக வாராது, ஒருமொழிக்கண் உறுப்பாக நின்று அளபெடுத்தல், 'கால் உறாஅது' என்புழிக் காண்க.

**நச்சினார்க்கினியம்**

## *41. அளபெடைக்கண் ஓசை நிறையுமாறு*

**குன்றுஇசை மொழிவயின் நின்றுஇசை நிறைக்கும்**
**நெட்டெழுத்து இம்பர் ஒத்தகுற் றெழுத்தே.**

இஃது *எதிரது போற்றல்* என்னும் உத்திபற்றிச் செய்யுளியலை நோக்கி 'நீட்டம் வேண்டின்' *(6)* என முற்கூறிய அளபெடையாமாறு கூறுகின்றது.

இ-ள் : குன்றுஇசை . . . . நிறைக்கும் - அளபெடுத்துக் கூறாக்கால் ஓசை குன்றுவதான ஓசையையுடைய அவ்வளபெடைச் சொற்கண்ணே நின்று அவ்வோசையை

நிறைக்கும், அவை யாவையோ எனின்; நெட்டெழுத்து .... குற்றெழுத்து - நெட்டெழுத்துக்களின் பின்னாகத் தமக்கு இனம் ஒத்த குற்றெழுத்துக்கள் எ-று.

உ-ம் : ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ - எனவரும். குன்றிசைமொழி என்றதற்கு இசை குன்று மொழி என்றும் ஆம். இனம் ஒத்தலாவது பிறப்பும் புணர்ச்சியும் ஓசையும் வடிவும் ஒத்தல். ஈண்டு மொழி என்றது, 'அளபெடை அசைநிலை' (செய். 17) என்னும் செய்யுளியல் சூத்திரத்து எட்டு இயற்சீரின்பாற்படுகின்ற எண்வகை அளபெடைச் சொற்களையும். அவை ஆஅ கடாஅ ஆஅழி படாஅகை ஆஅங்கு ஆஅவது புகாஅர்த்து விராஅயது - என்பனவாம். (1)கட்டளை கொள்ளா ஆசிரியர் இவற்றைத் தனிநிலை முதனிலை இடைநிலை இறுதிநிலை - என்றும் அடக்குப. இனி, மொழி என்றதற்குத் தனிநிலை ஏழனையுமே கொள்ளின், (2) ஒழிந்த இயற்சீர்ப்பாற்படும் அளபெடை கோடற்கு இடமின்மை உணர்க. *(8)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 41***

1, 2. கட்டளையடியாவது எழுத்து எண்ணி வகுக்கும் அடி. ஒழிந்த இயற்சீர் ஆவன: நிரைநேர், நேர்நிரை. நிரைநிரை, நேர்நேர்பு, நேர்நிரைபு, நிரைநேர்பு, நிரை நிரைபு - என்பன ஏழுமாம்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.41.*** **குன்றிசை மொழிவயின்....ஒத்தகுற் றெழுத்தே.**

(இ-ள்.) குறுகிய இசையையுடைய மொழிகளின்கண் உள்ள நெட்டெழுத்தின் பின்னர் அவற்றினை ஒத்த குற்றெழுத்தே நின்று இசையை நிறைக்கும்.

(உ-ம்.) தொழீஇஇ

மொழி என்றதற்குத் தனிநிலை ஏழனையுமே கொள்ளின், ஒழிந்த இயற் சீர்ப்பாற்படும் அளபெடை கோடற்கு இடமின்மை உணர்க என நச்சினார்க்கினியர் உரையாசிரியரை மறுக்கும் செய்தியை இவர் உடன் படுகிறார். நான்கு மாத்திரை ஒலிக்கவேண்டின், ஆ ஈ - முதலியவற்றின் பின்னர் அஅ இஇ முதலியன வருமேயன்றி ஆ ஈ - முதலியன வாரா என இச்சூத்திரம் உணர்த்திற்றாக இவர் கருதுகிறார்.

### வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.41. குன்றுஇசை மொழிவயின்....ஒத்தகுற் றெழுத்தே,**

ஆசிரியர் 'குன்றிசை மொழி' என்று பொதுப்படக் கூறியிருப்ப, உரையாசிரியர் அம்மொழி ஓரெழுத்தொரு மொழியே என்றது பொருந்துவது அன்று. அன்றியும் அவர் ஓரெழுத்தொருமொழியாய் வாராதது சிறுபான்மை என்றார். அதுவே பெரும்பான்மையாகக் காண்கின்றது. ஓரெழுத்தொருமொழி அளபெடுத்தல் ஒரோவழி அருகியே வருகின்றது.

'குன்றிசை மொழிவயின்' என்றதனான், இவ்வளபெடை செய்யுட்கே வருவது என்பது ஆசிரியர் கருத்தாம். உலகவழக்கில் மொழிகள் ஓசை குறைந்து வருதற்கு ஏது ஒன்று இன்மையின், அளபெடை வருதற்கு இடன் இன்று. இவ்வாறு, ஓசைகுறைதலின்றி, தேற்றப் பொருள் முதலிய பொருள் வேறுபாடு காரணமாக வழக்கிலும் அளபெடை வருதல் உண்டு. அதனை 'இயற்கை அளபெடை' என்றும், செய்யுட்கண் வருதலைச் 'செயற்கைஅளபெடை என்றும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறுவர்.

ஆசிரியர் அளபெடை என்றது, ஓசை நிறைக்க வரும் குற்றுயிர்களையே. அஃது 'அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே' என்னும் செய்யுளியல் சூத்திரத்தான் (17) அறியப்படும்.

'கடாஅ ' என்று அளபெடுத்தவழி, நெடிலும் குறிலுமாகவே கொண்டு சீர்கோடல் முறை. இவற்றால் அளபெடையாவது, நீரும் நீரும் சேர்ந்தாற் போல்வதும்-கோட்டுநூறும் மஞ்சளும் கூடியவழிப் பிறந்த செவ்வண்ணம் போல்வதும் - அன்று என்பதும், விரலும் விரலும் சேர்ந்தாற் போல்வது என்பதும் அறியப்படும். பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரி (செய்.17 உரை) என்று எழுதியிருத்தலின், அலகிடுங்கால் அளபெடையை நெடிலும் குறிலுமாகக் கொண்டே தொகை கூறியிருப்பது நன்கு அறியப்படும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் உயிரளபெடை எழுத்துக்களை வேறு எண்ணினார் அல்லர். ஆகலின், அளபெடைஎழுத்து ஏழ் என்று உரையாசிரியர்கள் எண்ணியது பொருந்தாது. ஆசிரியர் குற்றியலிகரம் முதலிய மூன்றனையுமே சார்பெழுத்தாக எண்ணினார் ஆகலானும், மகரக்குறுக்கம் ஐகாரக்குறுக்கம் இவற்றைப் பின்னூலார் போல வேறே எண்ணினார்அல்லர் ஆகலானும், மூன்று மாத்திரை பெறுவதோர் எழுத்து இன்று என்று கூறினார் ஆகலானும், ஓசை நிறைத்தற்கு நெடிலை அடுத்து வரும் குற்றெழுத்துத் தன்தன்மையின் சிறிதும் மாறுபடாது தன்நிலையிலேயே நிற்றலானும், அளபெடையெழுத்து என்று வேறு எண்ணுதல் அமையாது.

ஆசிரியர் 'ஒத்த குற்றெழுத்து நின்று இசை நிறைக்கும்' என்றதனான், உயிரளபெடைகளில் ஒரு நெடிலும் ஒருகுறிலும் தனித்தனியே நிற்கும் என்றவாறு ஆயிற்று. ஆகவே, ''கோட்டுநூறும் மஞ்சளும் கூடியவழிப்..... ஆசிரியர் வேண்டினார்'' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியது பொருந்துவதன்று. அளபெடை பிளவுபடா ஓசையாயின், 'கடாஅக் களிற்றின்மேல்' என்னுமிடத்து, 'கடாஅ' என்பதிலுள்ள 'டாஅ' என்னும் அளபெடையெழுத்து ஒன்றனையே ஒரு நெடிலாகவும் ஒருகுறிலாகவும் பிரித்து, நிரைநேர் என்னுமாறு இல்லை என்க.

''ஓரெழுத்தினையே இரண்டு மாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசைத்துச் சீர்செய்தல் பொருந்தாது எனின், அற்றன்று; 'எழுத்துவகையான்' என்னாது 'மாத்திரை வகையான் தளைதம கெடாநிலை, யாப்புஅழி யாமை என்று அளபெடை வேண்டும்' என்றமையின், எழுத்திற்கு மாத்திரை கோடலும் அசைத்தலும் சீர்செய்தலும் தளை அறுத்தலும் ஓசைபற்றிஅல்லது எழுத்துப்பற்றி அல்ல' என்க'' என்று சிவஞானமுனிவர் கூறியிருத்தலின், ஓரெழுத்தையே ஒருநெடிலாகவும் ஒருகுறிலாகவும் அமைத்துச் சீர் கோடல் பொருந்தும் எனின், பிளவுபடாது இயைந்து நின்ற ஓசைஒன்றனை இரண்டாகப் பிரித்தல் எவ்வாறு இயலும் என்க. பிளவுபடாது நின்ற மூவளபு ஒலி ஒன்றனையே இரண்டு எழுத்தாகப் பிரித்துச் சீர்கோடல் அமையும் எனின், மேற்கூறிய 'கடாஅக் களிற்றின்மேல்' என்பதிலுள்ள ஈரளபுஒலியாகிய 'டா' என்னும் ஒலிஒன்றனையே இரண்டாகப் பிரித்து இரண்டு குறிலாக் கொண்டு 'கடா' (கட+அ) என்பதனைப் புளிமா என்னும் ஈரசைச் சீராகக் கோடல் கூடுமே! அளபெடுத்தல் வேண்டாஅன்றே? அவ்வாறு கோடல் இன்மையின் 'கடாஅ' என்று அளபெடுத்தவழி, நெடிலும் குறிலுமாகவே கொண்டு சீர்கோடல் முறை. இவற்றால், அளபெடையாவது - நீரும் நீரும் சேர்ந்தாற்போல்வதும் கோட்டு நூறும் மஞ்சளும் கூடியவழிப் பிறந்த செவ்வண்ணம் போல்வதும் அன்று என்பதும், விரலும் விரலும் சேர்ந்தாற் போல்வது என்பதும் அறியப்படும். பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் ''ஆஅழி' என்பது மூவெழுத்துப் பாதிரி என்று எழுதியிருத்தலின், அலகிடுங்கால், அளபெடையை நெடிலும் குறிலுமாகக் கொண்டே தொகை கூறியிருப்பது நன்கு அறியப்படும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ.41. குன்றிசை மொழிவயின்....ஒத்தகுற் றெழுத்தே.

இயற்றமிழ்ச் செய்யுட்கண் நான்குமாத்திரையினும் ஓர்எழுத்து மிகாது என்க.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

சூ.41. 'ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி....'

'இருபெயர் பலபெயர் அளவின் பெயரே' என எச்சவியலில் தொல்காப்பியமும், 'ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம், பலநாட் பயின்று பலரொடு செல்லினும்' (101) எனப் புறநானூறும், 'ஒன்றென இரண்டென மூன்றென நான்கென, ஐந்தென ஆறென ஏழென எட்டெனத், தொண்டென' (3) எனப் பரிபாடலும் கூறும். ஆதலின் 'இரண்டிறந்து இசைக்கும் தொடர்மொழி' என்ற இந்நூற்பாநடை தமிழ்வழக்கே ஆம்.

## இளம்பூரணம்

### 42. இகர உகரம் இசை நிறைக்குமாறு

ஐ ஒள என்னும் ஆயீர் எழுத்திற்கு
இகர உகரம் இசைநிறைவு ஆகும்.

(இச்......எனின்) மேலதற்கு ஒரு புறனடை உணர்....ற்று.

(இ-ள்.) ஒத்த குற்றெழுத்து இல்லா ஐ ஒள என்று சொல்லப்படும் அவ்விரண்டு எழுத்திற்கு முன், ஈகார ஊகாரங்கட்கு ஒத்த குற்றெழுத்து ஆகிய இகரஉகரங்கள், குன்றிசை மொழிக்கண் நின்று ஓசையை நிறைப்பன ஆகும். எ-று.

(வருமாறு) ஐ இ, ஔஉ - எனவரும்.

ஐகாரத்திற்கு இகரமும் ஔகாரத்திற்கு உகரமும் என நிரல்நிறையாகக் கொள்க.

இத்துணையும் நூன்மரபின் ஒழிபு. (9)

**நச்சினார்க்கினியம்**

### *42. இகர உகரம் இசை நிறைக்குமாறு*

**ஐஔ என்னும் ஆயீர் எழுத்திற்கு**
**இகர உகரம் இசைநிறைவு ஆகும்.**

*இஃது ஒத்த குற்றெழுத்து இல்லாதன அளபெடுக்குமாறு கூறுகின்றது. இதுவும் எதிரது போற்றல்.*

*இ-ள்: ஐ ஔ . . . . எழுத்திற்கு - தமக்கு இனம் இல்லாத ஐகார ஔகாரம் என்று கூறப்படும் அவ்விரண்டு எழுத்திற்கு; இகர . . . ஆகும் - ஈகாரஊகாரங்கட்கு இனமாகிய இகரஉகரங்களைச் சார்த்திக்கூறவே, அவை அக்குன்றிசை மொழிக்கண் நின்று ஓசையை நிறைப்பனவாம் எ-று.*

*ஐஇ ஔஉ - என நிரனிறையாகக் கொள்க. இவற்றை முற்கூறிய இயற்சீர் எட்டற்கும்ஏற்பனவற்றோடு உதாரணம் காட்டிக்கொள்க. (9)*

*இத்துணையும் நூன்மரபின் ஒழிபு.*

**இளம்பூரணம்**

### *43. ஓரெழுத் தொருமொழி*

**நெட்டெழுத்து ஏழே ஓரெழுத்து ஒருமொழி.**

*(இச்.....எனின்) எழுத்தினான் மொழி ஆமாறு உணர்....ற்று.*

*(இ-ள்.) நெட்டெழுத்து ஆகிய ஏழும் ஓர் எழுத்தான் ஆகும் ஒருமொழியாம்.*

*(வருமாறு) ஆ ஈ ஊ ஏ ஐ ஓ; கௌ வௌ - எனவரும்.*

*இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது. ஔகாரத்தில் உயிர் மெய்யினையே கொள்க. ஏழும் என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது. (10)*

**நச்சினார்க்கினியம்**

## *43. ஓரெழுத்தொரு மொழி*

நெட்டெழுத்து ஏழே ஓரெழுத்து ஒருமொழி.

இஃது ஓரெழுத்தொருமொழி உணர்த்துதல் நுதலியவற்றுள், நெட்டெழுத்தானாம் மொழியாக்கம் கூறுகின்றது.

இ-ள் : நெட்டெழுத்து ஏழே - நெட்டெழுத்தாகிய உயிர்கள் ஏழும்; ஓரெழுத்து ஒருமொழி - ஓர்எழுத்தான் ஆகும் ஒருமொழியாம் எ-று.

முற்றும்மை தொகுத்து ஈற்றசை ஏகாரம் விரித்தார்.

வருமாறு : ஆ ஈ ஊ ஏ ஐ ஓ - என வரும். ஔகாரம் உயிர்மெய்க்கண் அல்லது வாராது. ஊ என்பது தசை. இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் விதி. கா தீ பூ சே தை கோ கௌ - என வரும். இவை தம்மை உணரநின்றவழி எழுத்தாம்; (1) இடைநின்று பொருள் உணர்த்தியவழிச் சொல்லாம். நெட்டெழுத்து ஏறிய மெய் நெட்டெழுத்தாயும், குற்றெழுத்து ஏறிய மெய் குற்றெழுத்தாயும் நிற்றலே அன்றி, மெய்க்கு நெடுமையும் குறுமையும் இன்மை உணர்க. *(10)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 43*

*1.* இடைநிற்றலாவது, இவ்வெழுத்துக்கள் தம்மை உணர்த்தி எழுத்தாதற்கும் பொருளை உணர்த்திச் சொல்லாதற்கும் இடையாக நிற்றல். எனவே, எழுத்துக்கள் சொல்லாயவிடத்துத் தம்மை உணர்த்தி எழுத்தாதலும் உடைய என்பதாம்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.43.** நெட்டெழுத்து ஏழே ஓரெழுத் தொருமொழி.

*உயிர் பன்னிரண்டனுள் நெட்டெழுத்தைப் பிரித்துக் கூறினமையின் ஏகாரம் பிரிநிலை என்னலாம்.*

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.43.** நெட்டெழுத்து ஏழே ஓரெழுத்து ஒருமொழி.

நெட்டெழுத்து என்றது, உயிர்மெய்யினையும் அகப்படுத்து நின்றது. ஏழும் என்னும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

## இளம்பூரணம்

### 44. ஓரெழுத்தொருமொழியாம் குற்றெழுத்து

குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைபு இலவே.

(இச்.....எனின்) குற்றெழுத்துக்கள் ஓரெழுத்தொரு மொழி ஆகா என்பதும், அவற்றுள் ஒரு மொழியாவன உள என்பதும் உணர்.....ற்று.

(இ-ள்.) குற்றெழுத்து ஆகிய ஐந்தும் நின்று ஒருமொழியாய் நிறைத்தல் இல; அவற்றுள் சில நிறைக்கும் எ-று.

ஒகரம் ஒழிந்த நான்கும் சுட்டாயும் வினாவாயும் மொழி நிறைக்கும் அன்றோ எனின், அவை இடைச்சொல் ஆதலின் அவற்றிற்குக் கருவி செய்யான் என்க.[1]

(வருமாறு) து, நொ - என வரும். (11)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.44.** 1. சூ.32 (2) எழுதிய குறிப்புக்கள் ஈண்டும் அமையும்.

இந்நூற்பா 'தன்கோட்கூறல்' என்னும் உத்தியின்பாற் படுவதாகப் பேராசிரியர் குறிப்பிடுவார். தன்கோள் கூறலாவது, சொல்லாதன பிற உளவாயினும் அந்நூற்கு வேண்டுவதே கொள்வல் என்றல். ஒகரம் நீங்கலான நான்கு உயிர்க்குற்றெழுத்தும், சுட்டும் வினாவும் ஆகிய பொருளை உணர்த்தும் இடைச்சொல்லாயினும் அவற்றைத் தாம் மொழியாகிய நிறைந்த தன்மை கொண்டதாகக் கருதிற்றிலர் என்றபடி.

**நச்சினார்க்கினியம்**

## *44. ஓரெழுத்தொருமொழியாம் குற்றெழுத்து*

**குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைபு இலவே.**

இது குற்றெழுத்து ஐந்தும் மொழியாகா, அவற்றுள் சில மொழியாகும் என்பது உணர்த்துகின்றது.

இ-ள் : குற்றெழுத்து ஐந்தும் - குற்றெழுத்தாகிய உயிர் ஐந்தும்; மொழி நிறைபு இல - தாமே நிறைந்துநின்று மொழியாதல் இல; சில, மெய்யொடு கூடி நிறைந்துநின்று மொழியாம் எ-று.

து நொ - என வரும். இவை உயிர்மெய்க்கண் அல்லது வாராமையானும், உயிர்க்கண்ணும் ஒகரம் ஒழிந்த ஏனை நான்கு குற்றுயிரும் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எப்பொருள் - எனத் தனித்துநின்று உணர்த்தல் ஆற்றா இடைச்சொல்லாய்ப் பெயரைச் சார்ந்து நின்று கட்டுப் பொருளும் வினாப்பொருளும் உணர்த்துதலானும், 'நிறைபில' என்றார். (1) முற்றும்மை ஈண்டு எச்சப்பட்டு நின்றுதென்று உணர்க. *(11)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம்-44*** 1. 'ஐந்தும்' என்னும் முற்றும்மை எச்சப்பட்டு நின்றது என்றது, ஐந்தனுள் சில (மெய்யொடு

கூடி நிறைந்து நின்று) மொழியாம் என்னும் பொருள் பயந்து நின்றமையை.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 44.** குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைபு இலவே.

*(இ-ள்.) குற்றெழுத்து ஐந்தும் ஓரெழுத்தொரு மொழியாக நிறைந்து நில்லா.*

*குற்றெழுத்துள் சில ஓரெழுத்தொருமொழியாய் நிற்கும் எனப் பொருள் கூறி, அவற்றிற்குத் து நொ- என இவற்றை உதாரணமாகக் காட்டினர் உரையாசிரியன்மார் இருவரும். அவை உயிர்மெய்யே யன்றி (உயிர்)க் குற்றெழுத்தாகாமையின் பொருந்தா என்பது இவரது மறுப்புரை.*

***43, 44*** *ஆம் சூத்திரங்கள் ஒரே சூத்திரமாக இருக்கலாம் என்று இவர் கருதுகிறார்.*

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 44.** குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைபு இலவே.

*(இ-ள்.) குற்றெழுத்து ஐந்தும் தனித்து நிறைவுடைய மொழியாக வருதல் இல்லை. (நிறைவுடைய மொழியாவன பெயரும் வினையும் ஆம். ஆகவே குறைவுடையனவாய் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாக வரும் என்பது கருத்து.)*

*அஃதாவது சுட்டுப்பெயர் வினாப்பெயர்கட்கு முதனிலையாயும், சுட்டிடைச்சொல்லாயும், ஒப்புணர்த்தும் குறை உரிச்சொல்லாயும் வரும்.*

*(எ-டு.) அவ்வீடு இப்பொருள் உக்கடல் எவன் ஒவ்வும்-என வரும்.*

இனி, ஐந்தும் என்னும் முற்றும்மையை எச்சமாக்கி மொழிநிறைபாகச் சிலவருதலும் கொள்க.

(எ-டு.) து, நொ - என வரும். இவை படுத்தல்ஓசையான் பெயரும், எடுத்தல்ஓசையான் வினையும் ஆம்.

**இளம்பூரணம்**

## *45. மொழிநிலை மூன்றாவன*

**ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி**
**இரண்டுஇறந்து இசைக்கும் தொடர்மொழி உளப்பட**
**மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.**

(இச்.....எனின்) எழுத்தினான் ஆகும் மொழிகளைப் பெயரும் முறையும் தொகையும் உணர்.....ற்று.

(இ-ள்.) ஓரெழுத்தான் ஆகும் ஒருமொழி, இரண்டெழுத்தான் ஆகும் ஒருமொழி, இரண்டு இறந்து பலவற்றான் இசைக்கும் தொடர்மொழி உட்பட மொழிகளின் நிலைமை மூன்றாம், அவை தோன்றிய வழக்கு நெறிக்கண் எ-று.

(உ-ம்.) ஆ, மணி, வரகு, கொற்றன் - என வரும். (12)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.45.** மூன்று முதல் பலவெழுத்தாலாகிய மொழியே தொடர்மொழி யாவதன்றி ஈரெழுத்தொருமொழி தொடர் ஆதல் இல்லை. நெடிற்றொடர்க் குற்றியலுகர மொழியை ஈரெழுத்தொருமொழி (407) என்றும், சில-பல- என்னும் ஈரெழுத்தொருமொழிகளைத் 'தொடர்அல் இறுதி' (215) என்றும் ஆசிரியர் குறிப்பிட்டவாறு காண்க.

'இருபெயர் பலபெயர்' என்னும் உம்மைத்தொகை பற்றிய நூற்பாவில் (சொல்.எச்ச.21) இளம்பூரணர் குறிப்பிடும் விளக்கம் வருமாறு: '' 'பலபெயர்' என

அமையாதே 'இருபெயர்' என வேண்டியது என்னை, இரண்டையும் பல என்பவால் எனின், அற்றன்று; இரண்டனையும் பல என்று வேண்டான் இவ்வாசிரியன் என்பது.''

**நச்சினார்க்கினியம்**

## 45. மொழிநிலை மூன்றாவன

**ஓரெழுத்து ஒருமொழி ஈரெழுத்து ஒருமொழி**
**இரண்டுஇறந்து இசைக்கும் தொடர்மொழி உளப்பட**
**மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.**

முன்னர் மெய்ம்மயக்கம் உடனிலைமயக்கம் கூறலானும், ஈண்டு 'நெட்டெழுத்து ஏழே' (43) என்பதனானும் எழுத்தினான் மொழி ஆமாறு கூறினார். அம்மொழிக்கு இச்சூத்திரத்தால் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றார்.

இ-ள் : ஓரெழுத்து . . . உளப்பட - ஓரெழுத்தான் ஆகும் ஒருமொழியும், இரண்டெழுத்தான் ஆகும் ஒருமொழியும், இரண்டினை இறந்து பலவாற்றான் இசைக்கும் தொடர்மொழியுடனே கூட; மொழிநிலை மூன்றே - மொழிகளின் நிலை மூன்றே ஆம்; தோன்றிய நெறியே - அவை தோன்றிய வழக்குநெறிக்கண் எ-று.

உ-ம் : ஆ, கா, நா : ஓரெழுத்தொரு மொழி; மணி, வரகு, கொற்றன்: ஈரெழுத்தொரு மொழி; குரவு, அரவு : மூவெழுத்தொருமொழி; கணவிரி : நாலெழுத்தொருமொழி; அகத்தியனார் : ஐயெழுத்தொருமொழி; திருச்சிற்றம்பலம் : ஆறெழுத்தொருமொழி; பெரும்பற்றப்புலியூர் : ஏழெழுத்தொருமொழி.

ஓரெழுத்தொருமொழியும் தொடர்மொழியும் என்னாது, ஈரெழுத்தொரு மொழியும் என்று ஓதினார், சில பல என்னும் தமிழ்வழக்கு நோக்கி. (1)

ஆசிரியர் ஒற்றும் குற்றுகரமும் எழுத்தென்று கொண்டனர் ஆதலின், மா கா என நின்ற சொற்கள் மால் கால் என ஒற்று அடுத்துழி ஒற்றினான் வேறுபொருள் தந்துநிற்றலின் இவற்றை ஈரெழுத்தொருமொழி என்றும், நாகு வரகு என்னும் குற்றுகரஈற்றுச் சொற்களில் குற்றுகரங்கள் சொல்லொடு கூடிப் பொருள்தந்து நிற்றலின் இவற்றை ஈரெழுத்தொருமொழி, மூவெழுத்தொருமொழி என்றும் கோடும் என்பார்க்கு, ஆசிரியர் பொருளைக் கருதாது மாத்திரை குறைந்தமைபற்றி 'உயிரில் எழுத்தும் எண்ணப் படாஅ' (செய். 44) 'குறிலே நெடிலே குறிலிணை' (செய். 3) என்னும் செய்யுளியல் சூத்திரங்களான் இவற்றை (அ) எழுத்துஎண்ணவும் அலகிடவும் பெறா என்று விலக்குவார் ஆதலின், அவற்றால் ஈண்டு ஈரெழுத்தொரு மொழியும் மூவெழுத்தொருமொழியும் கொள்ளின், மாறுகொளக் கூறல் என்னும் குற்றம் தங்கும் என்று மறுக்க. (2)

இனி, 'நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி' (43), 'குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைபு இலவே' (44) என்பனவற்றான், மெய்க்குக் குறுமை நெடுமை இன்மையான் உயிரும் உயிர்மெய்யும் ஆகிய நெடிலும் குறிலுமே கூறி, மீட்டும் அதனையே இச்சூத்திரத்தான் ஓரெழுத்தொருமொழி என்றெடுத்து அதனோடு ஈரெழுத்தையும் இரண்டு இறந்ததனையும் கூட்டி மொழியாகக் கோடலின், ஒற்றினைக் கூட்டி எழுத்தாகக்கோடல் ஆசிரியர்க்குக் கருத்தன்மை உணர்க. அன்றியும், 'மொழிப்படுத்து இசைப்பினும்' (53) என்னும் சூத்திரத்தில் கூறுகின்றவாற்றானும் உணர்க. 'அகரமுதல் னகர இறுவாய் முப்பஃதென்ப' (1) என்று ஒற்றினையும் எழுத்து என்றது, எழுத்தின் தன்மை கூறிற்று; ஈண்டு மொழியாம் தன்மை கூறிற்று. (12)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

### சூத்திரம் 45

1. ஈரெழுத்தொரு மொழி தொடர்மொழி என்று வகுத்தது சில பல என்னும் தமிழ்வழக்கு நோக்கி என்று கூறுவதினும் வடமொழிவழக்கு நோக்கி என்று கூறுதலே பொருத்தமாம். நன்னூல் விருத்திகாரர் அங்ஙனமே கூறுவர். (இளம்பூரணத்தில் உரைக்குறிப்புக் காண்க.)

2. இங்கே நச்சினார்க்கினியர் செய்யுளியலொடு மாறுபடாவண்ணம் ஓரெழுத்தொரு மொழி ஈரெழுத் தொருமொழி தொடர்மொழிகளை ஒற்றெழுத்து நீக்கிக் கொள்ளவேண்டும் என்றல் பொருந்தாது. என்னையெனில், மாத்திரை பற்றி அசை வகுத்தலால் செய்யுளியலில் ஒற்றெழுத்து முதலியவற்றை ஆசிரியர் நீக்குகின்றார் ஆதலானும், ஈண்டு எழுத்துப் பற்றி ஓரெழுத்துமொழி முதலியவற்றை வகுத்துக் கூறுகின்றார் ஆதலானும் என்பது. அன்றியும் புணர்ச்சிகூறும் குற்றியலுகரப்புணரியற்கண்ணும் ஆசிரியர் நெடிற்றொடர்க்குற்றுகரத்தை ஈரெழுத்தொரு மொழி என்றும், ஆய்தம் தொடர்ந்த குற்றுகரத்தை ஆய்தத்தொடர்மொழி என்றும், மற்றும் ஈரொற்றுத் தொடர்மொழி என்றும், வல்லொற்றுத் தொடர்மொழி என்றும் கூறுவதனை நோக்க, ஒற்றையும் குற்றுகரத்தையும் கூட்டி மொழிவகுத்தலே அவர் கருத்தாதல் புலப்படும்.. அன்றியும் நச்சினார்க்கினியர்க்கும் எழுத்துநோக்கி மொழிவகுத்துக் கோடலே கருத்தாதல் 145ஆம் சூத்திரவுரையில் மெய்யெழுத்தினையும் கூட்டி மூவெழுத் தாகிய தொடர்மொழியினை (கதிர்) உதாரணம் காட்டுதலான் அறியப்படும்.

(அ) குற்றியலிகரம் முதலிய மூன்றனையும் என்க.

செய்யுளியலில் சொல்லிலுள்ள எழுத்துக்களைக் கணக்கிடுமுறை வேறு, இங்குக் கணக்கிடுமுறை வேறு

என்பதனைத் தெரிவிக்க வேண்டிய தேவை நச்சினார்க்கினியருக்கு நேர்ந்துள்ளது. எழுத்ததிகாரத்திற் கணக்கிடு முறையை இறுதி ஆறியல்களில் கொண்டுள்ளார்; செய்யுளியலிற் கணக்கிடு முறையை முதலீரியல்களில் தவிர வேறு இடங்களில் குறிப்பிடும் வாய்ப்பின்மையின், இந்நூற்பாவிற் செய்யுளியலிற் கணக்கிடு முறையைக் கூறி, அம்முறை எழுத்ததிகாரத்துக்குப் பின்பற்றவேண்டியதன்று என்பதனைப் பின் ஆறு இயல்களிலும் உடம்பொடு புணர்த்துக் கூறியுள்ளார். 'மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும், மேற்கிளந்தன்ன' என்ற செய்யுளியல் மாட்டேற்றுக்கு எழுத்ததிகாரத்தில் விளக்கம் வேண்டுமே என்று கருதி இங்ஙனம் ஒற்றெழுத்துக் களையும் குற்றுகரங்களையும் விடுத்து இச்சூத்திரத்தான் சொற்களின் எழுத்துக்களைக் கணக்கிட்டுக் கூறியுள்ளார். அடிகளுக்கு எழுத்தைக் கணக்கிடுதல் செய். 37 - 43 ஆம் சூத்திரங்களிற் காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.45.** ஓரெழுத் தொருமொழி....தோன்றிய நெறியே.

*(இ-ள்.)* மொழியின்நிலை வழங்குநெறிக்கண், ஓரெழுத்தொருமொழி - ஈரெழுத்தொருமொழி - இரண்டற்கு மேற்பட்ட எழுத்துக்களான் ஆகிய தொடர்மொழி - என மூன்றாகும்.

*(உ-ம்.)* ஆ மணி வரகு.

மொழிகளை மூவகையாகப் பிரித்தது குற்றிய லுகரத்திற்காக என்பது இவர் கருத்து. சூ.36-இல் இதனை இவர் சுட்டியுள்ளார்; வடமொழியைப் பின்பற்றி ஆசிரியர் இவ்வாறு மூவகைப் படுத்திலர் என்று துணிகிறார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.45.** ஓரெழுத்து ஒருமொழி...தோன்றிய நெறியே,

'உயிரில் எழுத்தும் எண்ணப் படாஅ' (செய்யு.44) என்று ஆசிரியர் விலக்கியிருத்தலின், மால் - கால் - என்பன வற்றை ஓரெழுத்தொருமொழி என்றும், வரகு என்பதனை ஈரெழுத்தொருமொழி என்றும் கொள்ளுதல் வேண்டும் என்றார் நச்சினார்க்கினியர். இஃது ஆசிரியர் கருத்தொடு மாறுபடுவதாகும். ஆசிரியர் ஒற்றினையும் குற்றுகரத்தையும் எழுத்தாக எண்ணியிருப்பது,

**'ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்**
**ஆய்தத் தொடர்மொழி வன்தொடர் மென்தொடர்'**

என்னும் சூத்திரத்தினால் விளங்கும். ஈரெழுத்தொருமொழி என்றது, நெடில்தொடர்க்குற்றியலுகர மொழியை. உயிர்த்தொடர் இடைத்தொடர் ஆய்தத்தொடர் வன்தொடர் மென்தொடர் என, நெடிலைச் சார்ந்த குற்றுகரம் ஒன்று ஒழிய, மற்றவற்றை எல்லாம் 'தொடர்மொழி' என்று கூறியிருத்தலின், ஒற்றும் குற்றுகரமும் ஆசிரியர் எண்ணினார் ஆவார். அல்லாக்கால், பத்து-பந்து - வரகு - என்பன போல்வன தொடர்மொழி ஆமாறு இல்லையன்றே? இதனை ஆராய்ந்தே, நச்சினார்க்கினியர் கொள்கையைப் பின்பற்றிச் செல்லும் இலக்கணவிளக்கநூலாரும், அறம் அகலம் முதலாகப் பலவற்றைத் தொடர்மொழிக்கு உதாரணம் காட்டி, ''கால் மால் கல் வில் நாகு தெள்கு எஃகு கொங்கு கோங்கு என்பனவற்றை ஓரெழுத்தொருமொழி என்றும், சாத்தன் கொற்றன் வரகு குரங்கு என்பனவற்றை ஈரெழுத்தொருமொழி என்றும் கூறின், ஆகாது'' (பதவி.1 உரை) என்று எழுதியுள்ளார். நச்சினார்க்கினியர் தாமும் தொகை.3 ஆம் சூத்திரவுரையில் கதிர் என்னும் சொல்லைத் தொடர் மொழியாகக் கொண்டு கதிர்ஞெரி கதிர்ஞ்ஞெரி என உதாரணம் காட்டினார்; பின்னும், ''ஈரெழுத் தொரு மொழிகளுள்ளும் சில உறழ்ச்சிபெற்று முடிதல் கொள்க'' என்று எழுதி, ''காய்ஞெரி காய்ஞ்ஞெரி...என வரும்'' என்றும் கூறினார். இவற்றால் அவர்கொள்கை ஆசிரியர் கருத்தொடு மாறுபடுதலேயன்றி, முன்பின் முரணா யிருத்தலும் காண்க.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.45.** ஓரெழுத் தொருமொழி....தோன்றிய நெறியே.

இலக்கணநோக்கில் மொழி என்பதன் அமைப்புவேறு, சொல் என்பதன் அமைப்புவேறு. மொழி என்பது பொருளையும் பொருளின் தன்மையையும் சுட்டிநிற்கும். சொல் என்பது பெயர்வினை இடை உரி என உணரநிற்பது. ஒற்றெழுத்துக்களும் சார்பெழுத்துக்களும் செய்யுட்கண் அலகுடையனவாக எண்ணப்பெறா; மொழிக்கண் எண்ணப்பெறும் என்க.

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

**சூ.45.** 'நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்' என, இரண்டு இறந்து இசைப்பனவற்றையே தொடர்மொழியாகக் கொண்டு ஆசிரியர் விதி கூறுதலானும், பல சில - என்னும் ஈரெழுத்தொருமொழிகளைத் 'தொடர் அல் இறுதி' எனக் குறித்துப்போதலான் அவை தொடர்மொழி ஆகா என்பது ஆசிரியர் கருத்து ஆகலானும், அங்ஙனம் ஈரெழுத்தொருமொழியினையும் தொடர்மொழி எனக் கோடல் பண்டைத் தமிழ்நூலார் கருத்து அன்று என்பது தெளிய விளங்கும்.

நாகு முதலிய சொற்களில் குற்றியலுகரத்தையும் எழுத்தாகக் கொண்டு அவற்றை ஈரெழுத்தொருமொழி எனவும், பத்து வண்டு முதலிய குற்றியலுகர ஈற்றுச் சொற்களில் இடையே வரும் மெய்யெழுத்துக்களையும் எழுத்தாக எண்ணி அவற்றை இரண்டிறந்து இசைக்கும் தொடர்மொழியாகக் கொண்டு வன்தொடர் மென்தொடர் எனவும் பெயர்கூறிப்போதலால், எழுத்ததிகாரத்து ஒற்றும் குற்றுகரமும் கூட்டி எண்ணி மொழியாகக் கோடல் ஆசிரியர்க்கு உடன்பாடாதல் பெறப்படும்.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.45.** 'அவற்றுள், ரகார ழகாரம் குற்றொற்று ஆகா'.

இதுகாறும் இன்ன மெய்க்குப் பின் இன்ன மெய் வரும் என்று மெய்ம்மயக்கம் கூறிவந்த ஆசிரியர் இன்ன உயிருக்குப் பின் இன்னமெய் வாரா என இந்நூற்பாவில் உயிரொடு மெய்ம்மயங்காமை கூறும் ஒருமொழியமைப்பைக் கற்கின்றோம்.

**இளம்பூரணம்**

## 46. தனிமெய்களை அகரம் இயக்குதல்

**மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.**

*(இச்.....எனின்)* தனிமெய்களைச் சொல்லும் முறைமை இதுவென்பது உணர்.....ற்று.

*(இ-ள்.)* தனிமெய்களது இயக்கம் அகரத்தொடு பொருந்தும் எ-று.

*(வருமாறு)* 'டறலள என்னும் புள்ளி முன்னர்' (23) என வரும்.

இது மொழியிடை எழுத்திற்கு[1] அன்மையின் நூன்மரபின்கண் வைக்க எனின், தன்னை உணர்த்தாது வேறுபொருளை உணர்த்தும் சொல்நிலை போல, 'டறலள' என்றது உயிர்மெய்யை உணர்த்தாது தனிமெய்யை உணர்த்துதலானும், ஒற்றினை உயிர்மெய் போலச் சொல்லு கின்ற வழுவமைதி யிலக்கணத்தானும் மொழி மரபின் கண்ணது ஆயிற்று என உணர்க. (13)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.46.** 1. தனியெழுத்திற்கு அன்றி மொழியிடை நிற்கும் எழுத்திற்கு மரபு மொழிமரபில் பேசப்படுகிறது. மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணி உயிர்மெய்யாக

நிற்குமிடத்து, அவ்வுயிர்மெய் தன்னை உணர்த்தாது அகரம் சிவணப்பட்ட மெய்யையே உணர்த்துதலின், (தன்னை உணர்த்தாது தன்னான் உணர்த்தப்படும் வேறுபொருளைக் குறிக்கும்) சொல்லினது நிலயைத் தான் எய்தியவாறு காண்க.

**நச்சினார்க்கினியம்**

## *46. தனிமெய்களை அகரம் இயக்குதல்*

**மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.**

*இது தனிமெய்களை அகரம் இயக்குமாறு கூறுகின்றது.*

***இ-ள்:*** *மெய்யின் இயக்கம் - தனிமெய்களினது நடப்பு; அகரமொடு சிவணும் - அகரத்தொடு பொருந்தி நடக்கும் எ-று.*

*எனவே, ஒருவன் தனிமெய்களை நாவால் கருத்துப் பொருளாகிய உருவாக இயக்கும் இயக்கமும், கையால் காட்சிப் பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும் அகரத்தொடு பொருந்தி நடக்கும் என்றவாறு.*

*உ-ம் : 'வல்லெழுத் தென்ப கசட தபற' (19) 'ககார ஙகாரம் முதல்நா அண்ணம்' (89) என்றாற்போல்வன நாவால் இயக்கியவாறு காண்க. எழுதிக் காட்டுமிடத்துக் ககரம் முதலியன உயிர்பெற்று நின்ற வடிவாக எழுதிப் பின்னர்த் தனிமெய் ஆக்குதற்குப் புள்ளியிட்டுக் காட்டுகின்றவாற்றான், வடிவை இயக்குமிடத்தும் அகரம் கலந்து நின்றவாறு காண்க.*

*இங்ஙனம் மெய்க்கண் அகரம் கலந்து நிற்குமாறு போலப் பதினோருயிர்க்கண்ணும் அகரம் கலந்து நிற்கும் என்பது ஆசிரியர் கூறாராயினார், அந்நிலைமை தமக்கே புலப்படுதலானும் பிறர்க்கு இவ்வாறு என்று உணர்த்துதல் அரிதாகலானும் என்றுணர்க. இறைவன் இயங்குதிணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு*

எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல, அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க்கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்கும் என்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்ப முடிந்தது. 'அகர முதல' என்னும் குறளான் "அகரமாகிய முதலையுடைய எழுத்துக்கள்எல்லாம்; அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலகம்" என வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும், கண்ணன் "எழுத்துக்களில் அகரம் ஆகின்றேன் நானே" எனக் கூறியவாற்றானும், பிற நூல்களானும் உணர்க.

இதனான் உண்மைத்தன்மையும் சிறிது கூறினாராயிற்று. இதனை நூன்மரபில் கூறாது ஈண்டுக் கூறினார், 'வல்லெழுத் தென்ப கசட தபற' *(19)* என்ற இடத்துத் தான் இடைநின்று ஒற்று என்பதொரு பொருளை உணர்த்தி மொழியாம்தன்மை எய்தி நிற்றலின். *(13)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.46. மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.**

*(இ-ள்.)* மெய்யின் ஒலிக்கும் வகை அகரத்தோடு பொருந்தும்.

*(உ-ம்.)* 'வல்லெழுத்து என்ப கசட தபற.'

பகவத்கீதையில் கண்ணன் கூறியதொடர்க்கு 'அகரம் ஆகின்றேன் யான்' எனச் சொல்வகையால் பொருள் கொள்ளப்படினும், "என்னை ஓரெழுத்தாகத் தியானிக்க வேண்டுமாயின், அகரமாகத் தியானித்தல் வேண்டும்" என்றதே பொருள். இவ்வாறு நச்சினார்க்கினியர் உரைத்த கூற்றுக்கு இவர் மறுப்புப் போலக் குறித்துள்ளார்; கடவுளும் அகரமும் முறையே உலகத்திற்கும் எழுத்துக்களுக்கும் முதன்மையாய் இருத்தலின், அம் முதன்மையையே பொதுத்தன்மையாகக் கொள்ளல் தகும் என்கிறார்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.46.** மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.

*(இ-ள்.)* ஒலிப்பு இல்லாத நிலைமையையுடைய மெய்யெழுத்துக்களின் இயக்கம் அகரச்சாரியையொடு பொருந்திவரும். என்றது, மெய்யெழுத்துக்கள் தம்மைச் சுட்டி உணர்த்த வருமிடத்து அ என்னும் சாரியை இடைச்சொல்லைப் பொருந்தியே இயங்கும் என்றவாறு.

அகரம் சாரியை ஆங்கால் எழுத்தாகாது இடைச்சொல் ஆகும் என்க.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.46.** 'குறுமையும் நெடுமையும்'

குறுமை என்பதும் நெடுமை என்பதும் எழுத்தெண்ணிக்கை அளவில் கொள்ளுதலால் எல்லாத் தொடர் ஒருமொழிகளும் நெடிலோடிய எழுத்தால் இயன்றன வாகக் கருதப்படும்.

ஓரெழுத்தொருமொழி - ஆ, மா
ஈரெழுத்தொருமொழி - ஆன், மான், சில, பலா, ஆடு, ஊதா
தொடர்மொழி - நலம், நான்கு, அணங்கு, இளங்கோ, திருவள்ளுவர்.

முவ்வகை மொழிகளிலும் நெட்டெழுத்துக்கள் உள்ளன எனினும், அவற்றை நூற்பாப் பொருளாகக் கொள்ளவில்லை. வரிவடிவான எழுத்தெண்ணிக்கையை அளவாக வைத்துப் பார்க்கும்போது, தொடர்மொழிகள் இரண்டுக்கு மேற்பட்ட பல எழுத்துடையவை. ஒரு வடிவு கொண்டது ஓரெழுத் தொருமொழி; இருவடிவு கொண்டது ஈரெழுத்தொருமொழி. குறியீடுகளே தற்சான்று. ஈண்டு எழுத்து என்பது வரி வடிவைக் குறிக்கும் என உரிய நூற்பாவில் முன் தெளிவு செய்யப்பட்டது.

இந்நூற்பா மாத்திரை பற்றியதன்று என்பதற்கு 'அளவிற் கோடல்' என்ற சொல் அமைந்திருப்பது ஒரு சான்று. ஈண்டு அளவு என்பது எழுத்தெண் ணிக்கையைக் குறிக்கும். 'எழுத்தளவு எஞ்சினும் சீர்நிலை தானே' என்ற செய்யுளியல் நூற்பா இவ்வுரைக்கு அரண்செய்வதை உணர்க.

**'குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**அறியத் தொன்றம் அகரக் கிளவி'**

**'பலவற்று இறுதி நீடுமொழி உளவே**
**செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான'**

என்றிவ்வாறு முவ்வகைக் குறிகளையும் ஆங்காங்குப் பயன்படுத்துவர். எனவே, புணரியல் கற்கும்போது மொழிமரபிற் சொல்லிய முவ்வகைச் சொல்நிலையின் இன்றியமையாமை பெறப்படும்.

**'குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்**
**தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல'**

என்ற நூற்பாவை மறுபடியும் சிந்திப்போம். அளவு என்பதற்கு எண்ணிக்கை என்பது பொருள். ஓரெழுத்து, ஈரெழுத்து, தொடர்மொழி - என்ற வகை எழுத்துவடிவினால் அமைந்தது. 'எழுத்தளவு எஞ்சினும்' செய்யுளியலில் வரும் கட்டளைச் சீர்இலக்கணம் இதனைத் தெளிவாக்கும். இத்தெளிவு போதாது; இன்னும் தெளிவு வேண்டும்.

'தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல' என்று சொல்லியதன் கருத்தும் பயனும் என்ன? குறளடியை நோக்கச் சிந்தடியும் நேரடியும் நெடிய ஆயினும், அம்மூன்றடிகளினும் நீண்டவற்றையே நெடிலடி கழிநெடிலடி - எனப் பெயரிடுகின்றோம். இவை எழுத்தெண்ணிக்கையைப் பொறுத்தன. அது போலத் தொடர்மொழி இரண்டு கடந்த பல எழுத்துக்களை உடையதாதலின், நீண்ட வரி என்பது போல, 'நெட்டெழுத்து' எனப்பட்டது. தொல்காப்பியன் என்பது பல எழுத்துடைய நெடிய ஒரு சொல் என்பது கருத்து. நெட்டெழுத்து - நீண்ட

சொல். 'பலவற்று இறுதி நீடுமொழி உளவே' என்ற உயிர்மயங்கியல் நூற்பாவில் 'நீடு மொழி' என ஆட்சிபெறுதலையும் காண்க.

எல்லாத் தொடர்மொழியும் நெட்டெழுத்தாக இயலும் என்பதனால், புணரியலில் ஈறு பற்றி விதி கூறினாலும், தொடர்மொழி முழுதினையும் ஒருமையாகக் கருதிப் பார்க்கவேண்டும் என்பது இந்நூற்பாவின் பயன். இதனை 'ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்து' என்ற குறிச்சொல்லொடு மயங்கக் கூடாது.

இளம்பூரணர் உரை குற்றமில்லை; நச்சினார்க் கினியருரை பொருத்த மில்லை; என்னுரை இன்னும் சிந்தனைக்குரியது. 'நெட்டெழுத்து இயல்' என்பதற்கு மனம் நிறையும் பொருள் காணவேண்டும்.

**இளம்பூரணம்**

### *47. மெய்ம்மயக்கத்திற்குப் புறனடை*

**தம்இயல் கிளப்பின் எல்லா எழுத்தும்**
**மெய்ந்நிலை மயக்கம் மானம் இல்லை.**

(இச்.....எனின்) மெய்ம்மயக்கத்திற்கு ஒரு புறனடை உணர்....ற்று.

(இ-ள்.) எல்லா மெய்யெழுத்தும் மொழியிடை அன்றித் தம் வடிவின் இயல்பைச் சொல்லுமிடத்து மெய்ம்மயக்கநிலையின் மயங்கி வருதல் குற்றம் இல்லை எ-று.

(உ-ம்.) 'வல்லெழுத்து இயையின் டகாரம் ஆகும்' (303) என வரும்.

இதனை மெய்ம்மயக்கத்து வைக்க எனின், இது வழுவமைதி[1] நோக்கி மொழிமரபின்கண்ணது ஆயிற்று. (14)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.47.*** 1. ஒற்றினை உயிர்மெய்போலச் சொல்லுகின்ற வழுவமைதி இது-என்னும் மேலைச் சூத்திரத்து உரைப் பகுதியைக் காண்க.

**நச்சினார்க்கினியம்**

***47. மெய்ம்மயக்கத்திற்குப் புறனடை***

> **தம்இயல் கிளப்பின் எல்லா எழுத்தும்**
> **மெய்ந்நிலை மயக்கம் மானம் இல்லை.**

இது முன்னர் மெய்க்கண் உயிர் நின்றவாறு கூறி, அவ்வுயிர் மெய்க்கண் ஏறி உயிர்மெய்யாய் நின்ற காலத்து அம்மெய்யால் பெயர் பெறுமாறு கூறுகின்றது.

இ-ள்: எல்லா எழுத்தும் - பன்னீருயிரும்; மெய்ந்நிலை தம்இயல் மயக்கம் கிளப்பின் - மெய்யின் தன்மையிலே தம்முடைய தன்மை மயங்கிற்றாகப் பெயர் கூறின்; மானம் இல்லை - குற்றம் இல்லை எ- று.

மெய்யின் தன்மையாவது வன்மை மென்மை இடைமை (இவற்றையுடைமை). தம் இயலாவது உயிர்த்தன்மை. என்றது, வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்து என உயிர்மெய்க்கும் பெயரிட்டு ஆளுதல் கூறிற்று. அவை 'வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே' (357) எனவும், மெல்லெழுத்து இயற்கை உறழத் தோன்றும் (342) எனவும் பிறாண்டும் ஆள்ப. எழுத்தை வன்மை மென்மை இடைமை என விசேடித்த சிறப்பான் இப்பெயர் கூறினார்.

*(அ) இஃதன்றிப் பதினெட்டு மெய்யும் தம்மைக் கூறுமிடத்து, மெய்ம்மயக்கம் கூறிய வகையானன்றி வேண்டியவாறு மயங்கும் என்றுகூறி, 'அவற்றுள் லளஃகான் முன்னர்' (24) என்பதனைக் காட்டில், அஃது இருமொழிக் கண்ணது என மறுக்க.* *(14)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 47***

இடைநிலைமயக்கப் புறனடையாக இச்சூத்திரத்தைக் கொண்ட இளம்பூரணர், தம் வடிவின் இயல்பைச் சொல்லுமிடத்து எல்லா மெய்யெழுத்தும் மெய்ம்மயக்க நிலையில் மயங்கல் குற்றம் இல்லை என்று பொருளுரைத்தமையே பொருந்துவதாம். உயிர்மெய் யிடத்தே ஒற்றுமைநயம் கண்டு மெய்யின் முத்தன்மைகளும் உயிர்க்கு ஏறும் என்று நச்சினார்க்கினியர் சூத்திரத்தை நலிந்து பொருள்செய்தமையான் பெரும்பயனின்மை உணரப்படும். 'வல்லெழுத்து' 'மெல்லெழுத்து' 'இடையெழுத்து' என்று ஆசிரியர் எடுத்தாள்ப என்ற அவ்வுரைக்கு, அவ்வுயிர் மெய்யை ஒற்றுமைநயம்படக் காண்பதாக நாம் காணவேண்டும். வல்லின உயிர்மெய் முதலான சொல் வந்து இயையின் அவ்வல்லெழுத்து மிகும் (296) எனவும், மெல்லின உயிர்மெய் முதலான சொல்வந்து இயையின் நிலைமொழியீற்று ணகரம் கெடுதலும் கெடாமையும் ஆகிய உறழ்ச்சியாய் முடியும் (342) எனவும் கொள்க. [ப. ஆ.]

(அ) நூன்மரபிற் கூறிய மெய்ம்மயக்கத்திற்கு மொழிமரபின்கண் ஆசிரியர் புறனடை கூறல் இயைபின்மை கருதி, நச்சினார்க்கினியர், மெய்யெழுத்துக்குரிய வன்மை மென்மை இடைமை எனுமிவை மெய்யோடியைந்த உயிருக்கும் புணர்ச்சி பற்றிய இயல்களில் கூறப் படுதலையுட்கொண்டு, அதனையும் ஆசிரியர் எஞ்சாது கூறினாராதல் வேண்டும் என்ற கருத்தான் இவ்வாறு உரை கூறினார்.

'அவற்றுள் லளஃகான்' : ளகரத்தின் முன்னர் லகரம் தனிமெய்யாக மயங்குதல்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.47. தம்மியல் கிளப்பின்.......மானம் இல்லை.**

(இ-ள்.) எல்லா மெய்யெழுத்தும் தமது தன்மையைக் குறிப்பின், மெய்களின் நிலைமயக்கம் குற்றம் ஆகாது.

(உ-ம்.) வல்லெழுத் தியையின் டகாரம் ஆகும்.

இம்மயக்கம் இருமொழிக்கண் காட்டலாகாது என்ற நச்சினார்க்கினியரது கொள்கையை, ''மொழிமரபு தனி மொழியைப் பற்றியே கூறுகின்றது என்பதற்குச் சான்று ஒன்றுமின்று'' என இவர் மறுக்கிறார்; 'மயக்கம் ஆனம் இல்லை' என்ற பதப்பிரிப்பே தக்கது என்றும், மாநம் ஆநம் என்னும் வடமொழிச் சொல்லின் தற்பவமே மானம் ஆனம் என்றும், மானம் என்பதற்குக் குற்றம் என்னும் பொருளில்லை, ஆனம் என்பதற்கே அப்பொருள் உண்டு என்றும் குறிப்பிடுகிறார். 'ஏனை உருபும் அன்ன மரபின, மானம் இலவே சொல்முறை யான' (சொல்.107இ) என்னும் சூத்திரம் 'ஆனம்' என்னும் பதப்பிரிப்பிற்கு இடம்தந்திலது ஆதலின் சாத்திரியாரது கருத்து ஆய்தற்குரியது. உயர்பொருட்பேறும் இழிபொருட்பேறும் ஆகிய இரண்டற்கும் பொதுவாக வரும் நந்துதல் - புரை - அகன்றார் - முதலான சொற்களிடையே 'மானம்' என்பதும் ஒன்றாதல் கூடுமன்றே?

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.47. தம்இயல் கிளப்பின்....மானம் இல்லை.**

இச்சூத்திரத்தில் 'எழுத்து' என்றது மேல்சூத்திரத்தில் கூறிய மெய்யெழுத்துக்களைக் குறிப்பது ஆகலானும், 'மெய்நிலை மயக்கம்' என்றது மெய்கள் தம்மொடு தாம் நின்று மயங்குதலைக் குறிக்கும் ஆதலானும், நச்சினார்க்கினியர், ''பன்னீருயிரும் மெய்யின் தன்மையிலே

தம்முடைய தன்மை மயங்கிற்றாகப் பெயர் கூறின் குற்றம் இல்லை'' என்று கூறியது அமைவுடைத்து ஆதலின்று.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.47.** யரழ என்னும்....ஈரொற்று ஆகும்.

புணர்மொழிக்கண் வருபவை பின்னர்ப் புள்ளி மயங்கியலுள் கூறப்பெறும் விதியான் மிக்கு வருவனவாம் ஆதலின், இயல்பாக வருபவை ஒருசொற்கண்ணேயாம் என்பது தோன்ற, 'ஈரொற்று ஆகும்' என்றார்.

(மொழியாக்கத்தின்கண் ஒருமொழியிடத்து இரண்டு ஒற்றுக்கள் இணைந்து நிற்குமாற்றினை இச்சூத்திரம் உணர்த்துவதாக இவர் கருத்துக் கூறுவர்.)

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

**சூ.47.** உயிர்மெய்யை வேற்றுமைநயம் கருதி இரண்டெழுத்தாகக் கூறும் ஆசிரியர், 'வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே' 'மெல்லெழுத்து இயையின் இறுதியோடு உறழும்', 'இடையெழுத்து என்ப யரல வழள' என்ற இடத்து ஓரெழுத்தாகக் கூறினார் என்றல் பொருந்தாது ஆதலானும், 'வல்லெழுத்து....மிகுமே' என்புழி வல்லெழுத்து என்பதனை உயிர் மெய்யெழுத்தாகக் கொள்ளின் அவ்வெழுத்து மிகும் என்பது அவ்வுயிர் மெய்யெழுத்து மிகும் எனப் பொருள்பட்டு மாறுகொள்ளும் ஆதலானும், வன்மை மென்மை இடைமையாகிய தன்மை மெய்க்கேயன்றி உயிர்க்கு இல்லாமையானும், வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்து என்ற பெயர்கள் உயிர்மெய்க்குஅன்றி மெய்க்கே உரியன என்பது அவற்றைத் தொகுத்து 'அம்மூவாறும்' எனச் சுட்டி மெய்ம்மயக்கம் கூறுதலான் புலனாம்ஆதலானும், உரையாசிரியர் கூறியவாறு இச்சூத்திரம் மெய்ம்மயக்கத்திற்குப் புறனடை என்பதே பொருந்தும் என்க.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**நூ.47.** 'செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்......'

'போன்ம்' என்ற முற்றுச் செய்யுள்இடையில் வந்தால் ஈரொற்றும் ஆகாது; குறுக்கமும் பெறாது.

பெருங்கல் அடாரும் போன்ம்என விரும்பி'
(புறநா.19)

'மழையுள் மாமதி போன்ம்எனத் தோன்றுமே'
(சீவக.127)

இங்ஙனம் இடையில் வரும் 'போன்ம்' என்ற முற்றுச்சொற்கள்

'ணனஃகான் முன்னர்க்
கசஞப மயவவ் ஏழும் உரிய'

என்ற இலக்கணப்படி ஓரொற்று மயக்கமாகும்.

'அரம்தின்வாய் போன்ம்போன்ம்போன்ம்
பின்னு மலர்க்கண் புனல்' (பரிபா.10)

என்ற பரிபாடற்கண் வருவன ஈரொற்று ஆகும் எனினும், இறுதியாகி இசையிடன் அருகாமையின் மகரக்குறுக்கம் பெறாது என உய்த்துணர்க.

ஈரொற்று என்பதற்காகக் குறுக்கம் தோன்றுவதில்லை. ஈரொற்று நிற்கும் இசைநெருக்கத்தைப் பொறுத்தே குறுக்கம் வரும்.

'செய்யுள் இறுதி' எனப் பொதுப்படக் கூறினும், ஏற்புழிக்கோடலால் 'போன்ம்' என்ற ஈரொற்றுக் குறுக்கம் வெண்பாவின் இறுதிச்சீர்க்கே கொளத்தகும், 'போலும்' என நிற்க இயலாதாகலின்.

'போன்ம்' என்பது மூன்றெழுத்து உடைமையின், 'இரண்டிறந்து இசைக்கும் தொடர்மொழி' என்க.

**இளம்பூரணம்**

## *48. ஈரொற்று உடனிலை*

**யரழ என்னும் மூன்றுமுன் ஒற்றக்**
**கசதப ஙஞநம ஈரொற்று ஆகும்.**

*(இச்....எனின்)* மெய்ம்மயக்கத்திற்கு ஒரு புறனடை உணர்.....ற்று.

*(இ-ள்.)* ய ர ழ என்று சொல்லப்படுகின்ற மூன்றனுள் ஒன்று குறில் கீழும் நெடில் கீழும் முன்னே ஒற்றாய் நிற்ப, அவற்றின் பின்னே க ச த ப - க்களில் ஒன்றாதல் ங ஞ ந ம-க்களில் ஒன்றாதல் வர, அவை ஈரொற்று உடனிலையாம் எ-று.

*(உ-ம்.)* வேய்க்குறை வேய்ங்குறை, வேர்க்குறை வேர்ங்குறை, வீழ்க்குறை வீழ்ங்குறை-சிறை- தலை-புறம்- என ஒட்டுக.

இவ்விதி மேல் ஈற்றகத்து உணர்ந்து கொள்ளப்படுமால் எனின்[1], இஃது ஈர்க்கு பீர்க்கு என ஒருமொழியுள்ளும் வருதலானும், இரண்டு மொழிக்கண் உறுதல் விகாரம் ஆதலானும் ஈண்டுக் கூறப்பட்டது. அஃதேல், இதனை நூன்மரபினகத்து மெய்ம்மயக்கத்துள் கூறுக எனின், ஆண்டு வேற்றுமை நயம் கொண்டதாகலின் மூவொற்று உடனிலையாதல் நோக்கி, ஒற்றுமை நயம்[2] பற்றி ஈண்டுக் கூறப்பட்டது. *(15)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.48.*** 1. அகத்தோத்தாகிய புள்ளிமயங்கியலில் யகர ரகர ழகர ஈற்றுமுன் வன்கணம் மென்கணம் வருவழி இவ்விதி உணர்ந்துகொள்ளப்படுமே எனின் என்பது.

2. நூன்மரபில் மெய்ம்மயக்கத்தின்கண் தனிமெய், உயிர்மெய்யாக நிகழும் வரும்எழுத்தின் முதலில் நிற்கும்

மெய்யொடு மயங்குதல் கூறப்படும். ஆண்டு உயிர்மெய் வேற்றுமைநயம் தோன்ற மெய்யாகத் தனிமெய் முன்னர் நிற்பதனொடு மயங்கும். இச்சூத்திரத்துக் கூறப்படுவது ஈரொற்றுடனிலை; தனிமெய் தனிமெய்யொடு ஈரொற்றாக உடனின்று மயங்கும் நிலை. அடுத்து வரும் உயிர்மெய்க்கண் வேற்றுமைநயம் கொண்டு காணின் மூவொற்று உடனிலையாம். ஈர்க்கு என்புழி, ர் க் (குகரத்தில் முதல்நிற்கும்) க் - என மூவொற்று உடனிற்றல் காண்க. நூன்மரபில் இச்சூத்திரத்தை வைப்பின் இவ்வாறு மூவொற்றுடனிலை காணப்படும். இவ்வியலில் ஒற்றுமை நயம்பற்றியே வரும் ஈரொற்றுடனிலையே கொள்ளப்படும்.

**நச்சினார்க்கினியம்**

## *48. ஈரொற்று உடனிலை*

**யரழ என்னும் மூன்றும் ஒற்றக்**
**கசதப ஙஞநம ஈர்ஒற்று ஆகும்.**

இஃது ஈரொற்று உடனிலை ஆமாறு கூறுகின்றது.

***இ-ள்:*** *ய ர ழ . . . . . ஒற்ற - ய ர ழ என்று கூறப்படும் மூன்றுபுள்ளியும் ஒற்றாய் நிற்ப; க ச த ப . . . . ஆகும் - க ச த ப-க்களும் ங ஞ ந ம - க்களும் வந்து ஈரொற்றாய் நிற்கும் எ-று.*

உ-ம் : வேய்க்க வாய்ச்சி பாய்த்தல் வாய்ப்பு - எனவும், பீர்க்கு தேர்ச்சி வார்த்தல் ஆர்ப்பு- எனவும், வாழ்க்கை தாழ்ச்சி தாழ்த்தல் தாழ்ப்பு எனவும், காய்ங்கனி தேய்ஞ்சது காய்ந்தனம் காய்ம்புறம் எனவும், நேர்ங்கல் நேர்ஞ்சிலை நேர்ந்திலை நேர்ம்புறம் - எனவும் வரும். ழகாரத்திற்கு வாழ்ந்தனம் - என இக்காலத்து நகர ஒற்று வரும். ஏனைய மூன்றும் இக்காலத்து வழங்குமெனின் உணர்க.

இனித் தாழ்ங்குலை தாழ்ஞ்சினை தாழ்ந்திரள் வீழ்ம்படை - என அக்காலத்து வழங்கும் என்று

இத்தொகைச்சொற்கள் காட்டலும் ஒன்று. உரையாசிரியரும் இருமொழிக்கண் காட்டியவற்றிற்கு அவ்வீறுகள்தோறும் கூறுகின்ற சூத்திரங்கள் பின்னர் வேண்டாமை உணர்க. இஃது ஈரொற்று உடனிலை ஆதலின் ஈண்டு வைத்தார்.

இனி, நெடிற்கீழே அன்றிப் பல எழுத்துத் தொடர்ந்து நின்றதன் பின்னும் ஈரொற்று வருதல் கொள்க. அவை வேந்தர்க்கு, அன்னாய்க்கு என்றாற் போல் வனவாம். *(15)*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ.48.*** **யரழ என்னும்...ஈரொற்று ஆகும்.**

தனிமொழியில் யகர ரகர ழகர மெய்களுக்கு முன் முறையே ஙகர ககரமும், ஞகர சகரமும், நகர தகரமும், மகர பகரமும் இணைந்து ஈரொற்றாய் நிற்கும் என்பது இச்சூத்திரத்தின் பொருள் ஆகும்.

| (உ-ம்) | ங்க் | ஞ்ச் | ந்த் | ம்ப் |
|---|---|---|---|---|
| ய் | ... | தேய்ஞ்சது | மேய்ந்தது | மொய்ம்பு |
| ர் | ... | ... | சேர்ந்தது | ... |
| ழ் | ... | ... | வாழ்ந்தது | ... |

பலவற்றிற்கு உதாரணம் இறந்தன. காட்டப்பட்ட வினைச்சொற்களுக்கும் பெயர்ச் சொற்களைக் காட்டுதல் சிறப்புடையதாகும்.

வேய்ங்குழல் ஆர்ங்கோடு பாழ்ங்கிணறு என்பவை போல்வன இருமொழிப்புணர்ச்சி ஆதலின் ஈண்டைக்கு ஆகா என்க. .....முன்னர் விதி கூறி அவற்றைப் புணர்ப்பர் (புள்ளி...65, 68, 92).

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

***சூ.48.*** **'மொழிப்படுத்து இசைப்பினும்.....'**

சொல்லுக்கு உறுப்பாகி ஒலிக்கும்போதும், புணர்மொழியில் வெவ்வேறு மாற்றம் கொண்டு

ஒலிக்கும்போதும், கூட்டுவடிவம் பெறும்போதும் ஒலியன்கள் தமக்குரிய பொருண்மைத் தன்மையினின்றும் திரிவதில்லை என்று தெளிவு செய்வர் இலக்கணப் புலவர். அஃதாவது சொல்லுக்கு உறுப்பாவதற்கு முன்னும், புணர்மொழி மாற்றம் பெறுவதற்கு முன்னும், ஓரெழுத்துப் பெற்றிருந்த முதற்பொருண்மையாற்றல் எதுவோ, அஃது அவற்றுக்குப் பின்னும் திரிவுபடாது அவ்வாறே இருக்கும் என்றவாறு. *(கூட்டுவடிவம் பெறுதல்:* **கயி**லை: கைலை, **வயி**ரம்: வைரம், ஐயர்: **அய்**யர்; **அவ்**வை: ஔவை முதலாகக் காண்க.)

**இளம்பூரணம்**

***49. குற்றொற்று ஆகாதன***

**அவற்றுள்**
**ரகார ழகாரம் குற்றொற்று ஆகா.**

(இச்.....எனின்) ரகார ழகாரங்கட்கு எய்தியது ஒருமருங்கு மறுத்தல் உணர்....ற்று.

(இ-ள்.) மேற்கூறப்பட்ட மூன்றனுள்ளும் ரகாரமும் ழகாரமும் குறில்கீழ் ஒற்றுஆகா; நெடில்கீழ் ஒற்று ஆகும். அவை குறில்கீழ் உயிர்மெய்யாம் எ-று.

(உ-ம்.) தார், தாழ் - என நெடில்கீழ் ஒற்றாய் நின்றன. கரு, மழு-எனக் குறில்கீழ் உயிர்மெய்யாய் நின்றன.

இவ்வாறு விலக்கினமையின், யகரம் பொய் எனவும், நோய் எனவும் இரண்டிடத்தும் ஒற்று ஆயிற்று.

'குற்றொற்று' என்பது குறிதாகிய ஒற்று எனப் பண்புத்தொகை. குறில்கீழ் நிற்றலால் குறியது எனப்பட்டது. ஈண்டுக் குறில் நெடில் என்கின்றது, மொழிக்கு முதலெழுத்தினை என உணர்க.

இது மேல்(22) வரையறை இல எனப்பட்ட உயிரும் மெய்யும் மயங்கும் மயக்கத்திற்கு ஒரு வரையறை கண்டு கூறியவாறு. *(16)*

**நச்சினார்க்கினியம்**

### *49. குற்றொற்று ஆகாதன*

**அவற்றுள்,**
**ரகார ழகாரம் குற்றொற்று ஆகா.**

இஃது எய்தியது ஒருமருங்கு மறுத்தல் கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள் - முற்கூறிய மூன்றனுள்; ரகார ழகாரம் - ரகாரமும் ழகாரமும்; குற்றொற்று ஆகா - குறில்கீழ் ஒற்று ஆகா, குறில்கீழ் உயிர்மெய்யாம்.

கீழ் என்னும் உருபு தொகுத்துக் கூறினார். ஆகாதனவற்றிற்கு உதாரணம் இன்று.

உ-ம் : கார் வீழ் - என நெடிற்கீழ் ஒற்றாய் வந்தன. கரு மழு என குறிற்கீழ் உயிர்மெய்யாய் வந்தன. இவற்றை விலக்கவே, யகரம் பொய் எனவும் நோய் எனவும் இரண்டிடத்தும் ஒற்றாய் வருதல் பெற்றாம். புகர் புகழ் புலவர் - என்றாற்போல்வனவோ எனின்,(1) மொழிக்கு முதலாம் எழுத்தினைச் சொல்வனவற்றிற்கே ஈண்டு ஆராய்ச்சி ஆதலான், அவை வேண்டியவாறே வரும் என்று உணர்க. அன்றியும், 'குற்றொற்று' என்றே சூத்திரம் செய்தலின், குறிலிணைஒற்றினைக் காட்டிக் கடாவல் ஆகாமை உணர்க. இது வரையறையின்றி உயிர்மெய்யொடு தனிமெய் மயங்குவனவற்றில் சில ஒற்றிற்கு வரையறை ஈண்டுக் கூறியது. *(16)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 49*

1. மொழிக்கு முதலில் நிற்கும் எழுத்துத் தனிக்குறிலாயின் அதன்கீழ் வருவனவற்றிற்கே ஈண்டு ஆராய்ச்சியாதலின், குறிலிணையும் பலவும் ஆகிய

எழுத்துக்களின் கீழ் வருவனவற்றிற்கு இது பொருந்தாது என்பது.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*சூ.49.* **அவற்றுள்**
**ரகார ழகாரம் குற்றொற்று ஆகா.**

'குற்றொற்று ஆகா' என்று பொதுவாக விலக்கியதனால், கசதபஙஞநம-க்கள் இணைந்து வரும்வழியே அன்றி, யாண்டுமே அவை குறிற்கீழ் ஒற்றாக வாரா என்பது போதரும். ஆகலின் இரு - விழு என்றல்லாதே, கன்னடத்திற் போல இர் - விழ் - என்று வாரா என்றவாறாகும்.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

*சூ.49, 50.* **'அகர இகரம் ஐகாரம் ஆகும்,**
**'அகர உகரம் ஔகாரம் ஆகும்'** -

இவ்விடங்கள் அஇ (வஇரம்) அஉ (கஉரி) என்று இகரத்தையும் உகரத்தையும் தனிஉயிர்வடிவாக எழுதல் ஏலாது. (முறையே யகரமும் வகரமும் உடம்படுமெய்யாக வந்தியைய, வயிரம் கவுரி என்று ஒலிக்கவும் எழுதவும்படும் என்றவாறு.)

'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' என்ற கிளவியாக்க இயலின்படி, 'ஐகாரம் ஆகும்' 'ஔகாரம் ஆகும்' என வினைப்படுத்தியமையால் இவை இயற்கையில எனவும், ஐகாரஔகார ஒலியன்கட்கு இயற்கையான தனிவடிவு உள எனவும் கொள்க.

**இளம்பூரணம்**

## *50. தொடர்மொழி ஈற்றுமெய் இயல்பு*

**குறுமையும் நெடுமையும் அளபின் கோடலின்**
**தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல.**

*(இச்....எனின்)* மேலதற்கு ஒரு புறனடை உணர்....ற்று.

(இ-ள்.) உயிரெழுத்திற்குக் குறுமையும் நெடுமையும் அளபினான் கொள்ளப்படுதலின், தொடர்மொழிக்கீழ்[1] நின்ற ரகார ழகாரங்கள் எல்லாம் நெடில்கீழ் நின்ற ரகார ழகாரங்களின் இயல்பையுடைய என்று கொள்ளப்படும் எ-று.

(உ-ம்.) அகர், புகர்; அகழ், புகழ்-எனக்கொள்க.

'புலவர்' என்றாற்போல இரண்டு மாத்திரையை இறந்ததன் பின்னும் வருமால் எனின், அவையும் *தன்னினம் முடித்தல்* என்பதனான் நெடில்கீழ் ஒற்று எனப்படும்.

'எல்லாம்' என்றதனான், ரகார ழகாரங்களே அன்றிப் பிற ஒற்றுக்களும் நெடில்கீழ் ஒற்று எனப்படும். இதனானே, விரறீது (விரல் +தீது) என்புழி, லகரம் நெடில்கீழ் ஒற்று என்று கெடுக்கப்படும். *(17)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.50.** 1. மாத்திரைவகையான் இரண்டுகுறில் ஒரு நெடிற்குச் சமமாகக் கொண்டு, விரல் + தீது என்னும் குறிலிணைக்கீழ் ஒற்றுக் கால் + தீது என்றாற்போலத் தனிநெடிற்கீழ் ஒற்றாகக் கொள்ளப்படும். விரறீது முதலியவாக, காறீது முடிந்தாற்போல வருமொழி முதல் தகரம் றகரமாகத் திரிய நிலைமொழி ஈற்று ஒற்றுக் கெட்டு முடியும்.

**நச்சினார்க்கினியம்**

## 50. நெட்டெழுத்தே மாத்திரை மிக்கு நிற்றல்

**குறுமையும் நெடுமையும் அளவின் கோடலின்**
**தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல.**

இஃது 'அளபுஇறந்து உயிர்த்தலும்' (33) என்னும் செய்யுளியலை நோக்கிய நூன்மரபின் சூத்திரத்திற்குப்

புறனடையாய் அதன்கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றுகின்றது; என்னை ? உயிரும் உயிர்மெய்யும் அளபு இறந்து இசைக்குங்கால் குறிலோ நெடிலோ இசைப்பதென மாணாக்கற்கு நிகழ்வதோர் ஐயம் அறுத்தலின்.

இ-ள் : குறுமையும் நெடுமையும் - எழுத்துக்களது குறிய தன்மையும் நெடிய தன்மையும்; அளவின் கோடலின்- மாத்திரை என்னும் உறுப்பினைச் செவி கருவியாக அளக்கின்ற அளவு தொழிலாலே செய்யுட்குக் கொள்ளப்படுதலின்; தொடர்மொழி எல்லாம் - அம்மாத்திரை தம்முள் தொடர்ந்து நிற்கின்ற சொற்கள் எல்லாம்; நெட்டெழுத்து இயல - நெட்டெழுத்து மாத்திரை மிக்கு நடக்கும்படியாகத் தொடர்ந்த சொல்லாம் எ-று.

உ-ம் : 'வருவர்கொல் வயங்கிழாஅய்' (கலி. 11) எனவும், 'கடியவே கனங்குழாஅய்' (ஷை) எனவும் குற்றெழுத்துக்கள் எல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரை மிகுத்தற்குக் கூடியவாறு உணர்க. ஏனைச்செய்யுள்களையும் இவ்வாறே காண்க. எனவே, மாத்திரை அளக்குங்கால் நெட்டெழுத்தே மாத்திரை பெற்று மிக்கு நிற்கும் என்றமையான், *எதிரது போற்றல்* என்னும் உத்திபற்றிச் செய்யுளியலை நோக்கிக் கூறியதாயிற்று. ஈண்டுக் கூறினார், நெட்டெழுத்து இரண்டுமாத்திரையின் இகந்து வரும் என்பது அறிவித்தற்கு.

'அளபு' என்று மாத்திரையைக் கூறாது 'அளவு' எனச் சூத்திரம் செய்தமையான் 'அளவு' தொழில்மேல் நின்றது. அது செய்யுளியலுள் 'மாத்திரை அளவும்' (செய். 2) என்பதனானும் உணர்க. 'இயல' என்றதனைச் செயவென் எச்சமாக்கிப் படுத்தல்ஓசையால் கூறுக. (அ)

இனித் *தன்னினம் முடித்தல்* என்பதனான், ஒற்றிற்கும் இவ்வாறே கொள்க. 'குரங்குளைப் பொலிந்த கொய்சுவல் புரவி' என்ற குறுஞ்சீர் வண்ணத்திற்கு உரிய குற்றெழுத்துக்கள் எல்லாம் இடையில்நின்ற ஒற்றெழுத்தை மாத்திரை

மிகுத்தற்குக் கூடிநின்றவாறு உணர்க. எனவே, குற்றெழுத்துக்கள் எல்லாம் ஒற்றெழுத்துக் களோடும் நெட்டெழுத்துக்களோடும் கூடி அவற்றையே ஓசை மிகுத்துநிற்கும் என்றவாறு ஆயிற்று. இதனானே 'ஒற்றிசை நீடலும்' (33) என்ற ஒற்றிசை நீடுங்கால் குற்றெழுத்தாய் நீளும் என்றார். (1) இனி, உரையாசிரியர் புகர் புகழ் - எனக் குறிலிணைக்கீழ் ரகாரழகாரங்கள் வந்த தொடர்மொழிகள் எல்லாம் தார் தாழ் - என்றாற்போல ஓசை ஒத்து நெட்டெழுத்தின் தன்மையவாம் என்றாரால் எனின், புகர் புகழ் - என்பனவற்றை நெட்டெழுத்து என்றே எவ்விடத்தும் ஆளாமையானும், நெட்டெழுத்தாகக் கூறிய இலக்கணத்தான் ஒரு பயன் கொள்ளாமையானும், செய்யுளியலுள் இவற்றைக் குறிலிணை ஒற்று அடுத்த நிரையசையாகவும் தார் தாழ் என்பனவற்றை நெட்டெழுத்து ஒற்று அடுத்த நேரசையாகவும் கோடலானும் அது பொருளன்மை உணர்க. (17)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 50**

1. இதற்கு முன்னுள்ள சூத்திரங்கள் மொழிக்கண் எழுத்துக்களது மயக்கம் பற்றியே கூறலானும், மயக்கம் அதிகாரப்பட்டு நிற்றலான் அடுத்துவரும் சூத்திரமும் மயக்கமே கூறலானும், நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்கு உரைத்தது பொருத்தமின்றாம். இளம்பூரணருரையே பொருந்துவது. அதனாற்பயன் சூ. 160 முதலியவற்றான் உணரப்படுதல் காண்க.

(அ) இயல-இயலும்படியாக. எடுத்துக்கூறின் இது வினைமுற்று; படுத்துக்கூறின், செயவென் எச்சம் என்க.

'ரகார ழகாரம் குற்றொற்றாகா' என்ற சூத்திரத்தினை அடுத்த சூத்திரம் 'குறுமையும் நெடுமையும்' எனத்தொடங்கும் இது. 'தொடர்மொழி' என்று சொல் எழுத்ததிகாரத்தில் 36, 82, 145 முதலிய எண்ணுடைய

சூத்திரங்களிலும் குற்றியலுகரப் புணரியலுள் பலவிடங்களிலும் வருகின்றது. அவ்விடங்களிலெல்லாம் 'தொடர்மொழி' ஈற்றெழுத்தையடுத்து குறிலிணை என்ற பொருளில் மாத்திரம் வரவில்லை. குறிலிணை, குறினெடில், குற்றொற்று என்பனவும் 'தொடர்மொழி' எனக்குறிப்பிடப்படுகின்றன. குறிலிணை நெடிலாகக் கொள்ளப்படும் இடங்கள் சிலவே. ஆழ்ந்து-அழுந்து, பால்-பகல், நேர்-நிகர், போது-பொழுது முதலான சில சொற்களிலேயே இவ்வமைதி காணப்படுகிறது. படவே, 'தொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத்து இயல' என்பது நச்சினார்க்கினியர் கருத்துக்குப் பொருத்தமின்றாகத் தோன்றியது போலும், நெடியதன் முன்னர் (160) என்னும் சூத்திரத்தில் கூறப்படும் புணர்ச்சி, குறிலிணை-குறினெடில்-என்பனவற்றிற்கும் ஒக்கும் என்பது அச்சூத்திரத்தின் யாதானுமொரு மிகையினாற் கொள்ளப்படத் தக்கது என்று கருதிய நச்சினார்க்கினியர், இச்சூத்திரத்தில் நெடிலை அடுத்து ஒத்த குற்றெழுத்து அளபெடையாக வந்தால், நெடில் தனியாகவும் குறில் தனியாகவும் செய்யுளியலில் அலகிடப்படுமாறு போல, எழுத்தின்கண்ணும் விட்டிசைத்து ஒலிக்கப்படாமல் நெடிலையே மூன்று மாத்திரையளவிற்றாக நீட்டியொலித்தல் வேண்டும் என்ற கருத்தினைக் குறிப்பிடுதலும் தேவை என்பது கருதி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறு உரை வரைந்துள்ளார், இச்செய்தியைப் புலப்படுத்த எழுத்ததிகாரத்தே வேறிடம் இல்லாமையின். [ப. ஆ.]

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.50. குறுமையும் நெடுமையும்....நெட்டெழுத்து இயல.**

(இ-ள்.) குறுமை நெடுமை என்பன மாத்திரையாற் கொள்ளப்படுதலின், எல்லாத் தொடர்மொழியும் நெட்டெழுத்தைக் கொண்ட ஈரெழுத்தொருமொழியின் தன்மையன.

(உ-ம்.) புகர் புகழ் பொருள் முதல்....

''நெட்டெழுத்தாகக் கூறிய இலக்கணத்தால் ஒருபயன் கொள்ளா மையின்'' என்று உரையசிரியரை நச்சினார்க்கினியர் மறுத்தார். விரல் தீது என்புழிக் குறிலிணைக்கீழ் வந்த லகர ஒற்று 'நெடிற்கீழ் ஒற்றாக' ,'நெடியதன் முன்னர்' *(161)* என்னும் சூத்திரத்தான் கெடுக்கப்படுதலின், உரையாசிரியர் உரை பொருந்துமாறு உணரப்படும் என்பது இவரது கருத்து.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.50. குறுமையும் நெடுமையும்...நெட்டெழுத்து இயல.**

இச்சூத்திரத்தில் 'அளபிற்கோடலின்' என்றதனான், 'தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல' என்பதற்கு, தொடர்மொழியிலுள்ள குறிலிணை எழுத்துக்கள் நெட்டெழுத்தின் இயலவாம் என்று பொருள் கூறுதல் தகும், அளபினான் நெட்டெழுத்து இயல ஆவன குறிலிணைகளே ஆதலின். (அளபு - மாத்திரை) அயர்பு அகழ்வு என்பன போல்பவற்றில் ரகர ழகரங்கள் குறிலிணைக்கீழ் வந்தன ஆகலின், அவை நெடிற்கீழ் வந்தன போலக் கொள்ளப்படும் என்பது கருத்து.

'அளபிற்கோடலின், தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல' என்றதனான், தொடர்மொழிக்கண் உள்ள இரண்டு குற்றெழுத்துக்கள் இரண்டுமாத்திரை பெறுவன ஆகலின், "அவை ஒருநெடில் போலக் கருதுக" என்பதே ஆசிரியர் கருத்து. அவற்றை அவர் நெடில் என்றே கூறினாரல்லர். பகல் பால் எனவும், அகழம் ஆழம் எனவும், அகம் ஆம் எனவும், துவற்றல் தூற்றல் எனவும் இவ்வாறு பலசொற்களில் இரண்டு குற்றெழுத்துக்கள் ஒருநெடிலாகி வழங்குகின்றன. இவையெல்லாம் மருவிவந்தனவே ஆயினும் இச்சூத்திரவிதியை வலியுறுத்தத் தக்கனவாய் அமைந்துள்ளன.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணஅடிகள்கூறிய பொருளே அமைவுடைப் பொருளாதல் தெளிவுறும். இச்சூத்திரம் நச்சினார்க்கினியர் கூறியவாறு பொருள்படுதலும் இல்லை.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.50.** குறுமையும் நெடுமையும்....நெட்டெழுத்து இயல.

'நெட்டெழுத்து இயல' என்றது, நெட்டெழுத்துப் போலும் இயல என்றவாறு. ஆதலின், கவர்ச்சி - புகழ்ச்சி - என்பவற்றின் முதனிலைகளாய கவர் - புகழ் - என்னும் குறிலிணை ஒற்றுக்கள் நெடிற்கீழ் ஒற்றுப்போலக் கொள்ளப்படும். அதனானன்றே, நிகர் - பகல் - துகள் - என்றாற் போல்வன நேர் - பால் - தூள் - எனத்திரிவன ஆயின?

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

**சூ.50.** 'அளபிறந்து உயிர்த்தலும்' என்ற சூத்திரம் இசைநூலில் உயிரும் ஒற்றும் தம்மாத்திரையின் நீண்டொலித்தலைக் கூறியதாதல் அச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் எழுதிய உரையானும் அதனைப் 'பிறன்கோள் கூறல்' என்னும் உத்திக்கு எடுத்துக்காட்டாகப் பேராசிரியர் குறித்தலானும் புலப்படுதலின், இசைநூற்குக் கூறும் இவ்விலக்கணம் செய்யுளியலுக்கும் உண்டெனச் சூத்திரத்தொடரைப் பிரித்துக்கூறல் பொருந்தாது. அன்றியும், செய்யுளியல் விதியை இது மாட்டெறிந்தது என்பதற்குரிய சொற்றொடர் இதனுள் காணப் படாமையானும், ஆண்டுக் கூறப்படும் விதி அளபெடைக்கண் அடங்கும் ஆதலானும், மேலைச்சூத்திரத்தில் குற்றொற்று எனப் பொதுப்படக் கூறிய அதனால் வரும் ஐயம் அகற்ற வேண்டும் ஆதலானும் நச்சினார்க்கினியர் உரை இச்சூத்திரத்தின் கருத்தன்று என்பது பெறப்படும்.

**இளம்பூரணம்**

## *51. னகார மகாரங்கள் ஈரொற்று உடனிலையாதல்*

**செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்**
**னகாரம் மகாரம் ஈர்ஒற்று ஆகும்.**

*(இச்......எனின்) செய்யுட்கள் ஈரொற்று இலக்கணம் ஆமாறு உணர்...ற்று.*

*(இ-ள்.) செய்யுட்கண் போலும் என்னும் மொழி யிறுதிக்கண், னகாரமும் மகாரமும் வந்து ஈரொற்று உடனிலையாய் நிற்கப்பெறும் எ-று.*

*(உ-ம்.) எம்மொடு தம்மைப் பொரூஉங்கால் பொன்னொடு கூவிளம் பூத்தது போன்ம் என வரும். (18)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.51.*** காரிரத்தினக் கவிராயர், 'செம்மேனி பொன்போன்ம்பல் வெண்முத்தம் போன்ம்' என்னும் பாடற்கு உரையெழுதுங்கால் 'போன்ம்' என்னும் சொல்நிலை பற்றிக் குறிக்கிறார்: ''மெல்லெழுத்து இயையின் னகாரம் ஆகும்' என்பதனான் லகாரம் னகாரமாய்த் திரிந்தும், 'னகாரை முன்னர் மகாரம் குறுகும்' என்பதனான் ஈற்று மகரம் குறுகியும், 'செய்யுள் இறுதிப் . . . ஈரொற்றாகும்' என்பதனான் ஈரொற்றுடனிலையாயும், மேலே பகரஒற்று வருதலின் செய்யுளிடைப் பட்டும், வந்த (போலும் என்ற) முற்றுப் 'போன்ம்' என்றாயிற்று. 'ஐவிரை மாண்பகழி அரம்தின்வாய் போன்ம்போன்ம்போன்ம், பின்னும் மலர்க்கண் புனல்' எனப் பரிபாடலாகிய சங்கச் செய்யுளகத்தும் பகரம் மேலே வருதலான் செய்யுளிடைப் பட்டும் வந்தமை காண்க.'' (மா. அ. பொருளணி 98 உரை)

**நச்சினார்க்கினியம்**

## *51. னகார மகாரங்கள் ஈரொற்று உடனிலையாதல்*

**செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்**
**னகாரம் மகாரம் ஈர்ஒற்று ஆகும்**

இது செய்யுட்கண் ஈர்ஒற்று இலக்கணம் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: செய்யுள் போலிமொழி இறுதிவயின்- செய்யுட்கண் போலும் என்னும் சொல்லின் இறுதிக்கண்; னகாரம் . . . ஆகும் - னகாரமும் மகாரமும் வந்து ஈரொற்று உடனிலையாய் நிற்கும் எ-று.

உ-ம் : 'அந்நூலை - முந்நூலாக் கொள்வானும் போன்ம்', 'சிதையும் கலத்தைப் பயினால் திருத்தித், திசைஅறி மீகானும் போன்ம்' (பரி. 10 : 55) என வரும். போலும் என்னும் செய்யும் என்னும் முற்று ஈற்றுமிசை உகரம் மெய்யொழித்துக் கெட்டு லகாரம் திரிந்துநின்றது. இஃது இறுதியில் முற்று; இடையில் பெயரெச்சம் ஆகிய உவமவுருபு. ஈண்டு முற்று என்பர் 'இறுதிமொழி' என்றார் (1). *(18)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 51***

1. பெயரெச்சம் பெயர்கொண்டன்றி நில்லாமையின் இறுதிச் சொல்லாய் வாராது; முற்றே இறுதிச்சொல்லாய் நிற்கும். செய்யுட் போலி இறுதிமொழி எனப் பொருள் செய்தல் வேண்டும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.51.* செய்யுள் இறுதிப்....ஈரொற்று ஆகும்.**

(இ-ள்.) செய்யுளின் இறுதிக்கண் உள்ள போலும் என்ற சொல்லின் ன் -ம்- இவ்விரண்டும் ஈரொற்று ஆகும்.

சிதம்பரம் பிள்ளை பதிப்பித்த இளம்பூரணத்தில் 'செய்யுள் இறுதிக்கண் போலும் என்னும் மொழிக்கண்' என்ற பாடமே உள்ளது. அதுவே பொருந்தும் என இவர் குறிப்பிடுகிறார்.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.51.** செய்யுள் இறுதிப்...ஈர்ஒற்று ஆகும்.

'செய்யுள் இறுதி' என்றதனான், செய்யுளின் ஈற்றில் இருப்பதாகிய 'போலும்' என்னும் சொல்லே போன்ம் என்று ஆகும்; பிறவிடத்தில் அவ்வாறு ஆதல்இல்லை என்பது போதரும். ஆயினும், 'வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்'(கலி.முல்லை.1) என்றும், 'குடர்கூளிக் கார்த்துவான் போன்ம்' (ஷை) என்றும் 'தோளின் திருகுவான் போன்ம்' (ஷை) என்றும், 'பெருங்கல் அடாரும் போன்ம் என விரும்பி' (புறநா.19) என்றும் இடையில் வந்துள்ளது. (அஃது அமையு மாறு இல்லை என்பது ரெட்டியார் கருத்து.)

[செய்யுளிடைக்கண்ணும் இப்'போன்ம்' நிகழுமாறு கண்டுவைத்தே, 'செய்யு ளிறுதிப் போலி மொழிவயின்' என்ற தொடரை, 'செய்யுட் போலிமொழி இறுதிவயின்' என்று நச்சினார்க்கினியர் கொண்டுகூட்டிப் பொருள்கொண்டு, செய்யுளிடைவயினும் 'போன்ம்' நிகழுமாற்றை வழுவமைதி யாக்காது வழாநிலையாகக் காண்கின்ற உரைநயம் பாராட்டற்பாலது.]

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.51.** செய்யுள் இறுதிப்....ஈரொற்று ஆகும்.

போலும் என்னும் இவ்விடைச்சொல் வடிவத்தால் செய்யும் என்னும் முற்றுப் போறலின், செய்யும் என்னும் முற்று வாய்பாட்டான் வரும் பிற சொற்களும் விகாரப்பட்டு ஈரொற்றாய் இறுதிக்கண் வருதலை '**உரையிற் கோடல்**' என்னும் உத்தியால் கொள்க. எ-டு: 'மருளினும் எல்லாம் மருண்ம்' 'கட்சியுள் காரி கலுழ்ம்' (பு.வெ.மா.1:3)

['மந்திர நாமம் வந்துநீர் கன்ம் என' (பெருங்.II:11:93) என முன்னிலைப் பன்மையாகிய ஏவல்முற்றின்கண்ணும்

இவ்வீரொற்றுடனிலை நிகழ்தலின், "செய்யும் என்னும் முற்றுவாய்பாட்டான் வரும் பிற சொற்களும் விகாரப்பட்டு ஈரொற்றாய் இறுதிக்கண் வரும்" என்னும் இவர்கூற்று ஆராயப்படும் என்க.]

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ.51.** 'அகரத்து இம்பர்......'

உறுப்பாக வரும்போது 'அய்' என்ற இரட்டைவடிவு பெறும் என்றமையால், ஓரெழுத்தொருமொழியாகிய தனிநிலையில் இது வாராது என்பதும், ஐ என்ற தன்வடிவே பெறும் என்பதும் தெளிவாம். 'ஐ வியப்பாகும்' என்பது உரியியல் நூற்பா. ஆங்கிலத்திலும் ஒன்பதாவது எழுத்தாகிய ஐ ஒலி தனிப்படுங்காலை தனித்த ஒருவடிவன் பெறுதலை (I) ஒப்பு நோக்குக.

**இளம்பூரணம்**

## 52, மகாரம் குறுகுதல்

**னகாரை முன்னர் மகாரம் குறுகும்.**

(இச்......எனின்) அரையளவு குறுகல் மகரம் உடைத்தே (13) என்பதற்கு ஒரு புறனடை உணர்.....ற்று.

(இ-ள்.) மேற்கூறப்பட்ட னகாரத்தின் முன் வந்த மகாரம் மாத்திரை குறுகி நிற்கும் எ-று. (19)

**நச்சினார்க்கினியம்**

## 52. மகாரம் குறுகுதல்

னகாரை முன்னர் மகாரம் குறுகும்.

இஃது அரையளபு குறுகும் (13) என்ற மகரத்திற்குக் குறுகும் இடம் இதுவென்கின்றது.

இ-ள்: னகாரை . . . குறுகும்-முற்கூறிய னகரத்தின்முன்னர் வந்த மகரம் தன் அரைமாத்திரையின் குறுகிநிற்கும் எ-று.

உ-ம் : போன்ம் என முன்னர்க் காட்டினாம். 'னகாரை' என இடைச்சொல் ஈறு திரிந்து நின்றது.

இனி, *தன்னினம் முடித்தல்* என்பதனான், ணகாரஒற்றின் முன்னும் மகாரம் குறுகுதல் கொள்க. 'மருளினும் எல்லாம் மருண்ம்' என வரும். *(19)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.52.** **னகாரை முன்னர் மகாரம் குறுகும்.**

(இ-ள்.) னகரஒற்றின் பின்னருள்ள மகரஒற்றுத் தன் இயல்பு மாத்திரையினின்றும் குறுகும்.

இச்சூத்திரம் இவ்வதிகாரத்து 13ஆம் சூத்திரத்திற்கு ஒழிபு.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.52.** **னகாரை முன்னர் மகாரம் குறுகும்.**

"தன்னினம் முடித்தல் என்பதனான் ணகாரஒற்றின் முன்னும் மகாரம் குறுகுதல் கொள்க. 'மருளினும் எல்லாம் மருண்ம்' என வரும்" என்று நச்சினார்க்கினியர் கூறினார். ஆசிரியர், மேற்சூத்திரத்தால் போலிமொழியில் னகாரமகாரம் ஈரொற்றாகும் என்று கூறி, இச்சூத்திரத்தில் அம்மகரம் குறுகும் என்று விதித்தலின், மருள் என்னும் சொல்முன் வரும் மகரம் குறுகும் என்றல் அவர் கருத்து அன்று...........இளம்பூரண அடிகள் அவ்வாறு காட்டாமை அறியத்தக்கது.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.52.** **னகாரை முன்னர் மகாரம் குறுகும்.**

மேலைச் சூத்திரத்து உரையிற்கோடலான் கொண்ட 'மருண்ம்' என்பதன்கண் உள்ள ணகரத்தின் முன்னரும் குறுகும் எனக் கொள்க.

[அவ்வழி, கலுழ்ம் - செய்ம் - என்றாற் போல்வன வற்றுள் வரும் மகரம் குறுகாது என்க. என்னை? மகரத்தின்மேல் நிற்பவை இடையெழுத்து ஆகலின் என்க. அதனான் லகார ளகாரங்கள் திரிந்த னகார ணகாரம் ஆகிய மெல்லினமே மகரம் குறுகுதற்குச் சார்பு என்பது புலப்படும்.]

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.52.** **'ஓரளபு ஆகும் இடனுமா ருண்டே......' -**

ஐகாரம் மூவிடத்தும் குறுகுமாயின், இரண்டுமாத்திரை என்ற முதல்விதி பொருளற்றதாகி விடும். இரண்டுக்கும் ஒன்றுக்கும் இடைப்பட்டு ஒன்றரை மாத்திரையாக வரும் என்பதும் செம்பாக மரபுக்கு மாறாம்.

'ஓரளபு ஆகும்' என்று தொல்காப்பியம் சொல்வது தகும்.

சிலசொல்லிடையே ஆராயுமிடத்து 'அய்' என்பது இரண்டுமாத்திரை அன்றி ஒருமாத்திரையாக ஒலிப்பதும் உண்டு. இது வழக்கிற்கும் செய்யுட்கும் பொது. வழக்கு: அய்ம்பது, அய்ந்து, மய்யல், வய்யம் - என வரும்.

**செய்யுள் :**

**'அய்யம் தீரப் பொருளை உணர்த்தலும்**
**மெய்நடு நிலையும் மிகுநிறை கோற்கே.'**

*(நன். பாயி.)*

இந்த அளபுகுறுக்கம் செய்யுட்குத் தொடை யொழுங்குக்கு மிகவும் ஆளப்படும். அவ்விடங்களில் 'அய்' என்ற வடிவம் பெறவும் எழுதப்படும் என்க.

## 53. எழுத்தியல் திரியாமை

**மொழிப்படுத்து இசைப்பினும் தெரிந்துவேறு**
**இசைப்பினும் எழுத்து இயல் திரியா என்மனார்**
**புலவர்.**

*(இச்....எனின்)* எழுத்துக்கட்கு மொழிக்கண் மாத்திரை காரணமாகப் பிறப்பதோர் ஐயம் தீர்த்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* மொழிக்கண் படுத்துச் சொல்லினும், தெரிந்து கொண்டு வேறே சொல்லினும். உயிரும் மெய்யும் ஆகிய எழுத்துக்கள் பெருக்கம் சுருக்கம் உடையன போன்று இசைப்பினும், தத்தம் மாத்திரை இயல்பின் திரியா என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* அகல், அ; ஆல், ஆ-எனவும், கடல், க; கால், கா-எனவும் கண்டுகொள்க.

வேறு என்றதனான், எடுத்தல், படுத்தல் முதலிய ஓசை வேற்றுமைக் கண்ணும் எழுத்தியல் திரியா என்பதூஉம் கொள்க. *(20)*

**நச்சினார்க்கினியம்**

## 53. எழுத்தியல் திரியாமை

**மொழிப்படுத்து இசைப்பினும் தெரிந்துவேறு**
**இசைப்பினும்**
**எழுத்தியல் திரியா என்மனார் புலவர்.**

இஃது ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் ஈண்டு எழுத்துக்களொடு கூட்டி எண்ணப்பட்டு நிற்கும் என்பதூஉம்,

செய்யுளியலுள் எண்ணப்படாது நிற்கும் என்பதூஉம் கூறுகின்றது.

இ-ள் : தெரிந்து - ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் பொருள் தரும் நிலைமையை ஆராய்ந்து; மொழிப்படுத்து இசைப்பினும் - சொல்லாகச் சேர்த்துச் சொல்லினும்; வேறு இசைப்பினும் - செய்யுளியலுள் ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் பொருள்தருமேனும் மாத்திரை குறைந்து நிற்கும் நிலைமை நோக்கி எழுத்து எண்ணப்படா என்று ஆண்டைக்கு வேறாகக் கூறினும்; எழுத்து இயல் . . . புலவர் - அவ்விரண்டிடத்தும் அரைமாத்திரை பெற்று நிற்கும் ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் முற்கூறிய எழுத்தாம் தன்மை திரியா என்று கூறுவர் புலவர் எ-று.

இதனான் ஒற்றும் ஆய்தமும் குற்றுகரமும் எழுத்தாகிநின்று பொருள் தந்தும், எழுத்து எண்ணவும் அலகிடவும் பெறா என்பது கூறினார்ஆயிற்று. தெரிந்துவேறு இசைத்தல் குற்றுகரத்திற்கு இன்று ஆதலின், (அ) **ஏற்புழிக்கோடலான்** ஒற்றிற்கும் ஆய்தத்திற்கும் கொள்க.

உ-ம் : அல் இல் உண் எண் ஒல் - எனவும், கல் வில் முள் செல் சொல் - எனவும், ஆல் ஈர் ஊர் ஏர் ஓர் - எனவும், கால் சீர் சூல் தேன் கோன் - எனவும், உயிரும் உயிர்மெய்யும் ஆகிய குற்றெழுத்தையும் நெட்டெழுத்தையும் ஒற்றெழுத்துக்கள் அடுத்துநின்று பொருள் தந்தவாறு காண்க. கடாம் உடையான் திருவாரூர் அகத்தியனார்-என ஈரெழுத்தையும் மூவெழுத்தையும் நாலெழுத்தையும் ஐயெழுத்தையும் இறுதியிலும் இடையிலும் ஒற்று அடுத்துநின்று பொருள் தந்தவாறு காண்க. 'உயிரில் எழுத்தும் எண்ணப் படாஅ, உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான' (செய். 44) என்பது எழுத்து எண்ணப்பெறாமைக்கு விதி.

இனி, இச்சூத்திரத்திற்கு எழுத்துக்களைச் சொல்லாக்கிக் கூறினும் பிறிதாகக் கூறினும் மாத்திரை திரியாது என்று பொருள்கூறி, அகரம் என்புழியும் அ என்புழியும் - ஆலம்

என்புழியும் ஆ என்புழியும் - ககரம் என்புழியும், க என்புழியும் - காலம் என்புழியும், கா என்புழியும் - ஓசை ஒத்து நிற்கும் என்றால், அது முன்னர்க் கூறிய இலக்கணங்களால் பெறப்படுதலின் பயனில் கூற்றாம் என்க. (20)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 53

ஒற்றும் குற்றுகரமும் செய்யுளியலுள் எண்ணப்படாது நிற்றலை மனங்கொண்டு நச்சினார்க்கினியர் கொண்டுகூட்டி யுரைக்கும் சூத்திரப்பொருளால் பெரும்பயன் இன்றாம். ஏடெழுவோரால், முன்னும் பின்னும் முரண்பட வாக்கியங்கள் சேர்க்கப்பட்டுள. இளம்பூரணர் உரையே மலைவற்றதாகக் கொள்ளப்படும். அவருரையை அடியொற்றியே நன்னூலாரும் 'மொழியாய்த் தொடரினும் முன்னனைத்து எழுத்தே' என்றார். [ப. ஆ.]

*(அ)* குற்றியலுகரம் நேர்பு நிரைபு அசைகளாக நின்று எழுத்து எண்ணப்பட்டு நிற்கும் என்பதாம்.

உயிரெழுத்தோ உயிர்மெய்யெழுத்தோ தனித்து ஒலித்தற்கண்ணேயே மாத்திரை எனும் ஒலிவரையறை பின்பற்றப்படும்; மொழியிடைப்படுத்து ஒலித்தற்கண், குறில் நெடில் வேறுபாடு புலப்படுமேயன்றி, ஒரு மாத்திரை இருமாத்திரையளவாக எழுத்துக்கள் ஒலிக்கப்படுதல் நடைமுறையில் இல்லை. ஒருமாத்திரைக் கால வெல்லைக்குள் ஒரு சொல்லே ஒலிக்கப்பட்டுவிடும். ஆதலின், நடைமுறையையுட்கொண்டு, 'மொழியாய்த் தொடரினும் எழுத்து ஒரே தன்மைத்து' என்று உரைசெய்வதை நச்சினார்க்கினியர் ஏற்கவில்லை. நூன்மரபில் குறிப்பிட்ட எழுத்துக்கள் தொடருமாறும், அவ்வெழுத்தானாம் மொழியது மரபும் உணர்த்தும் இம்மொழிமரபில், தாம் நூன்மரபு செய்யுளியலையும் உட்கொண்டு அமைக்கப்பட்டது என்று கூறிய இயைபிற்கு ஏற்ப,

எழுத்துக்கள் செய்யுளியலில் கணக்கிடப்படும் முறையைச் சுட்டி அம்முறை எழுத்ததிகாரமுறைக்கு வேறுபட் டிருப்பினும் அம்முறையான் எழுத்துக்களின் இயல்பு திரியாது என்று குறிப்பிடவேண்டிய இன்றியமையாமை நேர்ந்தமையின், அதனை இச்சூத்திரத்தாற் குறிப்பிட்டுள்ளார்.

**சிவஞானமுனிவர் உரைக்குறிப்பு**

*சூ. 53.* [இச்சூத்திரத்திற்கு இளம்பூரண அடிகள் எழுதிய பொருளையே சிவஞான முனிவரும், தொல்காப்பியப் பாயிர விருத்தியின் ஆசிரியராகிய அரசஞ்சண்முகனாரும் தம் உரைகளில் எழுதுவாராயினர். நன்னூலாரும் இக்கருத்தைக் கொண்டே 'மொழியாய்த் தொடரினும் முன்னனைத்து எழுத்தே' *(127)* என்று சூத்திரம் செய்துள்ளார்.] எ. ஆ. பக். 56

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*சூ.53.* **மொழிப்படுத்து இசைப்பினும்....என்மனார் புலவர்.**

*(இ-ள்.)* எழுத்துக்கள் மொழியின்கண் சேர்த்துக் கூறப்படினும், மொழிகளினின்று பிரிக்கப்பட்டுத் தனியாய் ஒலிக்கப்படினும் அவை தம் இயல்பினின்றும் மாறா என்று கூறுவர் புலவர்.

எழுத்துக்களின் இயல்பாவன, அவை பிறக்கும் இடம் - அவற்றின் முயற்சி - மாத்திரை - முதலியனவாம்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*சூ.53.* **மொழிப்படுத்து இசைப்பினும்....என்மனார் புலவர்.**

இச்சூத்திரம் கூறியது எற்றிற்கோ எனின், தனியே மெய்யும் உயிருமாய் நின்ற எழுத்துக்கள் ஒருங்குசேர்ந்து உயிர்மெய்யாய் ஒலித்தவழி மாத்திரைக்குறைவு நேர்ந்தாங்கு, பல எழுத்துக்கள் ஒருங்கே ஒருசொல்லாகச் சேருமிடத்து

மாத்திரைக் குறைவு நேருங்கொல்லோ என ஐயம் தோன்றும் ஆகலின், அவ்வையம் தோன்றாதிருத் தற்குக் கூறினார் என்று கொள்க.

நச்சினார்க்கினியர் செய்யுளியலுக்கே பொருந்து கின்ற சில இலக்கணங்களை உட்கொண்டு, இவ்வதிகாரச் சூத்திரங்களுக்குப் பொருள் கூறுதல் சிறிதும் பொருந்துவது அன்று.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணஅடிகள் எழுதிய பொருளையே சிவஞானமுனிவரும், தொல்காப்பியப் பாயிரவிருத்தியின் ஆசிரியராகிய அரசஞ்சண்முகனாரும் தம் உரைகளில் எழுதுவாராயினர். நன்னூலாரும் இக்கருத்தைக் கொண்டே 'மொழியாய்த் தொடரினும் முன்னனைத்து எழுத்தே' *(127)* என்று சூத்திரம் செய்துள்ளார்.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

*சூ.53.* **'இகர யகரம் இறுதி விரவும்'** -

அகரத்திற்கே பின்னே இகரம், அகரத்திற்குப் பின்னே வகரம் என இவ்விடங்களில் அகரம் பொதுவாக முன் நிற்கிறது. இகர யகரமே இறுதியில் வேறுபடுகின்றன. இவை இறுதியில் எப்படி வரும் என்பதனைத் தெளிவிக்க எழுந்தது இந்நூற்பா.

உரை : ஐகார வடிவின் பகுதியாகச் சொல்லப்பட்ட இகரமும் யகரஒற்றும் இறுதியிடத்தில் மாறிவரும்.

யகரம் - யகரப்புள்ளி; இறுதி - அகரத்திற்குப் பின்னே; விரவும் மாறிநிற்கும்.

வய்தான், அய்ந்து, அய்ம்பது.....இந்தச் சொற்களில் இகரம் வாராது; யகரப்புள்ளியே வரும்.

இதுபோல, மயிந்தன் கயிலை வயிரம்....என்ற சொற்களில் யகரப்புள்ளி வாராது; இகரமே வரும். (இகரஉயிர் யகரஉடம்படுமெய்யொடு கூடி யகர உயிர்மெய்யாக வந்தமை அறியப்படும்.)

இதனால் நாம் அறியக் கிடப்பது என்ன? ஐகாரத்திற்கு அஇ-அய்- என இருவடிவங்கள் உள எனினும், ஒன்று வருமிடத்து மற்றொன்று வாராது எனவும், சொற்கட்குத் தக்கபடி விரவி வரும் எனவும் கொள்ளவேண்டும்.

ஒள என்பது பிற்காலத்து 'அவ்' என்ற கூட்டுவடிவம் பெற்றது. இதனைப் பிற்காலத்து இலக்கணம் விதியாக்கும். இதுவும் எழுத்தியல் மாற்றாத போலியாதலின் மரபாயிற்று. இங்ஙனம் வருவன கொள்ளத் தக்கன. (ஒளவை: அவ்வை எனவும், கௌரியர்: கவுரியர் எனவும் வகரமும் உகரமும் வருமிடம் ஓர்ந்து எழுத்துப்போலி கொள்ளப்படும் என்க.)

**இளம்பூரணம்**

## 54, போலியெழுத்து ஆமாறு

**அகர இகரம் ஐகாரம் ஆகும்.**

(இச்...எனின்) போலி எழுத்து ஆமாறு உணர்...ற்று.

(இ-ள்.) அகரமும் இகரமும் கூட்டிச்சொல்ல ஐகாரம் போல ஆகும் எ-று.

(உ-ம்.) அஇவனம் ஐவனம் - எனக்கொள்க. (21)

**நச்சினார்க்கினியம்**

## 54. எழுத்துப்போலி ஆமாறு

**அகர இகரம் ஐகாரம் ஆகும்.**

இது சில எழுத்துக்கள் கூடி ஓர் எழுத்துப் போல இசைக்கும் என எழுத்துப்போலி கூறுகின்றது.

இ-ள் : அகர . . . . ஆகும் - அகரமும் இகரமும் கூட்டிச் சொல்ல ஐகாரம் போல இசைக்கும்; அது கொள்ளற்க (அ) என்றவாறு.

போல என்றது தொக்கது.

உ-ம் : ஐவனம் அஇவனம் என வரும். 'ஆகும்' என்றதனான், இஃது இலக்கணம் அன்றாயிற்று. (21)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 54, 55*

அ இ - ஐ
அ உ - ஔ
நா இ - நாய்

என்னும் இவ்வழக்குச் சான்றோர் உரைநடையிலோ செய்யுளிலோ காணப்படாமையின், 'இவற்றைக் கொள்ளற்க' என்றார். பொதுமக்கள் வழக்கு நடையில் இவை ஒரோவழி பயிலுதலின், இவ்வழுவினைத் தவிர்க்க ஆசிரியர் இவற்றைக் கூறி விளங்கச் செய்தார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

(அ) அகரம் இகரம் கூடி ஐகாரம்போல இசைத்தலும் (அஇவனம்), அகர உகரம் கூடி ஔகாரம் போல இசைத்தலும் (அஉவை) இலக்கிய வழக்கில் காணப்படாமையின் இவ்வெழுத்துப் போலிகளைக் கொள்ளற்க என்றார்.

'ஆகும்' என்றதனான் இஃது இலக்கணம் அன்றாயிற்று- இவ்வாக்கியம் இடைச்செருகலாதல் கூடும். [ப. ஆ.]

சிவஞான முனிவர் உரைக்குறிப்பு

***சூ.54,56,58.*** ஏ ஓ ஐ ஔ என்னும் நான்கினையும் வடநூலார் சந்தியக்கரம் என்ப. கையடனார் 'நரமடங்கல் போல்' என்று உவமையும் கூறினார். இக்கருத்தே பற்றி

ஆசிரியர் 'அகர இகரம் ஐகாரம் ஆகும்' 'அகர உகரம் ஔகாரம் ஆகும்' எனக்கூறி, ஐ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுதற்கு அகரஇகரங்களே அன்றி அவற்றிடையே யகரமும் ஒத்துஇசைக்கும் என்பார். 'அகரத்து இம்பர் யகரப் புள்ளியும், ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத்தோன்றும்' என்றும், 'மெய்பெற' என்ற இலேசானே ஔ என்னும் நெட்டெழுத்தின் வடிவு புலப்படுதற்கு அகரஉகரங்களேயன்றி அவற்றிடையே வகரமும் ஒத்திசைக்கும் என்றும், இம்பர் உம்பர் என்றாற்போல்வன காலவகை இடவகைகளான் மயங்கும் ஆகலின் இவற்றில் முதற்கண் நிற்பது யாதோ இறுதிக்கண் நிற்பது யாதோ என்னும் ஐயம் நீக்குதற்கு, 'இகர யகரம் இறுதி விரவும்' என்றும் கூறினார்.

[வடமொழி இலக்கணநூல்களில், அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் ஆகியிருக்கின்றன என்றும், ஆண்டு அகரத்தின் மாத்திரை அரையும் இகரத்தின் மாத்திரை ஒன்றரையும் உள என்றும், அவ்வாறே அகரமும் உகரமும் சேர்ந்து ஔகாரம் ஆகியிருக்கின்றன என்றும், ஆண்டும் அகரத்தின் மாத்திரை அரையும் உகரத்தின் மாத்திரை ஒன்றரையும் உள என்றும் கூறப்பட்டுள்ளனவே அன்றி, அ ய் இ - என்னும் இம்மூன்றும் சேர்ந்து ஐகாரம் ஆகும் என்றும், அ வ் உ - இம்மூன்றும் சேர்ந்து ஔகாரம் ஆகும் என்றும் கூறப்படவில்லை.

இனி, சிவஞானமுனிவர் கூறியவாறு 'அகரத்து இம்பர்' என்னும் சூத்திரத்தில் 'இம்பர்' என்னும் சொல்லினால் ஐயம் நிகழ, அதனை நீக்க 'இகர யகரம்' என்னும் சூத்திரம் கூறினாராயின், இம்மொழிமரபில், மேல் 'நெட்டெழுத்து இம்பரும்' என்றும் 'குன்றிசை மொழிவயின்....நெட்டெழுத்து இம்பர்' என்றும் கூறிய சூத்திரங்களில் ஐயம் நிகழ்ந்திருக்கலாம் அன்றோ? அதனை நீக்க ஆண்டே வேறு சூத்திரம் செய்திருத்தல் வேண்டுமே! ஆண்டு 'இம்பர்' என்ற சொல்லின் பொருளை ஐயம்அறத்

தெளிந்தார்க்கு ஈண்டு ஐயம் நிகழ்தலே இன்று. இனி, ஈண்டு ஐயம் நிகழும் என்றே கொள்ளினும், அவ் ஐயத்தை 'இகர யகரம் இறுதி விரவும்' என்னும் சூத்திரம் நீக்குதல் எவ்வாறு? 'விரவும்' என்னும் பயனிலைக்கு வினைமுதல் இகரயகரமே அன்றோ? இச்சூத்திரம், ''இகர யகரங்கள் மொழியின் இறுதியில் விரவிநிற்கும்; அஃதாவது ஒன்றற்கு ஒன்று வரும்'' என்னும் பொருளைத் தருதலே அன்றி, 'யகரம் இடையிலும் இகரம் இறுதியிலும் நிற்கும்' என்னும் பொருளை எவ்வாறு தரும்? இவற்றால் சிவஞானமுனிவர் கூற்றுப் பொருந்தாது என்பது நன்கு புலனாகும்.]

எ. ஆ. பக். 61, 62

***சூ. 54, 55.*** [சிவஞானமுனிவர் இச்சூத்திரங்கள் சந்தியக்கரம் உணர்த்துகின்றன என்று கொண்டார். இவை சந்தியெழுத்தின் இயல்பினைக் கூறுவனவாயின், ஆசிரியர் இவற்றைத் தனியெழுத்துக்களின் இயல்பினைக் கூறும் நூன்மரபில் வைத்திருப்பர். அவ்வாறு அன்றி, மொழியிலுள்ள எழுத்துக்களின் இயல்பினைக் கூறும் மொழி மரபில் இவற்றை வைத்திருத்தலின், மொழியிலுள்ள ஐகாரத்திற்கு 'அஇ' என்பது வரும் என்றும், ஔகாரத்திற்கு 'அஉ' என்பது வரும் என்றுமே அவர் கருத்துக்கொண்டார் என்பது அறியப்படும்.] எ. ஆ. பக். 59.

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ.54.*** **அகர இகரம் ஐகாரம் ஆகும்.**

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***சூ.54.*** **அகர இகரம் ஐகாரம் ஆகும்.**

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***சூ.54.*** **அகர இகரம் ஐகாரம் ஆகும்.**

(கருத்து) ஒத்த பொருள் பயந்து வரும் மாற்றெழுத்துக்கள் மொழி முதற்கண் அமைந்து நிற்குமாறு கூறிகின்றது.

(எ-டு.) ஐவனம் என்பது அயிவனம் என வரும். உடம்படுமெய் இன்றி வருதல் சான்றோர் வழக்கின்கண் காணப்பெறாமையின், பெற்றே வரும் என்க. செய்யுள் ஈட்டச் சொல்லாக, வைரம் - வயிரம், கைலை-கயிலை - என வடசொற்கள் மாற்றெழுத்துப் பெற்றுவரும்.

## இளம்பூரணம்

### 55. அகர உகரம் ஔகாரம் ஆகும்.

இதுவும் அது.

(இ-ள்.) அகரமும் உகரமும் கூட்டிச்சொல்ல ஔகாரம் போல ஆகும் எ-று.

(உ-ம்.) அஉவை, ஔவை - எனக் கண்டுகொள்க. (22)

## நச்சினார்க்கினியம்

### 55. அகர உகரம் ஔகாரம் ஆகும்.

இதுவும் அது.

இ-ள்: அகர . . . ஆகும் - அகரமும் உகரமும் கூட்டிச் சொல்ல ஔகாரம் போல இசைக்கும்; அது கொள்ளற்க (அ) என்றவாறு.

போல என்றது தொக்கது.

உ - ம். : ஔவை அஉவை என வரும். (22)

## சாத்திரியார் உரைக்குறிப்பு

### சூ. 55. அகர உகரம் ஔகாரம் ஆகும்.

இவற்றின் பொருள்: நெட்டெழுத்துள் கூறப்பட்ட ஐகாரம் அகர இகரமாகவும் ஆம்; ஔகாரம் அகர உகரமாகவும் ஆம்.

(வருமாறு:) ஐவனம்; அஇவனம்; ஔவை: அஉவை.வே

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.55.** அகர உகரம் ஔகாரம் ஆகும்.

மொழியிலுள்ள எழுத்துக்களின் இயல்பைக் கூறும் மொழிமரபில் இவற்றை ஆசிரியர் வைத்திருத்தலின், மொழியிலுள்ள ஐகாரத்திற்கு அஇ என்பது வரும் என்றும், மொழியிலுள்ள ஔகாரத்திற்கு அஉ என்பது வரும் என்றும் அவர் கருத்துக்கொண்டார் என்பது அறியப்படும். இவை சந்தியெழுத்தின் இயல்பினைக் கூறுவனவாயின், ஆசிரியர் இவற்றைத் தனிஎழுத்துக்களின் இயல்பினைக் கூறும் நூன்மரபினில் வைத்திருப்பார்.

**சூ.54, 55.** சிவஞானமுனிவர் இச்சூத்திரங்கள் சந்தியக்கரம் உணர்த்துகின்றன என்று கொண்டார். இவை சந்தியெழுத்தின் இயல்பினைக் கூறுவனவாயின், ஆசிரியர் இவற்றைத் தனியெழுத்துக்களின் இயல்பினைக் கூறும் நூன்மரபில் வைத்திருப்பர். அவ்வாறு அன்றி, மொழியிலுள்ள எழுத்துக்களின் இயல்பினைக் கூறும் மொழிமரபில் இவற்றை வைத்திருத்தலின், மொழியிலுள்ள ஐகாரத்திற்கு 'அஇ' என்பது வரும் என்றும், ஔகாரத்திற்கு 'அஉ' என்பது வரும் என்றுமே அவர் கருத்துக் கொண்டார் என்பது அறியப்படும்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.55.** அகர உகரம் ஔகாரம் ஆகும்.

(கருத்து.) இதுவும் அது.

(எ-டு.) கௌரியர் - கவுரியர் எனவும், மௌரியர் - மவுரியர் எனவும் வரும்.

ஒருசார் வடசொற்கள் சான்றோர் வழக்கினுள்ளும் பயின்று வருதலான் ஆசிரியர் இவ்விலக்கணம் கூறினார் என அறிக. அன்றியும், செய்யுட்கண் நிரையசை எதுகையாக

வருமிடத்து ஐகார ஔகாரங்கள் நிரையசை ஆதற்பொருட்டு இவ்விலக்கணம் வேண்டப்பட்டது என்க.

(எ-டு.) 'பயிலுவர் முனிவர்தம் பாசம் வீடுறக்
கயிலையங் கிரிவளர் கடவுள் நாமமே'

எனவும்,

'கவினுறு செந்தமிழ்க் காதல் மேவலால்
கவுரியர் மருகனாய்க் கண்ணுதல் வந்ததே'

எனவும் வரும்.

**இளம்பூரணம்**

**56. அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்**
**ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.**

இதுவும் அது.

(இ-ள்.) அகரத்தின் பின்னர் இகரமே அன்றி, யகரமாகிய புள்ளியும் ஐ எனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவுபெறத் தோன்றும் எ-று.

(உ-ம்.) ஐவனம் 'அய்வனம்' என வரும்.

'மெய்பெற' என்றதனான், அகரத்தின் பின்னர் யகரமே அன்றி, வகரப்புள்ளியும் ஔகாரம் போல வரும் எனக் கொள்க.

(உ-ம்.) ஔவை 'அவ்வை' எனக் கொள்க. (23)

**நச்சினார்க்கினியம்**

**56. அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்**
**ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.**

இதுவும் அது.

இ-ள் : அகரத்து . . . . புள்ளியும் - அகரத்தின் பின் இகரமே அன்றி யகரம் ஆகிய புள்ளி வந்தாலும்; ஐ என் . . . . தோன்றும்- ஐ எனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவுபெறத் தோன்றும் எ-று.

உ-ம் : ஐவனம் - அய்வனம் எனவரும்.

'மெய்பெற' என்றதனான், அகரத்தின் பின்னர் உகரமே அன்றி வகரப் புள்ளியும் ஔகாரம் போல வரும் என்று கொள்க. ஔவை - அவ்வை என வரும். (23)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூ. 56.** [பிற்காலத்து ஆசியருள் ஒரு சாரார் 'அகரத்து இம்பர்' என்னும் சூத்திரத்தின் பொருளையே மேற்கொண்டு, மொழிகளில் யாண்டும் ஐகாரத்திற்கு 'அய்' என்பது வரும் என்று கூறியுள்ளனர்.

**அகரம் வகரத்தி னோடியைந்(து) ஔவாம்;**
**யகரத்தினோ(டு)**
**அகரம் இயைந்(து)ஐய(து) ஆகும் .** (எழுத். 3)

என்று வீரசோழிய நூலார் கூறியுள்ளனர். இவரும் நேமிநாத ஆசிரியரும் ஆகிய இருவரும், அகரமும் யகரமும் சேர்ந்து ஐகாரம் ஆகும் என்றனரே அன்றி, அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் ஆகும் என்றனர் அல்லர்; அன்றியும் அகரமும் வகரமும் சேர்ந்து ஔகாரம் ஆகும் என்றும் கூறியுள்ளனர். 'அகர வகரம் ஔகாரம் ஆகும் ' என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிற்றிலர் ஆதலின், இஃது அவர்காலத்து வழக்கு அன்று என்று கோடலே அமைதி. இளம்பூரணர் உரையே இக்கூற்றுக்கட்கு மூலம் ஆகும் போலும்.] எ. ஆ. பக். 61

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.56.** அகரத்து இம்பர்.....மெய்பெறத் தோன்றும்.

(இ-ள்.) மொழிக்குச் சினையாகிய ஐ என்ற நெட்டெழுத்தும் 'அய்' என்றதின் வடிவுபெறத் தோன்றும்.

(உ-ம்.) ஐவனம் : அய்வனம்

'அகரத் திம்பர் வகரப் புள்ளியும், ஔவென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்' என்ற ஒரு சூத்திரம் மயக்கத்தால் ஏடெழுதுவோரால் விடப்பட்டது என்பது தமது கொள்கையாக இவர் குறிக்கிறார்.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.56.** அகரத்து இம்பர்....மெய்பெறத் தோன்றும்.

மொழியின் இடையிலும் இறுதியிலும் நிற்கும் ஐகாரத்திற்கு அய் என்பது வரும் என்றவாறாம்.

'ஐஎன் நெடுஞ்சினை' என்றது, ஐகாரம் ஆகிய நெடிய சினையெழுத்து என்றபடி. இவ்வாசிரியர் மொழியின் முதல்எழுத்தினைச் சினைஎன்று வழங்குதல் இலர்; முதல் என்றே கூறுவர்.....ஆகலின், சினை என்றது, மொழியின் முதலெழுத்து அல்லாத எழுத்தினை என்று கோடல் அமைதி.....குற்றெழுத்து நெட்டெழுத்து ஆதலைச் 'சினை நீடிய' எனவும், நெட்டெழுத்துக் குற்றெழுத்து ஆதலை அதன் சினை கெட்டது எனவும் கூறியுள்ளார். கனா என்பது போன்ற சொல்லின் இறுதியதாகிய ஆகாரம் குறுகிக் கன என்பது போன்று ஆதலைச் 'சினைகெட' (உயிர் ம.32) என்று கூறியுள்ளது காண்க.

**சூ.56.** பிற்காலத்து ஆசிரியருள் ஒரு சாரார் 'அகரத்து இம்பர்' என்னும் சூத்திரத்தின் பொருளையே மேற்கொண்டு, மொழிகளில் யாண்டும் ஐகாரத்திற்கு 'அய்' என்பது வரும் என்று கூறியுள்ளனர்.

> 'அகரம் வகரத்தி னோடியைந்(து) ஔவாம்;
> யகரத்தினோ(டு)
> அகரம் இயைந்(து)ஐய(து) ஆகும்' (எழுத்.3)

என்று வீரசோழிய நூலார் கூறியுள்ளனர். இவரும் நேமிநாத ஆசிரியரும் ஆகிய இருவரும், அகரமும் யகரமும் சேர்ந்து

ஐகாரம் ஆகும் என்றனரே அன்றி, அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் ஆகும் என்றனர் அல்லர்; அன்றியும் அகரமும் வகரமும் சேர்ந்து ஔகாரம் ஆகும் என்றும் கூறியுள்ளனர். 'அகர வகரம் ஔகாரம் ஆகும்' என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிற்றிலர் ஆகலின், இஃது அவர்காலத்து வழக்கு அன்று என்று கோடலே அமைதி. இளம்பூரணர்உரையே இக்கூற்றுக்கட்கு மூலம் ஆகும் போலும்.

சிவஞானமுனிவர், அகர இகரமே அன்றி அவற்றோடு யகரமெய்யும் சேர்ந்து ஐகாரம் ஆகும் என்பதுவே 'அகரத்து இம்பர்...தோன்றும்' என்னும் சூத்திரத்தின் பொருள் என்றும், அதனால் அகர உகரமேஅன்றி அவற்றொடு வகரமெய் சேர்ந்து ஔகாரம் ஆகும் என்றும், ஐகாரத்தில் யகரமும் ஔகாரத்தில் வகரமும் கலந்துள்ளன என்பது ஆசிரியர் பதஞ்சலியாருக்கும் உடன்பாடு என்றும், ஐகாரத்திற்கு வரும் அகரஇகர யகரங்களுள் யகரம் இடைநிற்குமோ இறுதியில் நிற்குமோ எனத்தோன்றும் ஐயத்தினை ஒழிக்கவே 'இகர யகரம் இறுதி விரவும்' என்னும் சூத்திரம் எழுந்தது என்றும் கூறினார்.

வடமொழி இலக்கணநூல்களில், அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் ஆகியிருக்கின்றன என்றும், ஆண்டு அகரத்தின் மாத்திரை அரையும் இகரத்தின் மாத்திரை ஒன்றரையும் உள என்றும், அவ்வாறே அகரமும் உகரமும் சேர்ந்து ஔகாரம் ஆகியிருக்கின்றன என்றும், ஆண்டும் அகரத்தின் மாத்திரை அரையும் உகரத்தின் மாத்திரை ஒன்றரையும் உள என்றும் கூறப்பட்டுள்ளனவே அன்றி, அ ய் இ- என்னும் இம் மூன்றும் சேர்ந்து ஐகாரம் ஆகும் என்றும், அ வ் உ -இம்மூன்றும் சேர்ந்து ஔகாரம் ஆகும் என்றும் கூறப்படவில்லை.

இனி, சிவஞானமுனிவர் கூறியவாறு 'அகரத்து இம்பர்' என்னும் சூத்திரத்தில் 'இம்பர்' என்னும் சொல்லினால் ஐயம் நிகழ, அதனை நீக்க 'இகர யகரம்' என்னும் சூத்திரம்

கூறினாராயின், இம்மொழிமரபில், மேல் 'நெட்டெழுத்து இம்பரும்' என்றும் 'குன்றிசை மொழிவயின்.... நெட்டெழுத்து இம்பர்' என்றும் கூறிய சூத்திரங்களில் ஐயம் நிகழ்ந்திருக்கலாம் அன்றோ? அதனை நீக்க ஆண்டே வேறு சூத்திரம் செய்திருத்தல் வேண்டுமே! ஆண்டு 'இம்பர்' என்ற சொல்லின் பொருளை ஐயம்அறத் தெளிந்தார்க்கு ஈண்டு ஐயம் நிகழ்தலே இன்று. இனி, ஈண்டு ஐயம் நிகழும் என்றே கொள்ளினும், அவ் ஐயத்தை 'இகர யகரம் இறுதி விரவும்' என்னும் சூத்திரம் நீக்குதல் எவ்வாறு? 'விரவும்' என்னும் பயனிலைக்கு வினைமுதல் இகரயகரமே அன்றோ? இச்சூத்திரம், ''இகர யகரங்கள் மொழியின் இறுதியில் விரவிநிற்கும்; அஃதாவது ஒன்றற்கு ஒன்று வரும்'' என்னும் பொருளைத் தருதலே அன்றி, 'யகரம் இடையிலும் இகரம் இறுதியிலும் நிற்கும்'' என்னும் பொருளை எவ்வாறு தரும்? இவற்றால் சிவஞானமுனிவர் கூற்றுப் பொருந்தாது என்பது நன்கு புலனாகும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.56.** அகரத்து இம்பர்.....மெய்பெறத் தோன்றும்.

'புள்ளியும்' என்ற எச்சவும்மை மேற்சூத்திரத்து இகரத்தைச் சுட்டி நின்றது. அதனால் இகரமும் யகரப்புள்ளியும் ஓசையொற்றுமையுடைமை பெறப்படும்.

(எ-டு.) நிலையம் - நிலயம், குவளை - குவளய், வினையம் - வினயம், வழுதுணை - வழுதுணய் என வரும்.

இனி, இம்மாற்றெழுத்தின் (அய்) பயனாவது செய்யுட்கண் சீரும் தளையும் சிதையவரின் சிதையாமற் செய்துகோடலாம்.

(எ-டு.) 'அன்னையையான் நோவ தவமால் அணியிழாய்
புன்னையையான் நோவன் புலந்து'

என்னும் இக்குறள்வெண்பாவின் முதற்சீர் 'அன் - னை- யை - யான்' என நாலசையாக நின்று சீர் சிதைதலை 'அன் னயை யான்' என மாற்றெழுத்தான் கூறிச் சிதையாமற் செய்தலாம்.

[நிலய்யம் வினய்யம்-என மொழியிடைக்கண் ஐகாரத்திற்கு 'அய்' மாற்றெழுத்தாக வருமிடத்து, ஒரு மொழிப்புணர்ச்சியுள், தொடரும் யகர உயிர்மெய்யை நோக்கி யகரமெய் கெட்டமை இவ்வுரையாளரால் விளக்கப்பெற்றிருத்தல் சிறக்கும்.]

**இளம்பூரணம்**

## *57. ஐகாரம் ஒரு மாத்திரையாக ஒலிக்குமிடம்*

**ஓர்அளபு ஆகும் இடனுமார் உண்டே**
**தேருங் காலை மொழிவயி னான.**

*(இச்.....எனின்)* உயிர்களுள் ஒன்றற்கு மாத்திரைச் சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* ஐகாரம் ஆராயுங்காலத்து மொழிக்கண் ஓர்அளபாய் நிற்கும் இடனுமுண்டு எ-று.

*(உ-ம்.)* இடையன், மடையன் - *(தினை, பனை)* என வரும்.

'தேருங்காலை' என்றதனான், முதற்கண் சுருங்காது என்பது கொள்க. 'இடனும்' என்றதனான், இக்குறுக்கம் சிறுபான்மை என்று கொள்க. *(24)*

**நச்சினார்க்கினியம்**

## *57. ஐகாரம் ஒரு மாத்திரையாக ஒலிக்குமிடம்*

**ஓரளபு ஆகும் இடனுமார் உண்டே**

**தேருங் காலை மொழிவயி னான.**

இஃது அதிகாரத்தான் ஐகாரத்திற்கும் ஔகாரத்திற்கும் எதிரது போற்றல் என்பதனான் செய்யுளியலை நோக்கி மாத்திரைச் சுருக்கம் கூறுகின்றது.

இ-ள் : மொழிவயினான - ஒருசொல்லிடத்தே நின்ற ஐகார ஔகாரங்கள்; தேருங்காலை - ஆராயுமிடத்து; ஓர் அளபு . . . . உண்டு - ஒருமாத்திரையாய் நிற்கும் இடமும் உண்டு எ-று.

உம்மையான், இரண்டு மாத்திரை பெறுதலே வலியுடைத்தாயிற்று. 'இடனும்' என்றது, ஒருசொல்லின் முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் குறுகும்; அது செய்யுட்கண் ஓசை இடர்ப்பட்டு ஒலிக்குமிடத்து என்றற்கு. உரையிற்கோடலான், ஐகாரம் முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் குறுகும்; ஔகாரம் முதற்கண் குறுகும் எனக் கொள்க.

உ-ம் : ஐப்பசி கைப்பை, இடையன், குவளை - என வரும். 'அடைப்பையயாய் கோல்தா' எனவும் 'புனையிளங் கொங்கையயாய் வரும்' எனவும் பிறவாறும் வருவன செய்யுளியலுள் காண்க. ஔவை கௌவை - என வரும். ஔகாரம்,

'கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வேலான் -
அவ்வேலே
அம்பிற் பிறழும் தடங்கண் அவன்காதல்
கொம்பிற்கும் ஆயிற்றே கூற்று.' *(பு. வெ. மா. 4 : 32)*

எனத் தொடைநோக்கிக் குறுகினவாறும் *(அ)* காண்க. 'தேருங்காலை' என்றதனான், ஓரெழுத்தொரு மொழியும் குறுகும். கை, பை - எனவரும். *(ஆ)* *(24)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 57

*(அ)* 'கௌவை நீர்' என்னும் சீர் 'கவ்வை நீர்' என, ஔகாரம் எதுகை நோக்கி 'அவ்' என ஒன்றரை மாத்திரையாகக் குறுகியவாறு.

*(ஆ)* கை-கய்; பை-பய் என ஒன்றரை மாத்திரையாக ஐகாரம் குறுகி நின்றவாறு காண்க.

சிவஞானமுனிவர் உரைக்குறிப்பு

**சூ.57.** உயிரொடு கூடியவிடத்து வரிவடிவு வேறுபடுதலின் அதுபற்றிப் 'புள்ளி இல்லா எல்லா மெய்யும்' என மெய்மேல் வைத்துச் சூத்திரம் செய்து வடிவெழுத்து இலக்கணம் கூறினாரன்றி ஒலியெழுத்து இலக்கணம் வேறுபடக் கூறாராயினார் ஆசிரியர்.

இன்னும் அவர் ஐகாரம் மொழிமுதற்கண்ணும் குறுகும் எனவும், கை-பை- முதலியனவும் பொருளைச் சுட்டியவழிக் குறுகும் எனவும் கூறினார். இடையன்- மடையன் - தினை-பனை- என்புழிக் குறுகுதல் போல, 'வைகலும் வைகல் வரக்கண்டும்' என்புழி ஐகாரம் முதற்கண் குறுகாமை செவிகருவியாக உணரப்படுதலானும், அன்றியும் 'வைகலும் வைகல்' என்புழிக் குறுகுமாயின் 'வைகல்' என்பதனைக் குறிலிணைஒற்று என்று அசைத்தல் வேண்டும், வேண்டவே வெண்டளை சிதைதலானும், 'மொழிப்படுத்து இசைப்பினும் தெரிந்துவேறு இசைப்பினும், எழுத்தியல் திரியா என்மனார் புலவர்' என எல்லா எழுத்திற்கும் பொதுப்படக் கூறிய விதியொடு முரணி ஐகாரம் தெரிந்து வேறு இசைத்தற்கண் திரியாது எனவும் மொழிப்படுத்து இசைப்பின் யாண்டு வரினும் திரியும் எனவும் கூறுதல் பொருந்தாமையானும், 'ஓரளபு ஆகும் இடனுமாருண்டே' என்ற உம்மையான் ஓரளபு ஆகா இடனும் உண்டு என்பது

தானே பெறப்படுதலானும், ஈண்டு இடமாவது மொழி முதல் இடைகடை என மூன்றே யன்றி வேறு இன்மையானும், ஐகாரம் மொழிமுதற்கண் குறுகாது எனவே கொள்க.

(பிற்கால இருவகை வழக்கையும் நோக்கி ஐகாரமும் ஔகாரமும் மொழிமுதற்கண் குறுகியொலித்தலை நச்சினார்க்கினியர் உடன்பட்டுக் கூறினார். ஐகாரம் மொழியிடை கடைகளில் குறுகியொலித்தல் வெளிப்படை.)

[பிற்காலத்தில், மொழிமுதலிலும் ஐகாரம் 'அய்' என்பது போலக் குறுகி ஒலித்தமையானும், ஔகாரமும் 'அவ்' என்பது போல ஒலித்தமையானும் நேமிநாத நூலாரும் வீரசோழியநூலாரும், ஐகாரஔகாரங்கட்கு முறையே அகரஇகரமும் அகரஉகரமும் வரும் என்று விதியாராய், அகரயகரமும் அகரவகரமும் ஆகும் என்று கூறினர். அதனால் அவ் ஐகாரஔகாரங்கள் ஒன்றரை மாத்திரை ஒலிக்கும் என்று அறியலாகும். இஃது,

**'அளபெடை தனிஇரண்டு அல்வழி ஐஔ**
**உளதாம் ஒன்றரை தனிமையும் ஆகும்'**

என்று அவிநயர் கூறியதனாலும் அறியப்படும். இச்சூத்திரத்தில் ஒன்றரை மாத்திரையாய் வருமிடம் இஃது என்று கூறிற்றிலராயினும், அது மொழிமுதற் கண்ணே என்று கொள்ளுதல் தகும்.

**'கொய்தகைப் பொதியிற் சோலைக் குழவிய**
**முல்லை மௌவல்**
**செய்யசந் திமயச் சாரற் கருப்புரக் கன்று தீம்பூக்**
**கய்தரு மணியின் தெண்ணீர் மதுக்கலந் தூட்டி**
**மாலை**
**பெய்தொளி மறைத்து நங்கை பிறையென**
**வளர்க்கின் றாளே.'**

*(சீவக. பதுமை.102)*

இதில், 'கய்' என்பது ஒன்றரைமாத்திரை அளவினதாதல் கொய்-செய்-பெய்-என்று ஏனையடிகளில் வந்துள்ள சொற்களை நோக்கின் அறியலாகும்.] எ. ஆ. பக்.63.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.57.** **ஓரளபு ஆகும் இடனுமார் உண்டே....**
**மொழிவயி னான.**

*(இ-ள்.)* ஐகார ஔகாரங்கள் மொழியின்கண் ஆராயுமிடத்து ஓர் அளபு ஆகும் இடனுமுண்டு.

*(உ-ம்.)* இடையன், கௌவை.

ஐகார ஔகாரங்கள் என்று நச்சினார்க்கினியர் ஔகாரத்தையும் ஈண்டுக் கொண்டுள்ளமை, அப்பன்மை எழுவாய் 'உண்டு' என்ற ஒருமை வினையைக் கொண்டு முடிதலின் பொருந்தாது என்று இவர் சுட்டுவது ஏலாது. 'உண்டு' என்பதன் எழுவாய் 'இடனும்' என்பதே.

வேங்கடராஜுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.57.** **ஓர்அளபு ஆகும்....மொழிவயி னான.**

'மொழிவயினான' என்றதனான், எழுத்தாகக் கூறுமிடத்துத் தன் இரண்டு மாத்திரையின் குறையாது ஒலிக்கும் என்பது போதரும். ஐ என ஒலித்து ஓர்க.

இனி மொழியில் மாத்திரை குறைதலை, இடையன்-குவளை-என ஒலித்து அறிக.

நச்சினார்க்கினியர் ஓரெழுத்தொருமொழியும் குறுகும் என்றார். அவ்வாறு கை - பை - என்பன குறுகின், கய் பய் - என ஒன்றரை மாத்திரையாய் வரும்.

சூ.57. **'இவையின் னனவும் பிறவும் எரிபொன்**
**ஆர மார்பன்**
**கவிஞர் மதியின் அகன்ற காட்சிக் கினிய**
**விழவின்**
**சுவையின் மிகுதி யுடைய சோர்வில்**
**பொருள்ஒன் றதுதான்**
**நவையின் அகல நோக்கி நயந்த வண்ண**
**மொழிவாம்'** *(சீவக.933)*

இப்பாட்டில் இவை-சுவை-நவை- என்பவற்றிலுள்ள வகர ஐகாரம் இரண்டாம் அடியிலுள்ள வி போல ஒருமாத்திரை யளவாக ஒலிப்பது அறிக.

'இடனுமா ருண்டே' எனறதனால், ஒருமாத்திரை யளவில் ஒலித்தல் சிறுபான்மை என்பது போதரும். ஆசிரியர் மேல்சூத்திரத்தில் மொழியின் இடையிலும் கடையிலும் நிற்கும் ஐகாரத்திற்கே அகரமும் யகரப்புள்ளியும் வரும் என்று விதித்தார் என்பது போந்தமையின், அவ்வைகாரம் ஓரளபு ஆதலும் உண்டு என்று இச்சூத்திரத்தால் கூறினார். ஆகலின் மொழி முதற்கண் ஐகாரம் குறுகுதல் இல்லை. உரையாசிரிரும் ''முதற்கண் ஐகாரம் சுருங்காது'' என்றார். சிவஞான முனிவர், ''ஐகாரம் மொழிமுதற்கண் சுருங்காது'' என்றும், ஒளகாரக் குறுக்கம் இல்லை என்றும் கூறியது அறியத்தக்கது.

பிற்காலத்தில், மொழிமுதலிலும் ஐகாரம் 'அய்' என்பது போலக் குறுகி ஒலித்தமையானும், ஒளகாரமும் 'அவ்' என்பது போல ஒலித்தமையானும் நேமிநாத நூலாரும் வீரசோழியநூலாரும், ஐகாரஒளகாரங்கட்கு முறையே அகரஇகரமும் அகரஉகரமும் வரும் என்ற விதியாராய், அகரயகரமும் அகரவகரமும் ஆகும் என்று கூறினார். அதனால் அவ் ஐகாரஒளகாரங்கள் ஒன்றரை மாத்திரை ஒலிக்கும் என்று அறியலாகும். இஃது,

**'அளபெடை தனிஇரண்டு அல்வழி ஐஒள**
**உளதாம் ஒன்றரை தனிமையும் ஆகும்'**

என்று அவிநயர் கூறியதனாலும் அறியப்படும். இச்சூத்திரத்தில் ஒன்றரை மாத்திரையாய் வருமிடம் இஃது என்று கூறிற்றிலராயினும், அது மொழிமுதற் கண்ணே என்று கொள்ளுதல் தகும்.

'கொய்தகைப் பொதியிற் சோலைக் குழவிய
முல்லை மௌவல்
செய்யசந் திமயச் சாரற் கருப்புரக் கன்று தீம்பூக்
கய்தரு மணியின் தெண்ணீர் மதுக்கலந் தூட்டி
மாலை
பெய்தொளி மறைத்து நங்கை பிறையென
வளர்க்கின் றாளே.' *(சீவக. பதுமை.102)*

இதில், *'கய்'* என்பது ஒன்றரைமாத்திரை அளவினதாதல் கொய்-செய்-பெய்-என்று ஏனையடிகளில் வந்துள்ள சொற்களை நோக்கின் அறியலாகும்.

'பவ்வ நீர்ப்பவ ளக்கொடி போல்பவள்
மவ்வ லங்குழ லாள்சுர மஞ்சரி
கொவ்வை யங்கனி வாய்க்குண மாலையோ(டு)
எவ்வம் தீர்ந்திருந் தாளிது கூறினாள்.'
*(சீவக.குண.24)*

இப்பாட்டில், பவ்வம்- மவ்வல்-என்பவற்றில் ஔகாரம் ஒன்றரைமாத்திரை அளவினது ஆதல், கொவ்வை- எவ்வம்- என்னும் சொற்களை நோக்கின் அறியலாகும். பிரயோக விவேக நூலாரும் ஔகாரம் இவ்வாறு வருதலைப் பல உதாரணம் காட்டி விளக்கியுள்ளார்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.57.** ஓரளபு ஆகும்.......மொழிவயி னான.

(இ-ள்.) மொழிக்கண் மேற்கூறிய அய் என்னும் மாற்றெழுத்துக்கள் வருமிடங்களை ஆராயுமிடத்து அவை ஒருமாத்திரை அளவினவாய நிற்குமிடமும் உண்டு.

குறிலும் புள்ளியுமாக ஒன்றரை மாத்திரை அளவினவாய் நிற்கும் நிலையே அன்றி ஓர்அளபாகும் இடனும் உண்டு என்பது பொருளாகலின் உம்மை எச்சவும்மை. இடையே மாற்றெழுத்தாக நிற்கும் அய் என்பதன்முன் உயிர்வரின் ஏறி உயிர்மெய்யாய் விடுதலின் ஆண்டு ஒருமாத்திரையும், உயிரல்லாத புள்ளியோ உயிர்மெய்யோ வரின் ஒன்றரைமாத்திரையும் பெறும் ஆதலின், 'தேருங்காலை மொழிவயினான' என்றார்.

(எ-டு.) 'மங்கையைமெய்ப் பாதியிலே கொண்டான்
பரமசிவன்
கங்கையையும் சென்னிக் கரந்து'

இப்பாவினுள் முதற்சீரினை மாற்றெழுத்துத் தந்து இசைக்குங்கால், முறையே 'மங்கயய்மெய்' என்றும், 'கங்கயயும்' என்றும் வரும். வருங்கால் ஐகாரஉருபு 'மெய்' என்பதனோடு இயையுங்கால் ஒன்றரை மாத்திரையாயும், 'உம்' என்பதனோடு இயையுங்கால் ஒருமாத்திரையாயும் நிற்றலைக் கண்டுகொள்க.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ.57.** **'கசரக் கிளவியும்.....'**

வடமொழிக் கலப்பின் போக்கை அன்றே உணர்ந்த உரையாசிரியன்மார் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் வடசொற்களும் ஆரியச்சிதைவுச் சொற்களும் தமிழிலக்கணத்துக்கு (மொழிமுதலாகும் திறத்தை நோக்குமிடத்து)க் கொள்ளத்தக்கவை அல்ல என நல்லாணை காட்டினர்.

**இளம்பூரணம்**

## 58. போலியுள் இறுதி விரவும் எழுத்து

**இகர யகரம் இறுதி விரவும்.**

(இச்....எனின்) இதுவும் ஒரு போலி எழுத்து உணர்....ற்று.

(இ-ள்.) இகர ஈற்று மொழிக்கண்ணே யகரமும் அதுபோல[1] இகரமும் விரவிவரும் எ-று.

(உ-ம்.) நாய், நாஇ - எனக் கண்டுகொள்க. (25)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

*சூ.58.* 1. அதுபோல யகர ஈற்று மொழிக்கண்ணே இகரமும் - எனக் கொள்ள வேண்டும்.

இகரஈற்று மொழிக்கண் யகரம் வருதல் : தூவி - தூய்;
யகரஈற்று மொழிக்கண் இகரம் வருதல் : நாய்-நாஇ.

'நாஇ' என்புழி விட்டிசைக்காமல் இடையே யகர உடம்படுமெய் தோன்றி 'நாயி' என்று இசைக்கும் எனவும் கொள்ளலாம் போலும்.

**நச்சினார்க்கினியம்**

***58. போலியுள் இறுதி விரவும் எழுத்து***

இகர யகரம் இறுதி விரவும்.

இதுவும் போலி கூறுகின்றது.

இ-ள் : இகர . . . . விரவும் - இகரமும் யகரமும் ஒருமொழியின் இறுதிக்கண் ஓசை விரவிவரும்; அவ்விகரம் கொள்ளற்க (அ) எ-று.

நாய், நாஇ - என வரும். (25)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 58***

(அ) கொள்ளற்க என்றது, இலக்கிய வழக்கின்மையை நோக்கிப்போலும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.58. இகர யகரம் இறுதி விரவும்.**

(இ-ள்.) மொழியின் இறுதிக்கண் இகரமும் யகரமும் விரவி வரும்.

(வருமாறு.) நாஇ, நாய்.

''இவ்இகரம் கொள்ளற்க'' என்று நச்சினார்க்கினியர் கூறியமை, அவ்வாறு சான்றோர் செய்யுளுள் பயிலாமை நோக்கி. எனவே, இவ்வுரைகாரர் சிவஞானமுனிவரைப் பின்பற்றி உரைத்தமை பொருந்தாது என்பது நச்சினார்க்கினிய விளக்கத்துள் சுட்டப்பட்டுள்ளது.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.58. இகர யகரம் இறுதி விரவும்.**

மொழிகளின் இறுதியில் இகரயகரங்கள் ஒன்றற்கு ஒன்று வரும் என்பது இச்சூத்திரத்தின் பொருள்.

தாஇ - தாய்; பாஇ - பாய்; நாஇ - நாய் என வரும்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.58. இகர யகரம் இறுதி விரவும்**

(இ-ள்.) மொழி இறுதிக்கண் இகரமும் யகரப்புள்ளியும் விரவி வரும்.

(எ-டு.) நாஇ, ஆஇ (ஆஇ - பெற்றவள்) என்பவை நாய். ஆய்-என வரும். கூஇ - கூய் என வினையாயும் வரும். நாஇ- நாவினை யுடையது. தா+இ=தாவி- தாய் - என வரும்.

நாஇ ஆஇ கூஇ தாஇ - என்னும் சொற்களின் வகரம் உடம்படுமெய்யாக வருதலன்றி யகரம் வாராதாம், கூய் தாய்

என நிற்குமிடத்து வகர உடம்படுமெய் கெட விகுதி இகரமே யகரமாக நிற்பது புலனாதலின் என்க.

[ஆயிருதிணை - ஆயிருபாற்சொல் - என்புழி, ஆகார ஈறு யகர உடம்படு- மெய்பெறுதல் காண்க. வரையறை இன்மையின் ஆகார ஈறு யகர உடம்படு- மெய்யும் பெறுதலை இவ்வுரைகாரர் 208 ஆம் சூத்திரவுரையுள் நேர்ந்துள்ளமை காணலாம். ஆகவே, நாஇ ஆஇ தாஇ என்னும் சொற்களில் யகரஉடம்படுமெய் வாராது என்று இவர் குறிப்பது சாலாது.]

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

***சூ.58.*** நாய் 'நாஇ' என வரும் போலியை 'இறந்தது விலக்கல்' என்னும் உத்தியால் நன்னூலார் தம்நூலில் கூறாதொழிந்தார்.

**இளம்பூரணம்**

## *59. மொழி முதல் உயிர்கள்*

**பன்னீ ருயிரும் மொழிமுதல் ஆகும்.**

*(இச்....எனின்)* உயிரெழுத்து மொழிக்கு முதலாமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* பன்னிரண்டு உயிரெழுத்தும் மொழிக்கு முதலாம் எ-று.

*(உ-ம்.)* அடை ஆடை இலை ஈயம் உரல் ஊர்தி எழு ஏணி ஐவனம் ஒளி ஓக்கம் ஔவியம்-என வரும். *(26)*

**நச்சினார்க்கினியம்**

## *59. மொழி முதல் உயிர்கள்*

**பன்னீர் உயிரும் மொழிமுதல் ஆகும்.**

இது மேல் எழுத்தினான் மொழி ஆமாறு உணர்த்தி, அம்மொழிக்கு முதலாம் எழுத்து இவை என்பது உணர்த்துகின்றது.

இ-ள் : பன்னீர் உயிரும் - பன்னிரண்டு உயிரெழுத்தும்; மொழி முதல் ஆகும் - மொழிக்கு முதலாம் எ-று.

உ-ம் : அடை ஆடை இலை ஈயம் உளை ஊர்தி எழு ஏணி ஐவனம் ஒளி ஓடம் ஔவியம்-என வரும். (26)

### இளம்பூரணம்

## 60. மெய் உயிரொடு கூடி முதலாதல்

**உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா.**

*(இச்....எனின்)* மெய்யெழுத்து மொழிக்கு முதல் ஆமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* உயிரொடு கூடிய மெய் அல்லாதனவாகிய தனிமெய்கள் மொழிக்கு முதல் ஆகா; உயிரொடு கூடிய மெய்கள் மொழிக்கு முதலாம் எ-று.

ஈண்டு ‘உயிர்மெய்’ என்றது, வேற்றுமை நயம் கருதி[1] என உணர்க. ஈண்டு ஒற்றுமை கருதின், ‘க த ந ப ம எனும் ஆவைந்து எழுத்தும், எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே’ (61) எனச் சுருங்க ஓதுமது அன்றி, இதனான் சொல்லப்பட்ட அவ்வறுபது உயிர்மெய்யினையும் எடுத்தோதவேண்டிச் சூத்திரம் பரக்க வரும் என்பது. (27)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.60.** 1. ‘உயிர்மெய்’ ஈண்டு வேற்றுமை நயம் குறித்தலாவது, இன்ன மெய்கள் இன்ன உயிரொடு கூடி மொழிமுதலாம் என்னுமிடத்து மெய்யாகவும் உயிராகவும் உயிர்மெய்யைப் பிரித்துக் காண்டல்.

**நச்சினார்க்கினியம்**

## *60. மெய் உயிரொடு கூடி முதலாதல்*

**உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா.**

இஃது உயிர்மெய்யே மொழிக்கு முதலாம் என்கின்றது.

*இ-ள் : உயிர்மெய் . . . . ஆகா* - உயிரொடு கூடிய மெய் அல்லாதன ஆகிய தனிமெய்கள் மொழிக்கு முதலாகா என்றவாறு.

எனவே, உயிரொடு கூடிய மெய்களே மொழிக்கு முதலாவன என்றவாறாம். ஈண்டு உயிர்மெய் என்றது, வேற்றுமை நயம் *(அ)* கருதிற்று. ஒற்றுமை நயம் *(ஆ)* கருதின், மேலைச் சூத்திரத்து உயிரொடுகூடி ஆம் என்றல் பயனின்றாம். *(27)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

## *சூத்திரம் 60*

*(அ), (ஆ)* இன்னமெய் இன்னஉயிரோடு ஈறாம் என்றவழி, 'உயிர்மெய்' வேற்றுமைநயம் கருதிற்றாம். உயிர்மெய்யினை ஓரெழுத்தாகக் கருதும் ஒற்றுமைநயம் மொழிமுதலாம் உயிர்மெய்யெழுத்துக்களைக் கூறுமிடத்தே காணப்படுமன்றி, இன்னமெய் இன்ன உயிரோடு கூடி மொழிமுதல் ஆம் என்னும் சூத்திரங்களில் பயன்படுமாறு இல்லை என்பது கருத்து. (ஒற்றுமைநயம் கருதி அமைப்பின் சூத்திர எண்ணிக்கை பல்கிப்போம்)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.60.*** **உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா.**

*(இ-ள்.)* உயிரான் தொடரப்பட்ட மெய்கள் அல்லாதனவாகிய மெய்யான் தொடரப்பட்ட மெய்கள் மொழிமுதல் ஆகாவாம்.

இச்சூத்திரம் இல்லாவிடின் வரும் குற்றம் என்னையெனின், தமிழ்மொழியில் மொழிக்கு முதலில் ஒருமெய் மற்றொரு மெய்யான் தொடரப்பட்டு வாராது என்னும் செய்தி பெறப்படாதது ஆகும் என்பது. வடமொழியில் மொழிக்கு முதலாக ஸம்யுக்தாக்ஷரம் வரலாம் ஆகலின், இருமொழிக்கும் இடையேயுள்ள வேற்றுமை களுள் ஒன்றனை இச்சூத்திரம் உணர்த்துவதாக இவர் கருதுகிறார்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.60.** உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா.

*(இ-ள்.)* மெய் புள்ளி உயிர்மெய் என்னும் மெய்யெழுத்து நிலை மூன்றனுள், உயிர்மெய் அல்லாத ஏனை மெய்யும் புள்ளியும் மொழிக்கண் முதலாக வாரா. எனவே உயிர்மெய்யாயே வரும் என்றவாறு.

**இளம்பூரணம்**

***61. எல்லா உயிரொடும் கூடி முதலாம் மெய்கள்***

**கதந பம எனும் ஆவைந்து எழுத்தும்**
**எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே.**

*(இச்....எனின்)* மேல் முதலாம் எனப்பட்ட உயிர் மெய்கட்கு வரையறை கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* கதநபம - என்று சொல்லப்பட்ட அவ்வைந்து தனிமெய்யெழுத்தும் பன்னிரண்டு உயிரொடும் மொழிக்கு முதலாதற்குச் செல்லும் எ-று.

*(உ-ம்.)* கலை காலை கிளி கீரி குடி கூடு கெண்டை கேழல் கைதை கொண்டல் கோடல் கௌவை - எனவும்,

தந்தை தாடி திற்றி தீமை துணி தூணி தெற்றி தேவர் தையல் தொண்டை தோடு தௌவை - எனவும்,

நந்து நாரை நிலம் நீர் நுழை நூல் நெய்தல் நேயம் நைகை நொய்யன் நோக்கம் நௌவி - எனவும்,

படை பாடி பிடி பீடம் புகழ் பூழி பெடை பேடை பைதல் பொன் போதகம் பௌவம் - எனவும்,

மடி மாலை மிடறு மீனம் முகம் மூதூர் மெலிந்தது மேனி மையல் மொழி மோதம் மௌவல் - எனவும் வரும்.

'முதற்கு' என்னும் நான்காவது விகாரத்தால் தொக்கது. *(28)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.61.*** *திற்றி - உண்டி; தெற்றி - திண்ணை; தௌவை- தமக்கை; நைகை - நைதல்; நௌவி - பெண்மான்; மோதம் - மகிழ்ச்சி.*

**நச்சினார்க்கினியம்**

***61. எல்லா உயிரொடும் கூடி முதலாம் மெய்கள்***

**கதநபம-எனும் ஆவைந்து எழுத்தும்**
**எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே.**

இது மேல் பொதுவகையான் எய்துவித்த இருநூற்றொருபத்தாறு எழுத்துக்களைச் சிறப்புவகையான் வரையறுத்து எய்துவிக்கின்றது.

*இ-ள் : கதநபம . . . எழுத்தும் - க த ந ப ம - என்று கூறப்பட்ட அவ்வைந்து தனிமெய்யும்; எல்லா . . . . . முதலே- பன்னிரண்டு உயிரொடும் மொழிக்கு முதலாதற்குச் செல்லும் எ-று.*

*உ-ம் : கலை கார் கிளி கீரி குடி கூடு கெண்டை கேழல் கைதை கொண்டல் கோடை கௌவை - எனவும், தந்தை தாய்*

தித்தி தீமை துணி தூணி தெற்றி தேன் தையல் தொண்டை தோடு தௌவை - எனவும், நந்து நாரை நிலம் நீலம் நுகம் நூல் நெய்தல் நேமி நைவளம் நொச்சி நோக்கம் நௌவி - எனவும், படை பால் பிடி பீடு புகழ் பூமி பெடை பேடை பைதல் பொன் போது பௌவம் எனவும், மடி மாலை மிடறு மீளி முகம் மூப்பு மெலிவு மேனி மையல் மொழி மோத்தை மௌவல் - எனவும் வரும். (28)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 61***

தித்தி - புள்ளி; தூணி-அம்பு இடும் புட்டில்; தெற்றி - திண்ணை; நைவளம்- பண்விசேடம்: நௌவி - பெண்மான்; பைதல்-துன்பம்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.61 - 65.*** உரையாசிரியர் இருவரும் காட்டும் ஆரியச் சிதைவாம் சொற்கள் ஏற்கப்படாமைக்குக் காரணம் அவை ஆசிரியர் காலத்தில் வழங்கப்படாமையே அன்றி அவை வடசொல் என்பதனான் அன்று என்பது இவர் கொள்கை.

**இளம்பூரணம்**

***62. சகரம் உயிரொடு கூடி முதலாதல்***

**சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**
**அ ஐ ஔஎனும் மூன்றுஅலங் கடையே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* சகரமாகிய எழுத்தும் மேற்சொல்லப்பட்டவை போல எல்லா உயிரொடும் மொழிக்கு முதலாம், அ ஐ ஔ என்னும் மூன்றும் அல்லாதவிடத்து எ-று.

*(உ-ம்.)* சாலை சிலை சீறு சுரும்பு சூழுக செறுக சேவடி சொரிக சோறு-என வரும்.

சகடம் எனவும் சையம் எனவும் விலக்கினவும் வருமால் எனின், அவற்றுள் ஆரியச்சிதைவு அல்லாதன ‘கடிசொல் இல்லை’ (சொல் 452) என்பதனான் கொள்க. (29)

**நச்சினார்க்கினியம்**

## *62. சகரம் முதலாதற்கு ஏற்கும் உயிர்கள்*

**சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**
**அஐ ஔஎனும் மூன்றுஅலங் கடையே.**

இதுவும் அது.

இ-ள் : சகரக் . . . . . அற்றே - சகரம் ஆகிய தனிமெய்யும் முற்கூறியபோல எல்லா உயிரொடும் கூடி மொழிக்கு முதலாம்; அ ஐ . . . . கடையே - அகர ஐகார ஔகாரம் என்று சொல்லப்பட்ட மூன்று உயிரும் அல்லாதவிடத்து எ-று.

உ-ம் : சாந்து சிற்றில் சீற்றம் சுரை சூரல் செக்கு சேவல் சொல் சோறு - என வரும். சட்டி சகடம் சமழ்ப்பு - என்றாற்போல்வன ‘கடிசொல் இல்லை’ (சொல். 452) என்பதனான் கொள்க. சையம் சௌரியம் - என்பனவற்றை வடசொல்லென மறுக்க. (29)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 62***

(அ) சூரல்-பிரப்பங்கொடி; சமழ்ப்பு - வருத்தம்.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ.62.*** **சகரக் கிளவியும் ...மூன்றுஅலங் கடையே.**

சமழ்மை (நாலடி.72), சழக்க என்றாற் போல்வன பிற்காலத்தன. சையம், சௌரியம் என்பன போல்வன வடமொழிச் சொற்கள்.

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.62.** 'குற்றிய லுகரம் முறைப்பெயர்.....'

'நுந்தை' என்னும் சொற்கண் ஏனை மெய்கள் ஒப்ப நகரமே மொழிமுதல் எனவும், குற்றியலுகரச் சார்புடையது எனவும், முறைப்பெயர் அளவில் இஃது அமையும் எனவும் தெளியப்பெறும்.

'குகனொடும் ஐவ ரானோம்' என்னும் கம்பர்காப்பியப் பாடலின் ஈற்றடி 'புகலருங் கானம் தந்து புதல்வராற் பொலிந்தா னுந்தை' என்புழி,'பொலிந்தா னுந்தை' என்ற தொடர், பொலிந்தான் + நுந்தை எனவும் பொலிந்தான் + உந்தை எனவும் பிரிக்க இடங்கொடுக்கும். முதற்பிரிவுக்கு நகரமே வருமொழி முதலாம். 'உன்னொடும்' என்றில்லாமல் 'நின்னொடும்' என்று மூன்றாம் அடிக்கண் வரும் நடையை நோக்கின் 'நுந்தை' என்ற பிரிப்பே பெருமிதம் தரும்.

நுந்நாடு நுந்நகர் நுந்நுதல் - என்ற சொற்களிலும் 'ஒற்றிய நகரமிசை' நகரம் இருப்பினும், முறைப்பெயர் அன்மையின் குற்றியலுகரம் ஆகா. முறைப்பெயர்க்கே இவ்வுகரத்தை வரம்புசெய்தார் ஆசிரியர் என்க, அப்பெயர் வழக்குக் குறைந்தமையின்.

சுட்டுவினாவழி அகரத்தை ஒட்டி ஙகரம் முதலாக வரும் என்று நன்னூல் கூறும் அரிய வரவை எதிர்திறன் செய்யாத மயிலைநாதர், குற்றியலுகரத்தை ஒட்டி நகரம் முதலாகும் என்ற அரிய இலக்கணத்தையும் ஏற்பதே பொருந்தும்.

**இளம்பூரணம்**

**63. வகரம் முதலாதல்**

**உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்**
**வ என் எழுத்தொடு வருதல் இல்லை.**

இதுவும் அது.

(இ-ள்.) உ ஊ ஒ ஓ - என்று சொல்லப்படுகின்ற நான்கு உயிரும் வ என்னும் மெய்யெழுத்தொடு மொழிமுதல் வருதல் இல்லை; பிற உயிர்கள் வரும் எ-று.

(உ-ம்.) வளை வாளி விளரி வீடு வெள்ளி வேரி வையம் வெளவுக என வரும். *(30)*

**நச்சினார்க்கினியம்**

## *63. வகரம் முதலாதல்*

**உஊ ஒஓ என்னும் நான்குயிர்**
**வ-என் எழுத்தொடு வருதல் இல்லை.**

இதுவும் அது.

இ-ள்: *உஊ . . . உயிர்* - உ ஊ ஒ ஓ - என்று சொல்லப்பட்ட நான்குயிரும்; *வ என் . . . . இல்லை* - வ என்று சொல்லப்படும் தனிமெய்யெழுத்தொடு கூடி வருதல் இல்லை எ-று.

எனவே, ஒழிந்தன மொழிக்கு முதலாம் என்றவாறு ஆயிற்று.

உ-ம் : வளை வாளி விளரி வீடு வெள்ளி வேட்கை வையம் வெளவுதல் - என வரும். *(30)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 63*

(அ) வாளி - அம்பு; விளரி - நெய்தல் (யாழ்)

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

*சூ.63.* 'முற்றிய லுகரமொடு பொருள்....'

முற்றியலுகரம் வந்த நுகம் நுனி நுதல் நுண்மை - என்ற நகரச் சொற்கள் புணரும் விதிகளே குற்றியலுகரம் வந்த

நுந்தைக்கும் பொருந்தும். ஏனை நகரங்களோடு இந்நகரத்திற்குப் புணர்ச்சி வேறுபாடு இன்மை இதனால் பெறப்படும். 'ஞநம யவ - எனும் முதலாகு மொழியும்' என்னும் தொகைமரபு நூற்பாவில் நுந்தையது என உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் எடுத்துக்காட்டுத் தந்திருப்பது என் விளக்கத்திற்குச் சான்றாம். முதலெழுத்தான உயிர்முதனிலைக்கும் மெய்ம்முதனிலைக்கும் அடுத்து இச் சார்புமுதனிலையைச் சுட்டியமையானும் இக்கருத்து வலியுறும்.

நுந்தை குற்றியலுகரம் ஆதலின் உகரத்தின்மேல் புள்ளி பெறும். 'அவைதாம், குற்றிய லிகரம் குற்றிய லுகரம், ஆய்தம்' எனச் சார்பெழுத்தை எண்ணியவிடத்தும், 'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே' என அரைமாத்திரை மதிப்பிட்டவிடத்தும், ஈற்றுக் குற்றியலுகரம் என்ற சிறுகுறிப்பும் இல்லை. ஆதலின் புள்ளிப்பேறும், அரைமாத்திரை மதிப்பும் மொழிமுதற் குற்றியலுகரத்திற்கும் உண்டாம். (நு ந்தை)

'முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது, அப்பெயர் மருங்கின் நிலையிய லான' என்ற நூற்பா 'நுந்தை' முற்றியலுகரமாகவும் ஒலிக்கும் என்று கூறவில்லை. அவ்வாறு கொள்ளின், மொழிமுதற் குற்றியலுகரம் என்பது வலுவிழந்து வேண்டாத ஒன்றென ஆகிவிடாதா? 'இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது' என்று புணரியலில் மொழிமுதற்குற்றியலுகரத்திற்கு ஏனை முதனிலை ஒப்ப நன்மதிப்புக் கொடுத்தலின், முற்றியலுகரமாகவும் ஒலிக்கும் எனவும், அப்புணர்ச்சி ஒற்றுமையால் இம்முறைப்பெயர் பொருள் வேற்றுமைப்படாது எனவும் தெரிவிப்பதே இந்நூற்பாவின் கருத்து.

'அப்பெயர் மருங்கின் நிலையியலான' என்ற முறைப்பெயர்ச் சுட்டுத் தெளிவாக இருப்பவும், அகரச்சுட்டை விடுத்துப் 'பெயர் மருங்கின்' எனப் பிரித்துக்கொண்டு, குற்றியலுகரம் எல்லாம் பெயராம்;

முற்றியலுகரம் எல்லாம் முன்னிலை வினையாம் என்று பலபடக் கூறுவது உரையிகல் என்க. இன்ன ஈறெல்லாம் பெயராகும், இன்ன ஈறெல்லாம் வினையாகும் என்ற பாகுபாடும் தமிழியல்பு அன்று.

**இளம்பூரணம்**

## *64. ஞகாரம் முதலாதல்*

**ஆ எ**
**ஒ எனும் மூவுயிர் ஞகாரைக்கு உரிய.**
**இதுவும் அது.**

*(இ-ள்.)* ஆ எ ஒ - என்று சொல்லப்படும் மூவுயிர்கள் ஞகாரஒற்றொடு முதலாதற்கு உரிய; பிற உயிர் உரிய அல்ல எ-று.

*(உ-ம்.)* ஞாலம் ஞெகிழி ஞொள்கிற்று - என வரும். ஞழியிற்று என்றாற்போலும் விலக்கினவும் வருமால் எனின், அவை அழிவழக்கு என்று மறுக்க. *(31)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.64.*** ஞெகிழி - தீக்கடைகோல், கொள்ளிக்கட்டை; ஞொள்கிற்று - மெலிந்தது; ஞழியிற்று - நழுவிற்று என்னும் பொருளதுபோலும்.

**நச்சினார்க்கினியம்**

## *64. ஞகாரம் முதலாதல்*

**ஆஎ,**
**ஒஎனும் மூவுயிர் ஞகாரத்து உரிய.**
**இதுவும் அது**

இ-ள் : ஆஎ . . . . உரிய - ஆ எ ஒ - என்று கூறப்படும் மூன்று உயிரும் ஞகர ஒற்றொடு கூடி மொழிக்கு முதலாதற்கு உரிய எ-று.

உ-ம் : ஞாலம் ஞெண்டு ஞொள்கிற்று - என வரும்.

'ஞமலி கந்க மனவுச்சூல் உடும்பு' (பெரும்பாண். 132) என்பது திசைச்சொல். ஞழியிற்று என்றாற்போல்வன இழிவழக்கு. (31)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

**சூத்திரம் 64**

(அ) ஞெண்டு-நண்டு; ஞொள்கிற்று-மெலிந்தது; ஞமலி-நாய்;

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.64. ஆ எ, ஒ எனும் மூவுயிர் ஞகாரத்து உரிய.**

'ஞகாரத் துரிய' எனவே, உரிமையின்றி நகரமெய்யின் திரிபாக வரும் ஞகரத்திற்கு அகர இகர ஏகாரங்கள் சிறுபான்மை உரியவாதல் கொள்க.

(எ-டு.) (நரல) ஞரல, (நமன்) ஞமன், (நிமிறு) ஞிமிறு, (நேயம்) ஞேயம். 'ஞிமிறு' வண்டாயின், 'கடிசொல் இல்லை' (சொல்.452 ந.) என்பதனாற் கொள்க.

**இளம்பூரணம்**

**65. யகரம் முதலாதல்**

**ஆவோடு அல்லது யகரம் முதலாது.**

இதுவும் அது.

(இ-ள்.) ஆகாரத்தோடு அல்லது யகரம் முதலாகாது எ-று.

(உ-ம்.) யானை - என வரும். யவனர் என்றாற்போல விலக்கினவும் வருமால் எனின், அவை ஆரியச்சிதைவு என மறுக்க. (32)

**நச்சினார்க்கினியம்**

## *65. யகரம் முதலாதல்*

**ஆவோடு அல்லது யகரம் முதலாது.**

இதுவும் அது.

இ-ள் : ஆவோடு . . . முதலாது - ஆகாரத்தொடு கூடியல்லது யகர ஒற்று மொழிக்கு முதலாகாது எ-று.

உ-ம் : யானை யாடு யாமம் - என வரும். யவனர் யுத்தி யூபம் யோகம் யௌவனம் - என்பன வடசொல் என மறுக்க. *(32)*

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*சூ.65.* **ஆவோடு அல்லது யகரம் முதலாது.**

ய மொழிமுதற்கண் வாராத காரணம் நன்கு விளங்கவில்லை. இதனைக் குறித்து அரசஞ்சண்முகனார் செந்.தொகுதி 2 பக்.82, 3 - எழுதியிருப்பது அறிதற்பாலது.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

*சூ.65.* **'கவவோடு இயையின் ஔவும் ஆகும்'** -

'கௌ' பெயராகவும் வினையாகவும் வரும். கௌ - கொள்ளு என்ற தானியம். வௌ: வினைச்சொல்.

**இளம்பூரணம்**

## *66. முதலாகாதனவும் முதலாமாறு*

**முதலா ஏன தம்பெயர் முதலும்.**

(இச்......எனின்) மொழிக்கு முதல் ஆகாதனவும் அவ்வெழுத்துக்கள் தம் பெயர் கூறுதற்கு முதலாம் எ-று.

முதலாயின மெய் க த ந ப ம - க்களும் சகரமும் வகரமும் ஞகரமும் யகரமும் என இவை. முதலாகாத மெய் ஙகரமும்

டகரமும் ணகரமும் ரகரமும் லகரமும் ழகரமும் ளகரமும் றகரமும் னகரமும் என இவை. அவை தம்பெயர்க்கு முதலாமாறு, ஙக்களைந்தார் - டப்பெரிது - ணந்நன்று - என்றாற்போல ஒட்டிக்கொள்க.

இனி, 'ஏன' என்றதனான், முதலாம் எனப்பட்ட ஒன்பது மெய்யும் பன்னிரண்டு உயிரும் தம்பெயர் கூறும்வழியும் மொழிக்கு முதலாம் என்றவாறு. நக் களைந்தார்-நப் பெரிது-அக் குறிது-ஆவலிது-என்றாற்போல ஒட்டிக் கொள்க. *(33)*

**நச்சினார்க்கினியம்**

### *66. முதலாகாதனவும் முதலாமாறு*

**முதலா ஏன தம்பெயர் முதலும்.**

இ-ள்: முதலாவும் - மொழிக்கு முதலாகா என்ற ஒன்பது மெய்யும்; ஏனவும் - மொழிக்கு முதலாம் என்ற ஒன்பது மெய்யும், பன்னிரண்டு உயிரும்; தம்பெயர் முதலும் - தத்தம் பெயர் கூறுதற்கு முதலாம் எ-று.

முதலாவும் ஏனவும் என்ற உம்மைகள் தொக்கு நின்றன.

உ-ம்: ஙகரமும் டகரமும் ணகரமும் ரகரமும் லகரமும் ழகரமும் ளகரமும் றகரமும் னகரமும் - என மொழிக்கு முதலாகாத ஒன்பதும் முதலாமாறு : ஙக் களைந்தார், டப் பெரிது, ணந் நன்று - என வரும். இவ்வாறே ஏனையவற்றையும் ஒட்டுக. இனி, 'ஏன' என்றதனான் கக் களைந்தார், தப் பெரிது, அக் குறிது, ஆ நெடிது - என மொழிக்கு முதலாமவற்றையும் தம் பெயர் கூறுதற்கு முதல் ஆமாறு ஒட்டிக்கொள்க. வரையறுக்கப்பட்டு மொழிக்கு முதலாகாது நின்ற மெய்க்கும் இவ்விதி கொள்க. அவை சகரத்து மூன்றும், வகரத்து நான்கும், யகரத்துப் பதினொன்றும் ஆம். *(33)*

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.66.** **முதலா ஏன தம் பெயர் முதலும்.**

மொழிமுதல் ஆகாதனவும் தம் பெயர் கூறும்வழி முதல் ஆகும் எனவே, மொழிமுதல் ஆவன தம் பெயர் கூறும்வழி முதலாகும் எனபது அருத்தாபத்தியால் பெறப்படுதலின் கூற வேண்டாதாயிற்று.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.66.** **முதலா ஏன தம்பெயர் முதலும்.**

இச்சூத்திரத்தான் பயன், 'அகரமுதல் னகர இறுவாய்' என்புழி நிலைமொழியீற்று லகரம் கெடுதலும் (அகரமுத னகர), பெயர் வினைகட்கு ஓதிய புணர்ச்சி விதிகளைப் பெறுதலும் ஆம்.

**இளம்பூரணம்**

### *67. மொழிமுதற் குற்றியலுகரம்*

**குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்**
**ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.**

*(இச்....எனின்)* குற்றியலுகரம் மொழிக்கு முதல் ஆமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* குற்றியலுகரம் முறைப்பெயரிடத்து ஒற்றாய்நின்ற நகரத்தின் மேலாய நகரத்தொடு மொழிக்கு முதலாம் எ-று.

*(வருமாறு)* நுந்தை - என வரும்.

இவ்வாறு முதல் ஆக்கம் கூறவே, மொழிமுதல் குற்றியலுகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும் கூறியவாறு ஆயிற்று. இடம் நுந்தை என்னும் முறைப்பெயர்; பற்றுக்கோடு நகரமிசை நகரம். *(34)*

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ.67.** பேராசிரியர் இந்நூற்பாவை 'உய்த்துக் கொண்டுணர்தல்' என்னும் உத்தியின்பாற்படுப்பர். சூ. 36 (2) உரைக்குறிப்புக் காண்க. இவ்வாறு குற்றியலுகரம் நுந்தை என்னும் முறைப்பெயரில் முதலாகத் தோன்றும் எனவே, அதற்கு இடனும் பற்றுக்கோடும் (அம்முறைப்பெயரும், நகரத்தினது மிசையும், முதற்கண் நின்ற நகரமெய்யும் ஆகிய) அதுவே எனக் கோடல்.

நச்சினார்க்கினியம்

*67. மொழிமுதற் குற்றியலுகரம்*

**குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்**
**ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.**

இஃது எழுத்துக்களை மொழிக்கு முதலாமாறு கூறிய முறையே குற்றியலுகரம் மொழிக்கு முதலாமாறு கூறுகின்றது.

இ-ள்: குற்றியல் .... மருங்கின் - குற்றியலுகரமானது முன்னிலை முறைப் பெயரிடத்து; ஒற்றிய .... முதலும் - தனிமெய்யாய் நின்ற நகரத்துமேல் நின்ற நகரத்தொடு கூடி மொழிக்கு முதலாம் எ-று.

'நுந்தை' எனவரும். இதனானே முறைப்பெயர் இடமும், நகரம் பற்றுக்கோடும் ஆயின. ஈண்டுக் குற்றியலுகரம் மெய்ப்பின்னர் நின்றதேனும், ஒற்றுமை நயத்தான் மொழிக்கு முதல் (அ) என்றார். இது செய்யுளியலை நோக்கிக் கூறியதாயிற்று. (34)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.67.** குற்றிய லுகரம்......நகரமொடு முதலும்.

(இ-ள்:.) முறைப்பெயரின்கண் நகரஒற்றின் முன்னர் மற்றொரு நகர ஒற்றைச் சார்ந்து குற்றியலுகரம் மொழி முதலாக வரும்.

(வருமாறு.) நுந்தை

'நகரம் எல்லா உயிரொடும் செல்லும்' என்றவாறு, ஈண்டும் 'நகரம் குற்றியலுகரமொடு செல்லுமார் முதலே' எனக் கூறாது, 'குற்றியலுகரம் நகரமொடு முதலும்' என ஆசிரியர் கூறியது என்னையெனின், ஆண்டு உயிர்மெய்களுள் உயிர் சிறப்புடையது என்றதை நோக்கியும், ஈண்டுச் சார்பெழுத்தாகிய குற்றியலுகரத்தினும் அதன் சார்பாகிய மெய் சிறந்தது என்றதை நோக்கியும் என்க. ('ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே' (சொல்.87இ.) என்பதனைக்கருதி இவ்வுரைகாரர் இவ்வாறு நயம் உரைத்தார்.)

முற்றியலுகரம் கொண்ட நகரம் மொழிமுதலாய் வருமென 61ஆம் சூத்திரத்தால் பெறப்பட, அவ்வுகரம் குற்றியலுகரமாகவும் ஒலிக்கப்பட்டது என்பது இச்சூத்திரத்தால் கிடைத்த பொருள்.

''காது கட்டு கத்து முதலியன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற் போல'' என்ற நச்சினார்க்கினியர் உரைவிளக்கத்தில், முற்றுகரமாய் இருத்தற்கு இலக்கணம் தமக்குப் புலப்படவில்லை என்கிறார் இவ்வுரைக்காரர். (காது என்பது குற்றுகர ஈறாயவழிப் பெயராம்; முற்றுகர ஈறாயவழி முன்னிலை வினையாம் ஏவல் முற்று. இது தம்முள் வேற்றுமை என்பது.)

**வேங்கடராகவு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.67. குற்றிய லுகரம்....நகரமொடு முதலும்.**

ஈண்டு மொழிமுதற்கண் நிற்பது நகரமெய்யே ஆயினும், முதற்கண் மெய்யெழுத்து ஒலிக்க

இயலாமையானும், அதனை ஒலிக்கச்செய்தல் உயிரெழுத்தே ஆகலானும் ஒற்றுமை நயத்தால் 'குற்றியலுகரம் நகரமொடு முதலும்' என்றார். ....இரண்டு நகர ஒலிகளை ஒலித்தற்கு இடையே, நன்கு இதழ்குவித்துக் கூறும் முயற்சி நிலையாமையின், உகரம் அரைமாத்திரை அளவினதாக ஒலிக்கின்றது என்பது உய்த்துணர்தல் கூடும்.

**சூ.67.** மயிலைநாா் தம் உரையில் *(நன்.சூ.105)*

**'நுந்தை உகரம் குறுகி மொழிமுதற்கண்**
**வந்த(து) எனின்உயிர்மெய் யாம்அனைத்தும்-**
**சந்திக்(கு)**
**உயிர்முதலா வந்தணையும் மெய்ப்புணர்ச்சி இன்றி**
**மயல்அணையும் என்(று)அதனை மாற்று.'**

என்னும் வெண்பாவினைக் காட்டி, மொழிமுதற்கண் குற்றுகரம் உள்ளது என்றால் பொருந்தாது என்றார். ஆசிரியர் ஒற்றுமைநயம் கருதி இவ்வாறு கூறினார் என்று அமைத்துக்கோடலே தக்கது, முன்னர்

**'நீஎன் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்'** *(எழுத்.179)*
**'மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே'** *(ஷை 457)*

என்னும் சூத்திரத்தும் இவ்வாறே ஒற்றுமைநயத்தான் கூறி யுள்ளார் ஆகலின்.

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ.67.** **'ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே.'**

*நொ: வினைச் சொல்; ஓரெழுத்தொருமொழி.*

ஒத்த - ஒத்து - ஒத்தான் - ஒப்பு - என்ற சொற்களில் ஒ என்ற தனியுயிர் முதனிலை என்று கொள்ளலாம் போல நிற்கின்றது. எனினும் ஒ என்பது அப்பொருளில் தனித்து வரும் வினைவழக்கு இன்மையான் கொள்ளப் படவில்லை.

**இளம்பூரணம்**

## 68. அது பொருள் வேறுபடாமை

**முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது**
**அப்பெயர் மருங்கின் நிலைஇய லான.**

(இச்....எனின்) மேலதற்கு ஒரு புறநடை உணர்....ற்று.

(இ-ள்.) அம் முதற்கண் குற்றியலுகரம் ஆண்டு இதழ்குவித்துக் கூறும்வழியும், முற்றுகரத்தொடு பிற உகரம் போலப் பொருள் வேறுபடாது; யாண்டு எனின், அம்முறைப்பெயரிடத்துத் தான் நிற்றற்கண் எ-று.

(உ-ம்.) நாகு எனவும் நகு எனவும் குறுகியும் குறுகாதும் நின்ற உகரங்கள் போல, நுந்தை என்று குறுக்கம் ஆயவழியும் இதழ்குவித்துக் கூறக் குறுகாதவழியும் பொருள் வேறுபடாதவாறு அறிக.

இனி, இரட்டுறமொழிதல் என்பதனான், 'பொருள்' என்றதனை இடனும் பற்றுக்கோடும் ஆக்கிப் பிற உகரங்கள் போல ஈண்டை உகரம் இடனும் பற்றுக்கோடும் வேறுபடாது[1] என்றுகொள்க. (35)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.68.** இம்மொழிமுதற் குற்றியலுகரம், 'நுந்தை' என்ற சொல்லும் அதன்கண் நகரமிசையும் ஆகிய இடமும் நகரமெய்யாகிய பற்றுக்கோடும் வேறுபடாது வரும். பிற உகரங்கள் மொழிமூவிடத்தும் வெவ்வேறு மெய் யோடியைந்து வருவன.

**நச்சினார்க்கினியம்**

## 68. அது பொருள் வேறுபடாமை

**முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது**
**அப்பெயர் மருங்கின் நிலைஇய லான.**

இது மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது.

# முதனிலை

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பன்னீருயிரும் | அடை | ஆடை | இலை | ஈயம் | உளை | ஊர்தி | எழு | ஏணி | ஐவனம் | ஒளி | ஓடம் | ஔவியம் | 12 |
| | கலை | கார் | கிளி | கீரி | குடி | கூடு | கெண்டை | கேழல் | கைதை | கொண்டல் | கோடை | கௌவை | 12 |
| | தந்தை | தாய் | தித்தி | தீமை | துணி | தூணி | தெற்றி | தேன் | தையல் | தொண்டை | தோடு | தௌவை | 12 |
| 'கதநபம' | நந்து | நாரை | நிலம் | நீலம் | நுகம் | நூல் | நெய்தல் | நேமி | நைவளம் | நொச்சி | நோக்கம் | நௌவி | 12 |
| | படை | பால் | பிடி | பீடு | புகழ் | பூமி | பெடை | பேடை | பைதல் | பொன் | போது | பௌவம் | 12 |
| | மடி | மாலை | மிடறு | மீளி | முகம் | மூப்பு | மெலிவு | மேனி | மையல் | மொழி | மோத்தை | மௌவல் | 12 |
| சகரக்கிளவி | | சாந்து | சிற்றில் | சீற்றம் | சுரை | சூரல் | செக்கு | சேவல் | | சொல் | சோறு | | 9 |
| 'உ ஊ ஒ ஓ அலவொடு வம் முதல்' | வளை | வாளி | விளரி | வீடு | | | வெள்ளி | வேட்கை | வையம் | | வௌவுதல் | | 8 |
| 'ஆ எ ஒவ்வொடு ஆகும் ஞம் முதல்' | | ஞாலம் | | | | | ஞெண்டு | | | ஞொள்கிற்று | | | 3 |
| 'ஆவோடல்லது யகரம் முதலாது' | | யாடு | | | | | | | | | | | 1 |
| மொழி முதற் குற்றுகரம் | நுந்தை என்பது ஒன்றுமே. | | | | | | | | | | | | 1 |
| | | | | | | | | | | | | | 94 |

இ-ள் : அப்பெயர் . . . . இயலான - அம்முறைப் பெயரிடத்தே நிற்றல் இலக்கணமான குற்றியலுகரம், முற்றியல் . . . . படாஅது - இதழ்குவித்துக் கூறும்வழி வரும் முற்றுகரத்தோடு அவ்விடத்துக் குற்றுகரம் பொருள் வேறுபடுமாறு போல ஈண்டுப் பொருள் வேறுபட்டு நில்லாது எ-று.

காது கட்டு கத்து முருக்கு தெருட்டு - என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற்போல (அ), நுந்தை என்று இதழ்குவித்து முற்றக் கூறியவிடத்தும் இதழ்குவியாமல் குறையக் கூறியவிடத்தும் ஒருபொருளே தந்தவாறு காண்க. நுந்தாய் என்பதோ எனின், அஃது இதழ் குவித்தே கூறவேண்டுதலின் குற்றுகரம் அன்று. 'இயல்' என்பதனான் இடனும் பற்றுக்கோடும் இரண்டற்கும் வேறுபாடு இல என்று கொள்க. இதனானே மொழிக்கு முதலாம் எழுத்துத் தொண்ணூற்று நான்கு என்றுணர்க. (ஆ) (35)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 68***

*(அ) இதழ்குவித்து முற்றக்கூறும் முற்றுகரம் ஏவலொருமைக்கண் நிகழும்; ஏனைக் குற்றுகரம் பெயர்க்கண் நிற்கும்.*

*(ஆ) அட்டவணை இணைக்கப்பட்டுள்ளது.*

**இளம்பூரணம்**

***69. உயிர் மொழிக்கு ஈறு ஆமாறு***

**உயிர்ஔ எஞ்சிய இறுதி ஆகும்.**

*(இச்.....எனின்) உயிர் மொழிக்கு ஈறுஆமாறு உணர்.....ற்று.*

*(இ-ள்.) உயிரெழுத்துக்களுள் ஔகாரம் ஒழிந்தவை மொழிக்கு ஈறாகும்; ஔகாரம் தான் ஈறு ஆகாது எ-று.*

இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது.

(உ-ம்.) ஆஅ ஆ ஈஇ ஈ ஊஉ ஊ ஏஎ ஏ ஐ ஓஒ ஓ - என உயிர் ஈறாயின. இவற்றுள் குற்றெழுத்து ஐந்தும் அளபெடை வகையான் ஈறாயின. உயிர்மெய்களுள் வரையறை கூறாதன ஆகிய, அகர ஆகார இகர ஈகார ஐகாரங்களோடு இயைந்தன ஈண்டே கொள்க.[2]

(உ-ம்.) விள பலா கிளி குரீ பனை - என வரும். (36)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.69.*** சூ. 70-76 இவற்றான், வரையறை கூறாதன பெறப்படும்.

**நச்சினார்க்கினியம்**

## *69. உயிர் மொழிக்கு ஈறு ஆமாறு*

**உயிர் ஔ எஞ்சிய இறுதி ஆகும்.**

இஃது உயிர் மொழிக்கு ஈறாமாறு கூறுகின்றது.

இ-ள் : உயிர்ஔ . . . ஆகும் - உயிர்களுள் ஔகாரம் ஒழிந்தன எல்லாம் மொழிக்கு ஈறாம் எ-று.

எனவே, ஔகார உயிர் ஈறாகாது ஆயிற்று. இஃது உயிர்க்கும் உயிர்மெய்க்கும் பொது.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ - என இவைதாமே ஈறாயின. ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ - எனக் குறில் ஐந்தும் அளபெடைக்கண் ஈறாயின. கா தீ பூ சே கை கோ - எனவும், விள கிளி மழு - எனவும் வரும். எகர ஒகரம் மேலே (71, 72) விலக்குப. 'அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்' (சொல். 125) என்பர் ஆதலின், அளபெடைப் பின் வந்த குற்றெழுத்தும் கொள்வர் ஆசிரியர் என்றுணர்க. நெட்டெழுத்து ஏழும் மொழியாம் என்னும் துணையே முன் உணர்த்துதலின், ஈண்டு அவையே ஈறாம் என்றும் உணர்த்தினார். (36)

வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு

**சூ.69.** 'உ ஊ காரம் நவவொடு நவிலா.'

உகரம் நகரமெய்யோடு இறுதிவாராது. ஊகாரம் வகரமெய்யோடு இறுதி வாராது. இவ்வாறு நிரனிறையாகப் பொருள் கொள்ளலாம். ஆகவே நு இறுதியும் வூ இறுதியும் வாரா என்க.

இவ்வுரையே பெரும்பாலும் பொருந்தும். கனவு - வரவு - புரவு - துறவு - உறவு - விரிவு - எனவாங்கு எண்ணிறந்த சொற்கள் தொல்காப்பியத்தில் இருக்கும்போது, வகரஉகர இறுதி (வு) வாராது என்றல் எங்ஙனம் பொருந்தும்? ஆதலின் உ ஊ என்ற ஈருயிர்கள் நகர வகர மெய்களொடும் இறுதியில் வாரா என்ற உரை பொருந்தாது.

**இளம்பூரணம்**

***70. ஔகாரம் ஈறாம் இடன்***

**கவவோடு இயையின் ஔவும் ஆகும்.**

*(இச்....எனின்)* ஈறு ஆகாது என்ற ஔகாரம் இன்னுழி ஆம் என்றது.

*(இ-ள்.)* ககர வகரம் ஆகிய மெய்களொடு பொருந்தின் முன் ஈறு ஆகாது என்ற ஔகாரமும் ஈறாம் எ-று.

*(வருமாறு)* கௌ, வௌ - என வரும். *(37)*

இளம்பூரணம் உரைக்குறிப்பு

***சூ. 70.*** 'கண்ணும் காட்சி தௌவின' *(நற்.397)* என்னும் அடியில் தௌ என்ற சொல் நிகழ்கிறது. 'தௌவல்' என்னும் சொல் அகராதி நிகண்டில் கெடுதல் என்னும் பொருட்கு உரியதாகக் குறிக்கப்படுகிறது. 'தவல்' என்னும் சொல் இவ்வதிகாரம் 456 ஆம் நூற்பாவில் கெடுதல் பொருளதாய் வழங்குகிறது. தவல் என்பதன் திரிந்த வடிவமே தௌவல் எனலாம். 'வகரக் கிளவி நான்மொழி ஈற்றது' ஆதலின் 'தவ்' என்பதொரு சொல் சற்றே பிற்காலத்ததாயிருத்தல் வேண்டும்.

**நச்சினார்க்கினியம்**

### *70. ஔகாரம் ஈறாம் இடன்*

**கவவோடு இயையின் ஔவும் ஆகும்.**

*இஃது ஈறாகாது என்ற ஔகாரம் இன்னுழி ஆம் என்கிறது.*

*இ-ள் : ஔவும் - முன் ஈறாகாது என்ற ஔகாரமும்; கவவோடு இயையின் ஆகும் -ககர வகரத்தோடு இயைந்தவழி ஈறாம் எ-று.*

*உ-ம் : கௌ, வௌ- என வரும். எனவே, ஒழிந்த உயிரெல்லாம் தாமே நின்றும் பதினெட்டு மெய்களொடு கூடி நின்றும் ஈறாதல் இதனால் பெற்றாம். இதனானே ஔகாரம் ஏனை மெய்க்கண் வாராது என விலக்குதலும் பெற்றாம். உயிர் ஙகரத்தொடு கூடி மொழிக்கு ஈறாம் என்பது இதனால் எய்திற்றேனும், அது மொழிக்கு ஈறாகாமை தந்துபுணர்ந்து உரைத்தலான் (1) உணர்க. இது வரையறை கூறிற்று. (37)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 70*

*1. தந்துபுணர்ந்துரைத்தலாவது, உள்பொருள் அல்லாததனை உள்பொருள் போலத் தந்து கூட்டியுரைத்தல். இங்கே, உயிர் ஙகரத்தொடு கூடி ஈறாவது போலக் கூறியது இது.*

**இளம்பூரணம்**

### *71. எகரம் மெய்யோடு ஈறாகாமை*

**எ-என வரும்உயிர் மெய்ஈறு ஆகாது.**

*(இச்....எனின்) எகரம் தானே நின்றவழி அன்றி, மெய்யொடு கூடி ஈறு ஆகாது என வரையறை கூறுதல் நுதலிற்று.*

(இ-ள்.) எ எனச்சொல்ல வரும் உயிர் தானே ஈறுஆவது அன்றி மெய்யோடு இயைந்துநின்று ஈறாகாது எ-று. (38)

**நச்சினார்க்கினியம்**

## 71. எகரம் மெய்யோடு ஈறாகாமை

**எ - என வரும்உயிர் மெய்ஈறு ஆகாது.**

இஃது எகரம் தானே நின்றவழிஅன்றி மெய்யொடு கூடினால் ஈறாகாது என விலக்குகின்றது.

இ-ள் : எ- என . . . . ஆகாது - எ என்று கூறப்படும் உயிர் தானே ஈறாவது அன்றி யாண்டும் மெய்களோடு இயைந்து ஈறாகாது எ-று. (38)

**வ. சுப. மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ. 71.** 'உப்ப காரம்........பொருட்டா கும்மே'

'இருவயின் நிலையும் பொருட்டாகும்' என்பதில், 'இருவயின்' யாது ? 'இது செயல் வேண்டும் என்னும் கிளவி, இருவயின் நிலையும் பொருட்டா கும்மே, தன்பா லானும் பிறன்பா லானும்' (சொல். 3243) என்னும் வினையியல் நூற்பா இந்நூற்பாவுக்கு விளக்கம் ஆகும். ஆகவே உப்பகாரமாகிய 'தபு' என்ற ஒருசொல் தான் அழிதலையோ, பிறிது அழிதலையோ ஒருங்கே குறிக்கும்.

**இளம்பூரணம்**

## 72. ஒகரம் ஈறாமாறு

**ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே.**

இதுவும் அது; வரையறை.

(இ-ள்.) ஒகரமும் தானே நின்று ஈறாவது அன்றி, மெய்யோடு இயைந்து ஈறாகாது, நகரமெய்யோடு அல்லாதவிடத்து எ-று.

(வருமாறு) நொக்கொற்றா - என வரும். (39)

**நச்சினார்க்கினியம்**

### 72. ஒகரம் ஈறாமாறு

**ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே.**
**இது விலக்கும் வரையறையும் கூறுகின்றது.**

இ-ள் : ஒவ்வும் அற்று - ஒகரமும் முன்சொன்ன எகரம் போலத் தானே ஈறாவது அன்றி, மெய்களோடு இயைந்து ஈறு ஆகாது; ந அலங்கடை - நகர ஒற்றோடு அல்லாத இடத்தில் எ-று.

உ-ம் : நொக் கொற்றா, 'நொ அலையல் நின்ஆட்டை நீ' என வரும். (39)

**இளம்பூரணம்**

### 73. ஞகாரத்தோடு ஈறாகா உயிர்கள்

**ஏஓ எனும்உயிர் ஞகாரத்து இல்லை.**

இதுவும் அது; வரையறை.

(இ-ள்.) ஏ ஓ-என்று சொல்லப்படும் உயிர் தாமே நின்றும் பிறமெய்களொடு நின்றும் ஈறாவது அன்றி, ஞகாரத்தோடு ஈறாவது இல்லை.

தாமே ஆதல் முன்னே (69) காட்டப்பட்டன. பிறமெய்யோடு ஈறாவனவற்றுள், வழக்குஇறந்தன ஒழிய இறவாதன வந்தவழிக் கண்டுகொள்க. (40)

**நச்சினார்க்கினியம்**

### 73. ஞகரத்தோடு ஈறாகா உயிர்கள்

**ஏ ஓ எனும் உயிர் ஞகாரத்து இல்லை.**

இது சில உயிர் சில உடலோடு ஏறி முடியா என விலக்குகின்றது.

இ-ள் : ஏ ஓ . . . இல்லை - ஏ ஓ - என்று கூறப்பட்ட இரண்டு உயிரும் தாமே நின்றும் பிற மெய்களொடு நின்றும் ஈறாதல் அன்றி, ஞகாரத்தோடு ஈறாதல் இல்லை எ-று.

எனவே, ஏனை உயிர்கள் ஞகாரத்தோடு ஈறாம் என்றார் ஆயிற்று.

உ-ம் : உரிஞ உரிஞா உரிஞி உரிஞீ உரிஞு உரிஞூ - இவை எச்சமும் வினைப்பெயரும்(அ) பற்றி வரும். அஞ்ஞை மஞ்ஞை : இவை பெயர். ஏனை ஐந்தும் விலக்கப்பட்டன. உரிஞோ என்பது 'கடிசொல் இல்லை' (சொல். 452) என்பதனான் கொள்க. (40)

**இளம்பூரணம்**

## 74. நவ - வோடு ஈறாகா உயிர்

**உ ஊ காரம் நவவொடு நவிலா,**

இதுவும் அது; வரையறை.

(இ-ள்.) உகர ஊகாரங்கள் தாமே நின்றும் பிற மெய்களொடு நின்றும் பயில்வதன்றி, நகரவகரங்களொடு பயிலா எ-று.

தாமே ஈறாதல் மேலே (69) காட்டப்பட்டன. பிற மெய்யோடு ஈறாமவற்றுள் வழக்கு இறந்தன ஒழிய வழக்கு இறவாதன வந்தவழிக் கண்டுகொள்க.

'நவிலா' என்றதனான், சிறுபான்மை நொவ்வு கரவு-என்று வகரத்தோடு ஈறாதல் கண்டுகொள்க. இன்னும் இதனானே, சிறுபான்மை நகரத்தொடு வருவன உண்டேனும் கொள்க. (41)

**நச்சினார்க்கினியம்**

## 74. ந வ -வோடு ஈறாகா உயிர்

**உ ஊ காரம் நவவொடு நவிலா.**

இதுவும் அது

இ-ள் : உ ஊகாரம் - உகார ஊகாரங்கள் தாமே நின்றும் பிற மெய்களொடு நின்றும் பயில்வதன்றி; நவ-வொடு நவிலா - நகர ஒற்றொடும் வகர ஒற்றொடும் பயிலா எ-று.

எனவே, ஏனை உயிர்கள் நகர வகரங்களொடு வருமாயின.

உ-ம் : நகரம், பொருந - என வினைப்பெயர் ஆகியும், நா நீ நே -எனப் பெயர் ஆகியும், நை நொ நோ - என வியங்கோள் (1) ஆகியும் வரும். பொருநை என்றும் காட்டுப. வகரம், உவ வே - என வியங்கோள் ஆகியும், உவா செவ்வி வீ வை - எனப் பெயர் ஆகியும் வரும். ஒருவ ஒருவா ஒருவி ஒருவீ ஔவை - என்றும் காட்டுப. ஈண்டு விலக்காத ஏனை உயிர்களொடு வந்த நகர வகரங்கள் அக்காலத்து வழங்கின என்று கோடும், இவ்விதியால். இனி 'நவிலா' என்றதனானே, வகரஉகரம் கதவு துரவு குலவு புணர்வு நுகர்வு நொவ்வு கவ்வு - எனப் பயின்று வருதலும் கொள்க. *(41)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

## *சூத்திரம் 74*

*1. வியங்கோள் - ஏவல்பொருளை முற்ற முடிக்காமல் வந்த ஏவல்.*

*(அ) உரினு-உரினுதல். இஃது ஒன்றும் வினைப்பெயர்; பிற எல்லாம் வினையெச்சம். அவை முறையே செய-செய்யா-செய்து-செய்யூ-என்னும் வாய்பாட்டின.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 74.*** **உஊ காரம் நவவொடு நவிலா.**

ஆசிரியர், இவ்வெழுத்துக்கள் ஈறு ஆகா என்று விதந்தோதி விலக்குதலின், அவர்காலத்தில் வகரஉகரஈற்றுச் சொற்கள் இல என்பது தேற்றம். கனவு, அரவு - என்பன போல்வன ஆகார ஈற்றனவே. அது 'குறியதன் இறுதிச் சினைகெட' (234) என்னும் சூத்திரத்தான் அறியப்படும்.

இனி, புணர்பு - சார்பு - சோர்பு - அளபு - தளர்பு - எனப் புவ்ஈற்றுச் சொற்கள் பிற்காலத்தில் புணர்வு முதலாக வுவ் ஈற்றனவாயும் வழங்குதலின், வுவ் ஈற்றனவாகக் காணும் ஏனைய சொற்களும் முற்காலத்தில் புவ்ஈற்றனவாய் வழங்கினவை ஆகும் என்று கோடலே அமைதி.

அரசஞ்சண்முகனார் இச்சூத்திரத்தை நிரல்நிறையாகக் கொண்டு, உகரத்தொடு நகரமும் ஊகாரத் தொடு வகரமும் வாரா எனப் பொருள் கூறியுள்ளார். அவ்வாறாயின், நகரம் உகரத்தொடு கூடி வாராமை வேண்டும். ஆதலின், 'பொருநுக் கடிது' என்பதில் உள்ள நுவ்ஈறு புணர்ச்சிக்கண் வந்தது ஆகலின் கொள்ளற்பாலது அன்று எனல் வேண்டும்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 74.** **உஊ காரம் நவவொடும் நவிலா.**

'நவவொடும்' என்னும் எச்சவும்மையான், மேற்கூறிய (73) ஞகரத்தொடும் நவிலா என்க. உரினு பொருநு-கதவு வரவு செலவு-என்பவை உகரச்சாரியை பெற்ற விதியீறுகளாகும். இனி, வரவு செலவு கனவு புரவு முதலாயவற்றை இயல்பீறாகக் கருதி உரையாசிரியன்மார் உகரம் வகரத்தொடு ஈறாதலை 'நவிலா' என்ற மிகையான் கொள்க என்பர்.

[கதவு முதலிய சொற்களை உகரச்சாரியை ஏற்ற விதியீறுகளே எனத் துணியும் இவ்வுரைகாரர், நகூ-எண்ணூ-உறூ-என்றாற் போல நிகழும் செய்யூ என்னும் வாய்பாட்டு வினையெச்சங்களை இயல்பு ஈறாகவே கோடல் ஆராயத்தக்கது.]

**இளம்பூரணம்**

## *75. உச்சகாரம் இருமொழிக்கே ஈறாதல்*

**உச்ச காரம் இருமொழிக்கு உரித்தே.**

இதுவும் அது; ஒரோவழி வரையறை.

(இ-ள்.) உகரத்தொடு கூடிய சகரம் இருமொழிக்கு அல்லது பலமொழிக்கு ஈறாகாது எ-று.

வருமாறு: உசு, முசு - எனவரும்.

பசு என்பதோ எனின், அஃது ஆரியச்சிதைவு என்பது. *(42)*

**நச்சினார்க்கினியம்**

### *75. உச்சகாரம் இருமொழிக்கே ஈறாதல்*

**உச்ச காரம் இருமொழிக்கு உரித்தே.**

இது சகார உகாரம் பலசொற்கு ஈறாய் வாராது இருசொற்கே ஈறாம் என்று வரையறை கூறுகின்றது.

இ-ள்: உச்சகாரம் இருமொழிக்கே உரித்து - உகரத்தொடு கூடிய சகாரம் இரண்டு மொழிக்கே ஈறாம் எ-று.

எனவே, பன்மொழிக்கு ஈறாகாது என்றவாறு ஆயிற்று. 'உரித்தே' என்னும் ஏகாரம் 'மொழிக்கே' எனக் கூட்டுக.

உ-ம் : உசு - இது உளுவின் பெயர்; முசு - இது குரங்கினுள் ஒரு சாதி. பசு என்பதோ எனின், அஃது ஆரியச் சிதைவு. கச்சு குச்சு - என்றாற்போல்வன குற்றுகரம். உகரம் ஏறிய சகரம் இருமொழிக்கு ஈறாம் எனவே, ஏனை உயிர்கள் ஏறிய சகரம் பன்மொழிக்கு ஈறாமாறு ஆயிற்று. உச உசா விசி சே கச்சை சோ - எனப் பெயராயும், துஞ்ச எஞ்சா எஞ்சி மூசி மூசு - என எச்சமாயும் வரும்; அச்சோ - என வியப்பாயும் வரும். இன்னும் இவை வழக்கின்கண் பல ஆமாறும் உணர்க. *(42)*

**இளம்பூரணம்**

### *76. உப்பகாரம் ஒருமொழிக்கே ஈறாதல்*

**உப்ப காரம் ஒன்றுஎன மொழிப.**
**இருவயின் நிலையும் பொருட்டா கும்மே.**

(இச்....எனின்) இதுவும் மொழிவரையறையும், மொழியது பொருள் வேறுபாடும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உகரத்தொடு கூடிய பகரம் ஒருமொழிக்கு ஈறாம் என்று சொல்லுவர். அதுதான், தன்வினை பிறவினை என்னும் இரண்டிடத்தும் நிலைபெறும் பொருண்மைத்தாம் எ-று.

தபு-எனவரும். இது படுத்துச்சொல்ல, 'நீ சா' எனத் தன்வினையாம்; எடுத்துச்சொல்ல, 'நீ சாவிப்பி' எனப் பிறவினையாம். (43)

**நச்சினார்க்கினியம்**

## 76. உப்பகாரம் ஒருமொழிக்கே ஈறாதல்

**உப்ப காரம் ஒன்றுஎன மொழிப**
**இருவயின் நிலையும் பொருட்டுஆ கும்மே.**

இஃது ஒருசொல் வரையறையும், அஃது ஓசை வேற்றுமையான் இருபொருள் தரும் என்பதும் கூறுகின்றது.

இ-ள் : உப்பகாரம் ..... மொழிப - உகரத்தொடு கூடிய பகரம் ஒருமொழிக்குஅல்லது பன்மொழிக்கு ஈறாகாது என்று கூறுவர் புலவர்; இருவயின் .... ஆகும்மே - அதுதான் தன்வினை பிறவினை என்னும் இரண்டு இடத்தும் நிலைபெறும் பொருண்மைத்தாம் எ-று.

உ-ம் : தபு - என வரும். இது படுத்துக் கூற, 'நீ சா' எனத் தன்வினையாம்; எடுத்துக் கூற, 'நீ ஒன்றனைச் சாவப்பண்' எனப் பிறவினையாம். உப்பு கப்பு - என்றாற்போல்வன குற்றுகரம். உகரத்தொடு கூடிய பகரம் ஒன்று எனவே, ஏனை உயிர்களொடு கூடிய பகரம் பன்மொழிக்கு ஈறாய்ப் பல பொருள் தரும் என்றார் ஆயிற்று. மறம் தப, தபா - என எச்சமாயும், நம்பி செம்பூ பே பெதும்பை - எனப் பெயராயும், போ - என ஏவலாயும் வரும். இவற்றைப் பிறசொற்களொடும் ஒட்டுக. ஏனை ஈகாரபகரம் இடக்கராய் வழங்கும். (43)

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 76.** உப்ப காரம்....பொருட்டுஆ கும்மே.

*(இ-ள்.)* பகரமெய்யை ஊர்ந்துவரும் முற்றுகரச் சொல் ஒன்றே. அது தொழிற்பெயர், ஏவல்வினை ஆகிய இரண்டிடத்தும் நிற்கும் பொருண்மை யுடையதாகும் எனக் கூறுவர் புலவர்.

*(எ-டு.)* தபு என வரும். தபு - கெடுவாயாக (ஏவல்வினை). பெயராயின் தவறு என்பது பொருளாம். அஃது இக்காலத்துத் 'தப்பு' என வழங்கும்.

உரையாசிரியன்மார் கூறும் பொருள் எடுத்தல் படுத்தல் என்னும் ஓசைக்குறிப்பான் பெறப்படுவன அன்றிச் சொல்லாற்றலான் பெறப்படுவன அல்ல. அங்ஙனம் குறிப்பான் பொருள்தருவன கழி-வெளு - முதலாகப் பலஉள ஆதலின் அவர்உரை பொருந்தாமை அறிக.

['தபு' பெயராயின்தவறு என்று பொருள்படும் எனவும், அஃது இக்காலத்துத் 'தப்பு' என வழங்கும் எனவும் இவர் கூறுவது, இது போன்று பிறிதொரு முடிபு காட்டலாகாமையின், பொருந்தாது. தபு என்னும் இச்சொல் குறிப்பான் உணர்த்தும்வழி தன்வினையும் பிறவினையும் ஆம் என்பதே உரையாசிரியன்மார் உரைத்த செய்தி. தன்வினையும் பிறவினையுமாக வரும் பிறசொற்கள் (கழி, வெளு போல்வன) இயைபின்மை நோக்கி ஈண்டுச் சுட்டப் பெற்றில.]

**இளம்பூரணம்**

**77. ஈறாகா உயிர்மெய்யும் ஈறாகும் இடன்**

**எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே.**

*(இச்....எனின்)* மொழிக்கு ஈறாகாத உயிர்மெய்யும் ஒரோவழி ஆமாறு உணர்....ற்று.

(இ-ள்.) மொழிக்கு ஈறாகாது நின்ற உயிர்மெய்கள் எல்லாம் தம்பெயர் கூறும்வழி ஈறாதற்கு ஒழிபு இல எ-று.

எஞ்சிய உயிர்மெய்யாவன: ஔகாரம் ககர வகரங்களை ஒழிந்த மெய்யோடு இயைந்த உயிர்மெய்யும், எகரம் எல்லா மெய்யோடும் இயைந்த உயிர்மெய்யும், ஒகரம் நகரம் ஒழிந்த மெய்யோடு இயைந்த உயிர்மெய்யும், ஏகார ஓகாரம் ஞகாரத்தோடு இயைந்த உயிர்மெய்யும், உகர ஊகாரம் நகரவகரங்களோடு இயைந்த உயிர்மெய்யும் என இவை.

தம்பெயர்க்கு (ஈறு) ஆமாறு: ஙௌக் களைந்தார் எனவும், கெக் களைந்தார் எனவும், கொக் களைந்தார் எனவும், ஞேக் களைந்தார் எனவும், ஞோக் களைந்தார் எனவும், நுக் களைந்தார் எனவும், வுக் களைந்தார் எனவும், நூக் களைந்தார் எனவும், வூக் களைந்தார் எனவும் வரும்.

'எல்லாம்' என்றதனான், மொழிக்கு ஈறாய் நின்ற உயிர்மெய்களும் தம்பெயர் கூறும்வழியும் ஈறாம் என்று கொள்க.

(உ-ம்.) கக் களைந்தார், கா வலிது, [1]அக் களைந்தார், ஆ வலிது-எனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

தன்னை உணர்த்தி நின்றவழி மொழிகட்கு இது கருவியாக ஈற்றகத்து முடிபு ஒன்றென முடித்தலால் கொள்க[2]. *(44)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 77.*** ஒன்றென முடித்தலாவது இவ்விதி இதற்கும் முற்றும் பொருந்தும் எனக் கொள்ளுதல்.

*1.* அக்களைந்தார், ஆவலிது என்பன மிகையான இடைச்செருகல்.

2. க+களைந்தார், கா+வலிது-தம்மை யுணர நின்ற எழுத்துக்கள் மொழியாக நிற்றலின், அகத்தோத்து விதியான் முடிக்க என்றவாறு.

**நச்சினார்க்கினியம்**

## 77. எல்லா உயிர்மெய்யும் ஈறாகும் இடன்

**எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே.**

இது முன்னர் மொழிக்கு ஈறாம் என்றவற்றுள் எஞ்சிநின்றன மொழிக்கு ஈறாமாறும், மொழிக்கு ஈறாகா என்றவை தம்பெயர் கூறுங்கால் மொழிக்கு ஈறாமாறும் கூறுகின்றது.

இ-ள் : எஞ்சியவும் எஞ்சுதல் இல - 'கவவோடு இயையின்' (70) என்னும் சூத்திரத்தான் பதினோருயிரும் பதினெட்டு மெய்க்கண்ணும் வந்து மொழிக்கு ஈறாம் என்ற பொதுவிதியால், பின்னை விசேடித்துக் கூறியவற்றை ஒழிந்தனவும், மொழிக்கு ஈறாதற்கு ஒழிவில; எல்லாம் எஞ்சுதல் இல - மொழிக்கு ஈறாகா என்ற உயிர்மெய்களும் தம்பெயர் கூறும்வழி ஈறாதற்கு ஒழிவில எ-று.

'எல்லாம்' என்றது சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் (அ) என்னும் உத்தி. உம்மை விரிக்க. ஈண்டு 'எஞ்சிய' என்றது, முன்னர் உதாரணம் காட்டிய ஞகரமும் நகரமும் வகரமும் சகரமும் பகரமும் ஒருமொழிக்கும் ஈறாகாத ஙகரமும் ஒழிந்த பன்னிரண்டு மெய்க்கண்ணும், எகரமும் ஒகரமும் ஔகாரமும் ஒழிந்த ஒன்பது உயிரும் ஏறி மொழிக்கு ஈறாய் வருவனவற்றை என்றுணர்க.

உ-ம் : வருக புகா வீக்கி புகீ செகு புகூ ஈங்கே மங்கை எங்கோ - எனவும், கட்ட கடா மடி மடீ மடு படூ படை - எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறிவருவன உளவேல் கொள்க), மண்ண எண்ணா கண்ணி உணீ கணு நண்ணூ

பண்ணை - எனவும் ( இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறிவருவன உளவேல் கொள்க), அத புதா பதி வதீ அது கைதூ தந்தை அந்தோ - எனவும் (இதற்கு ஏகாரம் ஏறிவருவன உளவேல் கொள்க), கம நென்மா அம்மி மீ செம்மு கொண்மூ யாமை வம்மோ - எனவும் (இதற்கு ஏகாரம் ஏறிவருவன உளவேல் கொள்க), செய காயா கொய்யூ ஐயை ஐயோ - எனவும் (இதற்கு இகர ஈகார உகர ஏகாரங்கள் ஏறிவருவன உளவேல் கொள்க), வரதாரா பரி குரீ கரு வெரூ நாரை - எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறிவருவன உளவேல் கொள்க), சில பலா வலி வலீ வலு கொல்லூ வல்லே கலை - எனவும் (இதற்கு ஓகாரம் ஏறி வருவன உளவேல் கொள்க), தொழ விழா நாழி வழீ மழு எழூ தாழை - எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேல் கொள்க), உள உள்ளா வெள்ளி குளீ உளு எள்ளூ களை - எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேல் கொள்க), கற்ற கற்றா உறி உறீ மறு உறூ கற்றை எற்றோ எனவும் (இதற்கு ஏகாரம் ஏறிவருவன உளவேல் கொள்க), நன கனா வன்னி துனீ முன்னு துன்னூ என்னே அன்னை அன்னோ - எனவும் வரும். இவற்றுள் பெயராயும் வினையாயும் வருவன உணர்க. இவற்றுள் ககர னகரங்கள் விலக்காத ஒன்பதும் வந்தன. ஆக, ஈறு நூற்று நாற்பத்துமூன்றும், உதாரணம் இல்லாத பதினெட்டும் ஆக நூற்று அறுபத்தொன்று.(1) ஙகரம் மொழிக்கு ஈறாகாது என்பது பெரும்பான்மை ஆதலின் கூறிற்றிலர். இனி, ஙகரமும், ஔகாரம் ஏறாத மெய் பதினைந்தும், எகரமும் ஒகரமும் ஏகாரமும் ஓகாரமும் உகரமும் ஊகாரமும் ஏறாத மெய்களும், தம்பெயர் கூறுங்கால் மொழிக்கு ஈறாமாறு; ஙப் பெரிது - சௌ அழகிது - ஞௌ தீது - என வரும். ஏனையவற்றொடும் இவ்வாறே ஒட்டுக. கெக் குறைந்தது - கொத் தீது - ஞெவ் வழகிது - ஞொத் தீது - நுந் நன்று- நூப் பெரிது - வுச் சிறிது - வூப் பெரிது - என எல்லாவற்றையும் இவ்வாறே ஒட்டுக. இன்னும் 'எல்லாம்' என்றதனானே, கந் நன்று - ஆ நன்று - என மொழிக்கு ஈறாவனவும் தம் பெயர் கூறும்வழி ஆம் என்று கொள்க. *(44)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 77

அத-மர விசேடம்; புதா-பறவை விசேடம்; கைதூ-கைவிடு; கம-நிறைதல்; நென்மா-அரிசிமாவு; செம்மு-மூடு; கொண்மூ-மேகம்; கொய்யூ-கொய்து.

(அ) சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தலாவது, சொல்லின் ஆற்றலாற் பெறப்படும் பொருளினையும் எடுத்தோதி ஆங்குக் கொள்ளவைத்தல். 'எடுத்தோதியாங்கு' - எடுத்து ஓதியவாறு போலவே என்றும் பொருள் கொள்ளலாம். இச்சூத்திரத்துள் 'எல்லாம்' என்பதனை எச்சப்படுத்து, ஈறு ஆதற்கு ஆகாதன இருபத்தாறு கொண்டவழியும் அவற்றை எடுத்து ஓதின் சிறப்பு இன்று என்ற கொள்ளற்க என்பது இதன் கருத்து. (பொ. 665 பேரா. உரை)

வேங்கடராஜுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 77.** எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே.

மொழியீற்றில் நிற்கும் எழுத்துக்கள் 161 ஆகும். அவையாவன:

(நச்சினார்க்கினியருக்கு முன்னரே வழக்கு இறந்தவை குறிக்கப்பட்டுள.)

| | | |
|---|---|---|
| உயிரெழுத்துக்கள் | 11 | |
| ககர வரியில் | 10 | |
| சகர ,, | 9 | |
| ஞகர ,, | 7 | |
| டகர ,, | 9 | டே, டோ |
| ணகர ,, | 9 | ணே, ணோ |
| தகர | 9 | தே |
| நகர ,, | 8 | நி |
| பகர ,, | 9 | |

| | | |
|---|---|---|
| மகரவரியில் | 9 | மே |
| யகர ,, | 9 | யி, யீ, யு, யே |
| ரகர ,, | 9 | ரே, ரோ |
| லகர ,, | 9 | லோ |
| வகர ,, | 8 | வோ |
| ழகர ,, | 9 | ழே, ழோ |
| ளகர ,, | 9 | ளே, ளோ |
| றகர ,, | 9 | றே |
| னகர ,, | 9 | ............ |
| ஆக ... | 161 | 20 |

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 77. எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே.**

'கவவோடு இயையின்' என்பது முதலாக இதுகாறும் விதந்து கூறப்பட்ட ஔ எ ஒ ஏ ஓ உ ஊ - என்பன தவிர்ந்த அ ஆ இ ஈ ஐ - ஆகிய ஐந்து உயிர்களும் எல்லாமெய்களொடும் கூடி ஈறாதற்குக் குறைவில.

'எஞ்சுதல் இல' என எதிர்மறைமுகத்தான் கூறினமையின், ஙகரம் ஒழிந்த ஏனைய மெய்களே கொள்க.

'எல்லாம்' என்ற மிகையான், மொழிக்கு ஈறு ஆகா என்ற உயிர்மெய்களும், இறுதியும் முதலும் ஆகா ஙகரமும் தம் பெயர் மொழிதற்கண் ஈறாக நின்று புணரும் எனக்கொள்க. கெப் பெரிது, ஙுப் பெரிது, வுச் சிறிது எனவும், ஙக்களைந்தார் எனவும் வரும்.

இந்நூற்பாவிற்கு உரையாசிரியர், ஈறாகா எனப்பெற்றவை தம்பெயர் கூறும்வழி எஞ்சுதல் இல எனக் கூறுவர். அது குன்றக்கூறலாம் என்க.

[தாம் கொண்ட உரைக்கேற்ப இவர் காட்டிய எடுத்துக்காட்டுக்களுள், சில ஈறாமாறு காட்டப்பெற்றில.

காட்டப்பெறாதன மொழியாக்கம் பெறவில்லை என்பதன்றி வாராமைக்கு ஏது வேறின்று என்று குறிக்கின்றார். குன்றக்கூறல் என்று உரையாசிரியர் உரையை மறுக்கும் இவர், தமது உரைக்கு ஏற்ப எடுத்துக்காட்டு முழுமையும் காட்ட இயலாது இடர்ப்படுதல் காண்க. உரையாசிரியர் கருத்தினை இவர் 'எல்லாம்' என்பதனை மிகைச்சொல்லாகக் கொண்டு அடக்குகிறார். இவர் உரைக்கு அச்சொல் மிகையாதல் யாங்கனம்?]

**வ. சுப மாணிக்கனார் உரைக்குறிப்பு**

**சூ. 77. 'மகரத் தொடர்மொழி மயங்குதல்......'**

**மயங்காதன ஒன்பது:**

1. எகின் - அன்னம், புளி
2. பயின் - பிசின்
3. அழன் - பிணம்
4. குயின் - மேகம்
5. வயான் - காரிப்புள்
6. செகின் - பொருள்தெரியவில்லை
7. விழன் - ,,
8. புழன் - ,,
9. வயான் - ,,

இவற்றுள் முதல் நான்கு பெயர்களும் தொல்காப்பிய நூற்பாவில் ஆளப்பெற்றன.

**இளம்பூரணம்**

## 78. மொழிக்கு ஈறாம் மெய்யெழுத்துக்கள்

**ஞணநம னயரல வழள என்னும்**
**அப்பதி னொன்றே புள்ளி இறுதி.**

(இச்....எனின்) தனி மெய்களுள் மொழிக்கு ஈறாவன கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள - என்று கூறப்பட்ட அப்பதினொன்றுமே புள்ளிகளில் மொழிக்கு ஈறாவன எ-று.

(உ-ம்.) உரிஞ் மண் பொருந் உரும் பொன் வேய் வேர் வேல் தெவ் வீழ் வேள் - என வரும்.

னகாரம் ஈற்று வையாது மகரத்தொடு வைத்தது அதன் மயக்க இயைபு[1] நோக்கி என்று உணர்க. (45)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 78.** 1. னகரத்திற்கு மகரம் போலியாக வருதல் ஈண்டு 'மயக்கஇயைபு நோக்கி' என்பதற்குப் பொருளாகக் கொள்ளல்வேண்டும். இவ்வியல் இறுதிச் சூத்திரம் (82) நோக்குக. குறிலிணை னகரத்துக்கே மகரம் போலியாக வரும் என்பது சிவஞானமுனிவர் உரை (இ.வி. சூறாவளி). மெல்லெழுத்துக்களைச் சொல்லி அடுத்து இடையெழுத்துக்களைக் கூறுமுறை அகத்தோத்துள் காணப் படுதலின், னகரத்தை இடையின எழுத்துக்களுக்குப் பின் ஓதாராயினார் என்பது சுப்பிரமணிய சாத்திரியாரது கூற்று.

**நச்சினார்க்கினியம்**

**78. மொழிக்கு ஈறாம் மெய்யெழுத்துக்கள்**

**ஞணநம னயரல வழள என்னும்**
**அப்பதி னொன்றே புள்ளி இறுதி.**

இது முன்னர் உயிர் ஈறாமாறு உணர்த்திப் புள்ளிகளுள் ஈறாவன இவை என்கிறது.

இ-ள் : ஞண . . . . இறுதி - ஞணநமன யரலவழள - என்று கூறப்பட்ட பதினொன்றுமே புள்ளிகளுள் மொழிக்கு ஈறாவன எ-று.

உ-ம் : உரிஞ் மண் பொருந் திரும் பொன் வேய் வேர் வேல் தெவ் வீழ்வேள் - என வரும். னகரம் ஈற்று வையாது மகரத்தொடு வைத்தது, வழக்குப் பயிற்சியும் மயக்க இயைபும் நோக்கி. (45)

**இளம்பூரணம்**

## 79. நகாரம் இருமொழிக்கே ஈறாதல்

**உச்ச காரமொடு நகாரம் சிவணும்.**

இதுவும் மொழி வரையறை.

(இ-ள்.) உகரத்தொடு கூடிய சகரத்தோடே நகரம் பொருந்தி, அஃது இருமொழிக்கு ஈறாயவாறு போலத் தானும் இருமொழிக்கு ஈறாம் எ-று.

(வருமாறு) பொருந், வெரிந் - என வரும். (46)

**நச்சினார்க்கினியம்**

## 79. நகாரம் இருமொழிக்கே ஈறாதல்

**உச்ச காரமொடு நகாரம் சிவணும்.**

இது மேல் பொதுவகையான் ஈறாவனவற்றுள் வரையறைப்படுவது இது என்கிறது.

இ-ள் : உச் . . . . சிவணும் - உகாரத்தொடு கூடிய சகாரம் இருமொழிக்கு ஈறு ஆயவாறுபோல, நகரஒற்றும் இருமொழிக்கு அல்லது ஈறு ஆகாது எ-று. (46)

பொருந், வெரிந் - என வரும்.

**இளம்பூரணம்**

## 80. ஞகாரம் ஒருமொழிக்கே ஈறாதல்

**உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே**
**அப்பொருள் இரட்டாது இவணை யான.**

இதுவும் மொழிவரையறை.

(இ-ள்.) உகரத்தொடு கூடிய பகரத்தொடு ஞகாரமும் அத்தன்மைத்தாய் ஒருமொழிக்கு ஈறாம். இவ்விடத்து அதன்பொருள் அவ்வுப்பகாரம் போல இருபொருள்படாது.

உரிஞ் - என வரும்.

ஞகாரம் ஒருமொழிக்கு ஈறாதலான் நகரத்தின் பின் வைக்கப்பட்டது. (47)

**நச்சினார்க்கினியம்**

## *80. ஞகாரம் ஒருமொழிக்கே ஈறாதல்*

**உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே**
**அப்பொருள் இரட்டாது இவணை யான.**

இதுவும் அது.

***இ-ள்:*** உப்....அற்றே - உகரத்தொடு கூடிய பகரத்தொடு ஞகரமும் ஒத்து ஒருமொழிக்கு ஈறாம்; இவணையான அப்பொருள்இரட்டாது - இவ்விடத்து ஞகாரத்தின்கண்ணான அப்பொருள் பகரம் போல இருபொருள் படாது எ-று.

உரிஞ் - என வரும். ஞகாரம் ஒருமொழிக்கு ஈறு ஆதலின் நகரத்தின் பின் கூறினார். இவணை என்னும் ஐகாரம் அசை. (47)

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.80.** **உப்ப காரமொடு.....இவணை யான.**

'அப்பொருள்' என்றது அதுபோல என்னும் பொருட்டாய் நின்றது. (அப்பொருள் என்பதில் அகரச்சுட்டு அதுபோல என்னும் பொருட்டு என்று இவர் கருதியிருத்தல் வேண்டும், "அப்பொருள் கிளவியும்" (சொல்.76சே.) என்புழிப்போல.)

**இளம்பூரணம்**

## *81. வகரம் நான்மொழிக்கே ஈறாதல்*

**வகரக் கிளவி நான்மொழி ஈற்றது.**

(இ-ள்.) வகரம் ஆகிய எழுத்து நான்குமொழி ஈற்றதாம் எ-று.

அவ், இவ், உவ், தெவ் - என வரும். (48)

**நச்சினார்க்கினியம்**

## *81. வகரம் நான்மொழிக்கே ஈறாதல்*

**வகரக் கிளவி நான்மொழி ஈற்றது.**

இதுவும் அது.

***இ-ள்:*** வகரக் .... ஈற்றது - வகரம் ஆகிய எழுத்து நான்கு மொழியின் ஈற்றதாம் எ-று.

*அவ் இவ் உவ் தெவ் - என வரும். கிளவி - ஆகுபெயர், எழுத்துக் கிளவி ஆதற்கு உரித்தாம் ஆதலின். (அ)* *(48)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 81***

*(அ) காரியம் கருவிக்கு ஆகிவந்தமையின், காரிய ஆகுபெயராம்.*

**இளம்பூரணம்**

## *82. மகர ஈற்றொடு மயங்கா னகரஈற்றுத் தொடர்மொழிகள்*

**மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த**
**னகரத் தொடர்மொழி ஒன்பஃது என்ப**
**புகர்அறக் கிளந்த அஃறிணை மேன.**

இதுவும் ஒரோவழி மொழிவரையறை.

*(இ-ள்.)* குற்றமறச் சொல்லப்பட்ட அஃறிணையிடத்து மகர ஈற்றுத் தொடர்மொழியொடு மயங்காது என்று வரையறுக்கப்பட்ட னகர ஈற்றுத் தொடர்மொழி ஒன்பது என்று சொல்லுவர் எ-று.

*(உ-ம்.)* நிலன்-நிலம், பிலன்-பிலம் என்றாற்போல்வன மயங்குவன.

இனி, மயங்காதன, எகின் செகின் விழன் பயின் அழன் புழன் குயின் கடான் வயான்-என வரும். இவற்றுள் திரிபுடையன களைக.

'ஒன்பஃது' என்னும் ஆய்தம் செய்யுள் விகாரம். 'அஃறிணை' என்றது, ஈண்டு அஃறிணைப் பெயரினை. (49)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.82.*** பேராசிரியர் இந்நூற்பாவினை 'எதிர்பொருள் உணர்த்தல்' என்னும் உத்தியின்பாற் படுப்பர். ''தான் கூறிய இலக்கணத்திற் சில பிற்காலத்துத் திரிபுபடினும் படும் என்பது முற்கால முதனூலும்கொண்டு உணர்ந்த ஆசிரியன், எதிர்காலத்து வருவது நோக்கி, அதற்கு ஏற்றதோர் இலக்கணம் கூறிப்போதல். 'மகரத் தொடர்மொழி . . . . . அஃறிணை மேன' என்று ஓதிய இலக்கணத்துச் சில பிற்காலத்துக் குறைய வருதல் 'எதிர்பொருள்' எனப்படும்'' என்பது அவர் உரை (பொ.665).

**நச்சினார்க்கினியம்**

***82. மகர ஈற்றொடு மயங்கா னகரஈற்றுத் தொடர்மொழிகள்***

**மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த**
**னகரத் தொடர்மொழி ஒன்பஃது என்ப**
**புகர்அறக் கிளந்த அஃறிணை மேன.**

இதுவும் அது, வரையறை கூறுதலின்.

இ-ள் : புகர் அறக் . . . . மேன - குற்றம் அறச் சொல்லப்பட்ட அஃறிணைப் பெயரிடத்து; மகரத் . . . என்ப - மகரஈற்றுத் தொடர்மொழியொடு மயங்கா என்று வரையறைப்பட்ட னகரஈற்றுத் தொடர்மொழி ஒன்பது என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

ஆய்தம் விகாரம்.

வருமாறு : எகின் செகின் விழன் பயின் குயின் அழன் புழன் கடான் வயான் - என வரும். எகின் எகினம் என்றாற்போல வேறொரு பெயராய்த் திரிவனவும், சந்தியால் திரிவனவுமாய் இவற்றுள் திரிபுடையன களைந்து ஒன்பதும் வருமேல் கண்டுகொள்க. நிலம்-நிலன், பிலம்-பிலன், கலம்-கலன், வலம்-வலன், உலம்-உலன், குலம்-குலன், கடம்-கடன், பொலம்-பொலன், புலம்-புலன், நலம்-நலன், குளம்-குளன், வளம்-வளன் என இத்தொடக்கத்தன தம்முள் மயங்குவன. வட்டம் குட்டம் ஓடம் பாடம் - இவை போல்வன மயங்காதன. வரையறை னகரத்தின்மேல் செல்லும். மயங்கா எனவே, மயக்கமும் பெற்றாம். *(49)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 82

எகின்-புளி; பயின்-பிசின்; குயின்-மேகம்; அழன்-பிணம்; வயான்- காரிப்பறவை. செகின் முதலிய பிறவற்றுக்குப் பொருள் புலப்பட்டில.

இது மொழியிறுதிப்போலி கூறிற்று. னகரத்தொடு மகரம் ஒத்து நடவாது; மகரத்தொடு னகரம் ஒத்து நடக்கும் என்பது கருத்து.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 82.*** **மகரத் தொடர்மொழி.......அஃறிணை மேன.**

'தொடர்மொழி' என்றமையின் ஆசிரியர்காலத்து ஈரெழுத்தொரு மொழியில் இம்மயக்கம் இல்லை என்பது பெற்றாம்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ.82.*** **மகரத் தொடர்மொழி...அஃறிணை மேன.**

அஃறிணைப் பெயருள் னகர ஈற்றுத் தொடர்மொழிகளுள் ஒன்பது பெயர்கள் ஒழிய மற்றைப் பெயர்கள் எல்லாம் மகரஈற்றுத் தொடர்மொழியாய் மயங்கும்.

'மேல்' என்பது 'மேன்' எனத் திரிந்து அகரம் ஏற்று 'மேன' என வந்தது.

இனி, மகர ஈறாக மயங்குதல் வரைந்த ஒன்பது பெயர்கள் கடுவன் - அலவன்- வலியன் என்பன போன்றவை ஆகலாம் எனத் தோன்றுகிறது. அவை அஃறிணையுள்ளும் ஆண்பாற்பெயர்களாம் ஆகலின், னகர ஈற்றவாய் வழங்கல் அமையும் என்று விடப்பட்டன போலும். இவ்வுண்மை நன்கு அறியப்படுமாறு இல்லை.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.82.** மகரத் தொடர்மொழி....அஃறிணை மேன.

இச்சூத்திரத்து ஒன்பது என்னும் வரையறை தெளிவுபடுமாறு இல்லை. இச்சூத்திரத்தின் பாடம் பிறழ்ந்திருக்கலாம் எனக் கருதவேண்டி உளது.



## ஒத்த நூற்பாக்கள்

## II மொழி மரபு

### *நூற்பா - 1*

| | | |
|---|---|---|
| நன். | *93* | (யகரம் வரக் குறள் உ-த் திரி இகரமும்)<br>அசைச்சொல்மியாவின் இகரமும் குறிய. |
| இ.வி. | *15* | (யகரம் வரக் குறள் உ - த் தப வருஉம்<br>இகரமும்) மியாவின் இகரமும் குறிய. |
| தொ.வி. | *14* | (யம்முன் இ-ஆம்இறுகுறள்உக்கெடில்<br>அஃகும்) அற்றுஆம் அசைச்சொல்மியாவே. |
| மு.வீ. | *34* | யகரம் வருவழி இகரம் குறுகும். |
| | *35* | அசைச்சொல் மியாவின் இகரமும் அற்றே. |
| சுவாமி. | *8* | குற்றிகரம் அரை. |
| பேர. | *46* | உத்திரி இகரம் மவ்வூர் இகரம் குறிய. |

### *நூற்பா - 3*

| | | |
|---|---|---|
| வீ.சோ. | *2* | வன்மை மேல் உகரம்<br>உறுவது நையும் தொடர்மொழிப் பின்னும்<br>நெடிற்பின்னுமே. |
| நேமி. | *4* | தொடர் நெடில் கீழ் வன்மை மேல்<br>உகரம்....குன்றும். |
| நன். | *94* | நெடிலோடு ஆய்தம் உயிர்வலி மெலி இடை<br>தொடர்மொழி இறுதி வன்மைஊர் உகரம்<br>அஃகும்; பிறமேல் தொடரவும் பெறுமே. |
| இ.வி. | *16* | நெடிலோடு....... உகரம் அஃகும் என்மனார்<br>ஆயுங் காலே. |
| தொ.வி. | *15* | தனிக்குறில் அல்லவற்று இறுதி வன்மை<br>ஊர்ந்துளிக் குறுகும் உகரம் என்ப. |

| | | |
|---|---|---|
| மு.வீ. | 36 | நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும் குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே. |
| சுவாமி. | 8 | (மெய்) குற்றுகரம்........அரை. |
| பேர. | 47 | குறில் அல்லன தொடர் வலிக்கூடு உகரம் குறிய. |

## நூற்பா - 5

| | | |
|---|---|---|
| வீ.சோ. | 1 | பன்னிரண்டு ஆவிகளான......பதினெட்டு மெய் நடுஆய்தம் |
| நேமி. | 1 | ஆய்தம் இடைமேவும். |
| நன். | 90 | குறியதன் முன்னர்.....வல்லாறன் மிசைத்தே |
| இ.வி. | 17 | ஷை |
| தொ.வி. | 13 | ஆய்தம் குறில்வலிக்கு ஆகும் நடுவே. |
| மு.வீ. | 25 | தனிநிலை குறில்வலி தமக்குஇடை வருமே |
| பேர. | 45 | ஆய்தம் குறில்வலிக்கு ஆகும் இடையே. |

## நூற்பா - 6

| | | |
|---|---|---|
| நன். | 97 | லளஈற்று இயைபின் ஆம் ஆய்தம் அஃகும். |
| தொ.வி. | 13 | அஃது ஈற்று லள--த்திரிந்துளி அஃகும். |
| மு.வீ. | 39 | லள இறு புணர்ச்சியின் ஆய்தம் அஃகும். |

## நூற்பா - 8

| | | |
|---|---|---|
| வீ.சோ. | 2 | நெடுநீர்மை அளபு. |
| நேமி. | 3 | அளபெடைகள், சொல்லொற்றி நீட்டத் தொகும். |
| நன். | 91 | இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில் அளபெழும்; அவற்றவற்று இனக்குறில் குறியே. |

இ.வி. 19 இசைகெடில் மொழிமுதல் இடைகடை
நிலைநெடில் தத்தம் ஒத்த குற்றெழுத்தோடு
அளபு எழூஉம்.

தொ.வி. 13 உயிர்நெடில் இனக்குறில் உற்றுஅள
பெடுக்கும்.

மு.வீ. 31 இசைகெடின் நெட்டெழுத்து எல்லாம்
தமக்கு இனம் ஆகிய குறிலொடும்
அளபெழும் எனவே.

32 அதுதான்,
இயற்கை, செயற்கை, இன்னிசை,
சொல்லிசை, நெடில், நெடில்,
குறில், ஒற்றளபு, எழுத்துப்பேறு அளபு,
எண்வகைப் படூஉம் என்மனார் புலவர்.

33 அளபும் புலுதமும் அளபெடைப் பெயரே.

சுவாமி. 7 ஏல இசைகெடின் மொழிக்கு முன்பின்
இடை உயிர் நெடில் நீளும்.
(சீர்கள் பிழைபட்டுள.)

பேர. 41 உயிர்நெடில் இனக்குறில் உற்று
அளபெடுக்கும்.

## நூற்பா - 9

நன். 71 ஐ ஔ இ உ - ச் செறிய

இ.வி. 19 ஐ ஔ இஉ என்னும் ஆயீர் எழுத்தோடு
அளபெழும் என்ப.

மு.வீ. 21 அவற்றுள், இ உ ஐ ஔக்கு இனமென
மொழிப.

சுவாமி. 7 ஐ ஔ இ உ - வ் ஒற்று.......அளபாம்.
(சீர்கள் பிழைபட்டுள.)

பேர. 37 இ உ இரண்டும் ஐ ஔ-க்கு இனமே.

## நூற்பா - 10

நன். 129 உயிர் மவில் ஆறும்........ஆகும் நெடில்
ஓரெழுத்து இயல் பதம்.

இ.வி. 39 நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி.

மு.வீ. 116 உயிர்நெடில் ஏழும் ஓரெழுத் தொருமொழி.

118 உயிர்போல் கசதந பமவ - என்மொழி
ஆகும் என்மனார் அறிந்திசி னோரே.

பேர. 130 உயிர்நெட் டெழுத்து ஏழ் ஓரெழுத்
தொருமொழி.

## நூற்பா - 11

நன். 129 ......நொது ஆம் குறில் இரண்டொடு
ஓரெழுத்து இயல் பதம்.

இ.வி. 39 குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைபு
இலவே.

மு.வீ. 117 குற்றெழுத்து ஐந்தும் கொளா மொழி என்ப.

பேர. 131 குற்றெழுத்து ஐந்தும் மொழிநிறைந்து இயலா.

## நூற்பா - 12

நன். 128 எழுத்தே தனித்தும் தொடர்ந்தும்
பொருள்தரின் பதமாம்.

இ.வி. 38 எழுத்தே தனித்தும் இணைந்தும்
தொடர்ந்தும் பதமாம் பொருள்தரின்.

மு.வீ. 123 மொழியே, தனி இணை துணை பொது
தணம் கணம் கலப்புறு மொழி ஓர் ஏழென
மொழிநரும் உளரே.

124 மொழியே, ஓரெழுத்து ஆதி ஒன்பான்
எழுத்து அந்தமாம்.

பேர. 132 தனிமொழி இணைமொழி துணைமொழி
பொதுமொழி கணமொழி தணமொழி
கலப்புறு மொழி ஏழ்.

### நூற்பா - 13

நன். 126 மெய்கள் அகரமும்......சாரியை பெறும்

இ.வி. 37 எவ்வழியானும்
மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.

மு.வீ. 95 மெய்யின்.........சிவணும்.

பேர. 128 மெய்கள் அகரமே.......சாரியை.

### நூற்பா - 14

நன். 121 தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப.

இ.வி. 35 தம்மரபு இசைப்பின் முதல்ஈறு இடைநிலை
அம்மரபு இல்லவும் ஆமென மொழிப.

மு.வீ. 81 தம்பெயர்..........இயலும் என்ப.

### நூற்பா - 15

நன். 119 யரழ ஒற்றின்முன் கசதப ஙஞநம
ஈரொற்று ஆம்.

இ.வி. 33 யரழ..............ஆம்.

சுவாமி. 9 யரழமுன் கசதப ஙஞநம ஈரொற்று இயல்பே.

பேர. 105 யரழ ஈரொற்றாம் கசதப ஙஞநம.

### நூற்பா - 16

நன். 119 ரழ-த் தனிக்குறில் அணையா.
இ.வி. 33 ஷை

மு.வீ. 77 ரகார ழகாரம் குற்றொற்று ஒற்றா.
பேர. 103 ரகார ழகாரம் குற்றொற்று ஆகா.

### நூற்பா - 18

நன். 120 லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்து ஈரொற்றாம் செய்யுளுள்ளே.

இ.வி. 34 லளமெய் திரிந்த னணவொடு மகாரம்
ஈரொற்று ஆகும் செய்யு ளுள்ளே.

மு.வீ. 80 லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்து ஈரொற்றாம் செய்யுளுள்ளே.

## நூற்பா - 19

நன். 120 லளமெய்.............செய்யு ளுள்ளே.

96 ணன முன்னும் வஃகான் மிசையும்
ம-க்குறுகும்.

## நூற்பா - 20

நன். 127 மொழியாய்த் தொடரினும் முன்அனைத்து
எழுத்தே.

## நூற்பா - 21

நன். 125 அம்முன் இகரம்.......எய்தின் ஐஒத்து
இசைக்கும்.

இ.வி. 36 ஷை

மு.வீ. 107 அகரமும் இகரமும் ஐகாரம் ஆகும்.

பேர. 126 அகர இகரம் ஐகாரம் ஆகும்.

## நூற்பா - 22

நன். 125 அவ்வொடு உவ்வும்......ஒள ஓ ரன்ன.
இ.வி. 36 ஷை
பேர. 127 அகர உகரம் ஒளகாரம் ஆகும்.

## நூற்பா - 23

வீ.சோ. 3 யகரத்தினோடு
அகரம் இயைந்து ஐ-யது ஆகும்.

நேமி. 9 ஆதி உயிர்......
நீதியினால் ய-வ் இயையின் ஐ ஆகும்.

நன். 125 அம்முன்.......யகரம், எய்தின் ஐ ஒத்து
இசைக்கும்.

இ.வி. 36 ஷை
பேர. 126 அகர யகரமெய் ஐகாரம் ஆகும்.

## நூற்பா - 24

நேமி. 4 மும்மை இடத்து ஐ ஔ-வும் குன்றும்.

நன். 95 தற்சுட்டு அளபுஒழி ஐ மூவழியும்
நையும்; ஔவும் முதல் அற்றாகும்.

இ.வி. 21 ஷை

தொ.வி. 16 ஐ தனித்து அளபெடுத் தன்று மூவிடத்தும்,
ஔவும் முதலிடத்து அஃகும் என்ப.

மு.வீ. 37 மொழிமுதல் இடைகடை மூவிடத்தினும் ஐ
அஃகும் முதலிடத்து ஔவும் அற்றே.

அவி. 14 அளபெடை தனிஇரண்டு அல்வழி ஐ ஔ
உளதாம் ஒன்றரை; தனிமையும் ஆகும்.

பேர. 122 ஐ ஔக் குறுக்கம் ஒன்றாம்.

## நூற்பா - 25

இ. வி. 36 இகர யகரம் இறுதி விரவும்.

மு. வீ. 105 இகரமும் யகரமும் இறுதியில் விரவும்.

பேர. 113 இகர யகரமெய் இறுதி விரவும்.

## நூற்பா - 26

வீ. சோ. 7 ஆவியனைத்தும் . . . . . . மொழிமுதல்.

நேமி. 7 காட்டும் உயிரும் . . . . . . . . . . . . . .
. . . . . . . . நன்மொழிக்கு முன்என்று
அயர்விலார்கட்டுரைத்தார் ஆய்ந்து.

நன். 102 பன்னீருயிரும் . . . . . . . . மொழிமுதல்.

இ. வி. 26 ஷை

தொ. வி. 10 உயிர் . . . . . . .முதற்கே.

மு. வீ. 60 முந்நான்கு உயிரும் மொழிமுதல் ஆகும்.

பேர. 81 பன்னீருயிரும் மொழிமுதல் ஆகும்.

## நூற்பா - 27, 28

நன். 102 .........க ச த ந ப ம வ ய
ஞ ங-ஈரைந்து உயிர்மெய்யும்மொழி முதல்.

இ. வி. 26 .................க த ந ப ம - எனும்
ஆவைந்து எழுத்தொடு ச வ ஞ ய உளப்பட
அவ் ஒன்பான் உயிர்மெய்யும் மொழிமுதல்.

தொ. வி. 10 ......க ச த ப ஞ ந ம வ ய முதற்கே.

பேர. 82 உயிர்மெய் அல்லவை மொழிமுதல் ஆகா.

வீ. சோ. 7 ..... க ச த நபமவ் வரியும் ....மொழிமுதல்.

மு. வீ. 61 பன்னீர் உயிரொடும் க ச த ப ந ம - வரும்.

பேர. 83 க ச த ந ப ம - உயிர்மெய் எலாம்முதல்.

## நூற்பா - 29

இ. வி. 27 ஐ ஔ அலவொடு சகாரமும் ........ முதலும்.

## நூற்பா - 30

வீ. சோ. 7 வவ்வில், ஏவிய எட்டும் . . . . மொழிமுதல்.

நேமி. 7 ஈட்டிய வவ்வரியின் எட்டெழுத்தும்
....... நன்மொழிக்கு முன் என்று
....... கட்டுரைத்தார்.

நன். 103 உ ஊ ஒ ஓ அலவொடு வம்முதல்.

இ. வி. 27 உ ஊ ஒ ஓ அலவொடு வகரமும் .....முதலும்.

மு. வீ. 64 உ ஊ ஒ ஓ அலவொடு வ-வ் வரும்.

பேர. 86 வகரம், உ ஊ ஒ ஓ ஔ ஒழிந்தன உடனாம்.

## நூற்பா - 31

வீ. சோ. 7 ...... ஞ-ந் நான்கும் . . . . மொழிமுதல்.

நேமி. 7 ஞ(ய)வின்கண் (மும்)மூன்று
நன்மொழிக்குமுன்.

நன். 105 அ ஆ எ ஒவ்வோடு ஆகும் ஞம் முதல்.

இ. வி. 27 ஆ எ, ஒ-வ்வொடு ஞகாரமும் . . . . . முதலும்.

மு. வீ 62 அ ஆ எ ஒவ்வோடு ஆகும் ஞம்முதல்.

பேர. 84 ஞகரம் அ ஆ எ ஒ-வ் வோடாம்.

## நூற்பா - 32

வீ. சோ. 7 . . . . . . . யவ் ஆறும் . . . . . . . மொழிமுதலே.

நேமி. 7 (ஞ)யவின்கண் (மும்) மூன்று
நன்மொழிக்கு முன்.

நன். 104 அ ஆ உ ஊ ஓ ஔ ய-ம் முதல்

இ. வி. 27 . . . . . . . ஆ-வொடு யகரமும் முதலும்.

மு. வீ 63 அ ஆ உ ஊ ஓ ஔ - வோடு
யகரம் மொழிமுதல் ஆகும் என்ப.

பேர. 85 யகரம் மொழிமுதல் ஆகும் என்ப.

## நூற்பா - 33

நன். 121 தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப.

இ. வி. 35 தம்மரபு இசைப்பின் முதல்ஈறு இடைநிலை
அம்மரபு இல்லவும் ஆம்என மொழிப.

மு. வீ. 81 தம் பெயர் . . . . . . . . . . . . என்ப.

## நூற்பா -36

வீ. சோ. 8 ஈரைந்து எழிலுயிரும்
. . . . . . . . ஈற்றெழுத் தாம் என்பர்.

நேமி. 8 உயிரின் ஒன்பான். . . . . . ஈற்றெழுத்தாம்
என்றுரைப்பர்.

நன். 107 ஆவி . . . . . . . . ஈறே.

108 குற்றுயிர் அளபின் ஈறாம்.

மு. வீ. 28, 29 ஷ

பேர. 107 ஆவி . . . . . . . . . அந்தமாம்.

## நூற்பா - 37

நன். 108 ஔ, ககர வகரமோடு ஆகும் என்ப.

இ. வி. 29 ஷை

## நூற்பா - 38

நன். 108 (குற்றுயிர் அளபின் ஈறாம்) எகரம்
மெய்யோடு ஏலாது.

இ. வி. 29 ஷை

பேர. 108 ....... ஈறாம் எகரம் மெய்க்கு இலையே.

## நூற்பா - 39

நன். 108 ஒ-நவ்வொடு (ஈறு) ஆம்.

இ. வி. 29 ஷை

## நூற்பா - 44

நன். 121 தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப.

இ. வி. 35 தம்மரபு இசைப்பின் முதல்ஈறு இடைநிலை
அம்மரபு இல்லவும் ஆம்என மொழிப.

## நூற்பா - 45

வீ. சோ. 8 ஈறும் மகர ணகரங்கள் தாமும்
இடையினத்தில் ஏறும் வகரம்
ஒழித்தைந்தும் ..........
............ ஈற்றெழுத்தாம்.

நேமி. 8 ........... உடல் மென்மையின் மூன்று
அயர்வில் இடையினங்கள் ஆறு ........
நன்மொழிகட்கு ஈற்றெழுத்தாம்.

நன். 107 ........ ஞண நமன யரல வழள மெய்
................. .ஈறே.

இ. வி. 28 ஷை

| | | |
|---|---|---|
| பேர. | 107 | (ஆவி) ஞணநமன யரல வழளமெய் அந்தமாம். |
| வீ. சோ. | 25 | லனளண மன-க்கள் ஒன்றுக்கொன்று ஆவனவே. |
| நேமி. | 24 | வந்துஉறழும் ம(ன்)ன (வயனலக்கள்). |
| நன். | 122 | மகர இறுதி அஃறிணைப் பெயரின் னகரமோடு உறழா நடப்பன உளவே. |
| இ. வி. | 30 | னகர இறுதி அஃறிணைப் பெயரின் மகரமோடு உறழா நடப்பன உளவே. |
| மு. வீ. | 144 | அஃறிணைப் பெயர்ச்சொல் இறுதி மகரம் னகரமாம் ஒரோவழி நாடுங் காலே. |



# பிறப்பியல்

## இளம்பூரணம்

### *83. எழுத்துக்களது பொதுப்பிறப்பு*

**உந்தி முதலா முந்துவளி தோன்றித்**
**தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்**
**பல்லும் இதழும் நாவும் மூக்கும்**
**அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்**
**உறுப்புற்று அமைய நெறிப்பட நாடி**
**எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்**
**பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல**
**திறப்படத் தெரியும் காட்சி யான**

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், எழுத்துக்களது பிறப்பு உணர்த்தினமையின் பிறப்பியல் என்னும் பெயர்த்து. இதனை நூல்மரபின் பின் வைக்க எனின், சார்பின் தோற்றத்து எழுத்தும் தனிமெய்யும் மொழிமரபிடை உணர்த்தி உணர்த்தவேண்டுதலின், மொழிமரபின் பின்னர்த்து ஆயிற்று.

இதனுள் இத்தலைச் சூத்திரம் என் நுதலிற்றோ எனின், எழுத்துக்களது பொதுப்பிறப்பு உணர்....ற்று.

(இ-ள்.) தமிழ் எழுத்துக்கள் எல்லாம் முறைப்பட ஆராய்ந்து ஒருவன் தம்மைச் சொல்லும் காலத்து, கொப்பூழ் அடியாக மேலே கிளர்கின்ற உதானன் என்னும் பெயருடைய வாயுத் தோன்றி, தலையின்கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்கண்ணும் நிலைபெற்று, தலையும் மிடறும் நெஞ்சும் என்னும் மூன்றனொடு பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உட்பட எட்டாகிய முறைமையையுடைய இடங்களானே, ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மில் பொருந்தி அமைவுபெறப் பிறப்பினது ஆக்கம் வேறு வேறு புலப்பட்டு வழங்குதல் உடைய, கூறுபாடு உளதாக ஆராயும் அறிவிடத்து எ-று.

இதழ் போறலான் வாய் இதழ் எனப்பட்டது. 'எல்லா எழுத்தும்' என்னும் எழுவாய்க்குப் 'பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல' என்பதனை ஒருசொல் நீர்மைப்படுத்திப் பயனிலை ஆக்குக. (1)

**நச்சினார்க்கினியம்**

எழுத்துக்களது பொதுப்பிறப்பு

*83. உந்தி முதலா . . . . காட்சி யான*

என்பது சூத்திரம்.

இவ்வோத்து எழுத்துக்களினது பிறப்பு உணர்த்துதலின் பிறப்பியல் என்னும் பெயர்த்தாயிற்று. சார்பின் தோற்றத்து எழுத்தும் தனிமெய்யும் மொழியின் அன்றி உணர்த்தல் ஆகாமையின், அவை பிறக்கும் மொழியை மொழிமரபிடை உணர்த்திப் பிறப்பு உணர்த்தவேண்டுதலின், நூன்மரபின் பின்னர் வையாது இதனை மொழிமரபின் பின்னர் வைத்தார்.

இச்சூத்திரம் எழுத்துக்களினது பொதுப்பிறவி இத்துணை நிலைக்களத்துநின்று புலப்படும் என்கின்றது.

இ-ள் : எல்லா எழுத்தும் பிறப்பின் ஆக்கம்(1) சொல்லுங்காலை-தமிழ் எழுத்து எல்லாவற்றிற்கும் ஆசிரியன் கூறிய பிறப்பினது தோற்றரவை யான் கூறுமிடத்து; உந்தி முதலாத் தோன்றி முந்து வளி - கொப்பூழ் அடியாகத் தோன்றி முந்துகின்ற உதானன் என்னும் காற்று; தலையினும். . . . நிலைஇ-தலையின்கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்கண்ணும் நிலைபெற்று; பல்லும் . . . . உறுப்புற்று-பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் என்ற ஐந்துடனே, அக்காற்று, நின்ற தலையும் மிடறும் நெஞ்சும் கூட எட்டாகிய முறைமையை யுடைய தன்மையொடு கூடிய உறுப்புக்களோடு ஒன்றுற்று; அமைய - இங்ஙனம் அமைதலானே; வேறுவேறு இயல - அவ்வெழுத்துக்களது தோற்றரவு வேறுவேறு புலப்பட வழங்குதலையுடைய;

காட்சியான நாடி நெறிப்பட - அதனை அறிவான் ஆராய்ந்து அவற்றின் வழியே மனம்பட; திறப்படத் தெரியும் - அப்பிறப்பு வேறுபாடுகள் எல்லாம் கூறுபட விளங்கும் எ-று.

சொல்லுங்காலை வளி நிலைபெற்று உறுப்புக்கள் உற்று இங்ஙனம் அமைதலானே அவை வழங்கு தலையுடைய; அவற்றின் வழக்கம் அவற்றின் வழியிலே மனம்படத் தெரியும் எனக்கூட்டி உரைத்துக்கொள்க. இங்ஙனம் கூறவே, முயற்சியும் முயலும் கருத்தாவும் உண்மை பெற்றாம். *(1)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 83***

*1.* சொல்லுங்காலை என்பதனை எழுத்துக்களைக் கூறுபவனது வினையாக்கி இளம்பூரணர் உரைப்பர்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.83.*** **உந்தி முதலா முந்துவளி தோன்றி**

**.............................**

**திறப்படத் தெரியும் காட்சி யான.**

*(இ-ள்.)* உதானன் கொப்பூழின்கண் முதலாகத் தோன்றி, தலை-மிடறு- நெஞ்சு - பல்-இதழ் - நா - மூக்கு - அண்ணம் - இவை எட்டிடத்தும் முறையாக நிலைபெற்று, தனித்தனி எழுத்தாக உறுதற்குப் பொருந்துமாறு வழியின்கண் பொருந்த நாடி, எல்லா எழுத்துக்களாகவும் கூறப்படும் இடத்து, அவ்வெழுத்துக் களின் பிறப்பு வெவ்வேறு தன்மையன என்பது (நுண்ணறிவான்) ஆராய்ச்சியின்கண் சீர்மைப்பட அறியப்படும்.

சூத்திரத்துள் தலை மிடறு நெஞ்சு பல் இதழ் நா மூக்கு அண்ணம் என்ற முறையிருப்பினும், உதானன் செல்லும்

வழியின்முறை நெஞ்சு - மிடறு - தலை - மூக்கு - அண்ணம் - நா - பல் - இதழ் - என்றிருத்தலான், அம்முறையையே கொள்ளல் வேண்டும் என்றுணர்த்த ஆசிரியர் 'எண்நிலையான்' என்னாது 'எண் முறை நிலையான்' என்று கூறினார்.

உந்தி முதலாகத் தோன்றிய வளி எவ்வெழுத்தாக மாறினும் மிடற்றினின்று வாய்க்குள் வரும் வரை தன்னுடைய நிலையில் திரியாது என்றதையும், வாய்க்குள் அவ்வவ்விடத்தில் அவ்வளி மெய்யாக மாறும்போது தடைபடும் என்றதையும், உயிராக மாறும்போது அவ்வளி தடைபடாமல் வாயைவிட்டு வெளிவரினும் அஃது அவ்வுயிராக மாறும் இடம் வாய்தான் என்றதையும் நன்குணர்ந்த ஆசிரியர் மிடற்றுவரை, உயிராக மாறும் வளி, தன்னிலையினின்றும் மாறாது என்றதை உணர்த்த இச்சூத்திரம் கூறினார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.83. உந்தி முதலா....காட்சி யான.**

நூன்மரபில் தனி எழுத்துக்களின் இலக்கணம் கூறி, மொழிமரபில் மொழிகளில்வைத்து அறியக்கூடிய சார்பு எழுத்துக்களின் இலக்கணமும் மொழிகளின் முதலிலும் இறுதியிலும் நிற்கும் எழுத்துக்களும் கூறினார் ஆகலின், மேலை இரண்டு இயல்களானும் எழுத்திலக்கணமே உணர்த்தினார் ஆயிற்று. ஆகலின் அவ்வெழுத்துக்களின் பிறப்பிலக்கணத்தை இவ்வியலில் உணர்த்துவார் ஆயினார்.

இம்முதற் சூத்திரத்தில் எழுத்துக்களின் பிறப்பிடத்தைக் கூறியுள்ளார். இந்த முறையே பாணினீய சிக்ஷையிலும் கூறப்பட்டுள்ளது.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.83.** உந்தி முதலா முந்துவளி தோன்றித்

............

திறப்படத் தெரியும் காட்சி யான.

தலையும் மிடறும் நெஞ்சும் ஆகிய மூன்றும் எழுத்துக்களைப் பிறப்பிக்கும் நிலைக்களங்கள், பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் ஆகிய ஐந்தும் வினைக்களங்கள் என்று இவர் குறிப்பிடுகிறார்.

உடல்இயக்கத்துக்குக் காரணமாக உள்ள பத்துவகைக் காற்றினுள் ஓசையை எழுப்பும் காற்றிற்கு உதானன் என்பது பெயர். உணர்வின் வெளிப்பாடே மொழிஆதலின் உணர்வைத் தூண்டும் இடம் தலை (மூளை) ஆதலின், அஃது எழுத்துப் பிறப்பதற்கு மூலமாக அமைந்தது. மொழிநூலார், தலை என்றது நுதலின் கீழுள்ள அகப்பகுதி என்றும், அது மிடற்றுக்கும் மேற்பகுதியாதலின் தலை எனப்பட்டது என்றும், அது மூக்குஅறையைக் குறிக்கும் என்றும் கூறுவர்.

மூக்கு என்றது, மெல்லின எழுத்துக்களைப் பிறப்பிக்கும் உறுப்புக்கள் மெய்யுற ஒற்றியகாலை அவ்வுறுப்புக்களின் அடைப்பை நீக்கி வெளிப்படும் வளியிசை புறப்படும் இடத்தை. அது குரல்வளையின் மேல் நிற்கும் மூக்கின் அடிப்பகுதியாகிய துளைவழி ஆகும்.

எண்வகை உறுப்பினுள், நெஞ்சும் மிடறும் தலையும் அதிர்வு உறுப்புக்கள்; மூக்கும் அண்ணமும் பல்லும் நிலைஉறுப்புக்கள்; நாவும் இதழும் இயங்குஉறுப்புக்கள் ஆகும். முந்துவளியான் தோன்றும் ஓசை ஒன்றே யாயினும், நெஞ்சுவளியின் அடர்த்தி யானும் - மிடற்றுவளியின் துரப்பினானும் - மூக்குவளியின் செறிவினானும் - இயங்குறுப்புக்களின் இயக்கத்தானும் - அவ்வோசை வெவ்வேறு எழுத்தொலிகளாய்த் திறப்படத் தெரிவன ஆயின.

**இளம்பூரணம்**

## *84. உயிரெழுத்திற்குப் பொதுப்பிறப்பு*

**அவ்வழிப்**
**பன்னீர் உயிரும் தம்நிலை திரியா**
**மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்.**

*(இச்....எனின்) உயிரெழுத்திற்குப் பொதுப்பிறப்பு உணர்...ற்று.*

*(இ-ள்.) அவ்விடத்துப் பன்னிரண்டு உயிரெழுத்தும் தத்தம் நிலையின் திரியாவாய் மிடற்றுக்கண் பிறந்த வளியான் ஒலிக்கும் எ-று.*

*'தம்நிலை திரியா' என்றதனான், குற்றியலிகரம் குற்றியலுகரம் தம்நிலை திரியும் என்பது பெறப்பட்டது.(2)*

**நச்சினார்க்கினியர் சூத்திரம் உரை**

## *84. உயிரெழுத்திற்குப் பொதுப்பிறப்பு*

**அவ்வழி,**
**பன்னீ ருயிரும் தம்நிலை திரியா**
**மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்,**

இஃது உயிரெழுத்திற்குப் பொதுப்பிறப்புக் கூறுகின்றது.

*இ-ள்: பன்னீர்.... திரியா - பன்னிரண்டு உயிரும் தத்தம் மாத்திரை திரியாவாய்; (அவ்வழிப்) பிறந்த - அவ்வுந்தி யிடத்துப் பிறந்த; மிடற்றுவளியின் இசைக்கும் - மிடற்றின் கண் நிலைபெற்ற காற்றான் ஒலிக்கும் எ-று.*

எனவே, குற்றியலிகரமும் குற்றியலுகரமும் தம்நிலை திரியும் என்றார் ஆயிற்று. அவ்வெழுத்துக்களை கூறி உணர்க. *(2)*

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.84.** அவ்வழி,
பன்னீ ருயிரும்.....வளியின் இசைக்கும்.

*(இ-ள்.) அவ்விடத்து, மிடற்றுத் தோன்றிய வளியினின்றும் பன்னீருயிரும் தத்தம் இடங்களின்கண் திரிந்து ஒலிக்கும்.*

*நிலை என்ற சொற்கு மாத்திரை எனப் பொருள்கொண்டமையை இவர் மறுத்துரைக்கிறார். வாயைவிட்டுப் புறத்தே வளி வருகின்ற காலத்தானே உயிர்களின் மாத்திரை வேறுபடுகின்றமையானும், வளி மிடற்றின்கண் இருக்கும் அளவில் அவற்றிற்கு மாத்திரை புலப்படாமையானும் என இவர் அம்மறுப்புரைக்கு ஏது காட்டுகிறார்.*

**இளம்பூரணம்**

## *85. சிறப்புப் பிறப்பு ஆமாறு*

**அவற்றுள்**
**அ ஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்.**

*(இச்...எனின்) உயிரெழுத்துக்களுள் சிலவற்றிற்குச் சிறப்புவிதி உணர்...ற்று.*

*(இ-ள்.) மேல் சொல்லப்பட்ட உயிர் பன்னிரண்டனுள், அகர ஆகாரங்கள் ஆகிய அவ்விரண்டும் அங்காந்து சொல்ல அஃது இடமாகப் பிறக்கும் எ-று.* *(3)*

**நச்சினார்க்கினியம்**

## *85. சிறப்புப் பிறப்பு ஆமாறு*

**அவற்றுள்,**
**அஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்.**

*இஃது அவ்வுயிர்களுள் சிலவற்றிற்குச் சிறப்புப் பிறவி கூறுகின்றது.*

இ-ள்: அவற்றுள் - முற்கூறிய பன்னிரண்டு உயிர்களுள்; அ ஆ ஆயிரண்டு - அகரஆகாரங்கள் ஆகிய அவ்விரண்டும்; அங்காந்து இயலும் - அங்காந்து கூறும் முயற்சியான் பிறக்கும் எ-று.

முயற்சி உயிர்க்கிழவன்கண்ணது. அ ஆ - என இவற்றின் வேறுபாடு உணர்க. (3)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.85.** **அவற்றுள்,**
**அஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்.**

முதல்நாவும் முதல்அண்ணமும் சேர்கின்ற இடம் திறத்தலே அங்காத்தல் என்ற சொல்லான் உணர்த்தப் படுதலின், அவ்விடமே அவ்விரண்டு எழுத்திற்கும் பிறப்பிடம் ஆம். வாய்திறத்தல் என்ற பொருளால் முயற்சியும் கூறப்பட்டது.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.85.** **அவற்றுள்,**
**அ ஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்.**

அகரஆகாரங்களை ஒலித்தற்கு அங்காத்தல் செய்யுமிடத்து, அகர ஒலிக்கு இதழையும் கவுளையும் மிகக்குவித்தல் செய்யாமையும், ஆகார ஒலிக்கு அவற்றை மிகவிரித்தல் செய்யாமையும் வேண்டும். அகர ஆகாரங்களுக்குப் பிறப்பிடம் கண்ட்டம் என்பது பாணினீய சிக்ஷையால் (17) அறியத்தகும்.

**இளம்பூரணம்**

**86.** **இஈ எஏ ஐஎன இசைக்கும்**
**அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன**
**அவைதாம்**
**அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய.**

இதுவும் அது.

*(இ-ள்.)* இ ஈ எ ஏ ஐ - என்று சொல்லப்படும் அக்கூற்று ஐந்தும், மேற்கூறிய அகர ஆகாரங்கள் போல அங்காந்து சொல்லப் பிறக்கும். அவைதாம், அவ்வாறு சொல்லப் பிறக்குமிடத்துப் பல்லினது அணிய இடத்தினை நாவினது அடியின் விளிம்பு சென்று உறுதலை உடைய எ-று. *(4)*

**நச்சினார்க்கினியம்**

***86. இ ஈ எ ஏ . . . . விளிம்புறல் உடைய.***

இதுவும் அது.

***இ-ள்:*** இ ஈ . . . ஐந்தும் - இ ஈ எ ஏ ஐ - என்று கூறப்படும் அக்கூற்று ஐந்தும்; அவற்று ஓரன்ன - அகரஆகாரங்கள்போல அங்காந்து கூறும் முயற்சியால் பிறக்கும்; அவைதாம் . . . . உடைய - அவைதாம் அங்ஙனம் பிறக்குமாயினும் அண்பல்லும் அடிநாவிளிம்பும் உறப் பிறக்கும் வேறுபாடுடைய எ-று.

அண்பல் : வினைத்தொகை. எனவே, நாவிளிம்பு அணுகுதற்குக் காரணமான பல் என்று அதற்கு ஒரு பெயராயிற்று. *(4)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ.86.*** **இஈ எஏ ஐஎன இசைக்கும்**
................**விளிம்புறல் உடைய.**

*(இ-ள்.)* இ ஈ எ ஏ ஐ- என்ற ஐந்து எழுத்துக்களும் அவற்றின் தன்மையவாய் அங்காந்து இசைத்து மேல்வாய்ப் பற்களுக்குப் பின்னருள்ள அண்ணமும் நாவிளிம்பும் பொருந்துதலை யுடைய.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ.86.*** **இஈ எஏ......விளிம்புறல் உடைய.**

'அண்பல் முதல்நா விளிம்புறல்' என்னும் பகுதிக்கு ''பல்லினது அண்ணிய இடத்தினை நாவினது அடியின் விளிம்பு சென்று உறுதல்'' என்று இளம்பூரணர் உரை கூறினார். ''அண்பல்லும் அடிநா விளிம்பும் உறல்'' என்று நச்சினார்க்கினியர் உரைத்தார். மேற்பல்லின் முதலிடத்தை நாவின் விளிம்பு பொருந்துதல் என்று பொருள் கூறுதலே இயைபுடைத்தாம்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***சூ.86.*** **இஈ எஏ ஐஎன இசைக்கும்**
**.......விளிம்புறல் உடைய.**

நாவிளிம்பால் அணுகப்படும் பல் 'அண்பல்' எனப்பட்டது.

***சூ. 87.*** **உஊ ஒஓ ஔ - என இசைக்கும்**
**அப்பால் ஐந்தும் இதழ்குவிந்து இயலும்.**

இதுவும் அது.

(இ-ள்.) உ ஊ ஒ ஓ ஔ - என்று சொல்ல இசைக்கும் அக்கூற்று ஐந்தும் இதழ் குவியச் சொல்ல நடக்கும் எ-று. (5)

**நச்சினார்க்கினியம்**

***87. உஊ ஒஓ . . . . இயலும்.***

இதுவும் அது.

இ-ள் : உ ஊ . . . ஐந்தும் - உ ஊ ஒ ஓ ஔ - என்று சொல்லப்படும் அக்கூற்று ஐந்தும்; இதழ் குவிந்து இயலும் - இதழ் குவித்துக் கூறப் பிறக்கும் எ-று.

உ ஊ ஒ ஓ ஔ - என இவற்றின் வேறுபாடு உணர்க. (5)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.87.** உ ஊ ஒ ஓ............இதழ்குவிந்து இயலும்.

இவற்றின் பிறப்பிடமும் பகாரமகாரங்களின் பிறப்பிடமும் ஒன்றாக ஆசிரியர் கூறியிருத்தல் நோக்கத்தக்கது.

**இளம்பூரணம்**

***88. சிங்கநோக்கப் புறனடை***

**தத்தம் திரிபே சிறிய என்ப.**

(இச்....எனின்) முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் ஒரு புறனடை கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) எழுத்துக்கள் ஒரு தானத்துக் கூடிப் பிறக்கும் என்னப்பட்டன; அவ்வாறு கூடிப் பிறப்பினும், தத்தம் வேறுபாடுகளைச் சிறிய வேறுபாடு எனச் சொல்லுவர். அவ்வேறுபாடு அறிந்துகொள்க எ-று. (6)

**நச்சினார்க்கினியம்**

***88. சிங்கநோக்கப் புறனடை***

**தத்தம் திரிபே சிறிய என்ப.**

இது முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் பொதுவிதி கூறிச் சிங்கநோக்காகக் கிடந்தது.

***இ-ள் :*** உயிர்களும் மெய்களும் ஒவ்வொரு தானத்துள் பிறப்பனவற்றைக் கூட்டிக் கூறினேம் ஆயினும், நுண்ணுணர்வான் ஆராயுமிடத்துத் தம்முடைய வேறுபாடுகள் சிறியவாக உடைய என்று கூறுவர் புலவர் எ-று.

அவை எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என்றவாற்றானும், தலைவளி நெஞ்சுவளி மிடற்றுவளி

மூக்குவளி - என்றவாற்றானும் பிறவாற்றானும் வேறுபடுமாறு நுண்ணுணர்வுடையோர் கூறி உணர்க. ஐ விலங்கலுடையது; வல்லினம் தலைவளி உடையது; மெல்லினம் மூக்குவளி உடையது; இடையினம் மிடற்றுவளி உடையது. ஏனையவும் கூறிக் கண்டுணர்க. (6)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.88. தத்தம் திரிபே சிறிய என்ப.**

இது முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் பொதுவிதி கூறிச் சிங்கநோக்காகக் கிடந்தது என்ற நச்சினார்க்கினியர் உரையை மறுக்கிறார். மெய்களின் இடமுயற்சிகள் வெளிப்பட நன்கு ஆசிரியரால் உணர்த்தப்பட்டுள என்பது இவர் கருத்து.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.88. தத்தம் திரிபே சிறிய என்ப.**

இகரம் முதலிய ஐந்து எழுத்துக்களுக்கும் உகரம் முதலிய ஐந்து எழுத்துக்களுக்கும் தனித்தனியே முயற்சி ஒன்றாகக் கூறினாரேனும், அவ்வெழுத்துக்களுள் ஒவ்வொன்றற்கும் முயற்சியில் சிறிது வேறுபாடுண்டு.

ஒரேவிதமான முயற்சியில் பலஎழுத்துக்கள் தோன்றுதல் எப்படி எனஐயம் உண்டாகும் ஆதலின், அதனை நீக்குதற்பொருட்டு இது கூறினார்.

இச்சூத்திரம் சிங்கநோக்காகக் கிடக்கின்றது என்பர் உரையாசிரியர்கள். இவ்விதி மேற்கூறிய உயிரெழுத்துக்களுக்கே புறனடை ஆகும். (பிற் கூறும் மெய்யெழுத்துக்களுக்கு அன்று.)

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.88. தத்தம் திரிபே சிறிய என்ப.**

குறிலும் நெடிலும் ஒன்றிலிருந்து ஒன்று நீடலும் குறுகலும் இன்றித் தனித்தனியே பிறத்தலான் அவற்றின் திரிபு உணரப்படும். இகர ஈகாரங்கள் அண்பல்லை நாவிளிம்பு நன்கு பொருந்தவும், எகர ஏகாரங்கள் ஓரளவு பொருந்தவும், ஐகாரம் அணுகிப் பொருந்தவும் பிறத்தலை இசைத்துக் கண்டுகொள்க. அவ்வாறே, உகர ஊகாரங்களின் முயற்சியும் ஒகர ஓகாரங்களின் முயற்சியும் ஔகாரத்தின் முயற்சியும் வேறுபடுதலை இசைத்துக் கண்டுகொள்க.

இப்புறனடையை, இனி வரும் மெய்யெழுத்து சார்பெழுத்துக்களின் பிறப்புவிதிகளுள் இணைத்துக் கூறப்பெறும் எழுத்துக்கட்கும் கொள்க. இச்சூத்திரம் அரிமாநோக்காக நின்றது.

வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு

**சூ.88.** எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என்பனவற்றாலும், தலைவளி மிடற்றுவளி நெஞ்சுவளி மூக்குவளி எனபனவற்றாலும் அவைதம்முள் வேறு பாடுடையனவாம் எனவும், ஐ விலங்கல் உடையது - வல்லினம் தலைவளி உடையது - மெல்லினம் மூக்குவளி உடையது - இடையினம் மிடற்றுவளி உடையது எனவும், பிறப்பு ஒன்றாகச் சொல்லப்பட்ட எழுத்துக்களிடையே அமைந்த நுண்ணிய வேறுபாடுகளை அறிந்துகொள்வதற்கு வழிகூறுவர் நச்சினார்க்கினியர்.

**இளம்பூரணம்**

### 89. மெய்யெழுத்திற்குச் சிறப்புப் பிறப்பு: நாவதிகாரம்

**ககாரம் ஙகாரம் முதல்நா அண்ணம்.**

(இச்....எனின்) மெய்களுள் சிலவற்றிற்குப் பிறவி ஆமாறு உணர்...ற்று.

(இ-ள்.) ககாரமும் ஙகாரமும் நாமுதலும் அண்ணமுதலும் உறப் பிறக்கும். எ-று. (7)

**நச்சினார்க்கினியம்**

## 89. மெய்யெழுத்திற்குச் சிறப்புப் பிறப்பு : நாவதிகாரம்

**ககாரம் ஙகாரம் முதல்நா அண்ணம்.**

இது மெய்களுள் சிலவற்றிற்குப் பிறப்புக் கூறுகிறது.

இ-ள் : ககாரம் ஙகாரம் முதல்நா முதல்அண்ணம் - ககாரமும் ஙகாரமும் முதல்நாவும் முதல்அண்ணமும் உறப் பிறக்கும் எ-று.

உயிர்மெய்யாகச் சூத்திரத்துக் கூறினும் தனிமெய்யாகக் கூறிக் காண்க. முதலை இரண்டற்கும் கூட்டுக. க, ங - என இவற்றின் வேறுபாடு உணர்க. (7)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.89-92.** இந்நான்கு சூத்திரங்களையும், ககாரஙகாரம் சகாரஞகாரம் டகார ணகாரம் ஆகிய ஆறு எழுத்தும் முதல்நாஅண்ணம் இடைநாஅண்ணம் நுனிநாஅண்ணம் ஆகிய மூன்று வகைப்பட்ட பிறப்பிடத்தையுடையன என்ற பொருளைக் கொண்ட ஒரே சூத்திரமாக ஆசிரியர் கருதினர் எனலாம்.

**இளம்பூரணம்**

**90.** **சகாரம் ஞகாரம் இடைநா அண்ணம்**

இதுவும் அது.

(இ-ள்.) சகாரமும் ஞகாரமும் நாவது இடையும் அண்ணத்தது இடையும் உறப் பிறக்கும் எ-று. (8)

**நச்சினார்க்கினியம்**

## 90. சகாரம் ஞகாரம் இடைநா அண்ணம்.

இதுவும் அது.

இ-ள் : சகாரம் ஞகாரம் இடைநா இடைஅண்ணம் - சகாரமும் ஞகாரமும் இடைநாவும் இடைஅண்ணமும் உறப் பிறக்கும் எ-று.

இடையை இரண்டற்கும் கூட்டுக. ச, ஞ - என இவற்றின் வேறுபாடு உணர்க. (8)

**91. டகாரம் ணகாரம் நுனிநா அண்ணம்.**

இதுவும் அது.

(இ-ள்.) டகாரமும் ணகாரமும் நாவது நுனியும் அண்ணத்தது நுனியும் உறப் பிறக்கும் எ-று. (9)

### நச்சினார்க்கினியம்

**91. டகாரம் ணகாரம் நுனிநா அண்ணம்**

இதுவும் அது.

இ-ள் : டகாரம் ணகாரம் நுனிநா நுனிஅண்ணம் - டகாரமும் ணகாரமும் நுனிநாவும் நுனிஅண்ணமும் உறப் பிறக்கும் எ-று.

நுனியை இரண்டற்கும் கூட்டுக. ட, ண - என இவற்றின் வேறுபாடு உணர்க. (9)

### சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ.91. டகார ணகாரம் நுனிநா அண்ணம்.**

'தத்தம் திரிபே சிறிய என்ப' என்றதனான், நாச் சிறிது உள்வளைதல் கொள்க.

### இளம்பூரணம்

**92. அவ்வாறு எழுத்தும் மூவகைப் பிறப்பின.**

(இச்....எனின்) மேலனவற்றிற்கு ஒரு புறனடை உணர்....ற்று.

*(இ-ள்.) மேல் கூறப்பட்ட ஆறு எழுத்தும் நிரல்நிறை வகையான் அறுவகைப் பிறப்பின அல்ல; மூவகைப் பிறப்பின எ-று. (10)*

**நச்சினார்க்கினியம்**

***92. அவ்வாறு எழுத்தும் மூவகைப் பிறப்பின.***

**இது மேலனவற்றிற்கு ஓர் ஐயம் அகற்றியது.**

***இ-ள் :*** *அவ்வாறு . . . . . பிறப்பின - அக்கூறுபட்ட ஆறு எழுத்தும் மூவகையாகிய பிறப்பினை உடைய எ-று.*

*எனவே, அவை ககாரம் முதல்நாவினும் ஙகாரம் முதல் அண்ணத்தினும் பிறக்கும் என்று இவ்வாறே நிரனிறை வகையான் அறுவகைப் பிறப்பின அல்ல என்றார். (10)*

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***சூ.92.*** அவ்வாறு எழுத்தும் மூவகைப் பிறப்பின.

'வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்' என்னும் உத்தியான், வல்லெழுத்துக்கட்கு நெஞ்சுவளியிசை உரியதென்று கொள்க. என்னை? வளியிசை மூன்றனுள் உயிரெழுத்துக்கள் 'மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்' என்றும், மெல்லெழுத்துக்கள் 'மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்' என்றும் கூறியுள்ளமையானும், இடையெழுத்துக்களுள் யகரம் மிடற்றுவளியிசையால் தோன்றும் எனப் புலப்படுத்தி ஏனை இடையெழுத்துக்களுக்கும் அதுவே என உய்த்துணர வைத்தமையானும், எஞ்சிய நெஞ்சுவளி வல்லெழுத்திற்கு உரியது என்பது பெறப்படும்.

**இளம்பூரணம்**

***93.*** **அண்ணம் நண்ணிய பல்முதன் மருங்கின்**
**நாநுனி பரந்து மெய்உற ஒற்றத்**
**தாம்இனிது பிறக்கும் தகாரம் நகாரம்.**

(இச்....எனின்) இது மெய்களில் சிலவற்றிற்குப் பிறவி உணர்....ற்று.

(இ-ள்.) அண்ணத்தைப் பொருந்தின பல்லினது அடியாகிய இடத்தின்கண்ணே நாவினின் நுனி பரந்து வடிவை உறும்படி ஒற்றத் தாம் இனிதாகப் பிறக்கும் தகாரமும் நகாரமும் எ-று.

முன்னே 'உறுப்புற்று அமைய' என்று வைத்துப் பின்னும் 'மெய்யுற' என்றதனான் எல்லா எழுத்துக்களும் மெய்யுற்றபொழுதே இனிது பிறப்பன என்பது கொள்க. *(11)*

**நச்சினார்க்கினியம்**

**93.** **அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கில்**
**நாநுனி பரந்து மெய்உற ஒற்றத்**
**தாம்இனிது பிறக்கும் தகாரம் நகாரம்.**

இது மெய்களுள் சிலவற்றிற்குப் பிறவி கூறுகின்றது.

***இ-ள்:*** *அண்ணம் .... மருங்கில்* - அண்ணத்தைச் சேர்ந்த பல்லினது அடியாகிய இடத்தே; *நாநுனி .... ஒற்ற* - நாவினது நுனி பரந்து சென்று தன்வடிவு மிகவும் உறும்படி சேர; *தகாரம் நகாரம்தாம் இனிது பிறக்கும்* - தகாரம் நகாரம் என்றவைதாம் இனிதாகப் பிறக்கும் எ-று.

த, ந - இவற்றின் வேறுபாடு உணர்க. முன்னர் 'உறுப்புற்று அமைய' (83) என்றுகூறி ஈண்டு 'மெய்யுற ஒற்ற' என்றார், சிறிது ஒற்றவும் வருடவும் பிறப்பன உளவாகலின். *(11)*

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ.93.*** **அண்ணம் நண்ணிய.....தகாரம் நகாரம்.**

*(இ-ள்.)* அண்ணத்தை நெருங்கிய பற்களின் அடியிடத்தினை நாவின் நுனிப்பகுதி பரந்து நின்று தான் அதனோடு ஒன்றுபடுமாறு ஒற்ற, தகரநகரங்கள் பிறக்கும்.

இளம்பூரணத்தில் காணப்படும் பின்வரும் தொடர் இடைச்செருகலாய் இருக்கலாம் என்பது இவர்கருத்து: ''முன்னே 'உறுப்புற்றுஅமைய' என்று வைத்துப் பின்னும் 'அண்ணம்.....ஒற்ற ' என்றதனால், எல்லா எழுத்துக்களும் மெய்யுற்றபோதே இனிது பிறப்பன.''

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

*சூ.93.* அண்ணம் நண்ணிய....தகார நகாரம்.

பிறப்பிடம் நோக்கி முறைப்படக் கூறவேண்டின், இச்சூத்திரம் 'அணரி நுனிநா' என்னும் அடுத்த சூத்திரத்தினை அடுத்தே கூறல்வேண்டும். அவ்வாறின்மையின், நெடுங் கணக்குமுறை நோக்கியே இதை இங்கு நிறுத்தினாராவார்.

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

*சூ.93.* அண்ணம் நண்ணிய.....தகார நகாரம்.

இ-ள்: தகரமும் நகரமும் ஆகிய மெய்யெழுத்துக்கள் தாம், அண்ணத்தைப் பொருந்தியிருக்கும் பற்களின் அடிப்பகுதியின் இருபக்கங்களிலும் நாவினது முற்பகுதி விரிந்து தனது வடிவு நன்கு பொருந்தத் தகரமும், நாநுனி விரிந்து ஒற்ற நகரமும் தத்தம் இயல்பு தோன்ற இனிது பிறக்கும்.

**இளம்பூரணம்**

**94.** **அணரி நுனிநா அண்ணம் ஒற்ற**
**றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்.**

இதுவும் அது.

(இ-ள்.) அணரி நுனிநா அண்ணத்தைச் சென்று ஒற்ற, றஃகான் னஃகான் ஆகிய இரண்டும் பிறக்கும் எ-று.

இங்குநின்று நெடுங்கணக்கு முறைமைவிட்டு நா அதிகாரம் பட்டது கண்டு கூறுகின்றது என உணர்க. (12)

**நச்சினார்க்கினியம்**

**94. அணரி நுனிநா . . . . . பிறக்கும்.**

இதுவும் அது.

இ-ள் : நுனிநா அணரி . . . . ஒற்ற - நாவினது நுனி மேல்நோக்கிச் சென்று அண்ணத்தை அழுந்தத் தடவ; றஃகான் . . . . பிறக்கும் - றகார ணகாரம் ஆகிய அவ்விரண்டும் பிறக்கும் எ-று.

இது முதலாக நெடுங்கணக்குமுறை அன்றி நாஅதிகாரம் பற்றிக் கூறுகின்றார்.

ற, ன - இவற்றின் வேறுபாடு உணர்க. (12)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 94. அணரி நுனிநா....ஆயிரண்டும் பிறக்கும்**

(இ-ள்.) நாவின்நுனி மேல்நோக்கிச் சென்று அண்ணத்தை ஒற்ற றகரனகரங்கள் இரண்டும் பிறக்கும்.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

**சூ. 94.** அண்ணத்தின் நடுவிடத்தே நாவினது நுனி பொருந்த றகரமும், அது பிறக்கும் இடத்திற்கும் சிறிது கீழே னகரமும் பிறக்கும் என்பார், றகரத்தை முன்னரும் னகரத்தை அதன்பின்னரும் வைத்துரைத்தார். இந்நுட்பத்தை உணர்ந்த நச்சினார்க்கினியர் ''றன இவற்றின் வேறுபாடு உணர்க'' என்னும் தொடரால் இதனைப் புலப்படுத்தியுள்ளார்.

**இளம்பூரணம்**

**95. நுனிநா அணரி அண்ணம் வருட**
**ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும்.**

இதுவும் அது.

(இ-ள்.) நுனிநா அணர்ந்து அண்ணத்தைத் தடவ, ரகார ழகாரம் ஆய அவ்விரண்டும் பிறக்கும் எ-று. (13)

**நச்சினார்க்கினியம்**

***95. நுனிநா அணரி . . . . பிறக்கும்.***

*இதுவும் அது.*

*இ-ள் : நுனிநா . . . . . வருட - நாவினது நுனி மேல்நோக்கிச் சென்று அண்ணத்தைத் தடவ; ரகார . . . . பிறக்கும் - ரகார ழகாரம் ஆகிய அவ்விரண்டும் பிறக்கும் எ-று.*

*ர, ழ - இவற்றின் வேறுபாடு உணர்க.* *(13)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 95.*** **நுனிநா அணரி......ஆயிரண்டும் பிறக்கும்.**

*(இ-ள்.) நாவின்நுனி மேற்சென்று அண்ணத்தைத் தடவ ரகரம் ழகரம் ஆகிய இரண்டும் பிறக்கும்.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 95.*** **நுனிநா அணரி....ஆயிரண்டும் பிறக்கும்.**

ஒற்றுதல், வருடுதல் என்னும் இவையே றகார ரகாரங்களின் வேற்றுமைக்குக் காரணமாயிருப்ப, நச்சினார்க்கினியர் இவ்விரண்டு சொற்களுக்கும் 'தடவ' என்னும் பொருளே கூறியது அமைதி அன்று. ஒற்றுதல் - நன்கு தாக்குதல்; வருடுதல் - பட்டும் படாமலும் வருமாறு தடவுதல்.

**ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***சூ. 95.*** **நுனிநா அணரி....ஆயிரண்டும் பிறக்கும்.**

*'தத்தம் திரிபே சிறிய' என்பதனான், ழகரத்திற்கு நாச்சிறிது உள்வளைதல் கொள்க.*

**இளம்பூரணம்**

**96. நாவிளிம்பு வீங்கி அண்பல் முதல்உற**
**ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்**
**லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்.**

*(இ-ள்.)* நாவினது விளிம்பு தடித்துப் பல்லினது அணிய இடத்தைப் பொருந்தி அவ்விடத்து அண்ணத்தை ஒற்ற லகாரமும், அதனைத் தடவ, ளகாரமும் ஆகிய அவ்விரண்டும் பிறக்கும் எ-று. (14)

**நச்சினார்க்கினியம்**

***96. நாவிளம்பு வீங்கி . . . . . பிறக்கும்.***

இதுவும் அது.

இ-ள் : நா வீங்கி விளிம்பு அண்பல் முதல் உற - நா மேல்நோக்கிச் சென்று தன் விளிம்பு அண்பல்லின் அடியிலே உறாநிற்க; ஆவயின் அண்ணம் ஒற்ற லகாரமாய் - அவ்விடத்து அவ்வண்ணத்தை அந்நா அழுந்தத் தீண்ட லகாரமாயும்; ஆவயின் அண்ணம் வருட ளகாரமாய் - அவ்விடத்து அண்ணத்தை அந்நாத் தடவ ளகாரமாயும்; இரண்டும் பிறக்கும் - இவ்விரண்டு எழுத்தும் பிறக்கும் எ-று.

ல, ள - என இவற்றின் வேறுபாடு உணர்க. (1)
இத்துணையும் நாஅதிகாரம் கூறிற்று. (14)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 96***

1. இவ்வியல் 7ஆம் சூத்திரம் முதல் இதுகாறும் நாவிற் பிறக்கும் எழுத்தை அதிகாரப்பட வைத்துத் தொடர்ந்து கூறினார் என்றவாறு.

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ.96.*** **நாவிளிம்பு வீங்கி.....லகார ளகாரம்**
**ஆயிரண்டும் பிறக்கும்.**

(இ-ள்.) நாவின்நுனி பரந்து அண்பல்லின் அடியைப் பொருந்த, அவ்விடத்தை ஒற்ற லகாரமும், அவ்அண்பல்லின் அடிக்கு அருகிலுள்ள அண்ணத்தைத் தடவ ளகாரமும் பிறக்கும்.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 96.** நாவிளிம்பு வீங்கி....ஆயிரண்டும் பிறக்கும்.

நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற ஒற்ற லகாரமும், நாவிளிம்பு வீங்கி அண்ணம் வருட ளகாரமும் பிறக்கும் என்றவாறு.

## இளம்பூரணம்

### 97. பகார மகாரத் தோற்றம்

**இதழ்இயைந்து பிறக்கும் பகாரம் மகாரம்.**

இதுவும் அது.

(இ-ள்.) கீழ்இதழும் மேல்இதழும் தம்மில் இயையப் பகாரமும் மகாரமும் பிறக்கும் எ-று. (15)

## நச்சினார்க்கினியம்

### 97. பகார மகாரத் தோற்றம்

**இதழ்இயைந்து பிறக்கும் பகார மகாரம்.**

இதுவும் அது.

**இ-ள் :** இதழ் . . . . மகாரம் - மேல்இதழும் கீழ்இதழும் தம்மில் கூடப் பகாரமும் மகாரமும் பிறக்கும் எ-று.

ப, ம - என இவற்றின் வேறுபாடு உணர்க. (15)

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 97.** இதழ்இயைந்து பிறக்கும் பகார மகாரம்.

**இளம்பூரணம்**

## 98. வகாரத் தோற்றம்

பல்இதழ் இயைய வகாரம் பிறக்கும்.

இதுவும் அது.

(இ-ள்.) மேற்பல்லும் கீழ்இதழும் தம்மில் இயைய வகாரமானது பிறக்கும் எ-று. (16)

**நச்சினார்க்கினியம்**

## 98. வகாரத் தோற்றம்

**பல்இதழ் இயைய வகாரம் பிறக்கும்.**

**இது வகாரம் பிறக்குமாறு கூறுகின்றது.**

**இ-ள் :** பல் இதழ் . . . . பிறக்கும் - மேல்பல்லும் கீழ்இதழும் கூட வகாரமானது பிறக்கும் எ-று.

வ - என வரும். இதற்கும் இதழ் இயைதலின் மகரத்தின் பின்னர் வைத்தார். (16)

ச. பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.98.** பல்இதழ் இயைய வகாரம் பிறக்கும்.

இம்மூன்றனையும் 'இதழ்வழி மெய்யெழுத்து' என்பர் மொழிநூலார்.

**இளம்பூரணம்**

## 99. யகாரத் தோற்றம்

**அண்ணம் சேர்ந்த மிடற்றுஎழு வளிஇசை**
**கண்ணுற்று அடைய யகாரம் பிறக்கும்.**

இதுவும் அது.

*(இ-ள்.) அண்ணத்தைச் சேர்ந்த அவ்விடத்து மிடற்றினின்றும் எழும் வளியான் ஆகிய இசை அவ்வண்ணத்தை அணைந்து செறிய யகாரம் பிறக்கும் எ-று.*

*[அண்ணத்தைச் சேர்ந்த அவ்விடத்து வளி, மிடற்றினின்றும் எழும் வளி என்று கூட்டியுரைக்க.] (17)*

**நச்சினார்க்கினியம்**

## *99. யகாரத் தோற்றம்*

**அண்ணம் சேர்ந்த . . . . பிறக்கும்.**

**இது யகாரம் பிறக்குமாறு கூறுகின்றது.**

***இ-ள் :*** *எழு மிடற்றுச் சேர்ந்த இசை - உந்தியின் எழுந்த காற்று மிடற்றிடத்துச் சேர்ந்த அதனான் பிறந்த ஓசை; அண்ணம் கண்ணுற்று அடைய - அண்ணத்தை அணைந்து உரல்ஆணி இட்டாற்போலச் செறிய; யகாரம் பிறக்கும் - யகார ஒற்றுப் பிறக்கும் எ-று.*

*(1) ஆணி - மரம். ய - என வரும். (17)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 99*

*1. ஆணி என்றது, உரலின் அடித்தொளையை மறைக்கும்படி இடும் மரத்தை.*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 99.*** **அண்ணம் சேர்ந்த.....யகாரம் பிறக்கும்.**

*(இ-ள்.) அண்ணத்தோடு பொருந்திய கழுத்தினின்றும் எழுகின்ற வளியான் ஆகிய ஓசை முன்புறத்தை அடைய யகாரம் பிறக்கும்.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.99.** **அண்ணம் சேர்ந்த....யகாரம் பிறக்கும்.**

அண்ணம் சேர்ந்த இசை உற்று அடைய - என இயைக்க. நச்சினார்க்கினியர் வேண்டியவாறே பிரித்து மாற்றிக் கூட்டியது முறைஅன்று.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.99.** **அண்ணம் சேர்ந்த....யகாரம் பிறக்கும்.**

(இ-ள்.) யகரமெய், அண்ணத்தைச் சேர்ந்த மிடற்று எழும் வளியிசையானது, விளிம்புற்று நிற்கும் அடிநாவினை நெருங்கிப் பொருந்தப் பிறக்கும். 'அண்ணம் சேர்ந்த வளியிசை' எனக் கூட்டுக.

**இளம்பூரணம்**

## 100. மெல்லெழுத்திற்கு மூக்கின் வளியிசை தோன்றல்

**மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கம்**
**சொல்லிய பள்ளி நிலையின ஆயினும்**
**மூக்கின் வளிஇசை யாப்புறத் தோன்றும்.**

(இச்...எனின்) மெல்லெழுத்திற்கு ஒரு புறனடை உணர்...ற்று.

(இ-ள்.) மெல்லெழுத்துக்கள் ஆறும் தம் பிறப்பினது ஆக்கம் மேல் சொல்லிய இடத்தே நிலைபெற்றன ஆயினும். அவை மூக்கின்கண் உளதாகிய வளியது இசையான் யாப்புறத் தோன்றும் எ-று.

'யாப்புற' என்றதனான், இடையெழுத்திற்கு மிடற்று வளியும், வல்லெழுத்திற்குத் தலைவளியும் கொள்க. (18)

**நச்சினார்க்கினியம்**

### 100. மெல்லெழுத்திற்கு மூக்கின் வளியிசை தோன்றல்

மெல்லெழுத்து ஆறும் . . . . யாப்புறத் தோன்றும்.

இது மெல்லெழுத்திற்குச் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ-ள் :** மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கம் சொல்லிய பள்ளி நிலையின ஆயினும் - மெல்லெழுத்துக்கள் ஆறும் தத்தம் பிறப்பினது ஆக்கம் சொல்லிய இடத்தே நிலைபெற்றன ஆயினும்; மூக்கின் . . . . தோன்றும் - ஓசை கூறுங்கால் மூக்கின்கண் உளதாகிய வளியின் இசையான் யாப்புறத்தோன்றும் எ-று.

அவை அங்ஙனம் ஆதல் கூறிக் காண்க. 'யாப்புற' என்றதனான், இடையினத்திற்கு மிடற்றுவளியும் வல்லினத் திற்குத் தலைவளியும் கொள்க. *(18)*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 100.** மெல்லெழுத்து ஆறும்....யாப்புறத் தோன்றும்.

(இ-ள்.) ஆறு மெல்லெழுத்துக்களும் தம்பிறப்புச் சொல்லப்பட்ட இடங்களில் நிலைபெற்றாலும், மூக்கின் வழியாகச் செல்லும் காற்றின் இசையோடு பொருந்தத் தோன்றும்.

மெல்லெழுத்துக்களை ஒலிக்கும்போது வளியின் ஒருபகுதி வாய்வழியாகவும் ஒருபகுதி மூக்குவழியாகவும் செல்லுகின்றமையின், 'மூக்கின் வளியிசை' என்பதற்கு மூக்கின் வளியிசையோடு எனவும், 'யாப்புற' என்பதற்குப் பொருந்த எனவும் பொருள்கொள்ளின், 'யாப்புற' என்பது மிகையாகாது என்கிறார் இவ்வுரைகாரர்.

**இளம்பூரணம்**

### 101. சார்பெழுத்தின் தோற்றம்

**சார்ந்துவரின் அல்லது தமக்குஇயல்பு இலைஎனத்**
**தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்**
**தத்தம் சார்பின் பிறப்பொடு சிவணி**
**ஒத்த காட்சியின் தம்இயல்பு இயலும்.**

*(இச்....எனின்)* சார்பின் தோற்றத்து எழுத்திற்குப் பிறவி உணர்....ற்று.

*(இ-ள்.)* சிலவற்றைச் சார்ந்து வருதல்அல்லது தமக்குத் தாமே வரும் இயல்பு இல என்று ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்ட ஒழிந்த மூன்றும், தத்தமக்குச் சார்பாகிய எழுத்துக்களது பிறப்பிடத்தே பொருந்தி, பொருந்தின அவ்விடத்தே தமக்குரிய இயல்பில் நடக்கும் எ-று.

'தம் இயல்பு இயலும்' என்றதனான், அளபெடையும் உயிர்மெய்யும் தமக்கு அடியாகிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வரும் என்று கொள்க. *(19)*

**நச்சினார்க்கினியம்**

### 101. சார்பெழுத்தின் தோற்றம்

**சார்ந்துவரின் அல்லது . . . . தம்இயல்பு இயலும்.**

***இ-ள் :*** சார்ந்து வரின் அல்லது - சில எழுத்துக்களைச் சார்ந்து தோன்றின் அல்லது; தமக்கு இயல்புஇல என - தமக்கெனத் தோன்றுதற்கு ஓர் இயல்பு இல என்று; தேர்ந்து வெளிப்படுத்த தம் இயல்பு மூன்றும் - ஆராய்ந்து வெளிப்படுக்கப்பட்ட எழுத்துக்கள்தம்முடைய பிறப்பு இயல்பு மூன்றனையும்(அ) கூறுங்கால்; தத்தம் . . . . சிவணி இயலும் - தத்தமக்கு உரிய சார்பாகிய மெய்களது சிறப்புப் பிறப்பிடத்தே பிறத்தலொடு பொருந்தி நடக்கும்; ஏனை -

ஒழிந்த ஆய்தம்; ஒத்த காட்சியின் இயலும் - தனக்குப் பொருந்தின நெஞ்சுவளியால் பிறக்கும் எ-று.

காட்சி என்றது நெஞ்சினை. கேண்மியா - நாகு, நுந்தை - எனவும், எஃகு எனவும் வரும்.

ஆய்தத்திற்குச் சார்பிடம் 'குறியதன் முன்னர் ' (38) என்பதனான் கூறினார். இனி, ஆய்தம் தலைவளியானும் மிடற்றுவளியானும் பிறக்கும் என்பாரும் உளர். *மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல்* என்பதனான், அளபெடையும் உயிர்மெய்யும் தம்மை ஆக்கிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வரும் என்றுணர்க. (19)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ.101. சார்ந்துவரின் அல்லது....தம்இயல்பு இயலும்.**

சார்பெழுத்துக்களுக்கு அவற்றின் சார்பாகிய எழுத்துக்களின் பிறப்பிடமே இடம் எனக்கொள்ளாது, அவ்விடங்களுக்கு அருகில் இவற்றை ஒலிக்கத்தகுந்த இடமே இவற்றிற்கு இடமாகும் என்பதையே இச்சூத்திரம் கூறுவதாக இவர் குறிப்பிடுகிறார்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.101. சார்ந்துவரின் அல்லது...தம்இயல்பு இயலும்.**

அஃதாவது சார்பெழுத்து மூன்றும் அவை சாரும் எழுத்துக்களின் பிறப்பிடத்தோடு ஒத்துத் தோன்றும் என்பதாம்.

குற்றியலிகரம் குற்றியலுகரங்கள் எவ்வெவ் வல்லெழுத்துக்களைச் சார்ந்து வருமோ, அவ்வவ் வல்லெழுத்துக்களின் பிறப்பிடமே தமக்கும் பிறப்பிடமாகக் கொள்ளும். ஆய்தம் தனக்கு முன் நிற்கும் வல்லெழுத்தோடு

ஒத்து அது பிறக்கும் இடத்தில் பிறக்கும்; முதலிலுள்ள குற்றெழுத்தும் ஆய்தத்திற்குச் சார்பாயினும் முன்நிற்கும் வல்லெழுத்தின் பிறப்பிடமே தனக்குப் பிறப்பிடமாக வரும் என்பது, ''ஆய்தத்திற்குக் குற்றெழுத்துச் சார்பே எனினும், தலைவளியால் பிறத்தலின் உயிரொடு புணர்ந்த வல்லெழுத்துச் சார்பாகவே பிறக்கும் என்பது கொள்க'' என்று உரையாசிரியர் எழுதியிருப்பதனாலும் அறியலாகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துப்படி, எஃகு என்பது எக்கு என்பது போலவும், கஃசு என்பது கச்சு என்பது போலவும் ஒலிக்கும். இம்முறையானே, பஃது என்பது பத்து என்று வழங்குவதாயிற்று. வடமொழியில் 'துঃகம்' என்னும் சொல் தமிழில் துக்கம் என்று அமைந்ததும் இம்முறையானே ஆயதாகும்.

வடமொழியில் விஸர்க்கம் ககர பகரங்களொடு சேருமிடத்து அவற்றின் ஒலியைப் பெறும். ஆயினும் வேறுபாடு சிறிதளவு உண்டு. அவ்வாறே தமிழிலும் எஃகு என்பதற்கும் எக்கு என்பதற்கும் வேறுபாடு சிறிது உளதாகும். அதனைக் கணியாததனான் பஃது என்பது பத்து என்றாயிற்று. அஃகடிய அஃசிறிய - அஃபெரிய - என்பவை அக்கடிய - அச்சிறிய - அப்பெரிய - என்று எழுதப்பட்டன; அதனால், ஆய்தத்தொடு கூடிய வடிவம் காண்டல் இல்லை.

'காட்சி' என்றது நெஞ்சினை என்று பொருள் உரைத்த நச்சினார்க்கினியரது கொள்கையைப் பின்பற்றி இலக்கணவிளக்க நூலார் கூறியதும் பொருந்தாமை உணரப்படும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 101.** **சார்ந்துவரின் அல்லது தமக்குஇயல்பு இலஎனத்**

..................

**ஒத்த காட்சியின் தம்இயல்பு இயலும்.**

அவை பிறந்து வருமாறு:

'மியா' என்பதன்கண் நிற்கும் குற்றியலிகரம், மகரத்தின் பிறப்பிடம் ஆகிய இதழையும் யகரத்தின் பிறப்பிடமாகிய அடிநா அண்ணத்தையும் சார்ந்து தனது இயல்பு தோன்றப் பிறக்கும்.

'நாகரிது' என்னும் சொற்களுள் நிற்கும் குற்றியலுகரம், தனது பற்றுக்கோடாகிய ககரமெய் பிறக்கும் இடத்தையும் சார்பாகிய ஆகாரத்தின் பிறப்பிடத்தையும் சார்ந்து தனது இயல்பு தோன்றப் பிறக்கும்.

'அஃது' என்னும் சொற்கண் நிற்கும் ஆய்தம், அகரத்திற்கும் தகரமெய்க்கும் உரிய அண்ணம் - பல் - நா - ஆகிய உறுப்புக்களின் தொழிலான் அவற்றைச் சார்ந்து தனது இயல்பு தோன்றப் பிறக்கும்.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

***சூ.101.*** சார்பெழுத்து மூன்றனுள் குற்றியலிகரம் குற்றியலுகரம் என்னும் இரண்டனையும் முன்னர்ப் பிரித்தபின்அல்லது 'ஏனை' என்ற சொல்லால் மூன்றாவ தாகிய ஆய்தத்தைப் பிரித்துரைத்தல் கூடாதாகலான் இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறிய உரை ஆசிரியர் கருத்திற்கு முரணாதல் துணியப்படும். இளம்பூரண அடிகள் கூறிய உரையினைக் கொண்டே ஆசிரியர் பவணந்தியாரும் சூத்திரம் செய்தார்.

**இளம்பூரணம்**

***102. எழுத்துப் பிறப்பிற்கு ஆம் புறனடை***

**எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து**
**சொல்லிய பள்ளி எழுதரு வளியின்**
**பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்து**
**அகத்துஎழு வளிஇசை அரில்தப நாடி**
**அளபின் கோடல் அந்தணர் மறைத்தே.**

(இச்......எனின்) எல்லா எழுத்திற்கும் ஆவதொரு புறனடை உணர்....ற்று.

(இ-ள்.) எல்லா எழுத்தும் வெளிப்பட விதந்து சொல்லப்பட்ட இடத்தின்கண்ணே எழுகின்ற வளியாலே தாம் பிறக்கும் தொழிலுடைய ஆதலொடு தம்மைச் சொல்லுமிடத்து, திரிதரும் கூற்றையுடைய உள்நின்று எழும் வளியான் ஆய இசையைப் பிணக்கம்அற ஆராய்ந்து மாத்திரை வரையறையான் கோடல் பார்ப்பார் வேதத்துக்கண்ணது எ-று.

'உறழ்ச்சி வாரம்' என்றது, உந்தி முதலாக எழும் வளி தலைகாறும் சென்று, மீண்டு நெஞ்சின்கண் நிலைபெறுதலை எனக் கொள்க.

வளி என்னாது 'வளியிசை' என்றது, அவ்வாறு நெஞ்சின்கண்ணே நிலைபெறும் அளவே வளி எனப்படும்; பின்னர் நெஞ்சில்நின்றும் எழுவுழி எல்லாம் வளித் தன்மை திரிந்து எழுத்தாம் தன்மையதாம் என்பது விளக்கி நின்றது. (20)

### நச்சினார்க்கினியம்

### 102. *எழுத்துப் பிறப்பிற்கு ஆம் புறனடை*

**எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து**
. . . . . . . . . . . . . . . .
**அளபின் கோடல் அந்தணர் மறைத்தே**
**அஃதுஇவண் நுவலாது எழுந்துபுறத்து இசைக்கும்**
**மெய்தெரி வளிஇசை அளபுநுவன் றிசினே.**

இஃது எழுத்துக்கள்தம் பிறப்பிற்குப் புறனடை கூறுகின்றது.

இ-ள் : எல்லா எழுத்தும் கிளந்து வெளிப்பட- ஆசிரியன் எல்லா எழுத்துக்களும் பிறக்குமாறு முந்துநூற்கண்ணே கூறி வெளிப்படுக்கையினாலே; சொல்லிய பள்ளி பிறப்பொடு விடுவழி - யானும் அவ்வாறே

கூறிய எண்வகை நிலத்தும் பிறக்கின்ற பிறப்போடே அவவெழுத்துக்களைக் கூறுமிடத்து; எழுதரு வளி உறழ்ச்சிவாரத்தின் அளபுகோடல் - யான் கூறியவாறு அன்றி உந்தியில் தோன்றும் காற்றினது திரிதருங் கூற்றின்கண்ணே மாத்திரை கூறிக்கோடலும்; அகத்து எழு வளிஇசை அரில்தப நாடிக்கோடல் - மூலாதாரத்தில் எழுகின்ற காற்றின் ஓசையைக் குற்றமற நாடிக்கோடலும்; அந்தணர் மறைத்தே - பார்ப்பாரது வேதத்து உளதே அந்நிலைமை, ஆண்டு உணர்க; அஃது இவண் நுவலாது - அங்ஙனம் கோடலை ஈண்டுக் கூறலாகாமையின், இந்நூற்கண் கூறாதே; எழுந்து புறத்து இசைக்கும் - உந்தியில் தோன்றி புறத்தே(1) புலப்பட்டு ஒலிக்கும்; மெய்தெரி . . . . நுவன்றிசின் - பொருள் தெரியும் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன்; அவற்றினது மாத்திரை உணர்க எ-று.

இதனை இரண்டு சூத்திரம் ஆக்கியும் உரைப்ப.

இது ***பிறன்கோள் கூறல்*** என்னும் உத்திக்கு இனம்; என்னை ? உந்தியின் எழுந்த காற்றினைக் கூறுபடுத்தி மாத்திரை கூறிக்கோடலும், மூலாதாரம் முதலாகக் காற்று எழுமாறு கூறலும் வேதத்து உள என்று இவ்வாசிரியர் கூறி, அம்மதம் பற்றி இவர் கொள்வதொரு பயன் இன்று என்றலின். உந்தியின் எழுந்த காற்று முன்னர்த் தலைக்கண் சென்று பின்னர் மிடற்றிலே வந்து பின்னர் நெஞ்சிலே நிற்றலை 'உறழ்ச்சி வாரத்து' என்றார். 'அகத்து எழுவளி' எனவே மூலாதாரம் என்பது பெற்றாம்.

இன்சாரியையை அத்துச்சாரியையொடு கூட்டுக. ஏகாரம் தேற்றம்.

'மெய்தெரி வளி' எனவே, (2) பொருள் தெரியா முற்கும் வீளையும் முயற்சியான் ஆம் எனினும், பொருள் தெரியாமையின் அவை கடியப்பட்டன. எனவே, சொல்லப் பிறந்து சொற்கு உறுப்பாம் ஓசையை இவர் எழுத்து என்று வேண்டுவர் என உணர்க,

'நிலையும் வளியும் முயற்சியும் மூன்றும்
இயல நடப்பது எழுத்தெனப் படுமே'

என்றார் ஆகலின். (20)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 102***

1. புலப்படல் - செவிக்குப் புலப்படுதல். 2. பொருள் தெரியா - எழுத்து ஆகிய பொருள் தெரியாத. (முற்கும் வீளையும் பொருட்குறிப்புடையன ஆதலின், இவ்வாறு பொருள் கொள்ளுதல் நச்சினார்க்கினியர் கருத்தாம்).

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ. 102.*** **எல்லா எழுத்தும்....அந்தணர் மறைத்தே.**

(இ-ள்.) எல்லா எழுத்துக்களையும் புறத்தார்க்கு வெளிப்படுமாறு கிளந்து சொல்லப்பட்ட இடங்களில் தோன்றுகின்ற வளியினால் பிறக்கும் பிறப்போடு கூறும்வழி, அவற்றோடு மாறுபாடுகின்ற தன்மையையுடைய அகத்தின்கண் (உந்தி - மார்பு-கழுத்து-என்னும் இடங்களில்) தோன்றுகின்ற வளியான் உண்டாகும் இசையைக் குற்றமற ஆராய்ந்து அதன் தன்மையை அறிவித்தல் வேதத்தின்கண்ணது ஆகும்.

வாரம், அளவு - என்பன தன்மை என்ற பொருளைத் தரும். அகத்தின்கண் உண்டாம் எழுத்துக்களின் நிலை பரை-பைசந்தி - மத்திமை - என மூவகைப்படும் எனவும், பரைநிலையில் எழுத்துக்கள் எல்லாம் ஒரே தன்மையாய் இருக்கும் எனவும், அது மூலாதாரத்தில் நிகழும் எனவும், பைசந்தி உந்தியில் தோன்றும் எனவும், மத்திமை நெஞ்சில் தோன்றும் எனவும் வடமொழி இலக்கணங்களில் கூறப்பட்டது.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 102.** **எல்லா எழுத்தும்....அளபுநுவன் றிசினே.**

இனி, 'துரீயம் வாசம் மனுஷ்யா வதந்தி' என்று வேதம் கூறுவதனால், நாம் பேசும் சப்தத்தின் உருவம் நான்காவது ஆகும் என்பது அறியப்படும். அதற்குமுன் மூன்று உருவம் உண்டு. இந்நான்கும் பரா - பச்யந்தி - மத்யமா-வைகரீ - என்னும் பெயரின. நாம் பேசும் சப்தம் (எழுந்து புறத்து இசைப்பது) வைகரீ எனப்படும்.

நச்சினார்க்கினியர் கொண்டவாறு ஒருசூத்திரமாக (இதனை)க் கோடலே அமைவுடைத்தாய் உளது...சூத்திரம் கிடக்கை முறையிலே செம்பொருள்படுதலின், இளம்பூரணர் கூறியவாறு பொருள் கூறுதலே தக்கது.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 102.** **எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து**

......................

**மெய்தெரி வளிஇசை அளபுநுவன் றிசினே.**

(இ-ள்.) சொல்லிய பள்ளி வளியின் எழுதரும் எல்லா எழுத்தும் - மூவகையாய இடங்களின் இடமாக நின்று ஓசைக்காற்றினான் எழும் எனப்பெற்ற எல்லா எழுத்துக் களையும்; வெளிப்படக் கிளந்து பிறப்பொடு விடுவழி- ஐவகை உறுப்புக்களின் இடமாகக் கிளந்து அவ்வவற்றின் பிறப்பியல்புகளொடு செவிப்புலனாக வெளிப்படுத்து மிடத்து; அகத்துஎழு வளியிசை உறழ்ச்சி வாரத்து - உந்தியின் இடமாக அகத்தெழும் வளியிசை ஒன்றற்கு ஒன்று முரண்பட்டு வருதலை; அரில்தப நாடி - குற்றமற ஆராய்ந்து; அளபின் கோடல் அந்தணர் மறைத்தே - மாத்திரையான் அளவிட்டு மேற்கோடல் நிறைமொழிமாந்தராகிய அந்தணரது மந்திரநூலின்கண்ணதாகும்; அஃது இவண் நுவலாது-அம்மாத்திரைஅளவினை (இயற்றமிழ் எழுத்துக் களுக்கு இலக்கணம் கூறும்) இந்நூலகத்துக் கூறாமல்; எழுந்து புறத்து இசைக்கும் மெய்தெரி வளியிசை அளபு நுவன்றிசின்-

புறத்தே செவிப்புலனாக எழுந்து தன் உருவம் தோன்ற இசைக்கும் எழுத்தோசையின் அளவைகளையே யான் கூறியுள்ளேன்.

அகத்து எழுவளியிசை - நாத தத்துவமாக எழுந்து மூலாதாரம் முதல் ஆஞ்ஞை ஈறாக அகத்தே திரிதரும் ஓசைக்காற்று.

இதனான், மந்திர எழுத்துக்களும் அவற்றின் ஓசை அமைதிகளும் அவற்றின் அளவுகளும் மாத்திரையும் உண்டு என்பதை ஆசிரியர் ஓராற்றான் உணர்த்தினார், பல் புகழ் நிறுத்த படிமையோர் ஆதலின்.

**இளம்பூரணம்**

### 103. மாத்திரை கூறத் தகும் வளியிசை

**அஃதுஇவண் நுவலாது எழுந்துபுறத்து இசைக்கும்**
**மெய்தெரி வளிஇசை அளபுநுவன் றிசினே.**

(இச்....எனின்) மேற் சூத்திரத்துக்கு ஒரு புறனடை உணர்....ற்று.

(இ-ள்.) 'அகத்து எழு வளியிசை அளபின் கோடல்' ஆகிய அதனை இந்நூலிடத்துச் சொல்லாது, அகத்துநின்றும் எழுந்து புறத்துப் போந்து இசைக்கும் பொருண்மை தெரிகின்ற வளியான் ஆய இசையது மாத்திரையினை யான் ஈண்டுக் கூறினேன் எ-று.

மற்று, இஃது 'அளபின் கோடல் அந்தணர் மறைத்து' என்றது பிறன்கோள் கூறுதற்கும்[1], பிறன்கோள் கூறி நேர்ந்து உடன்படுதற்கும் ஒப்பக் கிடந்தமையின், அவ்வையம் தீர்தற்குக்[2] கூறினான் என்பது.

புறத்து இசைப்பதன் முன்னர் அகத்து இசைக்கும் வளியிசையை அம்மறைக்கண் ஓர் எழுத்திற்கு மூன்றுநிலை[3] உளவாகக் கூறுமஃது ஆமாறு அறிந்துகொள்க.

'மெய்நெறி' என்றதனான், முற்கு முதலியன முயற்சியான் பிறக்குமேனும் பொருள்தெரியாநிலைமைய ஆதலின், அவற்றிற்கு அளபு கூறாராயினார் என்பது பெறப்பட்டது.

நுவன்று [4] என்பது ஈண்டு இறந்தகாலத் தன்மை வினை. *(21)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 103.*** 1. பிறன்கோட் கூறுதலாவது, தன் நூலே பற்றாகப் பிறநூற்கு வருவதோர் இலக்கணம் கொள்ளுமாறு கூறுதல். (பொ. 665 பேரா.)

'அளபிற் கோடல் அந்தணர் மறைத்து' என்பது பிறன்கோட் கூறுதற்கு இனம் எனப்படும்; என்னை? அவர்மதம் பற்றி இவர் கொள்வதொரு பயனின்று ஆதலின் என்பது. (ஷை)

2. ஐயம் தீர்தல், பிறன்கோட் கூறும் அவ்வளவே; ஆசிரியன் அதனைத் தான் நேர்ந்து உடன்பட்டிலன் என்று கருதிக்கோடல்.

3. பரை, பைசந்தி, மத்திமை - என்பன.

4. நுவன்றிசின் என்புழி 'இசின்' ஈண்டுத் தன்மைக்கண் வந்த அசைநிலை. நுவன்று: நுவல்+று. றுகர விகுதியே இறந்தகாலம் காட்டிற்று. தன்மையொருமைக்கு றுகர விகுதியும் தன்மைப்பன்மைக்கு றும் விகுதியும் வரும். உ-ம்: சென்று, சென்றும்.

இவ்விகுதிகளே எதிர்காலத்தையும் காட்டுவன. ஆயின் சொல்முடிபு வேறுபடும். உ-ம்: சேறு, சேறும்.

இவ்வமைதிகள் பிற்காலத்து இலக்கணம். (நன்னூலிற் கண்டவை.)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 103.*** **அஃதிவண் நுவலாது [illegible] நுவன்றிசினே.**

(இ-ள்.) அதனை ஈண்டு [illegible] வெளி[illegible] ஒலிக்கப்படும் தன் தன்மை தெரிவி[illegible] தன்மையைக் கூறினேன்.

## ஒத்த நூற்பாக்கள்

## III பிறப்பியல்

### நூற்பா - 1

வீ. சோ. 6 உந்தி முதல் எழும் காற்றுப் பிறந்து,
உரமும் சிரமும்
பந்தமலி கண்டமும் மூக்கும் உற்று,
அண்ணம் பல்லுடனே
முந்தும் இதழ் நா மொழி உறுப்பாகும்
முயற்சியினால்
வந்து நிகழும் எழுத்தென்று
சொல்லுவர் வாணுதலே.

நேமி. 6 உந்தியின் தோன்றும் உதான வளிப்
பிறந்து,
கந்தமலி நெஞ்சுதலை கண்டத்து -
வந்தபின்,
ஆசில்நா அண்ணம் இதழ்எயிறு
மூக்கெனப்
பேசும் எழுத்தின் பிறப்பு.

நன். 74 நிறை உயிர் முயற்சியின் உள்வளி
துரப்ப
எழும் அணுத்திரள், உரம் கண்டம்
உச்சி
மூக்கு உற்று, இதழ் நாப் பல் அணத்
தொழிலின்
வெவ்வேறு எழுத்தொலியாய் வரல்
பிறப்பே.

இ. வி. 9 உயிர்உழப்பு உதானனின் நாதம் உச்சி
மிடறுஉரம் மூக்கு உற்று இதழ்நாப்
பல்அணத்து
அடைந்து பின்னர் அவற்றது
வினையான்

வேறுவேறு எழுத்தொலியாய் வரல்
பிறப்பே.

தொ. வி. 3 உயிர் இடையினம் மிடறு, உரம் வலி,
உச்சி மெலி.

அவி. 8 இவை முதல் இடமாய், இதழ்மூக்கு
அணம் பல்நா
ஆற்றலுடை உயிர் முயற்சியின் அணு
இயைந்து
ஏற்றன ஒலியாய்த் தோற்றுதல்
பிறப்பே
ஐந்துணை இடத்துஆம் அக்கரப்
பிறப்பே.

சுவாமி. 4 அணுவினான் மூலவிந்தில் எழுநாதம்
. . . . . . . . . .
. . . . . . . உதானத்தொடு நெஞ்சணுகி
வெளிவாக்கால்
பணியும் மிடறுஉச்சி மூக்கு ஒலித்து
நா அண்ணம்
பல்இதழின் வினையால் வெவ்வேறு
எழுத்தாம்.
(முதலடியில் சீர் பிழைபட்டுள்ளது)

பேர. 41 ஆதன் அநாதியும் உதானன் ஆதியுமா
நாதம் உரம் கண்டம் தலையிடம்
உற்றுப்
பல்இதழ் நாமூக்கு அணம்
ஐந்தொழிலால்
எல்லா எழுத்தும் பிறக்கும் என்ப.

**நூற்பா - 2**

நன். 75 அவ்வழி,
ஆவி (இடைமை) இடம் மிடறு
ஆகும்.

| | | |
|---|---|---|
| இ. வி. | 10 | அவ்வழி ஆவி (இடை) மிடறு. |
| தொ. வி. | 3 | உயிர் (இடையினம்) மிடறு. |
| மு. வீ. | 43 | உயிர் (இடையினம்) மிடறு . . . . . . இடமாம். |
| சுவாமி. | 4 | அவற்றுள், நணுகும் மிடற்று உயிர் (இடை). |
| பேர. | 62 | ஆவி . . . . . . . இடம் மிடறு ஆகும். |

## நூற்பா - 3

| | | |
|---|---|---|
| நன். | 76 | அவற்றுள்,<br>முயற்சியுள் அஆ அங்காப்பு உடைய. |
| இ. வி. | 11 | அவற்றுள்,<br>முயற்சியுள் அஆ அங்காந்து . . . .<br>இயலும். |
| மு. வீ. | 44 | அவற்றுள்,<br>அஆ அங்காப்பொடு வரும் என்ப. |
| சுவாமி. | 4 | அவற்றுள் அஆ அங்காப்பாம். |
| பேர. | 63 | அவற்றுள், அஆ ஆயிரண்டு<br>அங்காந்து இயலும். |

## நூற்பா - 4

| | | |
|---|---|---|
| நன். | 77 | இஈ எஏ ஐ - அங்காப்பொடு<br>அண்பல் முதல்நா விளிம்புற வருமே. |
| இ. வி. | 11 | இஈ எஏ ஐகான் அதனோடு<br>அண்பல் முதல் நா விளம்புற . . . . . . .<br>இயலும். |
| மு. வீ. | 45 | இஈ எஏ ஐ அங்காப்பொடு<br>மேல்வாய்ப் பல்அடி நாவிளிம்<br>புறவரும். |

| | | |
|---|---|---|
| சுவாமி. | 4 | இ ஈ எ ஏ ஐ அண்பல்அடி நாப்பால் தொடும். |
| பேர. | 64 | இ ஈ எ ஏ ஐ-அங்காப்புடன் அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய. |

## நூற்பா - 5

| | | |
|---|---|---|
| நன். | 78 | உ ஊ ஒ ஓ ஔ - இதழ் குவிவே. |
| இ. வி. | 11 | உ ஊ, ஒ ஓ ஔகான் இதழ்குவிந்து இயலும். |
| மு. வீ. | 46 | உ ஊ . . . . . . . குவிவே. |
| சுவாமி. | 4 | உ ஊ ஒ ஓ ஔ - இதழ் குவிவாம். |
| பேர. | 65 | உ ஊ ஒஓஔ இதழ்குவிந்து இயலும். |

## நூற்பா - 6

| | | |
|---|---|---|
| வீ. சோ. | 4 | . . . . . . . . எடுத்தல் படுத்தல் நலிதல் ஓயாது உரப்பல் எனநால் வகையில் பிறக்கும் மெய்கள். |
| நன். | 88 | எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பின் திரிபும் தத்தமில் சிறிதுள ஆகும். |
| இ. வி. | 14 | தத்தம் திரிபே சிறிய என்ப. |
| மு. வீ. | 59 | எடுத்தல் படுத்தல் இரண்டே ஓசை. |
| பேர. | 79 | தத்தமில் திரிபே சிற்சில உளவாம். |

## நூற்பா - 7, 8, 9

| | | |
|---|---|---|
| நன். | 79 | கஙவும் சஞவும் டணவும் முதல்இடை நுனிநா அண்ணம் உற, முறை வருமே. |
| இ. வி. | 12 | முதல்இடை நுனிநா அண்ணமுற முறையின் கஙவும் சஞவும் டணவும் . . . . . . . . தோன்றும். |

| | | |
|---|---|---|
| மு. வீ. | 47 | அடிநா அடிஅணம் அழுத்தக் கங - வரும். |
| | 48 | இடைநா இடைஅணம் இறுக்கச் சஞ எழும். |
| | 49 | நுனிநா நுனிஅணம் நோக்க டண - வரும். |
| சுவாமி. | 5 | அண்ணம் முதல் இடை நுனி நாஉற உடல்முன் ஆறாம். |
| பேர. | 66 | ககார ஙகாரம் முதல்நா முதல்அணம். |
| | 67 | சகார ஞகாரம் இடைநா இடைஅணம். |
| | 68 | டகார ணகாரம் நுனிநா நுனிஅணம். |

## நூற்பா - 11

| | | |
|---|---|---|
| நன். | 80 | அண்பல் அடிநா முடிஉறத் த ந வரும். |
| இ. வி. | 12 | அண்பல் அடிநா முடிஉறத் தநவும் . . . . . . தோன்றும். |
| மு. வீ. | 50 | அண்பல் . . . . . . . . . வரும். |
| சுவாமி. | 5 | அண்பல் அடிநா முடி ஒத்திடத் த ந ஆம். |
| பேர. | 69 | அண்பல் அடிநா முடிஉறத் த ந ஆம். |

## நூற்பா - 12

| | | |
|---|---|---|
| நன். | 86 | அண்ணம் நுனிநா நனிஉறின் றன-வரும். |
| இ. வி. | 12 | அண்ணம், நுனிநா ஒற்ற றன-வும் தோன்றும். |
| மு. வீ. | 57 | அண்ணம் நுனிநா அழுத்த ற ன-வரும். |
| சுவாமி. | 5 | நுனிநா அண்ணத்தின்மேல் ஒற்ற றன-ஆம். |
| பேர. | 76 | அணரி நுனிநா அணைய றன-வரும். |

## நூற்பா - 13

| | | |
|---|---|---|
| நன். | 83 | அண்ணம் நுனிநா வருட ரழ-வரும். |
| இ. வி. | 12 | அண்ணம் நுனிநா வருட ரழ-வும் . . . . . . . தோன்றும். |
| மு. வீ. | 53 | அண்ணம் . . . . . . வரும். |
| சுவாமி. | 5 | நுனிநா அண்ணத்தின் நண்ணி மேல் வருட ரழ ஆம். |
| பேர. | 72 | அண்ணம் முடிநா வருட ரழ வருவன. |

## நூற்பா - 14

| | | |
|---|---|---|
| நன். | 84 | அண்பல முதலும் அண்ணமும் முறையின்<br>நாவிளிம்பு வீங்கி ஒற்றவும் வருடவும்<br>லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும். |
| இ. வி. | 12 | அண்பல், முதலும் அண்ணமும் முறையின் நாவிளம்பு<br>வீங்கி ஒற்றவும் வருடவும் லளவும் . . . . . . தோன்றும். |
| மு. வீ. | 54 | லகரம் அண்பல்லடி நாவிளிம்புற வரும். |
| | 55 | ளகரம் மேல்வாயை நாநுனி தடவப்<br>பிறக்கும் என்மனார் பெரிதுணர்ந் தோரே. |
| சுவாமி. | 5 | அண்பல் அண்ணம் நாவிளிம்பு ஒத்தித் தைவர லள-ஆம். |
| பேர. | 73 | அண்பல் அடியை நாவிளிம்பு ஒற்ற ல-வ் வரும். |
| | 74 | அண்பல் முதலைநாத் தடவ ள-வ் வரும். |
| நன். | 81 | மீகீழ் இதழ்உறப் ப(ம்)ம-ப் பிறக்கும். |

| | | |
|---|---|---|
| இ. வி. | 12 | மீகீழ் இதழ்உறப் பகார மகாரம் . . . . ... தோன்றும். |
| மு. வீ. | 51 | இரண்டிதழ் உறப் பம எழும்என மொழிப. |
| சுவாமி. | 5 | இதழ்கள் கண்ணி விடப் பம ஆம். |
| பேர. | 70 | இரண்டிதழ் பொருந்தப் பகர மகரம் வரும். |

### நூற்பா - 16

| | | |
|---|---|---|
| நன். | 85 | மேற்பல் இதழ்உற மேவிடும் வவ்வே. |
| இ. வி. | 12 | மேற்பல் இதழுற வகாரமும் . . . . . . தோன்றும். |
| மு. வீ. | 58 | மேற்பல் . . . . . . . . வவ்வே. |
| சுவாமி. | 5 | கீழ் இதழின், விண் நகை குற்றிட வ-வ்வாம். |
| பேர. | 75 | மேற்பல்லை இதழ்உற மேவும் வகரமே. |

### நூற்பா - 17

| | | |
|---|---|---|
| நன். | 82 | அடிநா அடிஅணம் உற ய-த் தோன்றும். |
| இ. வி. | 12 | அண்ணம் சேர்ந்த மிடற்றுஎழு வளிஇசை கண்ணுற்று அடைய யகாரமும் . . . . . . . . தோன்றும். |
| மு. வீ. | 52 | அடிநா அடிஅணம் உற வரும் யகாரம். |
| சுவாமி. | 5 | அண்ணக்குழியின் மிடற்றுக்கால் அடிநாப் பற்ற ய-வ்வாம். |
| பேர. | 71 | முதல்நா முதல்அணம் முயற்சியின் ய-வ் வரும். |

## நூற்பா - 18

| | | |
|---|---|---|
| நன். | 75 | மேவும் மென்மை மூக்கு. |
| இ. வி. | 10 | மென்மை மூக்கு இசையின் தோன்றும். |
| தொ. வி. | 3 | உச்சி மெலி இயை முதலிடமாய் |
| மு. வீ | 43 | உச்சி மெலி இடமாம். |
| சுவாமி. | 4 | மென்மை நாசியில் உண்டாம். |
| பேர. | 62 | மேவும் . . . . . . . மெல்லினம் மூக்கே. |

## நூற்பா - 19

| | | |
|---|---|---|
| நன். | 87 | ஆய்தக்கு இடம்தலை; அங்கா முயற்சி; சார்பெழுத்து ஏனவும் தம்முதல் அனைய. |
| இ. வி. | 13 | ஆய்தம் நெஞ்சுஓசையின் அங்காந்து இயலும் சார்பெழுத்து ஏனவும் தம்முதல் அனைய. |
| மூ. வீ. | 58 | உந்தி தனிநிலை உற்று அங்காந்து இயலும். |
| பேர. | 78 | தலைமை அக்கரம்போல் சார்பெழுத்து உற்பவம். |



# புணரியல்

## இளம்பூரணம்

### 104. விரிந்தது தொகுத்தல்

**மூன்றுதலை யிட்ட முப்பதிற்று எழுத்தின்**
**இரண்டுதலை யிட்ட முதல்ஆகு இருபஃது**
**அறுநான்கு ஈறொடு நெறிநின்று இயலும்**
**எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்**
**மெய்யே உயிர்என்று ஆயீர் இயல**

என்பது சூத்திரம்

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், மொழிகள் செய்கை ஓத்துக்களான் புணர்தற்குரிய கருவியின் இயல்பு கூறியமையின் புணரியல் எனப்பட்டது. மேல் மொழிமரபில் கூறிய மொழிகள் புணருமாறு உணர்த்தினமையின் மொழி மரபினோடு இயைபு உடைத்தாயிற்று.

இதனுள் இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், மொழிமரபினுள் முதலும் ஈறும் கூறியவழி உயிரும் மெய்யும் உயிர்மெய்யும் என மூன்றாய் விரிந்துநின்றதனை உயிரும் மெய்யும் என இரண்டாகத் தொகுத்தலானும், அவ்வழி இருபத்திரண்டு எழுத்து மொழிக்கு முதல்-இருபத்துநான்கு எழுத்து மொழிக்கு ஈறு-எனக் கூறலின், முப்பத்து மூன்று எனப்பட்ட எழுத்து நாற்பத்தாறு ஆவன போல விரிந்ததனை, அவையெல்லாம் முப்பத்து மூன்றின் உள்ளனவே எனத் தொகுத்தலானும், விரிந்தது தொகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* மூன்றனை முடியிலே இடப்பட்ட முப்பதாகிய எழுத்தினுள், இரண்டனை முடியிலே இடப்பட்ட மொழிக்கு முதலாய இருபதும், இருபத்து நான்கு

ஈற்றொடு[1] வழக்குநெறிக்கண் நின்று நடக்கும் மூவகை மொழிக்கும் ஈறும் முதலும் ஆவன மெய்யும் உயிரும் ஆகிய அவ்விரண்டு இயல்பினையுடைய எ-று.

(உ-ம்.) மரம் இலை ஆல் விள - என மெய்யும் உயிரும் முதலும் ஈறும் ஆயின.

இருபத்திரண்டு முதலாவன பன்னிரண்டு உயிரும், ஒன்பது உயிர்மெய்யும், மொழிமுதற் குற்றியலுகரமும் என இவை. இருபத்து நான்கு ஈறாவன பன்னிரண்டு உயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக் குற்றுகரமும் என இவை.

ஈற்றொடு என்பது விகாரத்தால் தொக்கது. மெய் முற்கூறிய அதனான் நால்வகைப் புணர்ச்சியும் மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழாது என்பது கொள்க. (1)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ.104.** 1. 'இருபத்து நான்கு ஈற்றொடு' என, இச்சூத்திரத் தொடர்க்கு இளம்பூரணர் உரைகூறினார். வாக்கிய முடிபுநோக்கி, அவ்வுரை 'ஈறாய இருபத்து நான்கும் கொண்டு' என்றிருப்பின் சிறக்கும்.

**நச்சினார்க்கினியம்**

**103. இறுதியும் முதலும் மெய்யும் உயிருமே ஆதல்**
**மூன்றுதலை யிட்ட முப்பதிற்று எழுத்தின்**
.........................................
**அறுநான்கு ஈற்றொடு நெறிநின்று இயலும்**
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
**மெய்யே உயிரென்று ஆயீர் இயல.**

என்பது சூத்திரம்.

மொழிமரபில் கூறிய மொழிகளைப் பொது வகையான் புணர்க்கும் முறைமை உணர்த்தினமையின் புணரியல் என்பது இவ்வோத்திற்குப் பெயராயிற்று. ஈண்டு முறைமை என்றது, மேல் செய்கைஓத்துக்களுள் புணர்தற்கு உரியவாக ஈண்டுக் கூறிய கருவிகளை.

இச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின், மொழிமரபில் கூறிய மொழிக்கு முதலாம் எழுத்தும் மொழிக்கு ஈறாம் எழுத்தும் இத்துணை என்றலும், எல்லா மொழிக்கும் ஈறும் முதலும் மெய்யும் உயிரும் அல்லது இல்லை என்று வரையறுத்தலும், ஈறும் முதலுமாக எழுத்து நாற்பத்தாறு உளவோ என்று ஐயுற்றார்க்கு எழுத்து முப்பத்து மூன்றுமே அங்ஙனம் ஈறும் முதலுமாய் நிற்ப என்று ஐயம் அறுத்தலும் நுதலிற்று.

இ-ள் : முதல் இரண்டு தலையிட்ட இருபஃது, ஈறு அறுநான்கு ஆகும் மூன்று தலையிட்ட முப்பதிற்று எழுத்தினொடு - மொழிக்கு முதலாம் எழுத்து இரண்டை முடியிலே இட்ட இருபஃதும், மொழிக்கு ஈறாம் எழுத்து இருபத்துநான்கும் ஆகின்ற, மூன்றை முடியிலே இட்ட முப்பதாகிய எழுத்துக்களோடே; நெறிநின்று இயலும் எல்லா மொழிக்கும் - வழக்கு நெறிக்கண் நின்று நடக்கும் மூவகை மொழிக்கும்(அ) ; மெய்யே உயிர் என்று ஆயீர் இயல இறுதியும் முதலும் - மெய்யும் உயிரும் என்று கூறப்பட்ட அவ்விரண்டு இயல்பினையுடைய எழுத்துக்களே ஈறும் முதலும் ஆவன எ-று.

இருபத்திரண்டு முதல்ஆவன பன்னீருயிரும், ஒன்பது உயிர்மெய்யும், மொழிமுதல் குற்றியலுகரமும் ஆம். இருபத்துநான்கு ஈறாவன பன்னீருயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக்குற்றியலுகரமும் ஆம். மெய்யை முற்கூறினார், நால்வகைப் புணர்ச்சியும் மெய்க்கண் நிகழுமாறுபோல உயிர்க்கண் நிகழா என்றற்கு.

உ-ம் : மரம் - என மெய்முதலும் மெய்யீறும், இலை - என உயிர் முதலும் உயிரீறும், ஆல் - என உயிர்முதலும் மெய்யீறும், விள - என மெய்முதலும் உயிரீறும் ஆம். மொழியாக்கம் இயல்பும் விகாரமும் என இரண்டாம். உயிர் தாமே நின்று முதலும் ஈறும் ஆதல் இயல்பு. அவை மெய்யொடு கூடிநின்று அங்ஙனம் ஆதல் விகாரம். (1)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 103**

*(அ)* அவை உயர்திணை அஃறிணை விரவுப் பெயர்களாம்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

o

**சூ. 104.** மூன்றுதலை யிட்ட....ஆயீர் இயல.

இச்சூத்திரம், மொழிமுதற்கண்ணும் இறுதிக்கண்ணும் *(60,75,76)* ஆசிரியர் உயிர்மெய்யெழுத்தே கூறினமையின், புணர்ச்சி அவ்வாறு கொள்ளப்பட்டது. நிலைமொழி ஈற்றெழுத்தும் வருமொழி முதலெழுத்தும் உயிராகவேனும் மெய்யாகவேனும் கொள்ளப்படும் என்பதை உணர்த்த வேண்டிற்று.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 103.** மூன்றுதலை யிட்ட முப்பதிற்று எழுத்தின்

.....................

மெய்யே உயிர்என்று ஆயீர் இயல.

இளம்பூரண அடிகள் சூத்திரக் கிடக்கை முறையே பொருள் கூறியுள்ளார் அவர் 'அறுநான்கு ஈறொடு' என்று பாடம்கொண்டு, 'ஈற்றொடு' என்பது விகாரத்தால் தொக்கது என்றார். அதுவே இன்னோசையது.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 103.** மூன்று தலையிட்ட.....ஆயீர் இயல.

ஏகாதசம் துவாதசம் என்னும் மரபு ஆரியத்திற்கே அன்றித் தமிழிற்கும் உரியதே என்பதை உணர்த்த, 'மூன்று தலையிட்ட' 'இரண்டு தலையிட்ட' எனக் கூறினார்.

## இளம்பூரணம்

### 105. ஈறாம் மெய் புள்ளி பெறுதல்

**அவற்றுள்**
**மெய்ஈறு எல்லாம் புள்ளியொடு நிலையல்.**

(இச்....எனின்) மேற்கூறியவாற்றான் தனிமெய்யும் முதலாவான் சென்றதனை விலக்கலின், எய்தியது விலக்கல் ஆயிற்று.

(இ-ள்.) மேல் மெய்யும் உயிரும் என்று கூறிய இரண்டனுள், மெய் மொழிக்கு ஈறாயவை எல்லாம் புள்ளிபெறுதலொடு நிற்க; முதல்ஆயவை எல்லாம் புள்ளி அழிந்து நிற்க எ-று.

(உ-ம்.) மரம் - என வரும்.

'மொழிமுதல் மெய் புள்ளியொடு நில்லாது' என்னாது, 'ஈறெல்லாம் புள்ளியொடு நிலையல்' என ஈற்றின்மேல் வைத்துக் கூறிய அதனான், அவ்வீற்றின் மெய் உயிர்முதல்மொழி வந்தவிடத்து அஃது ஏற இடம்கொடுக்கும் என்பது பெறப்பட்டது.[1] (2)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 105.** 1. ஈற்றின்மேல் வைத்துக் கூறிய அதனான் பெறப்பட்ட கருத்தாக இளம்பூரணர் உரைத்தது, வரும் சூத்திரத்தின் 'அற்று' எனும் மாட்டேற்றுக்கு வாய்ப்பு நிகழ்தல் வேண்டியே என்க. இக்கருத்து உரையாக்கால், நச்சினார்க்கினியர் போல இவ்வியல் 36ஆம் சூத்திரத்தோடு அதனை மாட்டெறியவேண்டி வரும். மாட்டேறு முன்னர் நின்ற சூத்திரத்தைத் தழுவுதலன்றிச் சேய்மைத்தாய்ப் பின்னர் நிற்பதனைத் தழுவாமை வெளிப்படை. நச்சினார்க்கினியரும் உரையாசிரியரை வழிமொழிந் திருப்பின் சிறக்கும்.

**நச்சினார்க்கினியம்**

## 104. ஈறாம் மெய் புள்ளிபெறுதல்

**அவற்றுள்,**
**மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்.**

இது முன் கூறியவாற்றான் தனிமெய் முதலாவான் சென்றதனை விலக்கலின் எய்தியது விலக்கிற்று.

இ-ள் : அவற்றுள் - முற்கூறிய மெய்யும் உயிரும் என்ற இரண்டனுள்; மெய்யீறு . . . . நிலையல் - மெய், மொழிக்கு ஈறாயவை எல்லாம் புள்ளிபெற்று நிற்கும் எ-று.

எனவே, மொழிக்கு முதலாயினவை எல்லாம் புள்ளி இழந்து உயிர்ஏறி நிற்கும் என்றார் ஆயிற்று. இன்னும் ஈற்றுமெய் புள்ளிபெற்று நிற்கும் என்றதனானே, உயிர்முதல்மொழி தம்மேல் வந்தால் அவை உயிர் ஏற இடம்கொடுத்து நிற்கும் என்பதூஉம் கூறினார் ஆயிற்று. (1) இவ்விதி முற்கூறியதன்றோ எனின், ஆண்டுத் தனிமெய் பதினெட்டும் புள்ளிபெற்று நிற்கும் என்றும், அவைதாம் உயிர் ஏறுங்கால் புள்ளி இழந்து நிற்கும் என்றும் கூறினார்; ஈண்டு மெய்முதல் மெய்யீறு - எனப்பொருள் உரைக்க வேண்டினமையின், மொழிமுதல் மெய்களும் புள்ளி பெறுமோ என்று ஐயுற்ற ஐயம் அகற்றக் கூறினார் என்று உணர்க. மரம் - என மெய்யீறு புள்ளிபெற்று நின்றது, 'அரிது' என வந்துழி, மரமரிது என்று ஏறி முடிந்தவாறு காண்க. (2)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 104

1. ஈற்றில் வரும் மெய்கள் புள்ளிபெற்று நிற்கும் எனவே, முதலில் நிற்கும் மெய்கள் உயிரொடு கூடிப் புள்ளிபெறாது நிற்கும் என்பதும், ஈற்றுமெய்கள் புள்ளிபெற்று நிற்கும் என்றமையானே, உயிர் வருங்கால்

தம்மேலேறி முடியவும் இடம்கொடுக்கும், ஏனைய மெய் வருங்கால் திரிந்தும் இயல்பாயும் முடியும் என்பதும் பெறப்படும் என்பது உரைகாரர் கருத்தாம்.

### சிவஞானமுனிவர் உரைக்குறிப்பு

**சூ. 105.** 'நாகரிது' என்புழி முன்னர்க் குற்றுகர ஓசையும் பின்னர் உயிர்ஓசையும் பெற்று அவ்விரண்டும் கூடி நின்றல்லது அப்பொருள் உணர்த்தலாகாமையின், குற்றியலுகரத்து இறுதிமுன்னும் புள்ளியீற்றுமுன் போல உயிர்முதல்மொழி வந்தால் அவ்வுயிர் ஏறி முடியும் என்னாமோ எனின், என்னாம். என்னை? அங்ஙனம் கூறுவார்க்குக் கதவழகிது கனவழகிது என்புழியும் முன்னர் முற்றுகரஓசையும் பின்னர் உயிர்ஓசையும் கூடியல்லது அப்பொருள் உணர்த்தலாகாமையின், அவற்றையும் முற்றுகரத்தின்மேல் உயிர் ஏறி முடிந்தது எனக் கூறல் வேண்டும். அவ்வாறன்றி முற்றுகரம்கெட, நின்ற ஒற்றின்மேல் உயிர்ஏறி முடியும் என்பதே எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஆதலானும், குற்றியலுகரத்திற்கும் உயிர் என்னும் குறியீடு கொண்டமையின் ஒற்றின் மேலன்றி உயிரின்மேல் உயிர் ஏறுதல் பொருந்தாமையானும், 'நாகரிது' என்புழி இதழ் சிறிது குவிதல் ஆகிய முயற்சி ஆண்டுப் பெறப்படாமையின் குற்றியலுகரஓசை ஆண்டு உண்டென்றல் பொருந்தாமையானும், 'ஆறன் மருங்கின்' என்றல் தொடக்கத்துச் சூத்திரங்களொடு முரணுதலானும், யகரம் வருவழி இகரம் குறுகி உகரத்தின்மேல் ஏறி முடியும் என்னாது 'இகரம் குறுகும், உகரக் கிளவி துவரத் தோன்றாது' என்றார் ஆகலானும் என்பது.

(குற்றியலுகர ஈற்று மொழிக்குமுன்...நயத்தால் திரிபு என்க-என்பது ரெட்டியாரது ஆராய்ச்சியுரைப்பகுதி. புணர்மொழியிடையேயும் குற்றுகர முற்றுகர ஓசைகள் நுண்ணிதின் புலப்படாமற் போகவில்லை. நாகரிது - கதவழகிது - உச்சரிப்பில் உகரவொலி நுட்பம் தோன்றவே செய்கிறது.)

[குற்றியலுகர ஈற்று மொழிக்குமுன் உயிர்முதல்மொழி வரின், ஆண்டுக் குற்றியலுகரம் கெடாதே நிற்கும் என்று நச்சினார்க்கினியர் கொள்கையையே இலக்கண விளக்க நூலாரும் பின்பற்றி எழுதினார். இஃது 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்' என்னும் நன்னூலார் கருத்துக்கு மாறானதே. ஆயின், ஆசிரியர் தொல்காப்பியனார் முற்றுகரங்களுக்கு முன்னர் உயிர் முதல்மொழி வரின், அம்முற்றுகரம் கெடுதற்கு விதிகூறியாங்கு, குற்றுகரத்தின் முன்னர் உயிர்முதல் மொழிவரின் ஆண்டும் அவ்வுகரம் கெடும் என்று விதி கூறினார்அல்லர். அதுவேயன்றி, குற்றுகரம் உருவுதிரியாது (சூ. 459 நச்.) உயிர்முதல் மொழியொடு புணரும் என்றும் கூறியுள்ளார். அவ்வா றாயின்,'ஆறன் மருங்கின் குற்றிய லுகரம், ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்' எனக் குற்றுகரம் கெடுதற்கு விதி கூறியுள்ளார் எனின், ஆண்டுக் குறித்தது குற்றியலுகரத்தை அன்று, முற்றுகரத்தையே (அறு). அது ' திரிந்ததன் திரிபு' என்க.] எ. ஆ. பக். 91

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

*சூ. 105.* அவற்றுள்,

**மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்.**

இச்சூத்திரம் நியமவிதி ஆகும், நிலைமொழி ஈற்றின்கண் உள்ள மெய்யே புள்ளிபெறும் என்றலின்.

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

*சூ. 105.* மெய்யீற்றின் தன்மையாவன புள்ளி பெறுதலும் புள்ளிஇழந்து உயிரேற இடம் கொடுத்தலுமாம். அவ்விரண்டனுள் புள்ளிபெறுதலை விலக்கி உயிரேற இடம்கொடுத்தலாகிய ஒன்றைமட்டும் குற்றியலுகரத்திற்கு இயைத்துக் கூறுதலின், ''இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் என உணர்க'' என்றார் இளம்பூரணர்.

குற்றியலுகரத்திற்குப் புள்ளியிட்டு எழுதும் வழக்கம் இளம்பூரணர் காலத்தில் நிலவியிருப்பின், 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்னும் இம்மாட்டேற்றினை முழுவதும் சேறலாகவே கொண்டு பொருள் கூறியிருப்பார். அவர் அங்ஙனம் கூறாமையின் அவர்காலத்தில் குற்றியலுகரத்திற்குப் புள்ளியிட்டு எழுதும் வழக்கம் இல்லை என்பது புலனாகும். அன்றியும், குற்றியலுகரமும் புள்ளி பெறும் என்பதொன்றும் இச்சூத்திரக்கருத்தாயின், 'மெய்யின் அளவே அரையென மொழிப' என்பதனை அடுத்து 'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே' என மாட்டெறிந்தாற்போல, 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' எனவும் 'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' எனவும் வரும் சூத்திரங்களை அடுத்துக் 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என இச்சூத்திரத்தையும் கூறியிருப்பர். ஆசிரியர் அங்ஙனம் கூறாது புணரியலாகிய இவ்வியலில் கூறுதலால் குற்றியலுகரமும் மெய்யீறு போல உயிரேற இடம்கொடுக்கும் என்பதே தொல்காப்பியனார் கருத்தாதல் நன்கு துணியப்படும். .......குற்றியலுகரம் உயிர்முதன் மொழி வரின் கெடும் என வீரசோழியநூலாசிரியரும் சங்கரநமச்சிவாயர் சிவஞானமுனிவர் முதலிய பிற்கால உரையாசிரியர்களும் கூறும் கொள்கை பொருந்தாது என்பதும், குற்றியலுகரம் மெய்யீறு கெட்டாற்போலத் தான் கெடாது நின்று உயிரேற இடம்கொடுக்கும் என உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறும் கொள்கையே தொல்காப்பியனார் கருத்து என்பதும், "குற்றியலுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடிய அரைமாத்திரையாய் நிற்றலும், முற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடியாமையும் தம்முள் வேற்றுமை" என நச்சினார்க்கினியர் காட்டிய இலக்கணமே குற்றியலுகர ஈறுகள் எல்லாவற்றின்கண்ணும் செல்லும் என்பதும் வலியுறுத்தப்பட்டவாறு.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***சூ. 104.*** **அவற்றுள்,**
**மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்.**

(இ-ள்.) 'மெய்யே உயிரென்று ஆயீர் இயல' என்றவற்றுள், ஈற்றின்கண் நிற்கும் எல்லாமெய்களும் ஒலிப்புடைய புள்ளிமெய்யாக நிற்கும்.

'எல்லாம்' என்றதனான், இடைநிற்பனவும் புள்ளியொடு நிற்கும் எனக் கொள்க.

**இளம்பூரணம்**

## *106. குற்றியலுகரமும் உயிரேற இடம்கொடுத்தல்*

**குற்றிய லுகரமும் அற்றுஎன மொழிப.**

(இச்....எனின்) ஈற்றின் குற்றியலுகரத்திற்கு ஒரு கருவி கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) ஈற்றின் குற்றியலுகரமும் புள்ளியீறு போல உயிர் ஏற இடம்கொடுக்கும் அத்தன்மைத்து என்று சொல்லுவர் எ-று.

இம்மாட்டேறு ஒரு புடைச்சேறல்[1] என உணர்க. (3)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 106.*** 1. ஒருபுடையே செல்லுதல் என்றது, மெய்போலக் குற்றியலுகரம் புள்ளி பெறாது என்பது பற்றி. இது நச்சினார்க்கினியர் கூறிய விளக்கம்.

குற்றியலுகரம் புள்ளிபெறும் என்னும் கருத்தினராயின், ஆசிரியர் இந்நூற்பாவினை நூன்மரபில் 15, 16ஆம் நூற்பாக்களோடு இயைபுற வைத்திருப்பார். அவ்வாறு வையாது, புணர்ச்சிக்குக் கருவி கூறும் புணரியலின்கண்

வைத்தமையான், குற்றியலுகர ஈறும் மெய்யீறு போல உயிரேறத் தான் இடங்கொடுக்கும் என்று புணர்ச்சிக்குக் கருவி கூறியதாகவே கொள்ளப்படும்.

['ஞ ந ம ய வ - எனும் முதலாகு மொழியும்' என்னும் தொகைமரபு 2ஆம் சூத்திரத்தான், உயிர்முதலாகிய மொழியும் உட்பட எல்லாம் நின்ற சொல் முன் இயல்பாகப் புணரும் என்றார். எனவே, குற்றியலுகரமும் உயிருள் அடங்குவதால் அது நிலைமொழியோடு இயல்பாகப் புணரும் என்றவாறாயிற்று. ஈண்டு நுந்தை என்னும் மொழிமுதற் குற்றுகரம் கொள்ளவேண்டுதலின், ஈற்றுக் குற்றுகரம் உயிர்ஏற இடங்கொடுத்தலுக்கு இச்சூத்திரம் சான்றாமாறில்லை. அடிகளாசிரியர் உரைக்குறிப்பு இவ்விடம் புரைபடுகிறது.]

இளம்பூரணர் குற்றியலுகரம் புள்ளியீறு போலத்(தான் கெடாமல் நின்றே) உயிரேற இடம்கொடுக்கும் என்று கொண்ட கொள்கை நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார், மாறனலங்கார உரையாசிரியர் முதலோர்க்கு உடன் பாடாம். *'ஐயீற்றுடைக் குற்றுகரமும் உளவே' (184)* என்று நன்னூலாரும் இளம்பூரணர் கொள்கையைத் தாம் இசைந்தாற்போலச் சூத்திரித்தார் என, அடிகளாசிரியர் இந்நுட்பத்தைத் தம் உரைக்குறிப்பிற் சுட்டியுள்ளார்.

**நச்சினார்க்கினியம்**

## *105.* குற்றியலுகரமும் உயிரேற இடம்கொடுத்தல்

**குற்றிய லுகரமும் அற்றுஎன மொழிப.**

இது முன்னர்ப் 'புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித்து இயலாது' (138) என்று மெய்க்கு எய்துவிக்கின்ற கருவியை எதிரது போற்றி உயிர்க்கும் எய்துவிக்கின்ற கருவிச் சூத்திரம்.

இ-ள் : குற்றியல் . . . . மொழிப - ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளி ஈறுபோல உயிர்ஏற இடம் கொடுக்கும் என்று கூறுவர் புலவர் எ-று.

இம்மாட்டேறு(1) ஒருபுடைச்சேறல் புள்ளிபெறாமையின். அங்ஙனம் உயிர் ஏறுங்கால் குற்றுகரம் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிர் ஏறிற்று என்று கொள்ளற்க. நாகரிது என்புழி, முன்னர்க்குற்றுகர ஓசையும் பின்னர் உயிர்ஓசையும் பெற்று அவ்விரண்டும் கூடிநின்றல்லது அப்பொருள் உணர்த்தலாகாமையின், இஃது உயிரொடும் கூடி நிற்கும் என்றார். (அ). (3)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 105*

1. 'அற்று' என்பது முதற்சூத்திரத்தில் கூறிய புள்ளிபெறுதலையே சுட்டு மன்றி அதில் கூறாத உயிரேற இடம்கொடுக்கும் என்பதனைச் சுட்டாது . . . . . . . முன்னும் 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (15) என மெய்கள் புள்ளிபெறுதலை விதித்த ஆசிரியர், அம்மெய்கள் போலவே எகரஒகரமும் புள்ளிபெறும் எனப் புள்ளிபெறுதலொடு மாட்டி 'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' எனக் கூறுதலின், ஆசிரியர் கூறும் மாட்டிலக்கணம் இஃது என்பது உணரத்தக்கது. பேராசிரியர்க்கும் சிவஞான முனிவர்க்கும் சங்கயாப்பு என்னும் நூலுடையார்க்கும் குற்றியலுகரமும் புள்ளிபெறும் என்பது கருத்தாம்.

(அ) நாகு+அரிது=நாகரிது. நா கரிது என ஒலிக்காமல் நாகரிது எனக் குற்றுகரவோசையோடு அகரம் ஒலித்தல் நுண்ணிதின் உணரப்படும் என்றார்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

*சூ. 106.* குற்றிய லுகரமும் அற்றென மொழிப.

இச்சூத்திரமும் நியமவிதியாம், மொழியீற்றுக் குற்றியலுகரமே புள்ளி பெறும் என்றலின். இச்சூத்திரம் "குற்றியலுகரம் புள்ளிபெறும்" என உணர்த்திற்று எனக் கொள்வது, குற்றியலிகரம் முதலிய மூன்றும் புள்ளி பெறுதல் 'முப்பாற் புள்ளியும்' (1) என்புழிப் பெற்றாம் ஆதலின் பொருந்தாது என்று இவர் மறுப்பர்.

''உயிர் ஏறுங்கால் குற்றுகரம் கெட்டுப்போக நின்ற ஒற்றின்மேல் உயிர் ஏறிற்று என்று **கொள்ளற்க**'' என்ற நச்சினார்க்கினியர் உரைப்பகுதியை இவர் விபரீதமாக உணர்ந்துகொண்டமை '**கொள்க**' என்று அவர் சுட்டியதாக இவர் உணர்த்தியமையான் தெரிகிறது.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 105. குற்றிய லுகரமும் அற்றுஎன மொழிப.**

மேலைச் சூத்திரத்தில், 'இறுதியும் முதலும் மெய்யே உயிர்என்று ஆயீர் இயல' என்றார் ஆகலின், குற்றியலுகர ஈறும் உயிர்மெய் ஈறும் எவ்வாறு கொள்ளப்படும் என ஐயம் நிகழும் ஆகலின், ஈண்டு, குற்றியலுகர ஈறு மெய்யீறாகக் கொள்ளப்படும் என்று கூறுகிறார்; உயிர்மெய் ஈற்றைக் குறித்து முன்னர்க் கூறுவார்.

மேலைச் சூத்திரத்திற்கு, மொழியின் ஈற்று மெய்யெழுத்துக்கள் புள்ளி பெற்று நிற்கும் என்பதே பொருள் ஆதலின், ஈண்டு 'அற்று' என்று மாட்டெறிந்தது, குற்றியலுகரமும் புள்ளிபெற்று நிற்கும் எனவே பொருள் தருதலை யாரும் எளிதின் அறிவர். இதனை விடுத்து உரைகாரர் இருவரும் 38ஆம் சூத்திரப் பொருளையே இம்மூன்றாம் சூத்திரத்தில் வரும் மாட்டேற்றுக்குப் பொருளாகக் கூறியதன் காரணம், குற்றியலுகரஈற்றின்மேல் (மெய்யீற்றின் மேல் போல) உயிர் ஊர்ந்துநிற்கும் என்று ஆசிரியர் கூறிய விதி (அன்னோரால்) அறியப்படாமையே ஆகும்.

**சூ. 104, 105.** ஈற்றுமெய் புள்ளிபெறும் என்றதனால், அவற்றின்முன் உயிர்முதல்மொழி வரின், அவை அவ்வுயிர் ஏற இடம்கொடுத்து நிற்கும் என்று உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் உரைகூறினர். அவர்கள் கூறும் விதி, முன்னர்ப் 'புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித்து இயலாது, மெய்யொடு சிவணும் அவ்வியல் கெடுத்தே' என்னும் சூத்திரத்தால் பெறப்படுதலின் ஈண்டுத் தந்துரைக்க வேண்டுதல் இன்று. (இம்மறுப்புச் சிவஞானமுனிவர் சூத்திரவிருத்தியில் சொற்றது.)

நன்னூலார், குற்றியலுகரம் புள்ளிபெறும் என விதந்து கூறிற்றிலர். ஆயின், 'தொல்லை வடிவின எல்லா எழுத்தும்' என்னும் சூத்திரத்தின் உரையில், மயிலைநாதர், "'ஆண்டு' என்ற மிகையானே, தாது - ஏது - என்றல் தொடக்கத்து ஆரியமொழிகளும், எட்டு - கொட்டு - என்றல் தொடக்கத்துப் பொதுமொழிகளும், குன்றியாது - நாடியாது - எட்டியாண்டுளது என்றல் தொடக்கத்துப் புணர்மொழிப் பொருள் வேறுபாடுகளும் அறிதற்பொருட்டுக் குற்றிகரக் குற்றுகரங்களுக்குமேல் புள்ளிகொடுப்பாரும் உளர் எனக் கொள்க" என்று எழுதியுள்ளார். அதனால் அவர்காலத்திலும் குற்றியலுகரங்களுக்குப் புள்ளியிடும் வழக்கம் இருந்தது என்பது அறியப்படும்.

மேல், இவ்வியல் முதல்சூத்திரத்தில் 'எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும், மெய்யே உயிர்என்று ஆயீர் இயல' என்றதனால், குற்றியலுகரம் அவ்விரண்டனுள் ஒன்றன்பாற் படும் என்பது பெறப்பட்டதன்றே? ஈண்டு மெய்யீறு போன்று புள்ளிபெறும் என்று விதித்ததனால், அது மெய்யீற்றின் பால் படுத்தமை அறியப்பட்டது. இது முன்னரும் பல இடங்களான் வலியுறும். இனி, உயிர்மெய் ஈறு உயிர்ஈறே ஆகும் என்பது வரும் சூத்திரத்தால் கூறுவர்.

[குற்றியலுகர ஈற்று மொழிக்குமுன் உயிர்முதல் மொழி வரின், ஆண்டுக் குற்றியலுகரம் கெடாதே நிற்கும் என்று நச்சினார்க்கினியர் கொள்கையையே இலக்கண

விளக்க நூலாரும் பின்பற்றி எழுதினார். இஃது 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்' என்றும் நன்னூலார் கருத்துக்கு மாறானதே. ஆயின், ஆசிரியர் தொல்காப்பியனார் முற்றுகரங்களுக்கு முன்னர் உயிர் முதல்மொழி வரின், அம்முற்றுகரம் கெடுதற்கு விதிகூறியாங்கு, குற்றுகரத்தின் முன்னர் உயிர்முதல் மொழிவரின் ஆண்டும் அவ்வுகரம் கெடும் என்று விதி கூறினார்அல்லர். அதுவேயன்றி, குற்றுகரம் உருவுதிரியாது உயிர்முதல் மொழியொடு புணரும் என்றும் கூறியுள்ளார். அவ்வாறாயின், 'ஆறன் மருங்கின் குற்றிய லுகரம், ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்' எனக் குற்றுகரம் கெடுதற்கு விதி கூறியுள்ளார் எனின், ஆண்டுக் குறித்தது குற்றியலுகரத்தை அன்று, முற்றுகரத்தையே (அறு); 'அது திரிந்ததன் திரிபு' என்க.]

**இளம்பூரணம்**

## *107. ஈற்று உயிர்மெய்யும் உயிரீற்றின் இயல்பினது*

**உயிர்மெய் ஈறும் உயிர்ஈற்று இயற்றே.**

*(இச்....எனின்)* 'மெய்யே உயிரென்று ஆயீர் இயல' *(104)* என்றதற்கொரு புறனடை கூறுதல் நுதலிற்று.

*(இ-ள்.)* உயிர்மெய் மொழிஈற்று நின்றதுவும் உயிரீற்றின் இயல்பை யுடைத்து; இடையில் நின்றதுவும் உயிரின் இயல்பையுடைத்து எ-று.

ஈறும் இடையும் உயிருள் அடங்கும் எனவே, முதல் மெய்யுள் அடங்கும் என்றதாயிற்று. இதனால் விள முதலிய உயிர்மெய் ஈறு எல்லாம் உயிர்ஈற்றுள் அடங்கிப் புணர்ச்சிபெறுவன ஆயின. வரகு என்புழி இடைநின்ற ரகர உயிர்மெய் அகரமாய் உயிர்த்தொடர்மொழி எனப்பட்டது. ஈண்டு உயிர்மெய் ஒற்றுமை நயத்தான் உயிர்மெய் என வேறோர் எழுத்து ஆவதன்றி,[1] ஈறும் இடையும் உயிரென ஓர்எழுத்தாயும் முதல் மெய்யென ஓர் எழுத்தாயும் நின்றதாயிற்று.

இத்துணையும் ஒருமொழி இலக்கணம் கூறலின் மொழிமரபின் ஒழிபாயிற்று. (4)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 107.*** 1. ஈண்டு ஒற்றுமை நயத்தான் உயிரும் மெய்யும் ஒன்றாகக் கூடிய ஓரெழுத்தாக உயிர்மெய்யைக் கொள்ளாமல், வேற்றுமை நயம் பற்றி மெய்யொலி முன்னரும் உயிரொலி பின்னருமாக உயிர்மெய் இசைப்பதாகக் கொள்ளவேண்டும் என்றபடி.

**நச்சினார்க்கினியம்**

## *106. உயிர்மெய் ஈறு உயிராயே அடங்குதல்*

**உயிர்மெய் ஈறும் உயிர்ஈற்று இயற்றே.**

இது 'மெய்யே உயிர்என்று ஆயீர் இயல' (103) என்ற உயிர்க்கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றியது; உயிர்மெய் என்பதோர் ஈறு உண்டேனும் அது புணர்க்கப்படாது, அதுவும் உயிராயே அடங்கும் என்றலின்.

இ - ள் : உயிர்மெய் ஈறும் - உயிர்மெய் மொழியினது ஈற்றின்கண் நின்றதும்; உயிர்ஈற்று இயற்று - உயிர்ஈற்றின் இயல்பை உடைத்து எ-று.

உம்மையான் இடைநின்ற உயிர்மெய்யும் உயிரின் இயல்பை உடைத்து என்றார் ஆயிற்று. உம்மை எச்சவும்மை. ஈற்றினும் இடையினும் நின்றன உயிருள் அடங்கும் எனவே, முதல்நின்றன மெய்யுள் அடங்கும் என்றார். இதனானே, மேல் 'விள' என்றாற்போலும் உயிர்மெய்கள் எல்லாம் அகரஈறு என்று புணர்க்குமாறு உணர்க. வரகு : இதனை மேல் உயிர்த்தொடர்மொழி என்ப. முன்னர் 'மெய்யின் வழியது' (18) என்றது ஓர் எழுத்திற்கு என்று உணர்க. (அ) **இத்துணையும் *மொழிமரபின் ஒழிபு கூறிற்று.*** (4)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 106*** *(அ) ஈண்டுக் கூறியது மொழி யிறுதியிலும் இடையிலும் நிற்கும் உயிர்மெய்யினை.*

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ. 107.*** உயிர்மெய் ஈறும் உயிரீற்று இயற்றே.

*'' 'ஈறு' என்றதனான் மொழியின் ஈற்றை இருவரும் கொண்டு 'வரகு' என்றவிடத்து இடையில் வந்த உயிர்மெய்யும் உயிரின் தன்மைத்து எனக்கொள்வது எவ்வாறு பொருந்தும்?'' என இவர் வினவுகிறார். வரகு- பலாசு- என்பன உயிர்மெய்த்தொடர் எனப்படாது உயிர்த்தொடர்க்குற்றுகரமாகவே கொள்ளப்படுவன என்னும் அமைதியான் இவர்வினா புரைபடும்.*

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***சூ. 106.*** உயிர்மெய் ஈறும் உயிர்ஈற்று இயற்றே.

*மொழிகளில் ஈற்றில் நிற்கும் உயிர்மெய்எழுத்து உயிரெழுத்தாகவே கருதப்படும் என்பது கருத்து.*

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

***சூ. 106.*** உயிர்மெய் ஈறும் உயிரீற்று இயற்றே.

*(இ-ள்.) மொழியீற்றின்கண் நிற்கும் உயிர்மெய்யும் உயிர்ஈற்றின் இயல்பினது ஆகும். என்றது, புணருமிடத்து உயிரீறு போலப் புணர்ச்சிவிதி எய்தும் என்றவாறு.*

*புணர்மொழிக்கண் ஓரெழுத்தையே ஒலியமைப்பு நோக்கிப் பிரித்து உணர்த்தும் முறைமையைக் 'குறியதன் இறுதிச் சினைகெட' (234) என்னும் சூத்திரத்தானும் உணர்க.*

**இளம்பூரணம்**

*108. நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்*

**உயிர்இறு சொல்முன் உயிர்வரு வழியும்**
**உயிர்இறு சொல்முன் மெய்வரு வழியும்**
**மெய்இறு சொல்முன் உயிர்வரு வழியும்**
**மெய்இறு சொல்முன் மெய்வரு வழியும்என்று**
**இவ்என அறியக் கிளக்குங் காலை**
**நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவிஎன்று**
**ஆயீர் இயல புணர்நிலைச் சுட்டே.**

*(இச்.....எனின்) மேற்கூறும் புணர்ச்சி மும்மொழிப் புணர்ச்சி ஆகாது இருமொழிப் புணர்ச்சியாம் என்பதூஉம், அஃது எழுத்து வகையான் நான்காம் என்பதூஉம் உணர்....ற்று.*

*(இ-ள்.) உயிர்ஈற்றுச் சொல் முன் உயிர்முதல் மொழி வரும் இடமும், உயிர்ஈற்றுச்சொல் முன் மெய்ம்முதல்மொழி வரும் இடமும், மெய்ஈற்றுச் சொல்முன் உயிர்முதல்மொழி வரும் இடமும், மெய்ஈற்றுச்சொல் முன் மெய்ம்முதல்மொழி வரும் இடமும் என்று, அப்புணர்ச்சி வகையை இவை என அறிய ஆசிரியன் சொல்லுங்காலத்து, அவை நிறுத்த சொல்லும் அதன் பொருண்மையைக் குறித்து வருசொல்லும் ஆகிய அவ்விரண்டு இயல்பையுடைய புணரும் நிலைமைக்கண் எ-று.*

*(உ-ம்.) ஆ + ஈ, ஆ + வலிது, ஆல் + இலை, ஆல்+வீழ்ந்தது எனக் கண்டு கொள்க.*

*விளவினைக் குறைத்தான் என்பது அவ்வுருபு குறித்துவரு கிளவி அன்மையின் நிலைமொழியுள் அடங்கி[1] இருமொழிப் புணர்ச்சியாய் நின்றவாறு அறிக. (5)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 108.** 1. வேற்றுமையுருபாகிய இடைச்சொல் தனித்து நிற்றல் ஆற்றாமையின், வருமொழியாக நின்று நிலைமொழியொடு புணர்ந்தது என்னும் வழக்கு இல்லை. நிலைமொழியோடு உருபு புணர்ந்து நிலைமொழியுள் அடங்கிவிடும் என்பது கருத்து. விளவினைக் குறைத்தான் என்புழி, விள என்னும் பெயரோடு ஐ உருபு புணர்கையில் இன்சாரியை இடையே தோன்றவே, விளவினை என முடிந்தது. அதுதான் நிலைமொழியாக நிற்ப, 'குறைத்தான்' குறித்து வரு கிளவியாக வர, விளவினைக் குறைத்தான் என்னும் புணர்ப்பு இருமொழிப் புணர்ச்சியாகவே கருதப்படும் என்றபடி.

**நச்சினார்க்கினியம்**

**107. நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்**

**உயிர்இறு சொல்முன் உயிர்வரு வழியும்**
**உயிர்இறு சொல்முன் மெய்வரு வழியும்**
**மெய்இறு சொல்முன் உயிர்வரு வழியும்**
**மெய்இறு சொல்முன் மெய்வரு வழியும்என்று**
**இவ்என அறியக் கிளக்குங் காலை**
**நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவிஎன்று**
**ஆயீர் இயல புணர்நிலைச் சுட்டே.**

இது மேற்கூறும் புணர்ச்சிகள் எல்லாம் இருமொழிப்புணர்ச்சி அல்லது இல்லை என்பதூஉம், அஃது எழுத்துவகையான் நான்காம் என்பதூஉம் உணர்த்துகின்றது.

இ-ள் : உயிர் இறு . . . . . மெய்வருவழியும் - உயிர் தனக்கு ஈறாக இறும் சொல்லின் முன்னர் உயிர் முதலாகிய மொழி வரும் இடமும், உயிர் தனக்கு ஈறாக இறும் சொல்லின்முன்னர் மெய் முதலாகிய மொழி வரும் இடமும்; மெய் இறு . . . மெய்வரு வழியும் - மெய் தனக்கு ஈறாக இறும்

சொல்லின் முன்னர் உயிர் முதலாகிய மொழி வரும் இடமும், மெய் தனக்கு ஈறாக இறும் சொல்லின் முன்னர் மெய் முதலாகிய மொழி வரும் இடமும்; என்று புணர்நிலைச் சுட்டு- என்று சொல்லப்பட்ட ஒன்றனோடு ஒன்று கூடும் நிலைமையாகிய கருத்தின்கண்; இவ்வென அறியக் கிளக்குங்காலை - அவற்றை இத்துணை என வரையறையை எல்லாரும் அறிய யாம் கூறுங்காலத்து; நிறுத்த . . . . . . இயல - முன்னர் நிறுத்தப்பட்ட சொல்லும், அதனை முடித்தலைக் குறித்துவரும் சொல்லும் என்று சொல்லப்பட்ட அவ்விரண்டு இயல்பினை உடைய என்றவாறு.

எனவே, நான்கு வகையானும் கூடுங்கால் இருமொழிக்கண் அல்லது புணர்ச்சி இன்று என்றார் ஆயிற்று.

உ-ம் : ஆவுண்டு ஆவலிது ஆல்இலை ஆல் வீழ்ந்தது - என முறையே காண்க. விளவினைக் குறைத்தான் - என்றவழி, சாரியையும் உருபும் நிலைமொழியாயே நிற்கும் என்பது நோக்கி அதனை நிறுத்தசொல் என்றும், முடிக்கும் சொல்லைக் குறித்து வரு கிளவி என்றும் கூறினார். இதனானே நிலைமொழியும் வருமொழியும் கூறினார். முன்னே 'மெய்யே உயிர்' (103) என்றது ஒரு மொழிக்கு; இஃது இருமொழிக்கு என்று உணர்க. (5)

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 107.** **உயிர்இறு சொல்முன் உயிர்வரு வழியும்**

................

**ஆயீர் இயல புணர்நிலைச் சுட்டே.**

ஒருவர் ஒருகருத்தைத் தொடர்மொழியால் கூற முற்படுங்கால், அடுத்தடுத்து வரும் சொல்லின் பொருள் நிலைக்கு ஏற்ப முதற்சொல்லை அமைத்துக் கூறுவர் ஆதலின் 'நின்ற சொல்' என்னாது 'நிறுத்த சொல்' என்றும், அவ்வாற்றானே எதிர்வரும் சொல்லையும் 'குறித்து வருகிளவி' என்றும் குறியீடு செய்தார்.

## இளம்பூரணம்

### 109. மொழிபுணர்இயல்பு நான்காதல்

அவற்றுள்
நிறுத்த சொல்லின் ஈறாகு எழுத்தொடு
குறித்துவரு கிளவி முதல்எழுத்து இயையப்
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
மூன்றே திரிபுஇடன் ஒன்றே இயல்புஎன
ஆங்க[1] நான்கே மொழிபுணர் இயல்பே.

*(இச்....எனின்) மேற்கூறும் புணர்ச்சி புணர்ச்சிவகையான் நான்காம் என்பதூஉம், அவை சொல்வகையான் நான்காம் என்பதூஉம், புணர்வது சொல்லும் சொல்லுமே அன்றி எழுத்தும் எழுத்தும் என்பதூஉம் உணர்....ற்று.*

*(இ-ள்.) நிலைமொழி வருமொழி எனப்பட்டவற்றுள் நிறுத்தசொல்லின் ஈறாகிநின்ற எழுத்தினோடு அதனைக் குறித்து வருகின்ற சொல்லினது முதல் எழுத்துப் பொருந்த, பெயர்ச்சொல்லொடு பெயர்ச்சொல்லைப் புணர்க்குங் காலத்தும் - பெயர்ச்சொல்லொடு வினைச்சொல்லைப் புணர்க்குங் காலத்தும்-வினைச்சொல்லொடு பெயர்ச் சொல்லைப் புணர்க்குங் காலத்தும்- வினைச் சொல்லொடு வினைச்சொல்லைப் புணர்க்குங் காலத்தும்-திரியும் இடம் மூன்றும் இயல்பு ஒன்றும் ஆகிய நான்கே, மொழிகள் தம்மில் புணரும் இயல்பு எ-று.*

*(உ-ம்.) சாத்தன்+கை, சாத்தன்+உண்டான், வந்தான்+சாத்தன், வந்தான்+போயினான் - எனக் கண்டுகொள்க.*

*இடையும் உரியும் பெயர்வினைகளை அடைந்தல்லது தாமாக நில்லாமையின், பெயர்வினைகட்கே[2] புணர்ச்சி உரிமை கூறப்பட்டது. (6)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 109.*** 1. இளம்பூரணர் 'ஆங்க நான்கே' என ஆங்க என்பதனை உரையசையாகக் கொண்டு பாடம் ஓதினார். நச்சினார்க்கினியர் 'ஆங்கந் நான்கே' என்று பாடம் ஓதி, ஆங்கு அந் நான்கு - முந்து நூலிற் கூறிய அந்நான்கு இலக்கணமுமே எனப் பொருள் கூறினார்.

2. சிறுபான்மை, இடைச்சொற்கள் ஆங்க - அம்ம - அம்மா - போன்றவை நிலைமொழியாக வைத்துப் புணர்க்கப்படுதல் சூ.32 உரைக்குறிப்பில் காண்க.

**நச்சினார்க்கினியம்**

***108. மொழிபுணர் இயல்பு நான்காதல்***

**அவற்றுள்,**
**நிறுத்த சொல்லின் . . . . . மொழிபுணர் இயல்பே.**

இது முன்னர் எழுத்துவகையான் நான்கு புணர்ச்சி எய்திய இருவகைச் சொல்லும் சொல்வகையானும் நான்கு ஆகும் என்பதூஉம், அங்ஙனம் புணர்வன சொல்லும் சொல்லும் அல்ல, எழுத்தும் எழுத்தும் என்பதூஉம் உணர்த்துகின்றது.

இ-ள் : அவற்றுள் - நிலைமொழி வருமொழி என்றவற்றுள்; நிறுத்த . . . . இயைய - முன்னர் நிறுத்தப்பட்ட சொல்லினது ஈறாகின்ற எழுத்தோடே அதனை முடிக்கக் கருதி வருகின்ற சொல்லினது முதல் எழுத்துப் பொருந்த; பெயரொடு . . . . . பெயரொடு . . . . காலும் - பெயர்ச்சொல்லொடு பெயர்ச்சொல்லைக் கூட்டுமிடத்தும், பெயர்ச்சொல்லொடு தொழிற்சொல்லைக் கூட்டுமிடத்தும்; தொழிலொடு . . . . தொழிலொடு . . . . . காலும் - தொழிற்சொல்லொடு பெயர்ச்சொல்லைக் கூட்டுமிடத்தும், தொழிற்சொல்லொடு தொழிற்சொல்லைக் கூட்டுமிடத்தும்;

மூன்றே . . . . நான்கே - திரியும் இடம் மூன்று, இயல்பு ஒன்று என்று முந்து நூலில் கூறிய அந்நான்கு இலக்கணமுமே; மொழி புணர் இயல்பு - ஈண்டு மொழிகள் தம்முட் கூடும் இலக்கணம் எ-று.

உ-ம் : சாத்தன்கை - சாத்தனுண்டான், வந்தான் சாத்தன், வந்தான் போயினான் (சாத்தன்) என முறையே காண்க. இவை நான்கு இனத்தோடும் கூடப் பதினாறாம். இடையும் உரியும் தாமாக நில்லாமையின் பெயர்வினையே கூறினார். இடைச்சொல்லும் உரிச்சொல்லும் புணர்க்கும் செய்கைப்பட்டுழிப் புணர்ப்புச் சிறுபான்மை. பெயர்ப் பெயரும் ஒட்டுப்பெயரும் என இருவகைப்படும் பெயர்.(அ) தெரிநிலை வினையும் குறிப்புவினையும் என இரு வகைப்படும் தொழில். நிலைமொழியது ஈற்றெழுத்து முன்னர்ப் பிறந்து கெட்டுப்போக, வருமொழியது முதலெழுத்துப் பின் பிறந்து கெட்டமையான், முறையே பிறந்து கெடுவன ஒருங்கு நின்று புணருமாறு இன்மையின் புணர்ச்சி என்பது ஒன்று இன்றாம்பிற எனின், அச்சொற்களைக் கூறுகின்றோரும் கேட்கின்றோரும் அவ்வோசையை இடையறவுபடாமை உள்ளத்தின்கண்ணே உணர்வர் ஆதலின், அவ்வோசை கேடின்றி உள்ளத்தின்கண் நிலைபெற்றுப் புணர்ந்தனவே ஆம். ஆகவே, பின்னர்க் கண்கூடாகப் புணர்க்கின்ற புணர்ச்சியும் முடிந்தனவே ஆம் என்று உணர்க. இனி, 'முயற்கோடு உண்டு' என்றால், அது குறித்து வருகிளவி அன்மையின் புணர்க்கப்படாது. அதுதான் 'இன்று' என்றால், புணர்க்கப்படும் என்று உணர்க. (6)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 108**

(அ) பெயர்ப்பெயர்-பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயர்கள் (எடுத்துக்காட்டாக முறையே வெற்பு-தில்லை-ஆதிரை-செவி-கருமை-ஆடல்-எனக் கொள்க.)

ஒட்டுப்பெயர்-பொருட்பெயர் முதலிய ஆறனோடும் இறுதிநிலை இயைந்து பாலினை உணர்த்திவரும் பெயர்கள் (எடுத்துக்காட்டாக, வெற்பன்- தில்லையான்- ஆதிரையான்- செவியன்-கருமையன்-ஆடலன்-எனக் காண்க.)

**இளம்பூரணம்**

***110. திரிபிடன் மூன்றாவன***

**அவைதாம்**
**மெய்பிறிது ஆதல் மிகுதல் குன்றல்என்று**
**இவ்என மொழிப திரியும் ஆறே.**

(இச்...எனின்) மேற்கூறிய திரிபு ஆமாறு உணர்....ற்று.

(இ-ள்.) அத்திரிபுதாமே மெய்பிறிதுஆதல், மிகுதல், குன்றல் என்று இவை எனச் சொல்லுவர் திரியும் நெறியினை எ-று.

இம்மூன்றும் அல்லாதது இயல்பு என்று கொள்க.

(உ-ம்.) பொற்குடம், யானைக்கோடு, மரவேர்-என வரும். குவளை மலர் என்பது இயல்பு.

இப்புணர்ச்சி நான்கும் ஒரு புணர்ச்சிக்கண்ணே நிகழ்வுபெறும்[1] என்பது உரையில் கொள்க.

மேல் 'இடம்' (109) என்றதனான், அத்திரிபு மூன்றனுள் யாதானும் ஒன்றாயது ஒரு புணர்ச்சிக்கண் இரண்டும் மூன்றும் ஒருங்கு வரப்பெறும் என்று கொள்க. மகத்தாற்கொண்டான் என்பது அம்மிகுதி இரண்டு[2] வந்தது. நீயிர் குறியிர் என்பது அம்மிகுதி மூன்று[3] வந்தது. பிறவும் அன்ன.[4] (7)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 110.***[1]. 'இப்புணர்ச்சி நான்கும் உருபுபுணர்ச்சிக் கண்ணும் நிகழ்வு பெறும்' என்று இத்தொடர் இருத்தல் வேண்டும். சூ.115இல் ''மெய்பிறிதாதல் முதலிய நான்கு புணர்ச்சியும் உருபுபுணர்ச்சிக்கண்ணும் எய்துதலின்'' என்ற

உரைப்பகுதியை நோக்குக. [இயல்பு உள்வழித் திரிபு மூன்றும், இத்திரிபுகள் உள்வழி அவ்வியல்பும் எவ்வாறு நிகழும்? வாக்கியம் பிழைபட்டுள்ளமை வெளிப்படை.]

2. மகம் என்னும் நாட்பெயர் கொண்டான் என்னும் வினையொடு புணர்வுழி அத்தும் ஆனும் ஆகிய இரண்டு சாரியைகள் தோன்றின. இவையிரண்டும் மிகுதி.

3. நும் 'நீயிர்' எனத் திரிதற்கண் மூன்று மிகுதியாக வந்தன (326). அவை ஈகாரமும் இகரமும் ரகரப் புள்ளியுமாம்.

நும் + குறியீர் = நியிர் குறியீர்

'நீஇர்' என எழுத்துப்பேறளபெடையாக வந்த இகரம் காலப்போக்கில் உடம்படுமெய் பெற்று வரிவடிவில் நீயிர் என எழுதப்படலாயிற்று. மூன்று மாத்திரையாக நெடிலும் குறிலும் இணைந்து ஒலிக்கும் ஒலி விட்டிசைத்து ஒலிக்கப்பட்டதன் விளைவுபோலும் இவ்வரிவடிவாகிய 'நீயிர்' என்பது.

4. மெய்பிறிதாதற்கும் குன்றற்கும் இவ்வாறே இரண்டும் மூன்றும் வருதல் கண்டுகொள்க என்றவாறு.

சூத்திரத்தின் தொடக்கமாகச் சொற்சீரடி 'அவைதாம்' என இருத்தல் வேண்டும்.

**நச்சினார்க்கினியம்**

### *109. திரிபிடன் மூன்றாவன*

**அவற்றுள்,**
**மெய்பிறிது ஆதல் மிகுதல் குன்றல் என்று**
**இவ்என மொழிப திரியும் ஆறே.**

இது முற்கூறிய மூன்றுதிரிபும் ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள் திரியும் ஆறு - முன்னர்த் திரிபு என்று கூறிய அவற்றுள் திரிந்து புணரும் நெறியை; மெய்பிறிது . . . .

மொழிப - மெய் வேறுபடுதல், மிகுதல், குன்றல் என்று கூறப்படும் இம்மூன்று கூற்றையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

இம்மூன்றும் அல்லாதது இயல்பாம் என்று உணர்க. இவை விகற்பிக்கப் பதினாறு உதாரணமாம். மட்குடம், மலைத்தலை, மரவேர் - இவை பெயரொடு பெயர் புணர்ந்த மூன்று திரிபு; மண்மலை என்பது இயல்பு. சொற்கேட்டான், பலாக்குறைத்தான், மரநட்டான்: இவை பெயரொடு தொழில் புணர்ந்த மூன்று திரிபு; கொற்றன் வந்தான் : இஃது இயல்பு. வந்தானாற் சாத்தன்(அ), கொடாப்பொருள், ஓடுநாகம் - இவை தொழிலொடு பெயர் புணர்ந்த மூன்று திரிபு; வந்தான் சாத்தன்: இஃது இயல்பு. வந்தாற் கொள்ளும், பாடப் போயினான், சாஞான்றான் (ஆ) -இவை தொழிலொடு தொழில் புணர்ந்த மூன்று திரிபு; வந்தான் கொண்டான்: இஃது இயல்பு. மூன்று திரிபு என்னாது 'இடன்' என்றதனான், ஒரு புணர்ச்சிக்கண் மூன்றும் ஒருங்கே வரவும் பெறும் என்று உணர்க, மகத்தாற் கொண்டான் (இ): இஃது அங்ஙனம் வந்தவாறு, மகர ஈற்று 'நாட்பெயர்க் கிளவி' (331) என்னும் சூத்திரத்தான் உணர்க. இரண்டு வருவனவும் காண்க. (ஈ) (7)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

### சூத்திரம் 109

(அ) 'ஆல்' அசையிடைச் சொல் வினைமுற்றாகிய வந்தான் என்பதனொடு பிரிவின்றி ஒட்டுப்பட்டு நின்றது. ஆகலின் அதனை வினைமுற்று ஈறாகவே கொண்டு மெய்பிறிதாதற் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டினார். இவ்வாறின்றேல் வேறு உதாரணம் காட்டல் இயலாது என்று கருதினார்போலும்.

(ஆ) சாவ+ஞான்றான்=சாஞான்றான் (209). சாவும்படியாகத் தூக்கிலிட்டுக் கொண்டான் என்பது பொருள்.

(இ) மகம்+கொண்டான்>மகம்+அத்து+கொண்டான்> மக + அத்து + ஆன் + கொண்டான்> மக + த்து + ஆன் + கொண்டான்= மகத்தாற்கொண்டான் (சூ. 331, 133, 125, 95, 124) மிகுதல், குன்றல், குன்றல், மெய்பிறிதாதல்-எனத் திரிபு மூன்றும் முறையே வந்தவாறு.

(ஈ) பரணி + கொண்டான் > பரணி + ஆன் + கொண்டான்> பரணியான் + கொண்டான் = பரணியாற் கொண்டான் (சூ. 247, 140, 124) மிகுதல், மெய்பிறிதாதல் என இரண்டு வந்தவாறு.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 110.** **அவைதாம்,**

**மெய்பிறிது ஆதல்....திரியும் ஆறே.**

'அவைதாம்' என்றது 'மொழிபுணர் இயல்பு' (109) என்ற தொடரைச் சுட்டுவதாக இவர் பொருளுரைத்தார். 'நீயிர் குறியீர்' என்னும் இளம்பூரணரது எடுத்துக்காட்டில் 'நும்' மின் திரிபாகிய 'நீயிர்' என்பதன்கண் மிகுதி மூன்று வந்துள்ளமையை இவர் விளக்கி, அது பிழை என்பார் கூற்றை மறுக்கிறார்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 110.** **நிறுத்த சொல்லும்.......புணர்நிலைக்கு உரிய.**

(எ-டு.) கிள்ளிவளவன் நாடு; கறிசோறு உண்டான்; உண்டசாத்தன் வந்தான்; சாத்தன் உண்டுவந்தான்.

செந்தாமரை அரிவாள் கதிர்வேல் வேழக்கரும்பு முதலியவை, உயிர்மெய்யெழுத்து என்றாற்போல, ஒற்றுமைநயமும் வேற்றுமைநயமும் உடையன ஆகலின், சொல்இரண்டாயினும் ஒருபொருளே உணர்த்தி நிற்றலின் 'அடையொடு தோன்றினும் புணர்நிலைக்கு உரிய' என்றார்.

**இளம்பூரணம்**

### *111. நிலைமொழி வருமொழிகள் அடையடுத்தும் புணர்தல்*

**நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்**
**அடையொடு தோன்றினும் புணர்நிலைக்கு உரிய.**

*(இச்....எனின்) 'நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவி' (108) என்பதற் கொரு புறனடை உணர்...ற்று.*

*(இ-ள்.) நிலைமொழியாக நிறுத்தின சொல்லும் அதனைக் குறித்து வரும் சொல்லும் தாமே வந்து புணர்வதன்றி, அவ்விரண்டும் ஓரோர் சொல் அடைந்து தோன்றினும் புணர்நிலைமைக்கு உரிய எ-று.*

*(உ-ம்.) பதினாயிரத்தொன்று, ஆயிரத்தொருபஃது, பதினாயிரத்தொருபஃது - என வரும்.*

*ஈண்டு அடை என்றது, உம்மைத்தொகையினையும் இருபெயரொட்டுப் பண்புத்தொகையினையும் என உணர்க.[1] அவையல்லாத தொகைகளுள் வினைத்தொகையும் பண்புத்தொகையும் பிளந்து முடியாமையின் ஒருசொல் எனப்படும். அன்மொழித்தொகையும் தனக்கு வேறொரு முடிபு இன்மையின்[2] ஒருசொல் எனப்படும். இனி ஒழிந்த வேற்றுமைத்தொகையும் உவமத்தொகையும் **தன்னினம் முடித்தல்** என்றதனான் ஈண்டு ஒருசொல் எனப்படும். பிறவும் அன்ன.* *(8)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 111.*** 1. ஈண்டு, அடை என்றது இருபெயரொட்டுப் பண்புத் தொகையினை. இவ்வாறு நிலைமொழியும் வருமொழியும், இவற்றுள் ஒன்றோ இவை இரண்டுமோ அடைபெறுதல் மேற்காட்டிய உதாரணத்துள் உம்மைத் தொகைக்கண் வந்தன. இக்கருத்துப்பட இவ்வாக்கியம் அமைந்திருக்கவேண்டுவது ஏடெழுதுவோரால் பிழை

பட்டிருக்க வேண்டும். நச்சினார்க்கினியத்திலும் இக்குறை காணப்படுகிறது.

காட்டப்பட்ட உதாரணங்களில் முறையே நிலைமொழியும் வருமொழியும் இருமொழிகளும் அடையடுத்தன. பதினாயிரம் + ஒன்று, ஆயிரம் + ஒருபஃது, பதினாயிரம் + ஒருபஃது - எனக் காண்க. அடையடுத்த இம்மொழிகள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இவற்றின் முன்மொழிகள் வண்ணம் முதலிய பண்பு அல்லவாயினும், நிலைமொழி வருமொழியாக அவை நிற்றலின் 'இன்னது இது' என ஒன்றை ஒன்று விசேடித்து வருதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம். எண்ணுப்பெயர் இரண்டு ஒட்டி நின்றவாறு காண்க. பத்தாகிய ஆயிரம் - ஒன்றாகிய பத்து - என விரியும். *ஆயிரம் பத்தாக அடுக்கியது - பத்து ஆயிரமாக அடுக்கியது - எனவும், பத்தாகிய ஒரு கூறு - ஒரு கூறாகிய பத்து* - எனவும் ஒன்றை ஒன்று விசேடித்து வந்தவாறு. பொதுவும் சிறப்புமாகிய பெயர்களே முன்பின்னாக அன்றிப் பின்முன்னாகத் தொக்கனவே இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம் என்பது நிரம்பா இலக்கணம். 'அகர முதல்' 'னகர இறுவாய்' - என்பவற்றைச் சிவஞானமுனிவர் விளக்கிவரையும் இலக்கணக்குறிப்பான் இதனை அறியலாம் (முதற் சூத்திர விருத்தி).

நிலைமொழியும் வருமொழியுமாகக் காட்டப்பட்ட புணர்மொழிகள் உம்மைத்தொகையாம். இவை இருபெயர் உம்மைத்தொகைப் பாற்படும் என்க.

'பதினாயிரத்துப் பதினொன்று' என்புழி, பதினொன்று என்னும் அடையடுத்த வருமொழி உம்மைத்தொகை. முழுத் தொகைநிலைத்தொடர்மொழியும் உம்மைத்தொகை.

2. 'பூங்குழல் வந்தாள்' என்புழி, நிலைமொழி வேற்றுமைத்தொகைஅன்மொழியாம். தொகைப்புறத்தே 'உடையாள்' ஆகிய (தொக்க சொற்கள் அல்லாத) மொழியில்

பொருள் அமைந்துவிடுதலின், அப்பொருள் பயக்க வேறொருசொல் புறத்துநின்று கொண்டு கூட்ட வேண்டா; அத்தொகையே அப்பொருள் பயந்து விடும்.

'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' (சொல். 420) என்பதனையே உரையாசிரியர் விளக்கினாராயிற்று.

**நச்சினார்க்கினியம்**

## 110. நிலைவருமொழிகள் அடையடுத்தும் புணர்தல்

**நிறுத்த சொல்லும் . . . . . புணர்நிலைக்கு உரிய.**

இது நிலைமொழி அடையடுத்தும் வருமொழி அடையடுத்தும் அவ்விரு மொழியும் அடையடுத்தும் புணரும் என எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

இ-ள் : நிறுத்த . . . . . கிளவியும் - நிலைமொழியாக நிறுத்தின சொல்லும் அதனைக் குறித்துவரும் சொல்லும்; அடையொடு . . . . உரிய - தாமே புணராது ஒரோவொரு சொல் அடையடுத்து வரினும், இரண்டும் அடையடுத்து வரினும் புணர்நிலைக்கு உரிய எ-று.

(1) அடையாவன, உம்மைத்தொகையும் இருபெய ரொட்டுப் பண்புத்தொகையும் ஆம்.

உ - ம் : பதினாயிரத்தொன்று, ஆயிரத்தொருபஃது, பதினாயிரத்திருபஃது - என வரும். இவ்வடைகள் ஒருசொல்லே ஆம். (2) வேற்றுமைத்தொகையும் உவமத்தொகையும் பிளந்து முடிய, பண்புத்தொகையும் வினைத்தொகையும் பிளந்து முடியாமையின் ஒரு சொல்லே ஆம். அன்மொழித்தொகையும் தனக்கு வேறொரு முடிபின்மையின் ஒருசொல்லே ஆம். (அ) இத்தொகைச் சொற்கள் எல்லாம் அடையாய் வருங்காலத்து ஒருசொல்லாய் வரும் என்றுணர்க. உண்டசாத்தன் வந்தான், உண்டுவந்தான் சாத்தன் - என்பனவும் ஒருசொல்லேயாம். (8)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 110**

1. பதினாயிரத்தொன்று : இதன்கண், பதினாயிரம் : நிலைமொழி. இதில் 'ஆயிரம்' பத்து என்னும் அடைமொழியொடு தோன்றிற்று. இது பண்புத்தொகை. பன்னிரண்டு கை : இதன்கண், பன்னிரண்டு : நிலைமொழி. இதில் 'இரண்டு' பத்து என்னும் அடைமொழியொடு வந்தது. பத்தும் இரண்டும் என இஃது உம்மைத்தொகை. இது பற்றியே அடையாவன இருபெயரொட்டுப் பண்புத்தொகையும் உம்மைத்தொகையும் ஆம் என்றார். (எ-டு: ஆயன்சாத்தன் வந்தான், கபிலபரணர் வந்தார்.)

2. குன்றக்கூகை, புலிப்பாய்த்துள் என்பன முறையே வேற்றுமைத்தொகையும் உவமத்தொகையும் ஆம். இவை குன்றம்+கூகை எனவும், புலி+பாய்த்துள் எனவும் பிளந்து நின்று புணர்ச்சிபெற்றன. வினைத்தொகையும் பண்புத் தொகையும் பிளந்து முடிவுபெறாது ஒருசொல்லாயே நிற்றலின், அவை 'அடை' எனப்படும். அன்மொழித்தொகை ஏனைத் தொகையின் ஈற்றில் பிறத்தலின், அவற்றின் முடிபே தனக்கு முடிபன்றி வேறொரு முடிபு இன்மையின் ஒருசொல்லேயாம். ஆகவே தான் பிளந்து முடிபுபெறாது; பெறின், அன்மொழிப் பொருளை உணர்த்தாது என்றபடி. (எ-டு : கொல்யானை வந்தது, கருங்குதிரை ஓடிற்று, பொற்றொடி கூறினாள்).

(அ) இளம்பூரணம் உரைக்குறிப்பு சூ. 111 (1), (2) காண்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 111.** நிறுத்தசொல்லும் .....புணர்நிலைக்கு உரிய.

பதினாயிரத் தொன்று - ஆயிரத் தொருபஃது - அடையொடு தோன்றிய இந்நிலைமொழி வருமொழித் தொடர்களை இவர் வேற்றுமைத்தொகை என்கிறார்.

உரைகாரர் இருவரும் கூறியாங்குப் பண்புத்தொகை என்றலே மிகவும் பொருந்தும். நிலைமொழி வருமொழி புணர்ந்த அம்முழுத்தொடர் உம்மைத்தொகையாம் என்ற உரைகாரர் விளக்கம் ஏடெழுதுவோரால் பழுதுபட்டுவிட்டது.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

சூ. 111. மருவின் தொகுதி...புணர்நிலைச் சுட்டே.

'உரியவை உள' என்றதனான், உரியவை அல்லாதனவும் உள; அவை புணர்க்கப்படா என்பது போதரும். அவை முன்னர் (482ஆம் சூத்திரத்தான்) அறியப்படும்.

இனி, புணர்ச்சி இல்லவற்றிற்கு எல்லாம் விதி அமைப்பான் கருதி நச்சினார்க்கினியர் 'மருத்தொகுதி' என்றும் 'இன்தொகுதி' என்றும் பொருள் கூறினது ஆசிரியர் கருத்திற்கு அமைவுடையது அன்று. இளம்பூரணர் இச்சூத்திரத்தைப் பிரித்துக் கூட்டிப் பொருள் கூறாராய்ச் செம்பொருள் உரைத்தது அறியத்தக்கது.

'புணர்ச்சி இல்வழிப் புணர்ச்சி பெற்றாற்போல நிற்பன' என்பவை இக்காலத்தில் 'தழாத்தொடர்' என்று வழங்குகின்றன.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 111. மருவின் தொகுதி.....புணர்நிலைச் சுட்டே.

(இ-ள்.) வேற்றுமை முதலாய பொருள்படச் சொற்கள் தொக்குத் திரிந்து ஒருசொல்லாய் மருவிநிற்கும் சொற்களும், இடம் மாறித் திரிந்து நிற்கும் சொற்களும், புணரியல் நிலையைக் கருதுமிடத்துக் கவர்பொருள் இல்லாதனவாய் வருவன யாவும் மேற்கூறியாங்கு உரியவாகும்.

(எ-டு.) சோணாடு மலாடு தெனாது வடாது - இவை மரூஉமொழிகள்.

மீகண்- முன்றில் - நுனிநா - புறநகர் - இவை மயங்கியல் மொழிகள். அருமந்த பிள்ளை' என்பது போல்வன சான்றோர் வழக்கு அன்மையின், எடுத்துக்காட்டு ஆதற்கு ஏலா என்க.

[மீகண் என்னும் முடிபு 'மீஎன மரீஇய இடம்வரை கிளவி' நிலைமொழியாயவிடத்து (250) நிகழ்வது. முன்றில் என்னும் முடிவு 'தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே' (355) என்னும் சூத்திரத்துள் இடம்பெற்றது. இவ்விரண்டனையும் இவர் மரூஉமொழியாகக் கொள்ளாமல், மயங்கியல் மொழியாகக் கொண்டமை மேற்கோள்மலைவாதல் காண்க. நிலைமொழி வருமொழிகள் தழாத்தொடராக அமைவன எல்லாம் இன்னோசை கருதியே நிகழும் மயங்கியல் மொழியாகக் கோடலே சாலும். ]

**இளம்பூரணம்**

## *112. மரூஉக்களும் புணர்க்கப்படுதல்*

**மருவின் தொகுதி மயங்குஇயல் மொழியும்**
**உரியவை உளவே புணர்நிலைச் சுட்டே.**

(இச்...எனின்) இலக்கணவழக்கே அன்றி, மரூஉக்களும் புணர்க்கப்படும் என்பது உணர்...ற்று.

(இ-ள்.) இலக்கணவழக்கே அன்றி, மரூஉத்திரள் ஆகிய தலைதடுமாறாக மயங்கின இயல்பையுடைய இலக்கணத் தொடு பொருந்தின மரூஉ வழக்கும் உரியன உள, புணரும் நிலைமைக்கண் எ-று.

(உ-ம்.) மீகண், முன்றில் - என வரும்.

'நிலை' என்றதனான், இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு அல்லாமல் வரூஉம் வழக்கும்[1] புணர்க்கப்படும் என்று கொள்க. (9)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 112.**[1] மீகண் முன்றில் என்பன இலக்கணத்தொடு பொருந்திய மரூஉமுடிபுகள் (251, 356). கண்ணினது மேலிடம், இல்லினது முன்னிடம் - என இவை பொருள்படும்.

அருமருந்தன்ன என்பது அருமந்த எனவும், சோழநாடு என்பது சோணாடு எனவும், மலையமானாடு என்பது மலாடு எனவும் வந்தவை இலக்கணத்தொடு பொருந்தாத மரூஉ முடிபுகளாம். (இவற்றை நிலைமொழி வருமொழி செய்து புணர்த்தல் பயனில் முயற்சி யாதலின் பொருந்தாது எனவே கொள்க.) இம்மரூஉ முடிபுகளை நிலைமொழியாக நிறுத்தி அருமந்த+அரசாட்சி. சோணாடு+ பெரிது, மலாடு+ வளமை - முதலாக இருவழியும் புணர்நிலை அமையும்.

**நச்சினார்க்கினியம்**

## *111. மருமொழியும் தழாத்தொடரும் புணர்க்கப்படுதல்*

**மருவின் தொகுதி . . . . . . புணர்நிலைச் சுட்டே.**

இது மரூஉச் சொற்களும் புணர்ச்சிபெறும் என்பதூஉம், நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியுமாய்ப் பொருள்இயைபு இல்லனவும் புணர்ச்சி பெற்றாற்போல நிற்கும் என்பதூஉம் உணர்த்துகின்றது.

இ-ள் : மருமொழியும் - இருவகையாகி மருவிய சொற்களும்; இன் தொகுதி மயங்கு இயல்மொழியும் - செவிக்கு இனியவாகச் சொல்திரளிடத்து நிறுத்தசொல்லும் குறித்துவருகிளவியுமாய் ஒட்டினாற்போல நின்று பொருள் உணர்த்தாது பிரிந்து பின்னர்ச் சென்று ஒட்டிப் பொருள் உணர்த்த மயங்குதல் இயன்ற சொற்களும்; புணர்நிலைச்சுட்டு உரியவை உள - புணரும் நிலைமைக் கருத்தின்கண் உரியன உள எ - று.

'மொழியும்' என்பதனை 'மரு' என்பதனொடும் கூட்டுக. (1) 'இன்தொகுதி' என்றார், பா என்னும் உறுப்பு நிகழப் பொருள் ஒட்டாமல் சான்றோர் சொற்களைச் சேர்த்தலின்.

உ - ம் : முன்றில், மீகண் : இவை இலக்கணத்தொடு பொருந்திய மரு. இலக்கணம் அல்லா மரு 'வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்' (483) என்புழிக் காட்டுதும். இனி,

'இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவல் அடைய இரலை தெறிப்ப' (அகநா. 4)

என்புழி, மருப்பின் இரலை என்று ஒட்டி இரண்டாவதன் தொகையாய்ப் பொருள்தந்து, 'புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித்து இயலாது' (138) என்று உயிர் ஏறி முடிந்து மயங்கி நின்றது; ஆயின் 'மருப்பிற் பரல்' என்று மெய் பிறிதாய் ஒட்டிநின்றவாறு என்னையெனின், மருப்பினை யுடைய பரல் என வேற்றுமைத்தொகைப் பொருள் உணர்த்தா மையின், அஃது அச்செய்யுட்கு இன்னோசை நிகழ்தற்குப் பகரத்தின் முன்னர் நின்ற னகரம் றகரமாய்த் திரிந்துநின்ற துணையேயாய்ப் புணர்ச்சிப் பயனின்றி நின்றது. இங்ஙனம் புணர்ச்சி எய்தினாற்போல, மாட்டுஇலக்கணத்தின்கண்ணும் மொழிமாற்றின்கண்ணும் நிற்றல் சொற்கு இயல்பு என்றற்கு அன்றே ஆசிரியர் 'இன்தொகுதி' என்றது (அ) என்றுணர்க. 'கருங்கால் ஓமைக் காண்புஇன் பெருஞ்சினை' (அகநா. 3) என்புழி, 'ஓமைச்சினை' என்று ஒட்டி ஓமையினது சினை - எனப் பொருள் தருகின்றது, இன்னோசை தருதற்குக் ககர ஒற்று மிக்குக் காண்பின் என்பதனொடும் ஒட்டினாற்போல நின்றது. 'தெய்வ மால்வரைத் திருமுனி யருளால்' (சிலப். 3:1) என்புழித் தெய்வவரை என்று ஒட்டித் தெய்வத் தன்மையுடைய வரை எனப் பொருள்தருகின்றது, இன்னோசை தருதற்கு 'மால்' என்பதனொடும் ஒட்டினாற் போலக் குறைந்து நின்றது. இவ்வாறு மூன்று திரிபும் வந்தவாறு காண்க. இனி, எச்சத்தின்கண்ணும்

'பொன்னோடைப் புகரணிநுதற்
றுன்னருந்திறற் கமழ்கடாத்து
எயிறுபடையாக எயிற்கதவிடாக்
கயிறுபிணிக்கொண்ட கவிழ்மணிமருங்கிற்
பெருங்கையானை யிரும்பிடத்தலையிருந்து
மருந்தில்கூற்றத் தருந்தொழில்சாயா' (புறநா. 3)

என மாட்டாய் ஒட்டிநின்றது 'கயிறுபிணிக்கொண்ட' என்பதனொடும் ஒட்டினாற்போல நின்று ஒற்று அடுத்தது, இன்னோசை பெறுதற்கு. (ஆ) பிற சான்றோர் செய்யுட்கண் இவ்வாறும் பிறவாறும் புணர்ச்சி இல்வழிப் புணர்ச்சிபெற்றாற் போல நிற்பன எல்லாவற்றிற்கும் இதுவே ஓத்தாகக் கொள்க. (9)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 111**

1. நச்சினார்க்கினியர் 'இன்தொகுதி' எனப் பிரித்துப் பொருள்கோடல் சிறப்பின்று. உரையாசிரியர் கருத்தே ஈண்டுப் பொருத்தமாம்; என்னையெனின், இலக்கணத்தொடு பொருந்திய மரூஉச்சொற்களைப் பிரித்துப் புணர்த்தலின் என்க. (முன்+ற்+இல்=மூன்றில்)

(அ) முன்னர் நூன்மரபு முதற்சூத்திர உரையின்கண், எழுத்தினை எட்டிறந்த பலவகையான் உணர்த்துவனவற்றுள் ஒன்றாக 'நிலையாதென்றல்' என்பதனைக் குறித்து விளக்குமிடத்தே நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்தை மேற்கோள் காட்டினார். தழாஅத் தொடராக நிற்கும் நிலைமொழி வருமொழிப் புணர்ச்சியைக் குறிப்பதாக நச்சினார்க்கினியர் இதற்கு உரை வகுத்துள்ளார். தாம் எழுதிய உரைக்கு அமைதியும் எடுத்துக்காட்டும் வரைந்துள்ளமை காண்க. இச்சூத்திரத்திற்கு இளம்பூரணத்தின் உரைக்குறிப்புக் காண்க. [ப.ஆ]

இருவழியினும் தழாத் தொடர்கள் (முன்றில், சுரையாழ) செவிக்கு இன்னோசை பயப்ப நிலைமொழி வருமொழிகள் போல ஒட்டி நிற்றல்.

(ஆ) நுதலையும் திறலையும் கடாத்தினையும் மருங்கினையுமுடைய யானை என்க. யானையின் பிடர்த்தலை இருந்து, அதன் எயிற்றினையே படையாகக் கொண்டு, எயிற்கதவினை இடந்து, கூற்றத்துத் தொழிலைச் சாய்த்து - என முடிக்குமிடத்தே, இருந்து-இடா-சாயா-என வினையெச்சங்கள் முறையே வந்தன. இடா என்னும் செய்யா என் வினையெச்சம் கயிறு என்னும் வருமொழிப் பெயரோடு ஒட்டி நிற்பதுபோல நின்று, ககர ஒற்று மிக்கது.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 112. மருவின் தொகுதி....புணர்நிலைச் சுட்டே.**

(இ-ள்.) வழக்கில் வரும் சொற்கூட்டங்களுள் புணர்நிலையைக் கருதுமிடத்து மயங்கும் தன்மையுடைய சொற்களும் உரியவை உள.

(உ-ம்.) நுனிநா, முன்றில்

இச்சூத்திரத்தான் மரூஉச்சொற்களின் பகுதிகள் புணரும்போது இடம் மாறும் என உணர்த்தப்பட்டதாகக் கொள்ளப்பட வேண்டும் என இவர் கருதுகிறார். சோணாடு-மலாடு - போன்றவை இவர்கருத்தில் எவ்வாறு அமையும் என்பது புலப்படுமாறு இல்லை.

**இளம்பூரணம்**

***113. வேற்றுமை அவ்வழியுள் 'மிகுதல்' புணர்ச்சி***

**வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்**

**வேற்றுமை அல்வழிப் புணர்மொழி நிலையும்**
**எழுத்தே சாரியை ஆயிரு பண்பின்**
**ஒழுக்கல் வலிய புணருங் காலை.**

*(இச்....எனின்)* நால்வகைப் புணர்ச்சியுள் மிக்க புணர்ச்சி இத்தன்மைத்து என்பதூஉம், அந்த நால்வகைப் புணர்ச்சியும் வேறோர் ஆற்றான் இருவகையாம் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

*(இ-ள்.)* வேற்றுமையது பொருண்மையினைக் குறித்த புணர்மொழியது நிலைமையும், வேற்றுமை அல்லாத அல்வழியிடத்துப் புணர்மொழியது நிலைமையும், மிக்க புணர்ச்சிக்கண் எழுத்து மிகுதலும் - சாரியை மிகுதலும் - ஆகிய அவ்விரண்டு இலக்கணத்தானும் நடாத்துதலைத் தமக்கு வலியாக உடைய, அவை புணருங்காலை எ-று.

*(உ-ம்.)* விளங்கோடு, மகவின்கை; விளக் குறிது, பனையின்குறை எனக் கண்டுகொள்க.

'ஒழுக்கல் வலிய' என்றதனான், எழுத்தும் சாரியையும் உடன்பெறுதல் கொள்க.

*(உ-ம்.)* அவற்றுக்கோடு, கலத்துக்குறை - என வரும்.

அல்வழி முற்கூறாதது, வேற்றுமை அல்லாதது அல்வழி என வேண்டலின் என்பது.

முன்னே 'புணர்மொழி நிலை' என்றுவைத்துப் பின் 'புணருங்காலை' என்றதனான், புணர்ச்சிக்கண்ணே 'வேற்றுமை அல்வழி' (113) என இரண்டாவது அல்லாக்கால்[1] வேற்றுமை எனவே படும் என்பது கொள்க.

ஈண்டு அல்வழி என்றது, பெரும்பான்மையும் எழுவாயினை.[2]

*(10)*

இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ. 113.** 1. *'அல்வழி'* எனக் குறிக்கப்படாத இடத்து வேற்றுமைப்புணர்ச்சி எனக் கொள்க - என்றவாறு. அல்வழிப்புணர்ச்சியாயின் அஃது *'அல்வழி'*என்றோ *'வேற்றுமை யல்வழி'* என்றோ கிளந்தோதப்பெறும் என்பது கருத்து. கிளந்தோதாதவழி வேற்றுமைப்புணர்ச்சி என்றே கொள்ளப்படும்.

2. நிலைமொழிப்பெயர் எழுவாயாக நிற்க, அதன் பயனிலையாக நாற்கணமும் வந்து புணரும் என்க. எடுத்துக்காட்டாக 159, 309, 409ஆம் நூற்பாக்களுள் அல்வழி முடிபு எழுவாய்த் தொடராக வருதல் காண்க.

**நச்சினார்க்கினியம்**

**112. வேற்றுமை அல்வழியுள் மிகுதல் புணர்ச்சி**

**வேற்றுமை குறித்த . . . . . புணருங் காலை.**

இது மூவகைத் திரிபினுள் மிக்குப் புணரும் புணர்ச்சி இருவகைத்து என்கின்றது.

இ-ள்: புணருங்காலை - நால்வகைப் புணர்ச்சியுள் மிக்க புணர்ச்சி புணரும் காலத்து; வேற்றுமை . . . . . வேற்றுமை . . . . நிலையும் - வேற்றுமைப் பொருண்மையினைக் குறித்த புணர்மொழியினது தன்மையும், வேற்றுமை அல்லாத அல்வழியிடத்துப் புணரும் மொழியினது தன்மையும்; எழுத்தே . . . . . வலிய - எழுத்து மிகுதலும் சாரியை மிகுதலும் ஆகிய அவ்விரண்டு குணத்தினானும் சொல்லுதலைத் தமக்கு வலியாகவுடைய எ - று.

எனவே, ஏனைப் புணர்ச்சிகளுக்கு இத்துணை வேறுபாடு இன்று என உணர்க.

உ - ம் : விளங்கோடு : இஃது எழுத்துப் பெற்றது ; மகவின் கை : இது சாரியை பெற்றது. இனி அல்வழிக்கண், விளக்குறிது : இஃது எழுத்துப் பெற்றது; பனையின் குறை : இது சாரியை பெற்றது. இதற்குப் பனையும் (அதிற்) குறைந்ததும் என்பது பொருளாம். இஃது அளவுப்பெயர். 'ஒழுக்கல் வலிய' என்றதனான், இக்கூறிய இரண்டும் எழுத்தும் சாரியையும் உடன்பெறுதலும் கொள்க. அவற்றுக்கோடு என்பது வேற்றுமைக்கண் இரண்டும் பெற்றது; கலத்துக்குறை என்பது அல்வழிக்கண் இரண்டும் பெற்றது. இதற்குக் கலமும் (அதிற்) குறைந்ததும் என்பது பொருளாம். இயல்புகணத்துக்கண் இவ்விரண்டும் உடன்பெறுதல் இன்று. அல்வழி முற்கூறாதது, வேற்றுமை அல்லாதது அல்வழி என வேண்டுதலின். எழுத்துப்பேறு யாப்புடைமையானும், (அ) எழுத்தினால் சாரியை ஆதலானும், எழுத்து முற்கூறினார். வேற்றுமை மேலைச்சூத்திரத்தே கூறுகின்றார்.

அல்வழி ஆவன, அவ்வுருபுகள் தொக்கும் விரிந்தும் நில்லாது புணர்வன. அவை எழுவாய் வேற்றுமை (1) ஆறு பயனிலையொடும் (சொல். 67) புணர்ந்த புணர்ச்சியும், விளி வேற்றுமை தன் பொருளொடு புணர்ந்த புணர்ச்சியும், முற்றுப் பெயரொடும் வினையொடும் புணர்ந்த புணர்ச்சியும், பெயரெச்சமும் வினையெச்சமும் பெயரொடும் வினை யொடும் புணர்ந்த புணர்ச்சியும், உவமத்தொகையும், உம்மைத்தொகையும், இருபெயரொட்டுப் பண்புத் தொகையும், இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயரொடும் வினையொடும் புணர்ந்த புணர்ச்சியும், அன்மொழித்தொகை பொருளொடு புணர்ந்த புணர்ச்சியும் (ஆ) பண்புத்தொகையும் வினைத்தொகையும் விரிந்து நின்றவழிப் புணர்ந்த புணர்ச்சியும் (2) என உணர்க (இ). (10)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

சூத்திரம் 112

1. ஆறு பயனிலை என்றது சொல்லதிகாரத்துப் 'பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்' (66 சே.) என்னும் சூத்திரத்துள் கூறியவற்றை. அவற்றிற்கு உதாரணமாக முறையே ஆ உண்டு, ஆ வாழ்க, ஆ வந்தது, ஆ யாது, ஆ கரியது, ஆ பல - எனக் காண்க.

2. வினைத்தொகை விரிவுழிச் செய்த செய்யும் என்னும் பெயரெச்ச ஈறாகவும் பண்புத்தொகை விரிவுழி ஐம்பால் ஈறாகவும் விரியும். இத்தொகைகள் பிரித்துப் புணர்க்கப்படா ஒரு சொல்லாயே நிற்கும் என ஆசிரியர் கூறுவதைப் பலவிடத்தும் கூறுகின்ற நச்சினார்க்கினியர், ஈண்டு இவ்விருதொகையும் விரிந்து நின்றவழிப் புணர்ந்த புணர்ச்சியும் என்று கூறியது பொருந்துமோ என்பது ஆராயத்தக்கது.

(அ) வருமொழி வல்லெழுத்திற்கு இனமான மெல்லெழுத்தாகிய எழுத்துப் பெறுதல் பெரிதும் இயைபுடைத்து. (யாப்பு-இயைபு, உறுதிப்பாடு) நெட்டுயிர்க்குப் பின் அளபெடை எழுத்துப்பேறு மிகுதல் இயைபுடைத்தாதல் போல்வது இவ்இயைபு. (காஅக்குறை- உடூஉக்குறுமை-ஏஎக் கடுமை-ஓஒக் கடுமை- முதலாகக் காண்க.)

(ஆ) அன்மொழித்தொகை தன் முடிக்கும் சொல்லொடு புணர்ந்த புணர்ச்சி. பூங்குழல் வந்தாள், பூங்குழல் இவள் - எனக் காண்க. அன்மொழித் தொகைப் பொருள் தொக்க மொழிகளின் புறத்தேயே அடங்கிவிடுதலின், அத்தொகை அத்திணைபாற்குரிய வினையும் பெயரும் ஆகிய முடிக்கும் சொல்லொடு புணர்கிறது.

இவ்விரு தொகையும் நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படா என்று ஆசிரியர் கூறியமை பிரித்தவழித் தொகைப்பொருள் சிதைந்துவிடுதல் பற்றி. அவை அமைந்து கிடக்கும் புணர்நிலை அல்வழிப் புணர்ச்சியின்பாற்பட்டது என்பதே ஈண்டுக் கருத்தாகக் கொள்ளப்படும். பிரித்துப்

*புணர்க்கப்படா என்பதன்றி, ஏதேனும் ஒரு காலம் காட்டும் வினைத்தொகையாகவும் ஒருபாலுணர்த்தும் பண்புத் தொகையாகவும் இவற்றை விரித்துக் காணுமிடத்து ஏதமின்றாம். [ப.ஆ]*

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 113. வேற்றுமை குறித்த....புணருங் காலை.**

*'நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்' (111) என்பன அதிகரித்து 'ஒழுக்கல் வலிய' என்றதற்கு எழுவாயாக வந்தன என இவர் உரைப்பர்.*

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 112. வேற்றுமை குறித்த பொருள்மொழி நிலையும்**
**வேற்றுமை அல்வழிப் பொருள்மொழி நிலையும்**
**................ ஒழுக்கல் வலிய புணருங் காலை.**

இச்சூத்திரத்து முதல் இரண்டடியிலும் உள்ள 'பொருள்மொழி நிலையும்' என்னும் பாடம் எவ்வகையாலோ பிறழ்ந்து 'புணர்மொழி நிலையும்' என உளது.

'எழுத்து' என்றது சாரியைமொழிகளைப் போலப் பொருள் வேறு பாட்டினைச் செய்யாமல், புணர்ச்சிக்குத் துணைபுரியும் அளவில் நிற்கும். அது பொருள்வேறுபாடு செய்யின் சாரியை ஆகும் என்க.

'ஒழுகல் வலிய' என்பது எதுகை நோக்கிச் செய்யுள் விகாரமாய் 'ஒழுக்கல் வலிய' என நின்றது. பிறவினைப் பொருள்பட நின்றது எனினும் அமையும்.

**இளம்பூரணம்**

***114. வேற்றுமையுருபுகள் ஆறு***

**ஐ ஒடு குஇன் அதுகண் என்னும்**
**அவ்வாறு என்ப வேற்றுமை உருபே.**

*(இச்....எனின்)* மேல் வேற்றுமை எனப்பட்டவற்றின் பெயரும் முறையும் தொகையும் உணர்...ற்று.

*(இ-ள்.)* ஐ ஒடு கு இன் அது கண் - என்று சொல்லப்படும் அவ்வாறும் என்று சொல்லுவர், வேற்றுமை உருபுகளை எ-று.

இவ்வாறும் அல்லன எல்லாம் அல்வழி எனப்படும். அவை எழுவாயும் விளியும் உவமத்தொகையும் உம்மைத் தொகையும் இருபெயரொட்டும் பண்புத் தொகையும் முற்றும் இருவகை எச்சமும் இடையும் உரியும்- என இவை. *(11)*

**நச்சினார்க்கினியம்**

## *113.* வேற்றுமையுருபுகள் ஆறு

**ஐஒடு குஇன் . . . . . . . வேற்றுமை உருபே.**

இது மேல் வேற்றுமை எனப்பட்ட அவற்றின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துகின்றது.

இ-ள்: வேற்றுமை உருபு ஐ ஒடு . . . . . என்ப - முற்கூறிய வேற்றுமைச் சொற்களை ஐ ஒடு கு இன் அது கண் - என்று சொல்லப்படும் அவ்வாறு உருபும் என்று சொல்வர் ஆசிரியர் எ-று.

மேல் சொல்லதிகாரத்து எழுவாயையும் விளியையும் கூட்டி வேற்றுமை எட்டு என்பாரால் எனின், ஐ முதலிய வேற்றுமை ஆறும் தொக்கும் விரிந்தும் பெரும்பான்மையும் புலப்பட்டு நின்று, பெயர்ப் பொருளைச் செயப்படுபொருள் முதலியனவாக வேறுபாடு செய்து புணர்ச்சி எய்துவிக்கும் என்றற்கு ஈண்டு ஆறு என்றார். ஆண்டு, எழுவாயும் விளியும் செயப்படுபொருள் முதலியவற்றினின்று தம்மை வேறுபடுத்துப் பொருள் மாத்திரம் உணர்த்தி நின்றும்,

விளியாய் எதிர்முகம் ஆக்கி நின்றும் இங்ஙனம் சிறுபான்மையாய்ப் புலப்பட நில்லா(அ) வேறுபாடுடைய வேனும், அவையும் ஒருவாற்றான் வேற்றுமை ஆயின என்றற்கு எட்டு என்றார் என உணர்க. (11)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 113*

(அ) எழுவாய்க்கெனவும் விளிக்கெனவும் தம்மைப் புலப்படுத்தும் வேற்றுமையுருபுகள் இல; அன்றியும் இயல்புவிளி எழுவாய் வேற்றுமை போலவும் நிற்றலுடையது. இன்னவேறுபாடுகள் இவையுடையன என்றார்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 113.** ஐஒடு குஇன் அதுகண் என்னும்
அவ்ஆறு என்ப வேற்றுமை உருபே.

'ஒன்றென முடித்தல்' என்னும் உத்தியான், இவ்வுருபுகளின் பொருள்பட வரும் சொல்லுருபுகட்கும் இவ்வுருபுகட்கு ஓதும் இலக்கணம் எல்லாம் எய்தும் எனக் கொள்க. அவையாவன; 'இன் - ஆன்', மாறு, உளி, கொண்டு, பொருட்டு, நின்று, உடைய-முதலியவாய் எடுத்தோத்தானும் உடம்பொடு புணர்த்தலானும் ஆசிரியர் கூறுவனவும் பிறவும் ஆம்.

**இளம்பூரணம்**

***115. உருபியலை நோக்கியதொரு கருவி***

**வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு**
**ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும்.**

(இச்...எனின்) நான்காவதற்கும் ஏழாவதற்கும் உருபியல் நோக்கிற்றொரு கருவி உணர்...ற்று.

(இ-ள்.) வல்லெழுத்து முதலாக உடைய வேற்றுமையுருபிற்குப் பொருந்தின இடத்து வல்லொற்றாயினும் மெல்லொற்றாயினும் இடைக்கண் மிகுதல் வேண்டும் எ-று.

(உ-ம்.) ஊர்க்கு நீர்க்கு, ஊர்க்கண் நீர்க்கண்-என வல்லெழுத்து மிக்கன. தங்கண் எங்கண் - என மெல்லெழுத்து மிக்கன.

'ஒல்வழி' என்றதனான், அரசர்கண் பார்ப்பார்கண் - என ஒற்று மிகாதனவும் கொள்க.

மெய்பிறிதுஆதல் முதலிய நான்கு புணர்ச்சியும் உருபுபுணர்ச்சிக்கண்ணும் எய்துதலின் மெய்பிறிதுஆதலை எடுத்து ஓதாது மிக்கதனை எடுத்தோதிய அதனான், மிக்க புணர்ச்சி அல்லனவும் ஈண்டே கொள்க.

(உ-ம்.) பொற்கு பொற்கண், ஆங்கண் ஈங்கண் ஊங்கண்[1], அவற்கு இவற்கு உவற்கு, நுங்கண்[2] கொற்றற்கு சாத்தற்கு - என வரும்.

அவன்கண் சாத்தன்கண் என்புழி, இயல்பும் அதனான் கொள்க. குன்றிய புணர்ச்சி வந்தவழிக் கண்டுகொள்க. (12)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 115.**[1] ஆன் ஈன் என்னும் இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்கள் (334) படுத்தலோசையாற் பெயராயவழி நிலைமொழியாய் நின்று கண் உருபோடு இயைந்து ஆங்கண் ஈங்கண் - எனமுடிந்தன. நிலைமொழி னகரம் கெட உருபு முதல் வல்லெழுத்தின் இனமாகிய ஙகரம் மிக்கு முடிந்தவாறு. தன்னினம் முடித்தலான், ஊன் என்றும் இடைச்சொல்லும் கொள்ளப்பட்டு ஊன்கண் 'ஊங்கண்' என முடிக்கப்பெறும். அவ்விடத்து இவ்விடத்து உவ்விடத்து என இவை பொருள் படுவன. ஆனும் ஈனும் இடப்பொருள் உணர்த்துமாற்றை 'ஆன்வந் தியையும் வினைநிலை யானும்' (சொல். வினை.33)

'ஈனோர் வடிவிற் காண்டல் இல்லென' (சிலப். பதி.) என்பவற்றால் அறியலாம். ஊன் இடப்பொருள் உணர்த்தற்கு மேற்கோள் கிடைத்திலது.

தங்கண் எங்கண் என்னுமுடிபு புள்ளிமயங்கியல் 25ஆம் சூத்திரத்தால் பெறப்படுதலின் அவற்றை ஈண்டுக் காட்ட வேண்டா. தங்கண் போன்றதே நுங்கண் முடிபும் ஆதலின், அதனை விதப்பினாற் காட்டுதல் மிகையேயாம் - என மறுப்பர் **வெள்ளைவாரணனார்.**

**நச்சினார்க்கினியம்**

***114. உருபியலை நோக்கியதொரு கருவி***

**வல்லெழுத்து முதலிய . . . . . மிகுதல் வேண்டும்.**

இது நான்காவதற்கும் ஏழாவதற்கும் உருபியலை நோக்கியதொரு கருவி கூறுகின்றது.

இ-ள் : வல்லெழுத்து . . . . உருபிற்கு - வல்லெழுத்து அடியாய் நின்ற நான்காவதற்கும் ஏழாவதற்கும்; ஒல்வழி . . . . . வேண்டும் - பொருந்தியவழி வல்லொற்றாயினும் மெல்லொற்றாயினும் இடைக்கண் மிக்குப் புணர்தலை விரும்பும் ஆசிரியன் எ-று.

வரையாது 'ஒற்று' எனவே, வல்லொற்றும் மெல்லொற்றும் பெற்றாம்.

உ - ம் : மணிக்கு மணிக்கண் - தீக்கு தீக்கண் - மனைக்கு மனைக்கண் - எனவும், வேய்க்கு வேய்க்கண் - ஊர்க்கு ஊர்க்கண் - பூழ்க்கு பூழ்க்கண் எனவும், உயிர்ஈறு மூன்றினும் புள்ளிஈறு மூன்றினும் பெரும்பான்மை வல்லொற்று மிக்கு வரும். தங்கண் நங்கண் நுங்கண் எங்கண் - என மெல்லொற்று மிக்கது. இவற்றிற்கு நிலைமொழி மகரக்கேடு(1) உருபியலில் கூறுப.

இனி நான்கனுருபிற்கு மெல்லொற்று மிகாது என உணர்க.

இனி 'ஒல்வழி' என்பதனான், ஏழாம் உருபின்கண், நம்பிகண் என இகர ஈற்றின்கண்ணும்-நங்கைகண் என ஐகார ஈற்றின்கண்ணும் - தாய்கண் என யகரஈற்றின்கண்ணும் - அரசர்கண் என ரகரஈற்றின்கண்ணும் ஒற்றுமிகாமை கொள்க.

இனி மெய்பிறிதுஆதலை முன்னே கூறாது மிகுதலை முற்கூறிய அதனானே, பொற்கு பொற்கண், வேற்கு வேற்கண், வாட்கு வாட்கண் - எனத் திரிந்து முடிவனவும் கொள்க. இதனானே, அவன்கண் அவள்கண் - என உயர்திணைப் பெயர்க்கண் ஏழன் உருபு இயல்பாய் வருதலும் கொள்க. இவற்றிற்குக் குன்றிய புணர்ச்சி வருமேனும் கொள்க.

கொற்றிக்கு கொற்றிகண், கோதைக்கு கோதைகண் - என விரவுப்பெயர்க்கும் இதனானே கொள்க. (12)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 114***

*1. உருபியல் 16ஆம் சூத்திரத்தில் 'மெய்' என்ற மிகையால், 'யாம்' என்றதன்கண்அன்றிப் பிறவயின் மெய்யும் கெடுக்க எனக் கூறியமை காண்க.*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 115.*** **வல்லெழுத்து முதலிய....மிகுதல் வேண்டும்.**

*அது+கண் இது+கண் உது+கண் - என்னுமிவை ஆங்கண் ஈங்கண் ஊங்கண்-எனப்புணரும் என்று கொண்டு, உரைகாரர் இருவரையும் இவர் மறுக்கிறார். ஆன்கண் முதலாயவையே ஆங்கண் முதலாகப் புணரும் என்பதை இவர் அறிந்திலர் போலும். உரையாசிரியர் இக்கருத்தினரே ஆவர்.*

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 114.** வல்லெழுத்து முதலிய....மிகுதல் வேண்டும்.

உரைகாரர் இருவரும் காட்டிய உதாரணங்களுள், ஆங்கண் - ஈங்கண்- ஊங்கண்- என்பவற்றில் ஆன் - ஈன் - ஊன்- என்னும் பெயர்களில் ஈற்றெழுத்தாகிய னகரமெய் ஙகரமாகத் திரிந்திருத்தல் நன்கு அறியப்படும்....ஊன் என்னும் சுட்டுப்பெயர் தொல்காப்பியர் காலத்திலேயே வழக்கு இறந்தது எனத்தெரிகிறது. ஆயினும், ஊங்கண் என்பது வழங்கிவந்துள்ளது.

நச்சினார்க்கினியர் ஆங்கண் ஈங்கண் ஊங்கண் என்பன, அ இ உ என்னும் சுட்டுக்கள் நீண்டு மெல்லெழுத்துத் தோன்றப் பெற்றவை என்றுகொண்டார். சுட்டுக்களோடு கண்உருபு சேருதல் முறையன்று ஆகலானும், ஆன் ஈன் என்னும் சுட்டுப்பெயர்களோடு கண்உருபு சேர்தலே இயல்பும் வழக்கும் ஆகலானும் அவர் கூற்றுப் பொருந்துவது அன்று. இளம்பூரணர் உரையே பொருத்தமுடையது.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 114.** வல்லெழுத்து முதலிய....மிகுதல் வேண்டும்.

உருபுகள் இடைச்சொற்கள் ஆதலின், அகத்தோத்தினுள் வைத்துப் புணர்ச்சிவிதி கூறற்கு ஏலாமையின், ஈண்டு ஓதினார். சாரியைப் புணர்ச்சி வேறுபாடுகளை ஈண்டுக் கூறற்கும் அதுவே காரணம் என்க.

**இளம்பூரணம்**

***116. தொகைமரபினை நோக்கியதொரு கருவி***

**ஆறன் உருபின் அகரக் கிளவி**

**ஈறுஆகு அகர(ம்)முனைக் கெடுதல் வேண்டும்.**

*(இச்....எனின்)* ஆறாவதற்குத் தொகைமரபினை நோக்கியதொரு கருவி உணர்...ற்று.

*(இ-ள்.)* ஆறாம் வேற்றுமையாகிய அது என்னும் சொல்லிடத்து அகரம் ஆகிய எழுத்து, நெடுமுதல் குறுகும் மொழிஈற்றின் உளதாகின்ற அகரத்தின் முன்னர்த் தான் கெடுதல் வேண்டும் எ-று.

*(உ-ம்.)* தமது நமது எமது, தனது எனது நினது - என வரும்.

என வருதலின், ஈற்று அகரம்[1] இதற்குத் தாராது, இவ்வுருபு அகரம் ஏறி முடிய அமைதலின், அது கேடாதல் வேண்டா எனின், நெடுமுதல் குறுகி விகாரப்பட்டு நின்ற மொழி ஆதலின் அதன்மேல் உருபுஅகரம் ஏறி முடியல் வேண்டானாயினான் போலும். *(13)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு:**

***சூ. 116.*** இச்சூத்திரத்தினைப் பேராசிரியர் 'எதிரது போற்றல்' என்னும் உத்தியின்பாற் படுப்பர். ''வருகின்ற சூத்திரப்பொருண்மைக்கு ஏற்ப வேறொரு பொருள் முற்கூறுதல் இவ்வுத்தியாம்.

**ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்' (162)**

என வருகின்றதனை நோக்கி,

**'ஆறன் உருபின்...கெடுதல் வேண்டும்' (116)**

என்று கூறுதல் போல்வது இது.'' *(பொ.665 பேரா.)*

1. ஈற்று அகரம் என்றது, 162 ஆம் சூத்திரத்தால் நெடுமுதல் குறுகும் மொழிகளாகிய தாம் நாம் யாம் தான் யான் நீ என்பன தம் நம் எம் தன் என் நின் - என நின்றவற்றின் இறுதியில் வந்து இயையும் அகரத்தை.

**நச்சினார்க்கினியம்**

## *115. தொகைமரபினை நோக்கியதொரு கருவி*

**ஆறன் உருபின் . . . . . . கெடுதல் வேண்டும்.**

இஃது ஆறாவதற்குத் தொகைமரபை நோக்கியதொரு கருவி கூறுகின்றது.

இ-ள் : ஆறன் . . . . . . கிளவி - அது என்னும் ஆறன் உருபின்கண் நின்ற அகரம் ஆகிய எழுத்து; ஈறு ஆகு . . . . . . . வேண்டும். நெடுமுதல் குறுகும் மொழிகட்கு 'ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்' (161) என விதித்ததனான் உளதாகிய அகரத்தின் முன்னார்த் தான் கெடுதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

வருமாறு : தமது நமது எமது நுமது (162), தனது எனது நினது-என வரும். இது நிலைமொழிக்கு ஓர் அகரம் பெறும் என விதியாது, உருபு அகரம் ஏறிமுடியும் என விதித்தால் வரும் குற்றம் உண்டோ எனின், (1) 'நினவ கூறுவல் எனவ கேண்மதி' (புறநா. 35) என்றாற்போல ஆறாவதற்குரிய அகரஉருபின் முன்னரும் ஓர்அகரப்பேறு நிலைமொழிக்கண் வருதல் உளதாகக் கருதினார் ஆதலின், ஆறன் உருபிற்கும் நான்கன் உருபிற்கும் பொதுவாக நிலைமொழிக்கண் அகரப்பேறு விதித்து, அது என்னும் ஒருமையுருபு வந்தால், ஆண்டுப் பெற்று நின்ற அகரத்தின் முன்னர் அது என்பதன்கண் அகரம் கெடுக என்று ஈண்டுக் கூறினார் ஆதலின், அதற்குக் குற்றம் உண்டு என்று உணர்க. (13)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

## *சூத்திரம் 115*

*1.* 'எனவ' என்புழி, என் என்பது அகரவுருபு வருங்கால், இடையில் ஓர் அகரம் பெற்று 'என' என்று நின்று, பின்

அகரவுருபொடு புணர்ந்து 'எனவ' என நிற்கும். அதுபற்றியே 'ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்' (161) என்றார்.

**வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*சூ. 115.* **ஆறன் உருபின் அகரக் கிளவி**
**ஈறுஆகு அகரமுனைக் கெடுதல் வேண்டும்.**

தாம் - நாம் - யாம் - என்னும் சொற்கள், முன்னர்

**'தாம்நாம் என்னும் மகர இறுதியும்' (உருபி.16)**

என்னும் சூத்திரவிதியினால் தம் - நம் - எம் - என்றும், தான் - யான் - என்னும் சொற்கள்,

**'தான் யான் என்னும் ஆயீர் இறுதியும்'** *(ஷ 20)*

என்னும் சூத்திரவிதியினால் தன் - என் - என்றும் ஆகி,

**'ஈறுஆகு புள்ளி அகரமொடு நிலையும்**
**நெடுமுதல் குறுகும் மொழிமுன் னான'** *(தொகை.19)*

என்னும் சூத்திரத்தின்படி, நம - நம - எம- தன - என - என்று நிற்க, அவற்றின்முன் வரும் 'அது' என்னும் ஆறன் உருபின் அகரம் இச்சூத்திரத்தால் கெட்டுத் தமது - நமது - எமது - தனது - எனது - என்று வழங்கும். இவ்வாறு ஆசிரியர்கூறிய விதியின் மரபினை ஆராய்ந்தறியாது, இச்சொற்கள் ஓர் அகரம் பெறும் என்று விதித்தலும், பின்னர் ஆறன்உருபின் அகரம் கெடும் என்று விதித்தலும் வேண்டா என்று கருதி, நன்னூலார் இவ்விதி கூறாதே விடுத்தார். ஆதலின், தொல்காப்பியம் பயிலாது, நன்னூல் ஒன்றினையே கற்றார், தன்+அது=தனது, தம்+அது= தமது-என்று ஆயின என்பர். அவ்வாறாயின், (தன்னது, தம்மது - என) இரட்டிக்கும் என்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

*சூ. 115.* **ஆறன் உருபின்....கெடுதல் வேண்டும்.**

'நினவ கூறுவல் எனவ கேண்மதி' என்பதனை எடுத்துக்காட்டி நச்சினார்க்கினியர் கூறும் அமைதி பொருந்துமாறில்லை, அவை குறிப்புவினை முற்று விகுதியாதல் அன்றி உருபு ஆகாமையின் என்க.

[நினவ - நினக்குச் சொல்லுதற்கு உரிமையுடைய (வாய சொற்கள்); எனவ - என்னுடைய (வாய சொற்கள்).ஆறன் உருபாகிய அகரம் 'நின்' என்பதனொடு புணர்வழி 'நின' என முடியாது 'நினவ' என முடிந்தது. ஆண்டு நின் +அ என்று ஓர் எழுத்துப்பேறு நிகழ (161) நின + அ உடம்படுமெய் பெற்று 'நினவ' என முடிந்தது. இவ்வுரைகாரர் குறிப்பிடுமாறு அகரம் இறுதிக்கண் நின்றது குறிப்புவினை முற்றுவிகுதியாதல் இன்று. இடையே தோன்றிய அகரம் நச்சினார்க்கினியர் கூறியாங்கு எழுத்துப்பேறு எனக்கொள்வதில் இடர்ப்பாடு இல்லை.]

### இளம்பூரணம்

## *117. வேற்றுமையுருபு நிற்கும் இடன்*

**வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.**

*(இச்....எனின்)* வேற்றுமையுருபு பெயர்க்கண் நிற்குமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* வேற்றுமைகள் பெயரின் பின்னிடத்தன, அவற்றொடு புணரும் நிலைமைக்கண் எ-று.

*(உ-ம்.)* சாத்தனை, சாத்தனொடு - என வரும்.

மேல் 'உருபுநிலை திரியாது ஈறுபெயர்க்கு ஆகும்' (சொல். வேற்.8) என்கின்றானன்றே எனின், பெயரொடு பெயர் முதலிய நால்வகைப் புணர்ச்சியினையும் வேற்றுமை அல்வழி என இரண்டாக அடக்கலின், வினைவழியும் உருபு வரும் என்பதுபட நின்றது ஆதலின்[1], ஈண்டு இது கூறப்பட்டது. *(14)*

இளம்பூரணம் உரைக்குறிப்பு

*சூ. 117.* இச்சூத்திரத்திற்கு, முதற்சூத்திரவிருத்தியில் சிவஞானமுனிவர் உரைக்கும் பொருள் வருமாறு: ''நால்வகைச் சொற்களும் இருவழியும் புணருமென மேல் எய்தியதனை ஒருமருங்கு மறுத்துப் 'பெயர்ச்சொல் புணரும் நிலையே வேற்றுமை வழியாம்' என்பது பொருள் எனக் கொள்க. ஏகாரம் பிரிநிலை என்க. எனவே, ஏனை வினைச்சொல் முதலிய மூன்றும் அல்வழி ஆவன அன்றி வேற்றுமைவழிய ஆகா எனவும், பெயர்ச்சொற்கள் இருவழியும் ஆம் எனவும் கூறியவாறாயிற்று.''

நச்சினார்க்கினியம்

## *116. வேற்றுமையுருபு நிற்கும் இடன்*

**வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.**

இது வேற்றுமை பெயர்க்கண் நிற்குமாறு கூறுகின்றது.

இ-ள் : வெற்றுமை பெயர்வழிய - வேற்றுமைகள் பெயரின் பின்னிடத்தனவாம்; புணர்நிலை - அவற்றொடு புணரும் நிலைமைக்கண் எ-று.

உ - ம் : சாத்தனை சாத்தனொடு சாத்தற்கு சாத்தனின் சாத்தனது சாத்தன்கண் - என வரும். (1) மற்று இது 'கூறிய முறையின்' (சொல். 70) என்னும் வேற்றுமைஓத்தின் சூத்திரத்தால் பெறுதும் எனின், பெயரொடு பெயரைப் புணர்த்தல் முதலிய நால்வகைப் புணர்ச்சியினையும் வேற்றுமை அல்வழி என இரண்டாக அடக்குதலின் தொழில்பின்னும் உருபு வரும் என எய்தியதனை விலக்குதற்கு ஈண்டுக் கூறினார் என்க. ஆயின் இவ்விலக்குதல் வினையியல் முதல் சூத்திரத்தால் பெறுதும் எனின், அது முதனிலையைக் கூறிற்று என்பது ஆண்டு உணர்க. *(14)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 116*

1. இலக்கணம் கூறும்வழிக் கூறாதொழியின் ஐயம் வருமென்று 'வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது' (சொல். 198 சே.) என்று வினையியலில் கூறினார்; உய்த்துணர்ந்து இடர்ப்படாமலிருக்க ஈண்டுக் கூறினார் என்றலே பொருந்துவது.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 117.** **வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.**

(இ-ள்.) வேற்றுமை குறித்த புணர்நிலையின்கண் பெயர்கள் வேற்றுமையுருபு ஏற்ற பெயரின் பின்னர் வரும்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 116.** **வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.**

(இ-ள்.) அதிகாரத்தான் நின்ற ஆறன்உருபு வேற்றுமையாக நிற்பது, அதன் வழியவாகப் பெயர்ச் சொற்கள் புணரும் நிலைமைக்கண்ணேயே ஆம்.

இந்நூற்பாவிற்கு உரையாசிரியன்மார் கண்ட உரை இவ்வியலோடு இயையாமையையும், கூறியது கூறல் என்னும் குற்றப்படுதலையும் காண்க.

['கூறிய முறையின் உருபுநிலை திரியாது, ஈறுபெயர்க்கு ஆகும் இயற்கைய என்ப' (சொல். 70 ந.) என்பதனான் பெறப்படுவதனை உரையாசிரியன்மார் இச்சூத்திரத்துக்குப் பொருளாகக் கூறுதல் கூறியது கூறல் எனும் குற்றப்படுதலாகக் குறிப்பிடும் இவ்வுரைகாரர், ஆறனுருபைத் தொடர்ந்து வரக்கடவது பெயர்ச்சொல்லே என்பது 'இதனது இது' (சொல். 80 ந) என்னும் வாய்பாட்டான்

பெறப்படுதலின் அதுவும் கூறியது கூறல் எனும் குற்றப்பாற்படுதலை நோக்கிற்றிலர். சொல்லதிகாரச் சூத்திரச் செய்தி சேய்மைத்து ஆகலின் உருபு பெயர்வழி வருதலை ஈண்டே கூறியமை ஏற்புடைத்தாதல் காண்க.]

**இளம்பூரணம்**

### 118. உருபேற்கும் பெயரது இருவகை

**உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயர்என்று**
**ஆயிரண்டு என்ப பெயர்நிலைச் சுட்டே.**

*(இச்.....எனின்)* வேற்றுமையொடு புணரும் பெயர்கட்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்....ற்று.

*(இ-ள்.)* உயர்திணைப் பெயரும் அஃறிணைப் பெயரும் ஆகிய அவ்விரண்டும் என்று சொல்லுப, பெயராகிய நிலைமைக் கருத்தினை எ-று.

*(உ-ம்.)* ஆடூஉ, மகடூஉ - என்பன உயர்திணைப் பெயர்; ஒன்று, பல என்பன அஃறிணைப்பெயர்.

மற்று விரவுப்பெயர் கூறானாவது என்னையெனின், மற்று அது சாத்தன் வந்தான், வந்தது - எனப் புணர்ச்சிக்கண் பெரும்பான்மையும் ஒரு திணைப்பாற்படுதலின், இவ்வாறு இரண்டாக அடக்கிக் கூறினான் என்பது. (15)

**நச்சினார்க்கினியம்**

### 117. உருபேற்கும் பெயரது இருவகை

**உயர்திணைப் பெயரே . . . . . பெயர்நிலைச் சுட்டே.**

இது முற்கூறிய பெயர்கட்குப் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

இ-ள் : சுட்டுநிலைப் பெயர் - பொருளை ஒருவர் கருதுதற்குக் காரணமான பெயர்களை; உயர்திணைப் . . . . . என்ப - உயர்திணைப் பொருளை ஒருவன் கருதுதற்குக்

காரணமான பெயரும், அஃறிணைப் பொருளை ஒருவன் கருதுதற்குக் காரணமான பெயரும் என்னும் அவ்விரண்டு என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

பெயரியலுள் 'அவன் இவன் உவன்' என்பது முதலாக உயர்திணைப் பெயரும் 'அது இது உது' என்பது முதலாக அஃறிணைப் பெயரும் ஆமாறு அவற்றிற்கு இலக்கணம் கூறுகின்றார், ஈண்டுக் குறியிட்டு ஆளுதல் மாத்திரையே கூறினார் என்று உணர்க. இனிக் கொற்றன் கொற்றி என்றாற்போலும் விரவுப்பெயரும், கொற்றன் குறியன் - கொற்றி குறியள்; கொற்றன் குளம்பு - கொற்றி குறிது - எனப் பின்வருவனவற்றான் திணை தெரிதலின், இருதிணைப் பெயரின்கண் அடங்கும். கொற்றன் செவி - கொற்றி செவி - என்பனவும் பின்னர் வருகின்ற வினைகளால் *(1)* திணை விளங்கி அடங்குமாறு உணர்க. இனி 'அஃறிணை விரவுப் பெயர் இயல்புமார் உளவே' *(155)* என்றாற்போலப் பிறாண்டும் ஓதுதல் பற்றி 'நிலை' என்றதனான் விரவுப்பெயர் கோடலும் ஒன்று. *(15)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 117***

1. கொற்றன் செவி நல்லன் என்புழி உயர்திணை என்பதும், கொற்றன் செவி நீண்டது என்புழி அஃறிணை என்பதும் விளங்கும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 117. உயர்திணைப் பெயரே.......பெயர்நிலைச் சுட்டே.**

இச்சூத்திரத்தை அடுத்து ,'வினையும் குறிப்பும் என்று ஆயிரு திணையின், அனைமர பினவே வினைநிலைச்

சுட்டே' என்றாற் போல்வதொரு நூற்பா அமைந்திருத்தல் வேண்டும். அது காணாமையின், '**தன்னினம் முடித்தல்**' என்பதனான் தொழிற்சொல்லாகிய வினைச்சொல்லும் உயர்திணைவினையே அஃறிணைவினையே என்று அங்ஙனம் இருவகைப்படும் என்று கொள்க.

**இளம்பூரணம்**

### *119. சாரியை வரும் இடன்*

**அவற்றுவழி மருங்கின் சாரியை வருமே.**

*(இச்....எனின்) சாரியை வரும் இடம் கூறுதல் நுதலிற்று.*

*(இ-ள்.) பெயர்களின் பின்னாகிய இடத்தின்கண்ணே சாரியை வரும் எ-று.*

*(உ-ம்.) ஆடூஉவின்கை, மகடூஉவின்கை; பலவற்றுக் கோடு- என வரும். (16)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 119.*** *''சாரியையாவது சொல் தொடர்ந்து செல்லும் நெறிக்கண் நின்று, அதற்குப் பற்றுக்கோடாகச் சிறிது பொருள்பயந்தும் பயவாததுமாய் நிற்பது'' என்றார் அடியார்க்கு நல்லார். (சிலப்.பதி.61)*

*எல்லாப் புணர்ச்சிக்கும் பொதுவாய்ப் பெரும்பாலும் இன்னொலியே பயனாகச் சாரியை வருவதாக மயிலைநாதர் குறித்தார். (நன். 132)*

*சிறுபான்மை பொருள்நிலைக்கு உதவுவதனையும் சாரியையின் இலக்கணமாக இலக்கணவிளக்கம் சுட்டுகிறது (பதவி.5)*

*நேமிநாதத்தில் சாரியை 'இடைச்சொல்' என்றே வழங்கப்படுகிறது. (எழுத்.22)*

*இவை அடிகளாசிரியர் உரைக்குறிப்பு.*

**நச்சினார்க்கினியம்**

## *118. சாரியை வரும் இடன்*

**அவற்றுவழி மருங்கின் சாரியை வருமே.**

இது சாரியை வரும் இடம் கூறுகின்றது.

*இ-ள் : அவற்றுவழி (1) .... வரும் - அச்சொல்லப்பட்ட இருவகைப் பெயர்களின் பின்னாகிய இடத்தே சாரியைச் சொற்கள் வரும் எ-று.*

*உ-ம் : ஆடூஉவின்கை, மகடூஉவின்கை, பலவற்றுக் கோடு - எனப் 'புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்கு' உதவாது (அ) வந்தன. சாரியை என்றதன் பொருள், வேறாகி நின்ற இருமொழியும் தம்மில் சார்தல்பொருட்டு இயைந்து நின்றது என்றவாறு. (16)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 118*

*1. பெயர்கூறி அவற்றுவழி மருங்கின் சாரியை வருமே என்று கூறவே, முன் பெயர்வழி வேற்றுமை வரும் என்றாரேனும், சாரியை வருங்கால் சாரியைக்குப் பின்னரேயே வேற்றுமையுருபு வரும் என்பது இச்சூத்திரத்து 'அவற்றுவழி' என்பதனால் பெறப்பட்டது.*

*(அ) எல்லாநம்மையும் எல்லாவற்றையும் என்புழி, நம்-வற்று-என வந்த சாரியை 'எல்லாம்' என்பதனை முறையே உயர்திணைப் பொருட்டாகவும் அஃறிணைப் பொருட்டாகவும் கொள்ள உபகாரப்பட்டவாறு போல, ஈண்டு வந்த இன்னும் வற்றும் நிலைமொழியது பொருளைப் பாகுபடுத்தியுணர உபகாரப்பட்டில என்பது பொருள். ஆடூஉ-*

மகடூஉ என்பன உயர்திணை ஆண்பாலையும் பெண் பாலையும் உணரவே நின்றன. 'பல' வும் அஃறிணைப் பன்மைப் பெயராகவே நின்றது. பலா-பலவு-என வரும் முடிவு செய்யுட்கண்ணது ஆதலானும் 'பலவின்' என்புழிப் 'பலவு' என்பதே சொல்லாதலானும் 'பல' பலா மரத்தைக் குறியாது அஃறிணைப் பன்மைப் பெயரே யாதல் துணியப்படும்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 118. அவற்றுவழி மருங்கின் சாரியை வருமே.**

*(இ-ள்.) மேற்கூறிய பெயர் வினைகளின் பின்னாகவும் உடனாகவும் சாரியை வரும்.*

*'வழிமருங்கு' என்றது உம்மைத்தொகை. 'ஏற்புழிக்கோடல்' என்பதனான், பின்வருதல் பெயர்க்கும் உடன்வருதல் வினைக்கும் மிக்குரிமையாகும் என அறிக.*

*[புணர்ச்சி என்றது, இடையில் வரும் சாரியைகளையும் நிலைமொழி ஈற்றில் தோன்றும் எழுத்துப்பேறுகளையுமே பற்றியது ஆகலின், ஈற்றுநின்று இயலும் சாரியை பற்றி ஈண்டுக் குறிப்பிடவேண்டும் இயைபு இன்று. அடுத்து வரும் சூத்திரத்தே (119) இவரும் இதனை உடன்படுகின்றார்.]*

**இளம்பூரணம்**

***120. சாரியைமொழிகள் ஆவன***

**அவைதாம்**
**இன்னே வற்றே அத்தே அம்மே**
**ஒன்னே ஆனே அக்கே இக்கே**
**அன்-என் கிளவி உளப்படப் பிறவும்**
**அன்ன என்ப சாரியை மொழியே[1].**

*(இச்....எனின்) அச்சாரியைகட்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்....ற்று.*

*(இ-ள்.) மேல் சாரியை எனப்பட்டவைதாம், இன்னும் வற்றும் அத்தும் அம்மும் ஒன்னும் ஆனும் அக்கும் இக்கும் அன் என்னும் சொல்லும் ஆகிய அவ்வொன்பதும் உளப்படப் பிறவும் அச்சாரியையாம் தன்மைய என்று சொல்லுவர், சாரியையாகிய மொழிகளை எ-று.*

*பிறவும் என்றதனான், தம் நம் நும் உம் கெழு ஏ ஐ ஞான்று[2] -என்பன கொள்க.*

*'எடுத்த நறவின் குலையலங் காந்தள்' (கலி.40) என்புழி அலம் என்பதொரு சாரியையும் உண்டால் எனின், அதனை 'அலங்கு காந்தள்' என்பதன் விகாரம் என்ப.*

*இன்சாரியை வழக்குப் பயிற்சியானும், நூலுள் பலகாலும் எடுத்து ஓதப்படலானும், வாளா ஓதியவழித் தானே சேறலானும் முன் வைக்கப்பட்டது. அன்சாரியையும் அதுபோலச் சிறப்புடைமையின் பின் வைக்கப்பட்டது. இடைநின்றவற்று இயல்பும் அறிந்துகொள்க.* (17)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.120.*** *1. சாரியை மொழியாம் அவைதாம் இன் முதலாக அன்-என்கிளவி உளப்படப் பிறவும் ஆம்; அவை அன்ன என்ப - என்று மொழிமாற்றிப் பொருள் செய்க. சூத்திரப்பொருள் நேர் பொழிப்புரையாகச் செல்லுதலின் வாக்கிய முடிபு பிழைபட்டதாகத் தோன்றுகிறது.*

*2. 'தம்' முதலான சாரியைகள் கீழ்க்காணும் எண்ணிட்ட நூற்பாக்களில் முறையே இடம் பெற்றுள்ளன: தம் - 192, 32[illegible]; நம் - 191; நும் - 192, 321; உம் - 481; கெழு - 48[illegible]; ஏ - 165, 432; ஐ - 52, 406.*

## நச்சினார்க்கினியம்

### 119. சாரியை மொழிகள் ஆவன

அவைதாம்,
இன்னே வற்றே . . . . . . . சாரியை மொழியே.

இஃது அச்சாரியைகட்குப் பெயரும் முறையும் உணர்த்துகின்றது.

இ-ள் : அவைதாம் - முன்னர்ச் சாரியை எனப்பட்ட அவைதாம்; இன்னே . . . . உளப்பட அன்ன என்ப - இன்னும் வற்றும் அத்தும் அம்மும் ஒன்னும் ஆனும் அக்கும் இக்கும் அன் என்னும் சொல்லொடுகூட ஒன்பது ஆகிய அத்தன்மையுடையனவும்; பிறவும் சாரியை மொழி என்ப - அவை ஒழிந்தனவும் சாரியைச் சொல்லாம் என்பர் ஆசிரியர் எ-று.

பிறஆவன, தம் நம் நும் உம் ஞான்று கெழு ஏ ஐ - என்பனவாம்.

வருமாறு : இவற்றுள் ஞான்று ஒழிந்தன எடுத்து ஓதுவர் ஆசிரியர் (1) 'எடுத்த நறவின் குலையலங் காந்தள்' (என்புழி) அலங்(கு)காந்தள் : வினைத்தொகை; அம் : சாரியை அன்று. இன்சாரியை வழக்குப் பயிற்சியும், பலகால் எடுத்தோதப்படுதலும், (2) பொதுவகையான் ஓதியவழித் தானே சேறலும், ஆகிய சிறப்பு நோக்கி முன்வைத்தார்; வற்றும் அத்தும் இன்போல முதல் திரியும் (அ) ஆகலானும், செய்கை ஒப்புமையானும் அதன்பின் வைத்தார்; அம் ஈறு திரியும் ஆதலின் திரிபு பற்றி அதன்பின் வைத்தார்; ஒன் ஈறு திரியுமேனும் வழக்குப் பயிற்சி இன்றி நான்காம் உருபின்கண் திரிதலின் அதன்பின் வைத்தார்; ஆன் பொருட்புணர்ச்சிக்கும் உருபுபுணர்ச்சிக்கும் வரும் என்று அதன்பின் வைத்தார்; அக்கு ஈறு திரியுமேனும் உருபு புணர்ச்சிக்கண் வாராமையின் அதன்பின் வைத்தார்; இக்கு முதல் திரியுமேனும் சிறுபான்மை பற்றி அதன்பின் வைத்தார்; 'அன்' இன் போலச் சிறத்தலின் பின்வைத்தார்.

ஆன் உருபிற்கும் ஆன்சாரியைக்கும், இன்உருபிற்கும் இன்சாரியைக்கும் வேற்றுமையாதெனின், அவை சாரியையான இடத்து யாதானும் ஓர் உருபேற்று முடியும்; உருபாயின இடத்து வேறோர் உருபினை ஏலா என்றுணர்க. இனி மகத்துக்கை என்புழித் தகர ஒற்றும் தகரஉகரமும் வரும் என்று கோடும் எனின், இருளத்துக் கொண்டான் என்றால் அத்து எனவே வேண்டுதலின், ஆண்டும் அத்து நின்றே கெட்டது என்று கோடும். அக்கு இக்கு - என்பனவும் பிரித்துக் கூட்டக் கிடக்கும். தாழக்கோல் என அக்குப் பெற்று நிற்றலானும், ஆடிக்கு என்புழிக் குகரம் நான்கன் உருபு ஆகாமையானும் இவை சாரியை ஆமாறு உணர்க. (ஆ) (17)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 119

1. 'குலையலங்காந்தள்' என்புழி, 'அலங்குகாந்தள்' என்னும் வினைத்தொகை விகாரப்பட்டு நின்றதாகலின், 'அம்' சாரியை என்று கொள்ளற்க என்றார்.

2. இச்சொல் இச்சாரியை பெறும் என்று சிறப்புவகையான் விதியாது பொதுவாகச் சாரியைப்பேறு கூறியவிடத்து இன்சாரியை தானே சென்று இயைதலுடைமையாம் சிறப்பிற்று என்பது.

(அ) யாண்டும் அக்குச்சாரியையினது இறுதி உயிர்மெய் மிசைநின்ற ககர மெய்யொடும் கெடும் (128) ஆதலின், அஃது அகரமாகவே நிற்கும். **தாழ்+கோல் > தாழ்+அக்கு+கோல் > தாழ்+அ+கோல்=தாழக்கோல்.** என முடிந்தது. ககரம் வருமொழி வல்லெழுத்துப் பற்றிவந்த இயைபு வல்லெழுத்து.

(ஆ) ஆடி + கொண்டான் > ஆடி + இக்கு + கொண்டான்> ஆடி + க்கு + கொண்டான் (248, 126) = ஆடிக்குக் கொண்டான். மிகுந்த ககரம் இயைபு வல்லெழுத்து.

கொடைப் பொருட்டு அன்மையின் குகரம் நான்கன் உருபன்று. ஆடிக்கண் கொண்டான் என இடப் பொருட்டாதல் அறியப்படும்.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

சூ. 119. அவைதாம், இன்னே வற்றே அத்தே அம்மே

.......................................

அன்ன என்ப சாரியை மொழியே.

நன்னூலார் இச்சாரியைகளுள் சிலவற்றை மாற்றியும், சிலவற்றை நீக்கியும், சிலவற்றைக் கூட்டியும் வழங்கியுள்ளார்; வற்றுச்சாரியையினை அற்றுச்சாரியை என்றும், அக்குச்சாரியையினை அ(கர)ச் சாரியை என்றும், இக்குச் சாரியையினைக் கு(கர)ச் சாரியை என்றும் கூறினார்; ஒன் சாரியையை ஒழித்தார்; இற்றுச்சாரியை ஒன்று இயல்பானதாகக் கொண்டார்; அல் சாரியையைப் புதிதாகக் கொண்டார்.

வற்றுச்சாரியையின் வகரம் சிலவிடங்களில் கெடுதலானும், கெடாது நிற்குமிடத்தும் வகரம் உடம்படுமெய்யாய் வந்தது எனின் அமையும் ஆகலானும், ஏனைச்சாரியைகள் எட்டும் உயிர்முதல் மொழிகளாய் இருத்தலானும், இதனையும் நன்னூலார் கூறியவாறு 'அற்று' என்று கூறுதல் அமைவுடையதாகும் என்று தோன்றுகிறது.

சாரியைமொழிகள் எல்லாம் முற்காலத்தில் பொருளுடையனவே. இஃது ஆசிரியர் 'சாரியை மொழியே' என்பதனானும், சேனாவரையர் ''அல்லனவும் தாம் சார்ந்துவரும் மொழிப்பொருட்கு உபகாரம் உடையவாய் வருமாறு ஓர்ந்து கொள்ளப்படும்; அல்லாக்கால், சாரியை மொழி ஆகா என்பது'' (சொல்.250) என்று எழுதியிருத்தலானும் அறியப்படும்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.119.** **அவைதாம்,**

**இன்னே வற்றை அத்தே அம்மே**

**...........**

**அன்ன என்ப சாரியை மொழியே.**

*அன்ன பிறவாக வருவன: அ உ ஈ ஏ ஐ தம் நும் கு ன் - முதலியனவாம்.*

*ன்: ஆன்கோடு மான்கோடு - என வரும். [ஆவின் கோடு என்புழி வரும் இன்சாரியையது முதல் கெட்ட நிலையே ஆன்கோடு என்பது ஆகலின் னகரப்புள்ளியை இவர் சாரியையாகக் கொண்டமை ஏலாது.]*

*சாரியை என்பது, இயைதல் சார்தல் என்பவற்றின் முதனிலைகள் மாறித்தொக்க இலக்கணக் குறியீட்டுச் சொல்.*

**இளம்பூரணம்**

## *121. 'இன்' முதல் திரிதல்*

**அவற்றுள்**
**இன்னின் இகரம் ஆவின் இறுதி**
**முன்னர்க் கெடுதல் உரித்தும் ஆகும்.**

*(இச்...எனின்) அவற்றுள் இன்சாரியை முதல் திரியுமாறு உணர்....ற்று.*

*(இ-ள்.) மேற்கூறப்பட்ட சாரியைகளுள் இன்சாரியையினது இகரம் ஆ என்னும் சொல் ஈற்று முன்னர்க் கெடாமையே அன்றிக் கெடுதலும் உரித்தாம்.*

*(வருமாறு) ஆவினை ஆனை; ஆவின்கோடு ஆன்கோடு - என வரும்.*

*'முன்னர்' என்றதனான், மா என்னும் சொற்கண்ணும் இவ்விருவிதியும் எய்தும். மாவினை மானை; மாவின்கோடு மான்கோடு - என வரும்.* *(18)*

## நச்சினார்க்கினியம்

### 120. இன் முதல் திரிதல்

**அவற்றுள்,**

**இன்னின் இகரம் . . . . . உரித்தும் ஆகும்.**

இது முற்கூறியவற்றுள் இன்சாரியை முதல் திரியுமாறு கூறுகின்றது.

இ-ள்: அவற்றுள் - முற்கூறிய சாரியைகளுள்; இன்னின் . . . . . ஆகும் - இன்சாரியையது இகரம், ஆ என்னும் ஓரெழுத்தொருமொழி முன்னர்க் கெட்டு முடியவும் பெறும் எ-று.

'உரித்தும் ஆகும்' என்றதனான் கெடாது முடியவும் பெறும் என்றவாறு.

உ-ம்: ஆனை ஆவினை, ஆனொடு ஆவினொடு, ஆற்கு ஆவிற்கு, ஆனின் ஆவினின், ஆனது ஆவினது, ஆன்கண் ஆவின்கண் - எனவரும்.

(1) இனி 'முன்னர்' என்றதனானே, மாவிற்கும் இவ்வாறே கொள்க. மானை மாவினை, மானொடு மாவினொடு, மாற்கு மாவிற்கு - என ஒட்டுக.

இனி ஆன்கோடு ஆவின்கோடு, மான்கோடு மாவின்கோடு - என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றுழியும் கொள்க. (18)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 120

1. ஆகார ஈறாயின் மாவும் கொள்ளப்படும். இங்கே ஆஈறு என்று ஆவினையே கூறினமையின், மா இலேசினான் கொள்ளப்பட்டது. இதனை ஒப்பக்கூறல் என்னும் உத்தியான் ஆவும் மாவும் என்பர் பேராசிரியர். ஆன் என்பதில் னகரம் சாரியை என்பர் நன்னூலார்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.120. இன்னின் இகரம்....உரித்தும் ஆகும்.**

நிலைமொழி ஈற்றுநெடிலுக்கு முன் குறில்முதல் மொழிகள் வருமிடத்துப் புணர்ச்சிக்கண் அக்குறில் கெடுதலும் உளதாகலின், ஆ முன் வந்த இன் சாரியையின் இகரம் கெட்டது. நீ + இர் = நீயிர், நீர்; மூ + உழக்கு = மூவுழக்கு, மூழக்கு; போ +இன் + ஆன் = போயினான், போனான் எனப் பிற நெட்டெழுத்துக்குமுன் வந்த குற்றெழுத்துக்கள் இவ்வாறே கெட்டும் கெடாமலும் வந்துள்ளன காண்க.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.120. அவற்றுள்,**
**இன்னின் இகரம்.....உரித்தும் ஆகும்.**

(இ-ள்:) மேற்கூறிய சாரியைகளுள் இன் என்னும் சாரியைமொழியில் உள்ள இகரம் ஆகாரஈற்றுச் சொல்லின்முன் கெடுதற்கும் உரியதாகும். உம்மையான், கெடாதும் நிற்கும் என்றவாறு.

இனி, 'இன்னின் இகரம் மாவின் இறுதி' எனவும் கொள்ளுமாறு சூத்திரம் யாத்தமையான், மா என்னும் பெயர்க்கும் இவ்விதி கொள்க.

[ஆகார ஈற்றுச் சொல்லாகத் தாரா மூங்கா-முதலாயினவும் கொள்ளக் கிடத்தலான், 'ஆவின் இறுதி' என்பதற்கு ஆ என்னும் ஓரெழுத்தொருமொழியின் இறுதி என்று பொருள்கோடலே சால்புடைத்து. இரட்டுறமொழிதலான் மா என்னும் பெயர்க்கும் இவ்விதி பொருந்துமாறு கொண்டார்க்கு, ஆ என்னும் பெயரே நிலைமொழியாகக் கோடல் பெரிதும் இயையும்.]

### இளம்பூரணம்

### 122. 'இன்' ஈறு திரிதல்

**அளவுஆகு மொழிமுதல் நிலைஇய உயிர்மிசை**
**னஃகான் றஃகான் ஆகிய நிலைத்தே.**

*(இச்....எனின்)* இஃது அவ் இன் ஈறு திரியுமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* அளவுப்பெயர் ஆகும் மொழியின் முதற்கண் நிலைபெற்ற உயிர்க்கு மேலாய் நின்ற இன்சாரியையது னகரம் றகரம் ஆகிய நிலைமைத்து எ-று.

*(உ-ம்.)* பதிற்றகல், பதிற்றுழக்கு - என்புழி அவ்வாறு வருதல் அறிக.

'நிலைத்து' என்றதனான், பிறவழியும் இன்னின் னகரம் றகரமாதல் கொள்க.

*(உ-ம்.)* பதிற்றொன்று, பதிற்றேழு - என வரும். *(19)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 122.** நன்னூல் இற்றுச் சாரியை ஒன்றனைக் கூறும் (197).

பத்து + ஒன்று > பத்து + இன் + ஒன்று = பதினொன்று;

பத்து + ஒன்று > பத்து + இற்று + ஒன்று = பதிற்றொன்று

இன்சாரியை இற்று எனத் திரியவேண்டாது, இற்று என ஒருசாரியை பதிற்றொன்று, பதிற்றேழு - என இடையே தோன்றி நிலைவருமொழிகளைப் புணர்த்தவாறு காண்க.

### நச்சினார்க்கினியம்

### 121. 'இன்' ஈறு திரிதல்

**அளவுஆகு மொழிமுதல் . . . . . ஆகிய நிலைத்தே.**

இஃது அவ்இன்சாரியை ஈறு திரியுமாறு கூறுகின்றது.

*இ-ள் : அளவு ஆகும் மொழி - அளவுப் பெயராய்ப் பின்நிற்கும் மொழிக்கு; முதல் நிலைஇய உயிர்மிசை னஃகான் - முன்னர் நின்ற எண்ணுப்பெயர்களின் ஈற்று நின்ற குற்றுகரத்தின்மேல் வந்த இன்சாரியையது னகரம்; றஃகான் ஆகிய நிலைத்து - றகரமாய்த் திரியும் நிலைமையை உடைத்து எ-று.*

உ - ம் : பதிற்றகல் பதிற்றுழக்கு - எனவரும். இவற்றைப் பத்து என நிறுத்தி 'நிறையும் அளவும்' *(436)* என்னும் சூத்திரத்தான் இன்சாரியை கொடுத்துக் 'குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுமே' *(433)* என்றதனான் குற்றுகரம் மெய்யொடும் கெடுத்து(1) வேண்டும் செய்கை செய்து 'முற்ற இன் வரூஉம்' *(ஷை)* என்பதனான் ஒற்று இரட்டித்து முடிக்க.

'நிலைஇய' என்றதனான் பிறவழியும் இன்னின் னகரம் றகரம் ஆதல் கொள்க. பதிற்றெழுத்து, பதிற்றடுக்கு, ஒன்பதிற்றெழுத்து, பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றொன்பது - என எல்லாவற்றொடும் ஒட்டிக் கொள்க. அச்சூத்திரத்தில் *(436)* 'குறையாதாகும்' என்றதனான் பொருட்பெயர்க்கும் எண்ணுப்பெயர்க்கும் இன் கொடுக்க. *(19)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 121***

1. வேண்டும் செய்கை என்றது, மெய்யில் உயிரேற்றி முடிப்பதை. பதிற்றகல் என்புழித் தொல்காப்பியனார் வேண்டும் இன்சாரியையை நன்னூலார் இற்று என்பர்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

| | | |
|---|---|---|
| ***சூ. 121.*** | **அளவாகு மொழிமுதல்....ஆகிய நிலைத்தே.** | |
| *(எ-டு.)* | பத்து+இன்+அகல் = பதிற்றகல் | |
| | பத்து+ஒன்று | = பதிற்றொன்று |
| | பத்து+அடுக்கு | = பதிற்றடுக்கு |

இச்சாரியையின் னகரம் குற்றொற்று ஆகலின் இரட்டியது எனக் கொள்க. இடைக்காலத்தார் இற்று என்பதையே சாரியையாகக் கொண்டனர்

[சாரியை தனித்து நின்று பொருளுணர்த்தல் ஆற்றாத இடைச்சொல் ஆதலின் அது பெயரொடு கூடியவழி ஒருசொல் நீர்மைத்தாய் ஒற்றுமைப்பட்டுத் தொடர்மொழி இறுதியாய் நிற்றலின், இன்சாரியையது னகரம் குற்றொற்றாய் நின்று இரட்டியது என இவர் கூறுவது பொருந்தாது. (அது கருதியே உரையாசிரியன்மார் இலேசினான் முடித்தனர் என்க.) 189 ஆம் சூத்திரத்து இவர் உரைத்த உரைப்பகுதியும் காண்க.]

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

***சூ. 121.*** இன்சாரியை ஈறு திரிந்ததனை நன்னூலார் இற்றுச்சாரியையாகக் கொண்டார் (சூ.244).

**இளம்பூரணம்**

## *123. 'வற்று' முதல் திரிதல்*

**வஃகான் மெய்கெடச் சுட்டுமுதல் ஐம்முன்**
**அஃகான் நிற்றல் ஆகிய பண்பே.**

(இச்....எனின்) வற்று முதல் திரியுமாறு உணர்....ற்று.

(இ-ள்.) சுட்டினை முதலாகவுடைய ஐகாரஈற்றுச் சொல் முன்னர், வற்றுச் சாரியை தன் வகரமாகிய மெய்கெட அகரம் நிற்றல்ஆகிய பண்பினை உடைத்து எ-று.

(வருமாறு) அவையற்றை இவையற்றை உவையற்றை எனவும், அவையற்றுக்கோடு எனவும் வரும்.[1]

'ஆகிய பண்பு' என்றதனான், சுட்டுமுதலாகிய ஐ என் இறுதி ஐகாரத்தொடு நில்லாதவழி, வற்றின் வகரம் அகரம் நிற்கக் கெடாது வற்றாயே நிற்றல் கொள்க.[2]

மற்று இது ‘திரிந்ததன் திரிபு பிறிது’ என்றும் நயத்தால் கெடாதே நிற்கும்[3] ஆகலின் இது கூறவேண்டா எனின், ‘சுட்டுமுதல் ஐ ஈற்றுச் சொல்லின் ஐம்முன்’ என ஓதாது ‘சுட்டுமுதல் ஐம்முன்’ என அச்சொல்முன் எல்லாம் கெடுவது போல ஓதினமையின்[4] வேண்டிற்று என்பது. (20)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 123.** 1. அவையற்றை முதலியவற்றில் யகரம் உடம்படுமெய்யாம்.

2. அவ்+வற்று+ஐ என்புழி வகரத்தை வற்றின்மிசை ஒற்று என்று கெடுக்கவே (134), அ+வற்று+ஐ (குற்றுகரம் தன்மீது ஐகார உயிரேற இடம் கொடுப்ப (106), அவற்றை என முடிந்தது. இவற்றை முதலியனவும் அன்ன.

3. அவை ‘அவ்’ எனத் திரிந்தது. திரிந்தது: அவை; அதன் திரிபு: அவ்; பிறிதுஃ திரிந்ததாகிய ‘அவை’ யன்றித் திரிபாகிய ‘அவ்’ என்பது. திரிந்ததன் திரிபு பிறிது என்னும் நயத்தால் ‘அவை’ என்ற சொல்லை ‘அவ்’ என்றே கொள்ளலாம் ஆதலின், ‘ஆகிய பண்பு’ என்று விதப்பினாற் கொள்ளப்பட்ட செய்திவேண்டா எனின் - என்று பொருள் கொள்க.

4. ‘சுட்டெழுத்தை முதலாகவுடைய ஐகார ஈற்றுச் சொல்’ என விளங்கக் கூறின், அஃது ஈரெழுத் தொருமொழியாகிய அவை இவை உவை- என்பவற்றையே குறிக்கும். அவ்வாறன்றிச் ‘சுட்டுமுதல் ஐம்முன்’ என்றே ஓதினமையின், முதலெழுத்துச் சுட்டு, ஈற்றெழுத்து ஐ என இவற்றையுடைய தொடர் மொழிகளாகிய அங்கவை - அன்னவை - அவ்வவை - முதலான சொற்களையும் குறிக்கும் வகையால், முதலும் ஈறும் ஒழிய இடையேயுள்ள எழுத்துக்கள் கெடும் எனவும் பொருள்படும். படவே, அன்ன சொற்களும் ‘அவை’ முதலாகவே நின்று இவ்விதி பெற்று

முடியும் என்று கொள்ளவைத்தற்கு இச்சூத்திரம் வேண்டும் என்றவாறு. (மாணாக்கர்க்கு உய்த்துணர்வு பெருகல்வேண்டி இளம்பூரணவடிகள் சிலவிடங்களில் இவ்வாறு நுண்மை தோன்ற உணர்த்திச் செல்வது காணப்படும்.) 'அவைதம்மை' எனவும் வருதல்போல 'அங்கவைதம்மை' முதலாகவும் இவை வரும் என்க. வற்றுச்சாரியை பெற்று முடியவேண்டின் இதுவே விதி என்பது.

**நச்சினார்க்கினியம்**

## *122. வற்று முதல் திரிதல்*

**வஃகான் மெய்கெடச் . . . . . . . ஆகிய பண்பே.**

இது வற்று (1) முதல் திரியுமாறு கூறுகின்றது.

இ-ள் : சுட்டுமுதல் ஐம்முன் - சுட்டினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல்முன் வற்று வருங்காலை; வஃகான்மெய் கெட அஃகான் நிற்றல் ஆகிய பண்பு - அவ்வற்றுச் சாரியையினது வகரமாகிய ஒற்றுக்கெட ஆண்டு ஏறிய அகரம் நிற்றல் அதற்கு உளதாகிய குணம் எ-று.

உ-ம் : அவையற்றை இவையற்றை உவையற்றை - எனவரும். இவற்றை, அவை இவை உவை - என நிறுத்திச் 'சுட்டுமுதல் ஆகிய ஐஎன் இறுதி' (177) என்றதனான் வற்றும் உருபும் கொடுத்து வேண்டும் செய்கை செய்க. இவ்வாறே எல்லா உருபிற்கும் ஒட்டுக. அவையற்றுக்கோடு என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கண் சென்றவழியும் கொள்க.

'ஆகிய பண்பு' என்றதனானே, எவன் என்பது படுத்தல் ஓசையான் பெயராயவழி, எவன் என நிறுத்தி வற்றும் உருபும் கொடுத்து, வற்றுமிசை ஒற்று என்று னகரம் கெடுத்து, அகரஉயிர் முன்னர் வற்றின் வகரம் கெடும் எனக் கெடுத்து எவற்றை எவற்றொடு - என முடிக்க. (20)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 122***

*1. வற்றுச் சாரியையை நன்னூலார் அற்றுச்சாரியை என்பர்.*

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***சூ. 122.*** **வஃகான் மெய்கெடச்...ஆகிய பண்பே.**

*யாவற்றை என்பது யவற்றை - எவற்றை என்று திரிந்துள்ளது என்பது உய்த்துணரத்தகும். நச்சினார்க்கினியர் கூறியவாறு, எவன் என்பதனை நிலைமொழியாக நிறுத்தி 'எவற்றை' என்று அமைத்தல் ஆசிரியர் கருத்தன்று (என்பது ரெட்டியார் கூற்று).*

**இளம்பூரணம்**

***124. சாரியை ஈற்று னகரம் திரியும் இடன்***

**னஃகான் றஃகான் நான்கன் உருபிற்கு.**

*(இச்....எனின்) னகர ஈற்றுச் சாரியை நான்கற்கும் ஈறு திரிபு கூறு....ற்று.*

*(இ-ள்.) னகரஈற்றுச் சாரியை எல்லாம் நான்காம் உருபிற்கு னகரம் றகரமாம் எ-று.*

*(உ-ம்.) விளவிற்கு, கோஒற்கு, ஒருபாற்கு, அதற்கு என வரும்.* *(21)*

**நச்சினார்க்கினியம்**

***123. சாரியை ஈற்று னகரம் திரியும் இடன்***

**னஃகான் றஃகான் நான்கன் உருபிற்கு.**

*இஃது இன் ஒன் ஆன் அன் - என்னும் னகரஈறு நான்கும் திரியுமாறு கூறுகின்றது.*

இ-ள் : ஊஃகான் நான்காம் உருபிற்கு றஃகான் - னகார ஈற்று நான்கு சாரியையின் னகரமும் நான்காம் உருபிற்கு றகரமாய்த் திரியும் எ-று.

உ-ம் : விளவிற்கு கோஒற்கு ஒருபாற்கு அதற்கு - என வரும்.

இதனை 'அளவாகு மொழிமுதல்' (121) என்பதன்பின் வையாது ஈண்டு வைத்தது, னகர ஈறுகள் எல்லாம் உடன்திரியும் என்றற்கு. ஆண்டு வைப்பின் இன்சாரியையே திரியும் என்பது படும். 'ஒன்றுமுத லாகப் பத்தூர்ந்து வரூஉம், எல்லா எண்ணும்' (199) என்பதனான், ஒருபாற்கு என்பதனை முடிக்க. (21)

**இளம்பூரணம்**

## 125. 'ஆன்' பொருட்புணர்ச்சியில் ஈறு திரிதல்

**ஆனின் னகரமும் அதன்ஓ ரற்றே**
**நாள்முன் வரூஉம் வன்முதல் தொழிற்கே.**

(இச்....எனின்) ஆன்சாரியை பொருட்புணர்ச்சிக்கண் ஈறு திரியுமாறு உணர்....ற்று.

(இ-ள்.) நாள்பெயர் முன்னர் வரும் வல்லெழுத்தை முதலாக உடைய வினைச்சொற்கண் வரும் ஆன்சாரியையின் னகரமும், அந்நான்கன் உருபின்கண் வரும் ஆன்சாரியை யோடு ஒரு தன்மைத்தாய் றகாரமாம் எ-று.

'தொழிற்கு' என்பதனைத் 'தொழிற்கண்' ஆனின் னகரம் என மயக்கமாகக்[1] கொள்க.

(உ-ம்.) பரணியாற் கொண்டான் - என வரும்.

உம்மையை **இரட்டுற்மொழிதலானே** எதிரது தழீஇயது ஆக்கி, அதனான் நாள்அல்லவற்று முன் வரும் வன்முதல் தொழிற்கண் இன்னின் னகரமும் றகரமாய்த் திரிதல் கொள்க.

*(உ-ம்.)* பனியிற் கொண்டான் - என வரும்.

தொழிற்கண் இன்னின் னகரம் திரியும் எனவே, பெயர்க்கண் இன்னின் னகரம் திரிதலும் திரியாமையும் உடையது என்பது ஞாபகத்தால்[2] கொள்ளப்படும்.

*(உ-ம்.)* பறம்பிற் பாரி, வண்டின் கால் - என வரும். *(22)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.125.*** 1. தொழிற்கு என்னும் நான்கனுருபு ஏழன் பொருட்கண் வருதலின் வேற்றுமை மயக்கமாம்.

2. ஞாபகம் கூறல் என்னும் உத்திக்கு இளம்பூரணர் உரை : 'இரட்டுற மொழிந்து இரண்டு சொற்கும் பொருள் கோடல்' என்பது. ஆயின் ஈண்டு ஞாபகம் என்பதற்கு இவ்வுத்திப் பொருள் பொருந்துவதாக இல்லை. அறிவினான் வேறுபல பொருளை யுணர்த்தல் என்று பேராசிரியர் உரைத்த உரையின் ஒரு பகுதிகொண்டு 'ஞாபகம்' என்பதன் பொருளைப் புலப்படுத்தலாம். அருத்தாபத்தியான் உணர்த்தலும் ஞாபகம் ஆதலின் அவ்வாறே ஈண்டுக் கோடல் பொருந்தும். *(நன்.171 சங். உரை)*

**நச்சினார்க்கினியம்**

## *124. 'ஆன்' பொருட்புணர்ச்சியில் ஈறு திரிதல்*

**ஆனின் னகரமும் . . . . . வன்முதல் தொழிற்கே.**

இஃது ஆனின் ஈறு பொருட்புணர்ச்சிக்கண் திரியும் என்கின்றது.

*இ-ள் :* நாள்முன் . . . . தொழிற்கு - நாட்பெயர் முன்னர் வரும் வல்லெழுத்தை முதலாக உடைய தொழிற்சொற்கு இடையே வரும்; ஆனின் . . . . . அதனோ ரற்று -

ஆன்சாரியையின் னகரமும், நான்கன் உருபின்கண் வரும் ஆன்சாரியை போல, றகரமாய்த் திரியும் எ-று.

உ-ம் : பரணியாற் கொண்டான் - சென்றான் - தந்தான் - போயினான் - என வரும். 'நாள்முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு' (247) என்றதனான், ஆன்சாரியை கொடுத்துச் செய்கை செய்க. இனி உம்மையை இறந்து தழீஇயது ஆக்கி நாள் அல்லவற்றுமுன் வரும் வன்முதல் தொழிற்கண், இன்னின் னகரமும் அதனோடு ஒக்கும் எனப் பொருள் உரைத்துப் பனியிற்கொண்டான் - வளியிற் கொண்டான் - என இன்னின் னகரமும் றகரம் ஆதல் கொள்க.

இனி, ஞாபகத்தான்(1) தொழிற்கண் இன்னின் னகரம் திரியும் எனவே, பெயர்க்கண் இன்னின் னகரம் திரிதலும் திரியாமையும் கொள்க. உ - ம் : குறும்பிற் கொற்றன், பறம்பிற் பாரி-எனத் திரிந்து வந்தன; குருகின் கால், எருத்தின் புறம் - எனத் திரியாது வந்தன. (22)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 124

1. ஞாபகம் கூறல் என்னும் உத்தியாவது, சூத்திரம் செய்யுங்கால் சில்வகை எழுத்தினான் ஆகியதாகவும் பொருள் நனி விளங்கவும் செய்யாது, அரிதும் பெரிதுமாக நலிந்து செய்து அதனானே வேறு பல பொருள் உணர்த்தல். (பேரா.) பெயர்க்கண் இன்சாரியையின் னகரம் திரிதலும் திரியாமையும் இஞ்ஞாபகத்தால் கொள்ளப்பட்டன.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 124. ஆனின் னகரமும்....வன்முதல் தொழிற்கே.**

இன்சாரியையினது னகரஒற்று, வல்லெழுத்து முதலாய பெயர்வினைகள் வரின் றகரமாகத் திரியும் என்னும்

விதிபற்றிய சூத்திரம் இதற்குமுன் அமைந்திருத்தல் வேண்டும்; என்னை? பனியிற்கொண்டான். வளியிற் கொண்டான் - பறம்பிற் பாரி - குறும்பிற் கொற்றன் - என்றாற்போல இன்சாரியை பயின்று வருதலானும், 'ஆனின் னகரமும் அதன்ஓ ரற்றே' என ஒருமையாகச் சுட்டப்பட்டிருத்தலானும் என்க.

**இளம்பூரணம்**

## *126. 'அத்து' முதல் திரிதல்*

**அத்தின் அகரம் அகர(ம்)முனை இல்லை.**

*(இச்....எனின்) அத்து முதல் திரியுமாறு உணர்....ற்று.*

*(இ-ள்.) அத்துச் சாரியையினது அகரம் அகர ஈற்றுச்சொல் முன்னர் இல்லையாகும் எ-று.*

*(உ-ம்.) மகத்துக்கை - என வரும்.* *(23)*

**நச்சினார்க்கினியம்**

## *125. 'அத்து' முதல் திரிதல்*

**அத்தின் அகரம் அகர(ம்)முனை இல்லை.**

இஃது அத்து முதல் திரியுமாறு கூறுகின்றது.

இ-ள் : அத்தின் . . . . . இல்லை - அத்துச்சாரியையின் அகரம், அகர ஈற்றுச் சொல்முன்னர் இல்லையாம் எ-று.

'அத்துஅவண் வரினும் வரைநிலை இன்றே' (219) என்பதனான், மகப்பெயர் அத்துப் பெற்று நின்றது மகத்துக்கை என அகரம் கெட்டு நின்றது. விளவத்துக்கண் என்புழிக் கெடாது நிற்றல் 'அத்தே வற்றே' (133) என்பதனுள் 'தெற்றென்றற்றே' என்பதனான் கூறுப. *(23)*

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

சூ. 125. அத்தின் அகரம் அகரமுனை இல்லை.

ஆசிரியர் வருமொழியின் முதல் அகரம் கெடும் என்று விதிகூறியதற்குக் காரணம் என்னையெனின், நிலைமொழிஈற்று அகரம் கெட வருமொழியின் அகரம் நிலைமொழியின் ஈற்றொடு சேர்ந்தது என்றலினும், வருமொழி அகரம் கெட்டது என்றல் எளிதாகலானும், இலக்கணநூலார் அவ்வாறு கூறும் இயல்புடையர் ஆகலானும், இவரும் அங்ஙனம் கூறினார் என்று கொள்க.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 125. அத்தின் அகரம் அகரமுனை இல்லை.

ஆண்டு அகரத்தின் இசை புலப்படாமையான் 'இல்லை' என்றார். சொல்லின் அகரஈறு, நாடாக+ஒன்றோ= நாடாகொன்றோ எனவும் ஒழிக+இனி= ஒழிகினி எனவும் உற்ற+உழி= உற்றுழி எனவும் கெடுதலின், நிலைமொழி அகரம் கெடும் என்றலே சால்புடைத்து என்பர் வேங்கடராசுலுரெட்டியார். இவை ஆ - ஒழி - உறு - என்னும் சொற்கள் ஆக - ஒழிக - உற்ற - என விதியீறாக நின்றன அன்றி, 'மக' என்பது போல இயல்பு ஈற்றன அல்ல ஆதலின், இவை புணர்ச்சி விகாரம் எனப்படா; இத்தகையன செய்யுள் விகாரமாம் ஆதலின் அவர்கருத்துப் பொருந்தாமை அறிக.

['ஆன்ஒற்று அகரமொடு நிலையிடன் உரித்தே' (எழுத். 232) முதலாய பற்பல சூத்திரங்களான் ஆசிரியர் விதியீற்றை நிலைமொழியாக உடன்பட்டமை பெற்றாம். ஆண்டைய புணர்ச்சி விகாரம் அன்னதே இந்நிலைமொழி அகரக்கேடும் என்க. எனவே, ரெட்டியார் கருத்துப் புரைபடுமாறு யாண்டையது?]

**இளம்பூரணம்**

### *127. 'இக்கு' முதல் திரிதல்*

**இக்கின் இகரம் இகர(ம்)முனை அற்றே.**

*(இச்.....எனின்)* இக்குச்சாரியை முதல் திரியுமாறு உணர்.....ற்று.

*(இ-ள்.)* இக்குச்சாரியையினது இகரம் இகரஈற்றுச் சொல் முன்னர் மேற்கூறியவாறு போலக் கெடும் எ-று.

*(உ-ம்.)* ஆடிக்குக் கொண்டான் - என வரும். *(24)*

**நச்சினார்க்கினியம்**

### *126. 'இக்கு' முதல் திரிதல்*

**இக்கின் இகரம் இகர(ம்)முனை அற்றே.**

இஃது இக்கு முதல் திரியுமாறு கூறுகின்றது.

இ-ள் : இக்கின் . . . . . அற்று - இக்குச் சாரியையினது இகரம், இகரஈற்றுச்சொல் முன்னர், முற்கூறிய அத்துப் போலக் கெடும் எ-று.

'திங்கள் முன்வரின்' *(248)* என்பதனான் பெற்ற இக்கு, ஆடிக்குக் கொண்டான் - சென்றான்-தந்தான் - போயினான் - என இகரம் கெட்டு நின்றது. இஃது இடப்பொருட்டு. (அ) *(24)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 126*

*(அ)* ஆடிக்கு - ஆடிக்கண் (காலம் இடமாயிற்று).

**இளம்பூரணம்**

***128.*** **ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்**

இதுவும் அது.

*(இ-ள்.)* இக்கின் இகரம், இகர ஈற்றுச்சொல்முன் அன்றி ஐகார ஈற்றுச்சொல் முன்னரும் மேற்கூறப்பட்ட கெடுதல் இயல்பிலே நிற்கும் எ-று.

*(உ-ம்.)* சித்திரைக்குக் கொண்டான் - என வரும். *(25)*

**நச்சினார்க்கினியம்**

***127.*** **ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்**

இதுவும் அது.

இ-ள் : ஐயின் . . . . . நிலையும் - இக்கின் இகரம் இகரஈற்றுச் சொல்முன்னர் அன்றி ஐகாரஈற்றுச் சொல்முன்னரும் மேற்கூறிய கெடுதல் இயல்பிலே நிற்கும் எ-று.

'திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன' (386) என்பதனான், சித்திரைக்குக் கொண்டான் என்புழிப் பெற்ற இக்கு ஐகாரத்தின் முன்னர்க் கெட்டவாறு காண்க. *(25)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ.*127.*** **ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும்.**

*(சித்திரைக்குக் கொண்டான் என்புழி)* இக்குச் சாரியை இடப்பொருட்டு என்பர் நச்சினார்க்கினியர். சித்திரை முதலாய திங்களின்கண் நிகழும் விழா முதலிய சிறப்புநிகழ்ச்சிகளில் புரவலராயினார் நல்கும் பரிசு முதலாயவற்றைக் கோடல் மரபு ஆகலின், பொருட்டு என்னும் நான்காவதன் பொருளாகக் கோடலே சால்பாகும் என்க.

[சித்திரைக்குக் கொண்டான் என்புழி, கோடல்தொழில் பரிசு முதலியனவேயன்றி மகட்கோடலையும் குறித்து நிற்றலின், இக்குச் சாரியை இடப்பொருட்டாம் என்னும் நச்சினார்க்கினியருரையே சாலப் பொருந்துவதாம் என்க. மகட்கோடற்குப் பொருட்டுப்பொருண்மை சிறிதும் ஏலாமை உணரப்படும்.]

**இளம்பூரணம்**

### *129. 'அக்கு' ஈறு திரிதல்*

**எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி**
**அக்கின் இறுதிமெய் மிசையொடும் கெடுமே**
**குற்றிய லுகரம் முற்றத்தோன் றாது.**

*(இச்....எனின்)* அக்கு ஈறு திரியுமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* எவ்வகைப்பட்ட பெயர்முன்னும் வல்லெழுத்துத்தாம் வருமிடத்து, அக்கின் இறுதிக் குற்றியலுகரம் முடியத் தோன்றாது; அதனால் பற்றப்பட்ட வல்லெழுத்து ஆகிய மெய் தனக்கு மேல்நின்ற மெய்யொடும் கெடும் எ-று.

*(உ-ம்.)* தமிழக் கூத்து, தமிழ நூல், தமிழ யாப்பு, தமிழ வெழுத்து, குன்றக்கூகை, மன்றப்பெண்ணை, ஈமக்குடம், அரசக்கன்னி - என வரும். *(26)*

**நச்சினார்க்கினியம்**

### *128. அக்கு ஈறு திரிதல்*

**எப்பெயர் முன்னரும் . . . . முற்றத் தோன்றாது.**

இஃது அக்கு முதல் ஒழிய, ஏனைய கெடுமாறு கூறுகின்றது.

இ - ள் : எப்பெயர் . . . . . வருவழி - எவ்வகைப்பட்ட பெயர்ச்சொல் முன்னரும் வல்லெழுத்து வருமொழியாய் வருமிடத்து; அக்கின் இறுதிக் குற்றியலுகரம் முற்றத் தோன்றாது- இடைநின்ற அக்குச்சாரியையின் இறுதி நின்ற குற்றியலுகரம் முடியத் தோன்றாது; மெய்மிசையொடும் கெடும் - அக்குற்றுகரம் ஏறிநின்ற வல்லொற்றுத் தனக்கு மேல்நின்ற வல்லொற்றொடும் கெடும் எ-று.

வருமாறு : 'ஒற்றுநிலை திரியாது அக்கொடு வரூஉம்' *(418)* என்றதனான் அக்குப்பெற்ற குன்றக்கூகை மன்றப்பெண்ணை - என்பனவும், 'வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்' *(329)* என்பதனான் அக்குப்பெற்ற ஈமக்குடம் கம்மக்குடம் - என்பனவும், 'தமிழென் கிளவியும்' *(385)* என்பதனான் அக்குப்பெற்ற தமிழக்கூத்து என்பதுவும் 'அக்கு' ஈறும் ஈற்றயலும் கெட்டவாறு காண்க. இங்ஙனம் வருதலின் 'எப்பெயர் முன்னரும்' என்றார். 'முற்ற' என்பதனான் வன்கணம் அன்றி ஏனையவற்றிற்கும் இவ்விதி கொள்க. தமிழ நூல், தமிழ யாழ், தமிழ வரையர் (அ) என வரும். இன்னும் இதனானே, தமக்கு ஏற்ற இயைபு வல்லெழுத்துக் கொடுத்து முடித்துக் கொள்க. அன்றிக் கேடு ஓதிய ககர ஒற்று நிற்கும் எனின், சகரம், தகரம், பகரம் வந்தவற்றிற்குக் ககர ஒற்று ஆகாமை உணர்க. *(26)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 128***

*(அ) தமிழ் + அரையர் = தமிழவரையர். வகரம் : உடம்படு மெய்.*

**இளம்பூரணம்**

## *130. 'அம்' ஈறு திரிதல்*

**அம்மின் இறுதி கசதக் காலை**
**தன்மெய் திரிந்து ஙஞந ஆகும்.**

(இச்....எனின்) அம் ஈறு திரியுமாறு உணர்....ற்று.

(இ-ள்.) அம் இறுதியாகிய மகரஒற்று, கசத-க்கள் வருமொழியாய் வந்த காலத்துத் தன்வடிவு திரிந்து ஙஞந-க்கள் ஆகும் எ-று.

(உ-ம்.) புளியங்கோடு, புளியஞ்செதிள், புளியந்தோல் - என வரும்.

'தன்மெய்' என்றதனான், அம்மின் மகரமே அன்றித் தம் நம் நும் உம் - என்பனவற்றின் இறுதி மகரமும் திரியும் என்பது கொள்க.

(உ-ம்.) எல்லார்தங்கையும், எல்லாநங்கையும், எல்லீர்நுங்கையும், 'வானவரி வில்லுந் திங்களும்' [1] - என வரும். (27)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 130.** 1. 'வானவரி வில்லுந் திங்களும்' : 'வில்லும்' என்னுமிடத்து உம்மை எண்ணுப் பொருட்டாய இடைச்சொல் அன்று. அது சாரியை. வானவரி வில்லிடைத் திங்களும் என அத்தொடர் பொருள்படும். (481 நச். உரை)

**நச்சினார்க்கினியம்**

## 129. 'அம்' ஈறு திரிதல்

**அம்மின் இறுதி . . . . . . . ங ஞ ந ஆகும்.**

இஃது அம் ஈறு திரியுமாறு கூறுகின்றது.

இ-ள் : அம்மின் இறுதி-அம்முச்சாரியையின் இறுதியாகிய மகர ஒற்று; க ச த -க் காலை- க ச த க்கள் வருமொழியாய் வரும் காலத்து; தன் மெய் . . . . . . . ஆகும் - தன் வடிவு திரிந்து ங ஞ ந - க்கள் ஆம் எ-று.

உ - ம் : புளியங்கோடு - செதிள் - தோல் - என வரும்.

இது 'புளிமரக் கிளவிக்கு' (244) என்பதனான் அம்முப் பெற்றது. க ச த - க்காலை திரியும் எனவே, பகரத்தின்கண் திரிபு இன்றாயிற்று. 'மெய் திரிந்து' என்னாது 'தன்மெய்' என்றதனான், அம்மின் மகரமே அன்றித் தம் நம் நும் உம் - என்னும் சாரியை மகரமும் திரிதல் கொள்க. எல்லார் தங்கையும், எல்லாநங்கையும், எல்லீர்நுங்கையும், 'வானவரி வில்லுந் திங்களும்'(அ) - என வரும். துறைகேழூரன், வளங்கேழூரன் - எனக் கெழு என்னும் சாரியையின் உகரக் கேடும் எகர நீட்சியும் செய்யுள்முடிபு என்று கொள்க. (27)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 129**

*(அ)* வானவரி வில்லும் திங்களும் போலும் : வில்லும் என்புழி உம்மை சாரியை; வானவரி வில்லிடைத் திங்களும் போலும் - என்பது பொருள்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 129.** **அம்மின் இறுதி....ங ஞ ந ஆகும்.**

'வருஉங் காலை' என்பது 'காலை' எனக் குறைந்து நின்றது.... 'திரிந்து' எனப் பொதுப்படக் கூறியிருப்பினும், திரிபு மூன்றனுள் மெய் பிறிது ஆதலை 'ஏற்புழிக்கோடல்' என்பதனான் கொள்க.

**இளம்பூரணம்**

**131.** **மெய்ம்மையும் இடைமையும் வருஉங் காலை**
**இன்மை வேண்டும் என்மனார் புலவர்.**

இதுவும் அது.

(இ-ள்.) அம்மின் இறுதி, மென்மையும் இடைமையும் வருமொழியாய் வருங்காலத்து, இன்றி முடிதலை வேண்டும் என்று சொல்லுவார் புலவர் எ-று.

(உ-ம்.) புளியஞெரி, நுனி, முரி; யாழ், வட்டு - என வரும்.

**உரையிற் கோடல்** என்பதனான், புளியவிலை[1] என உயிர் வரும்வழிக் கேடும் கொள்க; புளியிலை[2] என முழுவதூஉம் கேடு கூறலும் கொள்க. (28)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 131.** 1. புளியவிலை (புளிய இலை) : உயிர்வருமிடத்து 'அம்' சாரியையது இறுதி மகரம் கெட்டது.

2. புளியிலை (புளி + இலை) என்புழி 'அம்' முழுதும் கெடவே, இடையே யகரம் உடம்படுமெய்யாக இயைந்தது.

**நச்சினார்க்கினியம்**

**130. மென்மையும் இடைமையும் . . . . . .என்மனார்புலவர்.**

இஃது அம்மீறு ஒருசார் இயல்புகணத்து முன்னர்க் கெடும் என்கிறது.

இ-ள் : மென்மையும் . . . . . காலை - மென்கணமும் இடைக்கணமும் வருமொழியாய் வருங்காலத்து; இன்மை . . . . . . புலவர் - அம்முச்சாரியை இறுதி மகரம் இன்றி முடிதலை வேண்டும் என்று கூறுவர் புலவர் எ-று.

உ-ம் : புளிய ஞெரி, நுனி, முரி, யாழ், வட்டு - எனவரும், **உரையிற்கோடல்** என்பதனான், புளியவிலை என உயிர் வரும்வழி அம்மின் ஈறு கெடுதலும், புளியிலை என அம்மு முழுவதும் கெடுதலும் கொள்க. புளியிலை என்றது,(அ) ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு' (132) அன்று என்பதுமாம். மென்கணமும் இடைக்கணமும்

உயிர்க்கணமும் தம்முள் ஒக்குமேனும், அம்மு முழுவதும் கெட்டு வருதலும் உடைமையின் உயிரை எடுத்தோதார் ஆயினார். புளிங்காய் என்பது மரூஉமுடிபு.

(28)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 130***

*(அ) புளி+இலை என உயிர்க்கணம் வருவழி உயிர்முதல் மொழி அம்முச்சாரியை பெறுதற்குரிய இயல்புடைத்தன்று ஆதலின், சாரியை பெறாது இயல்பாக புளியிலை என முடியும் என்று கோடலும் ஆம் - என்பது பொருள்.*

வேங்கடராகலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***சூ. 130.*** **மென்மையும் இடைமையும்....என்மனார் புலவர்.**

*ஆசிரியர் 'மென்மையும் இடைமையும்' என்று இவ்விரண்டனையே விதந்து ஓதியிருத்தலின், உயிர் வருவழி மகரம் கெடுதல் அவர்க்குக் கருத்தன்று. ....உயிர் வருவழி 'புளியமிலை' என்றுவரும். இதுவே வழக்கில் உள்ளது. 'புளியவிலை' என்று வழங்கின், அது புளியமிலை என்பதிலுள்ள மகரம் வகரமாய்த் திரிந்து வந்ததாகும்.*

**இளம்பூரணம்**

***132. 'இன்' முழுதும் கெடும் இடன்***

**இன்என வரூஉம் வேற்றுமை யுருபிற்கு**
**இன்என் சாரியை இன்மை வேண்டும்.**

*(இச்....எனின்) இன்சாரியை முழுவதூஉம் கெடும் இடம் உணர்....ற்று.*

*(இ-ள்.) இன் என்று சொல்ல வருகின்ற வேற்றுமையுருபிற்கு, இன் என்னும் சாரியைதான் இன்றி முடிதல் வேண்டும் எ-று.*

(உ-ம்.) விளவின், பலாவின் - என வரும்.[1]

'அவற்றுள், இன்னின் இகரம்' (121) என்றதன்பின் இது வையாததனான், சிறுபான்மை இன்சாரியை கெடாது நிற்றல் கொள்க.

(உ-ம்.) பாம்பினிற் கடிது தேள் - என வரும். (29)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

சூ. 132.1. விளவின், பலாவின்: விளவினின் பலா வினின் என இன் உருபின் முன்னர் இன்சாரியை தோன்றுதலின்றி முடிந்தது. விளவின்: இன் ஐந்தனுருபு.

நச்சினார்க்கினியம்

### 131. 'இன்' முழுதும் கெடும் இடன்

**இன்என வரூஉம் . . . . . . . . இன்மை வேண்டும்.**

இஃது இன்சாரியை ஐந்தாம் உருபின்கண் முழுவதும் கெடும் என்கின்றது.

இ-ள்: இன் என . . . . வேண்டும் - இன் என்று சொல்ல வருகின்ற வேற்றுமையுருபிற்கு, இன் என்னும் சாரியை தான் இன்றி முடிதலை விரும்பும் ஆசிரியன் எ-று.

உ-ம்: விளவின் பலாவின் கடுவின் தழூவின் சேவின் வெளவின் என வரும். இவற்றிற்கு வீழ்பழம் எனவும், நீங்கினான் எனவும் கொடுத்து முடிவு உணர்க. ஊரினீங்கினான் என ஏனையவற்றொடும் ஒட்டுக. இனி 'அவற்றுள், இன்னின் இகரம்' (120) என்றதன்பின் இதனை வையாத முறையன்றிக் கூற்றினான், இன்சாரியை கெடாது வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் நிற்றல் கொள்க. பாம்பினிற் கடிது தேள், 'கற்பினின் வழாஅ நற்பல உதவி' (அகநா. 86), 'அகடுசேர்பு பொருந்தி அளவினிற் றிரியாது' (மலைபடு. 33) என வரும். இனி 'இன்மையும் வேண்டும்' என்னும் உம்மை தொக்கு நின்றதாக்கி அதனான் இவை கோடலும் ஒன்று. (29)

## இளம்பூரணம்

### 133. சாரியைகளின் பொதுவியல்பு

பெயரும் தொழிலும் பிரிந்துஒருங்கு இசைப்ப
வேற்றுமை உருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கொடு சிவணிச்
சொல்சிதர் மருங்கின் வழிவந்து விளங்காது
இடைநின்று இயலும் சாரியை இயற்கை
உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்.

*(இச்....எனின்) சாரியைகட்கு எல்லாம் பொதுவாயதோர் இலக்கணம் உணர்.....ற்று.*

*(இ-ள்.)* பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் பெயரும் வினையுமாய்ப் பிரிந்தும் பெயரும் பெயருமாய்க் கூடியும் இசைப்ப, வேற்றுமையுருபு தொகாது நிலைபெற்ற இடத்தினும் அவை தோற்றுதல் வேண்டாத தொகுதிக்கண்ணும். தாம் பொருந்துதற்கு ஏற்ப நடந்த வழக்கொடு பொருந்திச் சாரியை பெறும் புணர் மொழிகளைப் பிரித்துக் காணுமிடத்து, அவற்றின் பின்னே வந்து விளங்காது அவற்றின் இடையே நின்று நடக்கும் சாரியையின் இயல்பு, தாம் உண்டாதலும் இல்லையாதலும் ஒடு உருபிடத்து ஒக்கும் எ-று.

*(உ-ம்.)* விளவினைக் குறைத்தான், விளவினைக் குறைத்தவன் - எனவும், நிலாத்துக் கொண்டான், நிலாத்துக் கொண்டவன் - எனவும் வரும்.

ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு அன்மையின், நிலாக்கதிர் நிலாமுற்றம் - என்பன சாரியை பெறா ஆயின.[1]

எல்லார்தம்மையும் எனச் சாரியை பெறுதல் ஈற்றின்கண்ணும் வருதலின்[2] 'இடைநின்று இயறல்' பெரும்பான்மை எனக் கொள்க.

பூவினொடு விரிந்த கூந்தல் எனவும், பூவொடு விரிந்த கூந்தல் எனவும் உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒத்தவாறு.

'இயற்கை' என்றதனான், ஒடுஉருபின்கண் சாரியை பெறுதலும் பெறாமையும் ஒழிய ஒரோவழிப் பெற்றே வரும் என்பது கொள்க.

(உ-ம்.) பலவற்றொடு - என வரும். (30)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 133.*** 1. நிலா+கொண்டான்-என வருமொழி வல்லெழுத்து முதலிய வினைச்சொல்லாயவழியே 'ஒட்டுதற்கு ஒழுகிய வழக்காய்'ச் சாரியைபெற்று நிலாஅத்துக்கொண்டான் என முடியும். இத்தொடர் ஏழன்தொகை.

**நச்சினார்க்கினியம்**

## *132. சாரியைகளின் பொதுவியல்பு*

**பெயரும் தொழிலும் . . . . . ஒடுவயின் ஒக்கும்.** (1)

இது முற்கூறிய சாரியைகள்எல்லாம் புணர்மொழியுள்ளே வரும் என்பதூஉம், அம்மொழிதாம் இவை என்பதூஉம், அவை வாராத மொழிகளும் உள என்பதூஉம் கூறுகின்றது.

இ-ள் : பெயரும் தொழிலும் - பெயர்ச்சொல்லும் தொழிற்சொல்லும்; பிரிந்து இசைப்ப ஒருங்கு இசைப்ப - பெயரும் தொழிலுமாய்ப் பிரிந்து இசைப்ப, பெயரும் பெயருமாய்க் கூடி இசைப்ப; வேற்றுமை . . . . வழியும் - வேற்றுமை செய்யும் உருபுகள் தொகாது நிலைபெற்ற இடத்தும்; தோற்றம் . . . . . . . கண்ணும் - அவ்வேற்றுமையுருபுகள் தோற்றுதல் வேண்டாது தொக்க இடத்தும்; ஒட்டுதற்கு . . . . சிவணி - தாம் பொருந்துதற்கு ஏற்ப

நடந்த வழக்கோடே பொருந்தி; சொல் சிதர் மருங்கின் - சாரியை பெறும் புணர்மொழிகளைப் பிரித்துக் காணுமிடத்து; சாரியை இயற்கை வழிவந்து விளங்காது இடைநின்று இயலும் - அச்சாரியையினது தன்மை அச்சொற்களின் பின்னே வந்து விளங்காது நடுவே நின்று நடக்கும்; உடைமையும் . . . . ஒக்கும் - அச்சாரியை உண்டாதலும் இல்லையாதலும் ஒடுஉருபினிடத்து ஒத்துவரும் எ-று.

ஒடுவிற்கு ஒக்கும் எனவே பிறவற்றிற்கு ஒவ்வா ஆயின.

உ-ம் : விளவினைக் குறைத்தான், கூழிற்குக் குற்றேவல் செய்யும் : இவை பிரிந்து இசைத்து உருபு நிலைபெற்றன. அன்னென் சாரியை (194) என்பதனைக் குற்றியலுகரத் திறுதி (195) என்பதனைச் சேர வைத்ததனான், இன்சாரியை வருதல் கொள்க. இவ்விரண்டு உருபும் சாரியை நிற்பப் பெரும்பான்மையும் தொகா என்றுணர்க.

விளவினைக் குறைத்தவன், கடிசூத்திரத்திற்குப் பொன்: இவை ஒருங்கிசைப்ப உருபு நிலைபெற்றன.

வானத்தின் வழூக்கி, வானத்து வழூக்கி - எனச் சாரியை பெற்றுப் பிரிந்து இசைத்து ஐந்தாம் உருபு நிலைபெற்றும் நிலைபெறாதும் வந்தன.

வானத்தின் வழூக்கல், வானத்து வழூக்கல் : இவை 'மெல்லெழுத்து உறழும்' (312) என்னும் சூத்திரத்து 'வழக்கத்தான்' என்பதனான் அத்துக் கொடுத்து, மகரம் கெடுக்க ஒருங்கிசைத்தன.

விளவினது கோடு, விளவின் கோடு - என (இவை) ஒருங்கிசைத்துச் சாரியை பெற்றவழி ஆறன் உருபு தொகாதும் தொக்கும் நின்றது. இதற்குப் பிரிந்து இசைத்தல் இன்று.

மரத்துக்கட் கட்டினான் - மரத்துக் கட்டினான் - எனப் பிரிந்து இசைத்தவழியும், மரத்துக்கட் குரங்கு மரத்துக் குரங்கு

என ஒருங்கிசைத்தவழியும் சாரியை நின்றவழி ஏழன் உருபு தொகாதும் தொக்கும் நின்றது. 'கிளைப்பெயர் எல்லாம்' *(307)* என்பதனுள் 'கொள' என்றதனான் ணகாரம் டகாரம் ஆயிற்று.

*'நிலாஅஎன் கிளவி அத்தொடு சிவணும்' (228) என விதித்த அத்து, நிலாஅக்கதிர் நிலாஅமுற்றம் - என அகரம் கொடுக்க, (அத்துப்) பெறாதாயிற்று, அஃது 'ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு' அன்மையின். நிலாஅத்துக் கொண்டான், நிலாஅத்துக் கொண்டவன் - என்பன உருபு தொக்குழி இருவழியும் பெற்றன.(அ)*

*எல்லார்தம்மையும் எனச் சாரியை ஈற்றின்கண்ணும் வருதலின், இடைநிற்றல் பெரும்பான்மை என்றற்கு 'இயலும்' என்றார்.*

பூவினொடு விரிந்த கூந்தல், பூவொடு விரிந்த கூந்தல் என உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒத்தன.

இனி 'இயற்கை' என்றதனான், ஒடுஉருபின்கண் பெற்றும் பெறாமையும் வருதலன்றிப் பெற்றே வருதலும் கொள்க. பலவற்றொடு என வரும். *(30)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் / 32

*1.* இச்சூத்திரத்திற்கு உரைகாரர் இருவரும் கொண்டபொருளை மறுத்துச் சேனாவரையர், பெயரும் பெயரும் - பெயரும் தொழிலும் - பிரிந்திசைப்பவும் ஒருங்கிசைப்பவும், முறையே வேற்றுமையுருபு நிலைபெற்றவிடத்தும் - மறைந்து நிற்கும் தொகைக்கண்ணும் ஆம் - என்று பொருள் கூறுவார் *(420 சே.)*. அவர் கருத்து : பெயரும் பெயரும், பெயரும் தொழிலும், வேற்றுமையுருபு நிலைபெற்றவழிப் பிரிந்து இசைக்கும்; தொக்கவழி ஒருங்கு இசைக்கும் என்பது.

'எல்லார் தம்மையும்' என்புழி உம்மை முற்றும்மை என்பர் நன்னூலார்.

*(அ) பெயரொடு தொழில், பெயரொடு பெயர் என இருவழியாகப் புணர்தல். இரண்டும் வேற்றுமைப் புணர்ச்சி.*

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 133.*** **பெயரும் தொழிலும் பிரிந்து ஒருங்கு இசைப்ப**

................

**உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்.**

*(இ-ள்.) பெயரும் வினையும் பிரிந்திசைத்து இடையில் வேற்றுமையுருபு ஏற்றும் ஏலாதும் சேர்ந்துவரும் வழக்கொடும், பெயரும் தொழிற்பெயரும் ஒருசொல்நீர்மைப்பட்டு இடையில் வேற்றுமையுருபு ஏற்றும் ஏலாதும் சேர்ந்து வரும் வழக்கொடும் பொருந்தி, சொற்களைப் பகுதியும் வேற்றுமையுருபுமாகப் பிரித்துக் கூறுமிடத்து அவற்றின்பின்னர்த் தோன்றாது, (சேர்த்துச் சொல்லுமிடத்து) இடையில் தோன்றும் சாரியையின் தன்மை ஒடு உருபு வரும்போது இருந்தும் இல்லாதும் இருக்கும்.*

*(உ-ம்.) விளவினைக் குறைத்தான்- விளவினைக் குறைத்தான் வந்தான்; பூவொடு விரிந்த கூந்தல் - பூவினொடு விரிந்த கூந்தல்.*

*இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கொண்ட பொருளினும் சேனாவரையர் கொண்ட அந்நுவயமும் அதற்கேற்ற பொருளுமே சிறந்தன என்பது இவர் கருத்து; பலர் துணிவும் அதுவே.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 132.*** **பெயரும் தொழிலும் பிரிந்துஒருங்கு இசைப்ப**

..................

**உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்.**

தோற்றம் வேண்டாத் தொகுதியாவது வேற்றுமையுருபு தோன்றுதல் வேண்டாத தொகை. ஒட்டுதற்கு ஒழுகிய வழக்காவது சொற்கள் சேர்ந்துவருதற்குத் தக்க வழக்கு; ஒட்டுதல் - சேர்தல்; ஸமாஸம் (தொகை) ஆதல்.

'ஒடுவயின் ஒக்கும்' என்றதனான், ஏனைய உருபுகள் வரும்வழி இவ்வுறழ்ச்சி ஒவ்வாது என்பதாம். அவ்விடங்களில் சாரியை ஒழியாது வரல் வேண்டும் என்றபடி.

சாரியை உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒத்தற்கு, உரையாசிரியர்கள், பூவினொடு விரிந்த கூந்தல் - பூவொடு விரிந்த கூந்தல் என்று உதாரணம் காட்டினார். இதனினும்

உருமினொடு - உருமொடு, வளத்தொடு - வளமொடு - என்பன போன்றவை காட்டுதல் சிறப்புடையதாம். ஆசிரியர், 'ஆன்ஒற்று அகரமொடு நிலையிடன் உடைத்தே' (உயிர்ம.30) என்று கூறியிருப்பதும், 'செற்றமொடு' (திருமுருகு) 'சீற்றமொடு' (பதிற்.16) என்று பழைய செய்யுள்களில் வந்திருப்பதும் ஈண்டைக்கு உதாரணம் ஆகும்.

எல்லாநம்மையும் என்று உரையாசிரியரும், எல்லார்தம்மையும் என்று நச்சினார்க்கினியரும் உதாரணம் காட்டி, சாரியை ஈற்றின்கண்ணும் வரும் என்றனர். இச்சாற்களில் உம்மை சாரியை அன்று; முற்றும்மை. இன்னும் அவர்கள், பலவற்றொடு என ஒடுஉருபு சாரியை பெற்றே வரும் என்றனர். அஃது ஆசிரியர்க்குக் கருத்தன்று, 'உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்' என்றார் ஆகலின். ஆகவே, 'பலவொடு' என்று வருதலும் அமையும்; பலவை (பலவற்றை), பலக்கு (பலவற்றுக்கு) என்று வருதல் அமையாது.

['உம்மும் கெழுவும் உளப்படப் பிறவும்' (481) என்புழி, ஆசிரியர் உம்முச்சாரியையும் தழுவிக்கொண்டமை

பெற்றாம். எல்லா நம்மையும் - எல்லார் தம்மையும்-என்னுமிடத்து ஈற்று உம்மையை உரையாசிரியன்மார் சாரியையாகக் கொண்டனர்; 'உம்' சாரியை மொழியிடைக்கண்ணே யன்றி ஒரோவழி இறுதிக் கண்ணும் வந்து முற்றுப்பொருண்மை காட்டிற்றாகக் கோடற்கண் இழுக்கின்மை கண்டனர். சாரியை உரிய பொருளேயன்றி வேறுபொருளும் உணர்த்துமோ எனின், 'சித்திரையாற் கொண்டான்' என்புழி, ஆன்சாரியை சித்திரைக்கண் என இடப்பொருளை யுணர்த்துதல் காண்க.

பலவொடு-சிலவொடு-என்ற வழக்கு யாண்டும் வந்ததாகத் தெரிந்திலது. பலவொடு-பலாமரத்தொடு என்று பொருள்படுதல் இயல்பு.]

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 132.** பெயரும் தொழிலும் பிரிந்துஒருங்கு இசைப்ப

...............

உடைமையும் இன்மையும் ஒருவயின் ஒக்கும்.

(இ-ள்.) பெயர்ச்சொல்லும் தொழிற்சொல்லும் தம்முள் பெயரும் வினையுமாக வேறுபட்டும் பெயரும் பெயருமாக ஒன்றுபட்டும் புணர்ந்து இசைக்குங்கால், வேற்றுமையுருபுகள் மறையாமல் நிலைபெறுமிடத்தும் அவ்வுருபுகள் தோன்றுதல் வேண்டாமல் அப்பொருள்படத் தொக்குவருமிடத்தும், நிறுத்தசொல்லும் குறித்து வரு கிளவியும் இயைவதற்கு ஏற்ப நடந்த இருவகை வழக்கொடு பொருந்தி, அப்புணர்மொழிகள் பிரிந்து நிற்குமிடத்துச் சொல்லின் ஈற்றில் நின்று இயலும் சாரியை போல ஒன்றன்வழி வந்து தோன்றாமல், பொருள்நிலைக்கு உதவுவனவாய் அவற்றினிடையே வந்து அவற்றை இணைப்பதற்கு இயலும் சாரியைமொழிகள், ஒரோவிடத்து வருதலுடைமையும் வருதலின்மையும் ஒக்கும் இயற்கைய ஆகும். இயற்கை - இலக்கணம்.

'ஒரோவயின்' என்பது இசைகருதி 'ஒருவயின்' என நின்றது.

இச்சூத்திரத்தான், வழிவந்து விளங்கும் சாரியை - இடைநின்று இயலும் சாரியை - எனச் சாரியை இருவகைத்து ஆகும் என்பதும், உருபுதொக்கு வரும் வேற்றுமைப்புணர்ச்சி வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாம் என்பதும் புலனாகும்.

மான் கோஒன் - என்றாற் போல்வன வழிவந்து விளங்கும் சாரியைகள்; அக்கு இக்கு அத்து வற்று - என்றாற் போல்வன இடைநின்று இயலும் சாரியைகள்.

'வேற்றுமையுருபு நிலைபெறும் வழியும்' என்றது, உருபுபுணர்ச்சியை. 'தோற்றம் வேண்டாத் தொகுதி' என்றது பொருட்புணர்ச்சியை ஆம்.

(எ-டு.) ஆவைக் கொணர்ந்தான், ஆவினைக் கொணர்ந்தான்; பூவொடு மணந்த கூந்தல், பூவினொடு மணந்த கூந்தல்; சொற்குப் பொருள், சொல்லிற்குப் பொருள்; நெல்லது பொரி, நெல்லினது பொரி; தேர்க்கண் நின்றான். தேரின்கண் நின்றான் - எனவரும். இவை வேற்றுமையுருபு நிலைபெற்றவழிச் சாரியை உடைமையும் இன்மையும் ஒத்தன.

சாரியை பெற்றே வருவன: மரத்தை வெட்டினான், பலவற்றொடு முரணினான், கூழிற்குக் குற்றேவல் செய்தான், ஆவினது கன்று, நிலாவின்கண் ஒளி - என்பன. ..........மலையின் வீழ் அருவி, மலையருவி - என ஐந்தாம் வேற்றுமை விரிந்து வரினும் தொக்குவரினும் சாரியை பெறாதே வரும்.

இனி, இந்நூற்பாவின் இறுதியடியின் பாடத்தை 'உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்' எனக் கொண்டு ஒடுஉருபின்கண் சாரியை வருதலும் வராதாதலும் ஒக்கும் - என உரைகூறினர் உரையாசிரியன்மார். அஃது

ஆசிரியர்கருத்தாயின், முதல்ஐந்தடிகளும் வெற்றெனத் தொடுந்தலாய் முடியும். அன்றியும், அஃது உருபியலுள் ஓதப்படுவதன்றி ஈண்டைக்கு ஆகாது.

[அவ்+ஒடு = அவற்றொடு; யா+ஒடு = யாவற்றொடு; பல+ ஒடு = பலவற்றொடு. அஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயரும், பன்மை வினாப் பெயரும், பலவறிபெயரும் ஆகிய இவை வற்றுச்சாரியை பெற்று ஒடுஉருபொடு புணர்ந்தன. இவை சாரியை பெறாவழி அவ்வொடு, யாவொடு, பலவொடு - எனமுடியும். முடியின், இவை முறையே அகர எழுத்தொடு எனவும் யாமரத்தொடு எனவும் பலாமரத்தொடு எனவும் பொருள்கவர்க்கும். இன்ன சிலஇடங்களைத் தவிர்த்துத் தொல்காப்பியத்துள் யாண்டும் ஒடுஉருபு சாரியை பெறாமல் வருவதனைக் கூர்ந்து நோக்கிப் பண்டை உரையாசிரியன்மார் ஒடுவுருபின் சிறப்பிலக்கணமாக அது சாரியை பெறாவிடத்தும் பெற்றாற் போல இன்னோசைத்தாய் நிகழும் எனக் குறிப்பிட்டனர். மெய்யொடு (எழுத்.10) அகரமொடு (எழுத்.17) - உயிரொடு (எழுத்.17) காலமொடு (சொல்.200ந) - முதலாகப் பலஈற்றுச் சொற்களும் உருபியலில் ஓதப்பட்ட சாரியை பெறாமல் ஒடுவுருபுடன் புணர்ந்து இன்னோசையவாய்ப் பொருள் பயக்குமாறு தொல்காப்பியம் எழுத்து சொல் எனும் இருபடலத்தும் காணலாம். ஆகவே உரையாசிரியன்மார் கொண்ட பாடமே பெரிதும் ஏற்புடைமை காண்க.]

**இளம்பூரணம்**

***134. அத்தும் வற்றும் வருவழிச் செய்கை***

**அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்**
**ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே**
**அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே.**

(இச்....எனின்) அத்தும் வற்றும் வருமிடத்து நிலைமொழியினும் வருமொழியினும் வரும் செய்கை கூறு....ற்று.

(இ-ள்.) அத்தும் வற்றும் ஆகிய அவ்விருமொழிமேல் நின்ற ஒற்றுத் தன்வடிவு கெடுதல் தெளியப்பட்டது. அவ்விரு சாரியை முன்னும் வரும் வல்லெழுத்து மிகும் எ-று.

(உ-ம்.) கலத்துக்குறை[1], அவற்றுக்கோடு[2] - என வரும். கலன் என னகாரமாக நிறுத்திக் கெடுக்க.

**ஒன்றென முடித்தல்** என்பதனான், புள்ளியீறு அல்வழி விகாரவகையான் நின்றனவும் வற்றின்மிசை ஒற்று என்று கெடுக்கப்படும் எனக்கொள்க.

(உ-ம்.) அவற்றுக்கோடு[3] என வரும். இஃது ஐகார ஈறு.

ஈண்டு வல்லெழுத்து மிகும் என்றது, ஈற்று வல்லெழுத்து இன்றித் திரிந்து முடியும் ணகரமும் னகரமும் லகரமும் ளகரமும் என இவற்றை நோக்கி என உணர்க.[4]

அத்து முற்கூறிய முறையன்றிக் கூற்றினான், அத்தின்மிசை ஒற்றுக் கெடாது நிற்கவும் பெறும்.

(உ-ம்.) விண்ணத்துக் கொட்கும், வெயிலத்துச் சென்றான், இருளத்துக் கொண்டான் - எனவரும்.

'மெய்' என்றதனான், அத்தின் அகரம் பிற உயிரின் முன்னும் கெடுதல் கொள்க.

(உ-ம்.) அண்ணாத்தேரி[5] என வரும். (31)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 134.** 1. கலன் + குறை > கலன் + அத்து + குறை > கல + அத்து + குறை > கல + த்து + குறை = கலத்துக்குறை. நிலைமொழியீற்று னகரம் அத்தின்மிசை ஒற்று எனக் கெட்டது. அத்துச் சாரியையது அகரம் 'கல' என்பதன் ஈற்று அகரம் முன் கெட்டது; சாரியை (யது ஈற்று) வல்லெழுத்தாகக் ககரம் மிக்கது.

2. அவ் +வற்று+கோடு> அ + வற்று + கோடு = அவற்றுக்கோடு.

3. அவை + கோடு >அவ் + கோடு >அவ் + வற்று + கோடு> அ+ வற்று+ கோடு =அவற்றுக்கோடு (ஈண்டு, 'அவ்' என்னும் வகரஈறு விகாரவகையான் வந்த விதியீறாம் என உரையாசிரியர் கருதுகிறார்போலும்.)

4. இந்நூற்பாவில் 'வல்லெழுத்து மிகும்' என்றது சாரியை வல்லெழுத்தை. திரிந்து முடியும் நிலைமொழி ஈறுகளாகிய ணகர னகரங்களையும் லகர ளகரங்களையும் நோக்கி இச்சாரியை வல்லெழுத்தைக் கொள்ளவேண்டும். நிலைமொழி யிறுதியாக நிற்றற்குரிய மெய்களுள் (78), ய ர ழ க்களின் முன்னர் வருமொழி வல்லெழுத்து மிகும். ஞ ந வ என்னும் மெய்கள் முன்னர் வலி வரின் உகரச்சாரியை ஞ ந வ க்களை இயைய அவை வருமொழி வன்கணம் மிகும். சுட்டுமுதல் வகரம் வற்றுச்சாரியை பெறுதலின், வலி வருமிடத்துச் சாரியை வல்லெழுத்து மிக்கு வரும். னகர லகரங்களும் ணகர ளகரங்களும் ஆகிய இந்நான்கும் வருமொழி வன்கணத்தை நோக்கி முறையே றகர டகரங்களாகத் திரிதலின் அவ்வன்கணம் மிகுதற்கு வாய்ப்பில்லை.

கலத்துக்குறை என்னும் முடிபின்கண் 'கலன்' நிலைமொழி ஆதலின் அவ்வீற்று னகரத்தை நோக்கி வருமொழி வல்லொற்று மிகாது ஆதலின், அத்துச்சாரியையினை நோக்கி சாரியை வல்லெழுத்தே மிகுதல் காண்க. ஏனை லகர ணகர ளகரங்கட்கும் அவ்வவ்வீற்றுச் சாரியை நோக்கியே சாரியை வல்லெழுத்தே மிகும் என்று கொள்க.

கலம் + குறை > கல + குறை > கல + க் + குறை = கலக்குறை (கலமும் குறையும் எனப் பொருள்படும்). இவ் அல்வழி முடிவில் சாரியை வாராமையின் ஈற்று வல்லெழுத்தே மிக்கவாறு.

5. அண்ணா + அத்து + ஏரி : அண்ணா என்னும் ஊரின்கண் உள்ள ஏரி

**நச்சினார்க்கினியம்**

### *133. அத்தும் வற்றும் வருவழிச் செய்கை*

**அத்தே வற்றே . . . . . . . வல்லெழுத்து மிகுமே.**

இஃது அத்து வற்று என்பனவற்றிற்கு நிலைமொழியது ஒற்றுக்கேடும், வருமொழி வன்கணத்துக்கண் ஒற்றுப்பேறும் ஆகிய செய்கை கூறுகின்றது.

இ-ள் : அத்தே . . . . . . ஒற்று - அத்தும் வற்றும் ஆகிய அவ்விரண்டு சாரியைமேல் நின்ற ஒற்று; மெய் கெடுதல் தெற்றென்றற்று-தன் வடிவு கெடுதல் தெளியப்பட்டது; அவற்றுமுன் . . . . மிகும் - அவ்விரு சாரியை முன்னும் வரும் வல்லெழுத்து மிக்கு முடியும் எ-று.

உ-ம் : கலத்துக்குறை, அவற்றுக்கோடு எனவரும். 'அத்திடை வரூஉம் கலம்என் அளவே' (168) 'சுட்டு முதல் வகரம் ஐயும் மெய்யும்' (183) என்பனவற்றான் அத்தும் வற்றும் பெற்றுவரும் மகர வகர ஈறுகட்கு(1) ஈற்று வல்லெழுத்து விதி இன்மையின், 'அவற்றுமுன் . . . மிகும்' என்று சாரியை வல்லெழுத்து விதித்தார். வல்லெழுத்து இன்றித் திரிந்து முடிவன ணகாரமும் னகாரமும் லகாரமும் ளகாரமும் ஆம். மகர ஈற்றிற்கு அத்தும், வகர ஈற்றிற்கு வற்றும் வரும் என்பது அவ்வச்சூத்திரத்தான் பெற்றாம். 'வற்றே அத்தே' என்னாத முறையன்றிக் கூற்றினான் புள்ளியீற்றின் முன்னர் அத்தின்மிசை ஒற்றுக்கெடாது நிற்றலும் கொள்க.

உ-ம் : விண்ணத்துக் கொட்டும், வெயிலத்துச் சென்றான், இருளத்துக் கொண்டான் என வரும்.

'மெய்' என்றதனான், அத்தின் அகரம் அகரம் முன்னரேயன்றிப் பிற உயிர் முன்னரும் கெடும் ஓரோவிடத்து

என்று கொள்க. (2) அண்ணாத்தேரி, திட்டாத்துக்குளம் என ஆகாரத்தின் முன்னரும் வரும் அத்தின் அகரம் கெட்டது. இவற்றை அகரஈறு ஆக்கியும் முடிப்ப.

இனி, 'தெற்றென்றற்றே' என்றதனான், அத்தின் அகரம் தெற்றெனக் கெடாது நிற்கும் இடமும் கொள்க. அதவத்துக்கண், விளவத்துக்கண் எனவரும். (31)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 133**

1. ஈற்று வல்லெழுத்து விதியில்லாதன என்றது, கலம் - அவ் - என்னும் நிலைமொழிகளின் ஈற்றெழுத்துக்கள் ஒற்று ஆதலின், வல்லினம் மிகா; உயிராயின் மிகும். ஆதலின் விதி இல்லை என்றபடி.

2. அண்ணா, திட்டா என்பன ஊர் போலும்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 134.** அத்தே வற்றே....வல்லெழுத்து மிகுமே.

உரைகாரர் இருவரும் நிலைமொழி 'அவை' எனக் கொண்டனர். இவர் 'அவ்' எனக்கொண்டு உரைப்பது 178ஆம் சூத்திரக்கருத்தை உட்கொண்டமையைப் புலப்படுத்தும். ரெட்டியார் கொண்ட கருத்தும் அதுவே.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 133.** அத்தே வற்றே.....வல்லெழுத்து மிகுமே.

மெய்யீற்று மொழிகளின் முன்னர் இச்சாரியைகள் வரின், இவை சினைகெடாமலும் திரியாமலும் இருப்ப, நிலைமொழிஈறே கெடுதலின், இச்சூத்திரத்தை, 'வஃகான் மெய்கெட....ஆகிய பண்பே,' 'அத்தின் அகரம் அகரமுனை இல்லை' என்னும் சூத்திரங்களை அடுத்து கூறாமல் ஈண்டுக் கூறினார். இச்சூத்திரம் நிலைமொழி ஈறு கெடுதலை விதிக்கிறது.

**இளம்பூரணம்**

## 135. எழுத்துச் சாரியைகள்

**காரமும் கரமும் கானொடு சிவணி**
**நேரத் தோன்றும் எழுத்தின் சாரிலய.**

(இச்....எனின்) எழுத்துச்சாரியைகட்குப் பெயரும் முறையும் உணர்....ற்று.

(இ-ள்.) காரமும் கரமும் கானொடு பொருந்தி எல்லா ஆசிரியரானும் உடம்படத் தோன்றும், எழுத்தின் சாரியை ஆதற்கு எ-று.

'நேரத் தோன்றும் 'என்றதனான் நேரத் தோன்றாதன ஆனம், ஏனம், ஓனம் - என இவை. (32)

**நச்சினார்க்கினியம்**

## 134. எழுத்துச் சாரியைகள்

**காரமும் கரமும் . . . . . எழுத்தின் சாரியை.**

இது மொழிச்சாரியையை விட்டு எழுத்துக்கட்கு வரும் சாரியைகளின் பெயரும் முறையும் உணர்த்துகின்றது.

இ-ள் : காரமும் . . . . . . . சிவணி - காரமும் கரமும் கானொடு பொருந்தி; எழுத்தின் சாரியை நேரத் தோன்றும் - எழுத்தின்கண் வரும் சாரியை ஆதற்கு எல்லா ஆசிரியரானும் உடம்படத் தோன்றும் எ-று.

காரமும் கரமும் அடுத்துச் சொல்லியவழி இனிது இசைத்தலானும், வழக்குப் பயிற்சி உடைமையானும், காரம் வடஎழுத்திற்கும் உரியது ஆதலானும் (அ) சேரக் கூறினார்; கான் அத்தன்மையின்மையினான் பின் வைத்தார். 'நேரத் தோன்றும்' எனவே, நேரத் தோன்றாதனவும் உளவாயின.

அவை ஆனம் ஏனம் ஓனம் என்க. இவை சிதைந்த வழக்கேனும் கடியலாகா(ஆ) ஆயின. (32)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 134

(அ) காரம் வடவெழுத்திற்கும் உரியது என்று திருத்திக் கொள்ளல் வேண்டும். கரம் வடவெழுத்திற்கு உரியதன்று என்பது வெளிப்படை.

(ஆ) 'ஆ' ஆனம் எனவும், 'ஏ' ஏனம் எனவும், 'ஓ' ஓனம் எனவும் அம்சாரியை புணர்ந்து இடைக்காலத்து வழங்கப்பட்டனபோலும். இறைவன் அகரமாய் நிற்றலை 'ஆனத்து முன்னெழுத்தாய் நின்றார்போலும்' (தேவாரம் 6537) என்றார் அப்பரடிகள். ஆய்தம் அஃகேனம் என வழங்கப்படுதல், 'அஃகேனம் ஆய்தம் தனிநிலை புள்ளி, ஒற்று இப்பால ஐந்தும் இதற்கே' என்பது யா. வி. மேற்கோள் சூத்திரத்தான் (பக். 27) அறியப்படும்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

## சூ. 135. காரமும் கரமும்....எழுத்தின் சாரியை.

நேரத் தோன்றாத சாரியைகளுள் 'காரை' என்பதனையும் ஒன்றாக இவர் குறிப்பிட்டார். அதனை உரைகாரர் இருவரும் காரம் என்பதன் திரிபாகக் கொண்டனர்.

### இளம்பூரணம்

## 136. நெட்டெழுத்துப் பெறாதன

**அவற்றுள்**
**கரமும் கானும் நெட்டெழுத்து இலவே.**

*(இச்....எனின்)* அவற்றுள் சிலசாரியை சில எழுத்தொடு வாரா என எய்தியது விலக்குதல் நுதலிற்று.

*(இ-ள்.)* மேல் சொல்லப்பட்டவற்றுள் கரமும் கானும் நெட்டெழுத்திற்கு இல, காரம் நெட்டெழுத்திற்கு உண்டு எ-று.

*(உ-ம்.)* ஆகாரம், ஈகாரம் - என வரும். *(33)*

**நச்சினார்க்கினியம்**

## *135. நெட்டெழுத்துப் பெறாதன*

**அவற்றுள்,**
**கரமும் கானும் நெட்டெழுத்து இலவே.**

இஃது அவற்றுள் சில சாரியை சில எழுத்தொடு வாரா என எய்தியது விலக்கிற்று.

இ-ள் : அவற்றுள் - முற்கூறியவற்றுள்; கரமும் கானும் நெட்டெழுத்து இல - கரமும் கானும் நெட்டெழுத்திற்கு வருதல் இல எ-று.

எனவே, நெட்டெழுத்திற்குக் காரம் வருமாயிற்று. ஆகாரம் ஈகாரம் - என ஒட்டுக. ஐகாரம் ஔகாரம் எனச் சூத்திரங்களுள் வருமாறு காண்க. *(33)*

**இளம்பூரணம்**

## *137. குற்றெழுத்துப் பெறுவன*

**வரல்முறை மூன்றும் குற்றெழுத்து உடைய.**

*(இச்....எனின்)* நெட்டெழுத்திற்குச் சில சாரியை விலக்கினமையின் குற்றெழுத்திற்கும் சில விலக்குவது உண்டுகொல் என்னும் ஐயம் தீர்த்தல் நுதலிற்று.

(இ-ள்.) வரலாற்றுமுறைமையை உடைய மூன்று சாரியையும் குற்றெழுத்து உடைய எ-று.

(உ-ம்.) அகாரம் அகரம் அஃகான் - என வரும்.

'வரன் முறை' என்றதனான், அஃகான் என்புழி ஆய்தம் மிக்கு முடியும் என்பது கொள்க. (34)

**நச்சினார்க்கினியம்**

## 136. குற்றெழுத்துப் பெறுவன

**வரல்முறை மூன்றும் குற்றெழுத்து உடைய.**

இஃது ஐயம் அகற்றியது; என்னை? நெட்டெழுத்திற்குச் சில சாரியை விலக்கினாற் போலக் குற்றெழுத்திற்கும் விலக்கற்பாடு உண்டோ என ஐயம் நிகழ்தலின்.

இ-ள் : வரல்முறை . . . . . உடைய - வரலாற்று முறைமையயுடைய மூன்று சாரியையும் குற்றெழுத்துப் பெற்று வருதலையுடைய எ-று.

வருமாறு : அகாரம் அகரம் அஃகான் - என ஒட்டுக. 'வகார மிசையும்' (330) 'அகர இகரம்' (54) 'வஃகான் மெய்கெட' (122) எனவும் பிறவும் சூத்திரங்களுள் காண்க. இஃகான் உஃகான் எஃகான் ஒஃகான் - என்பன பெருவழக்கு அல்ல. 'வரல்முறை' என்றதனான் அஃகான் என்புழி ஆய்தம் பெறுதல் கொள்க. இது 'குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி' (38) என்பதனான் பெறாதாயிற்று, மொழியாய் நில்லாமையின். (அ) (36)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

## சூத்திரம் 136

(அ) ஆண்டுக் கூறியது மொழிக்கண் நிகழும் ஆய்தம். இது தனியெழுத்தாகிய உயிர்க்குறில் கான்சாரியை பெறுங்கால் இடையே மிக்க திரிபாகத் தோன்றும் ஆய்தம்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 136. வரல்முறை மூன்றும் குற்றெழுத்து உடைய.

(எ-டு.) அகரம் அகாரம் அஃகான் எனவும், ககரம் மகாரம் றஃகான் எனவும் வரும்.

'வரன்முறை' என்றதனான், கான்சாரியை வருங்கால் இடையே ஆய்தம் செய்யுள் விகாரமாக வருதல் கொள்க. சகரம் என்புழி, உயிர்மெய்யாயின் கரம் சாரியையாம்; மெய்யாயின் அம்மெய்யின் சாரியையாகிய அகரத்தின் சாரியையாம்.

**இளம்பூரணம்**

## 138. ஐ ஔ கானும் பெறுதல்

**ஐகார ஔகாரம் கானொடும் தோன்றும்.**

(இச்....எனின்) 'அவற்றுள் கரமும் கானும்' என்பதற்கு ஒரு புறனடை உணர்...ற்று.

(இ-ள்.) நெட்டெழுத்துக்களில் ஐகாரமும் ஔகாரமும் முன் விலக்கப்பட்ட கானொடும் தோன்றும் எ-று.

(வருமாறு) ஐகான் ஔகான் - என வரும். (35)

**நச்சினார்க்கினியம்**

## 137. ஐ ஔ கானும் பெறுதல்

**ஐகார ஔகாரம் கானொடும் தோன்றும்.**

இஃது 'அவற்றுள் கரமும் கானும்' என்பதற்குப் புறனடை கூறுகின்றது.

இ-ள் : ஐகார.......தோன்றும் - நெட்டெழுத்துக்களுள் ஐகார ஔகாரங்கள் முன் விலக்கப்பட்ட கானொடும் தோன்றும் எ-று.

வருமாறு : ஐகான், ஔகான் - என வரும். உம்மை இறந்தது தழீஇயிற்று, காரத்தைக் கருதுதலின். (35)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 137. ஐகார ஔகாரம் கானொடும் தோன்றும்.**

கரம் காரம் கான் - என்பவை தமிழ்அடியாக ஆக்கம் பெற்ற இடைச்சொற்களேயாம். கரம் கான் - என்பவை வடமொழியிற் பெறப்படாமை அறிக.

**இளம்பூரணம்**

***139. புள்ளியீற்றுமுன் உயிர்***

**புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித்து இயலாது**
**மெய்யொடு சிவணும் அவ்வியல் கெடுத்தே.**

*(இச்....எனின்)* உயிர்முதல்மொழி புள்ளியீற்று முன் வருங்கால் பிறப்பதொரு கருவி கூறு....ற்று.

*(இ-ள்.)* புள்ளியீற்றுச் சொல்முன் உயிர் தனித்து நடவாது, அப் புள்ளியொடும் கூடும், தான் தனித்துநின்ற அவ்வியல்பினைக் கெடுத்து எ-று.

*(உ-ம்.)* ஆலடை என வரும்.

***ஒன்றென முடித்தல்***[1] என்பதனான், இயல்பு அல்லாத புள்ளிமுன் உயிர் வந்தாலும் இவ்விதி கொள்க.

*(உ-ம்.)* அதனை எனவும், நாடுரி எனவும் வரும்.[2]

'புள்ளியீற்று முன்னும்' எனத் தொக்கு நின்ற உம்மையை விரித்து, அதனானே குற்றியலுகரத்தின் முன்னும் இவ்விதி கொள்க.

(உ-ம்.) நாகரிது - என வரும். (36)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 139.*** 1. ஒன்றென முடித்தல் உத்தி விளக்கம் சூ77 உரைக்குறிப்பிற் காண்க.

2. அது+அன்+ஐ: துகரத்தின் முற்றுகரம்கெட நின்ற தகரம் விதியீறு.

நாழி+உரி: நிலைமொழியீற்று உயிர்மெய்கெட, வந்து ஒற்றிய டகரம் விதியீறு.

**நச்சினார்க்கினியம்**

## *138. புள்ளியீற்று முன் உயிர்*

**புள்ளி ஈற்றுமுன்** . . . . . . . **அவ்வியல்** (1) **கெடுத்தே**.

இ-ள் : புள்ளி . . . . . இயலாது - புள்ளியீற்றுச் சொல் முன்னர் வந்த உயிர்முதல் மொழியின் உயிர் தனித்து நடவாது; மெய்யொடும் . . . . . கெடுத்து - அப்புள்ளியொடும் கூடும், தான் தனித்து நின்ற அவ்வியல்பினைக் கெடுத்து எ-று.

எனவே, நீரொடு கூடிய பால் போல நின்றது என்று ஒற்றுமை கூறினார். ஈண்டு இதனானே உயிர்மெய் எனப் பெயர்பெற்றது.

உ - ம் : பாலரிது பாலாழி ஆலிலை பொருளீட்டம் வானுலகு வானூடு வேலெறிந்தான் வேலேற்றான் பொருளையம் பொருளொன்று நாணோடிற்று சொல்லெளவியம் - எனவரும்.

**ஒன்றென முடித்தல்** என்பதனான், இயல்பு அல்லாத புள்ளிமுன்னர் உயிர் வந்தாலும் இவ்விதி கொள்க. அதனை

அதனொடு நாடுரி (அ) - எனவரும். இவற்றைச் 'சுட்டுமுதல் உகரம் அன்னொடு' (176) 'உரிவரு காலை நாழிக் கிளவி' (240) என்பனவற்றான் முடிக்க. 'புள்ளி ஈற்று முன்னும்' என உம்மையை மாறி எச்சவும்மையாக்கிக் குற்றியலுகரத்தின் முன்னரும் என அவ்விதி கொள்க. எனவே, 'குற்றியலுகரமும் அற்று' (105) என்றதனொடும் பொருந்திற்றாம்.

உ-ம் : நாகரிது வரகரிது - என வரும். (36)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 138

1. இச்சூத்திரத்து 'அவ்வியல் கெடுத்து' என்பதற்குத் தான் தனித்து நிற்கும் இயல்பினைக் கெடுத்து என்று பொருள் கொள்ளாது, புள்ளியீறாக நிற்கும் அவ்வியல்பினைக் கெடுத்து என்று மெய்க்கும் - குற்றியலுகராஈறாக நிற்கும் அவ்வியல்பினைக் கெடுத்து என்று குற்றியலுகர ஈற்றிற்கும் - ஏற்ப பொருள்கொள்ளின், நன்னூலார் குற்றியலுகரம் கெட்டுப் புணரும் என்று கூறியது தொல்காப்பியர்க்கும் கருத்தாம். கெட்டுப் புணரும் என்பதே தொல்காப்பியர்க்கும் கருத்தாதல், 'யகரம் வருவழி இகரம் குறுகும், உகரக் கிளவி துவரத் தோன்றாது' (410) என்னும் சூத்திரத்தை உற்றுநோக்கின் அறியப்படும். இனி, 'புள்ளி யீற்றுமுன் உயிர்தனித்து இயலாது' என்புழி, 'ஈற்றும்' என உம்மையை விரித்துக் குற்றியலுகர ஈற்றிற்கு வலிந்து விதி கொள்வதினும், 'புள்ளி ஈறு' என்பதனை இருமுறை ஓதி இருதொடராகக் கொண்டு மெய்யீறு என்றும், புள்ளிபெறும் குற்றியலுகராஈறு என்றும் பொருள்கொள்ளலாம் என்பது எமது கருத்து. அங்ஙனம் கொள்ளின், 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என ஆசிரியர் ஓதிய விதிக்கும் ஒருபயன் உண்டாம். இடையியலில் 'வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆகுநவும்' என்பதையும், வேற்றுமையியலில் ஐந்தாம் வேற்றுமைச் சூத்திரத்து 'இதனின் இற்று இது' என்பதையும் இரு தொடராக வைத்துச் சேனாவரையர் பொருள்கூறுதல்

காண்க. அன்றி, ஒரு சூத்திரத்திற்கு இருபொருளும் கொள்வர். அவ்வாறே கோடலும் ஆம். இதுபோல்வனவற்றைப் பேராசிரியர் 'ஒப்பக்கூறல்' என்பர்.

(அ) அத்+அன்+ஐ, நாட்+உரி-என முறையே சுட்டு முதல் உகரம் கெட நின்ற தகரமும், ழகர இகரம் கெட்டவிடத்தே ஒற்றிய டகரமும் ஆகிய விதியீறு.

## சிவஞான முனிவர் உரைக்குறிப்பு

**சூ. 138.** இங்ஙனம் கூறிய ஆசிரியர் கருத்து நோக்காது 'யாம் பிடித்ததே சாதிப்பேம்' என்னும் கருத்தால் 'புள்ளியொடு நிலையல்' என்பதனொடு மாட்டெறியாது 'குற்றியலுகரமும் அற்றென மொழிப' எனப் புணரியல் முதற்கண் கூறிய சூத்திரத்தினைப் 'புள்ளி யீற்றுமுன் உயிர் தனித்து இயலாது' என அவ்வியலின் இறுதிக்கண் கூறிய சூத்திரத்தொடு மாட்டெறிந்து பொருள்கூறி, ஆறாயிரம் - நூற்றொன்று - முதலியவற்றுக்கும் சூத்திரக் கிடக்கைமுறை நோக்காது, குற்றியலுகரத்தைப் புள்ளியீற்றொடு தாங்கள் மாட்டெறிந்ததற்கு ஏற்பவே பொருளுரைத்தார், மாட்டேற்று முறைமை உணராத உரையாசிரியரை உள்ளிட்டோர் என உணர்க.

இன்னும், 'அவற்றுள், மெய்யீறு எல்லாம்' என்னும் சூத்திரத்துள், அவ்வீற்றின்மெய் உயிர்முதல்மொழி வந்தால் அஃது ஏற இடம்கொடுத்து நிற்கும் என்பதூஉம் கூறினாராயிற்று என உரைத்தார். இச்சூத்திரத்தால் இவ்விதியும் கூறினாராயிற்றேல், 'புள்ளி யீற்றுமுன்' எனச் சூத்திரம் செய்தது கூறியது கூறல் என்னும் குற்றம் தங்குதற்கோ எனக் கூறி மறுக்க.

(தனிமெய்யெழுத்தோடு...அறியக்கூடும் என்பது ரெட்டியார் வரைந்த ஆராய்ச்சியுரை. முற்றுகர ஈறுகெடுமாறுபோலக் குற்றுகரம் கெடாது நிற்கும் என்பதே உரையாசிரியன்மார் கொள்கை. 'ஒழிதல்' என்று சூத்திரத்தில்

வரும் சொற்குப் பொருள் கெடாது நிற்றல் என்பதனை 176, 283, 315, 347, 469, 472 எண்ணிட்ட சூத்திரங்களில் நச்சினார்க்கினியார் உரையால் அறியலாம்.)

**சூ. 138.** [ தனி மெய்யெழுத்தோடு உயிரெழுத்துச் சேர்தலை மேல் நூன்மரபில் கூறினார். அவ்வாறு, புள்ளியீற்றொடும் உயிர்சேர்ந்து இயலும் என்பதை இச்சூத்திரத்தில் கூறினார். இச்சூத்திரத்தில் புள்ளியீறு என்பதனை மெய்யீறு என்று கொண்டு நன்னூலார், 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே' (மெய்.1) என்று கூறினார்.

ஈண்டுப் புள்ளியீறாவன மெய்யெழுத்து ஈறும் குற்றியலுகர ஈறும். மேல் 'மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்' (புணரியல் 2) என்றும், 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' (ஷை 3) என்றும் கூறிய சூத்திரங்களான், மொழியின் ஈற்றில் நிற்கும் மெய்யெழுத்தும், மொழியின் ஈற்றில் நிற்கும் குற்றியலுகரமும் புள்ளிபெறும் என்று விதித்ததனானும், ஈண்டும் 'மெய்யீற்று முன்' என்று கூறாமல் 'புள்ளி யீற்றுமுன்' எனக் கூறியதனானும் இது பெறப்படும்.

முற்றியலுகரத்தோடு உயிர்முதல்மொழி புணருமிடத்து, முற்றுகரம் கெடுமாயின், ஆண்டு அவ்வுகரம்கெடுதற்கு விதி (உருபி.4) கூறுவர் ஆசிரியர். குற்றியலுகரத்தோடு உயிர் முதல்மொழி புணருமிடத்து, மெய்யீற்றின்மேல் உயிரெழுத்து ஊர்ந்துவருதல் போலவே அக்குற்றியலுகர ஈற்றின்மேல் உயிர் ஊர்ந்து வரும் - என்பது அவர் கருத்து ஆதல் நன்கு பெறப்படும்.

**'ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டும் சாரியை மொழியே'**
**(குற்றிய.54)**

**'ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டும் சாரியை மரபே' (ஷை 65)**

என்னும் சூத்திரங்களில் குற்றியலுகர ஈறு திரியாமலேயே இன்சாரியையொடு சேரும் என்று விதித்துள்ளார். முற்றியலுகரம் கெடும் என்பது,

> 'சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி
> ஒட்டிய மெய்யொழித்து உகரம் கெடுமே'
>
> (உருபி.4)

என்னும் சூத்திரத்திலும் பிறாண்டும் விதித்திருத்தலான் அறியக்கூடும்.] எ. ஆ. பக். 40, 41

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 138.** **புள்ளி ஈற்றுமுன்....அவ்வியல் கெடுத்தே.**

கெடுத்து இயலாது என இயைக்க.... தனிமெய் யெழுத்தோடு உயிரெழுத்துச் சேர்தலை மேல் நூன்மரபில் கூறினார்; அவ்வாறே புள்ளியீற்றொடும் உயிர் சேர்ந்து இயலும் என்பதை இச்சூத்திரத்தில் கூறினார்....ஈண்டுப் புள்ளியீறு அவன மெய்யெழுத்து ஈறும் குற்றியலுகர ஈறும்.

இச்சூத்திரம் கூறாக்கால், உரும் இன் ஐ - அத் அன் ஐ - அவற்ற் ஒடு உம் - என்பனபோல் அல்லாமல், உருமினை - அதனை - அவற்றொடும் - என்பன போன்று வருதற்கு விதியின்றாம்.

மெய்யீற்றின்மேல் உயிரெழுத்து ஊர்ந்து வருதல் போலவே, குற்றியலுகர ஈற்றின்மேலும் உயிரெழுத்து ஊர்ந்துவரும் என்பது ஆசிரியர் கருத்தாதல் நன்கு பெறப்படும்.

தனி மெய்யெழுத்தோடு உயிரெழுத்துச் சேர்தலை மேல் நூன்மரபில் கூறினார். அவ்வாறு, புள்ளியீற்றொடும் உயிர்சேர்ந்து இயலும் என்பதை இச்சூத்திரத்தில் கூறினார். இச்சூத்திரத்தில் புள்ளியீறு என்பதனை மெய்யீறு என்று கொண்டு நன்னூலார், 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே' (மெய்.1) என்று கூறினார்.

ஈண்டுப் புள்ளியீறாவன மெய்யெழுத்து ஈறும் குற்றியலுகர ஈறும். மேல் 'மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்' (புணரியல் 2) என்றும், 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' (ஷை 3) என்றும் கூறிய சூத்திரங்களான், மொழியின் ஈற்றில் நிற்கும் மெய்யெழுத்தும், மொழியின் ஈற்றில் நிற்கும் குற்றியலுகரமும் புள்ளிபெறும் என்று விதித்ததனானும், ஈண்டும் 'மெய்யீற்று முன்' என்று கூறாமல் 'புள்ளி யீற்றுமுன்' எனக் கூறியதனானும் இது பெறப்படும்.

முற்றியலுகரத்தோடு உயிர் முதல்மொழி புணருமிடத்து, முற்றுகரம் கெடுமாயின், ஆண்டு அவ்வுகரம் கெடுதற்கு விதி (உருபி.4) கூறுப ஆசிரியர். குற்றியலுகரத்தோடு உயிர்முதல்மொழி புணருமிடத்து, மெய்யீற்றின்மேல் உயிரெழுத்து ஊர்ந்துவருதல் போலவே, அக்குற்றியலுகர ஈற்றின்மேல் உயிர் ஊர்ந்து வரும்-என்பது அவர் கருத்து ஆதல் நன்கு பெறப்படும்.

**'ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டும் சாரியை மொழியே'**
(குற்றிய.54)

**'ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது**
**இன்பெறல் வேண்டும் சாரியை மரபே'** (ஷை 65)

என்னும் சூத்திரங்களில் குற்றியலுகர ஈறு திரியாமலேயே இன்சாரியையொடு சேரும் என்று விதித்துள்ளார். முற்றியலுகரம் கெடும் என்பது.

**'சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி**
**ஒட்டிய மெய்யொழித்து உகரம் கெடுமே'**
(உருபி.4)

என்னும் சூத்திரத்திலும் பிறாண்டும் விதித்திருத்தலான் முற்றுகரக்கோடு அறியக்கூடும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

***சூ. 138.*** **புள்ளி ஈற்றுமுன்....அவ்வியல் கெடுத்தே.**

*(இ-ள்.)* நிறுத்த சொல்லின் இறுதி நிற்கும் புள்ளியெழுத்தின் முன் குறித்துவரு சொல்லின் முதல் வரும் உயிர் தான் தனித்துப் பிளவுபட்டு இசைக்காமல், அரைமாத்திரை ஒலிப்புடைத்தாய் நிற்கும் புள்ளியெழுத்தின் மாத்திரை இயல்பினைக் கெடுத்து (ஒலிப்புஇல்லாத) மெய்வடிவு ஆக்கி அதனொடு பொருந்தி இசைக்கும்.

'மெய்உயிர் நீங்கின் தன்உரு ஆகும்' என ஆசிரியர் அடுத்துக் கூறுதலின், இப்புணர்ச்சியை 'நீரொடு கூடிய பால்போல் நின்றது' என நச்சினார்க்கினியர் கூறுவது பொருந்தாது.

['நீரொடு கூடிய பால் போல' என்றது, உயிர் தனித்து இயலாது மெய்யொடும் சிவணும் ஒற்றுமைநயம் பற்றியே நச்சினார்க்கினியர் கூறிய உவமம் என்க. அடுத்து வரும் சூத்திரம் வேற்றுமைநயம் பற்றியது ஆகலின், அதனை ஈண்டுக் காட்டி இவ்வுவமம் பொருந்தாமை கோடல் நேரிதன்று.]

**இளம்பூரணம்**

***140. உயிர் நீங்கியவழி மெய்யது நிலை***

**மெய்உயிர் நீங்கின் தன்உரு ஆகும்.**

*(இச்....எனின்)* புணர்ச்சியிடத்து உயிர்மெய் உயிர் நீங்கியவழிப் படுவதொரு விதி கூறு....ற்று.

*(இ-ள்.)* மெய் தன்னொடு கூடிய உயிர் புணர்ச்சி யிடத்து நீங்கிய வழித் தன் புள்ளி வடிவு பெறும் எ-று.

*(உ-ம்.)* அதனை: அதன் ஐ - என வரும். *(37)*

**நச்சினார்க்கினியம்**

## *139. உயிர் நீங்கியவழி மெய்யது நிலை*

**மெய்உயிர் நீங்கின் தன்உரு ஆகும்.**

இஃது உயிர்மெய் புணர்ச்சிக்கண் உயிர் நீங்கியவழிப் படுவதொரு விதி கூறுகின்றது.

இ-ள் : மெய் ...... ஆகும் - மெய் தன்னொடு கூடிநின்ற உயிர் புணர்ச்சியிடத்துப் பிரிந்து வேறு நின்றதாயின், தான் முன்னர்ப் பெற்றுநின்ற புள்ளிவடிவு பெறும் எ-று.

ஆல் இலை, அதன் ஐ - எனவரும்.

உயிர் இன்ன வடிவிற்று என்று ஆசிரியர் கூறாமையின் உயிர்க்கண் ஆராய்ச்சி இன்று.

இனி எகரஒகரங்களைப் புள்ளியான் வேற்றுமை செய்தலின், தொன்றுதொட்டு வழங்கின வடிவுடைய என்று கோடலுமாம்.

புணர்ச்சியுள் உயிர்மெய்யினைப் பிரிப்பர். ஆதலின் இது கூறாக்கால் குன்றக்கூறலாம் என்றுணர்க. (37)

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 139. மெய்உயிர் நீங்கின் தன்உரு ஆகும்.**

(இ-ள்.) வருமொழி உயிர் சிவணுதல்பொருட்டுப் புள்ளிஇயல்பு கெட்டு மெய்யாகி நின்ற எழுத்துத் தன்னை ஊர்ந்த உயிர் பிரிந்தவழி (நிலைமொழிப்பொருள் சிதையாதவாறு) தனது முன்னைய நிலையாகிய புள்ளி உருவாகி நிற்கும்.

**இளம்பூரணம்**

### *141. உடம்படுமெய்யது தோற்றம்*

**எல்லா மொழிக்கும் உயிர்வரு காலை**
**உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்.**

*(இச்....எனின்)* உயிரீறும் புள்ளியீறும் உயிர்முதல் மொழியொடு புணரும்வழி நிகழ்வதொரு கருவி கூறு.....ற்று.

*(இ-ள்.)* மூவகைப்பட்ட மொழிக்கும்[1] உயிர்முதல் மொழி வருமிடத்து இடை உடம்படுமெய் ஆகிய வடிவு கோடலை நீக்கார் எ-று.

*(உ-ம்.)* புளியங்கோடு, எருவங்குழி, விண்வத்துக் கொட்கும் - என வரும்.

**உரையிற் கோடல்** என்பதனான், உடம்படுமெய்யாவன யகரமும் வகரமும் எனக் கொள்க.

**ஒன்றென முடித்தல்** என்பதனான், விகாரப்பட்ட மொழிக்கண்ணும் உடம்படுமெய் கொள்க.

*(உ-ம்.)* மரவடி, ஆயிருதிணை[2] - என வரும்.

'வரையார்' என்றதனான், உடம்படுமெய் கோடல் ஒருதலை அன்று என்பது கொள்ளப்படும்.

*(உ-ம்.)* கிளி அரிது, மூங்கா இல்லை - என வரும். *(38)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. *141.*** 1. உயிரும் உயிர்மெய்யும் மெய்யும் ஈறாய மூவகைப்பட்ட மொழி என்றவாறு.

2. மரம் என்னும் நிலைமொழியீற்று மகரம் கெட, அது 'மர' என விதியீறாய் நின்றது. அ+இருதிணை; நிலைமொழியாகிய சுட்டிடைச்சொல் நீண்டு 'ஆ' என விதியீறாய் நின்றது. இவ்விரண்டு ஈற்றின் முன்னர் முறையே வகரமும் யகரமும் உடம்படுமெய்யாய் வந்தியைந்தன.

**நச்சினார்க்கினியம்**

## 140. உடம்படுமெய்யது தோற்றம்

**எல்லா மொழிக்கும் . . . .உருவுகொளல் வரையார்.**

இஃது உயிர்ஈறும் உயிர்முதல் மொழியும் புணரும்வழி நிகழ்வதொரு கருவி கூறுகின்றது.

இ-ள் : எல்லா மொழிக்கும் - நிலைமொழியும் வருமொழியுமாய்ப் புணரும் எவ்வகை மொழிக்கும்; உயிர் வருவழி - உயிர் முதல்மொழி வருமிடத்து; உடம்படுமெய்யின் உருவுகொளல் வரையார் - உடம்படுமெய்யினது வடிவை உயிர்ஈறு கோடலை நீக்கார் கொள்வர் ஆசிரியர் எ-று.

அவை யகரமும் வகரமும் என்பது முதனூல் பற்றிக் கோடும்;

'உடம்படு மெய்யே யகார வகாரம்
உயிர்முதல் மொழிவரூஉங் காலை யான' எனவும்,
'இறுதியும் முதலும் உயிர்நிலை வரினே
உறும்என மொழிப உடம்பொடு மெய்யே'

எனவும் கூறினார் ஆதலின்.

உயிர்களுள் இகர ஈகார ஐகார ஈறு யகரஉடம்படுமெய் கொள்ளும்; ஏகாரம் யகாரமும் வகாரமும் கொள்ளும்; அல்லனஎல்லாம் வகரஉடம்படுமெய்யே கொள்ளும் என்றுணர்க.

உ-ம் : கிளியழகிது குரீஇ(அ)யோப்புவாள் வரையர் மகளிர் - எனவும், விளவழகிது பலாவழகிது கடுவழகிது பூவழகிது கோவழகிது கௌவடைந்தது - எனவும் ஒட்டுக. 'ஏயே இவளொருத்தி பேடியோ என்றார்' (சீவக. 652) 'ஏவாடல் காண்க' - என ஏகாரத்திற்கு இரண்டும் வந்தன.

*ஒன்றென முடித்தல்* என்பதனான்(1) விகாரப்பட்ட மொழிக்கண்ணும் உடம்படுமெய் கொள்க. மரவடி ஆயிருதிணை என வரும். 'வரையார்' என்றதனான், உடம்படுமெய் ஒருதலை அன்று. கிளி அரிது, மூங்கா இல்லை - எனவும் வரும். *ஒன்றென முடித்தல்* என்பதனான், 'விண் வத்துக் கொட்கும்' எனச் சிறுபான்மை புள்ளியீற்றினும்(ஆ) வரும். (2) செல்வுழி, உண்புழி - என்பன வினைத்தொகை என மறுக்க. (38)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 140***

'மெய்உயிர் நீங்கின் தன்னுரு ஆகும்' என்று மெய்யீற்றிற்கே கூறினாராயினும், குற்றியலுகரத்திற்கும் ஒன்றென முடித்தலால் கொள்ளப்படும்.

1. விகாரப்பட்ட மொழி என்றது, விதி ஈற்றை.

2. செல்வுழி - உண்புழி - என்பனவற்றை வினைத்தொகை என மறுக்க என்று இவர் கூறலின், செல்லுழி- உண்ணுழி - என்பன பிரித்துப் புணர்க்கப்படாத மரூஉமொழிகளாய் முறையே வகரமும் பகரமும் பெற்று இவ்வாறு நின்றன என்பது கருத்துப்போலும்.

(அ) குரீஇ : 'அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்' எனக் கொள்க.

(ஆ) இதனை மாறன் அலங்கார உரையாசிரியர் ஒற்றீற்று வகர உடம்படு மெய் என்பர். (47 : 1 உரை)

சிவஞானமுனிவர் உரைக்குறிப்பு

**சூ 140.** 'உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்' என ஆசிரியர் பொதுப்பட ஓதினாரேனும், உயிர்களை உடம்படுத்தற்கு உரியன இடப்பிறவியான் அவ்வுயிரோடு ஒத்த இடையெழுத்து என்பதூஉம், அவற்றுள்ளும் மொழி முதற்கண் வருதற்கு உரியன யகரவகரங்களே ஆதலின் அவையே ஈண்டைக்கு வரப்பெறும் என்பதூஉம் தாமே விளங்கும். அவற்றுள்ளும், பெரும்பாலும் இ ஈ ஏ ஐ - முன்னர் யகரமும், ஏனை உயிர்களின் முன்னர் வகரமும் வரும் என்பது ஏற்புழிக் கோடலான் பெறப்படும், 'உடம்படு மொழியே யகார வகாரம், உயிர்முதல் மொழிவரூஉம் காலை யான' என்ப ஆகலின்..... இஃது இருமொழியும் உடம்படுத்தற்கு வரும் கருவி ஆகலின் ஆசிரியர் இச்சூத்திரத்தைச் செய்கைஓத்துள் கூறாது கருவிஓத்துள் கூறினார். 'புள்ளி யீற்றுமுன்', 'மெய் உயிர் நீங்கின்' என்பனவும் வரிவடிவின்கண் அறிந்துகோடற்குச் செய்த கருவி யாகலின் கருவிஓத்துள் வைக்கப்பட்டன. நாகரிது என்புழி, ஒலியெழுத்தின்கண் படும் செய்கை இதனோடு இயையாமையானும், கருவிஓத்துள் புணர்மொழிச் செய்கை கூறுதல் பொருந்தாமையானும், மேற்கூறியவாற்றானும், 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்பதற்கு யாம் உரைத்ததே பொருள் என்பது தெற்றென உணர்க.

யகரவகரங்களே உடம்படுமெய் எனப் பெயர்பெறும் என்க. 'விண்வத்துக் கொட்கும் வண்ணத்து அமரர்' என்புழி, வகரம் உடம்படாதவற்றை உடம்படுத்த வந்தது அல்லாமையின், இன்னோரன்னவை உடம்படுமெய் எனப் பெயர் பெறுமாறு இல்லை என்பது.

[மெய்பிறிதாதல் - மிகுதல் - குன்றல் - என்னும் மூன்று திரிபிடன்களும் இவ்வியலுள் இடம்பெற்றிருத்தலின், இது முழுவதூஉம் கருவிஓத்து அன்மை உணரப்படும். படவே, குற்றியலுகரம் தான் கெடாமைநின்று உயிரேற இடங்கொடுக்கும் விதி இச்சூத்திரத்தால் பெறப்படுதற்கண் இழுக்கில்லையன்றே?

'விண்வத்துக் கொட்கும்' என்புழி, முடிந்து கிடந்த புணர்மொழியில் வகரமெய் வேண்டாவழிச் சாரியை போல வந்தியைந்ததைக் கண்டு அதனைச் சாரியை என்னலாகாமையின், உடம்படுமெய் என்றார் உரையாசிரியர் நச்சினார்க்கினியர். 'ஒன்றெனமுடித்தல்' உத்தியான் மாறனலங்கார உரையாசிரியர் ஒற்றீற்று வகர உடம்படுமெய் வந்தது என்பர். *(47-1 உரை)* ]

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. *140.* எல்லா மொழிக்கும்....உருபுகொளல் வரையார்.**

'வரையார்' என்றதனான், உடம்படுமெய் இட்டு எழுதுதல் தொல்வழக்கு அன்று எனவும், தொல்வழக்கு அன்றாயினும் ஆசிரியர்கள் அவ்வழக்கினை ஏற்றுக்கொண்டனர் எனவும் போதரும். இனி உடம்படுமெய் பெறுதல் ஒருதலையாயின், 'உடம்படு மெய்யின் உருபுகொளல் வேண்டும்' என்று விதிப்பார்.

'மாயிருள் ஞாலம்' *(திருமுருகு.91)* 'பாயிருள் பருகி' *(பெரும்பாண்.1)* என்பன போலச் சிலவழி ஆகாரத்தின்முன்னும், 'கோயில்' என ஓகாரத்தின் முன்னும் யகரம் உடம்படுமெய்யாக வருகிறது. (கன்னடம் தெலுங்கு மலையாளமொழிகளிலும் அவ்வாறு வருதற்கு இவர் உதாரணம் காட்டுகிறார்.)

ஆசிரியர் வற்புறுத்திக் கூறுமிடத்தே 'வேண்டும்' என்னும் சொல்லினை ஆளும் இயல்பினர் ஆதலை,

**'சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்**
**ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும்'** *(உயிர்.3)*

**'குற்றெழுத்து இம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**நிற்றல் வேண்டும் உகரக் கிளவி'** (ஷை 65)

என்றும், பிறாண்டும் கூறியிருப்பவற்றான் அறியலாகும். இதனை உய்த்துணராது, பிற்காலத்தவர் எல்லா இடங்களிலும்

உடம்படுமெய் வந்தே தீரல்வேண்டும் எனக்கருதி, யாண்டும் தந்து எழுதுவாராயினர்.

இளம்பூரணஅடிகளும் ஆசிரியர் நச்சினார்க்கினியரும், '' 'வரையார்' என்றதனான், உடம்படுமெய் கோடல் ஒருதலை அன்று. கிளி அரிது. மூங்கா இல்லை எனவும் வரும்'' என்று எழுதியிருப்பது இக்கொள்கைக்குத் துணையாகும்.

'உடம்படுமெய்' என்று பொதுப்படக் கூறினாராயினும், அம்மெய் யகர வகரம் என அறியப்படுகின்றது. இகர ஈகார ஏகார ஐகார ஈற்றின் முன் யகரமும், அகர ஆகார உகர ஊகார ஓகார ஒளகார ஈற்றின்முன் வகரமும் வருகின்றன. ஆகார ஓகாரங்கட்கு முன்னர் ஒரோவழி யகரமும் வருகின்றது. இவ்விரண்டு மெய்கள் மட்டும் இவ்வாறு வருதற்குக் காரணம் நோக்குதும்: இடையண்ணத்தில் பிறப்பனவாகிய இஈ, எஏ ஐ-களுக்கு முன் இடையண்ணத்தில் பிறப்பதாகிய யகரமும், இதழில் பிறப்பனவாகிய உ ஊ ஒ ஓ ஒள - களுக்கு முன் இதழில் பிறப்பதாகிய வகரமும் வருகின்றன. அகர ஆகாரங்கள் இவ்விரண்டிடங்களுள் ஒன்றிலும் பிறப்பன அல்ல ஆயினும், வாய் அங்காந்து ஒலிக்கப் பிறக்கும் அவ்வொலி இதழிடையேயன்றி வெளிப்படுதல் இயலாது ஆகலின், அவற்றின்முன் இதழில் தோன்றும் வகாரம் வருவதாயிற்று.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 140. எல்லா மொழிக்கும்....உருபுகொளல் வரையார்.**

இவ்வுடம்படுமெய்கள் எழுத்தும் சாரியையும் போலப் பொருள் நிலைக்கு உதவ வாராமல் இரண்டு உயிர்களை இணைப்பதற்கு ஆசாக வந்து பொதுப்பட நிற்றலின் 'உடம்படுமெய்' என்று வாளா கூறாமல், 'உடம்படுமெய் என்னும் உருபு' என்றார்.

ஒருமொழிப்புணர்ச்சிக்கண் நிற்கும் உயிரும் புணர்ச்சிவிகாரத்தான் மிகும் உயிரும் உடம்படுமெய் பெறா என அறிக........

எகரஒகரங்கள், எவ்வணி - நொவ்வுற்றான் - என இரட்டித்து வரும்.

[எழுத்துப்பேறு, சாரியை பொருள்நிலைக்கு உதவுதல் போல உதவாமல் புணர்ச்சிக்குத் துணைபுரியும் அளவாக நிற்கும் என்பதனை இவரே 112ஆம் சூத்திரவுரையுள் குறிப்பிட்டுள்ளமை காண்க.

ஒருமொழிப் புணர்ச்சிக்கண் நிற்கும் உயிரும் புணர்ச்சி விகாரத்தான் மிகும் உயிரும் உடம்படுமெய் பெறா என்னும் இவ்வுரைகாரர் கூற்று, வரையார் - நீயிர் - எனும் ஒருமொழி முடிபின்கண்ணும், 'இறவுப் புறத்தன்ன' என்னும் புணர்ச்சிவிகாரத்தின்கண்ணும் புரைபடுதல் காண்க. வரை+(ஆ), நும் நீம் நீஇர் = (386) என ஈரிடத்தும் யகர உடம்படுமெய் தோன்றுதல் உணரப்படும். 'ஒருவந்தம்' என்பதும் அது. 'இறா' என்னும் குறியதன் இறுதிச் சினையாகிய ஆகாரம் ஒருமாத்திரை கெட்டுச் குறிலாக 'இற' என நிற்க, ஆண்டு ஓர் உகரம் செய்யுள் வழக்கிடத்துத் தோன்றவே, இற+உ என நிற்கும். ஆண்டு வகரஉடம்படுமெய் தோன்ற, இறவு என நிற்கும். இம்முடிபு வருமொழியொடு புணர்வுழி ஆகலின், புணர்ச்சி விகாரமாம் என்க. (234)

எகரம் வினாப்பொருட்டாகத் தனித்து வாராமையான், எக்கடல் எந்நாடு எவ்வீடு எவ்வூர் - என்றாற்போல வருவன இடைக்கால வழக்கு (சூ.31 உரை) என்று சுட்டும் இவர், எகரம் எவ்வணி என இரட்டித்து வரும் என்று காட்டுதல் சாலாது. ]

### இளம்பூரணம்

## 142. ஓசை வேற்றுமையான் புணர்ச்சி வேறுபடுதல்

**எழுத்து ஓ ரன்ன பொருள்தெரி புணர்ச்சி**
**இசையின் திரிதல் நிலைஇய பண்பே.**

*(இச்....எனின்)* எழுத்துக்கள் ஒன்று பல ஆதல் கூறு.....ற்று.

*(இ-ள்.)* எழுத்து ஒருதன்மையான, பொருள் விளங்க நிற்கும் புணர்மொழிகள் ஓசைவேற்றுமையான் புணர்ச்சி வேறுபடுதல் நிலைபெற்ற பண்பு எ-று.

*(உ-ம்.)* செம்பொன்பதின்றொடி, குன்றேறாமா - என வரும். *(39)*

### நச்சினார்க்கினியம்

## 141. ஓசை வேற்றுமையான் புணர்ச்சி வேறுபடுதல்

**எழுத்துஓ ரன்ன பொருள்தெரி புணர்ச்சி**
**இசையின் திரிதல் நிலைஇய பண்பே.**

இஃது எழுத்துக்கள் ஒன்று பலவாம் என எய்தாது எய்துவிக்கின்றது.

இ-ள் : எழுத்து ஓரன்ன . . . . புணர்ச்சி - எழுத்து ஒருதன்மைத்தான பொருள் விளங்க நிற்கும் பொருள்மாழிகள்; இசையின் . . . . . பண்பு - எடுத்தல் படுத்தல் நலிதல் என்கின்ற ஓசைவேற்றுமையான் புணர்ச்சி வேறுபடுதல் நிலைபெற்ற குணம் எ-று.

உ-ம் : செம்பொன்பதின்றொடி, (1)செம்பருத்தி, குறும்பரம்பு, நாகன்றேவன்போத்து, (2)தாமரைக்கணியார், குன்றேறாமா - என இவை இசையின் திரிந்தன. *(39)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 141*

1. செம்பு அருத்தி; செம்பருத்தி - எனப் பிரியும் (அருத்தி- விருப்பம்).

2. தாம் அரைக்கு அணியார்; தாமரைக்கு அ(ண்)ணியார்- எனப் பிரியும்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ. 142, 143.*** இறுதி இரண்டு சூத்திரங்களின் வேண்டற்பாடு குறித்து இவர் சுட்டும் கருத்துப் பொருந்துவதாம்: ''தமிழ்மொழியில் சொற்றொடர்ப் பொருள் அறியப்படாத வரை, அப்புணர்ச்சி வேற்றுமைப் புணர்ச்சியா அல்வழிப் புணர்ச்சியா என அறிதல் இயலாமையின் இவ்விரு சூத்திரங்களும் வேண்டும் என்க.''

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

*சூ. 141.* எழுத்துஓ ரன்ன....நிலைஇய பண்பே.

*(இ-ள்.)* எழுத்துக்கள் வேறுபடாமல் ஒருங்கு ஒத்து (வேற்றுமையுருபு இன்றித் தொக்கு) வந்து பொருளைத் தெரிவிக்கும் புணர்மொழிகள் பொருள்கொள்ளும் முறைமையான் வேறுவேறுபடுதல் நிலைபெற்றதோர் இலக்கணமரபு ஆகும். இசை என்றது பொருளை.

*(எ-டு.)* யானைக்கோடு கூரிது; கரும்பு வேலி; சொற்பொருள் என வருவன எல்லாம் இசையால் (பொருளால்) திரிபுபட நிற்பனவாம்.

இசையின் திரிதலை வேற்றுமைத் தொகைக் கண்ணே யன்றி, ஏனைத் தொகைமொழி தொடர்மொழிக்கண்ணும் கொள்க.

(எ-டு.) மலர்நோக்கம்: இதனை விரிப்புழி, வேற்றுமைப் பொருள்களே யன்றி, பண்புத்தொகை வினைத்தொகை உவமத்தொகை அன்மொழித்தொகை ஆகிய தொகைப்பொருள்களும் விரிந்து இசையின் திரிந்து நிற்றலைக் கண்டுகொள்க.

### இளம்பூரணம்

### *143. அவை முன்னத்தான் உணரப்படுதல்*

**அவைதாம்**
**முன்னப் பொருள புணர்ச்சி வாயின்**
**இன்ன என்றும் எழுத்துக்கடன் இலவே.**

(இச்....எனின்)மேலதற்கு ஒரு புறனடை உணர்.....ற்று.

(இ-ள்.) மேற்சொல்லிய புணர்மொழிகள்தாம் முன்னத்தினான் உணரும் பொருண்மையை உடைய; அவை புணர்ச்சியிடத்து இத்தன்மைய என்னும் எழுத்து முறைமையை உடைய அல்ல எ-று.

செம்பொன்பதின்றொடி என்றமையான், அஃது ஒலியெழுத்தின் செல்வுழிப் பொன்ஆராய்ச்சி உள்வழிப் பொன் எனவும், செம்பு ஆராய்ச்சி உள்வழிச் செம்பு எனவும் குறிப்பான் உணரப்பட்டது.

மற்று இதன்மேல் 'இசையின் திரிதல்' (142) என அறியுமாறு கூறினானன்றோ எனின், ஓசை என்றமையான் அஃது ஒலியெழுத்திற்கு எனவும், 'இன்ன என்னும் எழுத்துக்கடன் இல' என்றதனான் இது வரிவடிவிற்கு எனவும் கொள்க. (40)

### நச்சினார்க்கினியம்

### *142. அவை முன்னத்தான் உணரப்படுதல்*

**அவைதாம்,**
**முன்னப் பொருள புணர்ச்சி வாயின்**
**இன்ன என்னும் எழுத்துக்கடன் இலவே.**

இது மேலதற்கு ஒருபுறனடை கூறுகின்றது.

இ-ள் : அவைதாம் - பல பொருட்குப் பொது என்ற புணர்மொழிகள்தாம்; முன்னப் பொருள - குறிப்பான் உணரும் பொருண்மையினை உடைய; புணர்ச்சிவாயின் - புணர்ச்சியிடத்து; இன்ன . . . . இல - இத்தன்மைய என்னும் எழுத்துமுறைமையை உடைய அல்ல எ-று.

செம்பொன்பதின்றொடி என்றுழி, பொன் ஆராய்ச்சி உளவழிப் பொன் எனவும், செம்பு ஆராய்ச்சி உளவழிச் செம்பு எனவும் குறிப்பான் உணரப்பட்டன. 'இசையின் திரிதல்' என்றது ஒலியெழுத்திற்கு எனவும், 'எழுத்துக்கடன் இல' என்றது வரிவடிவிற்கு எனவும் கொள்க. (40)

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 142.** **அவைதாம்,**
**முன்னப் பொருள....எழுத்துக்கடன் இலவே.**

(இ-ள்.) மேலைச் சூத்திரத்து 'இசையால் திரியும்' எனப்பட்ட புணர்மொழிகள்தாம், இடம் முதலிய சார்பு பற்றிக் குறிப்பான் பொருள் உறுதிசெய்து உணர்த்துவனவாம். அவ்வாறன்றிப் புணர்நிலையிடத்து இஃது இப்பொருளை இதனால் சுட்டுகின்றது என்பதற்குரிய எழுத்துமுறைமையை உடையன அல்ல.

உரையாசிரியன்மார் கூறிய பொருள் இடைக்காலத்து அணிநூலார் வகுத்த பிரிமொழிச் சிலேடையின்பாற்பட்டு இரட்டுற மொழிதலாய் அடங்குவதன்றி எழுத்துப்புணர்ச்சி கூறும் எழுத்திலக்கணத்தின்பாற் படுவது ஆகாது.

(எ-டு.) யானைக்கோடு கூரிது என்றவழி, எதற்கு என்னும் ஆராய்ச்சிக்கண் 'யானைக்கு 'என்றும், எதனது என்னும் ஆராய்ச்சிக்கண் 'யானையது 'என்றும், யானையிடத்து எது கூரிது என்னும் ஆராய்ச்சிக்கண் 'யானையின்கண் கோடு' என்றும், பொருள் முடிந்து வரும் ஆகலின், அவ்ஆய்வின் நோக்கு முன்னப்பொருளாகும் என அறிக.

[புணர்மொழிகளை நோக்க ஒன்றுபோல் காணப் படினும், பிரித்து நோக்கிய அளவிலேயே சொற்பொருள் வெவ்வேறாக உணரப்படுவன, சொல்லுவான் குறிப்பினை நோக்கியே பிரித்துணரப்படுவன என்பது பண்டைய உரையாளர்தம் கருத்து. பிரிமொழிச்சிலேடையாகிய அணியிலக்கணத்தின்- பாற்படுவன ஆயினும், புணர் மொழியாகச் சொற்றொடர் அமையும் பாங்கு புணர்ச்சி கூறும் எழுத்திலக்கணத்தின் பாற்படுவது என்றற்கண் இழுக்கென்னை ? 'இனியார் இனியார் இவட்கு' என வரும் மடக்கும் இந்நீர்மைத்தே ஆதல் காண்க. இனி+யாவர் என்னும் புணர்மொழியும், இனியார் எனக் குறிப்பு வினைப் பெயராக நிற்கும் ஒரு சொல்லுமாக இவை நிகழ்தல் உணரப்படும்.]



## IV புணரியல்

### நூற்பா - 6

வீ. சோ. 9 நின்றசொல் ஈறும் வரும்சொல்
முதலும்நிரவித்தம்முள்
ஒன்றிடும்போதும்ஒரு மொழிக்
கண்ணும் உலகிற்கு ஒப்பின்
நன்றியல் மும்மை விகாரம்
வந்தெய்திடும் நன்கியம்பின்;
குன்றுதல் இன்றி வருதலும்
உண்டென்று கூறுவரே.

நேமி. 12 மெய்யீறு உயிர்ஈறு உயிர்முதல் மெய்ம்முதலா
எய்தும் பெயர் வினையும் இவ்வகையே.

நன். 151 மெய்உயிர் முதல்ஈறு ஆம்இரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்
பொருளின் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத்து இயைவது புணர்ப்பே.

இ. வி. 53 மெய்உயிர் முதல்ஈறு ஆம்இரு பதங்களும்
தம்மொடும் பிறவொடும் அல்வழி
வேற்றுமைப்
பொருளின் . . . . . . . . . . . புணர்ப்பே.

மு. வீ. 160 நிலைவரு மொழியொடு நேர்வது புணர்ப்பே.
161 அதுதான், இயல்பு விகாரம் எனஇரு பாற்றே.

நேமி. 12 தோன்றல் திரிதல் கெடுதல்
எனத்தூமொழியாய்
மூன்றென்ப சந்தி முடிபு.

நன். 154 தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும்.

இ. வி. 56 விகாரம் ஒற்றுயிர் உயிர்மெய் மிகுதல்
திரிதல் கெடுதல் எனமூ வகைத்தே.

தொ. வி. 21 திரிபு அழிவு ஆக்கம் திரட்டு நால்விகாரம்.

மு. வீ. 163 ஆக்கம் திரிபு அழிவு ஆகும் விகாரம்.

சுவாமி. பதமரபு 5 எழுத்து மொழி தோன்றல் - திரிதல் -
கெடல்மாறல் - விகாரம்.

## நூற்பா - 10

நன். 152 வேற்றுமை ஐம்முதல் ஆறாம்; அல்வழி
தொழில் பண்பு உவமைஉம்மை அன்மொழி
எழுவாய் விளி ஈரெச்சம் முற்று இடைஉரி
தழுவுதொடர் அடுக்கு என ஈர்ஏழே.

இ. வி. 54 ஐம்முதல் ஆறு தழுவுதொடர் வேற்றுமை;
செவ்விதின் நிலையும் எழுவாய் விளிமுற்று
இடைஉரி எச்சம் அடுக்கு உவமை உம்மை
தழுவுதொடர் அல்வழிச் சந்தி என்ப.

தொ. வி. 22 அல்வழி வேற்றுமை ஆம்இரண்டுஅவற்றுள்
விரியினும் உருபுஎடா வினைசார் பெயரே
அல்வழிப் பொருட்பெயர் ஆகும் என்ப;
வேற்றுமை உருபு இல்லது விரிக்குங் காலை
வேற்றுமை கொளின்அது வேற்றுமைப்
பொருளே.

மு. வீ. 165 புணர்ச்சி, அல்வழி வேற்றுமை ஆம்இரு
பாற்றே.

166 அவற்றுள்,
அல்வழி வினைத்தொகை அன்மொழி
உவமை உம்மை குணம் எழுவாய்விளி
இடை உரி
அடுக்கு ஈர்எச்சம் முற்று ஆறொடும் எட்டே.

## நூற்பா - 11

நன். 152 வேற்றுமை ஐம்முதல் ஆறாம்.

இ. வி. 54 ஐம்முதல் ஆறு தழுவுதொடர் வேற்றுமை.

மு. வீ. 167 ஐ ஒடு கு இன் அதுகண் வேற்றுமை.

## நூற்பா - 12, 13

மு. வீ. 168 ஏழும் நான்கும் ஒற்று இடைமிகும் என்ப.
169 ஆறன் உருபின் அகரம் முனைகெடும்.

## நூற்பா - 14

நன். 241 பெயர்வழித் தம்பொருள் தரவரும் உருபே.

இ. வி. 55 வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.

மு. வீ. 170 பெயர்க்குப் பின்வரும் வேற்றுமை யுருபே.

## நூற்பா - 15

மு. வீ. 171 உயர்திணை அஃறிணை ஓரிரு வகையன.

## நூற்பா - 16

வீ. சோ. 27 துப்பார் பெயர்வேற்றுமையின் அகத்தும்
தொகையின்கண்ணும்
செப்பார் மொழிமுதல் பின்சாரியை வரின்...

நேமி. 22 மேய இருசொல் பொருள்தோன்றவேறிருத்தி
ஆய இடைச்சொல் அடைவித்தால் . . . . . . .

நன். 243 பதமுன் விகுதியும் பதமும் உருபும்
புணர்வழி ஒன்றும் பலவும் சாரியை
வருதலும் தவிர்தலும் விகற்பமும் ஆகும்.

இ. வி. 61 பதமுன் . . . . . . . . . . . . . . . . . . ஆகும்;
அனையவை தெரிதல் அறிவோர் கடனே.

மு. வீ. 173 அவைதாம்,
சாரியைச் சொற்களைச் சார்ந்துநின்று
இயலும்.

நன். 224 அன்ஆன் இன்அல் அற்றுஇற்று அத்துஅம்
தம் நம் நும் ஏ அஉ ஐகுன
இன்ன பிறவும் பொதுச் சாரியையே.

இ. வி. 59 ஷை

மு. வீ. 174 அத்துஅம் மான்அக்கு இன்அன் ஒன்இக்கு
அற்றுத் தம்நம் நும்உம் ஆம்பிற.

## நூற்பா - 18

நன். 248 ஆமா கோ - னவ் அணையவும் பெறுமே.

இ. வி. 151 ஷை

மு. வீ. 175 அவற்றுள்,
ஆமா(கோ)-இன் அடையவும் பெறுமே.

## நூற்பா - 21

மு. வீ. 177 னகர இறுதிநாற் சாரியை னகரமும்
றகாரம் ஆகும் நான்கன் உருபிற்கு.

## நூற்பா - 23

நன். 252 அத்தின் அகரம் அகரமுனை இல்லை.

இ, வி. 60 ஷை

மு. வீ. 178 அத்து(உ)றின் அகரம் ஈறழியும் என்ப.

## நூற்பா - 24

மு. வீ. 179 இக்கு(உ)றின் இகர இறுதியும் அற்றே.

## நூற்பா - 25

மு. வீ. 180 ஐகான் முன்னரும் அவ்வியல் நிலையும்.

## நூற்பா - 26

மு. வீ. 181 அக்குஈறு கெடும்வலி அடையுங் காலே.

## நூற்பா - 29

மு. வீ. 182 இன்இன்று ஐந்தாம் வேற்றுமை இயலும்.

## நூற்பா - 32 - 35

நன். 126 மெய்கள் அகரமும், நெட்டுயிர் காரமும்,
ஐ ஔக் கானும், இருமைக் குறில்இவ்
இரண்டொடு கரமும் ஆம் சாரியை
பெறும் பிற.

இ. வி. 37 நெட்டுயிர் காரமும், ஐ ஔக் கானும்,
இருமைக்குறில் ஒற்று இவற்றொடு
கரமுமாம்
இன்ன சாரியை பெறூஉம் (எவ்வழி யானும்
மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்).

மு. வீ. 109 உயிர் நெட்டெழுத்தெலாம் காரமொடு
நிலையும்.
110 ஐ ஔக் கானும் அடையவும் பெறுமே.
111 காரம் கான் கரம் பெறும் இருமைக் குறில்.

## நூற்பா - 36

நன். 204 உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே.

இ. வி. 64 புள்ளி யீற்றுமுன் . . . . . . . . . . .
அவ்வியல் கெடுத்தே.

## நூற்பா - 38

வீ. சோ. 13 மூன்றொடு நான்கு ஒன்பதாம் உயிர்ப்
பின்உயிர் முந்திந், நடு
ஆன்ற யகாரம் வந்து ஆகமம் ஆகும்; அல்லா
உயிருக்கு
ஏன்ற வகாரம்; எட்டு ஏற்கும் இரண்டும்;
இறுதி கெட்டுத்
தோன்று நிலையும் ஒரோவிடத்து ஆம்என்பர்;
தூமொழியே.

நேமி. 13 மூன்றுநான்கு ஒன்பான் உயிர்ப்பின்னும்,
அல்லாத
ஆன்ற உயிர்ப்பின்னும், ஆவிவரின்-
தோன்றும்
யகர வகரம்; இறுதியிடத்து ஓரோர்
மகரம் கெடவகரம் ஆம்.

நன். 162 இஈ ஐவழி யவ்வும், ஏனை
உயிர்வழி வவ்வும், ஏமுன்இவ் இருமையும்
உயிர்வரின் உடம்படுமெய் என்று ஆகும்.

இ. வி. 68 இஈ . . . . . . . . . . . . . . . இருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்என்று
ஆதல் வரைவின்று என்மனார்
மதிக்குங் காலே.

தொ. வி. 20 முதல்ஈற்று உயிரும் மொழியே சேர்பு(ள்)ளி
இஈஏஐ ஈறு இயையும் யவ்வே;
மற்றை உயிர்க்கீழ் வகரம் புணரும்.

மு. வீ. 183 இஈ ஐ-வழி . . . . . . . . . . . . . . ஆகும்.
184 கோமா முன்வரின் யகரம் குதிக்கும்.
(வருமாறு : கோயில், மாயிரு ஞாலம்)

## நூற்பா - 39

நன். 391 எழுத்தியல் திரியாப் பொருள்தெரி
புணர்மொழி
இசைத் திரிபால் தெளிவு எய்தும் என்ப.

இ. வி. 62 எழுத்தோ ரன்ன . . . . . . . . . .
நிலைஇய பண்பே.

## நூற்பா - 40

இ. வி. 63 அவைதாம்
முன்னப் பொருள...எழுத்துக்கடன் இலவே.



# தொகைமரபு

## இளம்பூரணம்

### *144. க ச த ப - க்கள் வரின் ங ஞ ந ம - க்கள் மிகுதல்*

**க ச த ப முதலிய மொழிமேல் தோன்றும்**
**மெல்லெழுத்து இயற்கை சொல்லிய முறையான்**
**ங ஞ ந ம என்னும் ஒற்றுஆ கும்மே**
**அன்ன மரபின் மொழிவயி னான** [3]

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், மேல் அகத்துஓத்தினுள் இருபத்துநான்கு ஈற்றினும் விரிந்து முடிவனவற்றையெல்லாம் தொகுத்து முடித்தலின் தொகைமரபு எனப்பட்டது. மேல் புணரியலுள் கூறிய கருவிகளால் செய்கை கூறும்வழித் தொக்குப் புணரும்[1] செய்கை கூறலின், புணரியலோடு இயைபுடைத்து ஆயிற்று.

இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின், அல்வழியும் வேற்றுமையும் ஆகிய இருவழிக் கண்ணும் உயிர்மயங்கியலையும் புள்ளிமயங்கியலையும் நோக்கியதொரு வருமொழிக்கருவி கூறு....ற்று.

*(இ-ள்.)* உயிர்ஈற்றினும் புள்ளியீற்றினும் இரு வழியும் கசதப-க்களை முதலாக உடைய மொழிகளின் மேல் தோன்றும் மெல்லெழுத்து இயல்பு கூறின், அம்மெல்லெழுத்து, மேற்சொல்லும் முறைமையான்[2] கசதப-க்களுக்கு நிரல்நிறை வகையானே ஙஞநம-என்னும் ஒற்று ஆகும், அத்தன்மைத்து ஆகிய முறைமையினையுடைய மொழிகளிடத்து எ-று.

*(உ-ம்.)* விளங்கோடு - செதிள் - தோல் - பூ - என வரும்.

'தோன்றும்' என்றதனான், தோன்றிநின்றனவும் அவ்வாறு திரிந்து மெல்லெழுத்தாம் என்பது.[4]

(உ-ம்.) மரங்குறிது - சிறிது - தீது - பெரிது - என வரும்.

'அன்னமரபின்மொழி' அன்மையின், விளக்குறுமை என்புழி, மெல்லெழுத்து மிகாதாயிற்று. (1)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 144.*** 1. நிலைமொழி ஈறுகள் (உயிரும் மெய்யுமாக நிற்பன) பலவற்றுக்கும் வன்கணமும் ஏனை இயல்புகணமும் வருமிடத்து நிகழும் புணர்ச்சி விதிகளை ஈண்டுத் தொகுத்துக் கூறும் செய்கை.

2. பின்னர் அகத்தோத்துள் விதிக்கும் முறைமை.

பேராசிரியர் இந்நூற்பாவை 'மொழிவாம் என்றல்' என்ற உத்தியின்பாற் படுத்துவர். அஃதாவது ஒரு பயன் நோக்கி முற்கூறுதும் என்றல். இச்சூத்திரம் 'மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே' (218) 'அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்' (315) என்னும் இந்நூற்பாக்களை அவாவி நிற்றலின் இவ்வுத்தியின் இனம் எனப்படும் என்றார். (பொ. 665 பேரா.)

3. மொழிவயினானஃ 'ஆன' அசைநிலை.

4. 'அல்வழி யெல்லாம் மெல்லெழுத்து ஆகும்' (சூ. 315) என்பதனான் தோன்றிநின்ற மெல்லெழுத்து, வருமொழி வன்கணத்திற்கு ஏற்ப மெல்லெழுத்தாகத் திரியும் என்க.

## நச்சினார்க்கினியம்

### *143. க ச த ப - க்கள் வரின் ங ஞ ந ம - க்கள் மிகுதல்*

**க ச த ப முதலிய . . . . . . . . மொழிவயி னா ன.**

என்பது சூத்திரம்.

உயிரீறும் புள்ளியீறும் மேலை அகத்துஓத்தினுள் முடிக்கும்வழி ஈறுகள்தோறும் விரித்து முடிப்பனவற்றை ஈண்டு ஒரோவொரு சூத்திரத்தான் தொகுத்து முடிபு கூறினமையின், இவ்வோத்துத் தொகைமரபு என்னும் பெயர்த்தாயிற்று. மேல் மூவகை மொழியும் நால்வகையான் புணர்வுழி, மூன்று திரிபும் ஓரியல்பும் எய்தி வேற்றுமை அல்வழி என இரு பகுதியவாகி, எழுத்தும் சாரியையும் மிக்குப் புணருமாறு இதுவென்று உணர்த்தி, அவைதாம் விரிந்த சூத்திரப்பொருள அன்றியும் தொக்குப் புணருமாறு கூறுதலின், இவ்வோத்துப் புணரியலோடு இயைபுடைத் தாயிற்று.

இத்தலைச் சூத்திரம் உயிர்மயங்கியலையும் புள்ளிமயங்கியலையும் நோக்கியதொரு வருமொழிக் கருவி கூறுகின்றது.

இ-ள் : (1) க ச த ப முதலிய மொழிமேல் தோன்றும் இயற்கை மெல்லெழுத்து - உயிரீறும் புள்ளியீறும் முன்னர் நிற்பக் க ச த ப - க்களை முதலாகவுடைய மொழிகள் வந்தால், அவற்றிற்கு மேலே தோன்றி நிற்கும் இயல்பாகிய மெல்லெழுத்துக்கள்; சொல்லிய . . . . ஒற்று ஆகும் - நெடுங்கணக்கில் பொருந்தக் கூறிய முறையானே க ச த ப - க்களுக்கு ங ஞ ந ம - என்னும் ஒற்றுக்கள் நிரனிறை வகையான் ஆம்; அன்ன . . . . வயினான - அத்தன்மைத்தாகிய முறைமையினையுடைய மொழிகளிடத்து எ-று.

உ-ம் : விளங்கோடு செதிள் தோல் பூ - எனவரும். இது 'மரப்பெயர்க் கிளவி' (217) என்பதனான் மெல்லெழுத்துப் பெற்றது. மரங்குறிது - சிறிது - தீது - என அல்வழிக்கண் திரியுமாறு 'அல்வழி எல்லாம்' (314) என்பதனான் பெறுதுமேனும், ஈண்டுத் 'தோன்றும்' என்றதனான், நிலைமொழிக்கண் தோன்றிநின்ற ஒற்றுத் திரிதல் கொள்க. அன்ன மரபின் மொழி அன்மையின், விளக்குறுமை விளக்குறைத்தான்(2) என்புழி, மெல்லெழுத்துப்

பெறாஆயின, இவை ஏழாவதும் இரண்டாவதும் திரிதலின். இங்ஙனம் எழுத்துப் பெறுவனவும் திரிவனவும் எல்லாம் வருமொழியே பற்றி வரும்.

(1)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

## சூத்திரம் 143

1. 'க ச த ப முதலிய மொழிமேல் தோன்றும், மெல்லெழுத்து' என்றது, விள+கோடு என்பன புணருங்கால் வருமொழிக் ககரம் நோக்கி விளங்கோடு என மெல்லெழுத்து மிகுதற்கே அன்றி, மரம் குறிது முதலியன புணருங்கால் ககரம் முதலிய நோக்கி மெல்லெழுத்துத் திரிதற்கும் விதி என்க. இச்சூத்திரத்தின் கருத்து : உயிரீற்றின்முன் க ச த ப வருங்கால் அவ்வவற்றின் இனம் மிகும் என்பதும், நிலைமொழி யீற்றிலுள்ள மெல்லெழுத்து மகரமெய் அந்நான்கும் வருங்கால் அவ்வவ்வினமாகத் திரியும் என்பதுமே. (ஏற்புழிக்கோடலால் பகரம் வருவழி மகரம் திரியாது என்க.)

2. விளக்குறுமை : ஏழன் தொகை; விளக்குறைத்தான் : இரண்டன் தொகை.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

பின்வரும் உருபியல் - உயிர்மயங்கியல் புள்ளிமயங்கியல் - குற்றியலுகரப் புணரியல் - இவற்றுள் விரிவாய்க் கூறவேண்டுவனவற்றுள் சிலவற்றைத் தொகுத்து ஈண்டு ஆசிரியர் கூறுதலானும், வருமொழிமுதலின் மாறுதலை ஆங்குக் கூறாது ஈண்டே தொகுத்துக் கூறுதலானும், பகுதிக்கும் வேற்றுமையுருபிற்கும் இடையில் தோன்றும் சாரியைகளின் மாறுதல்களைத் தொகுத்துக் கூறுதலானும், இவ்வியலுக்கு தொகைமரபு எனப் பெயரிட்டனர் என்க.

**சூ. 144. கசதப முதலிய....மொழியி னான.**

'' 'தோன்றும்' என்றதனான், தோன்றிநின்றனவும் அவ்வாறே திரிந்து மெல்லெழுத்தாம்'' என இளம்பூரணர் உரைத்தது சொல்லாமலே பெறப்படும் என்று, இவர் 'தோன்றும்' என்ற சொல் எதிர்காலத்தையே அன்றி நிகழ்காலமும் சுட்டுவதைக் கூறினார். தோன்றிநின்ற இறந்தகாலச் செய்தியை அஃதுணர்த்துமாறு யாங்கனம்?

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

தொகுப்பாகக் கூறும் மரபு என்பது இதன் பொருள். ஈண்டுத் தொகுப்பாகக் கூறப்பெறும் புணர்ச்சி இலக்கணங்களைப் பற்றிய இயலை உணர்த்தி நிற்றலின் அன்மொழித்தொகையாம். தொகுத்துக் கூறப்பெறும் புணர்ச்சி இலக்கணங்களே யன்றி, அவற்றிற்குரிய சிலகருவிகளும் மரூஉ முடிபுகளும் பிறவும் கூறுதலின் இயல் என்னாது மரபு என்றார்.

இனி, இவ்வியலுள் 'வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையான்' 'வேற்றுமை அல்வழி', 'சொல்லியல் மருங்கின்' , 'உகரமொடு புணரும் புள்ளி யிறுதி' , 'உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்' , 'உளவெனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தே' , என்றாற்போல வரும் சூத்திரங்கள் முற்கூறியவற்றை நினைவுபடுத்தும் முறையில் அமைந்துள்ளமையான், இஃது இறுதிஇயலாக அமைந்திருத்தல் வேண்டும். சொல்லதிகாரத்துள் நால்வகைச் சொற்களின் இயல்பு கூறியபின் எச்சவியலும், பொருளதிகாரத்துள் களவியல் கற்பியல்களின் பின் பொருளியலும் அமைந்துள்ளமை இதற்குச் சான்றாம்.

[சூத்திரங்கள் 143, 144, 148, 150, 163, 170 போல்வன, அடுத்து நிகழும் அகத்தோத்துக்களுக்கு உபகாரப் படுவனவாய், பல ஈறுகளிலும் தனித்தனியே விதந்து கூறவேண்டுவனவற்றைத் தொகுத்து விளக்குவனவாயுள்ள

செய்தியை இவ்வுரைகாரரும் உடன்பட்டுள்ளார். 146ஆம் சூத்திரம் முதலியன வருமொழி புலப்பாடு இலவாய் வெற்றெனத் தொடுத்தலாய் முடியும். ஆகலின் இவர் கூறியாங்கு இவ்வியல் இவ்வதிகாரத்து இறுதிக்கண் இடம்பெறல் உரித்து என்பது ஏலாது.]

**வெள்ளைவாரணனார் உரைக்குறிப்பு**

***சூ. 144.*** இச்சூத்திரத்தே 'எல்லாம்' என்றதனால், ஒற்று இரட்டுதலும்- உடம்படுமெய் கோடலும் - உயிரேறி முடிதலும் - என வரும் இக்கருவித் திரிபு திரிபு எனப்படா என்பர் இளம்பூரணர். எனவே, இவை முற்கூறிய மெய் பிறிதாதல்- மிகுதல் - குன்றல் - என்ற மூன்று திரிபினுள்ளும் அடங்கா என்பது அவர்கருத்தாதல் புலனாம். (நச்சினார்க்கினியர் கருத்தும் அது.)

**இளம்பூரணம்**

***145. வன்கணம் ஒழிந்த கணங்கள் இருவழியும் இயல்பு ஆதல்***

**ஞ ந ம ய வ-எனும் முதல்ஆகு மொழியும்**
**உயிர்முதல் ஆகிய மொழியும் உளப்பட**
**அன்றி அனைத்தும் எல்லா வழியும்**
**நின்ற சொல்முன் இயல்புஆ கும்மே.**

(இச்....எனின்) இருபத்துநான்கு ஈற்று முன்னும் வன்கணம் ஒழிந்த கணங்கட்கு இருவழியும் வருமொழி முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) ஞ ந ம ய வ - என்று சொல்லப்படும் முதல்எழுத்து உளவாகும் மொழியும் உயிர் முதல் ஆகிய மொழியுமாக அவ்வனைத்துமொழியும், அல்வழியும் வேற்றுமையும் ஆகிய எல்லா இடத்தும், இருபத்துநான்கு ஈற்றினும் பெயர் ஆகிய நிலைமொழி முன்னர் இயல்பாக முடியும் எ-று.

ஈண்டு 'உளப்பட' என்பது ஆக என்னும் பொருண்மைத்து.

(உ-ம்.) விள , தாழ் - எனநிறுத்தி, ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது, அடைந்தது ஆடிற்று இடிந்தது ஈரிற்று உடைந்தது ஊறிற்று எழுந்தது ஏறிற்று ஐது ஒடிந்தது ஓடிற்று ஒளவியத்தது நுந்தையது - எனவும்; ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வலுமை, அடைவு ஆட்டம் இடிபு ஈட்டம் உடைபு ஊற்றம் எழு ஏணி ஐயம் ஒடுக்கம் ஓக்கம் ஒளவியம் நுந்தை - எனவும் ஒட்டிக்கொள்க.

இஃது இருபத்து நான்கு ஈற்றிற்கும் அல்வழியினும் வேற்றுமையினும் அகத்துஓத்தினுள் நாற்பத்தெட்டுச் சூத்திரத்தான் முடிவதனை[1] ஈண்டு ஒரு சூத்திரத்தான் தொகுத்து முடித்தது ஆயிற்று. மேலும் இவ்வாறே முடிகின்றவாறு அறிக. (2)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 145.*** 1. நாற்பத்தெட்டு என்றது பொதுவாக உறழ்ந்த தொகை. முன்னிலை மொழிக்கண் ஏவலாக வரும் ஏஎ, ஓஒ என்பன நிலைமொழியாய் நிற்ப அல்வழிப் புணர்ச்சியன்றி வேற்றுமை நிகழாது. அன்னபிறவும் விலக்குண்ணும்.

இந்நூற்பாவில் சுட்டுப் பொருளில் 'அன்றி' வந்துள்ளது. அன்றியனைத்தும் - அவ்வனைத்தும். இவ்வாட்சி இவ்வதிகாரம் 211, 225ஆம் நூற்பாக்களிலும், சொல். வேற்.5, விளி. 20, பெய.11, எச்ச. 29, 30, 53 ஆம் நூற்பாக்களிலும் பயின்று வருதல் காண்க.

**நச்சினார்க்கினியம்**

## 144. வன்கணம் ஒழிந்தவை இருவழியும் இயல்பு ஆதல்

ஞ ந ம யவ எனும் . . . . . . இயல்பு ஆகும்மே.

இது முற்கூறிய நால்வகைப் புணர்ச்சியுள் இயல்பு புணருங்கால், இக்கூறிய பதினேழ் எழுத்தும் வருமொழியாய்

வந்த இடத்து, இருபத்துநான்கு ஈற்றின் முன்னரும் வேற்றுமையிலும் அல்வழியிலும் வருமொழி இயல்பாய் முடிக என்கின்றது.

இ-ள்: ஞ ந ம யவ எனும் ....... உளப்பட - ஞ ந ம ய வ என்று சொல்லப்படும் எழுத்துக்கள் முதலாய் நிற்கும் சொற்களும், உயிரெழுத்து முதலாய் நின்ற சொற்களும் தம்மில் கூட; அன்றி அனைத்தும் - அப்பதினேழாகிய வருமொழிகளும்; எல்லாவழியும் - வேற்றுமையும் அல்வழியும் ஆகிய எல்லா இடத்தும்; நின்ற . . . . . ஆகும் - இருபத்துநான்கு ஈற்றவாய் நின்ற பெயர்ச்சொல் முன்னர்த் திரிபின்றி இயல்புபுணர்ச்சியாய் நிற்கும் எ-று.

உயிரீற்றின்கண் எகர ஒகரம் ஒழிந்தன கொள்க.

உ-ம்: விள பலா கிளி குரீ நடு பூ சே கை சோ கௌ - என நிறுத்தி, ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது நுந்தையது என மெய்ம்முதல் வருவித்து, பொருள் தருதற்கு ஏற்பன அறிந்து கூட்டுக. சோ என்பது அரண். அதற்குச் சோ ஞொள்கிற்று - எனக் கொள்க. கௌ என்பதற்குக் கௌ ஞெகிழ்ந்தது நீடிற்று - என்க.

இவற்றின் முன்னர் உயிர்முதல்மொழி வருங்கால், அழகிது ஆயிற்று இல்லை ஈண்டிற்று உண்டு ஊறிற்று எழுந்தது ஏய்ந்தது ஐது ஒன்று ஓங்கிற்று ஔவியத்தது - என வரும். இவற்றுள் சோவுக்கு இடிந்தது ஈண்டையது உள்ளது ஊறிற்று - என்பனவற்றொடு முற்கூறியவற்றையும் ஒட்டுக.

இனி, வேற்றுமைக்கண் விள முதலியவற்றை நிறுத்தி, ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அழகு ஆக்கம் இளமை ஈட்டம் உயர்வு ஊற்றம் எழுச்சி ஏற்றம் ஐயம் ஒழிவு ஓக்கம் ஔவியம் - என ஒட்டுக. ஏலாதனவற்றிற்கு முற்கூறியவாறு போல ஏற்பன கொணர்ந்து ஒட்டுக.

இனிப் புள்ளியீற்று ணகாரமும் னகாரமும் மேற்கூறுப. ஏனைய ஈண்டுக் கூறுதும்.

உ-ம் : உரிஞ் வெரிந் - என நிறுத்தி, ஞெகிழ்ந்தது நீடிற்று அழகிது ஆயிற்று எனவும், ஞெகிழ்ச்சி நீட்டிப்பு அடைவு ஆக்கம் - எனவும் வருவித்து எல்லாவற்றொடும் ஒட்டுக.

மரம் வேய் வேர் யாழ் - என நிறுத்தி, ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது நுந்தையது அழகிது ஆயிற்று எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அடைவு ஆக்கம் - எனவும் வருவித்து எல்லாவற்றொடும் ஒட்டுக. இவற்றுள் மகரஈறு வேற்றுமைக்கண் கெடுதல் 'துவர' (310) என்றதனான் கொள்க; அல்வழிக்கண் கெடுதல் 'அல்வழி எல்லாம்' (314) என்பதனுள் 'எல்லாம்' என்றதனான் கொள்க. நிலைமொழித் திரிபு ஈண்டுக் கொள்ளாமை உணர்க.

யகரஈறு யகரத்தின் முன்னர் இரண்டிடத்தும் கெடுதல் ஈண்டு 'எல்லாம்' என்றதனான் கொள்க. (அ) வேல் தெவ் கோள் - என நிறுத்தி ஏற்பன கொணர்ந்து இருவழியும் ஒட்டுக.

ணகார லகார ளகார னகாரங்களின் முன்னர் நகரம் வருமொழியாக வந்துழி அந்நகரம் திரிதலின் அத்திரிந்த உதாரணங்கள் ஈண்டுக் கொள்ளற்க. இவற்றுள் திரிந்து வருவன உள; அவை எடுத்தோத்தானும் இலேசானும் ஏனை ஓத்துக்களுள் முடிக்கின்றவாற்றான் உணர்க.

இனி, 'எல்லாம்' என்றதனான், உயிர்க்கணமாயின் ஒற்று இரட்டியும் உடம்படுமெய் பெற்றும் உயிர் ஏறியும் முடியும் கருவித்திரிபுகள் திரிபு எனப்படா, இவ்வியல்பின்கண்ண என்றுணர்க.

வரகு ஞான்றது - வரகு ஞாற்சி - எனக் குற்றுகரத்தின்கண்ணும் இவ்வாறே கொள்க.

இருபத்து நான்கு ஈற்றிற்கும் வேற்றுமைக்கும் அல்வழிக்கும் அகத்தோத்தினுள் நாற்பத்தெட்டுச் சூத்திரங்களான் முடிவனவற்றை ஒரு சூத்திரத்தான் தொகுத்து முடித்தார். மேலும் இவ்வாறே கூறுப.

இவ்வியல்பு, வருமொழி நோக்கிக் கூறியது என்றுணர்க. இவ்வியல்பு புணர்ச்சி மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழாமையின் மெய் முற்கூறினார். (2)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 144***

(அ) வேய் + யாது = வேயாது; வேய் + யாப்பு = வேயாப்பு.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 145.*** ஞநமய வ-எனும்....இயல்புஆ கும்மே.

ஒற்று இரட்டலையும் உடம்படுமெய் கோடலையும் கருவித்திரிபுகளாகக் கொள்ளவேண்டா, இவை இயல்பின்கண்ண என்ற நச்சினார்க்கினியர் கருத்தை இவர் ஏற்காமல் அகத்தோத்துச் சூத்திரங்களால் கொள்ளலாம் என்பர். ஒற்றிரட்டலும், உடம்படுமெய் கோடலும், உடல்மேல் உயிர்வந்து ஒன்றலும் ஆகிய இவை பின்வரும் செய்கைச் சூத்திரத்தால் யாண்டும் விதிக்கப்படாமை வெள்ளிடை. இவற்றைத் திரிபு எனக்கொண்டால் செய்கைச் சூத்திரத்தால் அவை ஆங்காங்குச் சுட்டப்பெற வேண்டுமன்றோ?

**இளம்பூரணம்**

***146. மென்கணம் வருவழி உறழ்ச்சியும் உண்மை***

**அவற்றுள்**
**மெல்லெழுத்து இயற்கை உறழினும் வரையார்**
**சொல்லிய தொடர்மொழி இறுதி யான.**

(இச்.....எனின்) மேற்கூறிய முடிபிற் சிலவற்றிற்கு அம்முடிபு விலக்கிப் பிறிதுவிதி எய்துவித்தல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட மூன்று கணத்தினும் மெல்லெழுத்தினது இயல்பு இயல்புஆதலேயன்றி உறழ்ந்துமுடியினும் நீக்கார், சொல்லப்பட்ட தொடர்மொழி ஈற்றின்கண் எ-று.

(உ-ம்.) கதிர்ஞெரி கதிர்ஞ்ஞெரி - நுனி - முரி என வரும்.

வருமொழி முற்கூறிய அதனான், ஓரெழுத்தொரு மொழியுள்ளும் ஈரெழுத்தொரு மொழியுள்ளும் சிலவற்றிற்கு உறழ்ச்சி முடிபு கொள்க.

(உ-ம்.) பூஞெரி பூஞ்ஞெரி - நுனி - முரி எனவும், காய்ஞெரி காய்ஞ்ஞெரி - நுனி - முரி எனவும் வரும்.

'சொல்லிய' என்றதனான், ஓரெழுத்தொரு மொழியுள்ளும் ஈரெழுத்தொரு மொழியுள்ளும் சிலவற்றிற்கு மிக்குமுடிதல் கொள்க.

(உ-ம்.) கைஞ்ஞெரித்தார் -கைந்நீட்டினார்-கைம்மறித்தார் எனவும், மெய்ஞ்ஞானம் மெய்ந்நூல் மெய்ம்மறந்தார் எனவும் வரும். (3)

**நச்சினார்க்கினியம்**

**145. மென்கணம் வருவழி உறழ்ச்சியும் உண்மை**

**அவற்றுள்,**
**மெல்லெழுத்து இயற்கை உறழினும் வரையார்**
**சொல்லிய தொடர்மொழி இறுதி யான.**

இது முற்கூறிய முடிபின் சிலவற்றிற்கு அம்முடிபுமேல் பிறிதுவிதி எய்துவிக்கின்றது.

இ-ள் : அவற்றுள் - முற்கூறிய மூன்று கணத்தினுள்; மெல்லெழுத்து . . . . . . வரையார்- மெல்லெழுத்து இயல்பாதலே அன்றி, உறழ்ந்துமுடியினும் நீக்கார்; சொல்லிய . . . . . இறுதியான - சொல்லப்பட்ட தொடர்மொழி ஈற்றுக்கண் எ-று.

உம்மை எதிர்மறை; எனவே, உறழாமை வலியுடைத்து ஆயிற்று.

உ-ம் : கதிர்ஞெரி கதிர்ஞ்ஞெரி - நுனி - முரி - எனவும், இதழ்ஞெரி இதழ்ஞ்ஞெரி - நுனி- முரி - எனவும் வரும். வருமொழி முற்கூறிய அதனான், ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழிகளுள்ளும் சில உறழ்ச்சி பெற்று முடிதல் கொள்க. பூஞெரி பூஞ்ஞெரி - நுனி - முரி, காய்ஞெரி காய்ஞ்ஞெரி - நுனி - முரி - என வரும்.(1)

'சொல்லிய' என்றதனான், ஓரெழுத்தொரு மொழிகளுள் சில மிக்கு முடிதல் கொள்க. கைஞ்ஞெரித்தார் - நீட்டினார் - மறித்தார் - என வரும்.

இன்னும் இதனானே, ஈரெழுத்தொரு மொழிக்கண் மெய்ஞ்ஞானம் - நூல் - மறந்தார் - என வரும்.

இவற்றை நலிந்து கூறப் பிறத்தலின் (அ) இயல்பு என்பாரும் உளர்.

பூ ஞாற்றினார் - என்றாற் போலவன மிகாதன. (3)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 145

1. மெய் காய் - என்னும் மொழிகளையும், கதிர் புகழ் - என்னும் மொழிகளையும் முறையே ஈரெழுத்தொருமொழி தொடர்மொழிகளாகக் கொண்ட நச்சினார்க்கினியர் 'ஓரெழுத் தொருமொழி' (45) என்னும் சூத்திரத்து இவை முதலியவற்றை ஒற்று நீக்கியும் குற்றுகரம் நீக்கியும் கொள்ளவேண்டும் என்றது அவர்க்கே உடன்பாடன்மையைக் காட்டும்.

(அ) கைஞ்ஞெரித்தார் மெய்ஞ்ஞானம் - என நிலைவருமொழிகளிடையே ஞகரம் மிக்க புணர்ச்சி, இசைப்பதற்குச் சற்றே இடர்ப்பாடுடைத்தாகத் தோன்றுதலை 'நலிந்து கூறப் பிறத்தல்' என்றார்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 146.** **அவற்றுள்,**
**மெல்லெழுத்து இயற்கை....இறுதி யான,**

தொடர்மொழி, புணர்மொழி - இவற்றிடை இவர் வேறுபாடு உணராமை 'சொல்லிய' என்பதற்கு இவர் உரைத்த நயவுரையால் போதரும்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 146.** **அவற்றுள்,**
**மெல்லெழுத்து இயற்கை....இறுதி யான.**

ஆசிரியர், 'மெல்லெழுத்து இயற்கை உறழினும் வரையார்' என்னும் முதலடி அளவில் சூத்திரம் முடித்திருப்பாராயின், ஓரெழுத்தொருமொழி முதலாக மூவகை மொழிகளின் முன்னும் மெல்லெழுத்து உறழும் என்று கொள்ளலாம். அவ்வாறன்றி, 'சொல்லிய தொடர்மொழி இறுதியான' என்று கிளந்து கூறினார் ஆதலின், தொடர்மொழிக்குமுன்னர் மட்டுமே மெல்லெழுத்து உறழ்தல் அவர்கருத்து ஆதல் தெளியப்படும்.

மேற்சூத்திரத்தில், மெல்லெழுத்துக்கள் இடையெழுத்துக்கள் ஆகிய ஐந்தும் இயல்பாகப் புணரும் என்றார்; இச்சூத்திரத்தில், மெல்லெழுத்துக்கள் இயல்பாதலேயன்றி ஒரோவழி உறழ்ந்து வரினும் அமையும் என்றார்.

**இளம்பூரணம்**

## *147. யா, ஞா : ஒத்து வருமிடன்*

**ணன-என் புள்ளிமுன் யாவும் ஞாவும்**
**வினைஓ ரனைய என்மனார் புலவர்.**

(இச்....எனின்) யகர ஞகரங்கள் முதலாம்வழி நிகழ்வதொரு கருவி கூறு...ற்று.

(இ-ள்.) ணன - என்னும் புள்ளிகளின் முன் யாவும் ஞாவும் வினைச்சொற்கண் முதலாதற்கு ஒருதன்மைய என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

(உ-ம்.) மண்யாத்த: மண்ஞாத்த எனவும், பொன்யாத்த: பொன்ஞாத்த எனவும் வரும்.

ஞா முற்கூறாது யா முற்கூறிய அதனான், யாமுதல் மொழிக்கண்ணே ஞா வரும் என்று கொள்க. (4)

**நச்சினார்க்கினியம்**

**146. யாவும் ஞாவும் ஒத்து வருமிடன்**

**ணனஎன் புள்ளிமுன் . . . . . என்மனார் புலவர்.**

இது யகர ஞகர முதல்மொழி வந்தவிடத்து நிகழ்வதொரு தன்மை கூறுகின்றது. இதுவும் புணரியல் ஒழிபாய்க் கருவிப்பாற்படும்.

இ-ள் : ணன . . . . ஞாவும் - ணகார னகாரம் என்று கூறப்படும் புள்ளிகளின் முன்னர் வந்த யாவும் ஞாவும் முதலாகிய வினைச்சொற்கள்; வினை . . . . . புலவர் - ஒருவினை(அ)வந்த தன்மையை ஒக்கும் என்று சொல்லுவர் புலவர் எ - று.

உ - ம் : 'மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே': 'மண்ஞாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே' எனவும், 'பொன்யாத்த தார(ஆ)புரவி பரிக்குமே' : 'பொன்ஞாத்த தார புரவி பரிக்குமே' எனவும் வரும்.

வினைக்கண் எனவே, மண்யாமை - மண்ஞாமை - எனப் பெயர்க்கண் வாரா ஆயின.

ஞா முற்கூறாது யா முற்கூறிய அதனான், ஞாச் சென்றவழி யாச் செல்லாது, யாச் சென்றவழி ஞாச் செல்லும் என்று கொள்க. மண் ஞான்றது என்றவழி, மண் யான்றது என்று வாராமை உணர்க. (4)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 146*

(அ) ஒத்த பொருளையுடைய வினைச்சொற்கள்.

(ஆ) மாலையுடையதாகிய புரவி எனக் குறிப்புமுற்றுப் பெயரெச்சப் பொருள்படுதலின் வல்லொற்று மிகாதாயிற்று. வினையெச்ச முற்றுப் பொருள்படினும் மிகாமை காண்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 147.** ணன - என் புள்ளிமுன்....என்மனார் புலவர்.

''யாவும் ஞாவும் முதலாகிய வினைச்சொற்கள்'' என்று நச்சினார்க்கினியர் உரைத்த பதவுரைக்கண் 'வினைச் சொற்கள்' என அவர் பொருள்கொண்டமைக்குக் காரணம் புலப்பட்டிலதாக இவர் கூறும் உரை பொருந்துமாறு இல்லை. இவரே, ''பெயர்க்கண் யாவும் ஞாவும் அவ்வாறு முதலாகா'' என்று முன் குறிப்பிட்டுள்ளமை காண்க.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 147.** மொழிமுதல் ஆகும்...திரிபிடன் இலவே.

உரையாசிரியர்கள், வருமொழி முற்கூறிய அதனான், ணகரத்திற்குத் திரிபுளது என்றும், சாட்கோல் என வரும் என்றும் கூறினார். வருமொழி முற்கூறிய அதனான் பிறவிதியை அமைத்தல் பொருந்தாது. வருமொழி முற்கூறிய சூத்திரங்களில் எல்லாம் (142, 151) அவ்வாறு அன்னோர் அமைத்திலரே.

**இளம்பூரணம்**

### *148. ணகார னகார ஈறு : அல்வழிக்கண் முடிபு*

**மொழிமுதல் ஆகும் எல்லா எழுத்தும்**
**வருவழி நின்ற ஆயிரு புள்ளியும்**
**வேற்றுமை அல்வழித் திரிபுஇடன் இலவே.**

(இச்....எனின்) ணகாரஈற்றிற்கும் னகாரஈற்றிற்கும் அல்வழிக்கண் நிலைமொழிமுடிபு கூறு....ற்று.

(இ-ள்.) மொழிக்கு முதலாம் என்று சொல்லப்பட்ட இருபத்திரண்டு எழுத்தும் வருமிடத்து, மேற்சொல்லிநின்ற ணன-க்கள் ஆகிய அவ்விரு புள்ளியும் வேற்றுமை அல்லாத அல்வழியிடத்துத் திரியும் இடம் இல எ-று.

(உ-ம்.) மண் பொன் - எனநிறுத்தி, கடிது சிறிது தீது பெரிது - என வன்கணத்தோடு ஒட்டுக. பிற கணத்துக்கண்ணும் அவ்வாறே ஒட்டுக.

வருமொழி முற்கூறிய அதனான், ணகரத்திற்குச் சிறுபான்மை திரிபும் உண்டெனக்கொள்க. அது சாட்கோல் - என வரும். (5)

**நச்சினார்க்கினியம்**

### 147. ணகார னகார ஈறு : அல்வழிக்கண் முடிபு

**மொழிமுதல் ஆகும் எல்லா எழுத்தும்**
**வருவழி நின்ற ஆயிரு புள்ளியும்**
**வேற்றுமை அல்வழித் திரிபுஇடன் இலவே.**

இது ணகாரஈறும் னகாரஈறும் அல்வழிக்கண் இயல்பாய் முடியும் என்கின்றது.

இ-ள் : மொழிமுதல் . . . . . வருமொழி - மொழிக்கு முதலாம் எனப்பட்ட இருபத்திரண்டு எழுத்தும் வருமொழியாய் வருமிடத்து; நின்ற ஆயிரு புள்ளியும் - முன்னர்க் கூறிநின்ற ணகாரமும் னகாரமும்; வேற்றுமை . . . . . இல - வேற்றுமை அல்லாத இடத்துத் திரியும் இடம் இல எ-று.

உ-ம் : மண் பொன் - என நிறுத்தி, கடிது சிறிது தீது பெரிது நெகிழ்ந்தது நீண்டது மாண்டது யாது வலிது

நுந்தையது அடைந்தது ஆயிற்று இல்லை ஈண்டிற்று உண்டு ஊட்டிற்று எவ்விடத்தது ஏறிற்று ஐது ஒழுகிற்று ஓங்கிற்று ஔவையது - என ஒட்டுக.

வருமொழி முற்கூறிய அதனான், ணகாரத்திற்குச் சிறுபான்மை திரிபும் உண்டென்று கொள்க. சாட்கோல் - எனவரும்; இதற்குப் பொருள் சாணாகிய கோல் என்க.

இவை 'நின்ற சொல்முன் இயல்பாகும்' (144) என்றவழி அடங்காஆயின, அது வருமொழி பற்றித் திரியாமை கூறியது ஆதலின். இது நிலைமொழி பற்றித் திரியாமை கூறியது. (5)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 148. மொழிமுதல் ஆகும்......திரிபிடன் இலவே.**

உரைகாரர் இருவரும் இலேசினாற் சுட்டிய கருத்தினை, எழுத்ததிகாரத்தில் புணர்க்கப்படாதவற்றைப் பற்றிக் கூறும் 'உயிரும் புள்ளியும் இறுதி யாகி' (482) என்னும் சூத்திரத்தால் கொள்ளலாம் என இவர் குறிக்கிறார். ஆண்டுச் சுட்டுவதினும் அல்வழிபற்றிய இச்சூத்திரத்தின்கண்ணேயே சுட்டுதல் அண்மையும் பொருத்தமும் உடைத்து என அவர்கள் கருதினர்.

**இளம்பூரணம்**

**149. அவ்வீறுகள் வேற்றுமைக்கண் இயல்பாமிடன்**

**வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத்து அல்வழி**
**மேற்கூறு இயற்கை ஆவயி னான.**

(இச்....எனின்) இஃது அவ்விரண்டு ஈற்றிற்கும் வேற்றுமைக்கண் நிலைமொழிமுடிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண்ணும், வல்லெழுத்து அல்லாத இடத்து மேற்கூறிய இயல்புமுடிபாம், அவ்விரண்டு புள்ளியிடத்தும் எ-று.

(உ-ம்.) மண் பொன் - என நிறுத்தி, ஞாற்சி நீட்சி - என வன்கணம் ஒழித்து எல்லாவற்றொடும் ஒட்டுக. (6)

**நச்சினார்க்கினியம்**

### 148. அவை வேற்றுமைக்கண் இயல்பாம் இடன்

**வேற்றுமைக் கண்ணும் . . . . . . ஆவயி னான.**

இது முற்கூறியவாற்றான் வேற்றுமைக்கண் திரிபு எய்திநின்றவற்றை ஈண்டு வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத்து அல்வழித் திரியா என எய்தியது விலக்கிற்று.

இ-ள் : ஆவயினான - அல்வழிக்கண் அங்ஙனம் திரியாது நின்ற அவ்வொற்றுக்கள்; வேற்றுமைக்கண்ணும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சி யிடத்தும்; வல்லெழுத்து . . . இயற்கை - வல்லெழுத்து அல்லாத இடத்து மேற்கூறிய இயல்புமுடிபாம் எ-று.

எனவே, வல்லெழுத்து வந்துழித் திரியும் என்றாராயிற்று.

உ-ம் : மண் பொன் - என நிறுத்தி, ஞெகிழ்ச்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அழகு ஆக்கம் இன்மை - என ஏற்பன கொணர்ந்து ஒட்டுக.

மேல் நான்கு சூத்திரத்தால் கூறியன வல்லெழுத்து வந்துழித் திரியுமாறு தத்தம் ஈற்றுள் கூறுப. (6)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

### சூ. 149. வேற்றுமைக் கண்ணும்....ஆவயி னான.

மாணாக்கர்க்குப் பொருளை நன்கு புலப்படுத்தல் வேண்டும் என்று, உரைகூறும் நச்சினார்க்கினியர் கொள்கையை இவர், நின்றவாறே பொருள்கூறிச் செல்லும்

இயல்பிற்கு முரணுவதாகக் குறிப்பிடும் இடமெல்லாம் 'மிகையானவை' யாகத் தோன்றுவன. அவ்வாறே ஒரு தொடராகக் கருதிப் பொருள்கொள்ளவேண்டும் இடத்தும் நச்சினார்க்கினியர் பொருள் விளக்கம் ஒன்றுமே கருதித் தம் நுண்ணுணர்வால் பொருள் கூறுவார். 'ஆவயினான' என்று இச்சூத்திரத்து நிகழும் சொல்லமைப்பும் ஒன்று. 'ஆவயின் ஆன' எனப் பிரித்து சென்ற சூத்திரக்கருத்தையும் தழுவிப் பொருளுரைக்க அப்பிரிப்பு வாய்ப்பு நல்குமாறு காண்க.

உரையாசிரியர் கருத்தை விளக்குமாறு நச்சினார்க்கினியர் கொள்ளும் அந்நுவயமும் தொடர்ப் பொருளும் மூன்றதிகாரத்துள்ளும் பலவாக வருமாறு காண்க. எடுத்துக்காட்டாக, இவ்வதிகாரத்துள் 'அஃறிணை விரவுப்பெயர்' (156) என்னும் தொடர்க்கு அவர் விளக்கும் உரைநயம் காண்க.

## இளம்பூரணம்

### *150. த ந - க்கள் ற ன - க்களாகத் திரியுமிடன்*

**லன-என வரூஉம் புள்ளி முன்னர்த்**
**த ந எனவரின் றனஆ கும்மே.**

*(இச்....எனின்)* புள்ளிமயங்கியலை நோக்கியதொரு வருமொழிக்கருவி[1] கூறு....ற்று.

*(இ-ள்.)* ல ன - என்று சொல்லவருகின்ற புள்ளிகளின் முன்னர்த் த ந - என வருமொழி வரின், அத்தகரநகரங்கள் நிரனிறையானே றகரனகரங்கள் ஆகும் எ-று.

*(உ-ம்.)* கஃறீது கன்னன்று பொன்றீது பொன்னன்று - என வரும்.[2] *(7)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 150.** 1. வருமொழிமுதல் பற்றியது கருவித்திரிபு, நிலைமொழியீறு பற்றியது செய்கைத்திரிபு எனப்படும்.

2. 'கல்' என்னும் நிலைமொழி லகரம் ஆய்தம் ஆதற்கு விதி, 'தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்' (370); லகரம் னகரமாகத் திரிதற்குவிதி, 'மெல்லெழுத் தியையின் னகாரம் ஆகும்' (368) எனக் கொள்க.

**நச்சினார்க்கினியம்**

### 149. தந-க்கள் றன-க்களாகத் திரியுமிடன்

**ல ன என வரூஉம் . . . . . . . . . ற னஆ கும்மே.**

இது புள்ளிமயங்கியலை நோக்கியதொரு வருமொழிக் கருவி கூறுகின்றது.

இ-ள் : ல ன . . . . . . முன்னர் - லகார னகாரம் என்று சொல்லவருகின்ற புள்ளிகளின் முன்னர்; த ந . . . . . . ஆகும்மே- தகாரமும் நகாரமும் முதல் என்று சொல்லும் படியாகச்சில சொற்கள் வரின், நிரனிறையானே அவை றகார னகாரங்களாத் திரியும் எ-று.

உ- ம் : கஃறீது கன்னன்று, பொன்றீது பொன்னன்று என வரும். நிலைமொழித் திரிபு தத்தம் ஈற்றுள் கூறுப. (7)

**இளம்பூரணம்**

### 151. அவை டணக்களாகக் திரியுமிடன்

**ணள-என் புள்ளிமுன் டணஎனத் தோன்றும்.**

இதுவும் அது.

(இ-ள்.) ண ள என்னும் புள்ளிமுன்னர் அதிகாரத்தான் தகர நகரங்கள் வரின், அவை நிரனிறையான் டகரணகரங்களாய்த் தோன்றும் எ-று.

(உ-ம்.) மண்டீது மண்ணன்று, முஃடீது முண்ணன்று - எனவரும். (8)

**நச்சினார்க்கினியம்**

***150. அவை ட ண -க்களாகத் திரியுமிடன்***

**ணளஎன் புள்ளிமுன் டணஎனத் தோன்றும்.**

இதுவும் அது.

இ-ள் : ண ள . . . . தோன்றும் - ணகார ளகாரம் என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர் அதிகாரத்தான் தகார நகாரங்கள் வருமெனின், அவை நிரனிறையானே டகாரணகாரங்களாய்த் திரிந்து தோன்றும் எ-று.

உ-ம் : மண்டீது மண்ணன்று, முஃடீது முண்ணன்று - எனவரும். நிலைமொழித் திரிபு தத்தம் ஈற்றுள் கூறுப. (8)

**இளம்பூரணம்**

***152. முன்னிலைவினை வன்கணம் வருவழி முடியுமாறு***

**உயிர்ஈறு ஆகிய முன்னிலைக் கிளவியும்**
**புள்ளி இறுதி முன்னிலைக் கிளவியும்**
**இயல்புஆ குநவும் உறழ்ஆ குநவும் என்று**
**ஆயீர் இயல வல்லெழுத்து வரினே.**

*(இச்....எனின்)* முன்னிலை வினைச்சொல் வன்கணத்துக்கண் முடியுமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* உயிர் ஈறாகிய முன்னிலைச்சொற்களும், புள்ளிஇறுதியை யுடைய முன்னிலைச்சொற்களும், வல்லெழுத்து முதல்மொழி வரின், இயல்பாவனவும் உறழ்ச்சியாவனவும் என அவ்விரண்டு இயல்பினை உடைய எ-று.

உயிரீறு புள்ளியீறு என்றதனான், முன்னிலை வினைச்சொல் என்பது கொள்க.

*(உ-ம்.)* எறிகொற்றா, கொணா கொற்றா - சாத்தா - தேவா-பூதா-எனவும், உண் கொற்றா, தின் கொற்றா - எனவும்

இவை இயல்பு. நடகொற்றா-நடக்கொற்றா- எனவும், ஈர்கொற்றா ஈர்க்கொற்றா - எனவும் இவை உறழ்ச்சி. (9)

**நச்சினார்க்கினியம்**

## *151. முன்னிலைவினை வன்கணம் வருவழி முடியுமாறு*

**உயிர்ஈறு ஆகிய . . . . . . வல்லெழுத்து வரினே.**

இது முன்னிலை வினைச்சொல் வன்கணத்துக்கண் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள் : உயிர் ஈறு . . . . . கிளவியும் - உயிர் ஈறாய் வந்த முன்னிலை வினைச்சொற்களும் புள்ளிஈறாய் வந்த முன்னிலை வினைச்சொற்களும்; வல்லெழுத்து வரின் - வல்லெழுத்து முதலாகிய மொழிவரின்; இயல்பு . . . . . . இயல - இயல்பாய் முடிவனவும் உறழ்ந்து முடிவனவும் என அவ்விரண்டு இயல்பினையுடைய எ-று.

உ - ம் : எறிகொற்றா கொணா கொற்றா, உண்கொற்றா தின்கொற்றா - சாத்தா - தேவா - பூதா - என இவை இயல்பு. நடகொற்றா நடக்கொற்றா, ஈர்கொற்றா ஈர்க்கொற்றா - சாத்தா- தேவா - பூதா - என இவை உறழ்ச்சி. 'ஈறு' என்று ஓதினமையின் வினைச்சொல்லே கொள்க.

இவை, முன்நின்றான் தொழில் உணர்த்துவனவும் அவனைத் தொழிற்படுத்துவனவும் என இருவகைய(1). இ ஐ ஆய் முதலியன தொழில் உணர்த்துவன; நட வாழ் முதலியன உயிரீறும் புள்ளியீறுமாய்த் தொழிற்படுத்துவன.

நில்கொற்றா நிற்கொற்றா - எனத் திரிந்து உறழ்ந்தனவும் 'உறழாகுநவும்' என்னும் பொதுவகையான் முடிக்க.

'இயல்பும் உறழ்வும் என்றிரண்டு இயல்பின' என்னாது 'ஆகுநவும்' என்றதனான், துக்கொற்றா நொக்கொற்றா -

ஞெள்ளா - நாகா - மாடா - வடுகா - என ஓரெழுத்தொருமொழி முன்னிலை வினைச்சொல் மிக்கே முடிதல் கொள்க. *(9)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 151***

*1.முன்நின்றான் தொழில் உணர்த்துவன முன்னிலை வினைமுற்று, முன்நின்றானைத் தொழிற்படுத்துவன ஏவல்வினைமுற்றாம் என்க.*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 151.*** **உயிர்ஈ றாகிய முன்னிலைக் கிளவியும்**
**.................வல்லெழுத்து வரினே.**

'ஆகுநவும்' என்றதனான், துக்கொற்றா, நொக்கொற்றா- ஞெள்ளா நாகா வடுகா என ஓரெழுத்தொருமொழி முன்னிலைவினைச்சொல் மிக்கே முடிதல் கொள்க-என்ற நச்சினார்க்கினியர் உரை பொருந்தாது. ஆசிரியர் 'வல்லெழுத்து மிகுநவும்' என்னாமையால், துக்கொற்றா - நொக்கொற்றா - என வல்லெழுத்து மிக்கே முடிதலும், துஞ்ஞெள்ளா - துவ்வடுகா - என மெல்லெழுத்தும் இடையெழுத்தும் மிக்கு முடிதலும் அவர்க்குக் கருத்தாகாது என்று துணிகிறார், ரெட்டியார்.

**இளம்பூரணம்**

***153. மேலை முடிபு சிலவற்றிற்கு இன்மை***

**ஔஎன வருஉம் உயிர்இறு சொல்லும்**
**ஞநமவ என்னும் புள்ளி இறுதியும்**
**குற்றிய லுகரத்து இறுதியும் உளப்பட**
**முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே.**

*(இச்....எனின்) மேல் முடிபு கூறியவற்றுள் சிலவற்றிற்கு அம்முடிபு விலக்குதல் நுதலிற்று.*

*(இ-ள்.)* ஔ என வருகின்ற உயிரீற்றுச்சொல்லும், ஞ ந ம வ - என்று சொல்லப்படும் புள்ளியீற்றுச்சொல்லும், குற்றியலுகரமாகிய இறுதியையுடைய சொல்லும் ஆகிய இவை முன்னிலைமொழிக்குக் கூறிய இயல்பும் உறழ்வும் ஆகிய முடிபிற்கு முற்றத் தோன்றா எ-று.

'முற்ற' என்றதனான், ஈண்டு விலக்கப்பட்டவற்றுள் குற்றியலுகரஈறு ஒழித்து ஒழிந்தன எல்லாம் நிலைமொழி உகரம் பெற்று வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து முடிதலும், குற்றியலுகரஈறு வருமொழிவல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க.

*(உ-ம்.)* கௌவு கொற்றா கௌவுக் கொற்றா, வௌவு கொற்றா வௌவுக் கொற்றா, உரிஞு கொற்றா உரிஞுக் கொற்றா, பொருநு கொற்றா பொருநுக் கொற்றா, திருமு கொற்றா திருமுக்கொற்றா, தெவ்வுகொற்றா தெவ்வுக்கொற்றா எனவும்,[1] கூட்டுக் கொற்றா எனவும் வரும். *(10)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 153.*** 1. 'தெவ்' என்னும் உரிச்சொல் எடுத்தல் ஓசையான் ஏவலொருமை முற்றாய் நிற்கும்; அவ்வழி உகரச்சாரியை பெற்றுத் தெவ்வுகொற்றா - தெவ்வுக்கொற்றா - என உறழ்ந்து முடிந்தவாறு. [தெவ்வு - பகைகொள்ளு]

'நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்' என்னுமிடத்தில், 'முகத்தலைச் செய்' என்னும் பொருட்டாய்த் தெவ்வு வருதல் காண்க. அப்பொருள் கொள்ளின், தெவ்வுகொற்றா என்பது நீ முகந்திடு கொற்றா என்றவாறாம். 'தெவுக் கொளற்பொருட்டே' என்பது உரியியல் நூற்பா.

**நச்சினார்க்கினியம்**

***152. மேலை முடிபு சிலவற்றிற்கு இன்மை***

**ஔஎன வருஉம் . . . . . முன்னிலை மொழிக்கே.**

இஃது எய்தியது விலக்கிற்று, முற்கூறியவற்றுள் சில ஆகாதனவற்றை வரைந்து உணர்த்தலின்.

இ-ள் : ஔ என . . . . . . இறுதியும் - ஔ என வருகின்ற உயிரீற்றுச் சொல்லும், ஞ ந ம வ - என்று சொல்லப்படும் புள்ளியீற்றுச் சொல்லும்; குற்றியலுகரத்து இறுதியும் - குற்றியலுகரத்தை இறுதியிலேயுடைய சொல்லும்; முன்னிலைமொழிக்கு(அ) உளப்பட முற்றத் தோன்றா - முன்னர் முன்னிலைமொழிக்குப் பொருந்தக்கூறிய இயல்பும் உறழ்ச்சியும் ஆகிய முடிபிற்கு முற்றத் தோன்றா எ-று.

'முற்ற' என்றதனான், நிலைமொழி உகரம் பெற்று (163) உறழ்ந்து முடிதல் கொள்க.

உ-ம் : கௌவு கொற்றா கௌவுக் கொற்றா, வெளவு கொற்றா வெளவுக்கொற்றா; உரிஞு கொற்றா உரிஞுக் கொற்றா, பொருநு கொற்றா பொருநுக் கொற்றா, திருமு கொற்றா திருமுக் கொற்றா, தெவ்வு கொற்றா தெவ்வுக் கொற்றா(ஆ); கூட்டு கொற்றா கூட்டுக் கொற்றா- என வரும். (10)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## சூத்திரம் 152

(அ) முன்னிலை மொழி - ஒருமை ஏவல்.

(ஆ) பகைகொள்ளு என்றானும் எடுத்துக்கொள்ளு என்றானும் பொருள்படும். இளம்பூரணம் உரைக்குறிப்பு சூ. 153 நோக்குக.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 153. ஔ-என வரூஉம்....முன்னிலை மொழிக்கே.**

(இ-ள்.) ஔகார ஈற்றுச் சொல்லும், ஞ் ந் ம் வ் - இப்புள்ளியீற்றுச் சொல்லும், குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும் முன்னிலை மொழிக்கண் முன்போலத் தோன்றா.

" 'முற்ற' என்றதனான், நிலைமொழி உகரம் பெற்று வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து முடிதல் கொள்க" என்ற உரைகாரர்கள்தம் கூற்றினை, அவர்தம் கருத்து, 297-298-299 - முதலிய அகத்தோத்துச் சூத்திரங்களால் பெறப்படுதலின் பொருந்துமாறின்று என்று இவர் கருதுகிறார். அவ்வகத்தோத்துச் செய்கைச் சூத்திரங்களால் வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து வருதல் பெறப்பட்டிலது என்பதை இவர் நோக்கிற்றிலர்.

முற்றுதல் என்பதற்கு ஒத்திருத்தல் என்று இவர் பொருள் கொண்டமை பொருந்தாமை உணரப்படும். படவே, 'முற்ற' என்பதனை உரைகாரர் இலேசாகக் கொண்டமை பொருந்தும்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 152.*** **ஔஎன வரூஉம் உயிர்இறு சொல்லும்**

**.................................**

**.................................**

**முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே.**

மேற்சூத்திரத்தில் முன்னிலைக்கண் வரும் உயிரீறு புள்ளியீறு இவற்றின்முன் வரும் வல்லெழுத்திற்கு விதிகூறினார் ஆதலின், அவ்விரண்டு ஈறுகளுள்ளும் முன்னிலைக்கண் வாராத ஈறு இவை என்று இச்சூத்திரத்தில் கூறுகின்றார். மேற்சூத்திரத்தில் 'புள்ளி இறுதி' என்றதனான் குற்றியலுகரஈறும் உட்பட்டது ஆகலின், முன்னிலைக்கண் வாராத குற்றியலுகரமும் விலக்க வேண்டுவது ஆயிற்று.

காது - கட்டு - முதலிய சொற்கள் குற்றியலுகரமாய் ஒலிக்கும் இடத்தில் பெயர்ச்சொற்கள் என்பதும், முற்றியலுகரமாய் ஒலிக்கும் இடத்தில் வினைச்சொற்கள் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாதல் அறியப்படும்.

ஆசிரியர் ஞ ந வ- க்களை விலக்கியதன் காரணம் யாது என்று நோக்குதும்: வகாரம், அவ் இவ் உவ் - என்னும் சுட்டுக்களிலும் தெவ் என்னும் பெயர்ச் சொல்லிலும் அன்றி வருதல் இன்று. ஞகாரம், உரிஞ் என்னும் தொழிற்பெயர்

ஒன்றன்கணன்றி வருதல் இன்று. நகாரம், வெரிந் என்னும் பெயர்ச்சொற்கண்ணும், பொருந் என்னும் தொழிற்பெயர் ஒன்றன்கண்ணுமன்றி வருதல் இன்று. ஆதலின் ஞந-க்கள் தொழிற்பெயர்க்கணன்றி முன்னிலைவினைக்கண் வாரா என்பது அறியலாகும்.

'முற்ற' என்றதனால், ஈண்டு விலக்கப்பட்டவற்றுள் குற்றியலுகரஈறு ஒழித்து ஒழிந்தன எல்லாம் நிலைமொழி உகரம் பெற்று வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து முடிதலும், குற்றியலுகரஈறு வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க'' என்றார் இளம்பூரணர். இவற்றால் அவர் குற்றியலுகரஈறு மட்டும் உகரம் பெறாது முடியும் என்று கொண்டது அறியப்படும்.

நச்சினார்க்கினியர், '' 'முற்ற' என்றதனால் நிலைமொழி உகரம் பெற்று உறழ்ந்து முடிதல் கொள்க'' என்று எழுதி உதாரணம் காட்டினார். இளம்பூரணர் எழுதியாங்கு, நச்சினார்க்கினியர் 'குற்றியலுகரஈறு ஒழித்து ஒழிந்தன எல்லாம்' என்று எழுதாததனான், குற்றியலுகரமும் ஏனைய ஈறுகள் போன்று உகரம் பெறும் என்பது அவர்கருத்து ஆகும்.

ஆசிரியர் 'தோன்றா' என்று கூறிய மூவகை ஈறுகளும் அவ்வாறே தோன்றா என்று உரைகூறவேண்டும்; அல்லது, மூவகை ஈறுகளும் உகரம் பெற்று முடியும் எனல் வேண்டும். அவ்வாறன்றி, மூவகை ஈறுகளுள் இருவகை ஈறுகள் உகரம் பெற்றுவரும் என்றும், ஒன்று உகரம் பெறாது நின்றாங்கு வரும் என்றும் உரையாசிரியர் கூறியது அமைவுடையதாதல் இல்லை.

காது, கட்டு முதலிய சொற்கள் முன்னிலைக்கண் முற்றுகரம் ஆதலின், 'குற்றிய லுகரத்து இறுதியும்.... தோன்றா' என்று ஆசிரியர் கூறினார் என்றலே அமைதி.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 152. ஒளஎன வரூஉம் உயிர்இறு சொல்லும்
ஞநம என்னும் புள்ளி இறுதியும்
............முன்னிலை மொழிக்கே.

'முற்றத்தோன்றா' எனவே, ஔகாரமும் புள்ளியும் குற்றியலுகரமும் சாரியை பெற்றுத் தோன்றும் என்றவாறாம். அச்சாரியை உகரம் என்பது அகத்தோத்தினுள் பெறப்பட்டது. அவை எடுத்தல்ஓசையான் முன்னிலை வினைச்சொல்லாக வரும்.

(எ-டு.) கௌவு கொற்றா - வௌவு கொற்றா - எனவும், உரிஞு கொற்றா - பொருநுகொற்றா-திருமு கொற்றா எனவும், கூறுகொற்றா-பருகு கொற்றா- அஃகுகொற்றா-விரும்புகொற்றா-நல்கு கொற்றா-எனவும் வரும். குற்றிய லுகரம் புள்ளியீறுபோல உயிரேற்று முடியும் ஆகலின் நின்றாங்கே நின்று சாரியை உகரத்தை ஏற்று முற்றிநிற்கும் என அறிக. கூறு+உ=கூறு என நிற்கும்.

இச்சூத்திரத்துள் வகரத்தையும் சேர்த்து 'ஞநமவ என்னும் புள்ளி யிறுதியும்' என உரையாளர் யாவரும் பாடம் கொண்டுள்ளனர். 'வகரக் கிளவி நான்மொழி ஈற்றது' என்றதனானும், அவற்றுள் அவ் -இவ் - உவ்- என்பவை சுட்டுப்பெயராயும் தெவ் என்பது உரிச்சொல்லாயும் நிற்றலின், அவை முன்னிலை வினை ஆகாமை தேற்றமாம். தெவ் என்னும் உரிச்சொல் தெவ்வர் எனப் பெயராதல் அன்றித் தெவ்வினான் - தெவ்வுவான்-தெவ்வு தெவ்வ என வினைஆகாமையும் அறிக. 'ஞநமவென்னும்' என நின்ற உடம்படுமெய்யைப் பிறழ்பிரிப்பாகப் பிரித்தமையான் இவ்வழு நேர்ந்தது என்க. அதனை ஓராமல் உரையாசிரியன்மார் தெவ்வுகொற்றா என உதாரணம் தந்தனர்.

['தெ(வ்)வுக் கொளற்பொருட்டே' (சொல்.345ந.) என்பதனான், உகரச்சாரியை அடுத்துவரும் தெ(வ்)வு எனும்

உரிச்சொல் கொள்ளுதல் என வினைப்பொருட்டாகவும் வருதலின், தெவ்வு கொற்றா என உரையாசிரியன்மார் காட்டிய உதாரணம் அறியாமையின் விளைவு அன்று. (இதனைக்) கொள் எனக் கொற்றனை ஏவுதலாக இப்புணர்மொழி பொருள்படுமாறு காண்க. இவ்வுரிச் சொல் எடுத்தல் ஓசையான் ஏவலாம் என்பது. ஒவ்வொரு பொருளை உணர்த்தும்- தோறும் சொல் வெவ்வேறே என வடநூற் கொள்கையையும் ஆசிரியர் தொல்காப்பியனார் உடன்பட்டார் என்பதற்குத் 'தெவ்வுப் பகையாகும்' 'தெ(வ்)வுக் கொளற்பொருட்டே' என்ற சூத்திரங்களை எடுத்துக்காட்டினார் பிரயோகவிவேக நூலுடையார் (கா.40 உரை). 103ஆம் சூத்திரத்து உரையுள் 'தத்தம் கிளவி தம்மகப் பட்ட' வற்றை முன்மொழி பின்மொழியாக மாற்றிக்கூறும் வடநூல்மரபு தமிழ்நூலார்க்கும் உரியதே என்பதை உடன்பட்டு மொழியும் இவ்வுரையாளர்க்குப் பிரயோகவிவேக நூலுடையார் சுட்டும் இக்கருத்தும் உடன்பாடாதல் கூடுமன்றோ? ஆகவே, உரையாசிரியன்மார் காட்டிய உதாரணம் ஏற்புடைத்தாமாறு உணரப்படும்.]

**இளம்பூரணம்**

## *154. உயர்திணைப் பெயர் எல்லாவழியும் இயல்பாதல்*

**உயிர்ஈறு ஆகிய உயர்திணைப் பெயரும்**
**புள்ளி இறுதி உயர்திணைப் பெயரும்**
**எல்லா வழியும் இயல்புஎன மொழிப.**

*(இச்....எனின்)* உயர்திணைப்பெயர் நான்கு கணத்துக்கண்ணும் இருவழியும் முடியுமாறு உணர்....ற்று.

*(இ-ள்.)* உயிர்ஈறாகிய உயர்திணைப்பெயர்களும் புள்ளி இறுதியை யுடைய உயர்திணைப்பெயர்களும், அல்வழியும் வேற்றுமையும் ஆகிய எல்லா இடத்தும் இயல்பாம் என்று சொல்லுவர் எ-று.

*(உ-ம்.)* நம்பி எனவும் அவன் எனவும் நிறுத்தி, அல்வழிக்கண் குறியன் சிறியன் தீயன் பெரியன் - எனவும், ஞான்றான் நீண்டான் மாண்டான் - எனவும்; வேற்றுமைக்கண் கை செவி தலை புறம் - எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி - எனவும், யாப்பு வலிமை - எனவும், அடைபு ஔவியம் - எனவும் ஒட்டுக.

ஒருவென் என நிறுத்திக் குறியென் சிறியென் - எனவும், கை செவி - எனவும் தன்மைப் பெயர்க்கண்ணும் ஒட்டுக.

'உயிரீறு' 'புள்ளியிறுதி' என்றதனான், உயர்திணைப் பெயருள் இயல்பு அன்றி முடிவன எல்லாம் கொள்க.

*(உ-ம்.)* பலசான்றார், கபிலபரணர், இறைவ நெடுவேட்டுவர், மருத்துவமாணிக்கர், பல்லரசர் - என இவை ஈறுகெட்டு[1] முடிந்தன.

கோலிகக்கருவி, வண்ணாரப்பாடி, ஆசீவகப்பள்ளி - என்று இவை ஈறுகெட்டு[2] வல்லெழுத்து மிக்கன.

குமரகோட்டம் குமரக்கோட்டம், பிரமகோட்டம் பிரமக்கோட்டம் - என இவை ஒகரம் கெட்டு வல்லெழுத்து உறழ்ந்து முடிந்தன. பிறவும் அன்ன.

'எல்லாம்' என்றதனான், உயர்திணை வினைச்சொல் இயல்பாயும் திரிந்தும் முடிவன கொள்க.

*(உ-ம்.)* உண்ப சான்றார், உண்டார்சான்றார், உண்பென் பார்ப்பென்[3] - என இவை இயல்பு; உண்டேஞ் சான்றேம், உண்டே நாம்[4] - என இவை திரிந்தன. பிறவும் அன்ன. *(11)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 154.*** பல<u>ர்</u> சான்றார், கபில<u>ன்</u> பரணன், இறைவ<u>ன்</u> நெடுவேட்டுவன், மருத்துவ<u>ன்</u> மாணிக்கன், பல<u>ர்</u> அரசர் இவற்றுள் நிலைமொழி ஈறுகள் கெட்டன. நடுவே நின்ற மூன்று தொடர்களும் உம்மைத்தொகையாகலின் வருமொழி பலர்பால் ஈற்றான் முடிந்தன. ஏனைய இரண்டும் பலராகிய சான்றோர், அரசர் என இருபெயரொட்டு.

2. கோலிகன், வண்ணாரன், ஆசீவகன் என்னும் நிலைமொழி ஈறு கெட்டன. வண்ணாரம் + பாடி = வண்ணாரப்பாடி என நிலைமொழியீற்று மகரம் கெட்டு வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிந்ததாகக் கூறுவாரு முளர்.

3. உண்பென் - உண்பேனாய் என முற்றெச்சப் பொருட்டு; தன்மைவினை யாதலின் உயர்திணை என்க.

4. நிலைமொழி யீற்று மகரம் முறையே மெய்பிறிதாகியும் கெட்டும் திரிந்தமை காண்க.

**நச்சினார்க்கினியம்**

## *153. உயர்திணைப்பெயர் எல்லாவழியும் இயல்பாதல்*

**உயிர்ஈறு ஆகிய . . . . . இயல்பு என மொழிப.**

இஃது உயர்திணைப்பெயர், வன்கணம் மென்கணம் இடைக்கணம் உயிர்க்கணம் என்னும் நான்கு கணத்தினும் இருவழியும் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள் : உயிர்ஈறு . . . . . பெயரும் - உயிர்ஈறாய் வந்த உயர்திணைப் பெயர்களும், புள்ளியீற்றினையுடைய உயர்திணைப் பெயர்களும், எல்லா வழியும் - நான்கு கணத்து அல்வழியும் வேற்றுமையும் ஆகிய எல்லா இடத்தும்; இயல்பு என மொழிப - இயல்பாய் முடியும் என்று கூறுவர் புலவர் எ-று.

வன்கணம் ஒழிந்த கணங்களை ஞ ந ம ய வ (144) என்பதனான் முடிப்பாரும் உளர். அது பொருந்தாது, இவ்வாசிரியர் உயர்திணைப் பெயரும் விரவுப்பெயரும் எடுத்தோதியே முடிப்பார் ஆதலின்.

உ-ம் : நம்பி - அவன் - எனவும், நங்கை-அவள் - எனவும் நிறுத்தி, அல்வழிக்கண், குறியன் சிறியன் தீயன் பெரியன் - எனவும், குறியள் சிறியள் தீயள் பெரியள் - எனவும்,

ஞான்றான் நீண்டான் மாண்டான் - எனவும், ஞான்றாள் நீண்டாள் மாண்டாள் - எனவும், யாவன் வலியன் -எனவும், யாவள் வலியள் - எனவும், அடைந்தான் ஆயினான் ஔவியத்தான் எனவும், அழகியள் ஆடினாள் ஔவியத்தாள்-எனவும் ஒட்டுக.

இனி வேற்றுமைக்கண், கை செவி தலை புறம் - எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி - எனவும், யாப்பு வன்மை - எனவும், அழகு ஔவியம் - எனவும் எல்லாவற்றொடும் ஒட்டுக, ஒருவேன் என்னும் தன்மைப்பெயர்க்கண்ணும் குறியேன் சிறியேன் தீயேன் பெரியேன் - எனவும், கை செவி தலை புறம் - எனவும் ஒட்டுக. நீ, நீயிர் என்பன முன்னிலை விரவுப்பெயர் ஆதலின் ஈண்டைக்கு ஆகா.

இனி 'உயிரீறு' 'புள்ளியிறுதி' என்ற மிகையானே, உயர்திணைப் பெயர் திரிந்து முடிவனவும் கொள்க.

உ- ம் : கபிலபரணர், இறைவ நெடுவேட்டுவர், மருத்துவ மாணிக்கர் - என னகரஈறு கெட்டு இயல்பாய்முடிந்தன.(அ)

ஆசீவகப்பள்ளி, நிக்கந்தக் கோட்டம் - என இவை அவ்வீறு கெட்டு ஒற்று மிக்கு முடிந்தன. ஈழவக்கத்தி, வாணிகத்தெரு, அரசக்கன்னி, கோலிகக் கருவி - என இவை ஒருமையீறும் பன்மையீறும் கெட்டு மிக்கு முடிந்தன.(ஆ)

குமரகோட்டம் குமரக்கோட்டம், பிரமகோட்டம் பிரமக்கோடட்டம் - என இவை ஈறுகெட்டு வல்லெழுத்து உறழ்ந்தன.(இ)

வண்ணாரப்பெண்டிர் : இஃது ஈறுகெட்டு மிக்கு முடிந்தது. (ஈ)

பல்சங்கத்தார், பல்சான்றோர், பல்லரசர் என்றாற்போலவன ரகர ஈறும் அதன்முன் நின்ற அகரமும் கெட்டுப் பிற செய்கையும் (உ) பெற்றுமுடிந்தன.

இனி 'எல்லா வழியும்' என்றதனான், உயர்திணை வினைச்சொல் இயல்பாயும் திரிந்தும் முடிவன எல்லாம் கொள்க.

உ-ம் : உண்கு உண்டு வருது சேறு உண்பல் உண்டேன் உண்பேன் - என்னும் தன்மை வினைகளைக் கொற்றா - சாத்தா- தேவா - பூதா - என்பனவற்றோடு ஒட்டுக. உண்டீர் சான்றீர் - பார்ப்பீர்-என உயர்திணையாகும் முன்னிலைக் கண்ணும், உண்ப உண்டார் சான்றார்-பார்ப்பார்- எனப் படர்க்கைக்கண்ணும் ஒட்டுக. இவை இயல்பு.

உண்டனெஞ் சான்றேம், உண்டே நாம் - என்றாற்போல்வன திரிந்து(ஊ) முடிந்தன. பிறவும் அன்ன.*(11)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

## *சூத்திரம் 153*

*(அ)* இவை உயர்திணை உம்மைத்தொகை யாதலின் பலர் அறிசொற்குரிய ரகரஈற்றான் முடிந்தன.

*(ஆ)* ஈழவன்+கத்தி, வாணிகன்+தெரு: அரசர்+கன்னி, கோலிகர்+கருவி.

*(இ)*நிலைமொழியீற்று னகரம் என்க.

*(ஈ)* வண்ணாரம் : நிலைமொழி.

*(உ)* பலர்+அரசர் > பல்+அரசர் = பல்லரசர் எனக் குறியதன் முன்னர் ஒற்று இரட்டித்தது. *(160)*

*(ஊ)* மகரஈறு முறையே வேறுபட்டும் குன்றியும் முடிந்தவாறு.

சாத்திரியார் உரைக்குறிப்பு

*சூ. 154.* உயிர்ஈ றாகிய....இயல்பென மொழிப.

உரைகாரர் இருவரும் இலேசினான் காட்டிய எடுத்துக்காட்டினை இவர் 'அல்வழி யெல்லாம்' (314) என்னும் சூத்திரத்தாற் பெறப்படும் என்றார். எழுவாய்த் தொடரையே ஆசிரியர் அல்வழியாகக் கொண்டுள்ளமை நூலுள் வெளிப்படையாக உணரப்படுதலானும், இவ்விருவரும் வினைமுற்றுத்தொடரை உதாரணம் காட்டினமையானும், ஈண்டு மிகையால் உணர்த்துதலைச் சிறப்பினதாகக் கொண்டனர் போலும்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 153. உயிரீ றாகிய...இயல்பென மொழிப.**

உயர்திணைப்பெயர்களுள் இகரஈற்றுப்பெயர்ஒன்று ஒழிய மற்றை ஈறுகள்எல்லாம் இயல்பாய் முடியும் என்றலே ஆசிரியர் கருத்தாதல் பெறுதும். அன்றியும், ஆசிரியர் உயர்திணைப்பெயர்களுக்கு விதிகூறுமிடத்து, உரையாளர் வினைச்சொல் திரிதலைக் காட்டுதலும் அமையாது.

**இளம்பூரணம்**

***155. அவற்றுள் சிலவற்றிற்கு மிக்க திரிபு***

**அவற்றுள்**
**இகரஈற் றுப்பெயர் திரிபுஇடன் உடைத்தே.**

(இச்....எனின்) உயர்திணைப் பெயருள் சிலவற்றிற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொல்லப்பட்ட உயர்திணைப் பெயருள், இகரம் ஆகிய இறுதியையுடைய பெயர் திரிந்து முடியும் இடமுடைத்து எ-று.

***உரையிற்கோடல்*** என்பதனான், இது மிக்க திரிபு என்பது கொள்ளப்படும்.

(உ-ம்.) எட்டிப்பூ, எட்டிப்புரவு; காவிதிப்பூ, காவிதிப்புரவு; நம்பிப்பூ, நம்பிப்பேறு - என வரும்.

'இடனுடைத்து' என்பதனான், இகரஈறு அன்றிப் பிற ஈறு திரியாது வல்லெழுத்து மிக்கு வருவன ஈண்டுக் கொள்க.

(உ-ம்.) தினைப் பூ, தினைப் புரவு - என வரும். (12)

**நச்சினார்க்கினியம்**

## 154. அவற்றுள் சிலவற்றிற்கு மிக்க திரிபு

**அவற்றுள்,**
**இகர இறுபெயர் திரிபுஇடன் உடைத்தே.**

இஃது உயர்திணைப் பெயருள் சிலவற்றிற்கு எய்தாதது எய்துவித்தது.

இ-ள் : அவற்றுள் . . . . உடைத்தே - முற்கூறிய உயர்திணைப் பெயர்களுள் இகரஈற்றுப் பெயர், இருவழியும் திரிந்துமுடியும் இடனுடைத்து எ-று.

உ-ம் : எட்டிப்பூ காவிதிப்பூ நம்பிப்பேறு - என இவ்வுயர் திணைப்பெயர்கள் வேற்றுமைக்கண் மிக்கு முடிந்தன. எட்டி, காவிதி என்பன தேயவழக்கு ஆகிய சிறப்புப்பெயர். 'எட்டி' மரம் அன்று. அஃது, 'எட்டி குமரன்(அ) இருந்தோன் தன்னை' (மணி. 4:58) என்பதனான் உணர்க. இவை எட்டியது பூ, எட்டிக்குப் பூ (காவிதியது பூ - காவிதிக்குப் பூ ) - என விரியும்.

இனி, நம்பிக்கொல்லன் நம்பிச்சான்றான் நம்பித்துணை நம்பிப்பிள்ளை - எனவும், செட்டிக் கூத்தன் - சாத்தன் - தேவன்- பூதன் - எனவும் அல்வழிக்கண் (ஆ) உயர்திணைப் பெயர் மிக்கு முடிந்தன.

'இடனுடைத்து' என்றதனான், இகரஈறு அல்லாதனவும் ஈறு திரியாது நின்று வல்லெழுத்துப் பெறுதல் கொள்க.

உ-ம் : நங்கைப்பெண், நங்கைச்சானி - என அல்வழிக்கண் சிறுபான்மை ஐகாரஈறு மிக்கன.

இவ்வீற்று அஃறிணைப் பெயர் மிக்கு முடிதல் உயிர்மயங்கியலுள் கூறுப. *(12)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 154***

*(அ)* எட்டிகுமரன் என்புழி, குமரன் உயர்திணை இயற்பெயர் ஆதலின் வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் வல்லெழுத்து மிகாதாயிற்று, எட்டி சாயலன் *(சிலப். 15 : 163* என்புழியும் அது.

*(ஆ)* இவை இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாதலின் மிக்கு முடிந்தன.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 154.*** **அவற்றுள்,**

**இகர இறுபெயர் திரிபிடன் உடைத்தே.**

இச்சூத்திரத்தில் கூறுவது, மேற்சூத்திரத்தில் கூறப்பட்டவற்றுள் ஒன்றற்குப் புறனடை ஆகலின், அஃறிணைப்பெயர்களைக் காட்டுதல் தகாது என்று கொண்டு, நங்கைப்பெண் - நங்கைச்சானி- என ஐகார ஈற்று உணர்திணைப் பெயரைக் காட்டினார் நச்சினார்க்கினியர். 'இடனுடைத்து' என்றதனால் ஐகாரஈறு திரிதலைக் காட்டுதல் பொருந்தாது. இத்திரிபு பெரும்பான்மை அன்று, ஒரோழி வரும் என்று 'இடனுடைத்து' என்பது பொருள்படும்.

**இளம்பூரணம்**

***156. விரவுப்பெயர் முடியுமாறு***

**அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே.**

(இச்....எனின்) விரவுப்பெயர் முடிபு கூறு.....ற்று.

(இ-ள்.) உயர்திணையோடு அஃறிணை விரவும் விரவுப்பெயர் இயல்பாய் முடிவனவும் உள; இயல்பு அன்றி முடிவனவும் உள எ-று.

இயல்பன்றி முடிவன இன்னவாறு முடியும் என மேல் அகத்து ஓத்தினுள் கூறப்படும்.[1]

(உ-ம்.) சாத்தன் குறியன், சாத்தன் குறிது - எனவும், சாத்தன் கை - எனவும் இவ்வாறே அல்வழியினும் வேற்றுமையினும் நான்கு கணத்தொடும் ஒட்டிக்கொள்க. (13)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

சூ. 156. 1. அவை கூறப்படும் நூற்பாக்கள் 348, 349, 350, 351, 353, 354 என்னுடையவை. ணகர ஈறன்றி, ணகர மகர ஈற்று விரவுப்பெயர்க்கு இயல்பு முதலாய விதிகள் 304, 321- 327 என்னும் எண்ணிட்ட எட்டு நூற்பாக்களில் இடம் பெறுவன.

**நச்சினார்க்கினியம்**

## 155. விரவுப் பெயர் முடியுமாறு

**அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே.**

இஃது விரவுப்பெயருள் இயல்பாய் முடிவனவும் உள என்கின்றது.

இ-ள் : அஃறிணை விரவுப்பெயர் - உயர்திணைப் பெயரோடு அஃறிணை விரவிய விரவுப்பெயர்; இயல்புமார் உள - இயல்பாய் முடிவனவும் உள; உம்மையான், இயல்பின்றி முடிவனவும் உள எ-று.

உயர்திணைப் பெயரோடு அஃறிணை சென்று விரவிற்று என்றது என்னை, சொல்லதிகாரத்து 'இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்' (சொல். 172) என்று சூத்திரம் செய்வாரால் எனின், அதுவும் பொருந்துமாறு கூறுதும். சாத்தன் சாத்தி, முடவன் முடத்தி - என வரும் விரவுப்

பெயர்க்கண் உயர்திணைக்கு உரியவாக ஓதிய ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்திநின்ற ஈற்றெழுத்துக்களே அஃறிணை ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்தின எனல் வேண்டும்; என்னை? அஃறிணைக்கு ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் உணர்த்தும் ஈறன்றி, ஆண்பாலும் பெண்பாலும் உணர்த்தும் ஈறுகள் உளவாக ஆசிரியர் ஓதாமையின். அங்ஙனம் உயர்திணை இருபாலும் உணர்த்தும் ஈறுகள் நின்றே அஃறிணை ஆண்பாலையும் பெண்பாலையும் உணர்த்துதலின், அஃறிணை உயர்திணையொடு சென்று விரவிற்று என்று அவற்றின் உண்மைத்தன்மைத் தோற்றம் கூறுவான் ஈண்டுக் கூறினார். இவ்வாறே விளிமரபின்கண் 'கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்' (சொல். 152 ந.) என்புழியும், ஆசிரியர் உயர்திணையோடு அஃறிணை விரவிய விரவுப்பெயர் என ஆண்டும் உண்மைத் தன்மைத்தோற்றம் கூறுவர். மாணாக்கன் இனிது உணர்தற்கு இவ்வாறு விரவுப்பெயரினது உண்மைத்தன்மைத் தோற்றம் இரண்டு அதிகாரத்தும் கூறி, அவ்விரவுப்பெயர் வழக்கின்கண் இருதிணைப்பொருளும் உணர்த்தி இருதிணைச்சொல்லாய் நிற்றற்கும் ஒத்த உரிமையவாம் எனப் புலப்பட நிற்குமாறு காட்டினார் என்றுணர்க.

இனி, அவை அல்வழிக்கண் இயல்பாய் நிற்குமாறு :

உ-ம் : சாத்தன் கொற்றன் சாத்தி கொற்றி - என நிறுத்திக் குறியன் சிறியன் தீயன் பெரியன்- குறியள் சிறியள் தீயள் பெரியள் எனவும், ஞான்றான் நீண்டான் மாண்டான் யாவன் வலியன் - ஞான்றாள் நீண்டாள் மாண்டாள யாவள் வலியள் எனவும், அடைந்தான் ஒளவியத்தான் - அடைந்தாள் ஒளவியத்தாள் எனவும் நான்கு கணத்தொடும் ஒட்டி உணர்க. இனி வேற்றுமைக்கண், கை செவி தலை புறம் எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை அழகு ஒளவியம் எனவும் ஒட்டுக.

இவற்றுள் னகாரம் நிற்பத் தகாரம் நகாரம் வந்துழித் திரியும் உதாரணம் ஈண்டுக் கொள்ளற்க. இனிச் சாத்தன் குறிது,

சாத்தி குறிது - என அஃறிணை முடிபு ஏற்பனவும் கொள்க. இவற்றொடு வினைச்சொல் தலைப்பெய்ய இவை இருதிணைக்கும் உரியவாம். ஆண்டு நாற்பத்தெட்டுச் சூத்திரங்களான் முடிவதனை (அ) ஈண்டுத் தொகுத்தார். இஃது உயர்திணைக்கும் ஒக்கும். உம்மையான் இயல்பின்றி முடிவன னகாரஈற்றுள் காட்டுதும் (13)

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 156. அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே.**

'அஃறிணை' என்னாது 'விரவுப்பெயர்' என்றே ஒழியின் உம்மையான் உயர்திணைப்பெயரும், 'விரவுப் பெயர்' என்னாது அஃறிணை என்றே ஒழியின் விரவுப்பெயர் அல்லா அஃறிணைப்பெயரும் குறிக்கப்படும் ஆதலின், 'அஃறிணை விரவுப் பெயர்' என்று ஆசிரியர் சூத்திரம் செய்தார் என்று இவர் குறிப்பிடுதலிற் சேனாவரையர் கருத்தினைத் தழுவுகின்றமை பெற்றாம்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 155. அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே.**

உயர்திணைப்பெயர்கள் மேல் விதந்து கூறப் பெற்றமையான், சாத்தன் குறியன் - சிறியன் - என நச்சினார்க்கினியர் காட்டும் உதாரணமும் விளக்கமும் பொருந்தாமை அறிக.

[அஃறிணை விரவுப்பெயர்க்கு நச்சினார்க்கினியர் கண்ட உரைவிளக்கம் வேறு. அவர்கொள்கைக்கு அவர் காட்டிய உதாரணங்கள் பொருந்தும்.]

**இளம்பூரணம்**

***157. மூன்றாம் வேற்றுமைத் திரிபு***

**புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**
**வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையான்**

**தம்மின் ஆகிய தொழிற்சொல் முன்வரின்**
**மெய்ம்மை ஆகலும் உறழத் தோன்றலும்**
**அம்முறை இரண்டும் உரியவை உளவே**
**வேற்றுமை மருங்கின் போற்றல் வேண்டும்.**

*(இச்....எனின்)* மூன்றாம் வேற்றுமைத் திரிபு உணர்...ற்று.

*(இ-ள்.)* புள்ளியீற்றுச் சொல்லும் உயிரீற்றுச் சொல்லும், வல்லெழுத்தின் மிகுதி மேற்சொல்லும் முறைமையான்[1], அம்மூன்றாவதன் பொருளாகிய வினை-முதற்பொருள்கள்தம்மான் உளவாகிய வினைச்சொற்கள்தாம் அவற்றுமுன் வரின், இயல்பு ஆகலும் உறழத் தோன்றலும் ஆகிய அம்முறையினையுடைய இரண்டு செய்கையும் உரியன உள. அவற்றை மேலே வேற்றுமைப் பொருட்புணர்ச்சி முடிபு சொல்லுமிடத்துப்[2] போற்றி அறிதல்வேண்டும் எ-று.

*(உ-ம்.)* நாய்கோட்பட்டான்[3], புலிகோட்பட்டான், சாரப்பட்டான் - தீண்டப்பட்டான் - பாயப்பட்டான் - என இவை இயல்பு.

சூர்கோட்பட்டான் சூர்க்கோட்பட்டான், வளிகோட் பட்டான் வளிக்கோட்பட்டான் - என இவை உறழ்ச்சி.

'புள்ளியிறுதி' 'உயிரீறு' என்றதனான், பேஎய் கோட்பட்டான் பேஎய்க் கோட்பட்டான் - என்னும் உறழ்ச்சியுள் எகரப்பேறு கொள்க.

'உரியவை உள' என்றதனான், பாம்புகோட்பட்டான் பாப்புக் கோட்பட்டான்-என்னும் உறழ்ச்சியுள் நிலைமொழி ஒற்றுத் திரிதலும் கொள்க. *(14)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 157.*** 1. மேற்சொல்லுமுறைமை-உயிர்மயங்கியல் புள்ளிமயங்கியல் களுள் விதிக்கப்படும் முறைமை.

2. 'யகார இறுதி வேற்றுமைப் பொருள்வயின்' (358) எனவும், 'இகர இறுதிப் பெயர்நிலை முன்னர், வேற்றுமை யாயின் எல்லெழுத்து மிகுமே' (236) எனவும் விதிக்கப் பட்டுள்ள முடிபுகள். நாய்க்கால், கிளிக்கால் - என வரும்.

3. 'நாய்' எழுவாய்வேற்றுமைக் கருத்தாவாயின் கொள்ளுதல் என்னும் பொருட்டாகிய கோள் அதற்குப் பயனிலையாம். ஆயின் ஈண்டு நாய் மூன்றாம் வேற்றுமைக் கருத்தாவாதலின் (நாயால் என்னும் மூன்றனுருபு தொக்க நிலையிலேயே அதற்குப் பயனிலை கொள்ளவேண்டுதலின்) கோட்பட்டான் என்பது பயனிலையாம். முன்னது தம் தொழில், பின்னது தம்மினாகிய தொழில் (நன். 256 சங். உரை). நாயால் ஒருவற்கு விளைந்த தொழில் கோட்படுதல் என்க. வினைமுதலாவது எழுவாய்.

**நச்சினார்க்கினியம்**

## *156. மூன்றாம் வேற்றுமைத் திரிபு*

**புள்ளி இறுதியும் . . . . . . . . போற்றல் வேண்டும்.**

இது மேல் உயிர்ஈற்றிற்கும் புள்ளிஈற்றிற்கும் வேற்றுமைக்கண் கூறும் முடிபு பெறாது நிற்கும் மூன்றாம் வேற்றுமை முடிபு கூறுகின்றது.

இ-ள் : தம்மின் ஆகிய தொழிற்சொல் - மூன்றாவதற்கு உரிய வினைமுதற்பொருளான் உளவாகிய தொழிற்சொல்; புள்ளிஇறுதி முன்னும் உயிர்இறுகிளவி முன்னும் வரின் - புள்ளீயீற்றுச் சொல் முன்னரும் உயிரீற்றுச்சொல் முன்னரும் வருமாயின்; மெய்ம்மை . . . . உரியவை உள - அவற்றுள் இயல்புஆகலும் உறழத்தோன்றலும் ஆகிய அம்முறை

இரண்டும் பெறுதற்குரிய உள ஆதலால்; வேற்றுமை மருங்கின் சொல்லிய முறையான் வேண்டும் வல்லெழுத்து மிகுதி - உயிர்மயங்கியலுள்ளும் புள்ளிமயங்கியலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சொல்லிய முறையான் விரும்பும் வல்லெழுத்து மிகுதியை; போற்றல் - ஈண்டுக் கொள்ளற்க எ - று.

மெய்ம்மை பட்டாங்கு ஆதலின் இயல்பாம்.

உ-ம் : நாய் புலி - என நிறுத்திக் கோட்பட்டான் - சாரப்பட்டான் - தீண்டப்பட்டான் - பாயப்பட்டான் - என வருவித்து இயல்பாயவாறு காண்க. சூர்கோட்பட்டான் சூர்க்கோட்பட்டான், வளிகோட்பட்டான் வளிக் கோட் பட்டான்-சாரப்பட்டான்-தீண்டப்பட்டான் - பாயப் பட்டான்- என இவை உறழ்ந்தன. இவை நாற்பத்தெட்டுச் சூத்திரங்களான் முடிவனவற்றைத் தொகுத்தார். (அ)

'புள்ளியிறுதி' 'உயிரிறு கிளவி' என்றதனான், பேஎய்கோட்பட்டான் பேஎய்க்கோட்பட்டான் - என எகரப்பேறு உறழ்ச்சிக்குக் கொடுக்க. 'அம்முறை இரண்டும் உரியவை உளவே' என்றதனான், பாம்பு கோட்பட்டான் பாப்புக்கோட்பட்டான் - என்னும் உறழ்ச்சியுள் நிலை மொழிஒற்றுத் திரிதலும் கொள்க. இவ்வீறுகள் நாய்க்கால் - தேர்க்கால் - கிளிக்கால் - என ஆண்டு(2) வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிகுமாறு காண்க. *(14)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 156*** *அ)* இள. உரைக்குறிப்புக் காண்க. சூ. *157.*

*ஆ) சூ. 358, 362, 236* - இவற்றான் முடிந்தன.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 157.*** **புள்ளி இறுதியும்....போற்றல் வேண்டும்.**

'வேற்றுமை மருங்கின் சொல்லிய முறையான் வேண்டும் வல்லெழுத்து மிகுதி போற்றல்' என்று

நச்சினார்க்கினியர் கொண்ட அந்நுவயம் உரையாசிரியர் உரையை மாணாக்கர் நன்கு தெளிதல்வேண்டும் என்பதுபற்றியே கொண்டது ஆதலின், இவர் கூறியிருக்கும் மறுப்புப் பொருந்தாமை உணரப்படும்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 156.** **'புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**

**........**

**வேற்றுமை மருங்கின் போற்றல் வேண்டும்.**

'அம்முறை இரண்டும் உரியவை உளவே' என்றதனான், பாம்பு கோட்பட்டான்-பாப்புக் கோட்பட்டான்-என்னும் உறழ்ச்சியுள் நிலைமொழி ஒற்றுத் திரிதலும் கொள்க என்றனர் உரையாளர் இருவரும். நிலைமொழிஒற்றுத் திரிபு முன்னர்க் குற்றியலுகரப் புணரியலுள் ஒன்பதாம் சூத்திரத்தில் விதிக்கப்படுகின்றது. 'உரியவை உள 'என்றதனான், இயல்பாதற்கு உரியவையும் உள, உறழ்ந்துவருதற்கு உரியவையும் உள என்பதுவே போதரும்,

'வேற்றுமை....வேண்டும்' - இவ்வேறுபாடு போற்றி உணரவேண்டும்.

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 156.** **புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**

**...............போற்றல் வேண்டும்.**

நச்சினார்க்கினியர் 'புள்ளி இறுதி உயிரிறு கிளவி 'என்றதனான், பேய்கோட்பட்டான் - பேஎய்க் கோட்பட்டான் என உறழ்ச்சியொடு வரும் எகரப்பேறும் கொள்க என்பர். ''புள்ளி இறுதி உயிரிறு கிளவி' என்பவை யாங்ஙனம் மிகையாகும்? இசைகருதி வரும் ஏகாரநீட்சியைப் புணர்ச்சிவிகாரம் ஆக்குதல் எங்ஙனம் பொருந்தும்?

['உயிரும் புள்ளியும் இறுதி யாகிய' என்றாற் போன்ற வாய்பாட்டான் மொழியாது இறுதியை இருவழிப் பெய்து சூத்திரித்தமையான் அதனை நச்சினார்க்கினியர் மிகையெனக் கொண்டார். ஏகாரநீட்சியைப் புணர்ச்சிவிகாரம் ஆக்குதல் வடநூல் மரபுபற்றிய புலுதச்சந்தி எனப் பண்டை உரையாசிரியன்மார் கொண்டனர். இந்நீட்சியாகிய எழுத்துப் பேறு புணர்மொழிக்கண்ணேயன்றித் தனிமொழிக் கண் நிகழுமாறில்லை. ]

### இளம்பூரணம்

### *158. இரண்டாம் வேற்றுமைத் திரிபு*

மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்
வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்
இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்
உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்உருபு நிலையலும்
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல் நிலையலும்
மெய்பிறிது ஆகுஇடத்து இயற்கை ஆகலும்
அன்ன பிறவும் தன்னியல் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந்து இசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபுஎன மொழிப.

*(இச்.....எனின்)* இரண்டாம் வேற்றுமைத் திரிபு கூறு......ற்று.

*(இ-ள்.)* மெல்லெழுத்து மிகுமிடத்து வல்லெழுத்து ஆதலொடு தோன்றுதலும், வல்லெழுத்து மிகுமிடத்து மெல்லெழுத்துஆதலொடு தோன்றலும், இயற்கையிடத்து

மிகுதி தோன்றலும், உயிர்மிக வருமிடத்து அவ்வுயிர் கெட வருதலும், சாரியை உள்ளவிடத்து அச்சாரியை கெட வருதலும், சாரியை உள்ளவிடத்து அச்சாரியையொடு தன்னுருபு நிற்றலும், சாரியை பெறுக என்றவழி அச்சாரியை பெறாது இயல்பாகிய மொழிகள் வருமொழியினும் நிலைமொழியினும் மிக்கும் திரிந்தும் வரும் வல்லெழுத்துக்கள்[1] உறழ்ச்சியாகத் தோன்றுதலும், உயர்திணைப்பெயரிடத்துத் தன்னுருபு தொகாது விரிந்தே வருதலும், உயர்திணையோடு அஃறிணை விரவும் பெயர்க்கும் அவ்வுருபு அவ்வியல்பிலே நிற்றலும், மெய்பிறிதாகி முடியுமிடத்து இயல்பாகி முடிதலுமாய், அத்தன்மையன பிற முடிவுகளும், தனக்கு இயல்பாகிய கூற்றான் அகத்தோத்தினுள் பொருள்பெற எடுத்தோதப்பட்ட வேற்றுமைப்பொருட்புணர்ச்சியது பொதுமுடிபினைத் தான் வரைந்து வேறு முடிபிற்றாய் நின்று ஒலிக்கும் ஐகார வேற்றுமையினது வேறுபாட்டுப்புணர்ச்சி என்று சொல்லுவர் எ-று.

(உ-ம்.) விளக்குறைத்தான் என்பது மெல்லெழுத்து
மிகும்வழி வல்லெழுத்து மிக்கது.

மரங்குறைத்தான் என்பது வல்லெழுத்து மிகும்வழி
மெல்லெழுத்து மிக்கது.

தாய்க்கொலை என்பது இயல்பாம் இடத்து மிக்கது.

பலாக்குறைத்தான் என்பது உயிர்மிக வருவழி
உயிர்கெட்டது.

வண்டு கொணர்ந்தான் என்பது சாரியை உள்வழிச் சாரியை
கெட்டது.

வண்டினைக் கொணர்ந்தான் என்பது சாரியை உள்வழித்
தன்னுருபு நிலையிற்று.

புளிகுறைத்தான், புளிக்குறைத்தான்; ஆல்குறைத்தான்,
ஆற்குறைத்தான் - என இவை சாரியை இயற்கை உறழத்
தோன்றின.

நம்பியைக் கொணர்ந்தான் என்பது உயர்திணைமருங்கின்
ஒழியாது வந்தது.

கொற்றனைக் கொணர்ந்தான் என்பது விரவுப்பெயர்க்கும் அவ்வியல் நிலையது.

மண்கொணர்ந்தான் என்பது மெய் பிறிது ஆகிடத்து இயற்கை ஆயது.

'அன்ன பிறவும்' என்றதனான் கொள்வன: கழிகுறைத்தான், பனை பிளந்தான் - என்பன.[2] பிறவும் அன்ன.

'ஒழியாது' என்றதனான், ஒரோவழி ஒழிந்தும் வரும்.

*(உ-ம்.)* அவற்கண்டு எனவும், 'ஒன்னார்த் தெறலும்' (குறள் 264) எனவும் இவை உயர்திணையுள் ஒழிந்து வந்தன[3]. மகற்பெற்றான், மகட்பெற்றான் - என இவை விரவுப் பெயருள் ஒழிந்து வந்தன[4]. இவ்விலேசுதன்னானே இவற்றின் முடிவு வேற்றுமையும்[5] கொள்க.

'மெய்பெற' என்றதனான், உறழ்ச்சியாய் முடிவனவும் கொள்க.

*(உ-ம்.)* மை கொணர்ந்தான் மைக் கொணர்ந்தான் - எனவும், வில்கோள் விற்கோள் - எனவும் வரும்.

இவ்வாறு திரிந்து முடியாது அகத்தோத்தில் பொதுமுடிபே முடிபாய்க் கடுக்குறைந்தான் செப்புக் கொணர்ந்தான் - என்றாற்போல முடிவனவும் அறிந்து கொள்க.

இவ்வாறு வேறுபட முடிவது, இரண்டாவது பெரும்பான்மையும் வினையொடு முடியும்வழிப்போலும். அது 'தம்மின் ஆகிய தொழிற்சொல் முன்வரின்' (157) என நின்ற அதிகாரத்தான் கொள்ளவைத்தான்போலும்.

***தன்னின(ம்) முடித்தல்*** என்பதனான், ஏழாம் வேற்றுமை வினையொடு முடியும்வழித் திரிபும் கொள்க.

*(உ-ம்.)* 'வரைபாய் வருடை', 'புலம்புக் கனனே புல்அணற் காளை' (புறநா. 258) என வரும்[6]. *(15)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 158.** 1. 'புளிமரக் கிளவிக்கு' (245) எனவும், 'பூல்வேல் என்றா ஆல்என் கிளவியோடு' (376) எனவும் விதிக்கப் பெற்ற சாரியை பெறாமல் இயல்பாய் நின்று வருமொழி வல்லெழுத்து மிக்கும் மிகாதும், நிலை மொழியீற்றெழுத்துத் திரிந்தும் திரியாதும் உறழ்ச்சியாகத் தோன்றுதல் புளிகுறைத்தான் - புளிக்குறைத்தான், ஆல் குறைத்தான் - ஆற்குறைத்தான் - என்னும் உதாரணங்களுள் காண்க.

2. இவை 'இகர இறுதிப் பெயர்நிலை' (235) 'ஐகார இறுதிப் பெயர்நிலை' (280) என்னும் விதியாற் பெறும் வல்லெழுத்துப் பெறாது இயல்பாக முடிந்தன.

3. இவை நிலைமொழி ஈற்று னகரம் திரிந்தும் வருமொழிவல்லெழுத்து மிக்கும் நின்ற ஆற்றலான் இரண்டாம் வேற்றுமைத்தொகையாயின அன்றி, இரண்டனுருபு உயர்திணை மருங்கின் ஒழிந்து வந்தன அல்ல என்று ரெட்டியார் மறுப்பார். மகற்பெற்றான் மகட்பெற்றான் - என னகர ளகரங்கள் திரிந்து நின்றனவும் அத்தன்மையவே என்பார். இரண்டனுருபு ஒழிந்து வந்தமையாற்றான் அதனைக் காட்ட இத்திரிபு நேரிட்டது எனலாம்.

4. 'முறைமை சுட்டா மகனும் மகளும்' (சொல். பெய.160) எனச் சுட்டப்பெற்றவை உயர்திணையாம். 'முறைப்பெயர்க் கிளவி'யாக (171) வரும் மகனும் மகளும் விரவுப் பெயராம்.

5. இவற்றின் முடிபு வேற்றுமையாவது இரண்டன் தொகைக்கண் *னகரம் றகரமாகத் திரிதலும், ணகரம் டகரமாகத் திரிதலும், ரகரத்தின் முன்னர் வருமொழி வல்லெழுத்து மிகுதலும் என இவை.*

6. 'ஐகார இறுதிப் பெயர்நிலை' (281) என்பதனான் 'வரைப்பாய் வருடை' என வல்லெழுத்து மிகவேண்டும். 'மகர இறுதி வேற்றுமையாயின்' (311) என்பதனான் 'புலப்புக்கனனே' என முடிதல் வேண்டும். அவ்வாறு இரண்டும் வாராது இயல்பாக முடிந்தவாறு.

**நச்சினார்க்கினியம்**

## 157. இரண்டாம் வேற்றுமைத் திரிபு

**மெல்லெழுத்து மிகுவழி . . . . . திரிபு என மொழிப.**

இஃது இரண்டாம் வேற்றுமைத் திரிபு தொகுத்து உணர்த்துகின்றது.

இ-ள்: மெல்லெழுத்து . . . தோன்றலும்- 'மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே' (217) என்றதனான், விளங்குறைத்தான் - என மெல்லெழுத்து மிகுமிடத்து விளக்குறைத்தான் - என வல்லெழுத்துத் தோன்றுதலும்; வல்லெழுத்து . . . . தோன்றலும் - 'மகர இறுதி' (310) என்பதனான், மரக்குறைத்தான் - என வல்லெழுத்து மிகுமிடத்து மரங்குறைத்தான் என் மெல்லெழுத்துத் தோன்றுதலும்;

இயற்கை . . . . தோன்றலும் - 'தாய்என் கிளவி இயற்கை ஆகும்' (358) என்றவழித் தாய்கொலை என இயல்பாய் வருமிடத்துத் தாய்க்கொலை - என மிகுதி தோன்றுதலும்;

உயிர்மிக . . . . வருதலும் - 'குறியதன் முன்னரும்' (226) எனவும் 'குற்றெழுத்து இம்பரும்' (267) எனவும் 'ஏயென் இறுதிக்கு' (277) எனவும் கூறியவற்றான் உயிர்மிக்கு வருமிடத்துப் பலாக் குறைத்தான் - தழூக் கொணர்ந்தான் - ஏக் கட்டினான் - என உயிர்கெட வருதலும்;

சாரியை . . . . கெடுதலும் - 'வண்டும் பெண்டும்' (420) என்பதனான் சாரியைப்பேறு உள்ளவிடத்து வண்டு

கொணர்ந்தான் - எனச் சாரியை கெட்டு நிற்றலும்; சாரியை . . . . . நிலையலும் - 'வண்டும் பெண்டும்' என்பதனான் சாரியைப்பேறு உள்ளவிடத்து வண்டினைக் கொணர்ந்தான் - எனத் தன்உருபு நிற்றலும் (இதற்கு வல்லெழுத்துப்பேறு ஈற்று வகையால் (280) கொள்க.);

சாரியை . . . . . . தோன்றலும் - 'புளிமரக் கிளவிக்கு' (244) 'பனையும் அரையும்' (283) 'பூல்வேல் என்றா' (375) எனவும் பெற்ற சாரியை பெறாது இயல்பாய் நின்று புளிகுறைத்தான் புளிக்குறைத்தான் - பனைதடிந்தான் பனைத்தடித்தான் - பூல் குறைத்தான் பூற்குறைத்தான் - என மிக்கும் திரிந்தும் உறழ்ச்சியாகத் தோன்றலும்;

உயர்திணை . . . . . . . வருதலும் - 'உயிர் ஈறாகிய உயர்திணைப் பெயரும்' (153) என்பதனான் வேற்றுமைக்கண் இயல்பாய் வரும் என்றவை, நம்பியைக் கொணர்ந்தான் - நங்கையைக் கொணர்ந்தான் - என்றவழி, இரண்டன் உருபு தொகாதே வல்லொற்று மிக்கு நிற்றலும் ['ஒழியாது' என்றதனான், மகற்பெற்றான் - மகட்பெற்றான் எனவும், 'ஆடூஉ அறிசொல்' 'மழவரோட்டிய' (அகநா. 1) 'அவற்கண்டு எம்முள்' (ஷை48) எனவும் ஒழிந்தும் வரும் என்று கொள்க.]

அஃறிணை . . . . நிலையலும் - உயர்திணையோடு அஃறிணை விரவும் பெயர்க்குக் கொற்றனைக் கொணர்ந்தான் என உருபு தொகாதே வல்லொற்று மிக்கு நிற்றலும் ['அவ்வியல் நிலையலும்' என்றதனானே, மகப்பெற்றான் என விரவுப்பெயர்க்கண்ணும் தொகுத்தல் கொள்க. உருபியலுள் 'தேருங்காலை' (202) என்ற இலேசான் இதற்கும் முன்னையதற்கும் வல்லெழுத்துப் பேறும் கொள்க.]

மெய்பிறிது . . . . . . ஆதலும் - புள்ளி மயங்கியலுள் ணகர னகர இறுதி வல்லெழுத்து இயையின் மெய்பிறிதாம் என்றவிடத்து (302, 303) மெய் பிறிது ஆகாது மண் கொணர்ந்தான் - பொன் கொணர்ந்தான் - என இயற்கையாய் வருதலும்;

அன்ன பிறவும் - அவை போல்வன பிறவும் [அவை 'எற்கண்டு பெயருங் காலை யாழநின், கற்கெழு சிறுகுடி' (*அகநா. 318*) எனவும், 'நப்புணர்வில்லா நயனில்லோர் நட்பு' (*நற். 165*) எனவும் வருவழி, எற்கண்டு - நப்புணர்வு - என்னும் தொடக்கம் குறுகும் உயர்திணைப் பெயர்கள் மெல்லெழுத்துப் பெறுதற்கு உரியன (*320*) வல்லெழுத்துப் பெறுதல் கொள்க.) இன்னும், தினை பிளந்தான் (*280*) மயிர் குறைத்தான் (*362*) தற்கொண்டான் - தற்செறுத்தான் - தற்புகழ்ந்தான் (*352*) என வரும்.]

தன் இயல் மருங்கின் - தன்னையே நோக்கித் திரிபு நடக்குமிடத்து;

மெய்பெறக் . . . . இசைக்கும் - பொருள்பெற எடுத்தோதப்பட்டு ஏனை(அ) வேற்றுமைப் பொருட் புணர்ச்சியது பொதுமுடிபினைத்(ஆ) தான் நீக்கி, வேறு முடிபிற்றாய் நின்று ஒலிக்கும்;

ஐகார . . . . . மொழிப - இரண்டாம் வேற்றுமையது வேறுபட்ட புணர்ச்சி என்று கூறுவர் ஆசிரியர் எ - று.

'மெய்பெற' என்றதனானே, சாரியை உள்வழித் தன்உருபு நிலையாது செய்யுட்கண் வருவனவும், பிறவற்றின்கண் உறழ்ந்து முடிவனவும் கொள்க.

உ - ம் : 'மறம்கடிந்த அருங்கற்பின்' 'சிலசொல்லிற் பல்கூந்தல்' (புறநா. 166) எனவும், 'ஆயிரு திணையின் இசைக்குமன' (சொல். 1) எனவும் பிறாண்டும் பெரும்பான்மையும் வரும் என்று கொள்க.

மைகொணர்ந்தான் மைக்கொணர்ந்தான், வில்கோள் விற்கோள் - என உறழ்ந்தும் வரும்.

இனி, இவ்வாறு திரியாது அகத்தோத்தில் கூறிய பொதுமுடிவே தமக்கு முடிவாக வருவனவும் கொள்க. அவை

கடுக்குறைத்தான் செப்புக்கொணர்ந்தான்(இ) என்றாற் போல்வன.

'தம்மின் ஆகிய தொழிற்சொல் முன்வரின்' (156) என்ற அதிகாரத்தான் வினை வந்துழியே இங்ஙனம் பெரும்பான்மை திரிவது என்றுணர்க.

இனி, ***தன்னினம் முடித்தல்*** என்பதனான், ஏழாவதற்கும் வினையொடு முடிவுழிப் பெரும் பான்மையும் திரியாமை கொள்க. அது 'வரைபாய் வருடை' 'புலம்புக் கனனே புல்லணற் காளை' (புறநா. 258) என்றாற்போல வரும்.(ஈ) (15)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 157

(அ) இவ் 'ஏனை' என்ற சொல் மிகையாதலின் நீக்கப்படவேண்டும்.

(ஆ) 320, 280, 362, 352 - முதலான சூத்திர விதிகளாற் பெறும் பொது முடிபு.

(இ) கடுக்குறைத்தான் : 259ஆம் சூத்திரவிதியான் முடிந்தது.

செப்புக் கொணர்ந்தான் : 414ஆம் சூத்திரவிதியான் முடிந்தது.

(ஈ) 'வரைப்பாய் வருடை' எனவும், 'புலப்புக்கனனே' எனவும் ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர் வல்லெழுத்து மிகுதலும் (280), மகரம் கெட வருமொழி வல்லெழுத்து மிகுதலும் (310) ஆகிய திரிபு பெறாமை காண்க.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 158.** மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்

.....................

......................

ஐகார வேற்றுமைத் திரிபுஎன மொழிப.

நச்சினார்க்கினியர் காட்டிய எடுத்துக்காட்டுள் இவர் 'எக்கண்டு' என்று கொண்டமை பிழை; 'எற்கண்டு' என்பதே பொருந்தும்.

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 157.** மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்

......

ஐகார வேற்றுமைத் திரிபுஎன மொழிப.

'ஒழியாது' என்றதனான் ஒரோவழி (ஐ யுருபு) ஒழிந்தும் வரும் என்று உரையாளர் இருவரும் கூறுதல் நேர்மாறாகும். [அன்னோர் காட்டிய உதாரணங்கள் பொருந்தாமையை இவர் விளக்குகிறார்.] 'ஆடூஉ அறிசொல்' பொருள்நோக்கால், (தொகையாதலின்) இரண்டாம் வேற்றுமை விரிக்கப்படும். மகற்பெற்றான் மகட்பெற்றான் என்பனவும், அவர்க்கண்டு, ஒன்னார்த் தெறலும் (குறள் 264) என்பனவும் முறையே மெய்பிறிதாதலும் மிகுதலும் ஆகிய திரிபுபுணர்ச்சி பெற்று வந்ததனால் இரண்டாம்வேற்றுமை என்பது அறியப்படும். 'தன்னும் அவனும் அவளும் சுட்டி' (பொ. 36) என்னுமிடத்து, தான் என்பது தன் என்று குறுகியதனானே வேற்றுமையுருபு ஏற்கும்நிலை தோன்றிற்று. இனி, 'மழவரோட்டிய' என்பது இத்தகையது அன்று ஆகலானும், பொருட்கண் ஐயம்தோன்றும் ஆகலானும் அதுபோன்ற இடங்களில் உருபுஒழிந்து வருதல் அமைதியன்று. (அன்ன தொடர்கள் தொகைப்பாடு இல்லாதனவாம்.)

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 157.** மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்

......................

ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப.

உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும் .........ஆடூஉவறிசொல், பல்லோர்அறிசொல் என்பவை ஒருசொல் நீர்மையுற்றுத் தொகைச்சொல்லாய்ப் பால்அறிய நிற்பவை ஆதலின், அவற்றை நிலைமொழி வருமொழி செய்து பிரித்தல் மரபன்று என்க.

அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல் நிலையலும்...

(எ-டு.) கொற்றனைக் கொணர்ந்தான், தந்தையைக் கண்டான் - என வரும். 'மெய்பெற' என்றதனான், சிறுபான்மை, மகப்பெற்றான் - தாய்போற்றினான் எனக் கவர்பொருள்படாது வருமிடத்து உருபின்றி வருதலும் கொள்க.

[ஆடூஉஅறிசொல் முதலியன திரிந்த புணர்ச்சி அன்மையின் விகாரவகையால் அவற்றிடையே இரண்டனுருபு தொக்கது என்றலே பொருந்தும். அவற்றை ஆசிரியர் 'ஒருசொல் நடைய' என்றாரன்றிப் 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' எனப்பட்டவற்றுள் அடக்கினாரல்லர். இவற்றை நிலைமொழி வருமொழி செய்து பிரித்துணர்ந்தவழியே இரண்டனுருபு தொக்கமை புலனாம். இவ்வுரையாளரே 223 ஆம் சூத்திரவுரையுள், பண்புத்தொகையும் வினைத்தொகையுமே பிரித்துப் புணர்க்கப்படா என்பது விதியாகலின், ஏனைத் தொகைகளைப் பிரித்துணருமாறு ஆசிரியர் கூறுவதாகக் குறித்துள்ளமை காண்க.

அஃறிணை விரவுப் பெயர்க்கு எடுத்துக்காட்டாகத் தந்தையைக் கண்டான் எனவும், உருபின்றி வருதற்கு எடுத்துக்காட்டாக மகப் பெற்றான் - தாய் போற்றினான் -

எனவும் இவ்வுரைகாரர் சுட்டும் விரவுப் பெயர்கள் அஃறிணைக்கண் நிகழாமல் உயர்திணைக்கண் நிகழ்தல் வருமொழி ஆற்றலால் புலப்படும். இக்கன்றின் தந்தையை எனக் கிளந்து ஓதாவழித் தன்தந்தையை என்பது பொருளாமன்றே? தாய் போற்றினாள் என்புழித் தாய் என்பதும் அது. மக ஈண்டு அஃறிணையைக் குறியாமை வெளிப்படை.]

**இளம்பூரணம்**

***159. இ ஐ - ஈற்றுப்பெயர்க்கு அல்வழி முடிபு***

**வேற்றுமை அல்வழி இஐ என்னும்**
**ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய**
**அவைதாம்,**
**இயல்புஆ குநவும் வல்லெழுத்து மிகுநவும்**
**உறழ்ஆ குநவும் என்மனார் புலவர்.**

*(இச்....எனின்)* இகரஈற்றுப் பெயர்க்கும் ஐகாரஈற்றுப் பெயர்க்கும் அல்வழிமுடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* வேற்றுமை அல்லாத அல்வழியிடத்து, இ ஐ என்னும் ஈற்றையுடைய பெயர்ச்சொற்கள் மூவகை முடிபுநிலைமை உடைய. அவைதாம் இயல்பாய் முடிவனவும், வல்லெழுத்து மிக்கு முடிவனவும், உறழ்ச்சியாய் முடிவனவும் என இவை என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* பருத்தி குறிது, காரை குறிது - சிறிது - தீது - பெரிது - என இவை இயல்பு . அலிக்கொற்றன், புலைக்கொற்றன் - இவை மிகுதி. கிளி குறிது கிளிக்குறிது, தினை குறிது தினைக்குறிது - என இவை உறழ்ச்சி.

'பெயர்க்கிளவி மூவகை நிலைய' எனவே, பெயர்க் கிளவி அல்லாத கிளவி மிகுதியும் இயல்பும் என இருவகையன எனக்கொள்க.

(உ-ம்.) ஒல்லைக்கொண்டான் என்பது ஐகார ஈற்று வினைச்சொல் மிகுதி. இகரஈற்று வினைச்சொல் மிகுதி தன் ஈற்றகத்து எடுத்தோதப்படுகின்றது (237).

'செல்மதி பாக ' என்பது இகரஈற்று இடைச்சொல் இயல்பு. இவ்வீற்று மிகுதி வந்தவழிக் கண்டுகொள்க. 'தில்லைச் சொல்லே ' (சொல். 249) என்பது ஐகாரஈற்று இடைச்சொல் மிகுதி. இவ்வீற்று இயல்பு வந்தவழிக் கண்டுகொள்க. கடிகா என்பது இகரஈற்று உரிச்சொல் இயல்பு. இவ்வீற்று மிகுதி வந்தவழிக் கண்டுகொள்க. பணைத்தோள் என்பது ஐகார ஈற்று உரிச்சொல் மிகுதி. இவ்வீற்று இயல்பு வந்தவழிக் கண்டுகொள்க. ((16)

**நச்சினார்க்கினியம்**

## 158. இ ஐ - ஈற்றுப் பெயர்க்கு அல்வழி முடிபு

**வேற்றுமை அல்வழி இ ஐ என்னும்**
**. . . . . . . . . . . . என்மனார் புலவர்.**

இஃது இகரஈற்றுப் பெயர்க்கும் ஐகார ஈற்றுப் பெயர்க்கும் அல்வழிமுடிபு கூறுகின்றது.

இ-ள் : வேற்றுமை அல்வழி - வேற்றுமை அல்லாத இடத்து; இ ஐ . . . . . மூவகை நிலைய - இ ஐ - என்னும் ஈற்றையுடைய பெயர்ச்சொற்கள் மூவகையாகிய முடிபு நிலையை உடைய ; அவைதாம் - அம்முடிபுகள்தாம்; இயல்பு . . . . . . புலவர் - இயல்பாய் முடிவனவும், வல்லெழுத்து மிக்கு முடிவனவும், உறழ்ச்சியாய் முடிவனவும் என இவை என்று கூறுவர் புலவர் எ-று.

உ-ம் : பருத்திகுறிது, காரை குறிது - சிறிது - தீது, பெரிது- என இவை இயல்பு. மாசித்திங்கள் சித்திரைத் திங்கள், அலிக்கொற்றன் புலைக்கொற்றன், காவிக்கண் குவளைக்கண்- என இவை மிகுதி. கிளி குறிது கிளிக்குறிது, தினைகுறிது, தினைக்குறிது - என இவை உறழ்ச்சி.

'பெயர்க்கிளவி மூவகை நிலைய' எனவே, பெயர் அல்லாத இரண்டு ஈற்று வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் இயல்பும் மிகுதியும் ஆகிய இருவகை நிலையவாம்.

ஒல்லைக்கொண்டான் என்பது ஐகாரஈற்று வினைச்சொல் மிகுதி.

'இனி அணி' (296) என்பதன்கண் இகரஈற்று வினையெச்சம் எடுத்தோதுப. இவற்றிற்கு இயல்பு வந்துழிக் காண்க.

'சென்மதிபாக' : இஃது இகர ஈற்று இடைச்சொல் இயல்பு; மிகுதி வந்துழிக் காண்க.

'தில்லைச் சொல்லே' (சொல். 258) : இஃது ஐகார ஈற்று இடைச்சொல் மிகுதி; இயல்பு வந்துழிக் காண்க.

கடிகா : இஃது இகரஈற்று உரிச்சொல் இயல்பு; மிகுதி வந்துழிக் காண்க.

பணைத்தோள்: இஃது ஐகாரஈற்று உரிச்சொல் மிகுதி; இயல்பு வந்துழிக் காண்க. (16)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 159.** **வேற்றுமை அல்வழி இஐ என்னும்**
**ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய**

**அவைதாம்**
**இயல்புஆ குநவும் வல்லெழுத்து மிகுநவும்**
**உறழ்ஆ குநவும் என்மனார் புலவர்.**

*இச்சூத்திரத்தின் முன்இரண்டடிகளை ஒரு சூத்திர மாகவும் ஏனையடிகளை மற்றொரு சூத்திரமாகவும் இவர் குறிப்படுகிறார்.*

**இளம்பூரணம்**

***160. இடப்பொருள் உணரநின்ற இ ஐ-இடைச்சொல் முடிபு***

**சுட்டுமுதல் ஆகிய இகர இறுதியும்**
**எகரமுதல் வினாவின் இகர இறுதியும்**
**சுட்டுச்சினை நீடிய ஐஎன் இறுதியும்**
**யாஎன் வினாவின் ஐஎன் இறுதியும்**
**வல்லெழுத்து மிகுநவும் உறழ்ஆ குநவும்**
**சொல்லிய மருங்கின் உளஎன மொழிப.**

*(இச்....எனின்) அவ் இகர ஐகார ஈற்றுள் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொல் முடிபு கூறு......ற்று.*

*(இ-ள்.) சுட்டெழுத்தினை முதலாகவுடைய இகர இகர ஈற்று இடைச்சொல்லும், எகரம் ஆகிய மொழிமுதல் வினாவினையுடைய இகரஈற்று இடைச்சொல்லும், சுட்டாகிய உறுப்பெழுத்து நீண்ட ஐகாரஈற்று இடைச் சொல்லும், யா-என் வினாவினை முதற்கண் உடைய ஐகாரஈற்று இடைச்சொல்லும், வல்லெழுத்து மிக்கு முடிவனவும் உறழ்ச்சியாய் முடிவனவும் மேற் சொல்லப்பட்ட இடத்தின்கண்ணே உள என்று சொல்லுவர் புலவர் எ-று.*

*(வருமாறு) அதோளிக்கொண்டான், இதோளிக் கொண்டான், உதோளிக் கொண்டான், எதோளிக் கொண்டான்*

- சென்றான் - தந்தான் - போயினான் - எனவும், ஆண்டைக் கொண்டான், ஈண்டைக் கொண்டான், ஊண்டைக் கொண்டான், யாண்டைக் கொண்டான் எனவும் இவை மிக்கு முடிந்தன.

அவ்வழி கொண்டான் அவ்வழிக் கொண்டான், இவ்வழி கொண்டான் இவ்வழிக் கொண்டான், உவ்வழி கொண்டான் உவ்வழிக் கொண்டான், எவ்வழி கொண்டான் எவ்வழிக் கொண்டான் - எனவும், ஆங்கவை கொண்டான் ஆங்கவைக் கொண்டான், ஈங்கிவை கொண்டான் ஈங்கிவைக் கொண்டான், ஊங்குவை கொண்டான் ஊங்குவைக் கொண்டான், யாங்கவை கொண்டான் யாங்கவைக் கொண்டான் - எனவும் இவை உறழ்ந்து முடிந்தன.

இவற்றுள் ஐகாரஈறு உறழ்ந்துமுடிந்தன திரிபுடையன[1]. திரிபில்லன பெற்றவழிக் கண்டுகொள்க.

'சொல்லிய மருங்கு' என்றதனான், பிற ஐகார ஈறு மிக்கு முடிவன கொள்க.

(உ-ம்.) பண்டைச் சான்றோர், ஒருதிங்களைக் குழவி, ஒருநாளைக் குழவி-என வரும். (17)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 160.** 1. உறழ்ந்து முடியும் புணர்ச்சியும் திரிபின்பாற் படும். இயல்பு முடிபு வேறு, உறழ்ச்சி முடிபுவேறு. உறழ்ச் சிக்கண் நிகழும் இயல்புமுடிபு வேறு, திரிபின்றி முடியும் இயல்பு வேறு. இக்கருத்தானே திரிபில்லன வந்தவழிக் கண்டுகொள்க என்றார்.

**நச்சினார்க்கினியம்**

***159. இடப்பொருள் உணரநின்ற இ ஐ -இடைச்சொல் முடிபு***

**சுட்டுமுதல் ஆகிய இகர இறுதியும்**
**. . . . . . . . . . . . . . .உளஎன மொழிப.**

இஃது ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணர்த்திநின்ற இகர ஐகார ஈற்று இடைச்சொல்முடிபு கூறுகின்றது.

இ-ள் : சொல்இயல் மருங்கின் - இகரஐகாரங்கட்கு முன்னர்க் கூறிய மூவகை இலக்கணங்களுள் இயல்பை நீக்கிச் சொல்லுமிடத்து; சுட்டு . . . . . இறுதியும் - சுட்டினை முதலாகவுடைய அவ்இகரஈற்று இடைச்சொல்லும்; எகர வினாவின் முதல் இகர இறுதியும்-எகரமாகிய வினாவினை முதலாகவுடைய அவ்இகரஈற்று இடைச்சொல்லும்: சுட்டு . . . . . இறுதியும் - சுட்டாகிய உறுப்பெழுத்து நீண்ட அவ்ஐகார ஈற்று இடைச்சொல்லும்; யா என். . . . . இறுதியும் - யா என் வினாவினை முதற்கண் உடைய அவ்ஐகார ஈற்று இடைச்சொல்லும்; வல்லெழுத்து . . . . மொழிப - வல்லெழுத்து மிக்கு முடிவனவும், உறழ்ச்சியாய் முடிவனவும் உளவென்று கூறுவர் புலவர் எ-று.

உ-ம் : அதோளிக் கொண்டான், இதோளிக் கொண்டான், உதோளிக்கொண்டான், எதோளிக்கொண்டான் - சென்றான் - தந்தான் - போயினான் - எனவும்; ஆண்டைக்கொண்டான், ஈண்டைக்கொண்டான், ஊண்டைக் கொண்டான், யாண்டைக்கொண்டான்-சென்றான்- தந்தான்-போயினான் - எனவும் இவை மிக்கன. ‘அதோளி’ அவ்விடம் என்னும் பொருட்டு. அவ்வழி கொண்டான் அவ்வழிக்கொண்டான், இவ்வழிகொண்டான் இவ்வழிக்கொண்டான், உவ்வழி கொண்டான் உவ்வழிக்கொண்டான், எவ்வழிகொண்டான் எவ்வழிக்கொண்டான் - என உறழ்ந்தன.

சுட்டுச்சினை நீண்டதற்கும் யாவினாவிற்கும் வரும் ஐகாரஈற்றுக்கு உதாரணம் அக்காலத்து ஆயிடை கொண்டான்ஆயிடைக்கொண்டான்-என்றாற்

போல ஏனைய வற்றிற்கும் வழங்கிற்றுப்போலும். (1) ஆங்கவைகொண்டான்- ஆங்கவைக் கொண்டான் - என்பன காட்டுவாரும் உளர். அவை திரிபுடையனவாம்.

'சொல்லியல்' என்றதனானே, பிற ஐகாரஈறு மிக்கு முடிவன கொள்க. அன்றைக் கூத்தர், பண்டைச் சான்றோர் - எனவும், ஒருதிங்களைக் குழவி, ஒருநாளைக் குழவி - எனவும், வரும். *(17)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 159***

**1.** ஆங்கவை : அங்கவை என்பதன் திரிபுபோலும்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 160.*** **சுட்டுமுதல் ஆகிய இகர இறுதியும்**

..................

..................

**சொல்லிய மருங்கின் உளவென மொழிப.**

அதோளி-இதோளி-முதலியவற்றையும் ஆண்டை முதலியவற்றையும் ஆசிரியர் பெயராகவே கொண்டனர் என்பது இவர்கொள்கை. பண்டை - ஒருதிங்களை- என்பனவும் பெயராகவே இவர் கொண்டார்.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 159.*** **சுட்டுமுதல் ஆகிய இகர இறுதியும்**

.........

**சொல்லியல் மருங்கின் உளஎன மொழிப.**

அதோளி இதோளி உதோளி எதோளி - என்னும் சொற்களை அதோள் இதோள் உதோள் எதோள் - என ளகரஈற்றுப் பெயர்களாகவும் உரையாளர்கள் காட்டி யிருக்கின்றனர். இவற்றை நோக்கின், அதோள் இதோள் -

முதலிய ளகர ஈற்றுச்சொற்களே இயல்பாயவை எனவும், அவை இகரம் சேரப்பெற்று அதோளி இதோளி - முதலியன வாய் வழங்கின எனவும், ஈற்று ளகரம் கெட்டு அதோ இதோ - முதலியனவாய் இக்காலத்து வழக்கில் வழங்குகின்றன எனவும் புலனாகும். 'இதா' என்னும் சொல்லைத் திசைச் சொல் என்றார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். (சீவக.1232)

நெட்டெழுத்துக்களுக்குக் குற்றெழுத்துக்கள் 'சினை' என்று கொள்ளுவர் இவ்வாசிரியர். அதனான், ஆண்டை ஈண்டை ஊண்டை - என்பவற்றிலுள்ள ஆ ஈ ஊ - என்னும் நெட்டெழுத்துக்களைச் 'சுட்டுச்சினை நீடிய' என்றார். முன்னர், 'சுட்டுச்சினை நீடிய மென்தொடர்மொழியும்' (427) என்பதும் காண்க.

**இளம்பூரணம்**

*161. புள்ளி மயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி*

**நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்**
**குறியதன் முன்னர்த் தன்உரு இரட்டலும்**
**அறியத் தோன்றிய நெறிஇயல் என்ப.**

*(இச்.....எனின்)* புள்ளி மயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி கூறு.....ற்று.

*(இ-ள்.)* நெட்டெழுத்தின்முன் நின்ற ஒற்றுத் தன்வடிவு கெடுதலும், குற்றெழுத்தின் முன்னர் நின்ற ஒற்றுத் தன் வடிவு இரட்டுதலும் இவை அறியும்படி தோன்றிய முறைமையான இயல்பை உடையன என்று சொல்லுவர் புலவர் எ-று.

*(உ-ம்.)* கோறீது கோனன்று - என இவை நெடியதன் முன்னர் ஒற்றுக் கெட்டன. மண்ணகல் பொன்னகல் - என இவை குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டின.

மேலைச்சூத்திரத்து (162) ஆறன்உருபு முற்கூறிய அதனான், ஒற்று இரட்டுதல் உயிர்முதல்மொழிக்கண்ணது என்று கொள்க.

குறியது பிற்கூறிய முறையன்றிக் கூற்றினான், நெடியன குறுகிநின்றவழியும் குறியதன் முன்னர் ஒற்றாய் இரட்டு தலும், குறியது திரிந்து நெடியதாகியவழி நெடியதன் முன்னர் ஒற்றாய்க் கெடுதலும் கொள்க.

(உ-ம்.) தம்மை நம்மை - என இவை நெடியன குறுகிநின்று ஒற்றாய் இரட்டின. மற்றையது வந்தவழிக் கண்டுகொள்க.

'அறிய' என்றதனான், நெடியதன் முன்னர் ஒற்றுக் கெடுவது தகாரநகாரங்கள் வந்தவழி என்பதும், ஆண்டு எல்லாம் கெடாது என்பதும் கொள்க. தேன்றீது - என்பது ஆண்டுக் கெடாதது.

'நெறியியல்' என்றதனான், குறியதன் முன்னர் நின்ற ஒற்றுஅன்றிப் புணர்ச்சியால் பெற்றதும் இரட்டும் என உணர்க.

(உ-ம்.) அவ்வடை[1] - என வரும். (18)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 161.** 1. அ+அடை = அவ்வடை. 'யவமுன் வரினே வகரம் ஒற்றும்' (207) 'உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது' (208) என்னும் விதியான் சுட்டின் இறுதியில் வகரம் ஒற்ற, 'அவ்' விதி வகர ஈறாயிற்று.

**நச்சினார்க்கினியம்**

***160. புள்ளிமயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி***

**நெடியதன் முன்னர் . . . . . . . நெறிஇயல் என்ப.**

இது புள்ளிமயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி கூறுகின்றது.

இ-ள் : நெடியதன்..... கெடுதலும் - நெட்டெழுத்தின்முன் நின்ற ஒற்றுத் தன்வடிவு கெடுதலும்; குறியதன் . . . இரட்டலும் - குற்றெழுத்தின் முன்நின்ற ஒற்றுத் தன்வடிவு இரட்டித்தலும்; அறியத் . . . . என்ப - அறியும்படி வந்த அடிப்பாட்டியல் என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

இங்ஙனம் நெடியதன் முன்னர் ஒற்றுக்கெடுவன ணகாரமும் னகாரமும் மகாரமும் லகாரமும் ளகாரமும் என ஐவகையவாம்.

உ-ம் : கோணிமிர்ந்தது தானல்லன் தாநல்லர் வேனன்று தோணன்று - என நகரம் வருமொழி ஆதற்கண், நெடியதன் முன்னர் ஒற்றுக்கெட்டது. கோறீது வேறீது - எனத் தகரம் வருமொழி ஆதற்கண், லகார ஒற்றுக் கெட்டது. ஏனைய வந்துழிக் காண்க. இவற்றை 'ல ன என வரூஉம்' (149) 'ணள என் புள்ளிமுன்' (150) என்பனவற்றான் முடித்துக் கெடுமாறு காண்க.

ஒற்று இரட்டுவன ஞகார நகார ரகார ழகாரம் ஒழிந்தன. கண்ணழகிது பொன்னகல் தம்மாடை சொல்லழகிது எள்ளழகிது நெய்யகல் தெவ்வலன் - எனக் குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டித்தன.

மேலைச்சூத்திரத்து (161) நான்கன் உருபு பிறகூறிய அதனான், ஒற்றுஇரட்டுதல் உயிர் முதல்மொழிக்கண்ணது என்றுணர்க. குறியது பிறகூறிய முறையன்றிக் கூற்றினான், தம்மை எம்மை நின்னை - என நெடியன குறுகிநின்றவழியும் குறியதன்முன் ஒற்றாய் இரட்டுதலும், விரனன்று குறணிமிர்ந்தது - எனக் குறிலிணையின் முன்னர்வந்த ஒற்றுக் கெடுதலும், வராறீது வரானன்று - எனக் குறில்நெடிற்கண் நின்ற ஒற்றுக் கெடுதலும், அதுகொறோழி எனவும் அக்குரிசிறீயன் எனவும் தொடர்மொழி ஈற்று நின்ற

ஒற்றுக்கெடுதலும் இடைச்சொல்லோடு ஒட்டுப்பட்டு நிற்றலும்(அ) காற்றீது எனவும் விரற்றீது எனவும் ஒற்றுநிற்றலும் கொள்க.

இனி, 'அறிய' என்றதனான், தேன்றீது நாண்டீது - என்றாற்போல்வன கெடாமை நிற்றலும், தேனன்மை நாணன்மை- என்றாற்போல்வன கெடுதலும் தகரநகரங்கள் வந்துழி என்பதூஉம் கொள்க.

'நெறியியல்' என்றதனான், சுட்டின்முன் உயிர் முதல்மொழி வந்துழி, அவ்வடை அவ்வாடை - என இடை வகரஒற்று இல்வழியும் இரட்டுதல் கொள்க. *(207)* *(18)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 160***

*(அ) அது 'கொல்' எனும் சொல்லோடு ஒட்டுப்பட்டு நின்று 'அதுகொல்' எனத் தொடர்மொழியாக நின்றது என்பது கருத்து.*

*கால் + தீது; விரல் + தீது.*

**இளம்பூரணம்**

***162. உருபியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி***

**ஆறன் உருபினும் நான்கன் உருபினும்**
**கூறிய குற்றொற்று இரட்டல் இல்லை**
**ஈறுஆகு புள்ளி அகரமொடு நிலையும்**
**நெடுமுதல் குறுகும் மொழிமுன் னான.**

(இச்.....எனின்) உருபியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி கூறு....ற்று.

(இ-ள்.) ஆறன்உருபின்கண்ணும் நான்கன் உருபின்கண்ணும் ஈறாகு புள்ளிகள் அகரத்தொடு நிலைபெறும், நெடியதாகிய முதலெழுத்துக் குறுகிமுடியும் மொழிக்கண். மேற்கூறிய குற்றொற்று இரட்டல் ஆறன் உருபின்கண்ணும் நான்கன்உருபின்கண்ணும் இல்லை எ-று.

(உ-ம்.) தமது தமக்கு நமது நமக்கு - என வரும்.

'கூறிய 'என்றதனானே, நெடுமுதல் குறுகாதவழியும்[1] அவ்விதிகொள்க.

(உ-ம்.) எல்லார் தமதும், எல்லார் தமக்கும் -என வரும். (19)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 162.** 1. நெடுமுதல் குறுகாது இயல்பாகவே தம் நும் நம் என வருவன சாரியைகளாம் என்க.

**நச்சினார்க்கினியம்**

## 161. உருபியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி

**ஆறன் உருபினும் நான்கன் உருபினும்**
. . . . . . . . . . . **மொழிமுன் ஆன.**

இஃது உருபியலை நோக்கியதொரு நிலைமொழிக் கருவி கூறுகின்றது.

இ-ள் : நெடுமுதல் . . . . . . . ஆன - நெடிதாகிய முதல்எழுத்துக் குறுகிமுடியும் அறுவகைப்பட்ட மொழிகளின் முன்னர் வந்த; ஆறன் . . . . . . உருபினும் - ஆறாம் வேற்றுமைக் கண்ணும் நான்காம் வேற்றுமைக் கண்ணும்; கூறிய . . . . . இல்லை - முன்னர் நிலைமொழிக்கு இரட்டும் என்ற குற்றொற்று இரட்டி வருதல் இல்லை;- ஈறுஆகு . . . . நிலையும் - நிலைமொழி ஈற்றுக்கண் நின்ற ஒற்றுக்கள் அகரம் பெற்று நிற்கும் எ-று.

வருமாறு : உருபியலில் 'நீ என் ஒருபெயர்' (179) எனவும், 'தாம் நாம் என்னும்' (188) எனவும், 'தான்யான் என்னும்' (192) எனவும் கூறியவற்றான் குறுகி ஒற்று இரட்டித் தம்மை நம்மை எம்மை தன்னை என்னை நின்னை - எனவருவன, இதனானே, தமது நமது எமது தனது எனது நினது - எனவும், தமக்கு நமக்கு எமக்கு தனக்கு எனக்கு நினக்கு - எனவும் ஒற்று இரட்டாது அகரம் பெற்றுவந்தன. நான்காவதற்கு ஒற்றுமிகுதல் 'வல்லெழுத்து முதலிய' (114) என்பதனான் கொள்க. ஆறன் உருபாகிய அகரம் ஏறிமுடியாமைக்குக் காரணம் 'ஆறன் உருபின் அகரக் கிளவி' (115) என்புழிக் கூறினாம். ஒற்று இரட்டாமையும் அகரப்பேறும் இரண்டற்கும் ஒத்த விதி என்றுணர்க.

'கூறிய' என்றதனான், நெடுமுதல் குறுகாத தம் - நம் - நும் - என வரும் சாரியைகட்கும் இவ்விதி கொள்க.

எல்லார் தமக்கும் எல்லா நமக்கும் எல்லீர் நுமக்கும், எல்லார்தமதும் எல்லா நமதும் எல்லீர் நுமதும்-என வரும்.(19)

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 162.** ஆறன் உருபினும்........மொழிமுன் னான.

'கூறிய' என்ற சொல்லை மிகையாகக் கொண்ட உரைகாரர் இருவரும் இச்சூத்திரத்தான் சில புணர்ச்சி முடிபுகளையும் தழுவியுரைத்தனர். அச்சொல் மிகையாகாது என்பது இவர்கருத்து. முன் சூத்திரத்துக் 'குறியதன் முன்னர்த் தன்உரு இரட்டல்' தானே வந்தியைதலின், 'கூறிய' என்பது மிகையே எனக் கொண்ட உரைகாரர் கூற்றுப் பொருந்துமாறு காண்க.

**இளம்பூரணம்**

## 163. 'நும்' என் இறுதி புணர்நிலை

**நும்என் இறுதியும் அந்நிலை திரியாது.**

இதுவும் அது.

(இ-ள்.) நும் என்னும் மகரஇறுதியும் ஈறாகு புள்ளி அகரமொடு நிலையலும் குற்றொற்று இரட்டாமையும் ஆகிய அந்நிலைமையின் திரியாது எ-று.

(வருமாறு) நுமக்கு நுமது - என வரும். (20)

**நச்சினார்க்கினியம்**

## 162. 'நும்' என் இறுதி புணர்நிலை

**நும்என் இறுதியும் அந்நிலை திரியாது.**

இது நெடுமுதல் குறுகாத நும் என்கின்றதும் அவ்விதி பெறும் என்கின்றது.

இ-ள் : நும் என் . . . . . திரியாது - நெடுமுதல் குறுகா நும் என்னும் மகர ஈறும், முற்கூறிய குற்றொற்று இரட்டாமையும் ஈறாகு புள்ளி அகரமொடு நிலையலும் எய்தும் எ-று.

நுமது, நுமக்கு - என வரும். (20)

***இளம்பூரணம்***

## 164. புள்ளிமயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிச் செய்கை

**உகரமொடு புணரும் புள்ளி இறுதி**
**யகரமும் உயிரும் வருவழி இயற்கை.**

(இச்....எனின்) புள்ளிமயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிச் செய்கை கூறு...ற்று.

(இ-ள்.) உகரப்பேற்றொடு புணரும் புள்ளிஈறுகள், யகரமும் உயிரும் வருமொழியாய் வருமிடத்து, அவ்வுகரம் பெறாது இயல்பாய் முடியும் எ-று.

(உ-ம்.) உரிஞ் யானா, உரிஞ் அனந்தா; பொருந் யானா, பொருந் அனந்தா-ஆதா-என ஒட்டுக. பிறவும் அன்ன. (21)

**நச்சினார்க்கினியம்**

### *163. புள்ளிமயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிச் செய்கை*

**உகரமொடு புணரும் . . . . வருவழி இயற்கை.**

இது புள்ளிமயங்கியலை நோக்கியதொரு நிலைமொழிச் செய்கை கூறுகின்றது.

இ-ள் : உகரமொடு . . . . . இறுதி - உகரப்பேற்றொடு புணரும் புள்ளி ஈறுகள்; யகரமும்......இயற்கை - யகரமும் உயிரும் வருமொழியாய் வருமிடத்து அவ்வுகரம் பெறாது இயல்பாய் முடியும் எ-று.

அவ்வீறுகளாவன, புள்ளிமயங்கியலுள் உகரம் பெறும் என்று விதிக்கும் பல ஈறுகளும் என்று கொள்க.

உ-ம் : உரிஞ் யானா - அனந்தா - ஆதா - இகலா - ஈந்தா - உழுந்தா - ஊரா - எயினா - ஏறா - ஐயா - ஒழுக்கா - ஓதா - ஔவியா - எனவும், உரிஞ் யாது - அழகு எனவும் ஒட்டுக. ஏனைப் புள்ளிகளொடும் ஏற்பன அறிந்து ஒட்டுக.

'ஞகாரை ஒற்றிய' (296) என்பதனானும் 'ஞ ந ம வ இயையினும்' (297) என்பதனானும் யகரமும் உயிரும் வந்தால் உகரம் பெறாது இயல்பாம் என்பது பெறுதலின், ஈண்டு விலக்கல் வேண்டா எனின், எடுத்தோத்து இல்வழியே உய்த்துணர்ச்சி என்று கொள்க.(அ)

இச்சூத்திரம் முதலாக அல்வழி கூறுகிறார். (21)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 163***

*(அ) விதி வெளிப்பட எடுத்துக் கூறாதவிடத்தேயே உய்த்துணர்தல் வேண்டுமன்றி எடுத்தோத்தான் வெளிப்படக் கிளந்து ஓதியவிடத்தே உய்த்துணர்வு பயனின்றாம். ஆயின் அது கூறியது கூறிற்றாக முடியுமன்றோ எனின், ஆகாது, அது வேறொரு பொருளையும் விளக்க வல்லதாதலின். இச்சூத்திரம், சூத்திரத்தின் பல்வேறு குணநலன்களை உட்கொண்டிருக்கும் மாண்பினைப் பேராசிரியர் குறிப்பிடுவார். (பொ. 665 உரை)*

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***சூ. 163.*** உகரமொடு புணரும்....வருவழி இயற்கை.

*வல்லெழுத்து வரும்வழி உகரம் பெறுகின்ற புள்ளி யீற்றுத் தொழிற்பெயர்கள், யகரமும் உயிரெழுத்துக்களும் வருமிடத்தில் உகரம் பெறா என்றலே இச்சூத்திரத்தின் பொருள். இதனான் யகரமும் உயிரை ஒத்ததாதல் பெறப்படும்.*

*உரையாளர் இருவரும் உரிஞ்யானா - உரிஞ்ஆதா- என்று, உரிஞ் என்பதை முன்னிலை வினையாக நிறுத்தி உதாரணம் காட்டியுள்ளமை, ஆசிரியர் 'ஞநமவ என்னும் புள்ளி இறுதியும், முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே' என விலக்கியிருத்தலின் பொருந்தாது.*

**இளம்பூரணம்**

***165. அளவு நிறை எண்ணுப் பெயர்கள் தம்மிற் புணருமாறு***

**உயிரும் புள்ளியும் இறுதி யாகி**
**அளவும் நிறையும் எண்ணும் சுட்டி**
**உளஎனப் பட்ட எல்லாச் சொல்லும்**
**தத்தம் கிளவி தம்அகப் பட்ட**
**முத்தை வருஉம் காலம் தோன்றின்**
**ஒத்தது என்ப ஏ-என் சாரியை.**

(இச்....எனின்) அளவுப்பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப்பெயரும் தம்மில் புணருமாறு உணர்...ற்று.

(இ-ள்.) உயிரும் புள்ளியும் ஈறாய், அளவையும் நிறையையும் எண்ணையும் கருதி உள எனப்பட்ட எல்லாச்சொற்களும், தமக்கு இனமாகிய சொற்களாய்த் தமக்கு அகப்படும் மொழியாய் உள்ளன தம்முன்னே வரும் காலம் தோன்றுமாயின், பொருந்திற்று என்ப ஏ என்னும் சாரியை பெற்று முடிதலை எ-று.

(உ-ம்.) உழக்கே யாழாக்கு, கலனே பதக்கு: இவை அளவுப்பெயர். தொடியே கஃசு, கொள்ளே யையவி - என இவை நிறைப்பெயர். காணியே முந்திரிகை, காலே காணி - என இவை எண்ணுப்பெயர்.

உயிரீறு புள்ளியீறு என்றதனானே, ஏ-என் சாரியை பெறாதனவும் உள என்று கொள்க.

(உ-ம்.) குறுணிநானாழி - என வரும். (22)

**நச்சினார்க்கினியம்**

***164. அளவு நிறை எண்ணுப் பெயர்கள் தம்மிற் புணருமாறு***

**உயிரும் புள்ளியும் இறுதி ஆகி**

. . . . . . . . . . . . .

**ஒத்தது என்ப ஏ-என் சாரியை.**

இஃது அளவும் நிறையும் எண்ணும் ஆகிய பெயர்கள் தம்மில் புணருமாறு கூறுகின்றது.

இ-ள் : உயிரும் புள்ளியும் இறுதியாகி - உயிரும் புள்ளியும் தமக்கு ஈறாய்; அளவும்....சொல்லும்- அளவையும் நிறையையும் எண்ணையும் கருதி வருவன உள என்று ஆசிரியரால் கூறப்பட்ட எல்லாச் சொற்களும்; தத்தம் . . . . தோன்றின் - தத்தமக்கு இனமாகிய சொற்களாய்த் தம்மின் குறைந்த சொற்கள் தம்முன்னே வரும் காலம் தோன்று

மாயின்; ஏ-என் சாரியை ஒத்தது என்ப - தாம் ஏ-என் சாரியை பெற்று முடிதல் பொருந்திற்று என்பர் ஆசிரியர் எ-று.

முந்தை : முத்தை என விகாரம்.

உ-ம் : நாழியே யாழாக்கு, உழக்கே யாழாக்கு, கலனே பதக்கு - என அளவுப்பெயர் ஏகாரம் பெற்றுத் தம்முன்னர்த் தம்மின் குறைந்தன வந்தன. தொடியே கஃசு, கொள்ளே யையவி - என நிறைப்பெயர் ஏகாரம் பெற்றுத் தம்முன்னர்த் தம்மின் குறைந்தன வந்தன. ஒன்றே கால், காலே காணி, காணியே முந்திரிகை - என எண்ணுப்பெயர் ஏகாரம் பெற்றுத் தம்முன்னர்த் தம்மின் குறைந்தன வந்தன.

அதிகாரம்பட்ட புள்ளியீறு முற்கூறாததனானே, குறுணிநானாழி - ஐந்நாழியுழக்கு - என ஏகாரம் இன்றி வருவனவும் கொள்க. (22)

சாத்திரியார் உரைக்குறிப்பு

சூ. 165. உயிரும் புள்ளியும்

..................

ஒத்தது என்ப ஏ - என் சாரியை.

உரைகாரர் இருவரும் 'எல்லாச் சொல்லும்' என்னும் பன்மை எழுவாய்க்கு 'ஒத்தது' என்னும் ஒருமைமுற்றைப் பயனிலையாகக் கொண்டனர் என்று இவர் கருதினார். ''ஏ-என் சாரியை பெற்று முடிதலைப் பொருந்திற்று என்று கூறுவர் ஆசிரியர்'' என்னும் அன்னோர் உரைக்கண் 'எல்லாச் சொல்லும்' என்பது 'பெற்றுமுடிதல்' என்னும் பயனிலையைக் கொள்ள, 'இப்புணர்ச்சி முடிபு' என்னும் தோன்றா எழுவாய்க்கு 'ஒத்தது' பயனிலையாயிற்று என்ற கோடல் அன்னோர் உரைக்கூற்றை மதித்தொழுகும் அறிவுடைமைப்பாற்படுமன்றோ?

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

***சூ. 164.*** **உயிரும் புள்ளியும் இறுதி ஆகி**

**...........**

**ஒத்தது என்ப ஏஎன் சாரியை.**

உரையாளர் இருவரும் கூறியவாறு புள்ளியீற்றை முற்கூறாமை முறையின்றிக் கூறிற்று ஆகாது. சூத்திரத்துள் 'ஒத்தது என்ப' என்றதனான், சாரியை பெறாது வருதல் அமைக்கப்படும். காலே மாகாணி என்னாது கால்மாகாணி எனின், பொருள் வேறுபடுதலின், அத்தகைய இடங்களில் சாரியைபெற்றே வருதல் வேண்டும்.

**இளம்பூரணம்**

***166. அம்முப் பெயர்கள் முன் 'அரை' புணருமாறு***

**அரைஎன வரூஉம் பால்வரை கிளவிக்குப்**
**புரைவது அன்றால் சாரியை இயற்கை.**

(இச்....எனின்) எய்தியது விலக்குதல் நுதலிற்று.

(இ-ள்.) அரை என்று சொல்லவருகின்ற பொருட்கூற்றை உணரநின்ற சொல்லிற்குப் பொருந்துவது அன்று, மேற்கூறிய ஏ என் சாரியை பெறும் இயல்பு எ-று.

(உ-ம்.) உழக்கரை தொடியரை ஒன்றரை - என வரும்.

இஃது 'ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு '(133) அன்று என்றதனான் விலக்குண்ணாதோ எனின், 'தம்அகப்பட்ட' (165) என்ற வருமொழியையும் வரைந்து ஓதினமையான்', இதற்கு அவ்விதி செல்லாது என்பது. *(23)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 166.*** அரை என்பது நிலைமொழிக்கண் நிற்கும் அள வுப்பெயர்க்கு அகப்பட்ட (அதன் பாதியாகிய என்றவாறு)

பெயராதலின் மேலைச்சூத்திரவிதியால் ஏகாரச் சாரியை இடைவந்து இயையும். அதனை விலக்கவே இச்சூத்திரம் வேண்டிற்று

**நச்சினார்க்கினியம்**

## *165. அம்முப் பெயர்கள் முன் ‘அரை’ புணருமாறு*

**அரைஎன வரூஉம் . . . . . சாரியை இயற்கை.**

இஃது எய்தியது விலக்கிற்று.

இ-ள் : அரைஎன . . . . கிளவிக்கு - அம்மூவகைச்சொல் முன்னர் வரும் அரை என்று சொல்லவருகின்ற பொருட்கூற்றை உணரநின்ற சொல்லிற்கு; சாரியை இயற்கை புரைவது அன்று - ஏ என் சாரியை பெறும்தன்மை பொருந்துவது அன்று எ-று.

ஆல் : அசை

உ-ம் : உழக்கரை செவிட்டரை மூவுழக்கரை - எனவும், கஃசரை கழஞ்சரை தொடியரை கொள்ளரை - எனவும் , ஒன்றரை பத்தரை - எனவும் இவை ஏயென் சாரியை பெறாவாய் வந்தன.

‘புரைவ தன்றால்’ என்றதனான், கலவரை என்பதனை ஒற்றுக்கெடுத்துச் செய்கை செய்து முடிக்க. இதனானே செவிட்டரை என்புழி டகரஒற்று மிகுதலும் கொள்க.

(1) ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு (132) அன்மையின் சாரியை பெறாவாயின என்றாலோ எனின், அவை பெற்றும் பெறாதும் வருவனவற்றிற்குக் கூறியது ஆகலானும், (அ) இது தம்மகப்பட்ட (164) என வரைந்தோதினமையானும் (ஆ) விலக்கல் வேண்டிற்று. (23)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

*சூத்திரம் 165*

1. *'தத்தம் கிளவி தம்அகப் பட்ட, முத்தை வரூஉம் காலம் தோன்றின், ஒத்தது என்ப ஏயென் சாரியை'* என்பதனான், செவிடே அரை என ஏ என் சாரியை இடையே வரவேண்டும். அங்ஙனம் வரவேண்டும் இடத்து ஏ சாரியை வாராது செவிட்டரை என நிற்றலின், இதற்கு இச்சூத்திரவிதி வேண்டியதாயிற்று. சாரியை பெறாமல் வருவனவற்றிற்கே ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு அன்று என்னும் விதி கொள்ளப்படும். ஆதலின் இஃது அதனாற் கொள்ளப்பட்டது என்க.

*(அ)* 'ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு' எனப்படும் சொற்கள் சாரியை பெற்றும் பெறாதும் வருவன. 'சே' பெற்றத்தைக் குறிப்பின் 'இன்' சாரியை பெறும். 'புளி' மரமாயின் 'அம்' சாரியை பெறும். 'எகின்' மரத்தைக் குறிப்பின் 'அம்' சாரியை பெறும். *(279, 244, 336)* இவை மூன்று பெயர்களும் முறையே மரத்தையும் சுவையையும் புள்ளையும்குறிப்பின், சேங்கோடு - புளிங்கூழ் - எகினக்கால் - என மெல்லெழுத்தும் அகரத்தொடு வல்லெழுத்தும் பெற்று முடிதலின், சாரியை ஒட்டுதற்கு ஒழுகிய வழக்குப் பெறாதனவாம்.

*(ஆ)* இளம்பூரணம் உரைக்குறிப்பு சூ. 166 காண்க.

**இளம்பூரணம்**

### *167. அவற்றின் முன் 'குறை' புணருமாறு*

**குறைஎன் கிளவி முன்வரு காலை**
**நிறையத் தோன்றும் வேற்றுமை இயற்கை.**

(இச்....எனின்) எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு...ற்று.

*(இ-ள்.)* குறை என்னும் சொல், அளவு முதலியவற்றின் முன்வருங் காலத்து நிறையத் தோன்றும், மேல் வேற்றுமைப் பொருட்புணர்ச்சி முடிபில் சொல்லும் இயல்பு (281) எ-று.

*(உ-ம்.)* உரிக்குறை கலக்குறை, தொடிக்குறை கொட்குறை, காணிக்குறை காற்குறை - என வரும்.

'முன்' என்றதனான், கூறு என்பதன்கண்ணும் வேற்றுமை முடிபு எய்தும் என்பது.

*(உ-ம்.)* நாழிக்கூறு - என வரும். (24)

**நச்சினார்க்கினியம்**

## *166. அவற்றின் முன் 'குறை' புணருமாறு*

**குறைஎன் கிளவி . . . . . வேற்றுமை இயற்கை.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது, ஏ என் சாரியை விலக்கி வேற்றுமை முடிபினொடு மாட்டெறிதலின்.

இ-ள் : குறைஎன் . . . . . . காலை - குறை என்னும் சொல் அளவுப்பெயர் முதலியவற்றின்முன் வருங் காலத்திற்கு; வேற்றுமை இயற்கை - வேற்றுமைப் புணர்ச்சி முடிபிற்கு உரித்தாகக் கூறும் தன்மை; நிறையத் தோன்றும் - நிரம்பத் தோன்றும் எ-று.

உ-ம் : உரிக்குறை அகற்குறை - எனவும், தொடிக்குறை கொட்குறை எனவும், காணிக்குறை காற்குறை எனவும் வரும். உரிக்குறை : உரி நெல்லும் குறைநெல்லும் என்க.

'வேற்றுமை இயற்கை' எனவே இவை வேற்றுமை அல்ல ஆயின. ஆகவே, உரிக்குறை என்பதற்கு உரியும் உழக்கும் எனப் பொருளாயிற்று. ஏனையவும் அன்ன.

'முன்வரும் காலை' என்றதனானே, கலப்பயறு கலப்பாகு - என்றாற்போலப் பொருட்பெயரொடு புணரும் வழியும் இவ்வேற்றுமை முடிபு எய்துவிக்க. பாகு என்றது பாக்கினை.

'நிறைய' என்றதனானே, உரிக்கூறு தொடிக்கூறு காணிக்கூறு - எனக் கூறு என்றதற்கும் இம் முடிபு எய்துவிக்க. *(24)*

**இளம்பூரணம்**

### *168. அவற்றது குற்றுகர ஈறு 'குறை' யொடு புணருமாறு*

**குற்றிய லுகரக்கு இன்னே சாரியை.**

(இச்....எனின்) வேற்றுமைமுடிபு விலக்கி 'இன்' வகுத்தமையின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு...ற்று.

(இ-ள்.) குற்றுகரஈற்று அளவுப்பெயர் முதலியன வற்றிற்குக் குறையொடு புணரும்வழி வரும் சாரியை இன் எ-று.

(உ-ம்.) உழக்கின் குறை, கழஞ்சின் குறை, ஒன்றின் குறை -என வரும். *(25)*

**நச்சினார்க்கினியம்**

### *167. அவற்றது குற்றுகரஈறு 'குறை' யொடு புணருமாறு*

**குற்றிய லுகரத்து இன்னே சாரியை.**

இது வேற்றுமைமுடிபு விலக்கி இன் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

இ-ள் : குற்றியலுகரத்து இன்னே சாரியை - குற்றியலுகர ஈற்று அளவுப்பெயர் முதலியவற்றிற்குக் குறை என்பதனொடு புணரும்வழி வரும் சாரியை இன்சாரியையே ஆம் எ-று.

குற்றியலுகரத்து : இதற்கு 'அத்து' விதித்து முடிக்க. 'குற்றிய லுகரக் கின்னே சாரியை' என்பதும் பாடம்.

உ-ம் : உழக்கின் குறை ஆழாக்கின் குறை எனவும், கழஞ்சின் குறை கஃசின் குறை எனவும், ஒன்றின் குறை பத்தின் குறை எனவும் வரும். இதற்கு உழக்கும் குறையும் என்பது பொருள். இதுவேற்றுமைக்கண்ணாயின், உழக்கிற்குறை என நிற்கும். (25)

## இளம்பூரணம்

### 169. கலம் 'குறை' யொடு புணருமாறு

**அத்துஇடை வரூஉம் கலம்என் அளவே.**

இதுவும் அது.

(இ-ள்.) கலம் என்னும் அளவுப்பெயர் குறையொடு புணரும்வழி இடையே அத்து வரும் எ-று.

(வருமாறு) கலத்துக்குறை - என வரும்.

இது கலன் என்னும் னகரஈறேல், நிலைமொழி ஒற்றுக் கேடும், வருமொழி ஒற்றுப்பேறும் 'அத்தே வற்றே' (134) என்பதனான் கொள்ளப்படும்[1]. 'கலனென் அளவு ' என்று ஓதாதது செய்யுள் இன்பம் நோக்கிப்போலும்.

சாரியை முற்கூறிய அதனான், இன்சாரியை பெற்றவழி முன் மாட்டேற்றான்[2] எய்திய வல்லெழுத்து வீழ்க்க. (26)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ. 169.** 1. கலன் + குறை > கலன் + அத்து + குறை > கல + அத்து + குறை> கல + த்து + குறை > கல + த்து + க் + குறை = கலத்துக்குறை. 134ஆம் நூற்பா (1) எண்ணிட்ட உரைக் குறிப்புக் காண்க.

2. 'நிறையத் தோன்றும் வேற்றுமை இயற்கை' (167) என்பது.

**நச்சினார்க்கினியம்**

### 168. கலம் குறையொடு புணருமாறு

**அத்துஇடை வரூஉம் கலம்என் அளவே.**

இதுவும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, வேற்றுமைவிதி விலக்கி அத்து வகுத்தலின்.

இ-ள்: கலம் என் அளவு - கலம் என்னும் அளவுப்பெயர் குறையொடு புணருமிடத்து; அத்து இடை வரூஉம் - அத்துச் சாரியை இடைவந்து புணரும் எ-று.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

**சூ. 169. அத்துஇடை வரூஉம் கலம்என் அளவே.**

(இ-ள்.) கலம் என்ற அளவுப்பெயரின்கண் குறை என்றது வருமொழியாய் வருமிடத்து, இடையில் அத்து வரும்.

உரைகாரர்கள்தம் உரை இவர் உரையினும் தெளிவுடைமை வெள்ளிடை. 'புணரும்வழி' என வருவித்து உரைத்தமை பொருள்தெளிவு கருதியே.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 168. அத்துஇடை வரூஉம் கலம்என் அளவே.**

ஆசிரியர் மேற்சூத்திரத்தான் குற்றியலுகரஈற்றுப் பெயர்களுக்கு மட்டுமே இன்சாரியை விதித்தார் ஆகலின், கலம் என்னும் மகரஈற்றுப் பெயர்க்கு அச்சிறப்புவிதிச் சாரியை வாராது. ஆதலின், சாரியையை முற்கூறிய அதனை விதப்பாகக்கொண்டு உரையாளர் இருவரும் உரைத்தமை பொருந்தாது.

## இளம்பூரணம்

### 170. பனையும் காவும் 'குறை' யொடு புணருமாறு

**பனைஎன் அளவும் காஎன் நிறையும்**
**நினையுங் காலை இன்னொடு சிவணும்.**

இதுவும் அது.

(இ-ள்.) பனை என்னும் அளவுப்பெயரும், கா என்னும் நிறைப்பெயரும் குறை என்பதனொடு புணருமிடத்து ஆராயும்காலத்து இன்சாரியையொடு பொருந்தும் எ-று.

(வருமாறு) பனையின்குறை, காவின்குறை - என வரும்.

'நினையுங்காலை' என்றதனான், வல்லெழுத்துப் பேறும் சிறுபான்மை கொள்க (167).

பனைக்குறை, காக்குறை - என வரும். (27)

## நச்சினார்க்கினியம்

### 169. பனையும் காவும் குறையொடு புணருமாறு

**பனைஎன் அளவும் . . . . . . . இன்னொடு சிவணும்.**

இதுவும் அது, வேற்றுமைவிதி விலக்கி இன் வகுத்தலின்.

இ-ள் : பனை என் . . . . . நிறையும் - பனை என்னும் அளவுப்பெயரும் கா என்னும் நிறைப்பெயரும் குறை என்பதனொடு புணருமிடத்து; நினையுங்காலை இன்னொடு சிவணும் - ஆராயுங்காலத்து இன்சாரியை பெற்றுப் புணரும் எ-று.

உ-ம் : பனையின் குறை, காவின் குறை - எனவரும். இவையும் உம்மைத்தொகை.

'நினையுங்காலை' என்பதனான், வேற்றுமைக்குரிய விதி எய்தி வல்லெழுத்துப் பெறுதலும் சிறுபான்மை கொள்க.

பனைக்குறை, காக்குறை - என வரும்.

*இத்துணையும் அல்வழிமுடிபு.*

இவற்றை 'வேற்றுமை அல்வழி இ ஐ என்னும்' *(158)* என்னும் சூத்திரத்தில் கூறாது வேறு ஓதினார், இவை அளவும் நிறையும் எண்ணும் ஆதலின். *(27)*

**இளம்பூரணம்**

### *171. அளவு நிறைப் பெயர்கட்கு முதலாம் எழுத்து வரையறை*

**அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதல் ஆகி**
**உளஎனப் பட்ட ஒன்பதிற்று எழுத்தே**
**அவைதாம்**
**கசதப என்றா நமவ என்றா**
**அகர உகரமோடு அவைஎன மொழிப.**

(இச்....எனின்) அளவுப்பெயர்க்கும் நிறைப் பெயர்க்கும் முதலாம் எழுத்திற்கு வரையறை கூறு.....ற்று.

(இ-ள்.) அளவுப்பெயர்க்கும் நிறைப்பெயர்க்கும் மொழிக்கு முதலாய் உள என்று சொல்லப்பட்டன ஒன்பது எழுத்து; அவை யாவையோ எனின், கசதப-க்களும் நமவ-க்களும் அகர உகரமோடு அவையும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

(வருமாறு) கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு-எனவும், கழஞ்சு சீரகம் தொடி பலம் நிறை மா வரை அந்தை[1] எனவும் வரும்.

'உளஎனப்பட்ட' என்றதனான், உள எனப்படாதனவும் அளவை உள என்பது.

(வருமாறு) இம்மி ஓரடை ஓராடை - என வரும்.

மற்று இவ்வரையறை கூறிப் பயந்தது என்னை யெனின், மேல் அகத்தோத்தினுள் அவற்றிற்கு முடிவு கூறும்வழி, அதிகாரத்தான் வன்கணத்தும் மேற் சொல்லாதொழிந்த கணத்தினும் சேறற்கு என்பது. (28)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 171.** 1. அந்தை என்னும் நிறைப்பெயர் ஐந்தை எனவும் வழங்கும். சிறுவெண்கடுகு என்பது அதன் பொருள். 'மறுமையை, ஐந்தை அனைத்தானும் ஆற்றிய காலத்தும், சிந் தியார் சிற்றறிவினார்' (நாலடி. 329)

**நச்சினார்க்கினியம்**

## 170. அளவு நிறைப் பெயர்கட்கு முதலாம் எழுத்துவரையறை

**அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதல் ஆகி**

**. . . . . . . . . . . . . . . . . . . .**

**அகர உகரமோடு அவைஎன மொழிப.**

இது முற்கூறிய மூன்றனுள் அளவிற்கும் நிறைக்கும் மொழிக்கு முதலாம் எழுத்து இனைய என்கின்றது.

இ-ள் : அளவிற்கும் . . . எழுத்து - அளவுப்பெயர்க்கும் நிறைப்பெயர்க்கும் மொழிக்கு முதலாயுள்ளன என்று கூறப்பட்ட(வை) ஒன்பது எழுத்துக்கள்; அவைதாம் . . . . மொழிப - அவ்வெழுத்துக்கள்தாம், க ச த ப - க்களும் ந ம வ-க்களும் அகர உகரமும் ஆகிய அவையென்று கூறுவர் புலவர் எ-று.

வருமாறு : கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு : இவை அளவு. கழஞ்சு சீரகம் தொடி பலம் நிறை மா வரை அந்தை : இவை நிறை. நிறைக்கு உகரமுதற்பெயர் வந்துழிக் காண்க.

இனி, உளவெனப்பட்ட என்றதனானே, உளவெனப் படாதனவும் உள. அவை இம்மி ஓரடை இடா-என வரையறை கூறாதனவும் கொள்க. இன்னும் இதனானே, தேயவழக்காய் ஒருஞார் ஒருதுவலி - என்பனவும் கொள்க.

இங்ஙனம் வரையறை கூறினார், (1) அகத்தோத்தினுள் முடிபு கூறியவழி அதிகாரத்தான் வன்கணத்தின்மேல் செல்லாது ஒழிந்த கணத்தினும் செல்லும் என்றற்கு. எண்ணுப்பெயர்வரையறை இன்மையின் கூறாராயினார். (28)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 170**

1. 'அளவும் நிறையும்' (319, 389, 474, 477) என எடுத்துக்கூறும் சூத்திரங்களுள், வன்கணத்தின் மாத்திரம் செல்லாமல் ஏனைய கணத்தினும் அச்சூத்திரவிதி செல்லும் என்பது கருத்து.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 171.** **அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதல் ஆகி**
**உளஎனப் பட்ட ஒன்பதிற்று எழுத்தே**
**அவைதாம்.**
**கசதப என்றா.....அவைஎன மொழிப.**

முன் இரண்டடியும் ஒருசூத்திரமாகவும் பின்னடிகள் மற்றொரு சூத்திரமாகவும் ஆசிரியர் கருதியிருத்தல் கூடும் என்பது இவர் கூற்று. முன்னரும் (159) இவ்வாறே கூறினார். சூத்திரம் ஒன்றாகக் கிடப்பினும் வாக்கிய பேதக் குற்றம் இன்மை சூத்திரம் ஒருபொருளையே நுதலுதலின் பெற்றாம்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 170.** **அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதல் ஆகி**
**..................அவையென மொழிப.**

அளவைப் பெயர்களின் முதலெழுத்துக்களைத் தொகுத்து ஓதியதன் பயன், அகத்தோத்தினுள் அளவைப் பெயர் பற்றிய விதி கூறுமிடங்களில் அதிகாரத்தான் வரும் வன்கணத்தொடு ஏனைக் கணங்களுக்கும் இவ்விதி செல்லும் என்பதனை உணர்த்துதலாம்.

[இவ்வாறு சுட்டும் இவர், இவ்வியல் அதிகாரத்தின் இறுதிக்கண் வைக்கப்படாமல் ஈண்டே வைக்கப் பட்டமைக்கு உரிய காரணத்தைத் தம்மை அறியாமல் உடன்பட்டார் ஆயிற்று.]

**இளம்பூரணம்**

***172. இவ்வியற்குப் புறனடை***

**ஈறுஇயல் மருங்கின் இவைஇவற்று இயல்புஎனக்**
**கூறிய கிளவி பல்லாறு எல்லாம்**
**மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி**
**ஒத்தவை உரிய புணர்மொழி நிலையே.**

*(இச்.....எனின்)* இஃது இவ்வோத்துப் புறனடை கூறு....ற்று.

*(இ-ள்.)* உயிரும் புள்ளியும் இறுதியானவை வருமொழியொடு கூடி நடக்குமிடத்து, இம்மொழிகளின் முடிபு இவையெனக் கூறி முடிக்கப்பட்ட சொற்களின் அவ்வாற்றான் முடியாதுநின்ற பலவகை முடிபுகள் எல்லாம், உண்மையைத் தலைப்பட்ட வழக்கொடு கூடிப் பொருந்தினவை உரியவாம், புணரும் மொழிகளின் நிலைமைக்கண் எ-று.

*(உ-ம்.)* விளஞான்றது என்புழி, நிலைமொழிப் பெயரது இயல்பும்[1], 'ஞான்ற ஞாயிறு' (புறநா. 82) என நிலைமொழி வினையாயவழி இருமொழி இயல்பும்[2] ஆகிய 'ஞநமயவ' (145) என்பதன் ஒழிபும்;

மண் கடிது என்புழி வருமொழி வன்கணத்துஇயல்பு[3] ஆகிய 'மொழிமுதல் ஆகும்' (148) என்பதன் ஒழிபும்;

நட ஞெள்ளா என்னும் இயல்புகணத்து இருமொழி இயல்பும்[4], நில்கொற்றா - நிற்கொற்றா - என நிலைமொழி திரிந்த உறழ்ச்சியும், துக் கொற்றா துஞ்ஞெள்ளா - என்னும் மிகுதியும், உரிஞு ஞெள்ளா என்னும் இயல்பு கணத்து உகரப்பேறும், உரிஞ் யானா - உரிஞ் அனந்தா - என்னும் இருமொழி இயல்பும்[5], மண்ணு கொற்றா - மண்ணுக் கொற்றா-மண்ணு ஞெள்ளா - என வரும் 'ஔஎன வரூஉம்' (153) என்பதனுள் விலக்கப்படாத ணகர னகர லகர ளகரம் ஆகிய புள்ளியிறுதிகளின் நிலைமொழி உகரப்பேறும் ஆகிய 'உயிர்ஈறு ஆகிய முன்னிலைக் கிளவி' (152) என்பதன் ஒழிபும்;

விரவுப்பெயர்த்திரிபில் மேல் (254) எடுத்து ஓதப்படாதனவாய 'நின்ஞாண்'[6] என்றாற்போல வரும் 'அஃறிணை விரவுப்பெயர்' (156) என்பதன் ஒழிபும்;

காவிக்கண் - குவளைக்கண் - என்றாற்போல அல்வழிமுடிபாகிய 'வேற்றுமை அல்வழி' (159) என்பதன் ஒழிபும்;

குறுணி - பதக்கு - நானாழி - சீரகரை - ஒருமாவரை - என்னும் 'உயிரும் புள்ளியும் இறுதி யாகி' (165) என்பதன் ஒழிபும்;

பிறவற்றின் ஒழிபும் எல்லாம் ஈண்டே கொள்க. (29)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 172.** 1-6 ஈண்டு நிலைமொழிஇயல்பும் வருமொழி இயல்பும் இருமொழிஇயல்புமாக உரையாசிரியர் குறிப்பிட்டவற்றுள் தமக்கு இசைவின்மை யாற்போலும்

அவற்றை ஒழிபாகக் கொண்டு இப்புறனடைச் சூத்திரத்தால் நச்சினார்க்கினியர் அமைத்திலர் என்று தோன்றுகிறது.

**நச்சினார்க்கினியம்**

## 171. இவ்வியற்குப் புறனடை

**ஈறுஇயல் மருங்கின் இவை இவற்று இயல்புஎன**
**. . . . . . . . . . . . . . புணர்மொழி நிலையே.**

இஃது இவ்வோத்திற்குப் புறனடை, எடுத்தோத்தானும் இலேசானும் முடியாதனவற்றிற்கு இதுவே ஓத்து ஆகலின்.

இ - ள் : ஈறு இயல் மருங்கின் - உயிரும் புள்ளியும் இறுதியாகிய சொற்கள் வருமொழியொடு கூடி நடக்குமிடத்து; இவற்று இயல்பு இவை எனக் கூறிய . . . . . . எல்லாம்- இம்மொழிகளின் முடிபு இவை எனக்கூறி முடிக்கப்பட்ட சொற்களின் அவ்வாற்றான் முடியாது நின்ற பலவகை முடிபுகள் எல்லாம்; மெய்த்தலைப் . . . . . சிவணி - உண்மையைத் தலைப்பட்ட வழக்கொடு கூடி; புணர்மொழி நிலை ஒத்தவை உரிய - புணரும் மொழிகளின் நிலைமைக்கண் பொருந்தினவை உரியவாம் எ-று.

உ-ம் : நடஞெள்ளா என உயிரீறாகிய முன்னிலைக்கிளவி மென்கணத்தோடு இயல்பாய் முடிந்தது.

மண்ணு கொற்றா மண்ணுக் கொற்றா, மன்னு கொற்றா மன்னுக் கொற்றா, உள்ளு கொற்றா உள்ளுக் கொற்றா, கொல்லு கொற்றா கொல்லுக் கொற்றா - என்பன புள்ளியிறுதி முன்னிலைக் கிளவி உகரம் பெற்று உறழ்ந்து முடிந்தன. உரிஞு ஞெள்ளா : 'இஃது ஒள என வரூஉம்' (152) என்பதன் ஒழிபு.

பதக்கநானாழி பதக்கமுந்நாழி - என இவை ஏயென் சாரியை பெறாது அக்குப்பெற்று அதன் இறுதிமெய் மிசையொடும் கெட்டுப் புணர்ந்தன.

வாட்டானை தோற்றண்டை - என்பன தகரம் வந்துழித் திரிந்து 'நெடியதன் முன்னர் ஒற்று'க் கெடாது நின்றன.

சீரகரை என்பதனைச் சீரகம் அரை என நிறுத்தி, ககர ஒற்றின்மேல் ஏறின அகரத்தையும் மகர ஒற்றையும் கெடுத்து, அரை என்பதன் அகரத்தை ஏற்றி முடிக்க. இது நிறைப்பெயர்.

ஒருமாவரை என்பதனை ஒருமா அரை என நிறுத்தி, வருமொழி அகரம் கெடுத்து ஒருமாரை என முடிக்க.

கலவரை என்பதனைக் கலரை என முடிக்க.

நாகம் அணை : 'நாகம்' அகர மகரம் கெடுத்து நாகணை என முடிக்க.

பிறவும் வருவன எல்லாம் இச்சூத்திரத்தான் முடிக்க. (29)

**இளம்பூரணம்**

**173. யாவர், யாது : இவற்றின் மரூஉ முடிபு**

**பலர்அறி சொல்முன் யாவர் என்னும்**
**பெயரிடை வகரம் கெடுதலும் ஏனை**
**ஒன்றுஅறி சொல்முன் யாதுஎன் வினாவிடை**
**ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்**
**மருவின் பாத்தியின் திரியு(ம்)மன் பயின்றே.**

(இச்....எனின்) மரூஉ முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) பலரை அறிகின்ற சொல்முன் வருகின்ற 'யாவர்' என்னும் பெயரிடையில் வகரம் கெடுதலும், ஒழிந்த ஒன்றனை அறியும் சொல்முன்னர் வரும் 'யாது' என்னும் வினாமொழியிடை உயிரொடு பொருந்திய வகரம் வருதலும், இரண்டும் மரூஉக்களது முடிபினிடத்துப் பயின்று வழங்கும் எ-று.

*(வருமாறு) அவர் யார் எனவும், அது யாவது எனவும் வரும்.*

'ஒன்றிய' என்றதனான், வகரம் உயிர்மெய் என்று கொள்க. இன்னும் அதனானே, யாவர் என்பதும் யாது என்பதும் நிலைமொழியாய்ப் பிற வருமொழியொடு புணரும்வழியும் இம்முடிபு கொள்க.

*(வருமாறு) 'யார்யார்க்[1] கண்டே உவப்பர்'* எனவும், *'யாவது நன்றென[2] உணரார் மாட்டும்'* எனவும் வரும்.

'பயின்று' என்றதனான், பலரறி சொல்லும் ஒன்றறி சொல்லும் வருமொழி யாயவழியும் இம்முடிபு கொள்ளப் படும்.

*(வருமாறு) யாரவர், யாவதது[3] - என வரும். (30)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 173.***

1. யாவர்யாவர் + கண்டு = யார் யார்க் கண்டு (இரண்டன்தொகை)

2. யாது + நன்றென = யாவது நன்றென

3. யாவர் + அவர் = யாரவர்

யாது + அது = யாவதது

*பிரயோகவிவேக நூலுடையார் தனிமொழியும் தொடர்மொழியும் காரணமின்றி வர்ணவிகாரம் முதல் நான்கும் பெறும் என்று கூறி, வர்ணநாசத்திற்கும் வர்ண ஆகமத்திற்கும் இந்நூற்பாவை மேற்கோள் காட்டினார். (சமாசப். 9 உரை) வன்ன விகாரம் - எழுத்துத்திரிபு; வன்னவிபரியயம் - எழுத்துமாறாட்டம்; வன்ன நாசம் - எழுத்துக்கேடு; வன்ன ஆகமம் - எழுத்து மிகுதல். யாவர் 'யார்' என வன்ன நாசம் பெற்றும், யாது 'யாவது' என வன்ன ஆகமம் பெற்றும் வருவன.*

**நச்சினார்க்கினியம்**

## *172. யாவர், யாது : இவற்றின் மரூஉ முடிபு*

**பலர்அறி சொல்முன் யாவர் என்னும்**
**. . . . . . . . . . . . . . திரியுமன் பயின்றே.**

இது மரூஉச்சொல் முடிபு கூறுகின்றது.

இ - ள் : பலர் அறி . . . . கெடுதலும் - பலரை அறியும் அவர் முதலிய சொல்லின் முன்னர் வருகின்ற யாவர் என்னும் பெயரிடையில் வகரம் கெடுதலும்; ஏனை . . . . வகரம் வருதலும் - ஒழிந்த ஒன்றனை அறியும் அது முதலிய சொல்லின் முன்னர் வருகின்ற யாது என்னும் வினாச்சொல் இடையிலே உயிரொடு பொருந்திய வகரம் வருதலும்; இரண்டும் - ஆகிய அவை இரண்டும்; மருவின் பாத்தியின் மன் பயின்று திரியும் - மருமுடிபின் பகுதியிடத்து மிகவும் பயின்று திரியும் எ-று.

உ-ம் : அவர் யார் எனவும், அது யாவது எனவும் வரும். அவர் யாவர் - என்பது வகரம் கெட்டு அவர் யார் - என நின்றவழி, 'யாஅர் என்னும் வினாவின் கிளவி' (சொல் 212) என்று வினையியலுள் கூறும் வினைக்குறிப்புச் சொல்லாம் பிற எனின், ஆகாது; அவ்வகரம் கெட்டாலும் ஈண்டு யாவர் என்னும் பெயர்த்தன்மையாயே நிற்றலின். அது பெற்றவாறு என்னையெனின், ஈண்டுப் பலர் அறிசொல்முன் வந்த யாவர் என்பதன் வகரம் கெடும் எனவே, ஏனை அவன் அவள் என்னும் இருபால் முன்னும் யாவர் வாராது என்றும், அது திரிந்து மருவாய் நிற்கும் என்றும் கூறுதலானும், 'யாவர் என்னும் பெயரிடை' என்பதனானும் பெற்றாம். இதனானே, அவன் யாவர் - அவள் யாவர் - என்றால் பால் வழூவாம் என்பது பெற்றாம். இதனை 'யாவன் யாவள் யாவர் என்னும், ஆவயின் மூன்றோடு' (சொல். 164) எனப் பெயராக ஓதியவாற்றான் உணர்க. அன்றியும், யார் என்னும் வினாவினைக்குறிப்பினை அவன் யார் - அவள் யார் - அவர் யார் - என முப்பாற்கும் ஒப்ப உரிமை கூறுதலானும் அது

வேறு என்பது பெற்றாம். அது வினையியலுள் ஓதினமையானும், 'வினாவிற்கு ஏற்றல்' (சொல். 67) எனப் பயனிலையாக ஓதினமையானும்(அ) வேறு ஆயிற்று.

இனி, 'யார்யார்க் கண்டே உவப்பர்' எனப் பலர் அறிசொல் முன்னரன்றி இயல்பாக வந்த யார் என்பது யாண்டு அடங்கும் எனின், அதுவும் யாரை யாரைக் கண்டு என உருபு விரிதலின், யாவரை என்னும் வகரம் கெட்ட பெயரேயாம். அங்ஙனம் நிலைமொழி வருமொழியாய் நிற்றல் 'பயின்று' என்றதனான் கொள்க. இதனானே 'யாவது நன்றென உணரார் மாட்டும்' (குறுந். 78) என, ஏனை ஒன்றறிசொல்லும் நிலைமொழியாய் நிற்றல் கொள்க. இன்னும் இதனானே, யாரவர் - யாதது - என இவ்விரு சொல்லும் நிலைமொழியாய் வருதலும் கொள்க. (30)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் / 72***

(அ) அவன் யார் - என ஆண்பால் எழுவாய்க்கு வினாவினைக் குறிப்புப் பயனிலையாக ஓதினமையானும் என்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

***சூ. / 73.*** இச்சூத்திர உரையில், அவர் யார் என்றவிடத்து யார் என்றது வினைக்குறிப்பு அன்று என்றதற்கு நச்சினார்க்கினியர் கூறும் காரணங்களுள் பிற்பகுதி வருமாறு: ''அது வினையியலுள் ஓதினமையானும், 'வினாவிற்கு ஏற்றல்' எனப் பயனிலையாக ஓதினமை யானும் வேறாயிற்று'' என்பது. இவ்வாறு கூறுதல் பொருந்துமா என ஆராய்தற்பாலது என்று இவர் குறிப்பிடுகிறார். நச்சினார்க்கினியர் உரைத்த இப்பகுதி விளக்கம் வருமாறு: ஆசிரியர் வினையியலுள் ஓதியமையான் 'யார்' பெயர்ச்சொல் ஆகாது. எழுவாய்

வேற்றுமையின் பயனிலைகளுள் (சொல் 67இ) ஒன்றாக, 'பெயர்கொள வருதல்' என்பதனைச் சுட்டியமையான் 'வினாவிற்கு ஏற்றல்' என்பது வினா வினைக் குறிப்பே ஆதல் வேண்டும் எனக் கொள்க. உரைப்பகுதிக்கு விடை வருமாறு: "ஆசிரியர் வினையியலுள் ஓதியமையான் 'யார்' பெயர்ச்சொல் ஆகாது. 'பெயர்கொள வருதல்' என வேறாக ஒரு பயனிலை ஓதியமையான் 'வினாவிற்கு ஏற்றல்' என்பது வினாவினைக்குறிப்பே ஆதல் வேண்டும். ஈண்டுக் கூறியது 'யாவர்' என்னும் பெயரது மருவாகிய யார் என்பது." என்பது.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 172.** **பலர்அறி சொல்முன் யாவர் என்னும்**

.............

**மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே.**

யாவர் என்பதற்கும் யார் என்பதற்கும் வேறுபாடு உண்டு: யாவர் என்பது தொடர்புடை வினாப்பெயர்; அஃதாவது, "இதனை உனக்குக் கூறியவர் யாவர், அவரைக் கூட்டிக்கொண்டு வா" என்பது போல் வருவது. யார் என்பது வினாவினைச்சொல். இதுபோலவே, யாவது என்பது பெயர்; யாது என்பது வினாவினைக்குறிப்பு,

யாவர், யாவது என்பன இரண்டும் யா என்னும் வினாப்பெயரொடு சுட்டுப்பெயர் சேர்ந்து ஒருதன்மையின் அமைந்த சொற்கள் ஆகலின், 'யாவர்' என்பதன் வகரம் கெடும் என்றாங்கு 'யாவது' என்பதன் வகரம் கெடும் என்பது முறைமை ஆகும்.



## V தொகைமரபு

### நூற்பா - 2

நன். 158 எண்மூ வெழுத்தீற்று எவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வ-க்கள் இயல்பும்

இ. வி. 69 ஷை

### நூற்பா - 3

இ. வி. 69 மெல்லெழுத்து இயற்கை உறழினும்
வரையார்
நன்மதி நாட்டத்து என்மனார் புலவர்.

### நூற்பா - 4

மு. வீ. 188 ணன முனர் வரு ஞய ஒருவினை கொள்ளும்.

### நூற்பா - 5

நன். 209 ணன ....அல்வழிக்குஅனைத்துமெய் வரினும்
இயல்பாகும்மே.

இ. வி. 119 ஷை

மு. வீ. 189 அல்வழி இவ்விருமையும் முதலா கெழுத்து
எல்லாம் முன்வரின் இயல்பா கும்மே.

தொ. வி. 24 ணன அல்வழிக்கு என்றும் இயல்பாம்.

### நூற்பா - 6

நன். 209 ணன . . . . . . . . பிறவரின்இயல்பும்
ஆகும் வேற்றுமைக்கு.

இ. வி. 119 ஷை

மு. வீ. 190 வல்லெழுத்து அல்வழி இயல்பாம்வேற்றுமை.

## நூற்பா - 8

வீ. சோ. 14 ஆறாம் உடலின்பின் த-வ்வரின்
ஆங்கது ஐந்தாம் உடலாம்;
கூறார்ந்த ந-வ்வரின் முன்பினதாம்.

நேமி. 17 . . . . . . . . . . . . . . . . . த (ந்) நக்கள்
முன்பின்னாம் தப்பி ணன -
இயல்பாத் த(ட்)டற-ஆம்.

நன். 239 னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தந-க்கள் ஆயுங் காலே.

மு. வீ. 191 ணள டண-ஆம்; னல றன-ஆம் தந-வரின்.

## நூற்பா - 9

நன். 161 ஆவி யரழ இறுதி முன்னிலை வினை
ஏவல்முன் வல்லினம் இயல்பொடு விகற்பே.

இ. வி. 73 உயிரும் புள்ளியும் இறுதி யாகிய
முன்னிலை வினையே ஏவல் என்றிவை
இயல்பா குநவும் உறழ் ஆகுநவும் என்று
ஆயீர் இயல வல்லெழுத்து வரினே.

## நூற்பா - 10

இ. வி. 74 ஔஎன வரூஉம் . . . . . . . . . . . ....உளப்பட
முற்றத் தோன்றா முன்னைய முடிபே;
உகரம் பெறூஉம் ஆவயினான.

மு. வீ. 192 ஔ-ஈறு ஞநமவ இறுதியும் உகரம்
முற்றுகரம் முன்னிலை உறழ்தலும் விதியாம்.

## நூற்பா - 11

நன். 159 .....உயர்திணைப் பெயர்கள் ஈற்றுமெய்
வலிவரின் இயல்பாம்; ஆவி யர-முன்
வன்மை மிகா.

இ. வி. 71 ஷை

மு. வீ. 193 இருவழியினும் உடல் உயிரையும் இறுதியாம்
உயர்திணை முனர்எலாம் உறஇயல்பு ஆகும்.

## நூற்பா - 12

நன். 159 சில விகாரமாம் உயர்திணை.

இ. வி. 71 ஷை

மு. வீ. 194 இ ஐ இறுதிமுன் வன்கணம் மிகுமே.

## நூற்பா - 13

நன். 159 பொதுப்பெயர் ........ஈற்றுமெய்
வலிவரின் இயல்பாம்; ஆவி யர-முன்
வன்மை மிகா.

இ. வி. 71 ஷை

மு. வீ. 195 இருமைக்கும் பொது இயல்பாதலும் உள.

## நூற்பா - 14

நன். 256 புள்ளியும் உயிரும் ஆயிரு சொல்முன்
தம்மின் ஆகிய தொழில்மொழி வரினே
வல்லினம் விகற்பமும் இயல்பும் ஆகும்.

இ. வி. 76 ஷை

மு. வீ. 196 இனமாம் தொழிற்பெயர் எய்தின் வேற்றுமை
வழிஇயல்பு ஆதலும் உறழ்தலும் ஆகும்.

## நூற்பா - 15

நன். 255 இயல்பின் விகாரமும் விகாரத்து இயல்பும்
உயர்திணை யிடத்து விரிந்தும் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவும் ஆகும் ஐயுருபே.

இ. வி. 75 மெல்லெழுத்து மிகுவழி ........திரிபென மொழிப.

மு. வீ. 197 வலிமிகுவழி மெலிமிகுதலும், மெலிமிகும்-
வழி வலி மிகுதலும், இயல்பின்வழி மிகு-
தலும், உயிர்வழி உயிர்கெடுதலும், சாரியை
வரும்வழி சாரியை கெடுதலும், மெய்வேறு
ஆகிடத்துஇயற்கைஆதலும், பொதுப்பெயர்க்கு
அவ்வியல் நிலையலும், ஐ உருபு இயல்பே.

## நூற்பா - 16

நன். 176 அல்வழி இஐ முன்ன ராயின்
இயல்பும் மிகலும் விகற்பமும் ஆகும்.

இ. வி. 77 வேற்றுமை அல்வழி . . . . . என்மனார் புலவர்.

மு. வீ. 198 அல்வழி இஐ முனர் இயல்பாதலும்
மிகுதலும் உறழ்தலும் வேண்டப் படுமே.

## நூற்பா - 17

மு. வீ. 199 இகரச் சுட்டும் ஐகான் இறுதியும்
மிகுதலும் உறழ்தலும் உளஎன மொழிப.

## நூற்பா - 18

வீ. சோ. 14 குறில்பின்பு மெய்கள், ஏறா உயிர்பின் வர
இரண்டாகும்.

நேமி. 15 குற்றொற்று இரட்டும் உயிர் வந்தால்.

நன். 205 தனிக்குறில் முன்ஒற்று உயிர்வரின் இரட்டும்.

இ. வி. 66 ஷை

தொ. வி.36 தனிக்குறில் மெய்உயிர் சார்புளி மிகும்.

## நூற்பா - 19

நன். 247 தான்தாம் நாம் முதல் குறுகும்; யான்யாம்
நீ நீர் என் எம் நின் நும் ஆம் பிற;
குவ்வின் அ(வ்)வரும்; நான்கு ஆறு இரட்டல.

மு. வீ. 200 ஆறும் நான்கும் இரட்டுதல் இலவே.

## நூற்பா - 20

மு. வீ. 201 நும் என் இறுதியும் அந்நிலை திரியாது.

## நூற்பா - 22

இ. வி. 79 உயிரும் புள்ளியும் . . . . . . .ஏ-யென் சாரியை.

மு. வீ. 202 எண்நிறை அளவும் ஏயொடு சிவணும்.

## நூற்பா - 23

மு. வீ. 203 அரை வரினே அகன்றோடும் அற்றே.

## நூற்பா - 24

மு. வீ. 204 குறைவரின் வேற்றுமை கொளின் மிகும்
என்ப.

## நூற்பா - 25

மு. வீ. 205 குற்றிய லுகரக்கு இன்னே சாரியை.

## நூற்பா - 26

மு. வீ. 206 கலம்என் அளவே அத்தொடு சிவணும்.

## நூற்பா - 27

மு. வீ. 207 பனையும் காவும் இன்னொடு சிவணும்.

## நூற்பா - 30

மு. வீ. 208 யாவர் அவர்முன் அடுப்பின் நடுநிலை
வகரம் கெடுதலும், யாது அது முன்வரின்
வகரம் வருதலும் அதன்இயல்பு ஆகும்.



# உருபியல்

## இளம்பூரணம்

### 174. இவ்ஆறு ஈறுகளும் உருபினொடு புணருமாறு

அ ஆ உ ஊ ஏ ஔ என்னும்
அப்பால் ஆறன் நிலைமொழி முன்னர்
வேற்றுமை உருபிற்கு இன்னே சாரியை.

என்பது சூத்திரம்.

*இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், உருபுகளொடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தினமையின் உருபியல் என்னும் பெயர்த்து. மேல் தொகுத்துப் புணர்த்த செய்கை ஈண்டுநின்றும் விரித்துப் புணர்க்கின்றார் ஆகலின், தொகை மரபினோடு இயைபுடைத்து ஆயிற்று.*

*இதனுள் இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், அகர ஆகார உகர ஊகார ஏகார ஔகார ஈறுகள் உருபினொடு புணருமாறு உணர்....ற்று.*

*(இ-ள்.) அ ஆ உ ஊ ஏ ஔ - என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஆறனையும் ஈறாக உடைய நிலைமொழிகளின் முன்னர், வேற்றுமையுருபுகள் வருமொழியாய் வந்த நிலைமைக்கு இடைவரும் சாரியை இன்சாரியை எ-று.*

*(உ-ம்.) விளவினை விளவினொடு விளவிற்கு விளவினது விளவின்கண் எனவும், பலாவினை பலாவினொடு எனவும், கடுவினை கடுவினொடு எனவும், கழூவினை கழூவினொடு[1] எனவும், சேவினை சேவினொடு எனவும், வெளவினை வெளவினொடு எனவும் கருவி அறிந்து ஒட்டுக.* *(1)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 174.** 1. 'தழுஉவினை - தழூஉவினொடு - என்று நச்சினார்க்கினியர் உதாரணம் காட்டுவர். இளம்பூரணர் காட்டும் உதாரணமும் இவையாகவேயிருத்தல் கூடும். தழூஉ - குரவைக் கூத்து.

**நச்சினார்க்கினியம்**

## *173. இவ் ஆறு ஈறுகளும் உருபினொடு புணருமாறு*

**அ ஆ உ ஊ . . . . . இன்னே சாரியை**

என்பது சூத்திரம்.

உருபுகளொடு பெயர் புணரும் இயல்பு உணர்த்தினமையின், இவ்வோத்து உருபியல் என்னும் பெயர்த்து ஆயிற்று. மேல் தொகுத்துப் புணர்த்ததனை ஈண்டு விரித்துப் புணர்க்கின்றார் ஆதலின், இவ்வோத்துத் தொகைமரபோடு இயைபுடைத்து ஆயிற்று.

இச்சூத்திரம் அகரமுதலிய ஈற்றான் வரும் ஆறு ஈற்றுச் சொற்கள் நின்று இன்பெற்று உருபினொடு புணருமாறு கூறுகின்றது. உருபின் பொருள்பட வரும் புணர்ச்சி மேற்கூறுப.

இ-ள்: அ ஆ . . . . . . முன்னர் - அ ஆ உ ஊ ஏ ஒள - என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஆறனையும் ஈறாகவுடைய நிலைமொழிகளின் முன்னர் வருகின்ற; வேற்றுமை . . . . . சாரியை- வேற்றுமையுருபுகட்கு இடையே வரும் சாரியை இன்சாரியையே எ-று.

உ-ம் : விளவினை விளவினொடு விளவிற்கு விளவினது விளவின்கண் எனவும், பலாவினை பலாவினொடு பலாவிற்கு பலாவினது பலாவின்கண் எனவும், கடுவினை கடுவினொடு கடுவிற்கு கடுவினது

கடுவின்கண் எனவும், தழூவினை தழூவினொடு தழூவிற்கு தழூவினது தழூவின்கண் எனவும், சேவினை சேவினொடு சேவிற்கு சேவினது சேவின்கண் எனவும், வெளவினை வெளவினொடு வெளவிற்கு வெளவினது வெளவின்கண் எனவும் வரும். இவ்வாறே செய்கை அறிந்து ஒட்டுக.

'இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு
இன்னென் சாரியை இன்மை வேண்டும்' *(131)*

எனவே, ஏனைய இன்பெறும் என்றலின், *(1)* 'ஞ ந ம ய வ' *(144)* என்பதனான் இயல்பு என்றது விலக்கிற்றாம். *(1)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 173***

*1.* 'ஞ ந ம ய வ' எனும் *(144)* என்னும் தொகைமரபுச் சூத்திரத்தால் இயல்பு என்றதனை விலக்கிற்று என்றது, உருபுகள் நிலைமொழிமுன் இயல்பு ஆகாது இன்சாரியை பெறும் என்றதை.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. 174.*** அ ஆ உ ஊ......இன்னே சாரியை.

*(இ-ள்.)* அ ஆ உ ஊ ஏ ஒள - என்ற அப்பகுதிப்பட்ட ஆறனையும் ஈற்றில் கொண்ட நிலைமொழியின் பின்னர் வேற்றுமையுருபு வரின் இடையில் வரும் சாரியை இன்னே ஆகும்.

த ழூஉ வினை- கொண்மூவினை - என்புழி, நிலைமொழி இரண்டும் இன் சாரியை பெற்றே ஐயுருபு ஏற்றன. அளபெடுத்துழியும் நிலைமொழி ஊகார ஈறே என்பது நச்சினார்க்கினியர் கொள்கை. 'குறுமையும் நெடுமையும்' *(50 ந.)* காண்க.

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

*சூ. 173.* அ ஆ உ ஊ....இன்னே சாரியை.

கன்னடமொழியில் மூன்றாம்வேற்றுமை முதலிய வேற்றுமையுருபுகள்வருமிடத்து, உகர ஊகார....எகர ஔகார ஈறுகட்கு முன் இன்சாரியை வருதல் ஈங்கு அறியத்தகும்.

**இளம்பூரணம்**

***175. அகர ஈற்றுள் சில 'வற்றொடு' புணர்தல்***

**பல்லவை நுதலிய அகர இறுபெயர்**
**வற்றொடு சிவணல் எச்சம் இன்றே.**

(இச்....எனின்) மேற்கூறியவற்றுள் அகரஈற்றுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு...ற்று.

(இ-ள்.) பன்மைப் பொருளைக் கருதின பெயர்களின்[1] இறுதி அகரம் வற்றுச்சாரியையொடு பொருந்துதல் ஒழிதல்இன்று எ-று.

(வருமாறு) பல்லவற்றை பல்லவற்றொடு, உள்ள வற்றை உள்ளவற்றொடு, இல்லவற்றை இல்லவற்றொடு, சிலவற்றை சிலவற்றொடு- என ஒட்டுக.

'எச்சம் இன்று 'என்றதனான், ஈண்டு மூன்றாம் உருபின்கண் சாரியை பெற்றே முடியும் என்று கொள்க.[2]

இன்னும் இதனானே, மேல் இன் பெற்றன பிற சாரியையும் பெறும் என்று கொள்க.

(உ-ம்.) மகத்தை நிலாத்தை - என வரும். (2)

இளம்பூரணம் உரைக்குறிப்பு

***சூ. 175.*** 1. பல்லவை நுதலிய அகர இறுபெயர் களாவன:

'பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்' *(சொல். 165)*

2. 'உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்' *(133)* ஆயினும் பல்லவை நுதலிய அகர இறுபெயர்க்கு இவ்வுருபின்கண் சாரியை 'வற்று' வருதல் நீக்கற்பாலதன்று என்றவாறாம்.

**நச்சினார்க்கினியம்**

## *174. அகரஈற்றுள் சில 'வற்றொடு' புணர்தல்*

**பல்லவை நுதலிய . . . . . . . . . எச்சம் இன்றே.**

இஃது இன்சாரியை விலக்கி வற்று வகுத்தலின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ-ள் : பல்லவை நுதலிய பெயர் இறு அகரம் - பன்மைப் பொருளைக் கருதின பெயர்களின் இறுதி நின்ற அகரம்; வற்றொடு . . . . . . இன்று - வற்றுச் சாரியையொடு பொருந்துதலை ஒழிதல் இல்லை எ-று.

வருமாறு : பல்லவற்றை பல்லவற்றொடு, பலவற்றை பலவற்றொடு, சிலவற்றை சிலவற்றொடு, உள்ளவற்றை உள்ளவற்றொடு, இல்லவற்றை இல்லவற்றொடு - என ஒட்டுக.

'எச்சம் இன்று' என்றதனானே, மேல் இன் பெற்றன பிறசாரியையும் பெறுதல் கொள்க.

உ - ம் : நிலாத்தை துலாத்தை மகத்தை - என வரும்.

இன்னும் இதனானே, பலலவை நுதலியவற்றின் கண்ணே மூன்றாம் உருபு வற்றுப் பெற்றே முடிதல் கொள்க.*(அ)* *(2)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 174*** (அ) பல்லவற்றொடு - முதலாகக் காண்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 175. பல்லவை நுதலிய.....எச்சம் இன்றே.**

*அகர இறு பெயர் - அகரத்தை இறுதியில் கொண்ட பெயர் என்று இவர் உரைத்தார். பெயர்களில் இறுதி (நின்ற) அகரம் என்பது உரைக்காரர்கள்தம் உரை. 'சுட்டுமுதல் உகரம்', 'சுட்டுமுத லாகிய ஐஎன் இறுதி,' 'யாஎன் வினாவின் ஐஎன் இறுதியும்' எனவும் ,'யாஎன் வினாவும்' 'அஆ என்னும் மரப்பெயர் கிளவிக்கு' எனவும் இருதிறமும் விரவ ஆசிரியர் சூத்திரித்தலின் இரண்டும் உரையாதல் பொருந்தும்.*

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 174. பல்லவை நுதலிய...எச்சம் இன்றே.**

*உரையாளர் இருவரும், மகத்தை நிலாத்தை - என இவ்விருசொல்லும் இன்சாரியையே அன்றிப் பிறசாரியை பெறுதலையும் உதாரணமாகக் காட்டியமை பொருந்தாது. ஆசிரியர், மக-நிலா - என்னும் பெயர்கள் பொருட்புணர்ச்சிக்கண் அத்துச்சாரியை பெறுதலை முன்னர்(219,228) விதிப்பார்; அதனை ஈண்டு உருபுபுணர்ச்சிக்கும் கோடல் அமையாது. ஆசிரியர் அக்கருத்தினராயின், முதற்கண் உருபுபுணர்ச்சிக்கு இச்சாரியைகளை விதித்துப் பின்னர் அகத்தோத்துள் பொருட்புணர்ச்சிக்கண் மாட்டெறிந்து கூறுவர். அவ்வாறு கூறாமையின் உரையாசிரியர்கள் கொண்டகருத்துப் பொருந்தாதாம்.*

*உருபுபுணர்ச்சியுள் சாரியை விதித்து, அதனைப் பொருட்புணர்ச்சிக் கண்ணும் மாட்டெறிந்து கூறும் ஆசிரியர் இயல்பினை உருபி.4, உயிர்ம.61; உருபி.5, உயிர்ம.79 ; உருபி.22, புள்ளிம.93; உருபி.3 (இச்சூத்திரம்), உயிர்ம.18 - முதலாக வருவனவற்றான் அறியலாம்.*

*174.* [உருபுபுணர்ச்சிக்கண் முதற்கண் சாரியை விதித்து, அதனைப் பொருட்புணர்ச்சிக் கண்ணும் மாட்டேற்றான் விதிப்பார் ஆசிரியர் என்னும் நியமம் ஒரோவழிப் பிறழ்ந்து வந்ததாக உரையாசிரியன்மார் உரையுள் காணப்படுகிறது. நிலாத்துக்கதிர்-மகத்துக்கை-எனப் பொருட்புணர்ச்சிக்கண் அத்துச் சாரியை வருமாறு இல்லை, அவை 'ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு' அன்மையின். ஆயினும், உருபு புணர்ச்சியுள் அவை நிகழுமாற்றைக் கண்ட உரையாளர் நியமம் தவறினும் ஈண்டுக் கொள்ளல்தகும் என்று கருதினர்போலும்.]

**இளம்பூரணம்**

***176. 'யா' வினாவும் 'வற்று' ப் பெறுதல்***

***யா என் வினாவும் ஆயியல் திரியாது.***

*(இச்...எனின்)* இஃது ஆகாரஈற்றுள் ஒருமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறு...ற்று.

*(இ-ள்.)* யா என்று சொல்லப்படும் ஆகாரஈற்று வினாப்பெயரும் மேற்கூறப்பட்ட வற்றுப் பெறும் அவ்வியல்பின் திரியாது எ-று.

*(வருமாறு)* யாவற்றை யாவற்றொடு - என ஒட்டுக. *(3)*

**நச்சினார்க்கினியம்**

***175. 'யா' வினாவும் 'வற்று' ப்பெறுதல்***

**யா-என் வினாவும் ஆயியல் திரியாது.**

இஃது ஆகாரஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள் : யா என் . . . . . . . . . திரியாது - யா என்று சொல்லப்படும் ஆகார ஈற்று வினாப்பெயரும் முற்கூறிய வற்றுப்பேற்றின் திரியாது எ-று.

வருமாறு : யாவற்றை யாவற்றொடு - எனவரும். *(3)*

## இளம்பூரணம்

### 177. சுட்டு முதல் உகரம் 'அன்' பெறுதல்

சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்ஒழித்து உகரம் கெடுமே.

(இச்...எனின்) உகரஈற்றுள் சிலமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) சுட்டினை முதலாகவுடைய உகரஈற்றுச் சொல் அன்சாரியையொடு பொருந்தித் தான் பொருந்திய மெய்யை ஒழித்து[1] உகரம் கெடும் எ-று.

(வருமாறு) அதனை அதனொடு, இதனை இதனொடு, உதனை உதனொடு-என ஒட்டுக. (4)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ. 177.** 1. 'ஒழித்து-நிறுத்தி (நச்.) முற்றியலுகரம் ஆதலின் கெடுவதாயிற்று. முற்றுகரம் கெடுதல் **259, 264**ஆம் சூத்திரங்களிலும் காணலாம்.

## நச்சினார்க்கினியம்

### 176. சுட்டு முதல் உகரம் அன் பெறுதல்

சுட்டுமுதல் உகரம் . . . . . . உகரம் கெடுமே.

இஃது உகர ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள்: சுட்டுமுதல் உகரம் - சுட்டினை முதலாகவுடைய உகர ஈற்றுச்சொல்; அன்னொடு. . . . . . . கெடும் - அன்சாரியையொடு பொருந்தித் தான் பொருந்திய மெய்யை நிறுத்தி உகரம் கெடும் எ-று.

வருமாறு : அதனை அதனொடு, இதனை இதனொடு, உதனை உதனொடு - எனவரும். (1) அதினை அதினொடு என்றாற்போல்வன மருமுடிப்புழி முடிந்தன.

ஒட்டிய என்றதனான், சுட்டு முதல் உகரம் அன்றிப் பிற உகரமும் உயிர் வருவழிக் கெடுவன கொள்க. அவை கதவு களவு கனவு - என நிறுத்தி, அழகிது இல்லை - என வருவித்து உகரம் கெடுத்து முடிக்க. இவற்றை வகர ஈறாக்கி உகரம் பெற்றன என்று கோடும் எனின், வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் பயின்றுவரும் வகரஈறுகளை ஒழித்து ஆசிரியர் 'வகரக்கிளவி நான்மொழி ஈற்றது' (81) என்றாற்போல வரைந்தோதல் குன்றக்கூறலாம் ஆதலின், அவை உகரஈறு என்று உணர்க. அவை செலவு வரவு தரவு உணவு கனவு - என வழக்கின்கண்ணும், 'புன்கண் உடைத்தால் புணர்வு' (குறள் 1182) 'பாடறியா தானை இரவு' 'கண்ணாரக் காணக் கதவு' (முத்தொள்.) எனச்செய்யுட்கண்ணும் பயின்று வருமாறு உணர்க. (4)

### நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

### சூத்திரம் / 76

1. அதினை அதினொடு என்றாற் போல்வன மரு முடிப்புழி முடிந்தன என்றது, 'வழங்கியன் மருங்கின் மருவொடு திரிநவும்' (483) என்னும் அதிகாரப் புறனடையான் முடிந்தமையை. இதனால் 'அன்' பிற்காலத்து 'இன்' னாக மருவியது என்பது கருத்துப்போலும்.

### வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. / 76.** **சுட்டுமுதல் உகரம்....உகரம் கெடுமே.**

பெயர்கள் வேற்றுமையுருபுகளை ஏற்குமிடத்துப் பெறும் சாரியைகளை விதித்தலே இவ்வியலில் கூறும் பொருள்கள் ஆதலின், கதவு+அழகிது - என்பது போன்ற

பொருட்புணர்ச்சித் திரிபினை இவ்வியலில் நச்சினார்க்கினியர் அமைத்தல் பொருந்தாது. சுட்டுப்பெயர்கட்கு இன்சாரியை வருதல் பிற்காலவழக்கு. கன்னடத்திலும் தெலுங்கிலும் அன்சாரியை வழக்கே காணப்படுதல் அதன் தொன்மையைப் புலப்படுத்தும். *(அதற்கேஃ அதக்கெ; அதனை; தானின் - என முறையே காண்க.)*

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

இடைக்கால நூலோர் உருபுகளைக் குறித்துவரு கிளவியாகவே கருதி உருபுபுணரியல் எனப் பிழைபடக் கூறிச் சென்றனர்.

**சூ. 176.** **சுட்டுமுதல் உகரம்....உகரம் கெடுமே.**

இவ்உகரம் முற்றுகரம் ஆதலின் கேடு கூறினார். சாரியைப் புணர்ச்சி ஆதலின் (அது+ஐ > அது + அன் + ஐ > அத் + அன் + ஐ = அதனை) அத் + த் + அன் + ஐ எனத் தகரம் இரட்டாதாயிற்று. [இவ்வியல் 12ஆம் சூத்திரத்து, தெவ் என்னும் சொல்முன்னர் இன் சாரியை வருவுழித் தெவ்வினை முதலாக வகரம் இரட்டி வருமாறு காண்க. ஆதலின் சாரியைப் புணர்ச்சி ஆதலின் குற்றொற்று இரட்டாது என்ற கொள்கை நிரம்புமாறு இல்லை.]

**இளம்பூரணம்**

***178. சுட்டுமுதல் ஐகான் 'வற்றொடு' சிவணல்***

**சுட்டுமுதல் ஆகிய ஐஎன் இறுதி**
**வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே.**

*(இச்...எனின்)* ஐகாரஈற்றுச் சிலமொழிக்கு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* சுட்டினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல் வற்றுச் சாரியையொடு பொருந்தி அவ்வீற்று ஐகாரம் நிற்றலும் உரித்து; நில்லாமையும் உரித்து எ-று.

(வருமாறு) அவையற்றை அவையற்றொடு எனவும், இவையற்றை இவையற்றொடு எனவும், உவையற்றை உவையற்றொடு எனவும் ஒட்டுக.

ஐகாரம் கெட்டவழி, நின்ற வகரத்தினை வற்றின்மிசை ஒற்று என்று கெடுத்து (134), அவற்றை அவற்றொடு எனவும், இவற்றை இவற்றொடு எனவும், உவற்றை உவற்றொடு எனவும் ஒட்டுக.

மற்று, இம்முடிபு சுட்டுமுதல் வகரஈற்றோடு (184) ஒத்தமையின் ஈண்டு இது கூறல் மிகைபடக் கூறலாம்பிற எனின், அஃது ஒக்கும்; இவ்வாறு கூறுவன[1] மேலும் உள. அவற்றிற்கு எல்லாம் ஆசிரியன் கருத்து அறிந்து கொள்ளப்படும் என்பது. (5)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 178.** 1. 'அவை+வற்று+ஐ, அவ்+வற்று+ஐ- இவையிரண்டு புணர்ப்பும் அவற்றை எனவே முடியுமாறு போல, 'சுட்டு முதல் உகரம் அன்னொடு சிவணி' (177), 'யாதென் வினாவும் சுட்டு முதலாகிய, ஆய்த இறுதியும்' (201) என்னும் விதிகளான், அது என்பதும் அஃது என்பதும் வேற்றுமையுருபோடு இயையுமிடத்து இடையே அன்சாரியை பெற்று 'அதனை' முதலாக முடிதல் காண்க. இவ்வியல் 176, 179ஆம் சூத்திரங்களான், யா என்பதும் யாவை என்பதும் உருபோடு இயையுமிடத்தே இடையே வற்றுச் சாரியை பெற்று 'யாவற்றை' முதலாக முடியுமாறும் காண்க.

**நச்சினார்க்கினியம்**

## 177. சுட்டு முதல் ஐகான் வற்றொடு சிவணல்

**சுட்டுமுதல் ஆகிய . . . . . . . . . நிற்றலும் உரித்தே.**

இஃது ஐகார ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : சுட்டு . . . . . . . இறுதி - சுட்டினை முதலாகவுடைய ஐகார ஈற்றுச்சொல்; வற்றொடு . . . . . . . உரித்து - வற்றுச் சாரியையொடு பொருந்தி நிற்றலும் உரித்து; உம்மையான், வற்றொடு சில உருபின்கண் இன்சாரியை பெற்று நிற்றலும் உரித்து எ-று.

வருமாறு : அவையற்றை அவையற்றொடு, இவை யற்றை இவையற்றொடு, உவையற்றை உவையற்றொடு - என ஒட்டுக. இங்ஙனம் ஐகாரம் நிற்க வற்று வந்துழி 'வஃகான் மெய்கெட' (122) என்பதனான் முடிக்க.

இனி, உம்மையான், அவையற்றிற்கு - அவையற்றின் கண் - என நான்காவதும் ஏழாவதும் வற்றும் இன்னும் பெற்று வந்தவாறு காண்க. இனி, *ஒன்றென முடித்தல்*(அ) என்பதனான், பல்லவை நுதலிய அகர ஈற்றிற்கும் இவ்விரண்டு உருபின்கண் வற்றும் இன்னும் கொடுத்துப் பலவற்றிற்கு - பலவற்றின்கண் - என முடிக்க. இது மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். (5)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் / 77***

(அ) ஒன்றென முடித்தலாவது, இவ்விதி இதற்கும் முற்றும் பொருந்தும் எனக் கொள்ளுதல்.

**சாத்திரியார் உரைக்குறிப்பு**

***சூ. / 78.*** **சுட்டுமுதல் ஆகிய.....நிற்றலும் உரித்தே.**

உரையாசிரியர் உரையுள் 'அவ் ஈற்று ஐகாரம்' என்னும் தொடர் ஏடெழுதுவோர் பிழையால் நேர்ந்தது என்க. ''சுட்டெழுத்தினை (சுட்டினை) முதலாக உடைய ஐகார ஈற்றுச்சொல் வற்றுச்சாரியையொடு பொருந்தி நிற்றலும் உரித்து'' என்பதே உரை. இவர் சுட்டும் 'செய்து என் எச்சம்

பிறவினைமுதல் வினையைக் கொண்டு முடியும்' பிழைபாடு ஏடெழுவோர் பிழையாகக் கோடலே சால்பு. 'நிற்றலும்' என்னும் உம்மை, நச்சினார்க்கினியர் உரையுள் குறித்தவாறு பிறபொருளைச் சுட்டிநிற்றல், அவர் கொள்கையைப் புலப்படுத்தும் வகையான் ஏற்புடைத்தே.

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 177.** **சுட்டுமுதல் ஆகிய.....நிற்றலும் உரித்தே.**

அவ் இவ் உவ் - என்னும் வகரஈற்றுச் சுட்டுப்பெயரே வற்றுச்சாரியை பெற்று, அவற்றை இவற்றை உவற்றை என வரும். அது முன்னர் 'சுட்டுமுதல் வகரம்' என்னும் சூத்திரத்தான் (183) அறியப்படும். அவை இவை உவை என்னும் ஐகாரஈற்றுச் சுட்டுப்பெயர் ஐகாரம் கெட வற்றுச் சாரியை பெறுதல் இன்று; அஃது ஆசிரியர் கருத்தும் அன்று. அவர்க்கு அது கருத்தாயின் முற்சூத்திரத்தில் யாவை என்னும் சொல்லில் வை கெடுதற்குக் கூறுதல் போல, அவை இவை உவை என்பவற்றிலும் ஐகாரம் கெடுதற்கு விதி கூறுவர். அவ்வாறு கூறாமையின், அவர்க்கு அது கருத்து அன்றாதல் பெறப்படும்.

**இளம்பூரணம்**

### 179. யாவையும் 'வற்று' ப் பெறுதல்

**யா-என் வினாவின் ஐ-என் இறுதியும்**
**ஆயியல் திரியாது என்மனார் புலவர்**
**ஆவயின் வகரம் ஐயொடும் கெடுமே.**

இதுவும் அது.

(இ-ள்.) யா என்னும் வினாவினுடைய ஐகாரஈற்றுச் சொல்லும், மேற்கூறிய சுட்டுமுதல் ஐகாரம் போல, வற்றுப் பெறும் அவ்வியல்பின் திரியாது என்று சொல்லுவர் ஆசிரியர்; அவ்விடத்து வகரம் ஐகாரத்தொடும்கூடக் கெடும் எ-று.

(வருமாறு) யாவற்றை யாவற்றொடு - என ஒட்டுக.

வகரம் வற்றின்மிசைஒற்று என்று கெடுவதனை ஈண்டுக் கேடு ஓதிய அதனான், பிற ஐகாரமும் வற்றுப் பெறுதல் கொள்க.

(உ-ம்.) கரியவற்றை செய்யவற்றை - என வரும். (6)

**நச்சினார்க்கினியம்**

*178. 'யாவை' யும் வற்றுப் பெறுதல்*

**யா-என் வினாவின் ஐ-என் இறுதியும்**
**. . . . . . . . . . . . . . . ஐயொடும் கெடுமே.**

இதுவும் அது.

இ-ள் : யா-என் . . . . . இறுதியும் - யா என்னும் வினாவினையுடைய ஐகாரஈற்றுச் சொல்லும்; ஆயியல் . . . . . புலவர் - முற்கூறிய சுட்டுமுதல் ஐகாரம்போல, வற்றுப் பெறும் அவ்வியல்பின் திரியாது என்று சொல்லுவர் ஆசிரியர்; ஆவயின் . . . கெடும் - அவ் ஈற்றிடத்து வகரம் ஐகாரத்தொடுகூடக் கெடும் எ-று.

வருமாறு : யாவற்றை யாவற்றொடு - என ஒட்டுக.

வகரம் வற்றுமிசை ஒற்று என்று கெடுவதனைக் கேடு ஓதிய மிகையானே, பிற ஐகாரமும் வற்றுப் பெறுதல் கொள்க.

உ-ம் : கரியவற்றை கரியவற்றொடு, நெடியவற்றை நெடியவற்றொடு, குறியவற்றை குறியவற்றொடு - என எல்லாவற்றொடும் ஒட்டுக. இவை கருமை நெடுமை குறுமை - என்னும் பண்புப் பெயரன்றி, கரியவை நெடியவை குறியவை - எனப் பண்புகொள் பெயராய் நிற்றலின், வகரஐகாரம் கெடுத்து வற்றுச்சாரியை கொடுத்து முடிக்கப்பட்டன. இவை 'ஐம்பால் அறியும் பண்புதொகு மொழி' (482) அன்மை உணர்க. (6)

## இளம்பூரணம்

### 180. 'நீ' உருபொடு புணருமாறு

**நீஎன் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்**
**ஆவயின் னகரம் ஒற்றுஆ கும்மே.**

*(இச்...எனின்)* ஈகார ஈற்றுள் ஒருமொழிக்கு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* நீ என்னும் ஒருபெயர் நெடிதாகிய முதல் குறுகும்; அவ்விடத்து வரும் னகரம் ஒற்றாகும் எ-று.

*(வருமாறு)* நின்னை நின்னொடு - என ஒட்டுக.

'ஒருபெயர்' என்றது, நின் என்பதும் (நீ என்பதன்) வேறொருபெயர் போறலை விலக்கிற்று[1].

'பெயர் குறுகும்' என்னாது 'முதல் குறுகும்' என்றது, அப்பெயரின் நெட்டெழுத்து நிலையது அக்குறுக்கம் என்றற்கு என்பது. 'நெடுமுதல்' என்றது, அம்மொழி முதலின் நகரம் குறுகுதலை விலக்கிற்று. ஈண்டு உயிர்மெய் ஒற்றுமை[2] பற்றி நெடியது முதலாயிற்று.

சாரியைப் பேற்றிடை எழுத்துப்பேறு கூறியது, மூன்றாம்உருபின்கண் சாரியை பெற்றே வந்த அதிகாரம்[3] மாற்றி நின்றது. *(7)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 180.** 1 'நீ என்பதே பெயர், நின் அன்று என்பதனை வற்புறுத்தியவாறு. புள்ளிமயங்கியலில் நும் என்பதனை நீயிர் என முடிப்பதனை ஈண்டு மனம் கொள்ளற்க என்றவாறாகக் கொள்க.

2. மெய் முன்னரும்உயிர் பின்னருமாக ஒலிக்கும் வேற்றுமைநயம் கொள்ளாமல், உயிர்மெய் நெடிலாம்

ஓரெழுத்தையே கருதும் ஒற்றுமை நயத்தான் நெட்டொலி முதற்கண் நின்றதாகச் சுட்டப்பட்டது.

3. புணரியல் 133ஆம் நூற்பாவில், சாரியை பெறுதலும் பெறாமையும் ஒடு உருபிடத்து ஒத்துவரும் என்றார். இவ்வுருபியற்கண் ஒடுஉருபு, சாரியை பெற்றே வருமாறு 175-179ஆம் நூற்பாக்களில் விதித்தார். பலவற்றொடு, யாவற்றொடு, அதனொடு, அவையற்றொடு, யாவற்றொடு - என முறையே முடிந்தவாறு காண்க. இவற்றுள் ஒடுவுருபேற்ற பெயர்கள் முறையே பல - யா - அது - அவை - யாவை - என்பனவாம். இவ்வைந்தன்கண்ணும் சாரியை பெற்றேவந்த ஒடு, நீ என்னும் முன்னிலையொருமைப் பெயரோடு இயையுங்கால் சாரியை பெறாது, எழுத்துப்பேறே ஏற்கும்என இச்சூத்திரத்தான் விதிக்கிறார். 'நீ' நெடுமுதல் குறுக, னகர ஒற்று எழுத்துப்பேறாக இடையே தோன்ற, ஒடுவுருபோடு அப்பெயர் இயையும் என்றவாறு. நீ+ஒடு > நி+ஒடு > நின்+ஒடு=நின்னொடு.

சாரியை பெற்றுவந்த இத்தொடர்நிகழ்வினை எழுத்துப்பேறு விதித்தமை மாற்றி நின்றது - என்பது கருத்து.

### நச்சினார்க்கினியம்

### 179. 'நீ' உருபொடு புணருமாறு

நீ-என் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
. . . . . . . . . . ஒற்றுஆ கும்மே.

இஃது ஈகார ஈறு இன்னவாறு புணரும் என்கின்றது.

இ-ள் : நீ-என் . . . . . குறுகும் - நீ என்னும் ஒருபெயர் தன்மேல் நின்ற நெடியதாகிய ஈகாரம் குறுகி இகரமாம்; ஆவயின் . . . . ஆகும் - அவ்விடத்து வரும் னகரம் ஒற்றாய் நிற்கும் எ-று.

வருமாறு : நின்னை நின்னொடு - எனச் செய்கை அறிந்து ஒட்டுக. நினக்கு என்பதற்கு, 'ஆறன் உருபினும் நான்கன் உருபினும்' (161), 'வல்லெழுத்து முதலிய' (114) என்பன கொணர்ந்து முடிக்க. நினது என்பதற்கு 'ஆறன் உருபின் அகரக் கிளவி' (115) என்பதனான் முடிக்க.

நின் என்பது நீ என்பதன் வேறொரு பெயரோ எனக் கருதுதலை விலக்குதற்கு 'ஒருபெயர்' என்றார்.

'பெயர் குறுகும்' என்னாது 'முதல் குறுகும்' என்றது, அப்பெயரின் எழுத்தின்கண்ணது குறுக்கம் என்றதற்கு. 'நெடுமுதல்' எனவே, நகரம் குறுகுதலை விலக்கிற்று. உயிர்மெய் ஒற்றுமை பற்றி நெடியது முதலாயிற்று. (அ)

'உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்' (132) என்றதனை நோக்கி ஒடுவிடத்துச் சாரியை பெற்றே வந்த அதிகாரத்தை மாற்றுதற்குச் சாரியைப் பேற்றிடை எழுத்துப்பேறு கூறினார். (7)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

**சூத்திரம் 179**

(அ) மெய்யும் உயிரும் ஓரெழுத்தாகவே கொள்ளப்படுதல் ஒற்றுமை நயமாம்.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 179.** நீ-என் ஒருபெயர்.....ஒற்றுஆ கும்மே.

''நின் என்பது நீ என்பதன் வேறொரு பெயரோ எனக் கருதுதலை விலக்குதற்கு 'நீ என் ஒருபெயர்' என்றார்'' என்று நச்சினார்க்கினியர் உரைத்த தொடர்க்கு விளக்கம் காணவேண்டும். காணின், இவர் சுட்டும் கருத்து இன்னும் விளக்கமுறும்.

**இளம்பூரணம்**

### *181. ஓகார இறுதி பெறும் சாரியை*

**ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை.**

(இச்....எனின்) ஓகாரஇறுதி முடியுமாறு உணர்....ற்று.

(இ-ள்.) ஓகாரஈற்றுக்கு இடைவரும் சாரியை ஒன் என்பது எ-று.

(உ-ம்.) கோஒனை கோஒனொடு - என வரும். (8)

**நச்சினார்க்கினியம்**

### *180. ஓகார இறுதி பெறும் சாரியை*

**ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை.**

இஃது ஓகாரஈறு இன்னவாறு புணரும் என்கின்றது.

இ-ள் : ஓகார . . . . சாரியை - ஓகாரஈற்றிற்கு இடை வரும் சாரியை ஒன்சாரியை எ-று.

வருமாறு : கோஒனை கோஒனொடு - என ஒட்டுக.

'ஒன்னே' என்ற ஏகாரத்தான் பெரும்பான்மையாக வரும் சாரியை ஒன்னே, சிறுபான்மை இன்சாரியை வருமென்று கொள்க.

'ஒன்றாது நின்ற கோவினை அடார்க்கவந்து' (சீவக. 316) எனவும், கோவினை கோவினொடு - சோவினை சோவினொடு - ஓவினை ஓவினொடு - எனவும் வரும்.

ஓ என்பது மதகுநீர் தாங்கும் பலகை. (8)

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

*சூ. 180.* **ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை.**

"'ஒன்னே' என்ற ஏகாரத்தால் பெரும்பான்மையாக வரும் சாரியை ஒன்னே; சிறுபான்மையாக இன்சாரியை வரும் என்று கொள்க" என்றார் நச்சினார்க்கினியர்.... ஓகாரஈற்றுக்கும் இன்சாரியை வருமாயின், இவ்வியல் முதல் சூத்திரத்தில் அவ்வீற்றையும் உடன் கூறியிருப்பார். ஆசிரியர் கூறாமையின் இன்சாரியை வருதல் பிற்காலவழக்காகும். இச்சூத்திரவிதிப்படி ஒன்சாரியை பெற்றுக் கோஒனை கோஒனொடு என்று வழங்கிய சொல், நெடிற்குமுன் வரும் குறில் கெடுதலாகிய முறைமையின், அவ்ஒகரம் கெட்டுக் கோனை - கோனொடு - என்று வழங்கும். அவ்வாறு வழங்கியது கண்டு நன்னூலார் 'ஆமா கோ-னவ் அணையவும் பெறுமே' என்று விதித்தார்.

**இளம்பூரணம்**

## *182. ஏழன் உருபிற்கு 'அத்து'ப் பெறும் மரப்பெயர்கள்*

**அஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு**
**அத்தொடும் சிவணும் ஏழன் உருபே.**

*(இச்....எனின்)* அகரஆகார ஈற்றுள் சிலமொழிக்கு ஓர்உருபின்கண் எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறு...ற்று.

*(இ-ள்.)* அஆ என்ற ஈற்றுச் சொல்லப்படும் மரத்தை உணரநின்ற பெயராகிய சொல்லிற்கு முற்கூறிய இன்னோடு அன்றி அத்தொடும் பொருந்தும் ஏழாம்உருபு என்றது எ-று.

*(உ-ம்.)* விளவத்துக்கண் பலாவத்துக்கண் - என வரும். *(9)*

**நச்சினார்க்கினியம்**

## *181. ஏழன்உருபிற்கு 'அத்து'ப் பெறும் மரப்பெயர்கள்*

**அ ஆ என்னும் .......... ஏழன் உருபே.**

இஃது அகர ஆகார ஈற்றிற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறுகின்றது.

இ-ள் : அ ஆ . . . . கிளவிக்கு - அ ஆ என்று சொல்லப்படும் (இறுதியையுடைய) மரத்தை உணர்த்துகின்ற பெயராகிய சொல்லிற்கு; ஏழன்உருபு அத்தொடு சிவணும் - ஏழாம்உருபு இன்னோடு அன்றி, அத்தொடும் பொருந்தும் எ-று.

உ-ம் : விளவத்துக்கண் பலாவத்துக்கண் - என வரும்.

வல்லெழுத்து முதலிய (114) என்பதனான் வல்லெழுத்துக் கொடுத்துத் 'தெற்றென்றற்றே' (133) என்பதனான் அத்தின் அகரம் அகரம் முனை (125)க் கெடாமைச் செய்கை செய்து முடிக்க. (9)

### இளம்பூரணம்

## 183. 'இன்' பெறும் புள்ளியீறுகள்

**ஞந-என் புள்ளிக்கு இன்னே சாரியை.**

(இச்...எனின்) புள்ளிஈற்றுள் ஞகாரஈறும் நகாரஈறும் முடியுமாறு உணர்...ற்று.

(இ-ள்.) ஞ ந - என்று சொல்லப்படுகின்ற புள்ளியீறு கட்கு வரும் சாரியை இன்சாரியை என்பது எ-று.

(உ-ம்.) உரிஞினை உரிஞினொடு எனவும், பொரு நினை பொருநொடு எனவும் ஒட்டுக. (10)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 183.** 'ஞகார ஈற்றொடு நகார ஈறு ஒத்த முடிபிற்று ஆதலின் உடன் கூறப்பட்டது. (302. இள. உரை)

### நச்சினார்க்கினியம்

## 82. 'இன் பெறும் புள்ளியீறுகள்

**ஞ ந - என் புள்ளிக்கு இன்னே சாரியை.**

இது புள்ளியீற்றுள் ஞகாரஈறும் நகார ஈறும் முடியுமாறு கூறுகின்றது.

இ-ள் : ஞ ந என் . . . . . . . சாரியை - ஞ ந என்று சொல்லப்படுகின்ற புள்ளியீறுகட்கு வரும் சாரியை இன்சாரியை எ-று.

உ-ம் : உரிஞினை உரிஞினொடு, பொருநினை பொருநினொடு என ஒட்டுக. (10)

**இளம்பூரணம்**

## *184. சுட்டுமுதல் வகரம் 'வற்று' ப் பெறுதல்*

**சுட்டுமுதல் வகரம் ஐயும் மெய்யும்**
**கெட்ட இறுதி இயல்திரிபு இன்றே.**

*(இச்...எனின்)* வகரஈறு நான்கனுள்ளும் சுட்டுமுதல் வகரஈற்றிற்கு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* சுட்டினை முதலாகவுடைய வகரஈற்றுச்சொல், ஐகாரமும் அதனால் பற்றப்பட்ட மெய்யும் கெட்டு வற்றுப் பெற்று முடிந்த சுட்டுமுதல் ஐகார இறுதிப்பெயர்[1] இயல்பின் திரிபின்றி வற்றுப் பெற்று முடியும் எ-று.

*(வருமாறு)* அவற்றை அவற்றொடு, இவற்றை இவற்றொடு, உவற்றை உவற்றொடு - என ஒட்டுக. (11)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 184.** 1. 'ஐயும் மெய்யும் கெட்ட இறுதி' ப் பெயர் 'யாவை' என்பதே. இள. உரை ஏடெழுதுவோரால் பிழைபட்டுள்ளது. நச். உரை காண்க.

**நச்சினார்க்கினியம்**

## *183. சுட்டுமுதல் வகரம் 'வற்று' ப் பெறுதல்*

**சுட்டுமுதல் வகரம் ஐயும் மெய்யும்**
**கெட்ட இறுதி இயல்திரிபு இன்றே.**

இது நான்கு மொழிக்கு ஈறாம் வகரஈற்றுள் சுட்டுமுதல் வகரஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : சுட்டுமுதல் வகரம் - அவ் இவ் உவ் - என்னும் சுட்டினை முதலாக உடைய வகரஈற்றுச்சொல்; ஐயும் . . . . . . இன்று - ஐகாரமும் ஐகாரத்தான் ஊரப்பட்ட மெய்யும் கெட்டு வற்றுப்பெற்று முடிந்த யாவை (178) என்னும் ஐகார ஈற்றுச்சொல் இயல்பின் திரிபு இன்றி வற்றுப்பெற்று முடியும் எ-று.

வருமாறு : அவற்றை அவற்றொடு, இவற்றை இவற்றொடு, உவற்றை உவற்றொடு - என ஒட்டுக. *(11)*

**இளம்பூரணம்**

## *185.* 'தெவ்' இன் பெறுதல்

**ஏனை வகரம் இன்னொடு சிவணும்.**

*(இச்....எனின்)* வகரஈற்றுள் ஒழிந்த வகரத்திற்கு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* ஒழிந்த வகரஈறு இன்சாரியையொடு பொருந்தி முடியும் எ-று.

*(வருமாறு)* தெவ்வினை தெவ்வினொடு - என ஒட்டுக.

மற்று, இஃது உரிச்சொல் அன்றோ எனின், உரிச்சொல்லே எனினும், படுத்தல் ஓசையான் பெயர் ஆயிற்று எனக்கொள்க. *(12)*

**நச்சினார்க்கினியம்**

## *184.* 'தெவ்' இன் பெறுதல்

**ஏனை வகரம் இன்னொடு சிவணும்.**

இஃது எய்தாதது எய்துவித்தது, பெயர்க்கே அன்றிப் படுத்தல் ஓசையான் பெயராய உரிச்சொல் வகரத்திற்கும் முடிபு கூறலின்.

இ-ள் : ஏனை .... சிவணும் - ஒழிந்த உரிச்சொல் வகரம் இன்சாரியையொடு பொருந்தி முடியும் எ-று.

வருமாறு : தெவ்வினை தெவ்வினொடு - என ஒட்டுக. இஃது உரிச்சொல்லாயினும் படுத்தல் ஓசையான் பெயராயிற்று. (12)

### இளம்பூரணம்

## 186. மகர ஈறு 'அத்து' ப் பெறுதல்

**மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை**[1]

*(இச்...எனின்) மகரஈறு முடியுமாறு உணர்...ற்று.*

*(இ-ள்.) மகரம் ஆகிய புள்ளியீற்றுச்சொல்முன் வரும் சாரியை அத்துச் சாரியை எ-று.*

*(உ-ம்.) மரத்தை மரத்தொடு - என வரும்.* (13)

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

**சூ. 186.** 1. ஈண்டுக் கூறுவது மகர ஈற்றுப் பொருட் பெயரினை; சூ. 169இல் கூறியது அளவுப் பெயரினை. அளவும் நிறையும் ஆகிய பெயர்களை ஆசிரியர் விதந்தோதியே முடிப்பார்.

### நச்சினார்க்கினியம்

## 185. மகரஈறு அத்துப் பெறுதல்

**மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை.**

இது மகரஈறு புணருமாறு கூறுகின்றது.

இ-ள் : மஃகான் . . . . . . சாரியை - மகரம் ஆகிய புள்ளியீற்றுச் சொல்முன் வரும் சாரியை அத்துச்சாரியை எ-று.

உ-ம் : மரத்தை மரத்தொடு, நுகத்தை நுகத்தொடு - என ஒட்டுக. 'அத்தே வற்றே' *(133)* 'அத்தின் அகரம்' *(125)* என்பனவற்றான் முடிக்க. *(13)*

**இளம்பூரணம்**

## *187. அவற்றுள் சில 'இன்' பெறுதல்*

**இன்இடை வரூஉம் மொழியுமார் உளவே.**

(இச்....எனின்) மகரஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) மகரஈறு அத்துச்சாரியை ஒழிய இன்சாரியை இடைவந்து முடியும் மொழிகளும் உள எ-று.

(உ-ம்.) உருமினை உருமினொடு - என ஒட்டுக. *(14)*

**நச்சினார்க்கினியம்**

## *186. அவற்றுள் சில 'இன்' பெறுதல்*

**இன்இடை வரூஉம் மொழியுமார் உளவே.**

இது மகரஈற்றில் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறதுவிதி வகுக்கின்றது.

இ-ள் : இன்இடை . . . . . . உள - மகரஈற்றுச் சொற்களுள் அத்தே அன்றி இன்சாரியை இடையே வந்துமுடியும் சொற்களும் உள எ-று.

ஆர் : அசை

உ-ம் : உருமினைஉருமினொடு, திருமினைதிருமினொடு - என ஒட்டுக. *(14)*

## இளம்பூரணம்

### 188. 'நும்' இயல்பாதல்

**நும்என் இறுதி இயற்கை ஆகும்.**

*(இச்....எனின்) மகரஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.*

*(இ-ள்.) நும் என்னும் மகரஈறு, மேற்கூறிய அத்தும் இன்னும் பெறாது இயல்பாக முடியும் எ-று.*

*(வருமாறு) நும்மை நும்மொடு - என ஒட்டுக. (15)*

### இளம்பூரணம் உரைக்குறிப்பு

***சூ. 188.*** *பேராசிரியர் இந்நூற்பாவைப் 'பல்பொருட்டு ஏற்பின் நல்லது கோடல்' என்னும் உத்திப்பாற்படுப்பர். "அஃதாவது ஒரு சூத்திரத்தின் பயந்த சொற்றொடர் பல பொருட்கு ஏற்றதாயினும், நல்லது கொள்வர் என்று கருதி அவ்வாறு செய்தல். 'நும்மென் இறுதி இயற்கையாகும்' என்புழி, எழுத்து விகாரமுடையதனைக் களைந்து சாரியைக்கண்ணே இயற்கைகோடல் அதன்பாற்படும்" (பொரு. 665 பேரா.) நும் எழுத்து விகாரப்பட்டு நீயிர் என நிற்கும் எனக்கொள்ளாது, சாரியை பெறாது இயற்கையாக நின்று வருமொழியொடு புணரும் எனக்கோடல் இவ்வுத்தி என்றவாறு.*

## நச்சினார்க்கினியம்

### 187. நும் இயல்பாதல்

**நும்என் இறுதி இயற்கை ஆகும்.**

இது மகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ-ள் : நும் . . . . . . . ஆகும் - நும் என்னும் மகரஈறு மேற்கூறிய அத்தும் இன்னும் பெறாது இயல்பாக முடியும் எ-று.

வருமாறு : நும்மை நும்மொடு நுமக்கு நும்மின் நுமது நுங்கண் - எனவரும்.

நுமக்கு நுமது என்பனவற்றிற்கு 'ஆறன் உருபினும் நான்கன் உருபினும்' *(161)* 'நும்என் இறுதியும்' *(162)*, 'வல்லெழுத்து முதலிய' *(114)* 'ஆறன் உருபின் அகரக் கிளவி' *(115)* என்பன கொணர்ந்து முடிக்க.

நுங்கண் என்பதற்கு, மேலைச்சூத்திரத்து *(188)* 'மெய்' என்றதனான் மகரஒற்றுக் கெடுத்து 'வல்லெழுத்து முதலிய' *(114)* என்பதனான் மெல்லொற்றுக் கொடுக்க. இயற்கை என்றார், சாரியை பெறாமை கருதி. *(15)*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 187.** **நும்என் இறுதி இயற்கை ஆகும்.**

ஆசிரியர் இச்சூத்திரத்திற் கூறியது, வேற்றுமையுருபு ஏற்றற்கண் நும் என்னும் சொல் சாரியை பெறாது இயல்பாய் வரும் என்னும் துணையே.... உருபேற்றற்கண் வரும் திரிதலை ஈண்டு அமைத்தல் கூடாது. 'மகர இறுதி' *(310)* என்னும் சூத்திரத்தான் நும்மின் மகரம் கெடும்; 'வல்லெழுத்து முதலிய' *(114)* என்னும் சூத்திரத்தான் மெல்லெழுத்து மிகுவதாகும். (நும்+கண்=நுங்கண்)

**இளம்பூரணம்**

***189. தாம், நாம், யாம்: முடியுமாறு***

**தாம்நாம் என்னும் மகர இறுதியும்**
**யாம்என் இறுதியும் அதன்ஓ ரன்ன**
**ஆ எ ஆகும் யாம்என் இறுதி**
**ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்**
**ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும்.**

*(இச்...எனின்)* இதுவும் மகர ஈற்றுள் முற்கூறிய முடிபு ஒவ்வாதனவற்றிற்கு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* தாம் நாம் என்று சொல்லப்படும் மகர ஈறும், யாம் என்னும் மகரஈறும், மேற்கூறிய நும் என்னும் மகரஈறு போல, அத்தும் இன்னும் பெறாது முடிதலை யுடையவாம். யாம் என்னும் மகரஈற்று மொழி ஆகாரம் எகரமாம்; அவ்விடத்து யகரமாகிய மெய் கெடுதலை வேண்டும் (ஆசிரியன்). ஒழிந்த இரண்டும் நெடியவாகிய முதல் குறுகிநின்று முடியும் எ-று.

*(வருமாறு)* தம்மை தம்மொடு, நம்மை நம்மொடு; எம்மை எம்மொடு - என ஒட்டுக.

'ஆவயின் மெய்' என்றதனான், பிறவயின் மெய்யும் கெடும் எனக்கொள்க.

*(வருமாறு)* தங்கண் நங்கண் எங்கண் - என வரும்.[1] *(16)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ. 189.*** 1. தங்கண் நங்கண் எங்கண் - என்புழி, ஏழன் உருபு வருமிடத்து நிலைமொழி மகரம் கெடும்; 'வல்லெழுத்து முதலிய' *(115)* என்னும் விதியான் மெல்லெழுத்து மிகும் - எனக் கொள்க.

**நச்சினார்க்கினியம்**

***188. தாம், நாம், யாம் : முடியுமாறு***

**தாம் நாம் என்னும் மகர இறுதியும்**
. . . . . . . . . **நெடுமுதல் குறுகும்.**

இது மகரஈற்றின் முற்கூறிய முடிபு ஒவ்வாதனவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : தாம் நாம் . . . . . . . அன்ன - தாம் நாம் என்று கூறப்படும் மகரஈறும் யாம் என்னும் மகரஈறும், நும் என்னும் மகரஈறுபோல, அத்தும் இன்னும் பெறாது முடிதலை யுடைய; யாம் என் இறுதி ஆ எ ஆகும் - யாம் என்னும் மகரஈற்றுச் சொல்லில் ஆகாரம் எகரமாம்; ஆவயின் . . . . . . . வேண்டும் - அவ்விடத்து நின்ற யகரமெய் கெடுதலை விரும்பும் ஆசிரியன்; ஏனை . . . . . குறுகும் - ஒழிந்த தாம் நாம் என்னும் இரண்டும் நெடியவாகிய முதல் குறுகித் தம் நம் என நிற்கும் எ-று.

வருமாறு : தம்மை தம்மொடு, நம்மை நம்மொடு, எம்மை எம்மொடு - என ஆறு உருபோடும் ஒட்டுக. ஆறன்உருபிற்கும் நான்கன்உருபிற்கும் கருவி அறிந்து முடிக்க.

'மெய்' என்பதனான், 'கண்' வரின் பிறவயின் மெய்யும் கெடுக்க. (அ) தங்கண் நங்கண் எங்கண் - என ஏழன் உருபின்கண், மகரம் கெடுத்து 'வல்லெழுத்து முதலிய' (114) என்பதனான் மெல்லெழுத்துக் கொடுக்க. (16)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

***சூத்திரம் 188***

(அ) பிறவயின் மெய் என்றது நம் நும் தம் - என்னும் சாரியை ஈற்றதாகிய மகரத்தினை.

**இளம்பூரணம்**

***190. 'எல்லாம்' முடியுமாறு***

**எல்லாம் என்னும் இறுதி முன்னர்**
**வற்றுஎன் சாரியை முற்றத் தோன்றும்**
**உம்மை நிலையும் இறுதி யான.**

(இச்....எனின்) மகரஈற்றுள் ஒருமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

(இ-ள்.) எல்லாம் என்னும் மகரஈற்றுச் சொல்லின் முன்பு, மேற்கூறிய அத்தும் இன்னும் இன்றி, வற்று என்னும் சாரியை முடியத்தோன்றி முடியும்; உம் என்னும் சாரியை நிலைபெறும் இறுதிக்கண் எ-று.

(வருமாறு) எல்லாவற்றையும் எல்லாவற்றொடும் - என ஒட்டுக.

'முற்ற' என்றதனான், மூன்றாம் உருபின் கண்ணும் நான்காம் உருபின்கண்ணும் ஆறாம் உருபின் கண்ணும் உம்மின் உகரக்கேடு கொள்க. (17)

**நச்சினார்க்கினியம்**

### 189. எல்லாம் முடியுமாறு

**எல்லாம் என்னும் . . . . . . இறுதி யான.**

இது மகரஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ-ள்: எல்லாம் . . . . . . . தோன்றும் - எல்லாம் என்னும் மகரஈற்றுச் சொல்முன்னர் அத்தும் இன்னும் இன்றி வற்று என்னும் சாரியை முடியத் தோன்றி முடியும்; உம்மை நிலையும் இறுதியான - ஆண்டு உம் என்னும் சாரியை இறுதிக்கண் நிலைபெறும் எ-று.

மகரம் வற்றின்மிசை ஒற்று எனக் கெடுக்க.

வருமாறு : எல்லாவற்றையும் எல்லாவற்றினும் எல்லாவற்றுக்கண்ணும் - என வரும்.

'முற்ற' என்பதனான், ஏனை முற்றுகரத்திற்கு (அ) உம்மின் உகரம் கெடுத்துக் கொள்க.

எல்லாவற்றொடும் எல்லாவற்றுக்கும் எல்லாவற்றதும்-எனவரும் முற்றுகரம் ஆதலின் ஏறிமுடியா. (17)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

### சூத்திரம் 189

(அ) ஒடுவும் குவ்வும் அதுவும் ஆகிய உருபீற்று முற்றுகரம் என்க.

வேங்கட ராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 189. எல்லாம் என்னும்....இறுதி யான.**

ஒடு கு அது என்னும் உருபுகள் முற்றுகர ஈறுகள். அவை எல்லாவற்றொடு - எல்லாவற்றுக்கு - எல்லாவற்றது - என நிற்றலின், குற்றியலுகர ஈறாயின. அவற்றின் முன் வரும் உம்மையின் உகரம் ஏறிமுடியும். ஆகலின் உரையாசிரியர் உம்மின் உகரம் கெடும் என்றது பொருந்தாது.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ. 189. எல்லாம் என்னும்.....இறுதி யான.**

எல்லாம் என்பதன் மகரத்தை வற்றின்மிசை ஒற்று எனக் கெடுக்க என்பர் உரையாசிரியன்மார். அது நம்முச்சாரியை வருங்காலும் கெடுதலின் 'மகர இறுதி' (311) என்னும் பொதுவிதியான் கெட்டது என்பதே நேரிதாம்.

[எல்லாநம்மையும் என்புழி எல்லாம் என்பதன் இறுதி மகரம் மென்கணமாம் நம்முச் சாரியை வருவுழிக் கெடுதல் புணர்ச்சிவிகாரம் ஆதலின், உரையாளர்தம் கூற்றினை மறுக்குமாறு இல்லை.]

இனி, எல்லாவற்றொடும் எல்லாவற்றுக்கும் என வரும் ஒடுவும் குவ்வும் ஆகிய உருபுகளின்மேல் உயிரேறிமுடியா ஆகலின் உருபுகளின் முற்றுகரத்தை 'முற்ற' என்னும் மிகையாற் கெடுக்க என்பர் உரையாசிரியன்மார். அது பொருந்தாது. என்னை? உருபுகள்....இடைச்சொற்கள்

ஆதலின் அவை பெயரொடு கூடியவழி ஒருசொல் நீர்மையவாய் ஒற்றுமைப்பட்டுத் தொடர்மொழி இறுதியாய் நிற்கும்; அவ்விடத்து அவை குற்றுகரமே ஆகலின், உம்மையின் உயிர் அவற்றின்மேல் ஏறிமுடியும் என்க. (வேங்கடராசுலு ரெட்டியாரும் இக்கருத்தினரே.)

[புணரியல் 19ஆம் சூத்திர உரையில், இன்சாரியையின் னகரம் குற்றொற்று ஆகலின் இரட்டியது எனக்கொள்க என்று இவர் கூறுதல் சாலாது. சாரியை இடைச்சொல்லாதலின் நிலைமொழிப்பெயரொடு கூடியவழி ஒருசொல் நீர் மைத்தாய்க் குற்றொற்றுநிலை கெடுமாறு காண்க.]

**இளம்பூரணம்**

### *191. 'எல்லாம்' உயர்திணைக்கண் முடியுமாறு*

**உயர்திணை யாயின் நம்இடை வருமே.**

இதுவும் அது.

(இ-ள்.) எல்லாம் என்னும் விரவுப்பெயர் அஃறிணைப்பெயர் அன்றி உயர்திணைப்பெயராய் நிற்குமாயின் நம் என்னும் சாரியை இடைவந்து புணரும் எ-று.

நிலைமொழி ஒற்று, மேல் வற்றுமிசை ஒற்று என்று கெட்டுநின்ற அதிகாரத்தான் கெடுக்க.

இன்னும் அதனானே, உம்முப் பெறுதலும் அதன்கண் உகரம் சிலஉருபின்கண்[1] கெடுதலும் கொள்க.

(வருமாறு) எல்லா நம்மையும் எல்லாநம்மொடும் - என ஒட்டுக. (18)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 191.** 1. சில உருபுகளாவன ஒடுவும் குவ்வும் அதுவும் (எல்லா நம்மொடும், எல்லா நமக்கும், எல்லா நமதும் - எனக் காண்க.)

**நச்சினார்க்கினியம்**

## 190. 'எல்லாம்' உயர்திணைக்கண் முடியுமாறு

**உயர்திணை யாயின் நம்இடை வருமே.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ-ள் : உயர்திணை . . . . . . வரும் - எல்லாம் என்னும் மகரஈற்று விரவுப்பெயர் உயர்திணைப் பெயராம் எனின், நம் என்னும் சாரியை இடைநின்று புணரும் எ-று.

மகரஈற்றினை மேல் வற்றின்மிசை ஒற்று எனக் கெடுத்த அதிகாரத்தான் கெடுக்க.

வருமாறு : எல்லாநம்மையும் எல்லாநம்மினும் எல்லாநங்கணும் - என உகரம் பெற்றும், எல்லாநம்மொடும் எல்லாநமக்கும் எல்லாநமதும் - என உகரம் கெட்டும் மகரம் நிற்கும். இவற்றிற்கு நம்எல்லாரையும் நம்எல்லாரொடும் முதலாயின பொருளாக ஒட்டுக.

இதற்கு நம்மு வகுத்ததே வேறுபாடு.

'ஈறாகு புள்ளி அகரமொடு' நிற்றல் (161) நான்காவதற்கும் ஆறாவதற்கும் கொள்க. (18)

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 190. உயர்திணை யாயின் நம்இடை வருமே.**

முற்சூத்திரத்தில் உயர்திணைப்படர்க்கையில் தம் என்பது வரும் என்றும், முன்னிலையில் நும் என்பது வரும் என்றும் கூறியதனானும், ஈண்டு 'உயர்திணையாயின்' என்றதனானும், இது தன்மைக்கண் நம் என்பது வரும் என்றவாறு. ஆகலின், எல்லாநம்மையும் என்று வரும்.

எல்லாநம்மையும் என்பதற்கு எல்லாரையும் என்பதே பொருள் என்றும் நம்மு வகுத்ததே வேறுபாடு என்றும் நச்சினார்க்கினியர் கூறினார்... எல்லாநம்மையும் என்பதற்கும் எல்லாரையும் என்பதற்கும் இடையே பொருள்வேறுபாடு உளதாதல் நன்கு அறியப்படும்.

இனி, இடையே வருகின்ற நம்-தம்-நும்- என்பவற்றைச் சாரியை என்குமோ பெயர் என்குமோ எனின், மேலைச் சூத்திரங்களால் நாம் என்னும் பெயர் நம் என்றும், தாம் என்னும் பெயர் தம் என்றும் வரும் என்று ஆசிரியரே கூறுதலின், இவையெல்லாம் பெயர் என்றலே அமையும். ஆசிரியர் இவற்றைச் சாரியைகளொடு சேர்த்துக் கூறாமையும் அறியத்தக்கது....தம்-நம்-நும்- என்பன தாம் -நாம் - நீம் - என்னும் பெயர்களின் திரிபே.

**190.** ['நம் எல்லாரையும் ' என்ற உரையுள் ஏடெழுதுவோரால் 'நம்' விடப்பட்டமையை உய்த்துணர்தல் சால்பு. நம்முச் சாரியையைத் தன்மைக்கட் படுத்தி உரைவகுத்த நச்சினார்க்கினியர், ஈண்டுப் படர்க்கைப் பொருளைச் சுட்டுமாறு தன்மைக்குரிய அச்சாரியைச் சொல்லை விடுத்து எழுதற்பாலரோ எனவே எண்ணல்தகும். முன்னிலைக்கு 'நும்' வகுத்தாற்போலவும், படர்க்கைக்குத் 'தம்' வகுத்தாற்போலவும் இத்தன்மையிடத்துக்கு 'நம்' வகுக்கப்பட்டதனைச் சுட்டவே, 'இதற்கு நம் வகுத்ததே வேறுபாடு' என்றார். 'நம்' வகுக்காவழி எல்லாரையும் எனப் படர்க்கையாம். இடவேறுபாட்டைக் காட்டவே, நம்முச்சாரியை வந்தது என்றவாறு.]

**பாலசுந்தரம் உரைக்குறிப்பு**

**சூ. 190.** **உயர்திணை யாயின் நம்இடை வருமே.**

'எல்லாநம்மையும்' என்பதற்கு நம்எல்லாரையும் என்பது பொருள் என்பதே நச்சினார்க்கினியம் எனக் கொளல் வேண்டும்.

**இளம்பூரணம்**

## *192. 'எல்லாரும்', 'எல்லீரும்' - முடியுமாறு*

**எல்லாரும் என்னும் படர்கை இறுதியும்**
**எல்லீரும் என்னும் முன்னிலை இறுதியும்**
**ஒற்றும் உகரமும் கெடும்என மொழிப**
**நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி**
**உம்மை நிலையும் இறுதி யான**
**தம்இடை வரூஉம் படர்க்கை மேன**
**நும் இடை வரூஉம் முன்னிலை மொழிக்கே.**

*(இச்....எனின்)* மகரஈற்றுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* எல்லாரும் என்று சொல்லப்படும் படர்க்கையிடத்து மகரஈற்றுச் சொல்லும், எல்லீரும் என்று சொல்லப்படும் முன்னிலையிடத்து மகரஈற்றுச் சொல்லும், இவற்றின் மகரஒற்றும் அதன்முன் நின்ற உகரமும் கெட்டு முடியும் என்று சொல்லுவர். அவ்வுகரம் கெடுவழி, அதனால் ஊரப்பட்ட ரகரப்புள்ளி கெடாது நிற்றல் வேண்டும். அவ்விருமொழிக்கும் இறுதிக்கண் உம் என்னும் சாரியை நிலைபெறும். படர்க்கைமொழியிடத்துத் தம் என்னும் சாரியை இடைவரும். முன்னிலைமொழிக்கு நும் என்னும் சாரியை இடைவரும் எ-று.

*(வருமாறு)* எல்லார்தம்மையும் எல்லார்தம்மொடும், எல்லீர்நும்மையும் எல்லீர்நும்மொடும் - என ஒட்டுக.

'படர்க்கை' 'முன்னிலை 'என்ற மிகுதியான், மகரஈற்றுத் தன்மைப் பெயர், இடைக்கண் நம்முச்சாரியையும் ஈற்றுக்கண் உம்முச்சாரியையும் பெற்றுமுடிவன கொள்க.

*(உ-ம்.)* கரியேநம்மையும், கரியேநம்மொடும் - என ஒட்டுக.

படர்க்கைப்பெயர் முற்கூறிய அதனான், ரகர ஈற்றுப் படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும் இறுதிக்கண் உம்மொடு தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் பெற்று முடிவன கொள்க.

(உ-ம்.) கரியார்தம்மையும், கரியீர்நும்மையும் - என ஒட்டுக.

'உகரமும் ஒற்றும்' என்னாத முறையன்றிக் கூற்றினான், அம்மூன்று உருபின்கண் உம்மின் உகரக்கேடு, எடுத்தோதிய வற்றிற்கும் இலேசினான் கொண்டவற்றிற்கும் கொள்க. (19)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 192.** எல்லாரும் எல்லீரும் என்னும் படர்க்கைச் சொல்லும் முன்னிலைச்சொல்லும் தம் நும் சாரியையை முறையே இடையிற்பெறாமல் எல்லாரையும், எல்லீரையும்- எல்லார்கையும், எல்லீர்கையும் - என வருதலும் உண்டு என்பர் மயிலைநாதர் (நன். 245).

'எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே' (புறநா. 163) என்புழி 'எல்லோர் தமக்கும்' எனச் சாரியை பெறாமல் வந்தது.

**நச்சினார்க்கினியம்**

### 191. எல்லாரும், எல்லீரும் - முடியுமாறு

**எல்லாரும் என்னும் படர்க்கை இறுதியும்**
**. . . . . . . . . . . . . . . முன்னிலை மொழிக்கே.**

இது மகரஈற்று உயர்திணைப் பெயர்க்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : எல்லாரும் . . . . . முன்னிலை இறுதியும் · எல்லாரும் என்னும் மகரஈற்று உயர்திணைப் படர்க்கைப்

பெயரும், எல்லீரும் என்னும் மகராஈற்று உயர்திணை முன்னிலைப் பெயரும்; ஒற்றும்..... மொழிப - மகரஒற்றும் அதன்முன் நின்ற உகரமும் கெட்டுமுடியும் என்று சொல்லுவர் புலவர்; ரகரப் புள்ளி நிற்றல் வேண்டும் - அவ்உகரம் ஏறிநின்ற ரகரஒற்றுக் கெடாது நிற்றலை விரும்பும் ஆசிரியன்; இறுதியான உம்மை நிலையும் - இவ்விருமொழி இறுதிக்கண்ணும் உம் என்னும் சாரியை நிலைபெறும்; படர்க்கைமேன தம் இடை வரூஉம் - படர்க்கைச் சொல்லிடத்துத் தம்முச்சாரியை இடை வரும்; முன்னிலை மொழிக்கு நும் இடைவரூஉம் - முன்னிலைச் சொற்கு நும்முச்சாரியை இடை வரும் எ-று.

வருமாறு : எல்லார் தம்மையும் எல்லார் தம்மினும் எல்லார் தங்கணும்-என உகரம் பெற்றும், எல்லார் தம்மொடும் எல்லார்தமக்கும் எல்லார்தமதும் - என உகரம் கெட்டும், மகரம் நிற்கும். எல்லீர்நும்மையும் எல்லீர் நும்மினும் எல்லீர்நுங்கணும் - என உகரம் பெற்றும், எல்லீர்நும்மொடும் எல்லீர்நுமக்கும் எல்லீர்நுமதும் - என உகரம் கெட்டும், மகரம் நிற்கும்.

முன்னர் மெய் (188) என்ற இலேசான் கொண்ட மகரக்கேடு(அ) இவற்றிற்கும் மேல்வருவனவற்றிற்கும் கொள்க.

படர்க்கைப்பெயர் முற்கூறிய அதனானே, ரகர ஈற்றுப் படர்க்கைப் பெயரும் முன்னிலைப்பெயரும் மகரஈற்றுத் தன்மைப்பெயரும் தம் நும் நம் - என்னும் சாரியை இடையே பெற்று இறுதி உம்முச்சாரியையும் பெற்று முடிவன கொள்க.

வருமாறு : கரியார்தம்மையும் சான்றார்தம்மையும் எனவும், கரியீர் நும்மையும் சான்றீர்நும்மையும் எனவும், கரீயேநம்மையும் இருவேநம்மையும் எனவும் எல்லா உருபொடும் செய்கை அறிந்து ஒட்டுக.

'உகரமும் ஒற்றும்' என்னாததனான், இக்காட்டியவற்றிற்கு எல்லாம் மூன்று உருபின்கண்ணும் உம்மின் உகரம் கெடுதல் கொள்க.

'நிற்றல் வேண்டும் ரகரப்புள்ளி' என்றதனானே, தம்முப் பெறாமை வருமவையும் கொள்க.

'எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை' (குறள் 582) என வரும். *(19)*

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 191***

(அ) நம் நும் தம் - என்னும் சாரியைகளது ஈற்று மகரக்கேடு என்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 192.** **எல்லாரும் என்னும் படர்க்கை இறுதியும்**

........................

**நும்இடை வரூஉம் முன்னிலை மொழிக்கே.**

இச்சூத்திரத்துப் 'படர்க்கை' 'முன்னிலை' என்பன மிகுதி எனக் கொண்ட இளம்பூரணர் கூற்றை இவர் காரணம்காட்டி மறுக்கிறார். நச்சினார்க்கினியர் திருக்குறளினின்று 'எல்லார்க்கும்' எனக்காட்டிய வழக்கினைப் பிற்காலத்தது என இவர் மறுத்தல் ஏலாது. 'எல்(லே)லார்க்கும் கொடுமதி' (புறநா.163) எனப் பிறாண்டும் பயின்றுள்ளமை காண்க.

**இளம்பூரணம்**

***193. 'தான்', 'யான்' - முடியுமாறு***

**தான்யான் என்னும் ஆயீர் இறுதியும்**
**மேல்முப் பெயரொடும் வேறுபாடு இலவே.**

(இச்....எனின்) இது னகரஈற்றுள் சிலமொழிக்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) தான் யான் என்று சொல்லப்படும் அவ்விரண்டு னகரஈறும், மேல் மகரஈற்றுள் சொல்லப்பட்ட மூன்று பெயரொடும் வேறுபாடின்றி, தான் என்பது நெடுமுதல் குறுகியும், யான் என்பதன்கண் ஆகாரம் எகரமாய் யகரம் கெட்டும் முடியும் எ-று.

(வருமாறு) தன்னை தன்னொடு - எனவும், என்னை என்னொடு எனவும் ஒட்டுக. (20)

**நச்சினார்க்கினியம்**

## *192. 'தான்', 'யான்' - முடியுமாறு*

**தான் யான் என்னும் . . . . . . . வேறுபாடு இலவே.**

இது னகர ஈற்றுள் சிலவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : தான் யான் . . . . இல - தான் யான் - என்று சொல்லப்பட்ட அவ்விரண்டு னகரஈறும், மேல் மகரஈற்றுள் கூறிய மூன்று பெயரோடும் வேறுபாடின்றித் தான் என்பது குறுகியும், யான் என்பதன்கண் ஆகாரம் எகரமாய் யகர ஒற்றுக் கெட்டும் முடியும் எ-று.

வருமாறு : தன்னை என்னை - என எல்லா உருபோடும் ஒட்டுக, செய்கை அறிந்து. ஒற்று இரட்டுதல் 'நெடியதன் முன்னர்' (160) என்பதனுள் இலேசான் (அ) கொள்க. (20)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### *சூத்திரம் 192*

(அ) தாம் தான் முதலிய நெடியன குறுகி நின்றவழியும், அவற்றின் முன்நின்ற ஒற்று விகாரப்பட்ட தனிக்குறில் முன்வரும் ஒற்று ஆதலின், அஃது இரட்டுதல் இலேசினாற் கொள்ளப்படும்.

**இளம்பூரணம்**

### *194. 'அழன்', 'புழன்' முடியுமாறு*

**அழனே புழனே ஆயிரு மொழிக்கும்**
**அத்தும் இன்னும் உறழத் தோன்றல்**
**ஒத்தது என்ப உணரு மோரே.**

இதுவும் அது.

*(இ-ள்.)* அழன் புழன் ஆகிய அவ்விருமொழிக்கும் அத்துச்சாரியையும் இன்சாரியையும் மாறிவரத் தோன்றுதலைப் பொருந்திற்று(பொருந்தின) என்ப உணருவோர் எ-று.

(வருமாறு) அழத்தை அழத்தொடு, அழனினை அழனினொடு - எனவும் புழத்தை புழத்தொடு, புழனினை புழனினொடு - எனவும் ஒட்டுக.

'தோன்றல்' என்றதனான், எவன்' என்றும் என் என்றும் நிறுத்தி, வற்றுக் கொடுத்து வேண்டும் செய்கைசெய்து, எவற்றை எவற்றொடு - எனவும், எற்றை எற்றொடு - எனவும் முடிக்க.

'ஒத்தது ' என்றதனான், எகின் என நிறுத்தி, அத்தும் இன்னும் கொடுத்துச் செய்கைசெய்து, எகினத்தை எகினத்தொடு - எகினினை எகினினொடு - எனவும் முடிக்க.

அத்து முற்கூறிய அதனான், அத்துப் பெற்றவழி இனிது இசைக்கும் எனக் கொள்க. (21)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 194.** 1. எவன் என்னும் வினாவினைக் குறிப்பு முற்றுப் படுத்தலோசையான் எவன் என்றும் என் என்றும் பெயராக நின்று ஐயுருபோடு இயையுமிடத்து இடையே வற்றுச்சாரியை பெற்று, எவற்றை எனவும் எற்றை எனவும்

முடியும். முடியுமாறு நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பில் காண்க.

[ எவன் + வற்று + ஐ > எவ + வற்று + ஐ > எவ + ற்று + ஐ = எவற்றை என முடிக்குமாறு காண்க.]

**நச்சினார்க்கினியம்**

### 193. 'அழன்', 'புழன்' - முடியுமாறு

**அழனே புழனே ஆயிரு மொழிக்கும்**
**. . . . . . . . . . . . . . . . . . . உணருமோரே.**

இதுவும் அது.

இ-ள் : அழனே புழனே . . . . . . . என்ப - அழன் புழன் ஆகிய அவ்விரு மொழிக்கும் அத்துச்சாரியையும் இன்சாரியையும் மாறிவரத் தோன்றுதலைப் பொருந்திற்று என்பர்; உணருமோர் - அறிவோர் எ-று.

வருமாறு : அழத்தை அழனினை, புழத்தை புழனினை- எனச் செய்கை அறிந்து எல்லா உருபினொடும் ஒட்டுக. னகரத்தை அத்தின்மிசை ஒற்று என்று கெடுத்து (133), 'அத்தின் அகரம்' (125) என்பதனான் முடிக்க.

'தோன்றல்' என்றதனான், (1) எவன் என நிறுத்தி வற்றுக்கொடுத்து வேண்டும் செய்கை செய்து எவற்றை எவற்றொடு என முடித்ததனை எல்லா உருபினொடும் ஒட்டுக. எற்றை என்புழி நிலைமொழி வகரம் கெடுக்க.

இனி, 'ஒத்தது' என்றதனான், எகின் என நிறுத்தி அத்தும் இன்னும் கொடுத்துச் செய்கை செய்து எகினத்தை எகினினை என ஒட்டுக. அத்து இனிது இசைத்தலின் முற்கூறினார். (21)

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 193

1. இச்சூத்திரத்தால் எவன் என்பதற்கு வற்றுக் கொடுத்து, வற்றுமிசை ஒற்று என்று னகரம் கெடுத்து, 'வஃகான்

மெய்கெட' (122) என்னும் சூத்திரத்து 'ஆகிய பண்பு' என்றமையால் ஐகாரத்தின் முன்னன்றி அகரத்தின்முன்னும் வற்றின் வகரம் கெடும் என வகரஅகரத்தைக் கெடுத்து, எவன்+ வற்று + ஐ > எவ + வற்று + ஐ > எவ+ ற்று+ஐ=எவற்றை என முடிக்க.

சாத்திரியார் உரைக்குறிப்பு

**சூ. 194.** இச்சூத்திரஉரையுள், 'எவன்' ஒருமைப்பெயர் ஆதலின், அஃது இரண்டாம்வேற்றுமையுருபு ஏற்று எவன்+வற்று+ஐ= எவற்றை என முடிந்தது என்னும் உரைகாரர் இருவர்தம் கூற்றையும் இவர் ஏற்கவில்லை. அஃறிணை இருபாற்கும் உரிய 'எவன்' என்னும் வினா வினைக் குறிப்பு முற்றுப் படுத்தல் ஓசையால் பெயராயவழி அஃறிணைப் பன்மைப் பெயரையும் உணர்த்துமன்றே? ஆகலின் 'எவன்' இரண்டனுருபு ஏற்கையில் வற்றுச்சாரியை பெற்று அவ்வாறு முடிதல் ஏற்கற்பாலதே. 'எவன்' ஒருமைப்பாலையே உணர்த்தி வருதல் பிற்கால வழக்கு.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 193.** அழனே புழனே....உணரு மோரே.

எவன்-என்-என்னும் பெயர்கள் வற்றுச்சாரியை பெற்று எவற்றை - எற்றை - என்று வரும் என்றனர் உரையாளர் இருவரும். 'எவன்' என்பதொரு பெயர் ஆசிரியரால் கொள்ளப்பட்டிலது. 'என்' என்பதொடு 'து' சேர்ந்து 'எற்று' என்ற ஆகிய சொல்லே ஐஉருபுடன் சேர்ந்து 'எற்றை' என்று வந்தது ஆகலின், ஆண்டு வற்றுச் சாரியை இன்று.

[துகர விகுதி, சுட்டு வினா இடைச்சொற்களொடு புணர்வழிப் பெயர் விகுதியே; பிறாண்டெல்லாம் ஒன்றன் முற்று விகுதியாம். ஆதலின் அவ்விகுதி புணர்ந்து முடிந்த சொல் வினையாதல் அன்றிப் பெயராதல் இல்லை. அது வினைச்சொல் ஆதலின் அதனொடு வேற்றுமையுருபு

புணருமாறு இல்லை. இன்ன இடர்ப்பாடு நீக்கவேண்டியே, வற்றுச்சாரியை புணர்த்து ஐயுருபு கூட்டி உரைத்தனர் உரையாசிரியன்மார் என்றே துணிதல் வேண்டும்.]

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

சூ. 193. அழனே புழனே....உணரு மோரே.

இவை மகரஈற்றுச் சொல்லாகத் தோன்றி னகரஈறாகத் திரிந்து வழங்குவன என்பதை உணர்த்த 'உணருமோர்' என்றார்....இன்னினும் அத்து வருதல் ஒத்தது ஆதலின் அதனை முற்கூறினார்.

**இளம்பூரணம்**

### 195. 'ஏழ்' அன் பெறுதல்

**அன்என் சாரியை ஏழன் இறுதி**
**முன்னர்த் தோன்றும் இயற்கைத்து என்ப.**

(இச்...எனின்) ழகரஈற்று ஒருமொழிக்கு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) அன் என்னும் சாரியை, ஏழ் என்னும் சொல்லின் இறுதியின் முன்னே தோன்றும் இயல்பினை உடையது என்று சொல்லுவர் எ-று.

(வருமாறு) ஏழனை ஏழனொடு - என ஒட்டுக. சாரியை முற்கூறிய அதனான், பிறவும் அன் பெறுவன கொள்க.

(உ-ம்.) பூழனை பூழனொடு, யாழனை யாழனொடு - என ஒட்டுக. (22)

**நச்சினார்க்கினியம்**

### 194. 'ஏழ்' அன் பெறுதல்

**அன்-என் சாரியை ஏழன் இறுதி**
**முன்னர்த் தோன்றும் இயற்கைத்து என்ப.**

இஃது ஏழ் என்னும் எண்ணுப்பெயர் அன்சாரியை பெற்றுப் புணர்க என்கின்றது.

இ-ள் : அன் ...... என்ப - அன் என்னும் சாரியை ஏழ் என்னும் எண்ணுப் பெயரின் முன்னே தோன்றும் இயல்பினையுடைத்து என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

வருமாறு : ஏழனை ஏழற்கு ஏழனின் - என்க. ஏனை உருபுகளொடும் செய்கை அறிந்து ஒட்டுக.

சாரியை முற்கூறிய அதனான், பிறவும் அன் பெறுவன கொள்க. பூழனை யாழனை - என ஏனையவற்றொடும் ஒட்டுக.

மேல் (195) வருகின்ற இன்சாரியையைச் சேர வைத்தமையான், இவையெல்லாம் இன்சாரியை பெற்று வருதலும் கொள்க.

ஏழினை பூழினை யாழினை - என வரும். (22)

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. 194.** அன்-என் சாரியை....இயற்கைத்து என்ப.

ஆசிரியர் 'ழகர இறுதி' என்னாமல் 'ஏழன் இறுதி' என்று எண்ணுப்பெயர் ஒன்றனையே விதந்துகூறுதலானும், யாழ் பூழ் என்பன எண்ணுப்பெயரல்ல ஆகலானும், அவற்றை உரையாசிரியர் இருவரும் (யாழனை - பூழனை- என) ஈண்டு அமைத்தல் ஆகாது. நச்சினார்க்கினியர் இன் சாரியை பெற்று வருதலும் கொள்க என்றார். ஆசிரியர் அன்சாரியையே விதித்தலானும், முன்னர்ப் பிற எண்ணுப்பெயர்கட்கும் அன்சாரியையினையே விதிப்பதனானும் அது பொருந்தாது.

**இளம்பூரணம்**

## 196. குற்றியலுகர ஈறு 'இன்' பெறுதல்

**குற்றிய லுகரத்து இறுதி முன்னர்**
**முற்றத் தோன்றும் இன்னென் சாரியை.**

(இச்....எனின்) குற்றியலுகர ஈற்றிற்கு முடிபு கூறு....ற்று.

(இ-ள்.) குற்றியலுகரம் ஆகிய ஈற்றின் முன்னர் முடியத்தோன்றும் இன் என்னும் சாரியை எ-று.

(உ-ம்.) நாகினை நாகினொடு, வரகினை வரகினொடு - என ஒட்டுக.

'முற்ற' என்றதனான், பிறசாரியை பெறுவனவும் கொள்க.

(உ-ம்) வழக்கத்தாற்[1]பாட்டு ஆராய்ந்தான் எனவும், கரியதனை கரியதனொடு[2] - எனவும் வரும். (23)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 196.** 1. வழக்கு+அத்து+ஆன் - சாரியை : அத்து
2. கரியது+அன்+ஒடு - சாரியை : அன்

**நச்சினார்க்கினியம்**

## 195. குற்றியலுகரஈறு 'இன்' பெறுதல்

**குற்றிய லுகரத்து . . . . . . இன்என் சாரியை.**

இது குற்றுகர ஈற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : குற்றிய . . . . . . சாரியை - குற்றியலுகரமாகிய ஈற்றின் முன்னர் முடியத் தோன்றும் இன் என்னும் சாரியை எ-று.

உ - ம் : நாகினை நாகினொடு, வரகினை வரகினொடு- என வரும். ஏனையவற்றொடும் செய்கை அறிந்து ஒட்டுக.

'முற்ற' என்றதனானே, பிறசாரியை பெறுவனவும் கொள்க. வழக்கத்தாற் பாட்டு ஆராய்ந்தான் எனவும், கரியதனை எனவும் வரும். (அ) (23)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 195***

*(அ) இள. உரைக்குறிப்புக் காண்க. சூ. 196.*

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

***சூ. 195.*** குற்றிய லுகரத்...இன்னென் சாரியை.

**இளம்பூரணம்**

***197. அவற்றுள் சில இனவொற்று மிகுதல்***

**நெட்டெழுத்து இம்பர் ஒற்றுமிகத் தோன்றும்**
**அப்பால் மொழிகள் அல்வழி யான.**

*(இச்...எனின்) அவ்வீற்றுள் சிலவற்றிற்கு எய்தியது விலக்குதல் நுதலிற்று.*

*(இ-ள்.) நெட்டெழுத்தின் பின்னாக இடையே இனஒற்று மிகத் தோன்றும் அக்கூற்றுமொழிகள் அல்லாத இடத்தின்கண்ணே அவ்வீறு இன்சாரியை பெறுவது; ஆண்டாயின் (இன்சாரியை) பெறாது.*

*(உ-ம்.) யாட்டை யாட்டொடு, கோட்டை கோட்டொடு; யாற்றை யாற்றொடு - என செய்கை அறிந்து ஒட்டுக.*

*அப்பால் மொழிகளாவன க ச த ப - க்கள். இவை இன ஒற்று மிகா என்று கொள்க.*

*'தோன்றும்' என்றதனான், உயிர்த்தொடர்மொழியும் இன் பெறாது இனஒற்று மிகுதல் கொள்க.*

*(உ-ள்.) முயிற்றை முயிற்றொடு - என வரும். (24)*

**நச்சினார்க்கினியம்**

### *196. அவற்றுள் சில இனவொற்று மிகுதல்*

**நெட்டெழுத்து இம்பர் . . . . . . . . அல்வழி யான.**

இஃது அக்குற்றியலுகரங்களுள் சிலவற்றிற்கு இனஒற்று மிகும் என்கிறது.

இ-ள் : நெட்டெழுத்து . . . . . தோன்றும் - நெட்டெழுத்தின் பின்னர் வருகின்ற குற்றுகரங்கட்கு இனஒற்று மிகத் தோன்றாநிற்கும்; அப்பால் . . . . . . ஆன - ஒற்றுமிகத் தோன்றாத க ச த ப-க்கள் ஈறாகிய மொழிகள் அல்லாதவிடத்து எ - று.

எனவே, டகார றகாரங்கள் ஈறான சொல்லிடைத் தோன்றுமாயிற்று.

உ-ம் : *யாட்டை யாட்டொடு யாட்டுக்கு யாட்டின் யாட்டது யாட்டுக்கண்* எனவும், *யாற்றை சோற்றை* எனவும் இன ஒற்று மிக்கன. இவை அப்பால் மொழிகள் அல்லன.

நாகு காசு போது காபு - என்றாற்போல்வன அப்பால் மொழிகள். அவை இனஒற்று மிகா ஆயின. *(24)*

**வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. *196.* நெட்டெழுத்து இம்பர் ....அல்வழி யான.**

ஈண்டுக் 'குற்றியலுகரத்து இறுதி' என்றது, எண்ணுப்பெயர் அல்லாத பிறபெயர்களைக் குறிக்கும். நெடில்தொடருள் ஒற்றுமிகுபவற்றை விலக்கியது போலவே உயிர்த்தொடருள் ஒற்றுமிகுபவற்றை விலக்காமையின் அவற்றிற்கும் இன்சாரியை வரும். களிற்றினை - என வரும்.

*'முற்ற'* என்றதனான், 'வழக்கத்தாற் பாட்டாராய்ந்தான்' என அத்துச்சாரியை வரும் என்றும், கரியதனை என

அன்சாரியை வரும் என்றும் உரையாசிரியர் இருவரும் கூறினர், வழக்கு என்னும் குற்றியலுகர ஈற்றுச்சொல்லே அத்துச்சாரியை பெற்றது என்றல் உறுதிப்படாது, வழக்கம் என்னும் மகரஈற்றுச் சொல்லே அத்துச்சாரியை பெற்றது எனினும் அமையும் ஆகலின். நோக்கு- நோக்கம், குன்று - குன்றம், நெற்று - நெற்றம் -எனக் குற்றுகரஈறு மகரஈறாய் நிற்றல் உண்டன்றே? இனி, கரியதனை என்பது, கரிய அதனை எனப் பிரிக்கப்படும் ஆதலின், அது என்னும் சுட்டுப்பெயர் 'சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி' என்பதனால் அன் பெற்றது எனலாமன்றே?

[கரியது என்ற ஒன்றன்பால் குறிப்புவினைப்பெயரைக் கரியஅது எனப் பெயரெச்சத் தொடராக்கின், ஆண்டு நிலைமொழியீற்று அகரம் விகாரத்தால் தொக்கதாகக் கொள்ளல்வேண்டும். விகாரமின்றி ஒருசொல்லாக நிகழும் அவ்வொன்றன்பால் வினைப்பெயர் இயல்பாக நின்ற சொல்லாதலின், அதற்கு அன்சாரியை புணர்த்து முடித்தற்கண் ஏதம் இன்று.]

**இளம்பூரணம்**

## *198. மேலையீறுகள் சாரியை பெறாமை*

**அவைதாம்,**

**இயற்கைய ஆகும் செயற்கைய என்ப.**

*(இச்....எனின்)* மேற் சாரியை விலக்கப்பட்டவற்றிற்கு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* மேற் சாரியை பெறா என விலக்கப் பட்ட அவை தாம், இயல்பாய் முடிதலையுடைய வாகும் செய்கையை உடைய என்று சொல்லுவர் எ-று.

*(உ-ம்.)* யாட்டை யாட்டொடு - என ஒட்டுக.

'செயற்கைய' என்றதனான், இனஒற்று மிக்கன சிறுபான்மை இன் பெறுதலும் கொள்க.

*(உ-ம்.) யாட்டினை யாட்டினொடு, முயிற்றினை முயிற்றினொடு - என வரும்.* *(25)*

**நச்சினார்க்கினியம்**

## *197. மேலையீறுகள் சாரியை பெறாமை*

**அவைதாம்,**
**இயற்கைய ஆகும் செயற்கைய என்ப.**

இஃது எய்தியது விலக்கிற்று.

இ-ள் : அவைதாம் - அங்ஙனம் இன ஒற்று மிகுவனதாம்; இயற்கைய . . . . . என்ப - இன்சாரியை பெறாது இயல்பாக முடியும் செய்தியையுடைய என்று கூறுவர் ஆசிரியர் எ-று.

உ-ம் : முன்னர்க் காட்டினவே கொள்க.

'செயற்கைய' என்ற மிகையானே, உயிர்த்தொடர்மொழிகளில் ஏற்பனவற்றிற்கும் ஒற்றுமிகத் தோன்றுதல் கொள்க.

உ-ம் : முயிற்றை முயிற்றொடு முயிற்றுக்கு முயிற்றின் முயிற்றது முயிற்றுக்கண் - என வரும்.

இன்னும் இதனானே, யாட்டினை முயிற்றினை - என விலக்கிய இன் பெறுதலும் கொள்க. *(25)*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ. *197.* அவைதாம், இயற்கைய ஆகும் செயற்கைய என்ப.**

உரையாசிரியர்கள், 'செயற்கைய' என்றதனான், இடையில் ஒற்று மிகத் தோன்றுபவையும் யாட்டினை

யாட்டினொடு என வரும் என்றனர். ஆசிரியர் 'நெட்டெழுத்து இம்பர்...அல்வழியான' என்று விதந்து கூறி விலக்குதலின், இவை இன்சாரியை பெறும் என்றல் அவர்கருத்தொடு மாறுபடும். இனி, இளம்பூரணர், "உயிர்த்தொடர்மொழியும் இன்பெறாது இனஒற்று மிகும்" என்று எழுதி, முயிற்றை-முயிற்றொடு- என்று காட்டினார். அவர்உரையும் மேற்கொள்ளத் தக்கதாய் இல்லை, ஆசிரியர் விதந்து கூறுதலின் நெடில்தொடர்மட்டுமே சாரியை பெறாதன, மற்றைய எல்லாம் சாரியை பெற்றே வரும் ஆதலின்.

*197.* [ஈரெழுத்தொருமொழிக் குற்றியலுகரம், 'அப்பால் நெடுமொழி அல்வழி யான' டகர றகர ஒற்று இரட்டித்து வருமிடத்து இன்சாரியை பெற்று வருதல் ஆசிரியர் விதந்தோதிய விதியொடு முரணுதலின், யாட்டினை- யாட்டினொடு-முதலாக இன்சாரியை புணர்த்தல் ஆசிரியர் கருத்தன்று என்றார் இவ்வுரைகாரர். ஆசிரியர் கீழ்க்காணும் மரபியற் சூத்திரங்களான் அம்முடிபினை உடன்புணர்த்துக் கூறியமை இவர் நினைவில் நிலவாதது வியப்பாய வியப்பன்றோ?

**'யாத்த என்ப யாட்டின் கண்ணே'** (46)
**'குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்'** (68)]

**இளம்பூரணம்**

### *199. எண்ணுப்பெயர் 'அன்' பெறுதல்*

**எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்.**

*(இச்....எனின்)* அவ்வீற்று எண்ணுப்பெயர் முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* எண்ணுப்பெயர்களினது குற்றுகரஈறு அன்சாரியையொடு பொருந்தும் எ-று.

(உ-ம்.) ஒன்றனை ஒன்றனொடு, இரண்டனை இரண்டனொடு - என ஒட்டுக. (26)

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

**சூ. 199.** குற்றுகரஈற்று எண்ணுப்பெயரே அன்றி ஏழ் என்னும் எண்ணுப் பெயரும் அன் சாரியை பெறுதல் முன்னர்க் கூறப்பட்டது (195). வேற்றுமைப் பொருட் புணர்ச்சியில் இவை அன்சாரியை பெறுதல் பின் அகத்தோத்துள்ளும் காணப்படும். (389, 420)

**நச்சினார்க்கினியம்**

## 198. எண்ணுப் பெயர் 'அன்' பெறுதல்

**எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்.**

இது குற்றுகரஈற்று எண்ணுப்பெயர் முடிபு கூறுகின்றது.

இ-ள் : எண்ணின் . . . . . . . .சிவணும் - எண்ணுப் பெயர்களினது குற்றுகரஈறு அன்சாரியையொடு பொருந்தும் எ-று.

உ-ம் : ஒன்றனை இரண்டனை - என எல்லா எண்ணினையும் எல்லா உருபினொடும் செய்கை அறிந்து ஒட்டுக.

முன்னர் (197), 'செயற்கைய' என்ற இலேசானே, ஒன்றினை இரண்டினை என இன்சாரியையும் கொடுக்க. (26)

**இளம்பூரணம்**

## 200. 'ஒருபஃது' முதலாயின 'ஒருபான்' முதலவாக முடிதல்

**ஒன்றுமுத லாகப் பத்துஊர்ந்து வரூஉம்**
**எல்லா எண்ணும் சொல்லுங் காலை**
**ஆன்இடை வரினும் மானம் இல்லை**

**அஃதுஎன் கிளவி ஆவயின் கெடுமே**
**உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே.**

*(இச்....எனின்)* இதுவும் அது.

*(இ-ள்.)* ஒன்று என்னும் எண்ணுப்பெயர் முதலாகப் பத்து என்னும் எண்ணுப்பெயரால் ஊரப்பட்டு வரும் எல்லா எண்ணுப்பெயர்களையும் முடிபு சொல்லுங்காலத்து அவற்றிற்கு, மேற்கூறிய அன்னே அன்றி ஆன்சாரியை இடைவரினும் குற்றம் இல்லை; அவ்ஆன்சாரியை பெற்றவழி அஃது என்னும் சொல் கெடும்; அது கெடுவழி, அவ்அகரத்தான் ஊரப்பட்ட பகரமாகிய மெய் கெடாது நிற்றல் வேண்டும் எ-று.

*(உ-ம்.)* ஒருபானை ஒருபானொடு - இருபானை இருபானொடு - எனவும், ஒருபஃதனை ஒருபஃதனொடு - இருபஃதனை இருபஃதனொடு - எனவும் ஒட்டுக.

'சொல்லுங்காலை' என்றதனான், ஒன்பது என்னும் எண்ணுப்பெயரும் ஆன் பெற்று, அவ்வீற்றின் அது என்னும் சொல் கெட்டுமுடிதல் கொள்க.

(வருமாறு) ஒன்பானை ஒன்பானொடு-என ஒட்டுக. *(27)*

**நச்சினார்க்கினியம்**

***199. ஒருப:து முதலாயின முடியுமாறு***

**ஒன்றுமுதல் ஆகப் பத்துஊர்ந்து வரூஉம்**
**. . . . . . . . . . . . . . பஃகான் மெய்யே.**

இஃது ஒன்று முதலாக எட்டு இறுதியாக நின்ற குற்றுகரஈற்று எண்ணுப்பெயர் ஏழனொடும் பத்து எண்ணுப்பெயர் வந்து புணர்ந்து ஒன்றாய்நின்ற சொற்கள் சாரியை பெற்றுத் திரியுமாறு கூறுகின்றது.

இ-ள் : ஒன்று முதலாகப் . . . . . . எண்ணும் - ஒன்று முதலாக எட்டு ஈறாக நின்ற எண்களின்மேலே பத்து என்னும் எண்ணுப்பெயர் ஏறிவருகின்ற ஒருபது முதலான எல்லா எண்களையும்; சொல்லுங்காலை - முடிபு கூறுங்காலத்து; ஆன் இடை . . . . . இல்லை - முற்கூறிய அன்சாரியையே அன்றி ஆன்சாரியை இடையேவரினும் குற்றம் இல்லை; ஆவயின் அஃது என் கிளவி கெடும் - அவ் ஆன் பெற்றுழிப் பஃது என்னும் எண்ணிடத்து அஃது என்னும் சொல் கெட்டுப்போம்; பஃகான் மெய் உய்தல்வேண்டும் - அவ் அகரத்தான் ஊரப்பட்ட பகரம் ஆகிய ஒற்றுக் கெடாது நிற்றலை ஆசிரியன் விரும்பும் எ-று.

'நின்ற பத்தன் ஒற்றுக்கெட ஆய்தம், வந்திடை நிலையும்' (437) என்பதனான் ஆய்தம் பெற்றது.

வருமாறு : ஒருபஃது இருபஃது முப்பஃது நாற்பஃது ஐம்பஃது அறுபஃது எண்பஃது - எனக் குற்றியலுகரப் புணரியலுள் விதிக்குமாறே நிறுத்தி, அஃது என்பதனைக் கெடுத்துப் பகரஒற்றை நிறுத்தி, ஆன்சாரியை கொடுத்து ஒருபானை இருபானை - என எல்லா எண்ணொடும் எல்லா உருபினையும் செய்கை அறிந்து ஒட்டுக.

உம்மை எதிர்மறை ஆதலின், ஒருபஃதனை இருபஃதனை - என எல்லாவற்றொடும் ஒட்டுக.

'சொல்லுங்காலை' என்றதனான், பத்துஊர்கிளவியே அன்றி, (1) 'ஒன்பான் முதனிலை' (463) 'ஒன்பாற்கு ஒற்றிடை மிகுமே' (475) என்றாற்போல வருவனவற்றின்கண்ணும் பகரத்துள் அகரம் பிரித்து அஃது என்பது கெடுத்து ஆன் கொடுக்க.

(27)

நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு

***சூத்திரம் 199***

1. 'ஒன்பான் முதனிலை' என்பது ஒன்பஃது ஆன் பெற்றதற்கு உதாரணம்.

வேங்கட ராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ. 199.** ஒன்றுமுத லாகப் பத்தூர்ந்து வரூஉம்
...................
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே.

ஆசிரியர் ஈண்டுக் குற்றுகரம் ஊர்ந்து நின்ற தகரமும் மேல்நின்ற ஆய்தமும் கெடுதலின்அவற்றோடு குற்றுகரத்தையும் சேரக் கூறினார். இவ்வாறே, 'எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி.... குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது' என்னும் சூத்திரத்திலும் (128) கூறியுள்ளார். ஆதலின், உயிர்முதல்மொழி வருமிடத்துக் குற்றியலுகரம் கெடாது என்றும், கெடுதற்கு ஆசிரியர் விதி கூறிற்றிலர் என்றும் கூறுதல் பொருந்தும்.

**இளம்பூரணம்**

## *201. யாது, அஃது முதலியன முடியுமாறு*

**யாதுஎன் இறுதியும் சுட்டுமுதல் ஆகிய**
**ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்**
**ஆய்தம் கெடுதல் ஆவயி னான.**

*(இச்....எனின்)* இதுவும் குற்றுகரஈற்றுள் சிலவற்றிற்கு முடிபு கூறு...ற்று.

*(இ-ள்.)* யாது என வரும் குற்றுகரஈறும் சுட்டினை முதலாகவுடைய ஆய்தத்தொடர்மொழிக் குற்றுகரஈறும் அன்சாரியையொடு பொருந்தும்; அவ்விடத்து ஆய்தம் கெடுக. எ-று.

*(வருமாறு)* யாதனை யாதனொடு, அதனை அதனொடு, இதனை இதனொடு, உதனை உதனொடு - என ஒட்டுக. *(28)*

**நச்சினார்க்கினியம்**

## 200. யாது, அஃது முதலியன - முடியுமாறு

**யாதுஎன் இறுதியும் . . . . . ஆவயினான.**

இஃது எண்ணுப்பெயர் அல்லாத குற்றுகரஈற்றுள் சிலவற்றிற்கு முடிபு கூறுகின்றது.

இ-ள் : யாது என் . . . . சிவணும் - யாது என வரும் குற்றுகரஈறும், சுட்டினை முதலாகவுடைய ஆய்தத் தொடர்மொழிக் குற்றுகரஈறும், அன்சாரியையொடு பொருந்தும்; ஆய்தம் கெடுதல் ஆவயினான - அவ்விடத்து வந்த ஆய்தம் கெடும் எ-று.

வருமாறு : யாதனை யாதனொடு எனவும், அதனை அதனொடு - இதனை இதனொடு- உதனை உதனொடு - எனவும் வரும். (28)

வேங்கடராசலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.200. யாதுஎன் இறுதியும்...ஆவயி னான.**

ஈண்டு அஃது என்னும் சொல்லின் ஆய்தம் கெடுதற்கு விதி கூறிய ஆசிரியர், யாது என்பதில் உள்ள குற்றியலுகரம் கெடும் என்னாதது அறிக. இதனானும் 'புள்ளி ஈற்றுமுன்' என்னும் சூத்திரத்தால் (130) குற்றியலுகரத்தோடு உயிர் ஊர்ந்து நிற்கும் என்றது வலியுறும்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.200. யாதுஎன் இறுதியும் சுட்டுமுதல் ஆகிய**
**ஆய்த இறுதியும்.........**
**ஆய்தம் கெடுதல் ஆவயி னான.**

ஆய்தத் 'தொடர்மொழி' இறுதி என்பதும், கெடுதல் 'வேண்டும்' என்பதும் குறைந்து நின்றன.

*(ஈற்றயல் எழுத்தையும் தொல்காப்பியர் ஈறு என்று வழங்கியமைக்கு 'சுட்டுமுத லாகிய ஆய்த இறுதியும்' என்ற தொடரை மேற்கோள் காட்டினார் பிரயோகவிவேக நூலுடையார். காரிகை.24 உரை)*

**இளம்பூரணம்**

## *202. திசைப்பெயர் ஏழன்உருபொடு புணருமாறு*

**ஏழன் உருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்**
**சாரியைக் கிளவி இயற்கையும் ஆகும்**
**ஆவயின் இறுதி மெய்யொடும் கெடுமே.**

*(இச்....எனின்)* இதுவும் குற்றுகரஈற்றுள் சிலவற்றிற்கு ஏழாம் உருபொடு முடிபு கூறு....ற்று.

*(இ-ள்.)* ஏழாம் வேற்றுமைக்குத் திசையை உணர்த்துகின்ற பெயர்களின் முன்னர், இவ்ஈற்றிற்கு முன்கூறிய இன்சாரியையாகிய சொல் நின்று முடிதலே அன்றி, நில்லாது இயல்பாயும் முடியும்; இயல்பாயவழி, இறுதிக் குற்றுகரம் தன்னான் ஊரப்பட்ட மெய்யொடும் கெடும் எ-று.

*(வருமாறு)* வடக்கின்கண் கிழக்கின்கண் தெற்கின்கண் மேற்கின்கண் - எனவும், வடக்கண் கிழக்கண் தெற்கண் மேற்கண் - எனவும் வரும்.

உருபு முற்கூறிய அதனான், கீழ்சார் கீழ்புடை - மேல்சார் மேல்புடை - தென்சார் தென்புடை - வடசார் வடபுடை. - என இவ்வாறு சாரியை பெறாது திரிந்து முடிவன எல்லாம் கொள்க. *(29)*

**நச்சினார்க்கினியம்**

## *201. திசைப்பெயர் ஏழன் உருபொடு புணருமாறு*

**ஏழன் உருபிற்குத் . . . . . . மெய்யொடும் கெடுமே.**

இதுவும் குற்றுகரஈற்றுள் சிலவற்றிற்கு ஏழன் உருபொடு முடிபு கூறுகின்றது.

இ-ள் : ஏழன் . . . . . . ஆகும் - திசைப்பெயர்களின் முன்னர் வந்த கண் என்னும் உருபிற்கு முடிபு கூறுங்கால், முன்கூறிய இன்சாரியை ஆகிய சொல் நின்று முடிதலே அன்றி நில்லாது இயல்பாயும் முடியும்; ஆவயின் . . . . . . கெடும் - அங்ஙனம் இயல்பாயவழி, திசைப்பெயர் இறுதிக் குற்றுகரம் தன்னான் ஊரப்பட்ட மெய்யொடும் கெடும் எ-று.

வருமாறு : வடக்கின்கண் கிழக்கின்கண் தெற்கின்கண் மேற்கின்கண் எனவும், வடக்கண் கிழக்கண் தெற்கண் மேற்கண் எனவும் வரும். இன் பெறுவழி உகரம் கெடாது(1) என்றுணர்க.

'ஆவயின்' என்றதனான், கீழ்சார் கீழ்புடை, மேல்சார் மேல்புடை, தென்சார் தென்புடை, வடசார் வடபுடை - எனச் சாரியை இன்றிப் பல விகாரப்பட்டு நிற்பனவும் கொள்க.

இன்னும் இதனானே, கீழைக்குளம் மேலைக் குளம், கீழைச்சேரி மேலைச்சேரி - என ஐகாரம் பெறுதலும் கொள்க. *(29)*

**வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு**

**சூ.201. ஏழன் உருபிற்குத்......மெய்யொடும் கெடுமே.**

திசைப்பெயர்களின் முன் வரும் கண் உருபினையே 'ஏழனுருபு' என்று குறித்தார் ஆகலானும், சார்-புடை- என்பன உருபுஅல்ல ஆகலானும், வடசார் - வடபுடை-என்பன காட்டுதல் அமையாது.

திசைப்பெயர்க்குமுன் ஏழன்உருபு வந்து புணர்தற்கே விதி கூறினார் ஆகலானும், இஃது உருபியல் ஆகலானும். கீழைக்குளம் - கீழைச்சேரி-என்று பொருட்புணர்ச்சியில் வருதலை நச்சினார்க்கினியர் ஈண்டு அமைத்தது பொருந்தாது.

### இளம்பூரணம்

## 203. இவ்வியற்குப் புறனடை

**புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**
**சொல்லிய அல்ல ஏனைய எல்லாம்**
**தேருங் காலை உருபொடு சிவணிச்**
**சாரியை நிலையும் கடப்பாடு இலவே.**

(இச்.....எனின்) இவ்வோத்திற்கு எல்லாம் புறனடை கூறு...ற்று.

(இ-ள்.) புள்ளிஈற்றுச் சொல்லும் உயிர்ஈற்றுச் சொல்லும் என முன்பு சொல்லியவை அல்லாத ஒழிந்தவை எல்லாம், ஆராயுங்காலத்து, உருபுகளொடு பொருந்தி இன்சாரியை நின்று முடியும் முறைமையை உடையஅல்ல; நின்றும் நில்லாதும் முடியும் எ-று.

புள்ளியீற்றுள் ஒழிந்தன ஐந்து; உயிரீற்றுள் ஒழிந்தது ஒன்று. இவையும் எடுத்தோதிய ஈற்றுள் ஒழிந்தனவும் எல்லாம் ஈண்டுக்கொள்ளப்படும்.

(உ-ம்.) மண்ணினை மண்ணை - வேயினை வேயை - நாரினை நாரை - கல்லினை கல்லை - முள்ளினை முள்ளை - எனவும், கிளியினை கிளியை - எனவும், பொன்னினை பொன்னை - தாழினை தாழை - தீயினை தீயை - கழையினை கழையை - எனவும் ஒட்டுக.

புள்ளிஈற்றுள் ஒழிந்தன பல ஆகலின் அது முற் கூறப்பட்டது.

'தேருங்காலை' என்றதனான், உருபுகள் நிலை மொழியாக நின்று தம் பொருளொடு[1] புணரும்வழி முடியும் முடிபுவேற்றுமையெல்லாம் கொள்க.

(உ-ம்.) மண்ணினைக் கொணர்ந்தான் - நம்பியைக் கொணர்ந்தான் - கொற்றனைக் கொணர்ந்தான்; மலையொடு

பொருத மால்யானை - மரத்தாற் புடைத்தான் - மரத்துக்குப் போனான் - காக்கையிற் கரிது - காக்கையது பலி - மரத்துக்கண் வெட்டினான் - என ஒட்டுக.

இஃது உருபியல் ஆகலின் 'உருபொடு சிவணி' என வேண்டாஅன்றே ? அதனான், உருபுபுணர்ச்சிக்கண் சென்ற சாரியைகள்எல்லாம் ஈற்றுப் பொதுமுடிபு உள்வழிப் பொருட்புணர்ச்சிக்கண்ணும் செல்லும்[2] என்பது கொள்க.

இன்னும் அதனானே, உயிரீறும் புள்ளியீறும் சாரியை பெறாது இயல்பாய் முடிவன கொள்க.

(உ-ம்.) நம்பியை, கொற்றனை - என வரும். *(30)*

**இளம்பூரணம் உரைக்குறிப்பு**

***சூ.203.*** *1.* பொருளொடு - தம் முடிக்கும் சொற்களாகிய வினையொடும் பெயரொடும்.

2. வேற்றுமைப் பொருட்புணர்ச்சியை, 'உருபியல் நிலையும்' என மாட்டெறிந்து கூறுமாற்றான் அறியலாம். (**சூ. 254, 264, 295, 323, 379, 389**- என்னுமிவற்றில் காண்க.)

**நச்சினார்க்கினியம்**

***202. இவ்வியற்குப் புறனடை***

**புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**
**. . . . . . . . . . . . . . கடப்பாடு இலவே.**

இஃது இவ்வோத்தினுள் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றிற்கு எல்லாம் இதுவே ஒத்து ஆயதொரு புறனடை கூறுகின்றது.

இ-ள் : சொல்லிய அல்ல புள்ளி . . . . . கிளவியும் - முற்கூறிய புள்ளி ஈறும் உயிர்ஈறும் அல்லாத புள்ளியீற்றுச்

சொல்லும் உயிரீற்றுச் சொல்லும்; ஏனைய(வும்) எல்லாம் - முற்கூறிய ஈறுகள்தம்முள் ஒழிந்து நின்றனவும் எல்லாம்; தேருங்காலை - ஆராயும்காலத்து; உருபொடு . . . இல - உருபுகளொடு பொருந்திச் சாரியை நின்று முடியும் முறைமையை உடைய அல்ல, நின்றும் நில்லாதும் முடியும் எ-று.

'ஏனையவும்' என உம்மை விரிக்க.

உ-ம் : கூறாத புள்ளியீறுகள் ஐந்து, அவை ணகர யகர ரகர லகர ளகரங்கள் ஆம். மண்ணினை மண்ணை, வேயினை வேயை, நாரினை நாரை, கல்லினை கல்லை, முள்ளினை முள்ளை - என வரும்.

உயிரீற்றுள் ஒழிந்தது இகரம் ஒன்றுமே ஆதலின் அதனைப் பிற்கூறினார். கிளியினை கிளியை - என வரும்.

இனி, தான் யான் அழன் புழன் என்னும் னகர ஈற்றினும் ஏழ் என்னும் ழகரஈற்றினும் ஒழிந்தன, பொன்னினை பொன்னை - தாழினை தாழை - என்றாற்போல் வருவன பிறவும் ஆம்.

இனி, ஈகார ஈற்றுள் ஒழிந்தன, தீயினை தீயை - ஈயினை ஈயை - வீயினை வீயை - என்றாற்போல்வன பிறவும் ஆம்.

ஐகாரஈற்றுள் ஒழிந்தன, தினையினை தினையை - கழையினை கழையை - என்றாற் போல்வன பிறவும் ஆம். ஏனை ஈறுகளினும் வருவன உணர்ந்துகொள்க.

மேலே பெயரீற்றுச் செய்கையெல்லாம் தத்தம் ஈற்றின்கண் முடிப்பார் ஆதலின் அவை ஈண்டுக் கூறல்வேண்டா.

இனி, 'தேருங்காலை' என்றதனானே, உருபுகள் நிலைமொழியாக நின்று தம்பொருளொடு புணரும்வழி வேறுபடும் உருபுஈற்றுச் செய்கையெல்லாம் ஈண்டு முடித்துக் கொள்க.

உ-ம் : நம்பியைக் கொணர்ந்தான், மண்ணினைக் கொணர்ந்தான், கொற்றனைக் கொணர்ந்தான் - என மூவகைப் பொருளொடும்(1) கூடிநின்ற உருபிற்கு ஒற்றுக்கொடுக்க.

மலையொடு பொருதது, மத்திகையாற் புடைத்தான், சாத்தற்குக் கொடுத்தான், ஊர்க்குச் சென்றான், காக்கையிற் கரிது, காக்கையது பலி, மடியுட் பழுக்காய், தடாவினுட் கொண்டான்- என்னும் தொடக்கத்தன உருபுகாரணமாகப்(2) பொருளொடு புணரும்வழி, இயல்பாயும் ஈறுதிரிந்தும் ஒற்றுமிக்கும் வந்தன கொள்க.

இனி, கண் கால் புறம் முதலியன பெயராயும் உருபாயும் நிற்கும் ஆதலின், அவை உருபாகக் கொள்ளும்வழி வேறுபடும் செய்கைகள் எல்லாம் இவ்இலேசான் முடிக்க.

இஃது உருபியல் ஆதலின் 'உருபொடு சிவணி' என வேண்டா; அம்மிகையானே, உருபுபுணர்ச்சிக்கண் சென்ற சாரியைகள் எல்லாம் ஈற்றுப் பொதுமுடிபு உள்வழிப் பொருட் புணர்ச்சிக்கும் கொள்க.

விளவின்கோடு, கிளியின்கால் என எல்லா ஈற்றினும் கொள்க. நம்பியை, கொற்றனை- என உயிரீறும் புள்ளி யீறும் சாரியை பெறாது இயல்பாய் முடிவனவும் ஈண்டே கொள்க. *(30)*

**நச்சினார்க்கினியம் உரைக்குறிப்பு**

### சூத்திரம் 202

**1.** மூவகைப்பொருள் என்றது, உயர்திணையும் அஃறிணையும் விரவும் ஆகிய மூவகைப் பெயரை.

**2.** பொருளொடு புணரும்வழி என்னுமிடத்துப் பொருள் என்றது, வருமொழியை.

சாத்திரியார் உரை

**சூ.203.** இச்சூத்திர உரையுள், இவர் உருபேற்ற பெயர்களும் பெயர்களாம் ஆதலின், அகத்தோத்தினுள் கூறப்படும் விதிகள் இவற்றுக்கும் பொருந்தும் என்கிறார். ஒடுஉருபிற்கும் அதுஉருவிற்கும் அச்செய்கைவிதிகள் பொருந்தாமை அறியப்படும். பிற பொருந்தாமைகளும் உள.

வேங்கடராசுலு ரெட்டியார் உரைக்குறிப்பு

**சூ.202.** **புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**

.....................

**சாரியை நிலையும் கடப்பாடு இலவே.**

'சொல்லிய அல்ல ஏனைய எல்லாம்' ஆவன: உயிரீற்றுள் இகரஈற்றுப் பெயர்களும், நீ என்னும் பெயர் ஒன்று ஒழிந்த எல்லா ஈகார ஈற்றுப் பெயர்களும், அவை இவை உவை யாவை என்னும் நான்கு சொற்கள் ஒழிந்த எல்லா ஐகாரஈற்றுப் பெயர்களும், மெய்யீற்றுள் ணகார யகார ரகார லகார ளகார இவ்வைந்து ஈற்றுப் பெயர்களும், தான் யான் என்னும் இரண்டு பெயர்கள் ஒழிந்த எல்லா னகரஈற்றுப் பெயர்களும், ஏழ் என்னும் பெயர் ஒன்றும் ஒழிந்த எல்லா ழகரஈற்றுப் பெயர்களும், ஆம். இவையெல்லாம் உருபொடு கூடுமிடத்துச் சாரியை **பெற்றும் பெறாமலும்** வரும்.

அ ஆ உ ஊ ஏ ஓ ஔ - இவ்வேழ் உயிரீற்றுப் பெயர்களும், ஞ் ந் ம் வ் - இந்நான்கு மெய்யீற்றுப் பெயர்களும், ஒற்று மிகும் நெடில்தொடர் ஒழிந்த ஏனைத்தொடர்க் குற்றியலுகரஈற்றுப் பெயர்களும், உருபொடு கூடுமிடத்துச் **சாரியை பெற்றே** வரும்.

நும் தாம் நாம் யாம் - என்னும் மகரஈற்றுப் பெயர்களும், தான் யான் - என்னும் னகரஈற்றுப் பெயர்களும், ஒற்றுமிகும் நெடில் தொடர்க்குற்றியலுகர ஈற்றுப் பெயர்களும் **சாரியை பெறாமல்** வரும்.

பாலசுந்தரம் உரைக்குறிப்பு

**சூ.202.** **புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்**

**........கடப்பாடு இலவே.**

'உருபொடு சிவணி' என்ற இதனானே, தம்பொருட்டு எம்பொருட்டு- தம்முடைய நும்முடைய - தம்பால் நும்பால்-எனவும், வடசார் வடபால்-தென்சார் தென்பால் தென்புடைய - எனவும், உருபின் பொருளவாய் வரும் சொற்கள் புணருங்காலும், நிலைமொழிகள் உருபு புணர்ச்சிக்கு ஓதிய செய்கைகளைப் பெறுதலும்..... கொள்க.



# ஒத்த நூற்பாக்கள்

## VI உருபியல்

### நூற்பா - 1

இ. வி. 149 எல்லா ஈற்றும் சொல்லுங் காலை
வேற்றுமையுருபிற்கு இன்னே சாரியை.

மு. வீ. 209 அ ஆ உ ஊ ஏ ஔ இறுபெயர்
முன்வரும் உருபிற்கு இன்னே சாரியை.

### நூற்பா - 2

இ. வி. 150 பல்லவை நுதலிய அகர இறுபெயர்
அற்றொடு சிவணல் எச்சம் இன்றே.

மு. வீ. 210 அகர இறுபெயர் அற்றொடு சிவணும்.

### நூற்பா - 3

மு. வீ. 211 யாகார வினாவும் அவற்றோ ரற்றே.

### நூற்பா - 4

மு. வீ. 212 உ-வ் இறு சுட்டு அன்னொடு வரும் என்ப.

### நூற்பா - 7

நன். 247 நீ . . . . . . . நின் . . . . . . ஆம்.

இ. வி. 154 ஷ

மு. வீ. 213 நீஎனும் ஒருபெயர் நின்எனத் திரியும்.

## நூற்பா - 8

நன். 248 ஆமா கோ ன-வ் அணையவும் பெறுமே.

இ. வி. 151 ஷை

மு. வீ. 214 ஓகார இறுதிக்கு ஒன்னே சாரியை.

## நூற்பா - 9

மு. வீ. 215 அ ஆ இறுமரம் அத்தொடு சிவணும்
ஏழன் உருபுவந்து இயையுங் காலே.

## நூற்பா - 10

மு. வீ. 216 ஞந இறுமொழி இன்னொடு நடைபெறுமே.

## நூற்பா - 11

மு. வீ. 176 அற்று உறின் சுட்டு ஐகான் அழிதருமே.

## நூற்பா - 12

மு. வீ. 218 ஏனை வகரக்கு இன்னே சாரியை.

## நூற்பா - 13

மு. வீ. 219 மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை.

## நூற்பா - 14

மு. வீ. 220 இன்னொடு வருதலும் அதனியல்பு ஆகும்.

## நூற்பா - 15

மு. வீ. 221 நும் அத்து இன்னையும் நோக்காது இயலும்.

## நூற்பா - 16

நன். 247 (தான்) தாம் நாம் முதல் குறுகும்;
(யான்) யாம் . . . . . . . . . . . . எம் ஆம்.

இ. வி. 154 ஷை

மு. வீ. 222 தாமும் நாமும் நெடுமுதல் குறுகும்.
223 யாம் எம் ஆகும் ஆயுங் காலே.

## நூற்பா - 17

நன். 245 எல்லாம் என்பது இழிதிணை யாயின்
அற்றோடு உருபின்மேல் உம் உறுமே.

இ. வி. 152 ஷை

மு. வீ. 224 அற்று எலாம் பெறும்; ஆயிடை உம்மை
இறுதியொடு சிவணும் என்மனார் புலவர்.

## நூற்பா - 18

நன். 245 எல்லாம் என்பது இழிதிணை ஆயின்
அற்றோடு உருபின்மேல் உம் உறுமே;
அன்றேல் நம்இடை அடைந்து அற்றாகும்.

இ. வி. 152 ஷை

மு. வீ. 225 உயர்திணை யாயின் நம்இடைத் தோன்றும்.

மு. வீ. *225* உயர்திணை யாயின் நம் இடைத்தோன்றும்.

## நூற்பா - 19

நன். *246* எல்லாரும் எல்லீரும் என்பவற்று உம்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லும் உருபின் பின்னர் உம்மே.

இ. வி. *153* ௸

மு. வீ. *226* ௸

## நூற்பா - 20

நன். *247* தான் (தாம் நாம்) முதல் குறுகும்; யான்
(யாம்நீ நீர்) என் (எம் நின் நும்) ஆம்.

இ. வி. *154* ௸

மு. வீ. *227* தான் முதல் குறுகும்; யான் என்ஆகும்.

## நூற்பா - 22

மு. வீ. *375* ஏழ் என் கிளவி அன்னொடு சிவணும்.

## நூற்பா - 23

மு. வீ. *205* குற்றிய லுகரக்கு இன்னே சாரியை.

## நூற்பா - 24

நன். *183* நெடிலோடு உயிர்த்தொடர்க்குற்றுகரங்களுள்
டற ஒற்று இரட்டும் வேற்றுமை மிகவே.

இ. வி. *102* ௸

மு. வீ. 229 ஒற்றிடை மிகூஉம் குற்றுகரமும் உளவே.

392 நெடிலோடு உயிர்த்தொடர்க்குற்றுகரங்களுள்
டற ஒற்று இரட்டும் வேற்றுமைப்
பொருட்கே.

## நூற்பா - 26

மு. வீ. 228 எல்லா எண்களும் இன்னொடு சிவணும்.

## நூற்பா - 27

நன். 249 ஒன்று முதல் எட்டு ஈறாம் எண்ணூர்
பத்தின்முன் ஆன்வரின் பவ்வொற்று ஒழியமேல்
எல்லாம் ஓடும்; ஒன்பதும் இற்றே.

இ. வி. 157 ஒன்றுமுதல் எட்டு அளவாம் எண்ணூர்
பத்தின் முன் . . . . . . . . . . . . இற்றே.

மு. வீ. 230 ஒன்று முதல் எட்டு ஈறாம் எண்கள்
ஊர்ந்துவரும் பத்து ஆனொடு சிவணிப்
பகரஒற்று ஒழிய மேல் எல்லாம் ஓடும்.

231 ஒன்பது ஆனொடும் ஒத்து நடக்கும்.

## நூற்பா - 28

நன். 251 சுட்டின்முன் ஆய்தம் அன்வரின் கெடுமே.

இ. வி. 156 யாதென் இறுதியும் . . . . . . . . .ஆவயினான.

மு. வீ. 232 ஆய்தச் சுட்டும் யாதும் அன்பெறும்
ஆவயின் ஆய்தம் அழியும் சுட்டே.

405 யாதும் ஆய்தச் சுட்டும் அன்பெறும்;
ஆவயின் ஆய்தம் அழியும் சுட்டே.
(சுட்டாய்தம் என மாறுக.)

## நூற்பா - 30

நன். 253 இதற்கிது சாரியை எனின் அளவின்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்துஇடை
நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்றஉணர்த்தல் உரவோர் நெறியே.



# சுருக்கெழுத்து விளக்கம்

| | |
|---|---|
| அவி. | **அவிநயம்** |
| இ. வி. | **இலக்கண விளக்கம்** |
| சுவாமி. | **சுவாமிநாதம் / சாமிநாதம்** |
| தொ. வி. | **தொன்னூல் விளக்கம்** |
| நன். | **நன்னூல்** |
| நேமி. | **நேமிநாதம்** |
| பேர. | **பேரகத்தியம்** |
| மு. வீ. | **முத்துவீரியம்** |
| வீ. சோ. | **வீரசோழியம்** |



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.